५२. तस्मिन्नेव पुरे वासं कंचित्कालमुवास ह।
अधीत्य सर्वशास्त्राणि ज्ञानं संपादयान्यहम् ॥

५३. इति बुद्धिः समुत्पन्ना लक्ष्मणार्यस्य निश्चयम्।
ततो जनमुखात् श्रुत्वा यादवं विदुषां वरम् ॥

५४. तत्समीपे शास्त्रपाठं श्रोतुकामः कुशाग्रधीः।
भूतपुर्यां विहायाशु वासं रामानुजस्तदा ॥

५५. काञ्च्यां वासं कुटुम्बेन साकं चक्रे महामनाः।
तदारभ्य प्रतिदिनं यादवस्य विपश्चितः ॥

५६. समीपे शास्त्रपठनं चक्रे रामानुजः सुधीः ॥

इति श्रीप्रपन्नामृते रामानुजचरित्रे रामानुजार्यावतारकथनं नाम
द्वितीयोऽध्यायः ॥

---

தையும் முறைப்படி செய்தார். அதற்குப்பின் அவ்வூரிலேயே தன் தாயோடும் மனைவியோடும் சிலகாலம் வாழ்ந்துவந்தார்.

### காஞ்சீவாஸமும் ஶாஸ்த்ராப்$_4$யாஸமும்

52*-*56. 'நான் எல்லா ஶாஸ்த்ரங்களையும் கற்று அறிவடையக்கடவேன்' என்னும் உறுதியான அறிவு ஸ்ரீராமாநுஜருக்கு ஏற்பட்டது. யாத$_3$வர் என்பவர் வித்$_3$வான்களில் சிறந்தவர் என்று ஜனங்கள் சொல்லக் கேட்டு, குஶாக்$_3$ரம்போல் கூரிய அறிவுடைய மஹாமனஸ்வியான ராமாநுஜர் அந்த யாத$_3$வரிடம் ஶாஸ்த்ரபாட$_3$ம் கேட்கவிரும்பி ஸ்ரீபெரும்பூதூர்வாஸத்தைவிட்டு, குடும்பத்தோடு காஞ்சியில் வாஸம் செய்தார். அதற்குப்பின் அறிவாளியான ஸ்ரீராமாநுஜர், வித்$_3$வானை யாத$_3$வரிடம் தினந்தோறும் ஶாஸ்த்ரம் வாசித்து வந்தார்.

ஸ்ரீ ப்ரபந்நாம்ருதத்தில் ராமாநுஜ சரித்ரத்தில்
ஸ்ரீ ராமாநுஜார்யாவதாரத்தைக் கூறும் இரண்டாம் அத்தியாயம்
நிறைவுபெற்றது.

१७. रामानुजमुवाचेदं यादवो मधुराक्षरम्।
रामानुज महाप्राज्ञ किमर्थं नागतो भवान्॥

१८. शिष्ये त्वयि कृता शिक्षा सा कोपाय तवाऽभवत्।
सर्वेभ्यः प्रियशिष्येभ्यः प्रीतिस्त्वयि ममाधिका॥

१९. न त्वया सदृशः कश्चित् पुमान् लोकेषु विद्यते।
पर्वतानां यथा मेरुः धेनूनां कामधुग्यथा॥

२०. तथा त्वं सर्वलोकेषु प्रसिद्धो भवसि ध्रुवम्।
मत्प्रसादात्पूर्णविद्यो भव रामानुजोत्तम॥

२१. त्वद्वियोगान्मम मनो भृशं शोचत्यहर्निशम्।
तद्वाक्यं यादवेनोक्तं विषमिश्रामृतोपमम्॥

---

## யாத₃வரின் வஞ்சகப்பேச்சு

16*-*25. அதற்குப்பின் தன் சிஷ்யர்களால் அழைத்து வரப்பட்டவராய், பகைவரை அடக்கவல்லவராய், ஒளிக்குவியலாயிருப்பவரான ராமாநுஜரைக்குறித்து யாத₃வர் பின்வரும் இனிய வார்த்தையைக் கூறினார்,— "பேரறிவாளனான ராமாநுஜ! நீ ஏன் இங்கு வருவதில்லை? சீடனான உன்னை நான் சிக்ஷித்தேன். அது உனக்குக் கோபத்தை விளைத்துவிட்டதே. எனது இனிய சீடர்கள் அனைவரைக் காட்டிலும் உன்னிடமே எனக்குப் பிரீதி அதி₄கம். உன்னையொத்த மனிதன் அனைத்துலகிலும் இல்லை. பர்வதங்களுக்குள் மேருவைப்போலும், பசுக்களுக்குள் காமதே₄நுவைப்போலும் நீ எல்லாவுலகங்களிலும் ப்ரஸித்₃தி₄யடையப்போகிறாய் என்பது உறுதி. உத்தமனும் ராமாநுஜனே! எனது அருளாலே நீ நிறைந்த கல்வியை உடையவனாக ஆவாய். உன் பிரிவால் என் மனம் இரவு பகலாக மிகவும் துன்புறுகிறது." விஷங்கலந்த அமுதம்போலே இப்படிப் பேசிய

५२. तस्मिन्नेव पुरे वासं कंचित्कालमुवास ह।
अधीत्य सर्वशास्त्राणि ज्ञानं संपादयान्यहम्॥

५३. इति बुद्धिः समुत्पन्ना लक्ष्मणार्यस्य निश्चयम्।
ततो जनमुखात् श्रुत्वा यादवं विदुषां वरम्॥

५४. तत्समीपे शास्त्रपाठं श्रोतुकामः कुशाग्रधीः।
भूतपुर्यां विहायाशु वासं रामानुजस्तदा॥

५५. काञ्च्यां वासं कुटुम्बेन साकं चक्रे महामनाः।
तदारभ्य प्रतिदिनं यादवस्य विपश्चितः॥

५६. समीपे शास्त्रपठनं चक्रे रामानुजः सुधीः॥

इति श्रीप्रपन्नामृते रामानुजचरित्रे रामानुजार्यावतारकथनं नाम
द्वितीयोऽध्यायः॥

---

ளையும் முறைப்படி செய்தார். அதற்குப்பின் அவ்வூரிலேயே தன் தாயோடும் மனைவியோடும் சிலகாலம் வாழ்ந்துவந்தார்.

### காஞ்சீவாஸமும் ஶாஸ்த்ராப்$_4$யாஸமும்

52*-*56. 'நான் எல்லா ஶாஸ்த்ரங்களையும் கற்று அறிவடையக்கடவேன்' என்னும் உறுதியான அறிவு ஸ்ரீராமாநுஜருக்கு ஏற்பட்டது. யாத$_3$வர் என்பவர் வித்$_3$வான்களில் சிறந்தவர் என்று ஜனங்கள் சொல்லக் கேட்டு, குஶாக்$_3$ரம்போல் கூரிய அறிவுடைய மஹாமனஸ்வியான ராமாநுஜர் அந்த யாத$_3$வரிடம் ஶாஸ்த்ரபாட$_3$ம் கேட்கவிரும்பி ஸ்ரீபெரும்பூதூர்வாஸத்தைவிட்டு, குடும்பத்தோடு காஞ்சியில் வாஸம் செய்தார். அதற்குப்பின் அறிவாளியான ஸ்ரீராமாநுஜர், வித்$_3$வானை யாத$_3$வரிடம் தினந்தோறும் ஶாஸ்த்ரம் வாசித்து வந்தார்.

ஸ்ரீ ப்ரபந்நாம்ருதத்தில் ராமாநுஜ சரித்ரத்தில்
ஸ்ரீ ராமாநுஜார்யாவதாரத்தைக் கூறும் இரண்டாம் அத்தியாயம்
நிறைவுபெற்றது.

२७. रामानुजाय गोविन्दो वक्तुकामः समास्थितः।
कदाचिद्विन्ध्यमार्गेऽथ यादवः शिष्यसंवृतः॥

२८. पुरो मृगगणाकीर्णे विना रामानुजं ययौ।
आयान्तं दूरतो दृष्ट्वा गोविन्दो भ्रातरं पथि॥

२९. स्थित्वा मुहूर्तं सौहार्दाद्रामानुजमथाब्रवीत्।
रामानुज महाप्राज्ञ जाह्नवीस्नानकैतवात्॥

३०. जिघांसुस्त्वां त्वया सार्धं गच्छत्येवमतन्द्रितः।
स्थातव्यमप्रमादेन त्वया रामानुजोत्तम॥

३१. एवमुक्त्वा स गोविन्दः तेनानुज्ञापितो जवात्।
ययौ शीघ्रं गुरुभयात् गोविन्दो भ्रातृवत्सलः॥

---

### கோ₃விந்த₃ரின் பரிவு

*26*-31.* யாத₃வருடைய அவ்வஞ்சனையை அவரது செயல், பேச்சு முதலானவற்றால் அறிந்து, அதை ராமாநுஜருக்குத் தெரிவிக்க விருப்பமுள்ளவராயிருந்தார் கோ₃விந்த₃ர். ஒருசமயம் பலவகையான மிருகங்கள் நிறைந்த விந்திய மலைக்காடுகளில் ராமாநுஜரை விட்டுப் பிரிந்து யாத₃வர் முன் சென்றார். வெகுதூ₃ரத்தில் வரும் தமயனைப் பார்த்த கோ₃விந்த₃ர், ஒரு முஹூர்த்தநேரம் வழியில் நின்று, பரிவினாலே ராமாநுஜரைப்பார்த்துப் பின்வருமாறு கூறினார்.— "ராமாநுஜரே! பேரறிவாளரே! க₃ங்கா₃ஸ்நானம் என்னும் வஞ்சகவியாஜத்தினால், உம்மைக் கொல்லுவதற்காக உம்மோடு கூடச் சோம்பாது இப்படி யாத்திரை செய்கிறார் யாத₃வர். உத்தமரான ராமாநுஜரே! நீர் ஜாக்₃ரதையாயிருக்கவேண்டும்." இவ்வண்ணமாக உரைத்தவராய், தமயனிடம் வாத்ஸல்யமுடைய கோ₃விந்த₃ர், அவரிடமிருந்து அநுமதிபெற்று, கு₃ருவிடம் ப₄யத்தால் அதிவேக₃மாக விரைவில் சென்றுவிட்டார்.

५२. तस्मिन्नेव पुरे वासं कंचित्कालमुवास ह।
अधीत्य सर्वशास्त्राणि ज्ञानं संपादयान्यहम्॥

५३. इति बुद्धिः समुत्पन्ना लक्ष्मणार्यस्य निश्चयम्।
ततो जनमुखात् श्रुत्वा यादवं विदुषां वरम्॥

५४. तत्समीपे शास्त्रपाठं श्रोतुकामः कुशाग्रधीः।
भूतपुर्यां विहायाशु वासं रामानुजस्तदा॥

५५. काञ्च्यां वासं कुटुम्बेन साकं चक्रे महामनाः।
तदारभ्य प्रतिदिनं यादवस्य विपश्चितः॥

५६. समीपे शास्त्रपठनं चक्रे रामानुजः सुधीः॥

इति श्रीप्रपन्नामृते रामानुजचरित्रे रामानुजार्यावतारकथनं नाम
द्वितीयोऽध्यायः॥

---

*தையும் முறைப்படி செய்தார். அதற்குப்பின் அவ்வூரிலேயே தன் தாயோடும் மனைவியோடும் சிலகாலம் வாழ்ந்துவந்தார்.*

### காஞ்சீவாஸமும் ஶாஸ்த்ராப்4யாஸமும்

*52*-*56. 'நான் எல்லா ஶாஸ்த்ரங்களையும் கற்று அறிவடையக்கடவேன்' என்னும் உறுதியான அறிவு ஸ்ரீராமாநுஜருக்கு ஏற்பட்டது. யாத3வர் என்பவர் வித்3வான்களில் சிறந்தவர் என்று ஜனங்கள் சொல்லக் கேட்டு, குஶாக்3ரம்போல் கூரிய அறிவுடைய மஹாமனஸ்வியான ராமாநுஜர் அந்த யாத3வரிடம் ஶாஸ்த்ரபாட2ம் கேட்கவிரும்பி ஸ்ரீபெரும்பூதூர்வாஸத்தைவிட்டு, குடும்பத்தோடு காஞ்சியில் வாஸம் செய்தார். அதற்குப்பின் அறிவாளியான ஸ்ரீராமாநுஜர், வித்3வானை யாத3வரிடம் தினந்தோறும் ஶாஸ்த்ரம் வாசித்து வந்தார்.*

ஸ்ரீ ப்ரபந்நாம்ருதத்தில் ராமாநுஜ சரித்ரத்தில்
ஸ்ரீ ராமாநுஜார்யாவதாரத்தைக் கூறும் இரண்டாம் அத்தியாயம்
நிறைவுபெற்றது.

३८. रामानुजं विचिन्वध्वं मार्गे वृक्षसमाकुले।
इति तद्वाक्यमाकर्ण्य तदन्वेषणतत्पराः॥

३९. वनं विलोक्य तत्सर्वं यादवाय न्यवेदयन्।
वनमन्वेषितं सम्यक् अस्माभिः शीघ्रगामिभिः॥

४०. रामानुजं न पश्यामस्तमसा बन्धुरे वने।
शिष्योदीरितमाकर्ण्य गोविन्दप्रियमावहन्॥

४१. कुहनादुःखसंविष्टो यादवो दुःखितोऽभवत्।
ततस्स यादवस्तत्र प्रियशिष्यैस्समावृतः॥
अन्तस्सन्तोषसंयुक्तः सुखं शेते स्म पापकृत्॥

४२. सन्त्यज्य घोरे वनमध्यभागे बालं स तं निश्चलचित्तवृत्तिः।
गङ्गावगाहस्य फलं ममेदं मत्वेति निद्रामगमद्दुरात्मा॥

इति श्रीप्रपन्नामृते रामानुजचरित्रे यादवप्रकाशगंगायात्रायां
विन्ध्यारण்யे रामानुजार्यविसर्जनं नाम चतुर्थोऽध्यायः॥

---

சென்றுவிட்டாரா என்று அறிந்துகொள்ளவே நான் இங்கு வந்தேன்." இதைக் கேட்டபிறகு. யாதவர் சீடர்களைக் கூப்பிட்டு "மரங்களடர்ந்த வழியில் ராமாநுஜரைத் தேடுங்கள்" என்று கூறினார். அவருடைய இவ்வார்த்தையைக்கேட்டு, அவர்கள் ராமாநுஜரைத் தேடுவதில் ஈடுபட்டுக் காடு முழுவதும் தேடி. "விரைவில் செல்லும் எங்களால் காடு முழுவதும் நன்கு தேடப்பட்டது. இருளடர்ந்த இக்காட்டில் இளையாழ்வாரைக் காணவில்லை." என்று யாதவரிடம் கூறினர். சீடர்கள் கூறியதைக் கேட்டு (உள்ளே ஸந்தோஷமடைந்தபோதிலும்) கோவிந்தருக்கு உகப்பை உண்டுபண்ணுவதற்காகப் பொய்யான துன்பத்தை ஏறிட்டுக்கொண்ட யாதவர் துன்பமடைந்தார். அதற்குப்பின் பாவம்புரிந்த அந்த யாதவர் உள்ளே ஸந்

५२. तस्मिन्नेव पुरे वासं कंचित्कालमुवास ह।
अधीत्य सर्वशास्त्राणि ज्ञानं संपादयान्यहम्॥

५३. इति बुद्धिः समुत्पन्ना लक्ष्मणार्यस्य निश्चयम्।
ततो जनमुखात् श्रुत्वा यादवं विदुषां वरम्॥

५४. तत्समीपे शास्त्रपाठं श्रोतुकामः कुशाग्रधीः।
भूतपुर्यां विहायाशु वासं रामानुजस्तदा॥

५५. काञ्च्यां वासं कुटुम्बेन साकं चक्रे महामनाः।
तदारभ्य प्रतिदिनं यादवस्य विपश्चितः॥

५६. समीपे शास्त्रपठनं चक्रे रामानुजः सुधीः॥

इति श्रीप्रपन्नामृते रामानुजचरित्रे रामानुजार्यावतारकथनं नाम
द्वितीयोऽध्यायः॥

---

*ளையும் முறைப்படி செய்தார். அதற்குப்பின் அவ்வூரிலேயே தன் தாயோடும் மனைவியோடும் சிலகாலம் வாழ்ந்துவந்தார்.*

### காஞ்சீவாஸமும் ஶாஸ்த்ராப்$_4$யாஸமும்

*52*-*56. 'நான் எல்லா ஶாஸ்த்ரங்களையும் கற்று அறிவுடையக்கடவேன்' என்னும் உறுதியான அறிவு ஸ்ரீராமாநுஜருக்கு ஏற்பட்டது. யாத$_3$வர் என்பவர் வித்$_3$வான்களில் சிறந்தவர் என்று ஜனங்கள் சொல்லக் கேட்டு, குஶாக்$_3$ரம்போல் கூரிய அறிவுடைய மஹாமனஸ்வியான ராமாநுஜர் அந்த யாத$_3$வரிடம் ஶாஸ்த்ரபாட$_3$ம் கேட்கவிரும்பி ஸ்ரீபெரும்பூதூர்வாஸத்தைவிட்டு, குடும்பத்தோடு காஞ்சியில் வாஸம் செய்தார். அதற்குப்பின் அறிவாளியான ஸ்ரீராமாநுஜர், வித்$_3$வானான யாத$_3$வரிடம் தினந்தோறும் ஶாஸ்த்ரம் வாசித்து வந்தார்.*

ஸ்ரீ ப்ரபந்நாம்ருதத்தில் ராமாநுஜ சரித்ரத்தில்
ஸ்ரீ ராமாநுஜார்யாவதாரத்தைக் கூறும் இரண்டாம் அத்தியாயம்
நிறைவுபெற்றது.

४. व्याधवेषं समास्थाय ययौ रामानुजं प्रति।
रामानुजोऽपि तं दृष्ट्वा व्याधं पत्नीसमन्वितम्॥

५. उवाच वाक्यं मधुरमतिविस्मयमानसः।
कस्त्वं व्याध स्त्रिया साकं क्व गच्छसि महावने॥

६. किमागमनकार्यं ते वक्तव्यं कुतुकं मम।
इत्युक्तस्तमुवाचेदं व्याधरूपी परः पुमान्॥

७. अहं गच्छामि विप्रेन्द्र क्षेत्रं सत्यव्रतं शुभम्।
त्वमस्मिन्विजनेऽरण्ये मृगव्याघ्रसमाकुले॥

८. कस्माच्चरसि चैकाकी को देशः कुत्र गम्यते।
व्याधस्य वचनं श्रुत्वा लक्ष्मणार्यः प्रहृष्टधीः॥

---

*அம்புகளைத் (தூணியில்) த₄ரித்துக்கொண்டு, பாத₃ரக்ஷை யணிந்தவனாய், பீதாம்ப₃ரமணிந்தவனாய், வாலிபவயஸ் ஸுடையவனான வேடனின் வேஷத்தை ஏற்றுக் கொண்டு ராமாநுஜரிடம் வந்தான்.*

**வேடனுக்கும் ராமாநுஜருக்கும் ஸம்வாத₃ம்**

*4*–*11. பத்னியோடு கூடிய அவ்வேடனைப் பார்த்த ராமாநுஜர், ஆச்சரியங்கொண்ட நெஞ்சையுடையவராய் பின்வரும் இனிய வார்த்தையைக் கூறினார்,— "அப்பா வேடனே! நீ யார்? மனைவியோடு கூட இப்பெருங்காட்டில் எங்கு போகிறாய்? நீ இக்காட்டிற்கு வந்த காரியமென்ன? இவற்றை அறிய எனக்கு ஆவலாயிருப்பதால், இவற்றைச் சொல்லுவாய்" என்று கேட்கப்பட்ட வேடனுருக்கொண்ட பரமபுருஷன், "அந்தணர் தலைவரே! ஸத்யவ்ரதம் எனப்படும் மங்க₃ளமான காஞ்சீ க்ஷேத்திரத்திற்கு நான் செல்கின்றேன். பல வகையான பிராணிகளும், புலிகளும் வாழும் ஆளற்ற இக்காட்டில் ஒருவராய் ஏன் ஸஞ்சரிக்கிறீர்? உமது தே₃ஶம் எது? எங்கு செல்கின்றீர்?"*

९. उवाच वाक्यं मधुरं तं हरिं व्याधरूपिणम्।
प्रयागं गन्तुकामोऽहं निर्गतः काञ्चिकात् पुरा॥

१०. एकाकी विजनेऽरण्ये केनचित् हेतुना स्थितः।
यातुकामः पुनरपि क्षेत्रं सत्यव्रतं प्रति॥

११. असहायतया कञ्चित्पुरुषं चिन्तयाम्यहम्।
इति तद्वाक्यमाकर्ण्य व्याधरूपी हरिस्तदा॥

१२. रामानुजं समादाय ययौ सत्यव्रतं प्रति।
क्रोशमात्रे गते दूरे रविरस्तङ्गतोऽभवत्॥

१३. तद्रात्रौ वृक्षमूले तौ शयाते व्याधदम्पती।
रामानुजस्तत्समीपे वृक्षमूले समास्थितः॥

---

என்று கேட்க, வேடனின் அவ்வார்த்தையைக் கேட்ட ராமாநுஜர் மிகவும் கவலைப்பட்டவராய் வேடவுருக் கொண்ட அந்த ஹரியிடம் பின்வரும் இனிய வார்த்தையைச் சொன்னார்.— "பிரயாகை செல்ல விரும்பி, காஞ்சியிலிருந்து முன்னமே புறப்பட்ட நான் ஒரு காரணத்தால் ஆளற்ற இவ் வனத்திலேயே தனியாகத் தங்கிவிட்டேன். மறுபடியும் காஞ்சிக்கே செல்ல விரும்புகிறேன். துணையில்லாமையாலே ஓர் புருஷனைத் துணையாக தியானிக்கிறேன்."

## வேடன் ராமாநுஜரை காஞ்சிக்கு அழைத்துச் செல்லல்

11*-13. இவ்வண்ணமாக ராமாநுஜர் கூறியதைக் கேட்ட வேடவுருக் கொண்ட ஹரி அப்போதே அவரைக் கூட்டிக் கொண்டு காஞ்சியைக் குறித்துச் சென்றார். ஒரு க்ரோசதூரம் சென்றவுடன் ஸூர்யன் அஸ்தமனமடைந்தான். அவ்வேட தம்பதிகள் அவ்விரவில் ஓர் மரத்தடியில் சயனித்தனர். ராமாநுஜரும் அவர்களுக்கு அருகில் அம் மரத்தடியிலேயே தங்கியிருந்தார்.

१४. तद्रात्रौ व्याधवनिता व्याधं प्रत्याह चादरात्।
पिपासा बाधते नाथ पानीयं दीयतां मम॥

१५. पत्नीवचनमाकर्ण्य व्याधरूपी हरिस्तदा।
उवाच व्याधवनितारूपिणीं श्रियमादरात्॥

१६. विद्यतेऽम्बु विशालाक्षि निकटे चारुहासिनि।
वर्तते तत्र पानीयं स्वच्छं सज्जनचित्तवत्॥

१७. वनप्रदेशो गहनो महता तमसावृतः।
अधुना नीरमानेतुं मया शक्यं न शोभने॥

१८. रामानुजोऽथ तच्छ्रुत्वा व्याधेनोक्तं प्रियां प्रति।
उवाच प्रीतियुक्तात्मा व्याधं पत्नीसमन्वितम्॥

---

## வேடனுக்கும், மனைவிக்கும் ஸம்வாத3ம்

*14-17.* அவ்விரவில். வேடனின் மனைவி. "நாதா2! என்னை தா3ஹம் மிகவும் வருத்துகிறது; நீர் கொண்டு கொடுங்கள்" என்று அன்புடன் வேடனைப் பார்த்துச் சொன்னாள். வேடவுருக் கொண்ட ஹரி, தன் மனைவியின் வார்த்தையைக் கேட்டு. வேடுவிச்சியுருக்கொண்ட ஸ்ரீதே3வியைப் பார்த்து "அழகிய முறுவலையும். தடங் கண்ணையுமுடையவளே! அருகிலேயே நீர்நிலை உள்ளது. அதிலுள்ள நீர் நல்லோர்களின் நெஞ்சுபோல் தெளிந்துள்ளது. அழகியவளே! இந்தக் காடு பேரிருள் சூழ்ந்தாய் மிக அடர்ந்துள்ளது. ஆகையால். இப்போது என்னால் நீரைக் கொண்டுவர இயலாது." என்று அன்புடன் வார்த்தை சொன்னார்.

## தி3வ்யத3ம்பதிகளுக்கு எம்பெருமானார் நீரளித்தல்

*18-24.* வேடனால் தன் மனைவியிடம் சொல்லப்பட்ட இவ்வார்த்தையைக் கேட்டு. "உலகைப் பெற்றெடுத்த

१९. दिष्टया सहायहेतोर्मे ह्यागतौ लोकदम्पती ।
व्याधरूपधरौ नूनमिति मे निश्चिता मतिः ॥

२०. असमर्थोऽस्मि युवयोः प्रदातुं जलमप्यहम् ।
प्रातस्तथापि दास्यामि युवाभ्यां जलमुत्तमम् ॥

२१. इत्युक्त्वा तौ महाप्राज्ञः तूष्णीमास्ते महानिशि ।
प्रभातायां तु शर्वर्यां व्याधरूपी हरिः स्वयम् ॥

२२. रामानुजं महात्मानं उवाच सह भार्यया ।
मह्यं जलं ददामीति क्षपायां भाषितं त्वया ॥

२३. अत्रासन्नं देहि तात विद्यते च शुभं जलम् ।
हस्ताभ्यां जलमादाय शीघ्रं दातव्यमेव नौ ॥

२४. इति तद्वाक्यमाकर्ण्य जवात् लक्ष्मणदेशिकः ।
हस्ताभ्यां जलमादाय ददौ व्याधाय भक्तितः ॥

---

*தாய்தந்தையரான லக்ஷ்மீநாராயணர்களே என் அத்ருஷ்ட வசத்தால் எனக்குத் துணைபுரிவதற்காக வேடவுருக் கொண்டு வந்திருக்கிறார்கள் என்று நான் உறுதியாக நினைக்கிறேன். உங்களுக்கு நீர் கொடுக்கக்கூடத் திறமை யற்றவனாயிருக்கிறேனே! ஆயினும், காலையில் உங்களுக்குச் சிறந்த நீரை அளிக்கிறேன்" என்று பேரறிவாளரான ராமா நுஜர் பேரன்புடன் வேடதம்பதிகளைக் குறித்து வார்த்தை சொல்லி அந்நள்ளிரவில் மௌனமாயிருந்தார். இரவு விடிந்ததும் வேடவுருக்கொண்ட ஹரி தாமே ராமாநுஜரைக் கூப்பிட்டு, "மனைவியோடு கூடிய எனக்கு நீர் கொடுப்பதாக இரவில் சொன்னீரே! இங்கு அருகி லேயே நல்ல நீர் உள்ளது. அதை உம் கையாலேயே அள்ளிவந்து விரைவில் எங்களுக்குக் கொடுக்கவேணும்', என்று கூறினர். இதைக் கேட்ட ராமாநுஜாசார்யரும் வேகமாகச் சென்று பக்தியோடு வேடனுக்கு நீரைக் கையால் எடுத்துக் கொடுத்தார்.*

२५. त्रिवारं तु जलं दत्वा भूयो लक्ष्मणदेशिकः।
पाणिभ्यां जलमुद्धृत्य नापश्यत् व्याधदम्पती ॥

२६. कूपाद्बहिर्विनिर्गत्य चिन्ताव्याकुलितेन्द्रियः।
ततो जनपदान् ग्रामान् नदीं च श्वेतवालुकाम्॥

२७. मनोहरं च पन्थानं दृष्ट्वाऽऽश्चर्यमवाप सः।
समागतान् जनान् दृष्ट्वा सन्तुष्टो वाक्यमब्रवीत्॥

२८. जनाः! शृणुध्वं मद्वाक्यं यूयं कस्मादिहागताः।
अस्य देशस्य किं नाम तत्त्वतो ब्रूत मेऽनघाः॥

२९. रामानुजस्य तद्वाक्यं श्रुत्वा ते वाचमब्रुवन्।
इदं सत्यव्रतं क्षेत्रं भुक्तिमुक्तिप्रदं शुभम्॥

---

## த3ம்பதிகள் மறைதல் - ராமாநுஜர் காஞ்சியை அடைதல்

25-32. ஸ்ரீராமாநுஜாசார்யர் (அவ்வண்ணமே) மூன்றுமுறை நீர் அளித்தபின், மறுபடியும் கைகளாலே நீரை எடுத்துக்கொண்டு கிணற்றிலிருந்து வெளியே வந்த போது வேடதம்பதிகளைக் காணவில்லை. அவர்களைக் காணாத கவலையினால் இந்திரியங்கள் சோரப்பெற்றவராய், மக்கள் வாழும் பிரதே3ஶங்களையும், கிராமங்களையும், வெண்மணல் கொண்ட நதி3யையும், அழகிய வழியையும் கண்டு ஆஶ்சர்யத்தை அடைந்தார் ராமாநுஜர். அங்கு வந்து சேர்ந்த ஜனங்களைக் கண்டு மிகவுகந்தவராய், "ஜனங்களே! என் வார்த்தையைக் கேளுங்கள். நீங்கள் எவ்வூரிலிருந்து இங்கு வருகிறீர்கள்? இந்நாட்டிற்குப் பெயர் என்ன? குற்றமற்றவர்களே! அதை உள்ளபடி எனக்குச் சொல்லுங்கள்" என்று கூறினார். ராமாநுஜருடைய அவ்வார்த்தையைக் கேட்ட அந்த ஜனங்கள்: "பு4க3மோக்ஷங்களை அளிக்கவல்ல மங்க3ளமான ஸத்யவ்ரத

३०. अविदूरे प्रकाशन्ते गोपुराणि समन्ततः।
इयं क्षीरनदी पुण्या पुरोद्यानवनं शुभम्॥

३१. इदं प्रकाशते वृक्षैस्सदा पुष्पफलान्वितैः।
इति तद्वाक्यमाकर्ण्य दृष्ट्वा काञ्चीपुरीं तदा॥

३२. अयं हस्तिगिरीशस्य प्रभावः परमात्मनः।
इति मेने महाप्राज्ञः सम्यगाश्चर्यमानसः॥

३३. ततो रामानुजः स्वीयं गृहं गत्वा मुदान्वितः।
मात्रे निवेदयामास सर्वं वृत्तान्तमादरात्।

३४. काञ्चीपुरीजनास्सर्वे रामानुजमुपागतम्।
दृष्ट्वा श्रुत्वा तत्कथां च विस्मयाविष्टचेतसः॥

---

க்ஷேத்ரமே இது: அதோ ஸமீபத்தில் (அங்குள்ள ஆலயங்களின்) கோ₃புரங்கள் சுற்றிலும் விளங்குகின்றனவே. இந்நதியே புண்ணியமான பாலாறு. இதுவே அழகிய நகர்ப்புறச்சோலை. இது எப்போதும் பூக்களும் பழங்களும் நிறைந்த மரங்களோடு விளங்குகிறது." என்று வார்த்தை சொன்னார்கள். இதைக்கேட்ட பேரறிவாளரான ராமாநுஜர், காஞ்சீபுரியைக் கண்டு மிகவும் ஆஶ்சர்யமடைந்த நெஞ்சினராய் 'இது பரமாத்மாவான அத்திகி₃ரியப்பனின் பெருமையேயாகும்' என்று எண்ணினார்.

## திருக்கச்சி நம்பியை அடைதல்

33-*41. அதற்குப்பின் ராமாநுஜர் உகப்புடன் தமது வீட்டிற்குச் சென்று, தன் தாய்க்கு நடந்ததை யெல்லாம் அன்போடு உரைத்தார். காஞ்சீபுரியிலுள்ள எல்லா ஜனங்களும் (வடதேச யாத்திரையிலிருந்து) திரும்பிவந்த ராமாநுஜரைப்பார்த்து, அவர் கூறிய செய்தியைக் கேட்டு மிகவும் ஆஶ்சர்யப்பட்டு ஆனந்த₃மடைந்து ராமாநுஜரை

३५. रामानुजं पुनर्जातं मन्यन्ते हृष्टमानसाः।
पुत्रं कान्तिमती दृष्ट्वा जगाद वचनं हितम्॥

३६. शृणु वत्स प्रवक्ष्यामि हितार्थं भवतोऽधुना।
अस्मिन् सत्यव्रतक्षेत्रे कश्चित्तुर्यकुलोद्भवः॥

३७. काञ्चीपूर्ण इति ख्यातो नित्यं हरिपरायणः।
शबर्यंशेन संभूतः शमादिगुणसंयुतः॥

३८. नित्यं वरदराजस्य कैङ्कर्याणि यथाक्रमम्।
कुर्वन्ननन्यमनसा तत्पादध्यानतत्परः॥

३९. अन्तरङ्गोऽभवत्तस्य हरेः सर्वान्तरङ्गिणः।
तस्मै निवेदय स्वीयं वृत्तान्तं मार्गसंभवम्॥

---

மறுபிறவியெடுத்தவராகவே எண்ணினர். காந்திமதியம்மையாரும் தன் பிள்ளையைப் பார்த்து ஹிதமானதொரு வார்த்தையைக் கூறினாள். —“குழந்தாய்! உனது நன்மைக்காக நான் கூறும் வார்த்தையைக் கேள்; இந்த ஸத்யவ்ரத க்ஷேத்ரத்தில் இப்போது—நான்காவது வருணத்துதித்தவராய். எப்போதும் பேரருளாளனையே பரம ப்ராப்ய ப்ராபகமாகக் கொண்டவராய். ஶப$_3$ரியின் அம்ஶங்கொண்டு அவதரித்தவராய். ஶமம். த$_3$மம் முதலிய கு$_3$ணங்களோடு கூடியவராய். தினந்தோறும் வரத$_3$ராஜப் பெருமாளுக்குக் கைங்கர்யங்களை முறைப்படி செய்துகொண்டு. வேறு எதிலும் நெஞ்சுசெலுத்தாமல் அப்பெருமானது திருவடிகளையே தியானிப்பதில் ஈடுபட்டவராய் எல்லார்க்கும் எல்லாவுறவுமான அப்பெருமானுக்கு மிக நெருங்கியவராய். திருக்கச்சி நம்பி என்று பெயர் பெற்றவரான ஒரு பெரியவர் இருக்கிறார். வழியில் நடந்த செய்திகளையெல்லாம் நீ அவருக்குக் கூறுவாயாக” என்று. இவ்வண்ணமாகத் தாயாரால்

४०. इत्यनुज्ञापितो मात्रा लक्ष्मणार्यः कृतत्वरः ।
काञ्चीपूर्णस्य निलयं संप्राप्य विनयान्वितः ॥

४१. काञ्चीपूर्णाय तत्सर्वं वृत्तान्तमवदत्तदा ।
काञ्चीपूर्णस्तु तच्छ्रुत्वा रामानुजमथाब्रवीत् ॥

४२. रामानुज महाप्राज्ञ त्वय्यस्ति करुणा हरेः ।
तस्मात्त्वमापदो मुक्तः कान्तिमत्यात्मसंभवः ॥

४३. पातुकामो हरिर्नित्यं त्वयानीतं शुभं जलम् ।
व्याधवेषं समास्थाय श्रीहस्तिगिरिनायकः ॥

४४. याचित्वा त्वां देवराजस्त्वया दत्तं पयः शुभम् ।
पीत्वा विष्णुः श्रिया सार्धं अन्तर्धानं गतो हरिः ॥

---

நியமிக்கப்பெற்ற ராமாநுஜர் அதிவேக$_3$மாய்த் திருக்கச்சி நம்பியின் திருமாளிகைக்குச் சென்று, அடக்கத்தோடு எல்லாச்செய்திகளையும் அப்போதே கூறினார்.

## திருக்கச்சிநம்பியின் நியமனம்

41*-*46. திருக்கச்சிநம்பிகள் அதைக் கேட்டபின் ராமாநுஜரைக் குறித்து "பேரறிவாளரான ராமாநுஜரே! ஹரியின் கருணை உம்மை ஆட்கொண்டுவிட்டது. ஆகையால்தான் காந்திமதியின் பிள்ளையான நீர் இவ்வாபத்தினின்றும் நீங்கினீர். நீர் கொண்டுவரும் நீரை அத்திகி$_3$ரியப்பன் தினந்தோறும் பருக விரும்புகிறான். அதனாலேயே அந்த தே$_3$வராஜன் பெரியபிராட்டியாரோடு கூடியவனாய் வேடவுருக்கொண்டு. உம்மிடம் நீரை யாசித்து. நீர் கொடுத்த நன்னீரைப்பருகி மறைந்தார். ஆகையால் நீர் என் வார்த்தையைக்கேட்டு பரமாத்மாவான தே$_3$வப் பெருமாளுக்கு அவருகந்தபடி அக்கிணற்றிலிருந்தே தினந்

४५. अतस्त्वं देवराजाय नित्यं भक्त्या महात्मने।
तत्कूपान्नीरमादाय स्वर्णकुम्भेन तत्प्रियम्॥

४६. समर्पयाशु हरये निशम्य वचनं मम।
काञ्चीपूर्णस्य तद्वाक्यं श्रुत्वा रामानुजस्तदा॥

४७. तमुवाच महात्मानं काञ्चीपूर्णं कुशाग्रधीः।
करिष्यामि न संदेहः तव वाक्यं हितान्वितम्॥

४८. वेदान्तैर्मृग्यमाणस्य ब्रह्माद्यैरपि सर्वदा।
वरदस्यान्तरङ्गस्य तव वाक्यं शुभान्वितम्॥

४९. न करोति महाभक्त्या कः प्राज्ञः करुणानिधे।
इत्युक्त्वा लक्ष्मणाचार्यः काञ्चीपूर्णं हितैषिणम्॥

---

தோறும் பொற்குடத்தில் நீர்கொண்டுவந்து விரைவிலேயே ஸமர்ப்பிப்பீராக." என்று கூறினார்.

## சாலைக்கிணற்றிலிருந்து தீர்த்த₂கைங்கர்யம் செய்தல்

46*-52. திருக்கச்சிநம்பியினுடைய அவ்வார்த்தையைக் கேட்ட தீக்ஷ்ணபு₃த்₃தி₄யுள்ள ராமாநுஜர், "கருணைக் கடலே! நன்மையைச் சொல்லும் உமது நியமனத்தின் படியே ஐயமின்றியே நடப்பேன். நான்மறைகள் தேடியோடும் செல்வனாய், பிரமன் முதலான தேவர்களாலும் எப்போதும் தேடப்படுபவனை வரத₃ராஜப்பெருமானுக்கு அந்தரங்க₃ரான நீர் சொல்லும் நல்ல வார்த்தையை, அறிவாளியான எவன்தான் பேரன்புடன் கடைப்பிடிக்காமலிருப்பான்?" என்று மஹாத்மாவான திருக்கச்சிநம்பியிடம் கூறினார். இவ்வண்ணமாக ஹிதபரரான திருக்கச்சிநம்பியிடம் கூறிய ராமாநுஜர், அவரிடமிருந்து விடைபெற்றுத் தன் வீடு திரும்பி, மிகவுகப்புடன் அச்செய்தி

४०. इत्यनुज्ञापितो मात्रा लक्ष्मणार्यः कृतत्वरः ।
काञ्चीपूर्णस्य निलयं संप्राप्य विनयान्वितः ॥

४१. काञ्चीपूर्णाय तत्सर्वं वृत्तान्तमवदत्तदा ।
काञ्चीपूर्णस्तु तच्छ्रुत्वा रामानुजमथाब्रवीत् ॥

४२. रामानुज महाप्राज्ञ त्वय्यस्ति करुणा हरेः ।
तस्मात्त्वमापदो मुक्तः कान्तिमत्यात्मसंभवः ॥

४३. पातुकामो हरिर्नित्यं त्वयानीतं शुभं जलम् ।
व्याधवेषं समास्थाय श्रीहस्तिगिरिनायकः ॥

४४. याचित्वा त्वां देवराजस्त्वया दत्तं पयः शुभम् ।
पीत्वा विष्णुः श्रिया सार्धं अन्तर्धानं गतो हरिः ॥

---

நியமிக்கப்பெற்ற ராமாநுஜர் அதிவேக3மாய்த் திருக்கச்சி நம்பியின் திருமாளிகைக்குச் சென்று, அடக்கத்தோடு எல்லாச்செய்திகளையும் அப்போதே கூறினார்.

## திருக்கச்சிநம்பியின் நியமனம்

41*-*46. திருக்கச்சிநம்பிகள் அதைக் கேட்டபின் ராமாநுஜரைக் குறித்து "பேரறிவாளரான ராமாநுஜரே! ஹரியின் கருணை உம்மை ஆட்கொண்டுவிட்டது. ஆகையால்தான் காந்திமதியின் பிள்ளையான நீர் இவ்வாபத்தினின்றும் நீங்கினீர். நீர் கொண்டுவரும் நீரை அத்திகி3ரியப்பன் தினந்தோறும் பருக விரும்புகிறான். அதனாலேயே அந்த தே3வராஜன் பெரியபிராட்டியாரோடு கூடியவனாய் வேடவுருக்கொண்டு. உம்மிடம் நீரை யாசித்து. நீர் கொடுத்த நன்னீரைப்பருகி மறைந்தார். ஆகையால் நீர் என் வார்த்தையைக்கேட்டு பரமாத்மாவான தே3வப் பெருமாளுக்கு அவருகந்தபடி அக்கிணற்றிலிருந்தே தினந்

षष्ठोऽध्यायः

१. ततो महान् लक्ष्मणदेशिकेन्द्रः काञ्चीपुरे सर्वजनप्रसिद्धः।
श्रीविष्णुकैङ्कर्यरतैकचित्तः रेजे यथा विष्णुपुरे फणीन्द्रः॥

२. तस्मिन् काले रङ्गधाम्नि यामुनार्यः कृपानिधिः।
वेदवेदान्तसम्पन्नस्तुर्याश्रममुपाश्रितः॥

३. पञ्चसंस्कारसम्पन्नः परवादिभयङ्करः।
*सिंहाननांशसंभूतः शीलादिगुणसंयुतः॥

---

## ஆரும் அத்தியாயம்

## உள்ளங்கை கொணர்ந்த நாயகுர்

### ஶேஷனையொத்த ராமாநுஜர்

*1. அதன்பிறகு இளையாழ்வாராகிற ஆசார்யோத்தமர் காஞ்சிபுரத்தில் எல்லா ஜனங்களாலும் மிகவும் அறியப் பெற்றவராய். தேவப்பெருமாளுக்குக் கைங்கர்யம் செய்வ திலேயே நெஞ்சு செலுத்தியவராய், பரமபத₃த்தில் திருவநந்தாழ்வானைப்போலே வாழ்ந்து வந்தார்.*

### யாமுநாசார்யர் (ஆளவந்தார்) பெருமை

*2-4. அக்காலத்தில் ஸ்ரீரங்க₃த்தில் யாமுநாசார்ய ரென்பவர் — கருணைக்கடலாய். வேத₃வேத₃ாந்தஜ்ஞான முடையவராய். ஸந்யாஸாஶ்ரமத்தை ஏற்றுக்கொண்டவ ராய். பஞ்சஸம்ஸ்காரம் பெற்றவராய். இதரமதவாதி₃ களுக்கு ப₄யத்தை விளைப்பவராய். (விஷ்வக்ஸேநரின் பரிகரபூ₄தரான) * ஸிம்ஹமுக₂ரின் அம்ஶமாகப் பிறந்தவ*

---

** "ஸிம்ஹாஸநாம்ஶ" என்ற பாட₂ம் தவறு. விஷ்வக்ஸேநரின் பரிகரபூ₄தரான க₃ஜாநநாம்ஶராய் நாத₂முனிகளும். ஸிம்ஹாநநாம்ஶராய் ஆளவந்தாரும் அவதரித்தனர் என்பர் பெரியோர்.*

४०. इत्यनुज्ञापितो मात्रा लक्ष्मणार्यः कृतत्वरः।
काञ्चीपूर्णस्य निलयं संप्राप्य विनयान्वितः॥

४१. काञ्चीपूर्णाय तत्सर्वं वृत्तान्तमवदत्तदा।
काञ्चीपूर्णस्तु तच्छ्रुत्वा रामानुजमथाब्रवीत्॥

४२. रामानुज महाप्राज्ञ त्वय्यस्ति करुणा हरेः।
तस्मात्त्वमापदो मुक्तः कान्तिमत्यात्मसंभवः॥

४३. पातुकामो हरिर्नित्यं त्वयानीतं शुभं जलम्।
व्याधवेषं समास्थाय श्रीहस्तिगिरिनायकः॥

४४. याचित्वा त्वां देवराजस्त्वया दत्तं पयः शुभम्।
पीत्वा विष्णुः श्रिया सार्धं अन्तर्धानं गतो हरिः॥

---

நியமிக்கப்பெற்ற ராமாநுஜர் அதிவேக$_3$மாய்த் திருக்கச்சி நம்பியின் திருமாளிகைககுச் சென்று, அடக்கத்தோடு எல்லாச்செய்திகளையும் அப்போதே கூறினார்.

## திருக்கச்சிநம்பியின் நியமனம்

41*-*46. திருக்கச்சிநம்பிகள் அதைக் கேட்டபின் ராமாநுஜரைக் குறித்து "பேரறிவாளரான ராமாநுஜரே! ஹரியின் கருணை உம்மை ஆட்கொண்டுவிட்டது. ஆகையால்தான் காந்திமதியின் பிள்ளையான நீர் இவ்வாபத்தினின்றும் நீங்கினீர். நீர் கொண்டுவரும் நீரை அத்திகி$_3$ரியப்பன் தினந்தோறும் பருக விரும்புகிறான். அதனாலேயே அந்த தே$_3$வராஜன் பெரியபிராட்டியாரோடு கூடியவனாய் வேடவுருக்கொண்டு. உம்மிடம் நீரை யாசித்து. நீர் கொடுத்த நன்னீரைப்பருகி மறைந்தார். ஆகையால் நீர் என் வார்த்தையைக்கேட்டு பரமாத்மாவான தே$_3$வப் பெருமாளுக்கு அவருகந்தபடி அக்கிணற்றிலிருந்தே தினந்

९. एवंविधनरं दृष्ट्वा ममाख्यात द्विजोत्तमाः।
यामुनार्यस्य वचनं श्रुत्वा शिष्याः समागताः॥

१०. देशे देशे तु पुरुषमुक्तलक्षणलक्षितम्।
विचिन्वन्तः शिष्यजनाः पुरीं काञ्चीं समागताः॥

११. तत्र रामानुजं दृष्ट्वा श्रुत्वा तस्य कथामपि।
रङ्गक्षेत्रं समागम्य यामुनाय न्यवेदयन्॥

१२. रामानुजस्य वृत्तान्तं श्रुत्वा शिष्यजनात्तदा।
यामुनार्यो द्रष्टुकामः कान्तिमत्यात्मसंभवम्॥

१३. व्याधिना पीड्यमानोऽसौ असमर्थोऽभवत्तदा।
यादवोपि ततो गङ्गां संप्राप्य स्वेच्छया पराम्॥

---

பேசுகிறவனும். நல்லொழுக்கமுடையவனும். நல்லோர்களால் பூஜிக்கப்பெற்றவனுன மனிதனே எல்லாவிடத்திலும் தேடுங்கள். இப்பெருமைகள் பெற்றவனுனமனிதனே எங்கு கண்டாலும் எனக்குக் கூறுங்கள்.'' என்னும் வார்த்தையைச் சொன்னுர்.

### ராமாநுஜரே (ப₄விஷ்யத₃ாசார்யர்) என யாமுநர் உணர்தல்

9*-*13. யாமுநாசார்யரின் வார்த்தையைக் கேட்ட சிஷ்யர்கள் அனைவரும் ஒவ்வொரு தேஶத்திலும் கு₃ரு கூறிய லக்ஷணங்கள் கொண்ட மஹாபுருஷனைத் தேடுகின்றவர்களாய்க் காஞ்சீபுரியை அடைந்தனர். அங்கு ராமாநுஜனைக்கண்டு, அவரது விருத்தாந்தத்தைக் கேள்விப் பட்டு. ஸ்ரீரங்க₃த்திற்கு வந்து யாமுநாசார்யரிடம் தெரிவித்தனர். சீடர்களிடமிருந்து ராமாநுஜர்பற்றிய செய்தியை அறிந்த ஆளவந்தார் காந்திமதியின் பிள்ளையான ராமாநுஜரைக் காணவிரும்பினுர். ஆனுல். உடல் நோயினுல் வருந்துகின்றமையால் காஞ்சிக்குச் செல்ல இயலாதவரானுர்.

४०. इत्यनुज्ञापितो मात्रा लक्ष्मणार्यः कृतत्वरः ।
काञ्चीपूर्णस्य निलयं संप्राप्य विनयान्वितः ॥

४१. काञ्चीपूर्णाय तत्सर्वं वृत्तान्तमवदत्तदा ।
काञ्चीपूर्णस्तु तच्छ्रुत्वा रामानुजमथाब्रवीत् ॥

४२. रामानुज महाप्राज्ञ त्वय्यस्ति करुणा हरेः ।
तस्मात्त्वमापदो मुक्तः कान्तिमत्यात्मसंभवः ॥

४३. पातुकामो हरिर्नित्यं त्वयानीतं शुभं जलम् ।
व्याधवेषं समास्थाय श्रीहस्तिगिरिनायकः ॥

४४. याचित्वा त्वां देवराजस्त्वया दत्तं पयः शुभम् ।
पीत्वा विष्णुः श्रिया सार्धं अन्तर्धानं गतो हरिः ॥

---

நியமிக்கப்பெற்ற ராமாநுஜர் அதிவேக₃மாய்த் திருக்கச்சி நம்பியின் திருமாளிகைக்குச் சென்று, அடக்கத்தோடு எல்லாச்செய்திகளையும் அப்போதே கூறினார்.

## திருக்கச்சிநம்பியின் நியமனம்

41*-*46. திருக்கச்சிநம்பிகள் அதைக் கேட்டபின் ராமாநுஜரைக் குறித்து "பேரறிவாளரான ராமாநுஜரே! ஹரியின் கருணை உம்மை ஆட்கொண்டுவிட்டது. ஆகையால்தான் காந்திமதியின் பிள்ளையான நீர் இவ்வாபத்தினின்றும் நீங்கினீர். நீர் கொண்டுவரும் நீரை அத்திகி₃ரியப்பன் தினந்தோறும் பருக விரும்புகிறான். அதனாலேயே அந்த தே₃வராஜன் பெரியபிராட்டியாரோடு கூடியவனாய் வேடவுருக்கொண்டு, உம்மிடம் நீரை யாசித்து, நீர் கொடுத்த நன்னீரைப்பருகி மறைந்தார். ஆகையால் நீர் என் வார்த்தையைக்கேட்டு பரமாத்மாவான தே₃வப் பெருமாளுக்கு அவருகந்தபடி அக்கிணற்றிலிருந்தே தினந்

१९. स्नानं च सर्वतीर्थेषु कृत्वा शिष्यजनैस्सह ।
काञ्चीपुरीं पुनरगात् कृतकृत्यः स यादवः ॥
२०. गोविन्दस्तु महाप्राज्ञो यादवेन महात्मना ।
काञ्चीपुर्यां समासाद्य साकं तत्र विसृज्य तम् ॥
२१. स्वयं श्रीमङ्गलग्रामं तदनुज्ञापितो गतः ।
गङ्गाम्भश्च समानीतं शिवलिङ्गं तदद्भुतम् ॥
२२. तस्मिन् ग्रामे प्रतिष्ठाप्य तस्मिन् भस्मादिधारणं ।
कालहस्तिपुरं प्राप्य नत्वा रुद्रमुमापतिम् ॥
२३. तत्र सम्पूजयन्नित्यं गोविन्दः सुखमास्थितः ।
तस्य रामानुजस्याथ विन्ध्यारण्यादिहागतम् ॥

---

*பெருத்த மனோரத$_2$த்துடன் கங்கைக்கரையில் வாழ்ந்து. சிஷ்யர்களோடுகூட எல்லாத் தீர்த்த$_2$ங்களிலும் ஸ்நாநம் செய்து. கார்யம் நிறைவேறப்பெற்றவராய். யாத$_3$வர் காஞ்சிபுரத்திற்குத் திரும்பினார்.*

## நாயனார் காளஹஸ்தி சேர்தல்

*20–*23. பேரறிவாளரான கோ$_3$விந்த$_3$ர். மஹாத்மாவான யாத$_3$வரோடு கூடக் காஞ்சி சேர்ந்து. அங்கு அவரிடம் விடைகொண்டு. தமது ( பிறப்பிடமான ) மது$_4$ரமங்க$_3$லம் கிராமத்தை அடைந்தார். தான் கொணர்ந்த க$_3$ங்கா$_3$ ஜலத்தையும். அற்புதமான சிவலிங்க$_3$த்தையும் அந்த கிராமத்தில் பிரதிஷ்டை$_2$ செய்து, ப$_4$ஸ்மம் முதலியவற்றை த$_4$ரிப்பதாகிற சிவமதத்தையும் பரப்பி, காளஹஸ்திபுரத்தை அடைந்து. உமாபதியான சிவனை வணங்கி, அவரை தினந்தோறும் பூஜித்துக்கொண்டு ஸுக$_2$மாகவாழ்ந்தார் கோ$_3$விந்த$_3$ர்.*

## ராமாநுஜர் மறுபடியும் யாதவரை அடைதல்

*23*–29. ராமாநுஜர் விந்தியமலையிலிருந்து இங்கு வந்து சேர்ந்த செய்தியை. மற்ற ஜனங்களிடமிருந்து கேள்விப்பட்ட யாத$_3$வர். மிகவும் பரபரப்படைந்த*

२४. वृत्तान्तमन्यतस्सर्वं जनादाकर्ण्य यादवः।
अत्यन्तसाध्वसमना विस्मयेन समन्वितः॥

२५. रामानुजेऽस्मिन्वैरेण हानिरेव भविष्यति।
इत्यालोच्य तदा चित्ते शिष्यैस्सह स यादवः॥

२६. पुनश्चैवं समालोच्य यादवो निश्चितक्रियः।
सख्यं रामानुजार्येण चक्रे शिष्यमुखात्तदा॥

२७. शास्त्रप्रदातुरत्यन्तमभावात् यादवादृते।
पुनः श्रीलक्ष्मणाचार्यः तस्माद्विद्यां महामतिः॥

*२८. यादवाच्च यथापूर्वं संगृह्णन् सुखमास्थितः।

२९. शास्त्राभिलाषात्सुतरां महात्मा सन्त्यज्य देवेश्वरदासकृत्यम्।
काञ्चीपुरे लक्ष्मणदेशिकेन्द्रः तस्यान्तिके पूर्ववदास्थितोऽभूत्॥

इति श्रीप्रपन्नामृते रामानुजचरित्रे गोविन्दस्य
कालहस्तिवासो नाम षष्ठोऽध्यायः॥

---

நெஞ்சினராய், ஆஶ்சர்யப்பட்டு, 'இந்த ராமாநுஜரிடம் விரோத₄ம் பாராட்டினால் நமக்கு அழிவே உண்டாகும்' என்று தன் நெஞ்சினால் ஆலோசித்து, சீடர்களோடுகூட மறுபடியும் ஆராய்ந்து, செய்யவேண்டியதில் உறுதி கொண்டவராய், சீடர்கள் மூலமாக ராமாநுஜரோடு நட்பு பூண்டார். (தர்க்கமீமாம்ஸாதி₃) ஶாஸ்த்ரோபதே₃ஶம் செய்ய யாத₃வரைத்தவிர வேறு எவருமே இல்லாததால், பேரறிவாளரான ராமாநுஜர் மறுபடியும், முன்போலவே அவரிடமிருந்தே ஶாஸ்த்ரம் வாசித்துக்கொண்டு ஸுக₂மாக வாழ்ந்தார். ஶாஸ்த்ரம் வாசிப்பதில் விருப்பத்தால் தே₃வப் பெருமாளுக்குச் செய்யும் கைங்கர்யத்தையும் அடியோடு கைவிட்டு, ராமாநுஜாசார்யர் காஞ்சியில் யாத₃வருக்கு அருகிலேயே மறுபடியும் வாழ்ந்தார்.

ஸ்ரீப்ரபந்நாம்ருதத்தில் ராமாநுஜசரிதத்தில்,
கோ₃விந்த₃ர் (உள்ளங்கை கொணர்ந்த நாயனார்)
காளஹஸ்தியில் வஸித்தலாகிற ஆறும் அத்தியாயம் நிறைவுபெற்றது.

## सप्तमोऽध्यायः

१. ततः कदाचित् श्रीरङ्गात् यामुनः शिष्यसंवृतः ।
रामानुजं द्रष्टुकामः पुरीं काञ्चीं ययौ जवात् ॥

२. स्वाचार्यागमनं श्रुत्वा काञ्चीपूर्णो गुरुप्रियः ।
प्रत्युज्जगाम सहसा भक्तैः पुरजनैस्सह ॥

३. यामुनार्यो महाप्राज्ञः काञ्चीपूर्णेन सङ्गतः ।
सन्निधिं देवराजस्य संप्राप्य विनयान्वितः ॥

४. विराजमानं हस्त्यद्रौ वरदं भक्तवत्सलम् ।
पद्मपत्रविशालाक्षं पूर्णेन्दुसदृशाननम् ॥

५. कोटिसूर्यप्रतीकाशं कोमलावयवोज्ज्वलम् ।
शङ्खचक्रधरं देवं शरणागतरक्षकम् ॥

---

## ஏழாம் அத்தியாயம்

## ஆளவந்தார் கடாக்ஷம்

### ஆளவந்தார் கச்சிவரதனை ஸேவித்தல்

*1-11.* அதற்குப்பின் ஒருநாள் ஸ்ரீரங்க$_3$த்திலிருந்து, சிஷ்யர்களோடுகூடிய ஆளவந்தார் ராமாநுஜரைக்காணவிருப்பி, வேகமாகக் காஞ்சிக்கு எழுந்தருளினார். தனது ஆசார்யன் எழுந்தருள்வதைக்கேட்டு ஆசார்யாபி$_4$மானபாத்ரபூ$_4$தராய், ஆசார்ய ப$_4$க்தியுடைய திருக்கச்சிநம்பி, அவ்வூரிலுள்ள ப$_4$க்தர்களோடுகூட அவரை உடனே எதிர்கொண்டழைத்தார். பேரறிவாளரான யாமுநாசார்யர் திருக்கச்சிநம்பியோடு சேரப்பெற்றவராய், பணிவுடன் தே$_3$வப்பெருமாளின் கோயிலை அடைந்து, அத்திகி$_3$ரியில் விளங்குகின்றவனாய், ப$_4$க்தவத்ஸலனாய், தாமரையிதழ்த்தடங்கண்ணனாய், பூர்ணசந்திரனையொத்தமுகத்தினனாய், கோடிஸூர்ய ப்ரகாஶமுள்ளவனாய், மிகவழகிய அவயவங்களால் விளங்காநிற்பவனாய், ஶங்க$_2$சக்கரங்களை த$_4$ரித்தவனாய், தே$_3$வனாய், ஶரணமடைந்தவர்களை ரக்ஷிப்பவனாய், ஸ்ரீபூ$_4$மிதே$_3$விகளோடு

६. श्रीभूमिसहितं विष्णुं दृष्ट्वा हर्षसमन्वितः ।
कृत्वा प्रदक्षिणं सम्यक् ववन्दे चरणौ हरेः ॥
७. यथाशक्ति स्तुतिं कृत्वा मङ्गलं कर्तुमुद्यतः ।
श्रीहस्तिगिरिवासाय मङ्गलं मधुवैरिणे ॥
८. वैकुण्ठलोकनाथाय मङ्गलं विश्वरूपिणे ।
भक्ताभीष्टप्रदायास्तु मङ्गलं परमात्मने ॥
९. परब्रह्मस्वरूपाय मङ्गलं करुणाब्धये ।
पीताम्बरधरायास्तु मङ्गलं कंसवैरिणे ॥
१०. इत्येवं मङ्गलं कृत्वा यामुनार्यो हरिप्रियः ।
तत्तीर्थं शठकोपं च तत्प्रसादं सुपावनम् ॥
११. आदाय प्रेमयुक्तात्मा द्रष्टुकामः स यामुनः ।
रामानुजं महाप्राज्ञं तच्छैलान्निर्गतस्तदा ॥

---

கூடியவனான விஷ்ணுவை ஸேவித்துப் பேரானந்தமடைந்தவராய்ப் ப்ரதக்ஷிணம் செய்து, ஹரியின் திருவடித்தாமரைகளில் நன்கு வணங்கினார். இயன்றவரையில் அப்பெருமானைத் துதித்து, மங்களாசாஸநம் செய்யத் தொடங்கியவராய், "அத்திகிரியப்பனாய், மதுவை அழித்தவனுக்கு, மங்களம். வைகுண்டலோகநாதனாய், விஸ்வரூபியானவனுக்கு மங்களம். அடியார் வேண்டியதை அளிப்பவனாய், பரமாத்மாவானவனுக்கு மங்களம். பரப்ரஹ்மஸ்வரூபியாய் கருணைக்கடலானவனுக்கு மங்களம். பீதகவாடையுடையானாய், கஞ்சனைக் கொன்றவனுக்கு மங்களம்." என்று மங்களாசாஸநம் செய்து, எம்பெருமானுக்கினியவரான ஆளவந்தார், மிகப்பாவனமான எம்பெருமானுடைய ஸ்ரீபாததீர்த்தத்தையும், திருவடிநிலைகளாகிய ஸ்ரீசடகோபத்தையும், அவனுண்டு மிகுந்த ப்ரஸாதத்தையும் பெற்றுக்கொண்டு ஆராதகாதலையுடையவரானார்; பேரறிவாளரான ராமாநுஜரைக் காணவிரும்பியவராய்,—அவ்வத்திகிரியினின்றும் அப்போது வெளியே எழுந்தருளினார் ஆளவந்தார்.

१२. तस्मिन् काले यादवश्च शिष्यैः परिवृतो द्विजः।
वसन्तं वारणगिरौ वरदं भक्तवत्सलम्॥

१३. संसेवितुं समायातो लक्ष्मणार्येण धीमता।
ततः समागतान् दृष्ट्वा शिवभक्तान् द्विजान्मुनीन्॥

१४. काञ्चीपूर्णमुवाचेदं यामुनार्यो विशेषवित्।
द्विजवृन्दं समायाति काञ्चीपूर्ण विलोकय॥

१५. सर्वेषां पुरतः कश्चित् एकदण्डी समागतः।
काञ्चीपूर्ण समाख्याहि तस्य वृत्तान्तमादरात्॥

१६. यामुनार्यस्य तद्वाक्यं श्रुत्वा प्रीतमनास्तदा।
काञ्चीपूर्णो यामुनार्यमुवाच वचनं गुरुम्॥

---

### யாத₃வனையும் சிஷ்யர்களையும் ஆளவந்தார் பார்த்தல்

*12-15. அதே ஸமயத்தில் யாத₃வராகிற அந்தணரும், சிஷ்யர்களால் சூழப்பெற்றவராய், அத்திகி₃ரியில் எழுந்தருளியிருக்கும் ப₄க்தவத்ஸலனான வரத₃னை ஸேவிப்பதற்காக, பேரறிவாளரான ஸ்ரீராமாநுஜருடன் வந்துகொண்டிருந்தார். அதன் பிறகு, சிவப₄க்தர்களான அந்தணர்களும் யதிகளும் வருவதைப் பார்த்த விசேஷஜ்ஞரான யாமுனர் திருக்கச்சிநம்பியைப் பார்த்து "காஞ்சீபூர்ணரே! அந்தணர் கூட்டம் வருவதைப் பாரீர். எல்லோருக்கும் முன்னால் ஓர் ஏகத₃ண்டி₃ ஸந்யாஸி வருகிறார். காஞ்சீபூர்ணரே! அவரது விருத்தாந்தத்தை எனக்கு அன்போடு கூறுவீர்" என்று உரைத்தார்.*

### திருக்கச்சிநம்பி ராமாநுஜரைக் காட்டல்

*16-*27. யாமுநாசார்யருடைய அவ்வார்த்தையைக் கேட்டு உகந்த நெஞ்சினரான திருக்கச்சிநம்பி, அப்போதே தமது ஆசார்யரான யாமுநாசார்யரைப் பார்த்து, "யாமுநா*

१७. स एष यामुनाचार्य यादवो नाम विश्रुतः ।
सर्वशास्त्रेषु निपुणः सर्वमन्त्रविशारदः ॥

१८. स्वमतस्थापको धीमान् परपक्षविनाशकः ।
शिष्याणां पुरतो याति दण्डमुद्यम्य वेगतः ॥

१९. अस्यैव निकटे नित्यं कान्तिमत्यात्मसंभवः ।
रामानुजः पठन्नास्ते शास्त्रं वेदान्तनामकम् ॥

२०. पश्येमं यामुनाचार्य लक्ष्मणार्यं शुचिस्मितम् ।
आयान्तं विप्रमध्ये तु स्वहस्तेन सुशोभिना ॥

२१. सख्युर्विप्रस्य बालस्य हस्तं संगृह्य चादरात् ।
दीर्घबाहुं विशालाक्षं निम्ननाभिं तनूदरम् ॥

---

சார்யரே! இவரே யாத₃வப்ரகாசர் என்று பெயர் பெற்றவர். எல்லா சாஸ்திரங்களிலும் வல்லவர். எல்லா மந்திரங்களையும் அறிந்தவர். தனது அத்₃வைத மதத்தை நிலை நிறுத்துவதிலும், மற்ற மதங்களை அழிப்பதிலும் வல்ல அறிவுடையவர். அவரே த₃ண்ட₃த்தைத் தூக்கிக்கொண்டு சிஷ்யர்களுக்கு முன்னால் வேக₃மாக வருகிறார். காந்திமதியின் பிள்ளையான ராமாநுஜர் இவரிடமே வேதா₃ந்தமென்று அழைக்கப்படும் அத்₃வைத ஶாஸ்த்ரத்தைப் படித்துக் கொண்டிருக்கிறார். யாமுநாசார்யரே! பரிசுத்தமான புன்முறுவலையுடையவராய், அந்தணருக்கு நடுவில், தன் அழகிய திருக்கையால் நண்பனான அந்தணச் சிறுவனுடைய கையை அன்புடன் பிடித்துக்கொண்டு வருகின்றவரான ராமாநுஜரைக் காண்பீர். முனிவர் தலைவரே! நீண்ட கைகளையும், தடங்கண்களையும், ஆழ்ந்த நாபி₄யை (கொப்பூழை)யும், குறுகிய வயிற்றையும், சங்குபோன்ற கழுத்தையும், நெய்த்தகுழல்களையும், முழுமதியை ஒத்த திருமுகத்தையும், பரந்த மார்பையும், கொவ்வைக்கனி போன்ற

२२. कम्बुकण्ठं स्निग्धकेशं पूर्णचन्द्रनिभाननम्।
विशालवक्षं बिम्बोष्ठमुन्नतांसं जनप्रियम्।

२३. सम्यक् समविभक्ताङ्गं स्निग्धवर्णं सुलक्षणम्।
क्षीराब्धिफेनसंकाशवस्त्रद्वयविराजितम्॥

२४. सुवर्णकटिसूत्रेण शोभमानं सुशोभिना।
नवरत्नविकीर्णाभ्यां कुण्डलाभ्यां विराजितम्॥

२५. बिसतन्तुनिभैश्शुभ्रैर्ब्रह्मसूत्रैर्विराजितम्।
छिद्रोर्ध्वपुण्ड्रसंयुक्तललाटेनातिशोभितम्॥

२६. तमवेहि यतिश्रेष्ठ रामानुजमकल्मषम्।
रामानुजस्य वृत्तान्तं विन्ध्यारण्योद्भवं तदा॥

२७. सर्वं निवेदयामास यामुनाय महात्मने।
काञ्चीपूर्णस्य तद्वाक्यं मुनिः श्रुत्वा स यामुनः॥

---

திருப்பவளங்களேயும், உயர்ந்த தோள்களேயும் உடையவரும், அனைவர்க்கும் இனியவரும், ஸமமாக நன்கமைந்த அவயவங்களோடு கூடியவரும், அழகிய நிறத்தினரும், நல்ல லக்ஷணங்கள் கொண்டவரும், திருப்பாற்கடலின் நுரை போன்ற சுத்தமான இரண்டு வஸ்திரங்களே உடுத்தவரும், மிக அழகிய பொன் அரைநாண் கயிற்ருல் விளங்குகின்றவரும், நவரத்னங்களால் செய்த குண்ட₃லங்களால் விளங்காநிற்பவரும், தாமரைத் தண்டுபோல் அழகிய பூணூல்களாலே பிரகாசிப்பவரும், இடைவெளியுள்ள ஊர்த்₄வ புண்ட்₃ரத்தோடுகூடிய திருநெற்றியால் மிக விளங்குகின்றவருமான குற்றமற்ற அவ்விராமாநுசரைக் கடாக்ஷிப்பீர்" என்று வார்த்தை சொன்னுர். விந்தியமலைக் காட்டில் நிகழ்ந்த ராமாநுஜ வ்ருத்தாந்தத்தையும் அப்போதே மஹாத்மாவான யாமுநருக்குத் திருக்கச்சிநம்பி ஒன்றொழியாமல் உரைத்தார்.

२८. रामानुजं लोचनाभ्यां संवीक्ष्य प्रेमपूर्वकम् ।
तेन संभाषणं कर्तुमुद्युक्तो यामुनोऽभवत् ॥

२९. यद्ययं हि समाहूतो लक्ष्मणार्यो मयान्तिकम् ।
नायाति यत्तु वा बालो ह्यसज्जनसमावृतः ॥

३०. मनस्येवं समालोच्य यामुनार्यः कृपानिधिः ।
वरदं प्रार्थयामास तस्य विज्ञानसिद्धये ॥

३१. यस्य प्रसादकलया बधिरः शृणोति
पङ्गुः प्रधावति जवेन च वक्ति मूकः ।
अन्धः प्रपश्यति सुतं लभते च वन्ध्या
तं देवमेव वरदं शरणं गतोऽस्मि ॥

---

## ஆளவந்தார் ராமாநுஜரைக் கடாக்ஷித்து, ஶ்ரீரங்க$_3$ம் சேர்தல்

27*-35. திருக்கச்சிநம்பியின் அவ்வாக்யத்தைக் கேட்ட யாமுந முனிவர் ராமாநுஜரைத் திருக்கண்களாலே அன்போடு கடாக்ஷித்து, அவரோடு பேச முயற்சி செய்கின்றவராய், ஸத்தை பெற்றவரானார். "என்றால் அருகில் அழைக்கப்பெற்றாலும், இவ்விராமாநுசர், சிறுவராயிருப்பதாலும், தீயவர்களால் சூழப்பெற்றிருப்பதாலும் வரமாட்டார்" என்று கருணைக்கடலான யாமுநாசார்யர் இவ்வண்ணமாக மனத்தில் எண்ணி, வரத$_3$ராஜப்பெருமாளை, ராமாநுஜருக்கு நல்லறிவு ஏற்பட வேணுமென்று ப்ரார்த்தித்தார். "எவனுடைய கடாக்ஷலேஶம் ஏற்பட்டால் செவிடன் காது கேட்கப் பெறுவானோ, நொண்டி வேகமாக ஓடப் பெறுவானோ, ஊமை (வேகமாகப்) பேசுவானோ, குருடன் மிக நன்றாகப் பார்ப்பானோ, மலடி மகனைப் பெறுவாளோ, அந்த வரத$_3$ராஜப்பெருமானை ஶரணமடைகின்றேன்.

३२. लक्ष्मीश पुण्डरीकाक्ष कृपां रामानुजे तव।
निधाय स्वमतेनाथ प्रविष्टं कर्तुमर्हसि॥

३३. इति विज्ञापनं कृत्वा वरदं प्रति भक्तितः।
शिष्यैस्सर्वैः परिवृतो यामुनार्यो दयानिधिः॥

३४. भूयः श्रीरङ्गनगरं प्रपेदे वनशोभितम्।

३५. निर्गत्य काञ्चीनगरात्सशिष्यः श्रीरङ्गमासाद्य स यामुनार्यः।
रामानुजस्याभ्युदयं चिकीर्षुः तत्स्तोत्ररत्नं प्रचकार धीरः॥

इति श्रीप्रपन्नामृते रामानुजचरिते रामानुजदर्शनार्थं काञ्चीं प्रति
यामுनाचार्यगमनं नाम सप्तमोऽध्यायः॥

---

*லக்ஷ்மீநாதனே! செந்தாமரைக் கண்ணனே! உனது கருணையை ராமானுஜனிடம் வைத்து உன் (தன்) மதத்தைச் சேர்ந்தவனுக்குவாயாக.'' என்று பேரருளாளனைக் குறித்து பக்தியோடு பிரார்த்தித்து, கருணைக்கடலான யாமுநாசார்யர் ஶிஷ்யர்களால் சூழப்பெற்றவராய், ஆராமம் சூழ்ந்த அரங்கநகரை மறுபடியும் அடைந்தார். சிஷ்யர்களோடுகூடக் காஞ்சிநகரத்திலிருந்து ஸ்ரீரங்கத்தை அடைந்து, அறிவாளிகளில் தலைசிறந்தவரான அந்த யாமுநாசார்யார், ராமானுஜருக்கு (பரமபுருஷனுடைய நிர்ஹேதுக கிருபை முதலான) சிறப்புகள் ஏற்படுவதற்காக உலகம் புகழும் ஸ்தோத்ரரத்நத்தை அருளிச்செய்தார்.*

ஸ்ரீப்ரபந்நாம்ருதத்தில் ராமானுஜர் சரிதத்தில்
ராமானுஜரைக் காண்பதற்காக ஆளவந்தார் காஞ்சிக்கு
எழுந்தருளலாகிற ஏழாம் அத்தியாயம் நிறைவுபெற்றது.

अष्टमोऽध्यायः

१. ततो वेदान्तशास्त्राणि पठन् लक्ष्मणदेशिकः ।
पूर्ववद्यादवस्याग्रे तस्थौ सब्रह्मचारिभिः ॥

२. कदाचिद्यादवस्याथ लक्ष्मणार्यो महामतिः ।
तैलेनाभ्यञ्जनं कुर्वन् शृण्वन् शास्त्रं समास्थितः ॥

३. स विप्रो यादवोऽपार्थं श्रुतेः शिष्यान् वदन् स्थितः ।
रामानुजस्तु तच्छ्रुत्वा दुःखाविष्टोऽभवत्तदा ॥

४. क्रुद्धस्य लक्ष्मणार्यस्य नेत्राभ्यामश्रुबिन्दवः ।
पतिता यादवस्योर्वोरपार्थं वदतः श्रुतेः ॥

---

## எட்டாம் அத்தியாயம்

## கப்யாஸ ச்ருத்யர்த்த விசாரம்

### ராமாநுஜர் யாத₃வருக்கு எண்ணெய் தேய்த்துவிடல்

1-2. அதற்குப்பின் இளையாழ்வார் முன்போலே மற்ற மாணவர்களோடு யாத₃வரிடம் வேதா₃ந்த ஶாஸ்த்ரங்களைப் படித்துக்கொண்டிருந்தார். அப்போது ஒருசமயம் பேரறிவாளரான ராமாநுஜர் யாத₃வருக்கு எண்ணெய் தேய்த்துக் கொண்டிருக்கும்போதே ஶாஸ்த்ரத்தையும் கேட்டுக் கொண்டிருந்தார்.

### ஶ்ருதிக்கு அவப்பொருள் - ஸ்ரீராமாநுஜரின் கண்ணீர்

3-*6. யாத₃வரான அந்தணர் அப்போது சீடர்களிடம் கப்யாஸ ஶ்ருதிக்கு (பரமாத்மாவுக்குக் குரங்கின் ஆஸநவாய் போன்று சிவந்த தாமரையைப் போன்ற இரு கண்கள் உள என்னும்) அவப்பொருளைச் சொல்லிக்கொண்டிருந்தார். அதைக் கேட்டவுடன் ராமாநுஜர் துன்பத்தாலே ஆட்கொள்ளப்பட்டவரானார். (பரமாத்மாவின் செந்தா

५. दीप्ताभ्यामिव दीपाभ्यां सार्चिषः स्नेहबिन्दवः।
तदश्रुपतनं घोरमब्रवीदिव यादवम्॥

६. अपार्थं श्रुतिवाक्यानां मा वदेति वचः स्फुटम्।
अश्रुभिः पीड्यमानोऽसौ यादवः पण्डिताधमः॥

७. साश्रुनेत्रमुखं दृष्ट्वा तस्य रामानुजस्य तत्।
प्रत्युवाच शुभं वाक्यं लक्ष्मणार्यं हरिप्रियम्॥

८. किमर्थं शोचसे प्राज्ञ वद दुःखस्य कारणम्।
लक्ष्मणार्यो यादवस्य वाक्यं श्रुत्वा तमब्रवीत्।

---

மறைக் கண்களுக்கு இப்படி ஓர் இழிவான உவமை இவரால் கூறப்பட்டுவிட்டதே என்று) கோபங்கொண்ட ராமாநுஜருடைய இரு கண்களிலிருந்தும் ஶ்ருதிக்கு அவப்பொருளுரைக்கும் யாத₃வரின் இரு கொட்டைகளிலும் கண்ணீர்த் துளிகள்—கொழுந்துவிட்டெரியும் இரு விளக்குகளிலிருந்து விழும் இரு எண்ணெய்ச் சுடர்கள்போல் விழுந்தன. கொதிக்கும் அக்கண்ணீர்த் துளிகள், "ஶ்ருதிவாக்யங்களுக்கு அவப்பொருள் உரைக்காதே" என்று அவரிடம் தெளிவாகச் சொல்லுவனபோல் இருந்தன.

### யாத₃வர் கண்ணீருக்குக் காரணம் கேட்டல்

*6*-*8. அக்கண்ணீர்த்துளிகளால் சுடப்பெற்ற பண்டி₃தாத₄மரான யாத₃வர், கண்ணீர் நிறைந்த முகமுடைய அச்சீடரைக்கண்டு, ஹரியிடம் ஈடுபட்ட அந்த ராமாநுஜரைக் குறித்து "அறிவுடையவனே! ஏன் வருந்துகிறாய்? உன் துன்பத்திற்குக் காரணத்தைக் கூறுவாய்" என்று கேட்பதற்கு இனிதாயிருக்கும் வார்த்தையைக் கூறினார்.*

९. कप्यासमिति वाक्यस्य विमतार्थस्त्वयोच्यते ।
अपार्थं यच्छ्रुतेरर्थं श्रुत्वा शोचामि यादव ॥

१०. रामानुजस्य तद्वाक्यं श्रुत्वा कोपसमन्वितः ।
रामानुजमुवाचेदं यादवः कलिमोहितः ।

११. भो रामानुज दुर्बुद्धे त्वं वदार्थं ममाग्रतः ।
कप्यासमिति वाक्यस्य यत्तत्स्वाभाविकं वरम् ॥

१२. यादवस्य वचः श्रुत्वा लक्ष्मणार्यो मुदान्वितः ।
वक्तुकामः श्रुतेरर्थं यादवं वाक्यमब्रवीत् ॥

१३. कप्यासमिति वाक्यस्य वक्ष्याम्यर्थं शृणु द्विज ।
गम्भीराम्भसि जातस्य प्रोद्यद्भानुकरैस्तदा ।

---

## ராமாநுஜர் கப்யாஸ ஶ்ருதிக்குப் பொருளுரைத்தல்

*8*-*16.* யாத$_3$வருடைய வாக்யத்தைக் கேட்ட ராமாநுஜர், "யாத$_3$வரே! 'கப்யாஸம்' என்று தொடங்கும் ஶ்ருதி வாக்யத்திற்குத் தவறான பொருள் உம்மால் கூறப்படு கிறது. வேத$_3$வாக்யத்துக்கு நீர் கூறும் பொருளைக் கேட்டே வருந்தினேன்" என்று கூறினார். ராமாநுஜருடைய அவ் வாக்யத்தைக் கேட்டுக் கோபங்கொண்ட யாத$_3$வர் கலியி னால் மயக்கப்பெற்று, "அடே தீய அறிவையுடைய ராமாநுஜா! 'கப்யாஸம்' என்று தொடங்கும் வாக்யத் திற்கு என் முன்னிலேயே 'உண்மையான சிறந்த' பொருளைச் சொல்லு" என்று ராமாநுஜரைப் பார்த்துக் கூறினார். யாத$_3$வருடைய வார்த்தையைக் கேட்ட ராமாநுஜர் மிகவும் ஆனந்தமுடையவராய் ஶ்ருதிக்குப் பொருள்கூற விரும்பி "அந்தணரான யாத$_3$வரே! கப்யாஸஶ்ருதிக்குப் பொருள் கூறுகிறேன் கேட்பீர்.

१४. संफुल्लदलपद्मस्य सदृशे लोचने हरेः।
तस्याः श्रुतेरेवमर्थो वक्तव्यः शास्त्रवित्तमैः॥

१५. षाड्गुण्यपरिपूर्णस्य विष्णोरमिततेजसः।
मर्कटासनसादृश्यमुच्यते नेत्रयोस्त्वया॥

१६. त्वयोदितमबद्धार्थं श्रुत्वा शोचामि यादव।
लक्ष्मणार्यस्य तद्वाक्यं श्रुत्वा कोपसमन्वितः॥

१७. रामानुजं तिरस्कृत्य यादवो वाक्यमब्रवीत्।
रे रे दुर्मार्गि दुर्बुद्धे मा वदार्थमसङ्गतम्॥

१८. स्थातुं ममाग्रे योग्यत्वं तव नास्ति द्विजाधम।
इत्युक्त्वा यादवो मूर्खः शमादिगुणसंयुतम्॥

---

'ஆழமான நீர்நிலையில் உண்டானதாய், உதி₃க்கும் ஸூர்ய னுடைய கிரணங்களால் அப்போதே அலர்ந்த இதழ்களை உடையதான தாமரைக்கு ஸமானமானவை ஹரியின் இரு கண்களும்' என்று இவ்வண்ணமே ஶாஸ்த்ரஸாரமறிந்தவர்க ளால் பொருள் உரைக்கப்படவேண்டும். ஜ்ஞாநம், ஶக்தி, ப₃லம், ஐஶ்வர்யம், வீர்யம், தேஜஸ் என்னும் ஆறு கு₃ணங்க ளும் நிறைந்தவராய், அளவற்ற பெருமையை உடையவ ரான விஷ்ணுவின் கண்களுக்கு நீர் குரங்கின் ஆஸநவாயை உவமையாகக் கூறினீர். நீர் கூறிய அவப்பொருளைக் கேட்டே நான் வருந்தினேன்" என்று பதில் உரைத்தார்.

### யாத₃வரின் கோபம்

16*-*19. இளையாழ்வாரின் இவ்வார்த்தையைக் கேட்ட யாத₃வர், கடுங்கோபங்கொண்டவராய், ராமாநுஜரை அவமதித்துப் பின்வரும் வாக்யத்தைக் கூறினார்:—"அடே! தீயவழியில் செல்லும் புல்லறிவாளனே! பொருந்தாப் பொருளைக் கூறுதே. அந்தணரில் கடைப்பட்டவனே! எனக்கு முன்னால் நிற்பதற்கு உனக்குத் தகுதியில்லை"

१९. रामानुजं महात्मानं गच्छ गच्छेति चाब्रवीत् ।
रामानुजो महाप्राज्ञस्तं विहाय स यादवम् ॥

२०. काञ्चीपूर्णं समासाद्य सर्वं वृत्तान्तमादरात् ।
तस्मै निवेद्य सहसा तेनानुज्ञापितस्तदा ॥

२१. श्रीहस्तिगिरिनाथाय स्वर्णकुम्भेन तज्जलम् ।
भक्त्या समर्पयन्नित्यं वरदाय समास्थितः ॥

२२. काञ्चीपूर्णेनानुनीतस्तदानीं त्यक्त्वा दुष्टं यादवं लक्ष्मणार्यः ।
भक्त्या युक्तो हस्तिशैलाधिनेतुः कुर्वन्नास्ते नित्यकैङ्कर्यवृत्तिम् ॥

इति श्रीप्रपन्नामृते रामानुजचरिते कप्यासश्रुत्यर्थविचारो
नाम अष्टमोऽध्यायः ॥

---

என்று கூறி, மூர்க்கரான யாதவர் ஶமதமாதிகுணங்களோடு கூடிய மஹாபுருஷரான ராமாநுசரைப் பார்த்து "போ போ" என்றும் கத்தினார்.

**ராமாநுஜர் யாதவரை விட்டு விலகல்**

19*-22. பேரறிவாளரான ராமாநுஜர் அந்த யாதவரை விட்டு, திருக்கச்சிநம்பியை அடைந்து, அவரிடம் நடந்த செய்தி முழுவதையும் அன்புடன் விண்ணப்பித்து, உடனே அவரது அநுமதியைப்பெற்று, அதுமுதல் அத்திகிரியப்பனை வரதராஜனுக்குப் பொற்குடத்தால் சாலைக் கிணற்றுநீரை பக்தியோடு தினந்தோறும் ஸமர்ப்பித்து வந்தார். திருக்கச்சிநம்பியால் அநுமதிக்கப்பெற்று, அப்போதே தீயவரான யாதவரை விட்ட இளையாழ்வார், பக்தியுடன் அத்திகிரியப்பனுக்கு நித்யகைங்கர்யமாகிய—சாலைக் கிணற்றுநீர் ஸமர்ப்பிக்கும் காரியத்தைச் செய்துகொண்டிருந்தார்,

**ஸ்ரீ ப்ரபந்நாம்ருதத்தில் ராமாநுஜர் சரிதத்தில்**
**கப்யாஸ ஶ்ருத்யர்த்த விசாரம் என்னும்**
**எட்டாம் அத்தியாயம் நிறைவுபெற்றது.**

## नवमोऽध्यायः

१. ततः श्रीरङ्गनगरे यामुनार्यो यतीश्वरः ।
देवराजं समुद्दिश्य स्तोत्ररत्नं विधाय च ॥

२. रामानुजार्यवृत्तान्तं शृण्वंस्तत्र समास्थितः ।
काञ्चीपुरे यादवं तं कान्तिमत्यात्मसंभवः ॥

३. विसृज्य स महाप्राज्ञः काञ्चीपूर्णेन सङ्गतः ।
तन्नियोगेन हरये वारणाचलवासिने ॥

४. शालकूपजलं भक्त्या चादाय स्वर्णकुम्भतः ।
नित्यं समर्पयन्नास्ते मुदा रामानुजः सुधीः ॥

५. श्रुत्वा कदाचिदित्येवं संप्रहृष्टः स यामुनः ।
शिष्यं पूर्णार्यमाहूय वचनं चेदमब्रवीत् ॥

---

## ஒன்பதாம் அத்தியாயம்

## ஆளவந்தாரின் மடங்கிய கைவிரல்கள் விடுபடல்

### ஆளவந்தார் பெரியநம்பியை காஞ்சிக்கு அனுப்புவது

1-6. அதற்குப்பின்—யதிகளின் தலைவரான யாமுனாசார்யர் தேவப்பெருமாளைக் குறித்து ஸ்தோத்ரரத்னத்தை அருளிச்செய்து, ராமாநுஜரைப்பற்றிய செய்தியைக் கேள்வியுற்றுக் கொண்டு ஶ்ரீரங்க₃த்திலேயே எழுந்தருளியிருந்தார். "காஞ்சீபுரத்தில் காந்திமதியின் குமாரரான ஶ்ரீராமாநுஜரும் யாத₃வரைவிட்டு, பேரறிவாளராகையாலே திருக்கச்சிநம்பியோடு சேர்ந்தார். அவரது நியமனத்தாலே—அத்திகிரியருளாளனுக்குப் பொற்குடத்தில் சாலைக் கிணற்றுநீரை ப₄க்தியுடனும், உகப்புடனும் தினந்தோறும் ஸமர்ப்பித்துக்கொண்டிருந்தார்—அறிவாளியான ராமா

६. काञ्चीपुरीं समासाद्य लक्ष्मणाचार्यसन्निधौ ।
मया कृतमिदं स्तोत्रं त्वं वाचय ममाज्ञया ॥

७. गुरुवाक्यं तदाकर्ण्य तेन चाज्ञापितस्तदा ।
पूर्णाचार्यो महाप्राज्ञः पुरीं काञ्चीं ययौ जवात् ॥

८. श्रीहस्तिशैलमारुह्य तं नत्वा वरदं हरिम् ।
तत्सन्निधौ यामुनेन कृतं स्तोत्रमणिं पठन् ॥

९. कृत्वा विज्ञापनं तस्य वरदस्य जगत्पतेः ।
तत्तीर्थं शठकोपं च गृहीत्वा भक्तिसंयुतः ॥

१०. रामानुजार्यवृत्तान्तं काञ्चीपूर्णात् निशम्य सः ।
तत्संधानं समाश्रित्य तस्थौ स्तोत्रमणिं पठन् ॥

---

நுஜர்" என்னும் செய்தியை ஒருநாள் கேள்விப்பட்டு மிகவும் இன்புற்ற யாமுநாசார்யர், தமது சீடரான பெரிய நம்பியை அழைத்து, "எனது நியமனத்தாலே காஞ்சீ புரத்தை அடைந்து இளையாழ்வாரின் முன்பே, என்னால் செய்யப்பட்ட இந்த ஸ்தோத்ரத்தை நீர் சொல்லிக்கொண்டிரும்" என்னும் இந்த வாக்யத்தைக் கூறினார்.

### ராமாநுஜர் பெரியநம்பியை சந்தித்தல்

7-14. அந்த ஆசார்ய வாக்யத்தைக் கேட்டு, அவரால் நியமிக்கப்பெற்றவராய், பேரறிவாளரான பெரியநம்பி அப்போதே காஞ்சிக்கு விரைந்தார். அத்திகிரியின் மேலேறி, பேரருளாளனை ஸேவித்து, அவன் திருமுன்பே யாமுநரருளிய ஸ்தோத்ரத்தைப் படித்து, லோகநாத$_2$னை வரத$_3$ராஜ னிடம் விண்ணப்பம் செய்து, ப$_4$க்தியோடு அவனுடைய ஸ்ரீ பாத$_3$தீர்த்த$_2$த்தையும், ஶட$_2$ாரியையும் பெற்றுக் கொண்டு, ராமாநுஜாசார்யரைப்பற்றிய செய்தியைத் திருக்கச்சிநம்பியிடமிருந்து கேள்விப்பட்டு, அவரைச் சந்திப்

११. तदा रामानुजो धीमान् हेमकुम्भेन तज्जलम्।
समादायाञ्जसा भक्त्या वरदान्तिकमाययौ॥

१२. तत्रापश्यन्महात्मानं महापूर्णं महौजसम्।
द्विजवर्यं महाप्राज्ञं विष्णुभक्तं विमत्सरम्॥

१३. स्वरेण महता सम्यक् पठन्तं वैष्णवं स्तवम्।
ततस्स्वाभाविकं नाम श्रुत्वा पद्यमनुत्तमम्॥

१४. रामानुजो महाप्राज्ञः परं हर्षमवाप्तवान्।
स्वाभाविकानवधिकातिशयेशितृत्वं
नारायण त्वयि न मृष्यति वैदिकः कः।
ब्रह्मा शिवः शतमखः परमस्वराडि-
त्येतेपि यस्य महिमार्णवविप्रुषस्ते॥

---

பதை எதிர்பார்த்து ஸ்தோத்ரத்தைப் படித்துக்கொண் டிருந்தார். அப்போது அறிவாளியான ராமானுஜர் பொற் குடத்தாலே ப₄க்தியுடன் சாலைக்கிணற்றுநீரை முறைப்படி எடுத்துக்கொண்டு வரத₃ராஜப்பெருமாளிடம் எழுந் தருளினார். அங்கு—மஹாத்மாவாய், தேஜஸ்வியாய், அந்தணர் தலைவராய், பேரறிவாளராய், விஷ்ணுப₄க்தராய், மாத்ஸர்யமற்றவராய், விஷ்ணுவைப்பற்றிய ஸ்தோத்ரத் தைப் பெரிய ஸ்வரத்தோடு ஸேவித்துக்கொண்டிருப்பவ ரான பெரியநம்பியைக் கண்டார். பிறகு, "ஸ்வாப₄ாவிக" என்னும் சிறந்த ஶ்லோகத்தைக் கேட்டுப் பேரறிவாள ரான ராமானுஜர் பேரானந்தமுற்றார். (அதன் பொருளா வது :—) "நாராயணனே! இயற்கையானதாய், எல்லையற்ற மேன்மையுடையதான ஈஶ்வரத்தன்மையை உன்னிடம் எந்தவைதி₃கன்தான் பொறுக்கமாட்டான்? பிரமன், சிவன், இந்திரன், முக்தாத்மா ஆகியவர்கள் உனது மகிமைக் கடலில் திவலைகளாயிருப்பவர்களன்றோ."

१५. श्रुत्वा स्तोत्रमणिं प्राज्ञो विस्मयाविष्टमानसः।
पूर्णाचार्यमुवाचेदं लक्ष्मणार्यो हरिप्रियः॥

१६. द्विजोत्तम महाप्राज्ञ पठ्यमानः स्तवः शुभः।
महात्मना कृतः केन मह्यमाख्याहि तं गुरुम्॥

१७. रामानुजस्य तद्वाक्यं श्रुत्वा पूर्णः कृपानिधिः।
रामानुजमुवाचेदं श्रोतुकामं विमत्सरम्॥

१८. रङ्गक्षेत्रे महान् कश्चिद्यामुनार्य इति श्रुतः।
अस्ति विप्रकुले जातो वेदवेदान्तपारगः॥

१९. तुर्याश्रमं समापन्नः पञ्चसंस्कारसंस्कृतः।
सर्वशास्त्रार्थतत्त्वज्ञः सदाचारसमाश्रयः॥

---

## ராமாநுஜர் ஆளவந்தாரைக் காணப் புறப்படல்

15-22. அறிவாளியான இளையாழ்வார், எம்பெருமானிடம் ஈடுபட்டவராகையாலே ஸ்தோத்ரத்தைக் கேட்டு வியப்புற்ற நெஞ்சினராய், பெரியநம்பியைக் குறித்து, "பேரறிவாளரான அந்தணர் தலைவரே! நீர் படிக்கும் இந்த மங்க$_3$ளமான துதிநூல் எந்த மஹாநுப$_4$ாவரால் அருளிச்செய்யப்பட்டது? அவ்வாசார்யரைப்பற்றி எனக்குக் கூறுவீர்" என்று கூறினர். இளையாழ்வாருடைய அவ்வார்த்தையைக் கேட்ட கருணாநிதி$_4$யான பெரியநம்பி, மாத்ஸர்யமற்றவராய், (ஆளவந்தாரைப் பற்றிக்) கேட்க விரும்பிய ராமாநுஜரைக் குறித்து, "பேரறிவாளரான ராமாநுஜரே! ஸ்ரீரங்க க்ஷேத்ரத்தில் அந்தணர்குலத்துதித்தவரான யாமுநாசார்யர் என்னும் மஹான் எழுந்தருளியிருக்கிறார். அவர் வேத$_3$வேதா$_3$ந்தங்கள் கரைகண்டவர்; ஸந்யாஸாஶ்ரமத்தோடு கூடியவர்; பஞ்சஸம்ஸ்காரம் பெற்றவர்; எல்லா சாஸ்திரங்களின் உண்மைப் பொருளை உணர்ந்தவர்; நல்லொழுக்கம் நிரம்

२०. जितेन्द्रियो जितक्रोधो विष्णुभक्तो विमत्सरः।
तेन स्तोत्रं कृतमिदं रामानुज महामते॥

२१. विप्रवर्यस्य तद्वाक्यं श्रुत्वा रामानुजस्तदा।
पूर्णाचार्यमुवाचेदं यामुनार्यदिदृक्षया॥

२२. महापूर्णस्य निकटं संप्राप्य विनयान्वितः।
तेन साकं ययौ धीरो रङ्गक्षेत्रमनुत्तमम्॥

२३. तदा रङ्गेश्वरः श्रीमान् मनस्येवमचिन्तयत्।
रामानुजो यामुनश्च मिलितौ तावुभावपि॥

२४. लीलाविभूतिरस्माकं तदा नष्टा भविष्यति।
ततोऽर्चकमुखेनाह रङ्गेशो यामुनं प्रति॥

---

பியவர்; இந்திரியங்களேயும், கோபத்தையும் வென்றவர்; விஷ்ணுப₄க்தர்; மாத்ஸர்யமற்றவர்; அவரால் இந்த ஸ்தோத்ரம் செய்யப்பட்டது,'' என்று கூறினர். அந்தணர் தலேவரான பெரியநம்பியுடைய இவ்வாக்யத்தைக் கேட்டவுடன் ராமாநுஜர் ஆளவந்தாரைக் காணவேண்டும் என்னும் வாக்யத்தை அவரிடம் கூறினர். பெரியநம்பியிருந்த விடத்திற்குப் பணிவுடன் சென்று, அவரோடுகூட ஒப்பற்றதான ஸ்ரீரங்கத்திற்குப் புறப்பட்டார் அறிவாளியான இளேயாழ்வார்.

## ஆளவந்தார் ஆசார்யன் திருவடியடைதல்

23-29. அப்போது ஸ்ரீமானை அரங்கநகரப்பன்—''ராமாநுஜரும், யாமுநருமாகிய இருவரும் ஒன்றுசேர்ந்து விட்டால் நமது லீலாவிபூ₄தியே இல்லேயாய்விடும்'' என்று தன் திருவுள்ளத்தில் நினேத்தான். அதற்குப்பின் அர்ச்சகர் மூலமாக ஆளவந்தாரைக் குறித்து ''யதிகள் தலேவரே!

२५. गच्छाद्यैव यतिश्रेष्ठ दत्तं ते परमं पदम्।
तेनैवमुक्तो हरिणा रामानुजदिदृक्षया॥

२६. रङ्गेश्वरं प्रणम्याह यामुनः शिरसा हरिम्।
रङ्गेशानन्तरं मुक्तिं गच्छामि दिवसाष्टकात्॥

२७. इति विज्ञाप्य योगीशः तत्संभाषणलोलुपः।
मठं समासदच्छीघ्रं आकाङ्क्षंस्तस्य चागमम्॥

२८. सुमहानपि योगीन्द्रः परतन्त्रस्ततोऽञ्जसा।
अनवाप्य मनोभीष्टं स्वाचार्याङ्घ्रिमुपेयिवान्॥

२९. रामानुजमहापूर्णौ यामुनं यमिनां वरम्।
द्रष्टुकामौ महाप्राज्ञौ कावेरीं प्रापतुस्तदा॥

---

உமக்கு பரமபதமளித்தோம். இன்றே செல்வீராக" என்று கூறினன் அரங்கன். இவ்வண்ணம் அரங்கனால் நியமிக்கப் பெற்ற ஆளவந்தார் ராமாநுஜரைக் காணவேணுமென்னும் விருப்பத்தால் தலையாலே அரங்கனை வணங்கி "அரங்க நகரப்பனே! எட்டுநாள் கழித்துப் பரமபதம் செல்கின்றேன்" என்று இவ்வண்ணம் விண்ணப்பித்த அந்த யோகீந்த்ரர் ராமாநுஜரோடு பேசவேண்டும் என்ற பேராவல் கொண்டவராய். மடத்தை விரைவில் அடைந்து ராமாநுஜரின் வரவை எதிர்பார்த்துக்கொண்டிருந்தார் யோகிகளுக்குத் தலைவரான அவர் மிகப் பெரியவரானாலும் பரமனுக்குப் பரதந்த்ரராகையாலே, தமது மனோரதம் நன்கு நிறைவேறப்பெறுமலே (எட்டுநாள் கழித்து) ஆசார்யன் திருவடிகளை அடைந்தார். அப்போது பேரறிவாளர்களான ராமாநுஜரும், பெரியநம்பியும் யதிகளில் சிறந்தவரான யாமுநாசார்யரைக் காண விரும்பியவர்களாய் வட திருக்காவேரியின் வடகரையை அடைந்தனர்.

३०. व्यूहं द्विजानां संदृष्ट्वा कावेरीसैकते स्थितम्।
ऊचतुर्वचनं तौ तु मार्गागतजनानिदम्॥

३१. किमर्थमागतो व्यूहो वैष्णवानां महात्मनाम्।
विशदं तज्जनाः शीघ्रं कारणं वदताद्य नौ॥

३२. तयोस्तद्वचनं श्रुत्वा विप्रयोर्विष्णुभक्तयोः।
जनास्तत्कारणं ताभ्यां द्विजाभ्यामवदंस्तदा॥

३३. तद्वाक्यं घोरसंकाशं यामुनार्यवियोगजम्।
श्रुत्वा तौ विष्णुभक्तार्यौ जनेभ्यः पथि दुःखितौ॥

३४. भूम्यां निपतितौ तत्र छिन्नमूलाविव द्रुमौ।
यामुनार्यवियोगेन दुःखितौ विबुधर्षभौ॥

---

### ராமாநுஜரின் பெருந்துன்பம்

30-*35. காவேரி மணலிலே நிற்கும் அந்தணர்களின் கூட்டத்தைக் கண்டு, அவர்கள் இருவரும் வழியில் வந்த ஜனங்களைப் பார்த்து "ஜனங்களே! பெரியவர்களான ஸ்ரீவைஷ்ணவர்களின் கூட்டம் எதன்பொருட்டு வந்திருக் கின்றது? அதைத் தெளிவாக எங்களுக்குச் சொல்லுங்கள்" என்னும் வார்த்தையை உரைத்தனர். விஷ்ணுப₄க்தியுடைய அந்தணர்களான அவ்விருவருடைய வார்த்தையைக் கேட்ட ஜனங்கள், அந்தணர்கள் கூடியிருப்பதற்குக் காரணம்— ஆளவந்தார் ஆசார்யன் திருவடியடைந்தமையே என்பதை அவ்விரு அந்தணர்க்கும் உரைத்தனர். மிகக் கொடிய தான அவ்வார்த்தையை வழிப்போக்கர்களிடமிருந்து கேள்விப்பட்டதும், விஷ்ணுப₄க்தர்களான அவ்விருவரும் பெரும் வருத்தமுற்றவர்களாய், வேரற்ற மரங்கள்போலே பூ₄மியில் விழுந்தனர். அந்தணர் தலைவர்களான ராமா நுஜரும், பெரியநம்பியும், யாமுநாசார்யரின் பிரிவால்

३५. रामानुजमहापूर्णौ मूर्च्छां तौ प्रापतुस्तदा।
पूर्णाचार्यो महाप्राज्ञो गुरोर्मरणदुःखितः॥

३६. कथञ्चिद्धैर्यमालम्ब्य तद्दुःखं विनिगृह्य सः।
रामानुजमुवाचेदं पतितं धरणीतले॥

३७. उत्तिष्ठ ज्ञानसंपन्न किमर्थं परितप्यसे।
शोकेन साध्यते कार्यं अस्माभिः किं परन्तप॥

३८. रामानुज महाप्राज्ञ श्रूयतां वचनं मम।
कुर्वन्ति ब्राह्मणास्तस्य परलोकगतस्य हि॥

३९. यामुनार्यस्य कार्याणि कृत्यानि विधिनाऽधुना।
संस्थापनं यामुनस्य भूम्यां गर्ते यतेर्गुरोः॥

४०. विप्रैर्यावन्न क्रियते तावद्गच्छाव शीघ्रतः।
तत्र गत्वा तथाभूतं द्रक्ष्यावो यामुनं मुनिम्॥

---

பெருந் துன்பம் அடைந்தவர்களாய், அப்போதே மூர்ச்சை யடைந்தனர்.

### பெரியநம்பி ராமாநுஜரைத் தேற்றல்

35*-*48. ஆசார்யனின் மரணத்தால் துன்புற்ற பெரியநம்பி, ஒருவாறு தேறியவராய், அத்துன்பத்தை அடக்கிக்கொண்டு, பூ$_4$மியில் விழுந்திருக்கும் ராமாநுஜரைப் பார்த்துப் பின்வருமாறு கூறினார்:— "அறிவாளியே! எழுந்திரும். ஏனிப்படி வருந்துகிறீர்; வெற்றி வீரரே! வருத்தத்தினால் நம்மால் என்ன ஸாதி$_4$க்கமுடியும்? பேரறிவாளரான ராமாநுஜரே! என் வார்த்தையைக் கேளும். பரமபத$_3$மடைந்த யாமுநாசார்யருக்கு அந்தணர்கள் இப்போது ஈமக்கிரியைகளைச் செய்வார்கள். ஸந்யாஸியாய், ஆசார்யரான அவருக்கு பூ$_4$மியில் குழிதோண்டி அதில் அந்தணர்கள் அவரைத் திருப்பள்ளிப்படுத்துவதற்குள், நாம்

४१. तस्माद्धैर्यं समालम्ब्य समुत्तिष्ठ द्विजोत्तम।
क्षेत्रं सत्यव्रतं पुण्यं विहायाशु जगत्पतेः॥

४२. वरदस्याम्बुदानं च तत्सेवां मुक्तिदायिनीम्।
यं यामुनार्यमुद्दिश्य द्रष्टुकामः समागतः॥

४३. स इदानीं यामुनार्यः स्वाचार्यपदमाप्तवान्।
इदं दैवकृतं नान्यत्तस्माच्छोकं विसर्जय॥

४४. सुखे दुःखे वियोगे च संयोगे मरणे भवे।
सर्वत्र कारणं दैवं लाभेऽलाभे महामते॥

४५. इत्युक्त्वा पतितं भूमौ युगान्ते भास्करं यथा।
निःश्वसन्तं यथा नागं निर्वेगमिव चाम्बुधिम्॥

४६. निरुत्साहं निर्विचेष्टं निमग्नं शोकसागरे।
अश्रुपूर्णमुखं दीनं सार्थभ्रष्टं यथा द्विजम्॥

---

வேக₃மாகச் செல்வோம். அங்கு சென்று அவரது விமல சரமதே₃ஹத்தைக் காண்போம். அந்தணர்தலைவரே! இதன் பொருட்டாவது தை₄ர்யமடைந்து எழுந்திருப்பீராக. புண்யமான ஸத்யவ்ரத க்ஷேத்ரத்தையும், லோகநாத₂னை வரத₃னுக்கு நீரளிக்கும் கைங்கர்யத்தையும், மோக்ஷாநந் த₃த்தை இங்கேயே அளிக்கும் அவரது ஸேவையையும் விரைவில் விட்டு, எந்த யாமுநாசார்யரைக் காண்பதற்காக வந்தீரோ, அந்த யாமுநாசார்யர் இப்போது ஆசார்யன் திருவடியடைந்துவிட்டார். இது தெய்வச்செயலேயொழிய வேறில்லை. ஆகையால் வருத்தத்தை விடும். பேரறிவாளரே! இந்த ஸம்ஸாரத்தில் ஸுக₂து₃:க்க₂ங்கள், பிரிவு சேர்த்திகள், மரணம், லாப₄ாலாப₄ங்கள் ஆகிய இவ்வனைத் திற்கும் தெய்வமே காரணம்.'' என்று கூறி, ஊழிகாலத் தில் பூ₄மியில் விழுந்திருக்கும் ஸூர்யனைப் போன்றவராய், பெருமூச்சுவிடும் பாம்பு போன்றவராய், வேக₃மிழந்த கடல்

४७. यथा पङ्कविनिर्मग्नं गजेन्द्रमिव दुःखितम्।
एवंविधं महात्मानं लक्ष्मणार्यं कृपानिधिः॥

४८. दोर्भ्यामुत्थाप्य सहसा सस्वजे प्रेमपूर्वकम्।
ततो रामानुजो धीमान् पूर्णार्येण महायशाः॥

४९. तत्र गत्वा यामुनार्यमपश्यद्दीनचेतनः।
तस्य रूपं लक्ष्मणार्यो दृष्ट्वा वाक्यमिदं जगौ॥

५०. संभाषणे यामुनेन नास्ति प्राप्तिर्ममाधुना।
क्षुद्रस्य महतां सङ्गे यथा प्राप्तिर्न विद्यते॥

५१. एतेन मम साङ्गत्यं लभ्यते चेन्महात्मना।
अस्मिन् लोके निवसतां जनानां वैष्णवोत्तमाः!॥

---

போன்றவராய், கூட்டத்தினின்றும் பிரிந்த பறவை போன்றவராய், சேற்றிலழுந்திய கஜேந்திரன் போன்றவராய்த் துன்பக்கடலில் விழுந்து, செயலிழந்து, உத்ஸாஹமற்று, கண்ணீர் பெருகப்பெற்றவராய், வருந்தத்தக்கவராய் விளங்கும் மஹாத்மாவான இளையாழ்வாரை—கருணைக் கடலான பெரியநம்பி திருக்கைகளாலே தூக்கி, அன்போடு ஆரத்தழுவினார்.

**ராமாநுஜர் ஆளவந்தார் திருமேனியைக் காணல்**

48*-53. அப்போது பெருங்கீர்த்தியுடைய ராமாநுஜர் பெரிய நம்பியோடு, வருந்தும் நெஞ்சினராய்த் திருப்பள்ளிப் படுத்துமிடம் சென்று யாமுநாசார்யரைக் கண்டார். அவருடைய வடிவழகைக்கண்ட ராமாநுஜர் பின்வரும் வாக்யத்தைக் கூறினார்:— “யாமுநாசார்யருடன் வார்த்தை சொல்ல எனக்கு இப்போது கொடுத்துவைக்கவில்லை. நீசனுக்குப் பெரியவர்களின் ஸஹவாஸம் கிட்டாதன்றோ. வைஷ்ணவோத்தமர்களே! இந்த மஹாபுருஷரோடு நான் சேரப்பெற்றிருந்தேனாகில், இவ்வுலகில் வாழும் ஜனங்கள் விஷ்ணுவின் பரமபதத்தை அடைந்து அழிவற்ற அவனை

५२. गन्तुं हरेः पदं तत्र सेवितुं हरिमव्ययम् ।
तत्सौधानामहं कृत्वा सोपानानि निरन्तरम् ॥

५३. तन्मार्गेण जनान् सर्वान् तद्विष्णोः परमं पदम् ।
जवात्प्रापयितुं सम्यक् समर्थो नात्र संशयः ॥

५४. इत्युक्त्वा स महाप्राज्ञो यामुनस्य महात्मनः ।
रामानुजोऽङ्गुलीर्दृष्ट्वा तिस्रश्चाकुञ्चितास्तदा ॥

५५. विस्मयाविष्टहृदयः तत्रत्यान्वैष्णवान् द्विजान् ।
उवाच वचनं धीमान् तच्छिष्यान् प्रेमपूर्वकम् ॥

५६. यामुनाङ्गुलयो जन्मप्रभृत्येवंविधा बत ।
अधुनाकुञ्चिताः किं वा तदिदं तथ्यमुच्यताम् ॥

---

ஸேவிப்பதற்குறுப்பாகப் பரமபத₃த்திற்கும் இவ்வுலகிற்கும் என்றுமிருக்கும் படிகள் கட்டி, அப்படிகளின் வழியாக எல்லா ஜனங்களையும் விஷ்ணுவின் பரமபத₃த்தை விரைவில் அடைவிக்க வல்லவனுயிருப்பேன்; இதில் ஐயமில்லை.'' என்று (வார்த்தை சொன்னுர்.)

## திருமேனியில் மூன்று விரல்கள் மடங்கியதற்குக் காரணம் வினவுதல்

54-59. பேரறிவாளரான ராமாநுஜர் இவ்வண்ணம் உரைத்துவிட்டு, அப்போது யாமுநாசார்யருடைய விரல்களில் மூன்று மடங்கியிருப்பதைக் கண்டு வியப்புற்ற நெஞ்சினராய், அங்கிருந்த அவரது ஶிஷ்யர்களான ஸ்ரீவைஷ்ணவ ப்₃ராஹ்மணர்களைக் குறித்து அன்போடு பின்வருமாறு வார்த்தை சொன்னுர்:— ''யாமுநாசார்யருடைய விரல்கள் பிறப்பிலிருந்தே இப்படியிருந்தனவா? அல்லது இப்போதுதான் மடங்கியிருக்கின்றனவா என்னும் விஷயததில் உண்மையைக் கூறவேண்டும்'' என்று ராமாநுஜர் கூறியதைக் கேட்ட ஸ்ரீவைஷ்ணவர்கள், அப்போதே

५७. रामानुजस्य तद्वाक्यं श्रुत्वा ते वैष्णवास्तदा।
आकुञ्चिताङ्गुलीर्दृष्ट्वा यामुनस्य महात्मनः॥

५८. विस्मयाविष्टहृदयाः तमूचुरमितौजसम्।
पूर्वं तु यामुनाङ्गुल्यः स्वभावेन समास्थिताः॥

५९. अधुनाऽऽकुञ्चितास्तिस्रो विस्मयो जायते महान्।
तत्कारणं न जानीमो भवान् विज्ञातुमर्हति॥

६०. वैष्णवानां वचः श्रुत्वा लक्ष्मणार्यः परार्थवित्।
अभिप्रायं यामुनस्य ज्ञात्वा बुद्ध्या महामतिः॥

६१. मध्ये द्विजानां सर्वेषां जगाद वचनं तदा।
अहं विष्णुमते स्थित्वा जनानज्ञानमोहितान्॥

६२. पञ्चसंस्कारसंपन्नान् द्राविडाम्नायपारगान्।
प्रपत्तिधर्मनिरतान् कृत्वा रक्षामि सर्वदा॥

---

மஹாபுருஷரான யாமுநாசார்யருடைய விரல்கள் மடங்கியிருப்பதைப் பார்த்து வியப்புற்ற நெஞ்சினராய், "முன்பெல்லாம் யாமுநாசார்யருடைய விரல்கள் இயற்கையாகவே இருந்தன. இப்போதே மூன்று விரல்கள் மடங்கியுள்ளன. எங்களுக்குப் பெரிய ஆச்சரியம் ஏற்படுகிறது. இதன் காரணமும் அறியோம். தேவரீரே ஊஹித்தறிய வேண்டும்" என்று மஹாதேஜஸ்வியான ராமாநுஜரிடம் கூறினார்கள்.

## முதல் ப்ரதிஜ்ஞையால் ஒரு விரல் நிமிர்வது

60-63. வைஷ்ணவர்களுடைய அவ்வார்த்தையைக் கேட்டுப் பிறர்கருத்தறியவல்ல பேரறிவாளரான ராமாநுஜர், தமது மேத₄ாவிலாஸத்தாலே யாமுநரின் கருத்தை அறிந்து, அவ்வந்தணர்களின் நடுவே பின்வருமாறு ப்ரதிஜ்ஞை செய்தார் :—"நான் வைஷ்ணவ மதத்தில் நின்று,

६३. एवं रामानुजाचार्ये गदत्यात्मविदां वरे।
महात्मा यामुनाचार्यो जहावेकाङ्गुलिं तदा॥

६४. ततः प्रोवाच धर्मात्मा वाक्यं रामानुजः पुनः।
संगृह्य निखिलानर्थांस्तत्त्वज्ञानपरं शुभम्॥

६५. श्रीभाष्यं च करिष्यामि जनरक्षणहेतुना।
इत्युक्तवति विप्रेन्द्रे वचनं वदतां वरे॥

६६. अङ्गुलिं यामुनाचार्यो द्वितीयां सहसाऽत्यजत्।
ततोऽन्यदर्थदं वाक्यं धीमान् रामानुजोऽवदत्॥

---

அஜ்ஞானத்தால் மயங்கி நிற்கும் ஜனங்களை, பஞ்சஸம்ஸ்காரம் பெற்றவர்களாகவும், தமிழ்வேத₃ம் கரைகண்டவர்களாகவும், ப்ரபத்தித₄ர்மத்தில் ஈடுபட்டவர்களாகவும் செய்து எப்போதும் ரக்ஷிக்கக்கடவேன்” என்று ஆத்மபரமாத்மஜ்ஞானிகளுள் சிறந்தவரான ராமாநுஜர் சொல்லிக்கொண்டிருக்கையில், அப்போதே மஹாபுருஷரான யாமுநாசார்யர் ஓர் விரலை நிமிர்த்தினர்.

## இரண்டாவது ப்ரதிஜ்ஞையால் மற்றொரு விரல் நிமிர்வது

64-*66. த₄ர்மாத்மாவான ராமாநுஜர் மறுபடியும் பின்வருமாறு ப்ரதிஜ்ஞை செய்தார்:—“எல்லா ஶாஸ்த்ரார்த்த₂ங்களையும் திரட்டி, உண்மையறிவை விளைவிப்பதாய், மங்க₃ளமானதான ஸ்ரீப₄ாஷ்யத்தை, உயிர்கள் உய்யும்பொருட்டு இயற்றக்கடவேன்” என்று அவ்வந்தணர் தலைவர் ஆணையிட்டவுடனே யாமுநாசார்யர் இரண்டாவது விரலையும் நீட்டினர்.

## மூன்றாவது ப்ரதிஜ்ஞையால் மூன்றாவது விரல் நிமிர்வது

66*-*72. அதற்குப்பின் அறிவாளியான ஸ்ரீராமாநுஜர் பொருள் பொதிந்த மற்றொரு ப்ரதிஜ்ஞையையும் செய்

௬௭. जीवेश्वरादि लोकेभ्यः कृपया यः पराशरः।
संदर्शयन् तत्स्वभावान् तदुपायगतीस्तथा॥

௬௮. पुराणरत्नं संचक्रे मुनिवर्यः कृपानिधिः।
तस्य नाम्ना महाप्राज्ञवैष्णवस्य च कस्यचित्॥

௬௯. अभिधानं करिष्यामि निष्क्रियार्थं मुनेरहम्।
इत्येवं लक्ष्मणाचार्ये पुनर्वदति निश्चले॥

௭௦. कृतकृत्यो यामुनार्यः सोऽवशिष्टाङ्गुलिं जहौ।
तत्रत्यपुरुषा दृष्ट्वा तच्चित्रं महदद्भुतम्॥

௭௧. रामानुजं महात्मानं मन्यन्ते पुरुषोत्तमम्।
रामानुजो महाप्राज्ञो यामुनार्यस्य चाङ्गुलीः॥

௭௨. आकुञ्चिता मोचयित्वा द्विजेभ्यो वन्दनं व्यधात्।
भूयः प्रोवाच तान्विप्रान् वाक्यं रामानुजस्तदा॥

---

தார் :—"சித், அசித், ஈஶ்வர்களைப்பற்றியும், அவர்களது இயல்புபற்றியும், சேதநர்களது ப்ராப்யப்ராபகங்கள்பற்றியும் பரமகருணையாலே உள்ளபடி அறிவித்து, யாவரொரு பராஶரமஹரிஷி புராணரத்நமான ஸ்ரீவிஷ்ணுபுராணத்தைச் செய்தருளினரோ, கருணைக்கடலான அவர் பெயரை, பேரறிவாளனை ஒரு ஸ்ரீவைஷ்ணவனுக்குப் பெயராக வைத்து, அம்மஹர்ஷியிடம் நன்றிக் கடனைத் தீர்க்கக் கடவேன்" என்று உறுதியுடன் ஸ்ரீராமாநுஜர் மூன்றுவது ப்ரதிஜ்ஞையைச் செய்தவுடனேயே யாமுநாசார்யர் எண்ணம் ஈடேறப்பெற்றவராய், எஞ்சிய மூன்றுவது விரலையும் நீட்டினர். அதிவிசித்திரமான அப்பெரிய அற்புதத்தைக் கண்டு, அங்கு குழுமியிருந்த அனைவரும் ராமாநுஜரை மஹாபுருஷராய், புருஷோத்தமனின் அவதாரமாக இருப்பவராகவே மதித்தனர். பேரறிவாளரான ராமாநுஜர் யாமுநாசார்யருடைய மடக்கிய விரல்களை நிமிர்த்திவிட்டு, அந்தணர்களுக்கு வணக்கம் செலுத்தினர்.

७३. न जानाम्यहमेतावद्यामुनं वैष्णवोत्तमम्।
महान् प्रमोदो मे जातः किं करिष्यामि वैष्णवाः॥
७४. करुणा रङ्गनाथस्य मयि नो विद्यतेऽधुना।
इतो देशाद्गमिष्यामि पुरीं काञ्चीं द्विजोत्तमाः॥
७५. इत्युक्त्वा वैष्णवान् सर्वान् गमनायोद्यतोऽभवत्।
प्रयाणे त्वरमाणं तु लक्ष्मणार्यं महामतिम्॥
७६. वाक्यमूचुर्महात्मानं तद्दर्शनमभीप्सवः।
रामानुज विशेषज्ञ रङ्गेशं भक्तवत्सलम्॥
७७. संसेव्य पश्चाद्गमने मतिं कुरु महामते।
यामुनं द्रष्टुकामस्त्वमद्य दूरादिहागतः॥

---

### அரங்கனை ஆதரியாமல் புறப்படுதல்

72*-*83. அப்போது, அவ்வந்தணர்களைக் குறித்து ராமாநுஜர் "நான் இதுவரையில் வைஷ்ணவோத்தமரான யாமுநாசார்யரை அறியாமலிருந்தேன். (இன்றுவது கண்டதில்) எனக்குப் பேராநந்தம் உண்டாயிற்று. வைஷ்ணவர்களே! என் செய்வேன்? இப்போது அரங்கநகரப்பனுக்கு என்னிடம் கருணையில்லை. அந்தணர் தலைவர்களே! (ஆகையால்) நான் இவ்வூரைவிட்டுக் காஞ்சீபுரம் செல்வேன்" என்று கூறினர். இப்படி அங்கிருந்த வைஷ்ணவர்கள் அனைவரிடமும் கூறிவிட்டு, திரும்பத் தொடங்கினர். மஹாமேத₄ாவியான இளையாழ்வார் செல்ல விரைவதைக்கண்டு, அவரையே காணவிரும்பிய அவ்வந்தணர்கள் மஹாபுருஷரான அவரைப் பார்த்துப் பின்வருமாறு கூறினர்கள்:— "விசேஷ த₄ர்மமறிந்த பேரறிவாளரான ராமாநுஜரே! ப₄க்தவத்ஸலனை அரங்கநகரப்பனை ஸேவித்துவிட்டுப் பிறகு திரும்பிச் செல்லும். யாமுநாசார்யரைக் காணவிரும்பி நீர் இன்று வெகுதூரத்திலிருந்து இங்கு வந்திருக்கிறீர். எமது

௭௮. एवंविधा तस्य वृत्तिर्ह्याऽभूत्किल मद्गुरोः।
रङ्गेशमपि दृष्ट्वाऽथ त्वं काञ्चीं गन्तुमर्हसि॥

௭௯. ततस्तेषां वचः श्रुत्वा लक्ष्मणार्योऽब्रवीत् द्विजान्।
क्षणमप्यधुना क्षेत्रे श्रीरङ्गेऽस्मिन् द्विजोत्तमाः॥

௮௦. महात्मना यामुनेन संत्यक्ते मम विष्णुना।
अधिष्ठितेऽपि मे वस्तुं रङ्गेशेन महात्मना॥

௮௧. न मानसं रोचतेऽस्मिन् पुण्येऽपि सुमनोहरे।
लोकेशमपि रङ्गेशं यामुनाशाङ्कुरच्छिदम्॥

௮௨. तं निर्दयं न पश्यामि मम दुःखकरं द्विजाः।
इत्युक्त्वा तैरनुज्ञातस्तत्क्षेत्रात्तत्क्षणं द्विजः॥

௮௩. काञ्चीपुरीं प्रति ययौ धीमान् रामानुजस्तदा।
सह्ययादोद्भवां तीर्त्वा कावेरीं कलिनाशिनीम्॥

---

ஆசார்யரான அவரது வ்ருத்தாந்தம் இப்படியாயிற்று. அரங்கனையும் ஸேவித்துவிட்டுப் பிறகு நீர் காஞ்சிக்குச் செல்வதே தக்கது" என்று. அதற்குப்பின் அவர்களுடைய வார்த்தையைக் கேட்டு, அவ்வந்தணர்களைக் குறித்து இளையாழ்வார் பின்வருமாறு கூறினார்:—"அந்தணர் தலைவர்களே! பெரியவனை அரங்கனெம்பெருமான் இங்கு எழுந்தருளியிருந்தபோதிலும், இது அழகியதாய், பாவனமாயிருந்தபோதிலும், யாமுநாசார்யரால் கைவிடப்பெற்ற இந்த ஸ்ரீரங்க க்ஷேத்ரத்தில் ஒரு கணமும் இப்போது வாழ எனது மனம் இசையவில்லை. யாமுநருடைய ஆசையை முளையிலேயே அழித்து, என்னைத் துன்புறுத்திய கருணையற்ற அந்த லோகநாதனையும் நான் காணமாட்டேன்" என்று கூறி அவர்களிடம் விடைகொண்டு, அந்தணராய், அறிவாளியான ராமாநுஜர் அக்கணத்திலேயே காஞ்சீபுரியைக் குறித்துப் புறப்பட்டார்.

८४. ततोऽपश्यज्जनपदान् ग्रामांश्च नगराणि च।
क्षेत्रं सत्यव्रतं प्राप्य गोपुराण्युत्तमानि च॥

८५. दूरात्प्रकाशमानानि दृष्ट्वा हृष्टस्तदाऽभवत्।
आसाद्य तां दिव्यजलां महात्मा
रामानुजः क्षीरनदीं विशुद्धाम्।
यद्यामुनाचार्यवियोगदुःखं
जहौ श्रमं चाध्वगतं तदानीम्॥

८६. निमज्य तोये परिपूर्णकामः संतर्प्य देवान् सपितॄन् ऋषींश्च।
आरुह्य तीरं परिधाय वस्त्रे जजाप जप्यं सुधृतोर्ध्वपुण्ड्रः॥

८७. तन्नित्यकृत्यं विधिना च कृत्वा तीर्त्वा जवात् क्षीरनदीं महात्मा।
काञ्चीपुरीं कृष्णकृताधिवासां ददर्श धीमान् दनुजारिभक्तः॥

---

### காஞ்சிக்குத் திரும்புதல்

83*-89. அதன்பின், கலியைக்கெடுக்குமதாய், ஸஹ்ய மலையிலிருந்து தோன்றியதான காவேரியைக் கடந்து, பல தே₃ஶங்களையும், கிராமங்களையும், நகரங்களையும் கண்டு சென்றார் ராமாநுஜர். ஸத்யவ்ரதக்ஷேத்ரத்தை அடைந்து, தூரத்திலிருந்தே தெரியும் உயர்ந்த கோ₃புரங்களைக்கண்டு உகப்பை அடைந்தார். களைப்பை ஆற்றும் நல்ல நீரை யுடைய பாலாற்றை அடைந்து நீராடியவுடன் யாமுநா சார்யரின் பிரிவால் ஏற்பட்ட துன்பமும், வழி நடந்த களைப்பும் நீங்கப்பெற்றார். அந்நீரில் விரும்பியபடி குடைந் தாடி, தேவரிஷி பித்ருதர்ப்பணம் செய்து, கரையேறி வஸ்திரங்களைச் சாத்திக்கொண்டு, அழகாக ஊர்த்₄வபுண்ட்₃ர மிட்டுக்கொண்டு ஜபிக்கத்தக்க மந்திரங்களையும் ஜபித்தார். அப்போது செய்யவேண்டிய நித்யகர்மாநுஷ்டா₂னங்களையும் முறைப்படி செய்து, விரைவில் பாலாற்றைக் கடந்து, அசுரராக்கதரை இண்டக்குலத்தை எடுத்துக் களைந்த

८८. गत्वा पुरीं साधुजनावृतां तां नत्वा रमेशं करिशैलनाथम् ।
स्थित्वा मुहूर्तं निकटे च तस्य कृत्वा स्तुतिं स्वं गृहमाविवेश ॥

८९. रम्ये गृहे केशवयज्वपुत्रः पत्न्या सह प्रीतमना महात्मा ।
सुखेन रेमे प्रियया निशायां, तस्यां स रामानुजविप्रवर्यः ॥

इति श्रीप्रपन्नामृते रामानुजचरित्रे यामुनार्यान्तिमदशायां
तस्याकुंचिताङ्गुलिमोचनं नाम नवमोऽध्यायः ॥

दशमोऽध्यायः

१. ब्राह्मे मुहूर्ते चोत्थाय कृतपूर्वाह्णिकक्रियः ।
काञ्चीपूर्णस्य निलयं धीमान् रामानुजो ययौ ॥

---

பெருமானின் அன்பரான அவர், அக்கண்ணன் எழுந்தருளி யிருக்கும் காஞ்சீபுரியைக் கண்டார். நல்லார்கள் வாழும் அந்நகரை அடைந்து, பெருந்தேவிநாயகனை அத்திகிரி யருளாளனையும் ஸேவித்து, அவனது அருகிலிருந்து ஸ்தோத்ர ரத்னத்தை விண்ணப்பித்து, தமது இல்லம் சேர்ந்தார். கேஶவஸோமயாஜியின் பிள்ளையாய், அந்தணர் தலைவராய், மஹாபுருஷரான அந்த இளையாழ்வார், அழகியதான அவ் வீட்டில் உகந்த நெஞ்சினராய்த் தமக்கு இனியவளான பத்னியோடு ஸுக₂மாக அன்றிரவைக் கழித்தார்.

**ஸ்ரீப்ரபந்நாம்ருதத்தில் ராமாநுஜ சரித்திரத்தில் — யாமுநாசார்யரின் அந்திமகாலத்தில் அவரது மடங்கிய விரல்களை விடுபடச்செய்தலாகிற ஒன்பதாவது அத்தியாயம் நிறைவு பெற்றது.**

## பத்தாவது அத்தியாயம்

## ஆறு வார்த்தை

### திருக்கச்சிநம்பியோடு சேர்தல்

1-6. ப்₃ராஹ்மமுஹூர்த்தத்தில் எழுந்து, காலைக் கடன்களைச்செய்து, அறிவாளியான இளையாழ்வார் திருக் கச்சிநம்பியின் மடத்திற்குச் சென்றார். ஆசார்யரான

२. काञ्चीपूर्णाय तत्सर्वं वृत्तान्तं यामुनस्य सः।
रामानुजोऽवदत्तस्मै गुरोः शिष्याय बुद्धिमान्॥

३. काञ्चीपूर्णो निशम्याथ वियोगं स्वगुरोस्तदा।
तेपे दुःखाभिभूतस्स लक्ष्मणार्यान्महात्मनः॥

४. शिष्यकृत्यं ततश्चक्रे काञ्चीपूर्णो मृते गुरौ।
यामुनार्यस्य सहसा द्विजानाहूय वैष्णवान्॥

५. पुनर्वरदराजाय कुर्वन् कैङ्कर्यमादरात्।
संभाषणं च सततं तेन साकं समास्थितः॥

६. लक्ष्मणार्यो विनीतात्मा शालकूपजलं शुभम्।
भक्त्या समर्पयन्नित्यं वरदाय महात्मने॥

७. तत्सन्निधौ स्थितं नित्यं काञ्चीपूर्णं दृढव्रतम्।
तस्याऽन्तरङ्गं तं मत्वा तदा मेने स्वकं गुरुम्॥

---

ஆளவந்தார்பற்றிய செய்திகள் அனைத்தையும், சீடரான அத்திருக்கச்சிநம்பிக்குக் கூறினார் அறிவாளியான ராமானுஜர். திருக்கச்சிநம்பியும், ஆசார்யரின் பிரிவைப் பற்றி மஹாத்மாவான இளையாழ்வாரிடமிருந்து அப்போதே கேள்விப்பட்டு, பெருந்துன்பத்தால் வருந்தினார். அந்தணர்களான ஸ்ரீவைஷ்ணவர்களை அழைத்து, ஆசார்யரான யாமுநாசார்யருக்குச் சீடன் செய்யவேண்டிய ஸ்ரீசூர்ண பரிபாலநம் முதலிய சிஷ்யக்ருத்யங்களைத் திருக்கச்சிநம்பி உடனே செய்தார். அதற்குப் பின்னும் வரதராஜப் பெருமாளுக்குத் திருவாலவட்ட கைங்கர்யத்தை உகப்புடன் செய்துகொண்டு, அவருடன் எப்போதும் வார்த்தை சொல்லிக்கொண்டு வாழ்ந்தார். அடக்கமுடையவரான ராமானுஜரும் மங்க₃ளமான சாலைக்கிணற்று நீரைப் பரம புருஷனை வரத₃னுக்கு தினந்தோறும் ப₄க்தியுடன் ஸமர்ப்பித்துக்கொண்டிருந்தார்.

८. कदाचिल्लक्ष्मणाचार्यस्तूच्छिष्टान्नबुभुक्षया ।
काञ्चीपूर्णमुवाचेदं वचनं वदतां वरः ॥
९. मद्गृहे भोजनं ह्यद्य कर्तव्यं भवता ध्रुवम् ।
काञ्चीपूर्ण दयासिन्धो निक्षिप्य करुणां मयि ॥
१०. तस्येङ्गितं तदा ज्ञात्वा काञ्चीपूर्णोऽप्यचिन्तयत् ।
न मयेदं यदि कृतं तन्मनः शोचति ध्रुवम् ॥
११. हितमेव जनानां हि कर्तव्यं पापभीरुणा ।
मत्सखा विष्णुभक्तोऽयं द्विजश्रेष्ठो महामतिः ॥
१२. वैकुण्ठलोकादायातो जनरक्षणकाम्यया ।
प्रियमेवास्य कर्तव्यं मया रामानुजस्य हि ॥

---

## போனகம் செய்த சேடம் பெறப் பாரித்தல்

7-*17. வரதராஜப்பெருமாளுடைய ஸந்நிதி₄யில் எப்போதுமிருப்பவராய், அவருக்குக் கைங்கர்யம் செய்வதாகிற உறுதியான விரதத்தை உடையவரான திருக்கச்சி நம்பியை அப்பெருமாளுக்கு மிகவும் அந்தரங்க₃ராக அறுதியிட்டு, அவரைத் தம் ஆசார்யராகவே மதித்தார் இளையாழ்வார். ஒரு சமயம் அவருடைய உச்சி₂ஷ்டாந்நத்தை (போ₄ஜன ஶேஷத்தை) உண்ண விரும்பிய வார்த்தையில் வல்ல ராமாநுஜர் "கருணைக்கடலான திருக்கச்சிநம்பிகளே! என்னிடம் கருணைகூர்ந்து என் இல்லத்தில் இன்று நீர் அவஶ்யம் அமுதுசெய்யவேணும்" என்று வார்த்தை சொன்னார். அவருடைய கருத்தை அறிந்த திருக்கச்சிநம்பிகள்,- "நாம் இதற்கு இசையவில்லையாகில் அவர் மனம் வருந்தவே செய்யும். பாபத்திற்கு அஞ்சியவன் எல்லா ஜனங்களுக்கும் நல்லதையே செய்யவேணும். விஷ்ணு ப₄க்தரான இவ்விளையாழ்வார் எனது நண்பர்; அந்தணர் தலைவர்; பேரறிவாளர்; ஜனங்களை உய்விப்பதற்காக ஸ்ரீவைகுண்ட₂த்திலிருந்தே எழுந்தருளி

१३. ततो रामानुजं वाचमवदद्वैष्णवोत्तमः।
करिष्यामि न संदेहः तव वाक्यं द्विजोत्तम॥

१४. रामानुजो हृष्टमनाः संप्राप्य गृहमादरात्।
विशेषतः कारयित्वा पाकं पत्न्या जवात्तदा॥

१५. विष्णवर्चनादिकं सर्वं विधायाशु महामतिः।
तस्यागमनमाकाङ्क्षन्नास्थितो वैष्णवोत्तमः॥

१६. इदानीमपि नायातः किं नायाति हरिप्रियः।
इत्यालोक्य पुनः शीघ्रं ययौ तन्निलयं प्रति॥

१७. दक्षिणेनैव मार्गेण करिशैलस्य बुद्धिमान्।
काञ्चीपूर्णस्तदा शीघ्रं रामानुजगृहं प्रति॥

---

யிருப்பவர். அத்தகைய ராமாநுஜர் உகந்ததையே நாம் செய்யவேண்டுமன்றோ'' என்று எண்ணினர். அதன்பின் வைஷ்ணவர் தலைவரான அவர் "அந்தணர் தலைவரே! உமது வாக்யத்தின்படி நான் அவஶ்யம் செய்கிறேன்'' என்று ராமாநுஜரைப் பார்த்து வார்த்தை சொன்னர். இதனல் மிகவுகந்த பேரறிவாளராய், வைஷ்ணவோத்தமரான ராமாநுஜர் ஆசையோடு அப்போதே வீட்டிற்கு வந்து, மனைவியைக் கொண்டு விரைவில் விஶேஷமாகத் தளிகை செய்வித்து, திருவாராத₄னம் முதலானவற்றையும் விரைவில் செய்து, திருக்கச்சிநம்பியின் வரவை எதிர் பார்த்திருந்தார். "விஷ்ணுப₄க்தர் இன்னமும் வரவில்லையே; ஏன் வரவில்லை'' என்று பார்த்து அறிவாளியான ராமாநுஜர் நம்பியினுடைய மடத்திற்கு அத்திகிரியின் தென்புறமாக வேகமாகச் சென்ருர்.

### நம்பியின் வருகை

17*-23. அப்போதே அத்திகிரியின் வடபுறமாகத் தன் மடத்திலிருந்து பேரறிவாளரான திருக்கச்சிநம்பி ராமாநுஜ

१८. करिशैलोत्तरे भागे स्वमठादाययौ तदा।
ततस्तद्गृहमासाद्य काञ्चीपूर्णो महामतिः॥

१९. रामानुजार्यपत्नीं तामुवाच वचनं शुभम्।
पतिव्रते महाभागे श्रूयतां वचनं मम॥

२०. कुत्राद्य ते गतो भर्ता लक्ष्मणार्यः सुमध्यमे।
काञ्चीपूर्णस्य तद्वाक्यं श्रुत्वा भक्तिपुरस्सरम्॥

२१. रक्षकाम्बा तदा साध्वी पत्नी रामानुजस्य सा।
अवोचदसितापाङ्गी काञ्चीपूर्णं हरिप्रियम्॥

२२. कृतदेवार्चनः शीघ्रं त्वत्कृतेऽकृतभोजनः।
त्वन्मठं प्रति मे भर्ता तवानयनकारणात्॥

२३. काञ्चीपूर्णाधुनैवार्यस्तवान्तिकमुपागतः।
क्षणमात्रं सहस्वाद्य भर्ता मे ह्यागमिष्यति॥

---

ரின் வீட்டிற்கு வந்து அவரது பத்னியிடம் மங்க₃ளமான பின்வரும் வாக்யத்தைக் கூறினார்:—"மஹாப₄ாக்₃யவதியான பதிவ்ரதையே! என் வார்த்தையைக் கேளும் உமது கணவரான இளையாழ்வார் இப்போது எங்கு சென்றார்?" என்று ப₄க்தியோடு திருக்கச்சிநம்பி சொன்ன அவ்வார்த்தையைக்கேட்டு, ராமாநுஜரின் பத்னியாய், அழகியவளாய், நல்லவளான ரக்ஷகாம்ப₃ா விஷ்ணுப₄க்தரான திருக்கச்சிநம்பியைப் பார்த்து "காஞ்சீபூர்ணரே! திருவாராத₄னம் செய்துவிட்டுத் தாம் ப்ரஸாத₃ப்படாமல், உம்மை அழைத்து வருவதற்காக வேகமாக உமது மடத்திற்கு இப்போதுதான் சென்றிருக்கிறார் என் கணவர். சிறிது நேரம் பொறுத்திரும். எனது ப₄ர்த்தா வந்துவிடுவார்" என்று கூறினாள்.

२४. तस्यास्तद्वचनं श्रुत्वा काञ्चीमुनिरभाषत।
रामानुजार्यपत्नीं तां मुग्धां मृदुतरं वचः॥

२५. रक्षकाम्बेऽनघे किञ्चिच्छृणु विज्ञापनं मम।
अद्यैव भोजनं मह्यं दातव्यं शीघ्रतस्त्वया॥

२६. क्षुधा मां बाधतेऽत्यन्तं मातः सर्वहितैषिणि।
देवराजस्य सेवार्थं गम्यते चाधुना मया॥

२७. भर्तुरागमपर्यन्तमत्र स्थातुं न शक्यते।
काञ्चीपूर्णस्य तद्वाक्यं रक्षकाम्बा निशम्य सा॥

२८. अजानन्ती मनो भर्तुर्लक्ष्मणार्यस्य धीमतः।
काञ்चीपूर्णाय सहसा तदन्नमदिशत्तदा॥

---

## நம்பி அமுதுசெய்து புறப்படுதல்

24-*31. ரக்ஷகாம்பா₃வினுடைய அவ்வார்த்தையைக் கேட்டு, திருக்கச்சிநம்பி—அறிவிற் குறைந்தவளாய், ராமாநுஜரின் பத்தினியான அவளைக் குறித்து மென்மையான இவ்வார்த்தையைப் பேசினர்—"குற்றமற்றவளாய், அனைவர்க்கும் நன்மையை விரும்பும் ரக்ஷகாம்பி₃கைத் தாயே! என்னுடைய விண்ணப்பத்தைச் சிறிது கேளும். இப்போதே எனக்கு விரைவில் நீர் உணவளிக்கவேண்டும். பசி என்னை மிகவும் வருத்துகிறது. தேவப்பெருமாளுடைய கைங்கர்யத்தின் பொருட்டு அடியேன் இப்போதே செல்ல வேண்டும். உம்முடைய கணவன் வரும்வரையில் என்னல் இங்கு இருக்க இயலாது" என்னும் திருக்கச்சிநம்பியின் வார்த்தையைக் கேட்டு, ரக்ஷகாம்பி₃கை—அறிவாளியான ப₄ர்த்தாவான ராமாநுஜரின் கருத்தைக் குறிப்பாலே அறிந்துகொள்ளமாட்டாதவளாய், திருக்கச்சிநம்பிக்கு அவ்வுணவை அப்போதே ஸாதித்தாள். பகவானிடம் அன்பு பூண்ட மஹாத்மாவான திருக்கச்சிநம்பியும் அமுதை

२९. काञ्चीपूर्णो जवाद्भुक्त्वा तदन्नममृतोपमम् ।
कृतत्वरस्तदुत्थाय कृतपादादिशोधनः ॥

३०. उच्छिष्टपत्रं स तदा महात्मा भगवत्परः ।
विधाय हस्ते वै पत्रं शीघ्रमुत्सृज्य दूरतः ॥

३१. नागाचलं प्रति ययौ स प्राग्गोपुरवर्त्मना ।
रक्षकाम्बा तदा साध्वी भर्तृपोषणतत्परा ॥

३२. जवात् तद्भुक्तशिष्टान्नं दत्त्वा दासजनाय च ।
भूयः स्नात्वा ततः पाकं कुर्वती पूर्ववत्स्थिता ॥

३३. तूर्णं रामानुजो गत्वा तन्मठं प्रति सादरम् ।
मृगित्वा तत्र तं पूर्णं ज्ञात्वा परिजनात्तदा ॥

३४. स सम्यक् तस्य वृत्तान्तं स्वगृहं प्राप्य सत्वरम् ।
भार्यां दृष्ट्वा पुनः स्नातां अत्याश्चर्ययुतोऽब्रवीत् ॥

---

யொத்த அவ்வுணவை விரைவில் உண்டு, வேகமாக அங்கிருந்து எழுந்து, கைகால்களை விளக்கிக்கொண்டு, தான் உண்ட இலையைக் கையில் எடுத்து, விரைவாக அதை தூரத்தில் எறிந்து, கீழைக்கோபுர வாசலாலே அத்திகிரியை நோக்கி எழுந்தருளிவிட்டார்.

### ராமாநுஜர் செய்தியறிந்து வருந்தல்

31*-*44. கணவனைப் போஷிப்பதில் ஈடுபட்ட நல்லவளான ரக்ஷகாம்பா அப்போதே திருக்கச்சிநம்பி உண்டு மிகுந்த உணவை விரைவில் வேலைக்காரர்களுக்குக் கொடுத்துவிட்டு, மறுபடியும் நீராடி, முன்போலே சமையல் செய்து கொண்டிருந்தாள். ராமாநுஜரும் திருக்கச்சிநம்பி மடத்திற்கு அன்போடு சென்றவர், அங்கு நம்பியைத் தேடி, அவரது உற்றாரிடமிருந்து—அவர் தன் வீடுநோக்கி ப்ரத₃க்ஷிணமாகப் புறப்பட்டுச்சென்ற செய்தியை அறிந்து, வேக₃மாகத் தம் வீட்டை அடைந்து, மனைவி மறுபடி

३५. भूयः स्नातासि मूढेऽद्य कारणं तद्वदाऽशुभे।
भर्तुर्वचनमाकर्ण्य प्रोवाच विनयेन सा॥

३६. त्वं काञ्चीपूर्णमानेतुं स्वगृहान्निर्गतो यदा।
तत्क्षणादूर्ध्वमायातः काञ्चीपूर्णो गृहं प्रति॥

३७ त्वां विचार्याशु वृत्तान्तं तज्ज्ञात्वा सादरं वचः।
मामेवमवदत्स्वामिन् काञ्चीपूर्णः कृतत्वरः॥

३८. भर्तुरागमपर्यन्तं न स्थातुं शक्यते मया।
क्षुधा मां बाधतेऽत्यन्तं वरदं प्रति गम्यते॥

३९. भोजनं देहि मे शीघ्रं यद्वै त्वद्भर्तृसम्मतम्।
ततो मयार्पितं सम्यक् तदन्नं षड्रसैर्युतम्॥

४०. काञ्चीपूर्णो जवाद्भुक्त्वा महात्मा भगवत्परः।
देवराजस्य कैङ्कर्यं कर्तुकामो ययौ जवात्॥

---

குளித்திருப்பதைக் கண்டு மிக வியப்புற்றவராய் "அறிவிலியே! அமங்க₃ளமானவளே! நீ மறுபடியும் ஏன் குளித்திருக்கிருய் என்பதின் காரணத்தை உரைப்பாய்" என்று கேட்டார். அவ்வார்த்தையைக் கேட்ட அவள் அடக்கத்தோடு பின்வருமாறு கூறிஞள்—"ஸ்வாமிந்! திருக்கச்சி நம்பியை அழைத்துவர நீர் இங்கிருந்து புறப்பட்டுச்சென்றவுடன் அடுத்த கணத்திலேயே நம்பி நம்வீட்டிற்கு வந்தார். உம்மைப்பற்றி உடனே விசாரித்து, நீர் தம்மைத் தேடிச் சென்றிருப்பதை அறிந்து, விரைவில் செல்ல விரும்பி, 'உமது கணவர் வரும்வரையில் என்னுல் காத்திருக்க இயலாது. என்னை பசி மிகவும் வருத்துகிறது. வரது₃னுடைய ஸேவைக்குப் போகவேணும். உமது கணவர் உகந்து செய்வித்திருக்கும் உணவை விரைவில் அளிப்பீர்' என்று அன்போடு என்னிடம் கூறிஞர். அதன்பின் என்னுல் அளிக்கப்பட்ட அறுசுவையுண்டியை விரைவில் புசித்த திருக்கச்சி

२९. काञ्चीपूर्णो जवाद्भुक्त्वा तदन्नममृतोपमम् ।
कृतत्वरस्तदुत्थाय कृतपादादिशोधनः ॥

३०. उच्छिष्टपत्रं स तदा महात्मा भगवत्परः ।
विधाय हस्ते वै पत्रं शीघ्रमुत्सृज्य दूरतः ॥

३१. नागाचलं प्रति ययौ स प्राग्गोपुरवर्त्मना ।
रक्षकाम्बा तदा साध्वी भर्तृपोषणतत्परा ॥

३२. जवात् तद्भुक्तशिष्टान्नं दत्त्वा दासजनाय च ।
भूयः स्नात्वा ततः पाकं कुर्वती पूर्ववत्स्थिता ॥

३३. तूर्णं रामानुजो गत्वा तन्मठं प्रति सादरम् ।
मृगित्वा तत्र तं पूर्णं ज्ञात्वा परिजनात्तदा ॥

३४. स सम्यक् तस्य वृत्तान्तं स्वगृहं प्राप्य सत्वरम् ।
भार्यां दृष्ट्वा पुनः स्नातां अत्याश्चर्ययुतोऽब्रवीत् ॥

---

யொத்த அவ்வுணவை விரைவில் உண்டு, வேகமாக அங்கிருந்து எழுந்து, கைகால்களை விளக்கிக்கொண்டு, தான் உண்ட இலையைக் கையில் எடுத்து, விரைவாக அதை தூரத்தில் எறிந்து, கீழைக்கோபுர வாசலாலே அத்திகிரியை நோக்கி எழுந்தருளிவிட்டார்.

## ராமாநுஜர் செய்தியறிந்து வருந்தல்

31*-*44. கணவனைப் போஷிப்பதில் ஈடுபட்ட நல்லவளான ரக்ஷகாம்பா₃ அப்போதே திருக்கச்சிநம்பி உண்டு மிகுந்த உணவை விரைவில் வேலைக்காரர்களுக்குக் கொடுத்துவிட்டு, மறுபடியும் நீராடி, முன்போலே சமையல் செய்து கொண்டிருந்தாள். ராமாநுஜரும் திருக்கச்சிநம்பி மடத்திற்கு அன்போடு சென்றவர், அங்கு நம்பியைத் தேடி, அவரது உற்றாரிடமிருந்து—அவர் தன் வீடுநோக்கி ப்ரத₃க்ஷிணமாகப் புறப்பட்டுச்சென்ற செய்தியை அறிந்து, வேக₃மாகத் தம் வீட்டை அடைந்து, மனைவி மறுபடி

४६. काञ्चीपूर्णमुवाचेदं प्राञ्जलिर्वरदप्रियम् ।
त्वमद्य पञ्चसंस्कारान् कृत्वा मम दयानिधे ॥

४७. रक्ष मां कृपया स्वामिन् त्वामेव शरणं गतम् ।
अस्मिन् लोके त्वया नाथ न तुल्यः पुरुषोऽस्ति हि ॥

४८. दीनं त्वत्पादभक्तं मां न त्वमर्हस्युपेक्षितुम् ।
तच्छ्रुत्वा लक्ष्मणार्यस्य वाक्यं परमवैदिकम् ॥

४९. काञ्चीपूर्णस्तदा प्राह मर्यादामनुपालयन् ।
स विष्णुभक्तः प्रोवाच काञ्चीपूर्णोऽर्थदं वचः ॥

५०. लक्ष्मणार्यं महात्मानं देवराजस्य सन्निधौ ।
भवता गदितं वाक्यमिदं लोकविगर्हितम् ॥

५१. तुर्यवर्णोऽस्मि वै तात संस्कारं तव लक्ष्मण ।
तस्मादहं करिष्यामि कथं द्विजवरोत्तम ॥

---

பேரருளாளனுக்கு அருகே அவரைக்கண்டு, கைகூப்பிய வராய், தேவப்பெருமாளுக்கு இனியவரான திருக்கச்சி நம்பியிடம் பின்வருமாறு கூறினார் — "கருணைக்கடலான ஸ்வாமிந்! உம்மையே ஶரணமடைந்த எனக்குப் பஞ்ச ஸம்ஸ்காரங்களைச் செய்து, கருணையாலே என்னை ரக்ஷிப் பீர். ஐயனே! இவ்வுலகில் உம்மையொத்த மனிதர் எவரு மில்லை. வருந்தத்தக்க நிலையிலிருப்பவனாய், உமது திரு வடியில் அன்பு பூண்டிருக்கும் என்னை நீர் கைவிடலாகாது." என்று இளையாழ்வார் உரைத்த பரமவைதி₃கமான வார்த் தையைக் கேட்ட திருக்கச்சிநம்பி, வர்ணாஶ்ரம வரம்பைப் பாதுகாக்கின்றவராய், அப்போது பேசலுற்றார். விஷ்ணு ப₄க்தரான திருக்கச்சிநம்பி மஹாபுருஷரான ராமாநுஜரைக் குறித்து, தேவப்பெருமாளின் ஸந்நிதி₄யிலே பொருள் பொதிந்த பின்வரும் வார்த்தையைச் சொன்னார்—"தேவரீர் உரைத்த இவ்வார்த்தை உலகினரால் இகழப்படும். அந் தணர் தலைவரான அப்பா ராமாநுஜா! நான் நாலாவது

५२. ततस्तद्वाक्यमाकर्ण्य काञ्चीपूर्णेन भाषितम् ।
रामानुजस्तथ्यमिति मत्वा प्राज्ञः पुनस्तदा ॥

५३. काञ्चीपूर्णमुवाचेदं वचनं विनयान्वितः ।
उपायेषु च कस्साधुरन्तिमस्मरणं तथा ॥

५४. कदा मोक्षेति द्रष्टव्यः कमाचार्यं समाश्रये ।
चतुरर्थान्कर्तुकामो मनस्यालोचितं मया ॥

५५. विज्ञाप्य देवराजाय तेनोक्तं वचनं शुभम् ।
मह्यं करुणया ब्रूहि काञ्चीपूर्ण कृपानिधे ॥

५६. रामानुजस्य तद्वाक्यं श्रुत्वाऽसौ वैष्णवोत्तमः ।
तं तथाऽद्य करिष्यामि मा कुरुष्वात्र संशयम् ॥

---

வருணத்தில் பிறந்தவன். உனக்கு எப்படி நான் பஞ்ச ஸம்ஸ்காரம் செய்யமுடியும்?" என்று.

### நாலு கேள்விகள்

52-58. பேரறிவாளரான ராமாநுஜர், திருக்கச்சிநம்பி யுரைத்த அவ்வார்த்தையைக் கேட்டு, அதை ஹிதமெனக் கருதி, அவரிடம் மறுபடியும் பணிவோடு பின்வருமாறு பேசினார்—"கருணைக்கடலான திருக்கச்சிநம்பியே! (1) உபா யங்களில் எது நல்லது? (2) மோக்ஷமடைவதற்குமுன் அந்திமஸ்ம்ருதி வேண்டுவது எப்போது? (3) எந்த ஜந் மத்தில் மோக்ஷமடைவது? (4) எந்த ஆசார்யனை நான் ஆம்ரயிப்பது? இந்த நாலு அர்த்த₂ங்களைப் பற்றி முடிவு காண விரும்பி, நான் என் மனத்தில் ஆராய்ந்து ஓர் முடி வுக்கு வந்திருக்கிறேன். இக்கேள்விகளை தேவப்பெருமாளிடம் விண்ணப்பித்து, அவர் அருளும் மங்க₃ளமான வார்த்தை யைக் கருணையாலே எனக்கு உரைக்கவேண்டும்" என்று ராமாநுஜர் கூறிய அவ்வாக்யத்தைக்கேட்ட வைஷ்ணவோத் தமராய், தவத்தில் மிக்கவரான நம்பி, "நான் அப்படியே செய்கிறேன். நீர் இதில் ஐயமுற வேண்டா"என்று ராமாநுஜ ரிடம் கூறி, லோகநாத₂னை வரத₃னுக்குக் கைங்கர்யம்

५७. इति रामानुजं चोक्त्वा कैङ्कर्यं जगतीपतेः ।
कुर्वन् समास्थितस्तत्र काञ्चीपूर्णस्तपोधनः ॥
५८. काञ्चीपूर्णस्य तद्वाक्यं श्रुत्वा रामानुजो महान् ।
तं देवराजं संसेव्य पुनरायान्निजं गृहम् ॥
५९. तस्यां रात्र्यां देवराजस्तं काञ्चीपूर्णमुत्तमम् ।
तालवृन्तेन शुभ्रेण स्वस्य कैङ्कर्यमादरात् ॥
६०. कुर्वन्तं स्वान्तरङ्गं च कमलापतिनन्दनम् ।
हरिः प्रोवाच वचनं सस्मितं हेतुगर्भितम् ॥
६१. कञ्चिदर्थं मनस्यद्य निधाय त्वं तपोधन ।
वक्तुकाम इवाभासि ज्ञातं त्वन्मुखदर्शनात् ॥
६२. तदहं श्रोतुमिच्छामि श्रीकाञ्चीपूर्ण कौतुकात् ।
तस्माच्छीघ्रं समाख्याहि त्वन्मनस्यभिवाञ्छितम् ॥

---

செய்து கொண்டிருந்தார். திருக்கச்சிநம்பியின் அவ்வார்த்தையைக் கேட்ட மஹாத்மாவான ராமாநுஜரும், தேவப்பெருமாளை ஸேவித்துவிட்டு, தமது வீட்டை அடைந்தார்.

### அருளாளன் ஆறுவார்த்தை அருளல்

59-68. அன்றிரவு, தே₃வராஜராம் ஹரியானவர்—தமக்கு அந்தரங்க₃ரும் கமலாபதியின் குமாரரும், ஶுத்₃த₄மான திருவாலவட்டத்தாலே (விசிறியாலே) தமக்குக் கைங்கர்யத்தை அன்போடு செய்கின்றவருமான உத்தமராம் திருக்கச்சிநம்பியைப் பார்த்து, புன்முறுவலோடு, பொருள் பொதிந்த வார்த்தையைப் பேசலுற்றார்—"ஸ்ரீகாஞ்சீபூர்ண முனிவரே! ஏதோ ஓர் அர்த்த₂த்தை மனத்திற்கொண்டு, அதுபற்றி என்னோடு பேச விரும்புகிறவர் போலே இராநின்றீர். இதை உமது முகக்குறிப்பால் உணர்ந்தேன். அதைக் கேட்பதில் நான் ஆவலுள்ளவனாயிருக்கிறேன். ஆகையால், நீர் நெஞ்சில் விரும்பியதை விரைவிலேயே எனக்குக் கூறும்" என்று. தேவப்பெருமாளுடைய இவ்வார்த்தையைக் கேட்டு, மஹா

५२. ततस्तद्वाक्यमाकर्ण्य काञ्चीपूर्णेन भाषितम् ।
रामानुजस्तथ्यमिति मत्वा प्राज्ञः पुनस्तदा ॥

५३. काञ्चीपूर्णमुवाचेदं वचनं विनयान्वितः ।
उपायेषु च कस्साधुरन्तिमस्मरणं तथा ॥

५४. कदा मोक्षेति द्रष्टव्यः कमाचार्यं समाश्रये ।
चतुरर्थान्कर्तुकामो मनस्यालोचितं मया ॥

५५. विज्ञाप्य देवराजाय तेनोक्तं वचनं शुभम् ।
मह्यं करुणया ब्रूहि काञ्चीपूर्ण कृपानिधे ॥

५६. रामानुजस्य तद्वाक्यं श्रुत्वाऽसौ वैष्णवोत्तमः ।
तं तथाऽद्य करिष्यामि मा कुरुष्वात्र संशयम् ॥

---

வருணத்தில் பிறந்தவன். உனக்கு எப்படி நான் பஞ்ச ஸம்ஸ்காரம் செய்யமுடியும்?" என்று.

### நாலு கேள்விகள்

52-58. பேரறிவாளரான ராமாநுஜர், திருக்கச்சிநம்பியுரைத்த அவ்வார்த்தையைக் கேட்டு, அதை ஹிதமெனக் கருதி, அவரிடம் மறுபடியும் பணிவோடு பின்வருமாறு பேசினர்—"கருணைக்கடலான திருக்கச்சிநம்பியே! (1) உபாயங்களில் எது நல்லது? (2) மோக்ஷமடைவதற்குமுன் அந்திமஸ்ம்ருதி வேண்டுவது எப்போது? (3) எந்த ஜந்மத்தில் மோக்ஷமடைவது? (4) எந்த ஆசார்யனை நான் ஆஶ்ரயிப்பது? இந்த நாலு அர்த்தங்களைப் பற்றி முடிவு காண விரும்பி, நான் என் மனத்தில் ஆராய்ந்து ஓர் முடிவுக்கு வந்திருக்கிறேன். இக்கேள்விகளை தேவப்பெருமாளிடம் விண்ணப்பித்து, அவர் அருளும் மங்களமான வார்த்தையைக் கருணையாலே எனக்கு உரைக்கவேண்டும்" என்று ராமாநுஜர் கூறிய அவ்வாக்யத்தைக்கேட்ட வைஷ்ணவோத்தமராய், தவத்தில் மிக்கவரான நம்பி, "நான் அப்படியே செய்கிறேன். நீர் இதில் ஐயமுற வேண்டா" என்று ராமாநுஜரிடம் கூறி, லோகநாதனான வரதனுக்குக் கைங்கர்யம்

६९. काञ्चीपूर्णश्च तद्वाक्यं निशम्य हरिणेरितम्।
रामानुजाय तत्सर्वं वरदोक्तं न्यवेदयत्॥

७०. लक्ष्मणार्यस्तु तच्छ्रुत्वा कमलानन्दनात् शुभम्।
चिन्तितस्यार्थजातस्य मया तुल्यमिदं त्विति॥

७१. विस्मयाविष्टहृदयः तदा रामानुजोऽभवत्।
ततस्तं देवराजं च तं काञ्चीपूर्णमुत्तमम्॥

७२. भक्त्या संसेव्य सुप्रीतस्ताभ्यामाज्ञापितस्तदा।
रङ्गं प्रति ययौ धीमान् पूर्णाचार्यदिदृक्षया॥

७३. अर्थान् षडाकर्ण्य गजाद्रिनाथात् काञ्चीमुनेः पूर्णकृपावशेन।
श्रीभूरिपूर्णाश्रयणाभिलाषात् विसृज्य काञ्चीं प्रययौ स रङ्गम्॥

इति श्रीप्रपन्नामृते रामानुजचरित्रे देवराजात्
षड्वागर्थसंप्राप्तिर्नाम दशमोऽध्यायः॥

---

## அரங்கத்திற்குப் புறப்படுதல்

69-73. ஹரியினால் அருளப்பட்ட அவ்வாக்யத்தைக் கேட்ட திருக்கச்சிநம்பியும், வரதனால் சொல்லப்பட்ட அவ்வாறு வார்த்தையையும் ராமாநுஜருக்குக் கூறினார். இளையாழ்வாரும் கமலையின் குமாரரிடமிருந்து மங்களமான அவ்வாறு வார்த்தையைக் கேட்டு, "நாம் ஏற்கனவே ஆராய்ந்து முடிவுகண்ட அர்த்த2ங்களோடு இதுவும் ஒத்திருக்கிறதே!" என்று வியப்புற்றநெஞ்சினரானார். பிறகு, அறிவாளியான ராமாநுஜர், — அந்த தேவப்பெருமாளையும், உத்தமரான திருக்கச்சிநம்பியையும் ப4க்தியுடன் ஸேவித்துவிட்டு, மிகவுகந்தவராய், அவர்களால் கட்டளையிடப் பெற்றவராய், பெரியநம்பியைக் காணவிரும்பி, ஸ்ரீரங்கத்தை நோக்கிச் சென்றார். திருக்கச்சிநம்பியின் பரம கிருபையாலே, அத்திகிரியருளாளனிடமிருந்து ஆறு வார்த்தைகளைக் கேட்டு,

५२. ततस्तद्वाक्यमाकर्ण्य काञ्चीपूर्णेन भाषितम् ।
रामानुजस्तथ्यमिति मत्वा प्राज्ञः पुनस्तदा ॥

५३. काञ्चीपूर्णमुवाचेदं वचनं विनयान्वितः ।
उपायेषु च कस्साधुरन्तिमस्मरणं तथा ॥

५४. कदा मोक्षेति द्रष्टव्यः कमाचार्यं समाश्रये ।
चतुरर्थान्कर्तुकामो मनस्यालोचितं मया ॥

५५. विज्ञाप्य देवराजाय तेनोक्तं वचनं शुभम् ।
मह्यं करुणया ब्रूहि काञ्चीपूर्ण कृपानिधे ॥

५६. रामानुजस्य तद्वाक्यं श्रुत्वाऽसौ वैष्णवोत्तमः ।
तं तथाऽद्य करिष्यामि मा कुरुष्वात्र संशयम् ॥

---

வருணத்தில் பிறந்தவன். உனக்கு எப்படி நான் பஞ்ச ஸம்ஸ்காரம் செய்யமுடியும்?'' என்று.

### நாலு கேள்விகள்

52-58. பேரறிவாளரான ராமாநுஜர், திருக்கச்சிநம்பி யுரைத்த அவ்வார்த்தையைக் கேட்டு, அதை ஹிதமெனக் கருதி, அவரிடம் மறுபடியும் பணிவோடு பின்வருமாறு பேசினர்—"கருணைக்கடலான திருக்கச்சிநம்பியே! (1) உபா யங்களில் எது நல்லது? (2) மோக்ஷமடைவதற்குமுன் அந்திமஸ்ம்ருதி வேண்டுவது எப்போது? (3) எந்த ஜந் மத்தில் மோக்ஷமடைவது? (4) எந்த ஆசார்யனை நான் ஆம்ரயிப்பது? இந்த நாலு அர்த்தங்களைப் பற்றி முடிவு காண விரும்பி, நான் என் மனத்தில் ஆராய்ந்து ஓர் முடி வுக்கு வந்திருக்கிறேன். இக்கேள்விகளை தேவப்பெருமாளிடம் விண்ணப்பித்து, அவர் அருளும் மங்களமான வார்த்தை யைக் கருணையாலே எனக்கு உரைக்கவேண்டும்'' என்று ராமாநுஜர் கூறிய அவ்வாக்யத்தைக்கேட்ட வைஷ்ணவோத் தமராய், தவத்தில் மிக்கவரான நம்பி, "நான் அப்படியே செய்கிறேன். நீர் இதில் ஐயமுற வேண்டா''என்று ராமாநுஜ ரிடம் கூறி, லோகநாதனை வரதனுக்குக் கைங்கர்யம்

४. केचिद्वै वैष्णवास्तत्र दुःखितांस्तान् द्विजोत्तमान् ।
अब्रुवन् वचनं प्रीत्या तद्दुःखविनिवारकम् ॥
५. मा शोचध्वं महात्मानं परलोकगतं प्रति ।
अस्माकं रक्षकः श्रीमानास्ते विप्रोत्तमोऽधुना ॥
६. रामानुज इति ख्यातः क्षेत्रे सत्यव्रते शुभे ।
अनन्तरं यामुनार्यात् विना रामानुजं वरम् ॥
७. यः कोपि नास्ति लोकेऽस्मिन् स्वमतप्रतिपालकः ।
एष रामानुजः श्रीमान् धीमान् लोकविलक्षणः ॥
८. सदृशो यामुनार्येण शीलादिगुणसंयुतः ।
बुद्ध्या बृहस्पतेस्तुल्यस्तेजसा रविणा समः ॥
९. भक्त्या प्रह्लादसदृशः क्षमया पृथिवीसमः ।
तेजस्वी ज्ञानसंपन्नः सर्वशास्त्रार्थतत्त्ववित् ॥

---

வைஷ்ணவர்கள், துன்புற்ற அவ்வந்தணர்தலைவர்களின் துன்பத்தைத் துடைக்கும் வார்த்தையைப் பின்வருமாறு இனிதாகச் சொன்னார்கள்:– "மஹாபுருஷரான ஆளவந்தார் பரலோகமடைந்தது குறித்து வருந்தாதீர்கள்; ஸ்ரீமத்₃ராமாநுஜர் என்று பெயர் பெற்றவராய், நமக்குத் தஞ்சமாயிருக்கும் அந்தணர்தலைவர் இப்போது மங்க₃ளமான ஸத்யவ்ரத (காஞ்சீ) க்ஷேத்ரத்திலே வாழ்கிறார். யாமுநாசார்யருக்குப் பிறகு,மிகச் சிறந்தவரான ராமாநுஜரைத்தவிர வேறு எவரும் நம் த₃ர்ஶநத்தை ரக்ஷிக்கக் கூடியவர் இவ்வுலகில் இல்லை. திருவுடையவராய், அறிவாளியாய், லோக விலக்ஷணராய், யாமுநாசார்யரோடு ஒத்தவராய், ஶீலம் முதலான கு₃ணங்களுடையவராய், அறிவில் பிருஹஸ்பதிக்கு ஸமாநமானவராய், ஒளியில் ஸூர்யனை ஒத்தவராய், ப₄க்தியில் ப்ரஹ்லாத₃னுக்கு ஸமமானவராய், பொறுமையில் பூ₄மியை ஒத்தவராய், பிறரை வெல்லும் திறமை படைத்தவராய், ஜ்ஞாந

५२. ततस्तद्वाक्यमाकर्ण्य काञ्चीपूर्णेन भाषितम् ।
रामानुजस्तथ्यमिति मत्वा प्राज्ञः पुनस्तदा ॥

५३. काञ्चीपूर्णमुवाचेदं वचनं विनयान्वितः ।
उपायेषु च कस्साधुरन्तिमस्मरणं तथा ॥

५४. कदा मोक्षेति द्रष्टव्यः कमाचार्यं समाश्रये ।
चतुरर्थान्कर्तुकामो मनस्यालोचितं मया ॥

५५. विज्ञाप्य देवराजाय तेनोक्तं वचनं शुभम् ।
मह्यं करुणया ब्रूहि काञ्चीपूर्ण कृपानिधे ॥

५६. रामानुजस्य तद्वाक्यं श्रुत्वाऽसौ वैष्णवोत्तमः ।
तं तथाऽद्य करिष्यामि मा कुरुष्वात्र संशयम् ॥

---

வருணத்தில் பிறந்தவன். உனக்கு எப்படி நான் பஞ்ச ஸம்ஸ்காரம் செய்யமுடியும்?'' என்று.

## நாலு கேள்விகள்

52-58. பேரறிவாளரான ராமாநுஜர், திருக்கச்சிநம்பி யுரைத்த அவ்வார்த்தையைக் கேட்டு, அதை ஹிதமெனக் கருதி, அவரிடம் மறுபடியும் பணிவோடு பின்வருமாறு பேசினார்—“கருணைக்கடலான திருக்கச்சிநம்பியே! (1) உபா யங்களில் எது நல்லது? (2) மோக்ஷமடைவதற்குமுன் அந்திமஸ்ம்ருதி வேண்டுவது எப்போது? (3) எந்த ஜந் மத்தில் மோக்ஷமடைவது? (4) எந்த ஆசார்யனை நான் ஆஶ்ரயிப்பது? இந்த நாலு அர்த்தங்களைப் பற்றி முடிவு காண விரும்பி, நான் என் மனத்தில் ஆராய்ந்து ஓர் முடி வுக்கு வந்திருக்கிறேன். இக்கேள்விகளை தேவப்பெருமாளிடம் விண்ணப்பித்து, அவர் அருளும் மங்களமான வார்த்தை யைக் கருணையாலே எனக்கு உரைக்கவேண்டும்'' என்று ராமாநுஜர் கூறிய அவ்வாக்யத்தைக்கேட்ட வைஷ்ணவோத் தமராய், தவத்தில் மிக்கவரான நம்பி, “நான் அப்படியே செய்கிறேன். நீர் இதில் ஐயமுற வேண்டா''என்று ராமாநுஜ ரிடம் கூறி, லோகநாதனை வரதனுக்குக் கைங்கர்யம்

१५. अनुज्ञातस्ततस्तेन रङ्गेशेन महात्मना।
सकुटुम्बो ययौ शीघ्रं क्षेत्रं सत्यव्रतं प्रति॥

१६. देशान् ग्रामान् पर्वतांश्च नदीस्तीर्त्वा वनानि च।
अग्रहारमवाप्याथ मधुरान्तकमादरात्॥

१७. रामानुजश्च तं ग्रामं अवाप्याथ ददर्श तम्।
पूर्णाचार्यं महात्मानं कुटुम्बेन समागतम्॥

१८. पूर्णाचार्यस्य चरणावभिवाद्य मुदान्वितः।
विनयावनतो भूत्वा वचनं चेदमब्रवीत्॥

१९. श्रीरङ्गाख्यं महापुण्यं क्षेत्रं हित्वा मनोहरम्।
रङ्गनाथस्य सेवां च भुक्तिमुक्तिप्रदां शुभाम्॥

२०. कुत्र गच्छसि हे ब्रह्मन् कुटुम्बेन समावृतः।
ब्रूहि तत्कारणं मेऽद्य पூर्णाचार्य महामते॥

---

டம் அனுமதிபெற்றவராய், குடும்ப₃த்தோடு, காஞ்சியை நோக்கி விரைவில் சென்றார். பல தே₃ஶங்கள், க்₃ராமங்கள், மலைகள், நதி₃கள், காடுகள் ஆகியவற்றைக் கடந்து, மது₄ராந்தகம் என்னும் அக்₃ரஹாரத்தை அடைந்து ஆத₃ரத்தோடு (தங்கினார்). ராமாநுஜரும் அந்த க்₃ராமத்தை அடைந்து, குடும்பத்தோடு வந்திருக்கும் அப்பெரிய நம்பியைக் கண்டார்.

### பஞ்ச ஸம்ஸ்காரம் செய்விக்க வேண்டுதல்

18-*32. பெரிய நம்பியின் திருவடிகளை உகப்புடன் வணங்கி பணிவுடன்பின்வருமாறு வார்த்தையும் சொன்னார்:- "அந்தணரே! மிகவழகியதாய், மிகப் புண்ணியமான ஸ்ரீரங்கம் என்னும் க்ஷேத்திரத்தையும், போ₄கமோ₃க்ஷங்களை அளிக்கும் மங்க₃ளமான ஸ்ரீரங்க₃நாத₂னுடைய ஸேவையையும் விட்டு, குடும்ப₃த்தோடு எங்கு செல்கின்றீர்? பேரறி

२१. रामानुजस्य तद्वाक्यं श्रुत्वा श्रीवैष्णवोत्तमः ।
स्वस्यागमनवृत्तान्तं लक्ष्मणार्याय विस्तरात् ॥

२२. निवेद्य पृष्टवान् तं च तदागमनकारणम् ।
रामानुजोऽपि सहसा तस्मै वृत्तान्तमात्मनः ॥

२३. अभिधाय पुनर्वाक्यं पूर्णाचार्यमुवाच सः ।
इहैव पञ्चसंस्कारान् मम कृत्वा दयानिधे ॥

२४. संसारकूपपतितं मामुद्धर करग्रहात् ।
रामानुजस्य तद्वाक्यं श्रुत्वा पूर्णस्तमब्रवीत् ॥

२५. पुण्ये सत्यव्रते क्षेत्रे देवराजस्य सन्निधौ ।
करिष्यामि न सन्देहः तव संस्कारपञ्चकम् ॥

२६. ग्रामस्यास्याविदूरे हि तत् क्षेत्रं विद्यते शुभम् ।
क्षमस्वैकदिनं प्राज्ञ गच्छामोऽद्यैव सत्वरम् ॥

---

ளாளரான பெரியநம்பியே! அதன் காரணத்தை இப்போது எனக்குக் கூறுவீர்.” என்று. ராமாநுஜருடைய இவ்வார்த்தையைக் கேட்டு, ஸ்ரீ வைஷ்ணவோத்தமரான பெரியநம்பி, தாம் வருவதின் காரணத்தை இளையாழ்வார்க்கு விவரித்து, அவர் வந்த காரணத்தைக் கூறும்படி அவரைக் கேட்டார். உடனே ராமாநுஜரும், அவரிடம் தமது வரவுக்குக் காரணத்தைக் கூறி, மறுபடியும் பெரியநம்பியைக் குறித்து, “கருணைக் கடலே! எனக்கு இங்கேயே பஞ்ச ஸம்ஸ்காரங்களைச் செய்து ஸம்ஸாரமாகிற கிணற்றில் விழுந்திருக்கும் அடியேனைக் கைதூக்கிவிடவேண்டும்.” என்று கூறினார். ராமாநுஜருடைய அவ்வார்த்தையைக் கேட்ட பெரியநம்பி, “புண்யமான காஞ்சீபுரத்தில் தே₃வப்பெருமாளின் ஸந்நிதி₄யில் உமக்குப் பஞ்ச ஸம்ஸ்காரம் செய்வேன். இதில் ஐயமில்லை. இந்த க்₃ராமத்திலிருந்து சிறிது தூரத்தில் மங்க₃ளமான அந்த க்ஷேத்ரம் உள்ளது. அறிவாளியே!

२७. इति ब्रुवन्तं पूर्णार्यं वाक्यं रामानुजोऽब्रवीत्।
शरीरमस्थिरं ज्ञात्वा तव वाक्यं महामते॥

२८. सहसा कथमिच्छामि कर्तुमद्य बुधर्षभ।
पुराऽहं यामुनाचार्यं द्रष्टुकामस्त्वया सह॥

२९. काञ्च्याः समागतो ह्यस्मि स प्राप परमं पदम्।
स्वपन्तं वापि भुञ्जानं गच्छन्तमपि वर्त्मनि॥

३०. युवानमपि बालं वा स्ववशे कुरुते विधिः।
इदमद्य कृतं कार्यं श्वोऽन्यत्कार्यं करिष्यते॥

३१. इति लोके स बलवान् कृतान्तो न समीक्षते।
तस्मात्कार्यं शुभं धीमान् श्रेयस्कामो नरोत्तमः॥

---

ஒருநாள் பொறுத்திரும். இன்றே வேகமாகச்செல்வோம்" என்று பதிலுரைத்தார். இப்படிக் கூறிய பெரியநம்பியைக் குறித்து ராமாநுஜர் "பேரறிவாளரே! அறிவாளிகளில் தலைவரே! ஶரீரம் நிலையற்றது என்று அறியும் அடியேன் இன்று திடீரென்று தே3வரீர் நியமனப்படி எப்படி நடக்க விரும்புவேன்? முன்பு யாமுநாசார்யரைக் காணவிரும்பி, தேவரீரோடு காஞ்சியிலிருந்து வந்தேன். அவர் பரமபத3 மடைந்துவிட்டார். தூங்கும்போதும், சாப்பிடும் போதும், வழிநடக்கும்போதும், வாலிபனாயிருக்கும் போதும், குழந்தை யாயிருக்கும் போதும், விதி4யானது மனிதனை மரண மடையச் செய்து, தன் வசப்படுத்துகிறது. "இன்று இந்தக் கார்யம் (இவனால்) செய்யப்பட்டது; (இவன்) நாளை வேறொரு கார்யத்தைச் செய்யப்போகிறான்" என்று வலிமைமிக்க யமன் இவ்வுலகில் காத்திருப்பதில்லை. அந்தணர் தலைவரே! ஆகையால் அறிவாளியாயிருந்து, நன்மையை விரும்புகின்றவன் நல்ல கார்யத்தைத் தாமஸித்துச் செய்வது எப்படிப் பொருந்தும்?" என்று உரைத்தார்.

३२. विलम्बेन कथं कर्तुमर्हति द्विजसत्तम।
रामानुजस्य वचनं महापूर्णोऽतिशस्य तत्॥

३३. इदं तथ्यं तदा मत्वा रामानुजमभाषत।
विगाह्यागच्छ विप्रेन्द्र सरस्यस्मिन् शुभोदके॥

३४. चक्राङ्कनं करिष्यामि त्वरमाणस्य तेऽधुना।
इत्युक्त्वा तं महाप्राज्ञः कान्तिमत्यात्मसंभवम्॥

३५. स्नात्वा कृताह्निकः प्राप्य विष्णोरायतनं शुभम्।
तत्रत्यैर्वैष्णवैस्साकं प्रतिष्ठाप्य हुताशनम्॥

३६. स चक्रे विधिना होममाज्यभागान्तमादरात्।
ततः पुरुषसूक्तेन मूलमन्त्रेण मन्त्रवित्॥

३७. अन्यैश्च वैष्णवैर्मन्त्रैश्चरुणाऽऽज्येन भक्तितः।
अष्टोत्तरसहस्रं तु जुहावाग्नौ समृत्विजा॥

---

## பஞ்ச ஸம்ஸ்காரம் செய்வித்தல்

32*-42. ராமாநுஜருடைய அவ்வார்த்தையை மிகப் புகழ்ந்த பெரியநம்பி, அவர் கூறியதை உண்மையென மதித்து, ராமாநுஜரைக் குறித்து, "அந்தணர் தலைவரே! த்வரையுடைய உமக்கு இப்போதே சக்ராங்கனம் செய்கின்றேன். மங்க₃ளமான நீரையுடைய இக்குளத்தில் குளித்து வாரும்" என்று கூறினார். பேரறிவாளரான பெரியநம்பி, காந்திமதியின் பிள்ளையான அவ்விராமாநுஜரைக் குறித்து இவ்வண்ணமுரைத்து, குளித்து, காலையில் செய்யவேண்டிய கர்மங்களைச் செய்து, அங்குள்ள வைஷ்ணவர்களோடு கூட மங்க₃ளமான விஷ்ணுவின் கோயிலை அடைந்து, அக்₃னி ப்ரதிஷ்டை₂செய்து, முறைப்படி அக்₃நி முக₂ம்வரை நெய்யினால் ஹோமத்தை அன்போடு செய்தார்.

३८. चक्रराजं पाञ्चजन्यं गन्धपुष्पाक्षतैः शुभैः।
संपूज्य सुमहात्मानं लक्ष्मणार्यं ददर्श तम्॥

३९. विप्रोत्तमं विष्णुभक्तं प्राञ्जलिं पुरतः स्थितम्।
स्नातं विनयसंपन्नं निर्मलं स्वच्छमानसम्॥

४०. सन्निधौ रामचन्द्रस्य कोदण्डशरधारिणः।
तप्ताभ्यां शङ्खचक्राभ्यां विधिनाऽग्नौ कृपानिधिः॥

४१. लक्ष्मणार्यस्य भुजयोः सर्वलक्षणयुक्तयोः।
कृत्वाङ्कनं तदा तस्मै लक्ष्मणार्याय धीमते॥

४२. आपन्नरक्षकं मन्त्रं दास्यनामादिकं तदा।
अर्चारूपं देवराजं प्रददौ शिष्यवत्सलः॥

---

அதன்பின் மந்திரமுணர்ந்த பெரியநம்பி புருஷஸூக்தத்தாலும், மூலமந்திரத்தாலும், மற்ற வைஷ்ணவ மந்திரங்களாலும், ஹவிஸ்ஸையும், நெய்யையும் கொண்டு நல்ல ருத்விக்குகளோடு கூடியிருந்து அன்போடு ஆயிரத்தெட்டு முறை அக்₃னியில் ஹோமம் செய்தார். சக்கரத்தாழ்வானையும், பாஞ்சசன்னியத்தையும், மங்க₃ளமான க₃ந்த₄ம், புஷ்பம், அக்ஷதை ஆகியவற்றைக் கொண்டு ஆராதி₄த்து, அந்தணர்தலைவராய், விஷ்ணுப₄க்தராய், கைகூப்பி முன்னே நிற்பவராய், குளித்திருப்பவராய், பணிவுடன் கூடியவராய், குற்றமற்றவராய், தெளிந்த மனமுடையவராய், மிகப் பெரியவரான அவ்விளையாழ்வாரைக் கடாக்ஷித்தார். கோத₃ண்ட₃த்தையும் அம்பையும் ஏந்தியவனை ராமபிரானின் ஸந்நிதி₄யில், ஶிஷ்யரிடம் அன்புடைய கருணைக்கடலான பெரியநம்பி, முறைப்படி ஹோமாக்₃னியில் காய்ச்சிய ஶங்க₂சக்ரங்களைக்கொண்டு, எல்லா லக்ஷணங்களும் பொருந்திய ராமாநுஜருடைய தோள்களில் அடையாளம் செய்து, அறிவாளியான அவ்விளையாழ்

४३. पूर्णाचार्येण गुरुणा कृतसंस्कारपञ्चकः ।
रेजे रामानुजः श्रीमान् शरच्चन्द्र इवामलः ॥

४४. श्रीवैष्णवश्रिया जुष्टं कृत्वा रामानुजं गुरुः ।
श्रीहरेर्दास्यसाम्राज्ये तं प्रतिष्ठाप्य नायकम् ॥

४५. उवाच प्रीतियुक्तात्मा वचनं मधुराक्षरम् ।
भूलोके यामुनाचार्यात्पश्चादाचार्यमूर्तिमान् ॥

४६. त्वमेव रक्षकस्त्वद्य सर्वेषां वैष्णवोत्तम ।
प्रच्छन्नबौद्धसमयानुन्मूल्य शतशोऽशुभान् ॥

४७. कर्तुं शक्तिस्तवैवास्ति लक्ष्मीशं सर्वशेषिणम् ।
त्वत्तेजोऽत्यद्भुतं दृष्ट्वा वक्ष्याम्यद्य कुतूहलात् ॥

---

வார்க்கு ஸம்ஸாராபத்தையடைந்தவர்களை ரக்ஷிக்கும் த்3வய மந்திரத்தையும், தா3ஸ்ய நாமம் முதலியவற்றையும், அர்ச்சாரூபியான தே3வப்பெருமாளையும் அளித்தார்.

## தா3ஸ்ய ஸாம்ராஜ்ய பட்டாபி4ஷேகம்

43-47. ஆசார்யரான பெரியநம்பியால் பஞ்சஸம்ஸ்காரம் செய்யப்பெற்ற ஸ்ரீமானான ராமாநுஜர் ஶரத்கால சந்திரனைப்போலே குற்றமற்றவராக ப்ரகாஶித்தார். ஆசார்யரான பெரியநம்பி ராமாநுஜரை ஸ்ரீவைஷ்ணவச் செல்வம் நிரம்பியவராகச்செய்து, எம்பெருமானின் தா3ஸ்ய ஸாம்ராஜ்யத்தில் நாயகனைப் பட்டாபி4ஷேகம் செய்வித்தார். அவரைக் குறித்து மிகவுகந்து பின்வரும் இனிய வார்த்தையையும் கூறினர்—"வைஷ்ணவர் தலைவரே! இவ்வுலகில் யாமுநாசார்யருக்குப் பிறகு தா3ர்ஶநப்ரவர்த்தநாசார்யராக உருவாகியிருக்கும் தேவரீரே அனைவருக்கும் ரக்ஷகராவீர். அமங்க3ளமான ப்ரச்ச2ந்ந பௌ3த்3த4 மதங்களைப் பலவித4மாகக் க2ண்டி3த்து ஸ்ரீமந்நாராயணனை ஸர்வஶேஷியாக நிலைநிறுத்துவதற்கு உமக்கே ஶக்தியுண்டு.

४८. स्वदेशिकं पूजयित्वा लक्ष्मणार्यस्तमग्रतः।
तत्रत्यान् वैष्णवान् सर्वान् पूजयामास शास्त्रतः॥

४९. ततः स्वाचार्यमादाय सकुटुम्बं कृपानिधिम्।
भूयः सत्यव्रतं क्षेत्रं ययौ रामानुजस्तदा॥

५०. देवराजं हरिं नत्वा गुरुणा सह बुद्धिमान्।
तत्तीर्थशठकोपादीन् गृहीत्वा भक्तितस्तदा॥

५१. काञ्चीपूर्णाय तत्सर्वं पूर्णार्यागमनादिकम्।
निवेदयित्वाऽऽशु तदा स्वगृहं प्रविवेश ह॥

५२. स्वदेशिकाय पूर्णाय स्वगृहं स्वार्थमादरात्।
दत्वा तत्सन्निधौ नित्यं दिव्यांश्च द्राविडागमान्॥

---

உமது அத்யாஶ்சர்யமான தேஜஸ்ஸைக் கண்டு, குதூஹலத்தாலே இன்று இவ்வார்த்தையை கூறுகிறேன்'' என்று.

## பெரியநம்பியோடு காஞ்சியில் வாழ்தல்

48-55. இளையாழ்வார் முதலில் தனது ஆசார்யரைப் பூஜித்து, அங்குள்ள எல்லா வைஷ்ணவர்களையும் ஶாஸ்த்ர முறைப்படி பூஜித்தார். அதற்குப்பின் கருணைக்கடலான தமது ஆசார்யரைக் குடும்ப₃த்தோடு அழைத்துக்கொண்டு, ராமானுஜர் மறுபடியும் ஸத்யவ்ரத க்ஷேத்ரத்தை (காஞ்சியை) அப்போதே அடைந்தார். அறிவாளியான அவர் ஆசார்யரோடுகூட தேவப்பெருமாளை வணங்கி, அன்புடன் அவரது தீர்த்த₂ஶட₂ாரிகளைப்பெற்று, அப்போதே திருக்கச்சிநம்பியிடம், பெரியநம்பிகள் தன்னைத் தேடிவந்தது முதலான எல்லாச் செய்தியையும் விண்ணப்பித்துவிட்டு, விரைவில் தமது வீட்டை அடைந்தார். தமது ஆசார்யரான பெரியநம்பிக்குத் தமது வீட்டையும் பொருளையும் அன்போடு அளித்து, அவரிடம் த்₃ராவிட₃வேத₃மான

५३. भक्त्याऽध्ययनमव्यग्रः कुर्वन् सन्ततमादरात् ।
साात्त्विकानि पुराणानि गुरुणा सह बुद्धिमान् ॥

५४. विलोकयन् लक्ष्मणार्यः स सम्यक् भगवत्परः ।
सुखेन कालं षण्मासाननयद्वैष्णवोत्तमः ॥

५५. पूर्णाचार्यो लक्ष्मणार्याय सर्वान्
संदिश्यार्थान् आज्ञया देशिकस्य ।
चक्रे वासं कौतुकात् काश्चिकायां
हस्त्यद्रीशे भक्तिमान् देवराजे ॥

इति श्रीप्रपन्नामृते रामानुजचरित्रे देवराजाज्ञया महापूर्णाश्रयणं
नाम एकादशोऽध्यायः ॥

---

தி₃வ்யப்ரப₃ந்த₄ங்களை எப்போதும் ஆர்வத்துடன் கவன மாக ஓதிக்கொண்டு, ஸாத்விக புராணங்களையும் ஆசார்ய ரோடு நன்கு ஸேவித்துக்கொண்டு, அறிவாளியாய், வைஷ்ணவர் தலைவராய், ப₄க₃வானிடம் ஈடுபட்டவரான இளையாழ்வார் ஆறுமாதகாலத்தை இனிதாகக் கழித்தார். அத்திகிரிநாத₂னை தேவப்பெருமாளிடம் ப₄க்தியுடைய பெரியநம்பியும், தமது ஆசார்யரது ஆணையால் இளையாழ் வாருக்கு எல்லா ஸம்ப்ரதா₃யார்த்த₂ங்களையும் உபதே₃ ஶித்து, ஆர்வத்துடன் காஞ்சியில் வஸித்துவந்தார்.

**ஸ்ரீ ப்ரபந்நாம்ருதத்தில், ராமானுஜ சரித்திரத்தில், தேவப்பெருமாளுடைய ஆணையால் பெரியநம்பியை ஆஶ்ரயித்தலாகிற பதினோராவது அத்தியாயம் நிறைவுற்றது.**

## द्वादशोऽध्यायः

१. कदाचिल्लक्ष्मणाचार्यस्तैलाभ्यङ्गकृतश्रमः ।
आहूतो वैष्णवस्तेन तैलाभ्यञ्जनवासरे ॥

२. श्रमेण महता युक्तं वैष्णवं क्षुत्समन्वितम् ।
विलोक्य लक्ष्मणाचार्यो भार्यामानीय चाब्रवीत् ॥

३. अन्नं पर्युषितं गेहे ह्यस्ति चायं क्षुधाऽन्वितः ।
अन्नं न किञ्चिदप्यस्ति सा तमाहेति भामिनी ॥

४. स तां कार्यान्तरे धीमान् नियोज्य गृहमाविशत् ।
गृहान्तरे संविशोध्य दृष्ट्वान्नं पात्रसंस्थितम् ॥

५. तामाहूय तदा भार्यां दर्शयित्वा तदोदनम् ।
उवाच वचनं धीमान् कोपात्संरक्तलोचनः ॥

---

பனிரண்டாவது அத்தியாயம்

## மனைவியைத் துறத்தல்

பு₄ாகு₃வதாபசாரம்

1-7. ஒருநாள் ராமாநுஜர் எண்ணெய் தேய்த்துக் குளிக்கவேண்டியதி₃னத்தில், எண்ணெய் தேய்த்துவிடுவதில் வல்ல ஓர் வைஷ்ணவரை அழைத்திருந்தார். மிகுந்த களைப் புடனும் பசியோடுமிருந்த அந்த வைஷ்ணவரைக் கண்டு, ராமாநுஜர் தம் மனைவியை அழைத்து, "பழைய சோறு வீட்டிலிருக்கிறது; இவரோ பசியோடிருக்கிறார். (இவர்க்கு அதை அளி)" என்று கூறினார். அம்மங்கைநல்லாளோ 'ஒரு சோறும் வீட்டிலில்லை' என்று கூறிவிட்டாள். அறிவாளியான அவர் அவளை வேறொரு காரியம் செய்யச் சொல்லிவிட்டு வீட்டினுள் நுழைந்தார். வீட்டினுள் சோதனைசெய்து, பாத்திரத்திலிருக்கும் பழையசோற்றைக்

६. अहो ते हृदयं क्रूरं ईदृशे निर्दयं जने।
पूर्वैरुक्तं तु तत्सत्यं पापानामाकरः स्त्रियः॥
७. इत्युक्त्वा कुपितः श्रीमान् भार्यां लक्ष्मणदेशिकः।
किञ्चिदस्वस्थहृदयो बभूव व्यथितेन्द्रियः॥
८. ततस्सा लक्ष्मणार्यस्य भार्या पण्डितमानिनी।
घटेनाम्बु समानेतुं कूपं प्रति ययौ जवात्॥
९. महापूर्णार्यभार्या च तादृशी तत्क्षणेन सा।
जलार्थं घटमादाय तत्कूपं प्रति साऽऽगता॥

---

கண்டு, அப்போதே மனைவியை அழைத்து, அவளுக்கு அப்பழையதைக் காட்டி, கோபத்தால் சிவந்த கண்களை யுடையவராய், "ஐயோ! இத்தகைய மனிதரிடமும் கருணை யற்றுப் போகும்படி உனது நெஞ்சு கொடியதாயிருக் கிறதே! 'பாபங்களுக்கெல்லாம் இருப்பிடமாயிருப்பவர்கள் ஸ்த்ரீகள்' என்று முன்னோர்கள் சொல்லியிருப்பது உண் மையாய்விட்டதே" என்றுரைத்தார் அறிவாளியான ராமா நுஜர். பாகவத கைங்கர்யச் செல்வம் நிறைந்தவரும், (பாகவதாபசாரத்தைக் கண்டு) கோபங்கொண்டவருமான இளையாழ்வார், சிறிது நெஞ்சு தளும்பியவராய், பொறி கலங்கியவரானார்.

### ஆசார்யாபசாரம்

8-*21. அதற்குப்பின் தன்னைப் பேரறிவாளியாக அபி மானித்திருந்த ராமாநுஜபத்னி குடத்தில் தண்ணீர் எடுத்து வரக் கிணற்றைநோக்கி வேகமாகச் சென்றாள். அதே சமயத்தில் பெரியநம்பியின் மனைவியும், அதேபோல் அவசரத்துடன் ஜலமெடுக்கக் குடத்தை எடுத்துக்கொண்டு அக்கிணற்றுக்கே வந்துசேர்ந்தாள். ஒரே சமயத்தில் இரண்டு கயிறுகளில் இருகுடங்களையும் பிணைத்துக் கிணற்றில் இறக்கி வேகமாகத் தண்ணீர் இழுக்கையில்,

१०. घटावाबद्धय रज्जुभ्यां एककाले स्त्रियौ जवात्।
कूपे निधाय सहसा ताभ्यां कूपाम्बुकर्षणे।

११. घटात्पूर्णार्यभार्यायाः पतिता जलबिन्दवः।
रामानुजार्यभार्यायाः कलशे जलपूरिते॥

१२. संक्रान्तं स्वघटं दृष्ट्वा तद्धटोदकबिन्दुभिः।
भार्या रामानुजार्यस्य कोपसंरक्तलोचना॥

१३. इयमाचार्यपत्नी मे पूज्या भर्तुर्यथा गुरुः।
तदम्बुपतानाद्दोषो नास्ति कुंभे च मामके॥

१४. शुद्ध्यर्थं च प्रभवति संशयोऽत्र न विद्यते।
गुरूच्छिष्टं च संप्रार्थ्यं तस्य पादोदकं शुभम्॥

१५. स्वीकर्तव्यं प्रयत्नेन भक्त्या शिष्येण सर्वथा।
एवं न मेने सा देवी स्त्रीस्वभावं समाश्रिता॥

---

நீர்நிறைந்த ராமாநுஜ பத்னியின் குடத்தில், பெரியநம்பி மனைவியின் குடத்திலிருந்து சில நீர்த்துளிகள் விழுந்து விட்டன. அவருடைய குடநீர்த்துளிகளாலே தனது குடம தீட்டுப்பட்டுவிட்டதாக நினைத்த ராமாநுஜபத்னி கோபத் தால் சிவந்த கண்ணினளாய், "இவள் எனது ஆசார்ய பத்னியாயிற்றே; எனது கணவருக்கு அவரது ஆசார்ய ரைப்போல் இவள் என்னல் பூஜிக்கத் தக்கவளாயிற்றே. எனது குடத்தில் அவளது நீர் விழுந்ததினல் குற்றமில் லாததோடன்றியில், ஶுத்₃தி₄க்கும் காரணமாகுமே! இவ் விஷயத்தில் ஐயமில்லையே; ஆசார்ய ஶேஷம் பிரார்த் தித்தும் பெறத்தக்கதே; அவரது திருவடியை அலம்பிய நீர் மங்களமானதும், ஶிஷ்யனல் எல்லாப்படியாலும் முயன்று பெறத்தக்கதுமாகுமே" என்று அப்பெண்பிள்ளை நினைக்க வில்லை. அத்தோடன்றியில், ஸ்த்ரீஸ்வப₄ாவத்தாலே பெரிய நம்பியின் மனைவியைக் குறித்து, பொருளற்ற கொடிய

१६. पूर्णार्यभार्यां परुषं वाक्यमाह निरर्थकम् ।
हीनजातिसमुत्पन्ने दुराचारसमन्विते ॥

१७. घटसाङ्कर्यमायातमधुनाऽऽचारवर्जिते ।
क्व ते जातिः श्रुतं शीलं क्व ते द्रव्यादिसम्पदः ॥

१८. अस्माकं तु कुलं शीलं विद्या च द्रव्यसंपदः ।
इत्येवं परुषं वाक्यं वदन्तीं तां स्त्रियं प्रति ॥

१९. पूर्णार्यधर्मपत्नी च वाक्यं परुषमब्रवीत् ।
एवं तयोस्तदा वध्वोः कलहस्समवर्तत ॥

२०. पूर्णाचार्यः स्वभार्यायां कोपं कृत्वा महत्तरम् ।
तद्वृत्तान्तं न शृणोति यावद्रामानुजोऽऽगतः ॥

२१. रङ्गं प्रति ययौ तावत् कुटुम्बेन समावृतः ।
ततो रामानुजः प्राज्ञः स्वाचार्यगृहमादरात् ॥

---

வார்த்தையையும் கூறினாள் — "(ப்₃ருஹச்சரணமாகிற) தாழ்ந்த குலத்தில் உதி₃த்தவளே! தீய ஆசாரமுள்ள வளே! இப்போது உனது குடநீர் என் குடத்தில் விழுந்து விட்டதே. நல்ல ஆசாரமற்றவளே! உனது குலம், படிப்பு, ஆசாரம், பணம், வீடு முதலான செல்வங்கள் ஆகியவை எத்தனை தாழ்ந்தவை! எங்களுடைய (வடம) குலம், ஒழுக்கம், கல்வி, பணம், வீடு முதலான செல்வங்கள் ஆகியவை எத்தனை உயர்ந்தவை" என்று தொடங்கி, கொடிய வார்த்தையைப் பெரியநம்பி மனைவியைக் குறித்துச் சொல்லும் அவளைக் குறித்து, இவளும் கொடிய பதிலுரையைக் கூறினாள். இவ்வண்ணமாக அவ்விரு பெண்பிள்ளைகளுக்கு மிடையே பெருஞ்சண்டை நடந்தது. பெரியநம்பியும், தன் மனைவியை மிகவும் கடிந்துகொண்டு, ராமாநுஜர் வீட்டிற்கு வந்து அச்செய்தியை அறிவதற்குமுன், குடும்பத்தோடு கூடியவராய் ஸ்ரீரங்க₃த்தை நோக்கிச் சென்றுவிட்டார்.

२२. गत्वा गृहे महात्मानं नापश्यद्देशिकोत्तमम् ।
केचिज्जनाः समागत्य समीपगृहवासिनः ॥
२३. पूर्णाचार्यं विचिन्वन्तं रामानुजमथाब्रुवन् ।
पूर्णाचार्यस्य भार्यायाः पत्न्याश्च तव सुव्रत ॥
२४. अस्य कूपस्य निकटे कलहः समजायत ।
तत्कारणं न जानीमस्तद्वेत्ति वरदो हरिः ॥
२५. पूर्णाचार्यः स्वकां भार्यां समादाय जनान्वितः ।
रङ्गक्षेत्रं प्रति ययौ तत्क्षणं वैष्णवोत्तमः ॥
२६. तेषां वाक्यं तु तच्छ्रुत्वा लक्ष्मणार्योऽप्रियं तदा ।
संतप्तहृदयः शीघ्रं आगत्य स्वनिवेशनम् ॥

### ராமாநுஜர் செய்தியறிதல்

21*-25. அப்போது பேரறிவாளரான இளையாழ்வார் தமது ஆசார்யரின் வீட்டிற்கு ஆர்வத்துடன் சென்றவர், பெரியவரான அவ்வாசார்யோத்தமரை அங்கு காண வில்லை. அருகிலுள்ள வீடுகளிலிருந்த சில ஜனங்கள் பெரியநம்பியைத் தேடும் ராமாநுஜரைப் பார்த்து, "நல் லொழுக்கமுள்ளவரே! பெரியநம்பியின் மனைவிக்கும், உமது மனைவிக்கும், இக்கிணற்றினருகிலே பெரிய சண்டை மூண்டது. அதன் காரணம் எங்களுக்குத் தெரியாது. தேவப்பெருமாள்தான் அதை அறிவார். வைஷ்ணவோத் தமரான பெரியநம்பி அக்கணத்திலேயே குடும்பத்தோடு தன் மனைவியை அழைத்துக்கொண்டு ஸ்ரீரங்க₃த்தைக் குறித்துச் சென்றுவிட்டார்." என்று கூறினார்கள்.

### மனைவியைக் கோபித்து, கருணையால் ஶாந்தியடைதல்

26-*32. அவர்களுடைய இன்னாததான வார்த்தை யைக் கேட்ட ராமாநுஜர், நெஞ்சு கொதிப்புற்றவராய், விரைவில் தம் வீட்டை அடைந்து, மனைவியிடமிருந்து

१६. पूर्णार्यभार्यां परुषं वाक्यमाह निरर्थकम्।
हीनजातिसमुत्पन्ने दुराचारसमन्विते॥

१७. घटसाङ्कर्यमायातमधुनाऽऽचारवर्जिते।
क्व ते जातिः श्रुतं शीलं क्व ते द्रव्यादिसम्पदः॥

१८. अस्माकं तु कुलं शीलं विद्या च द्रव्यसंपदः।
इत्येवं परुषं वाक्यं वदन्तीं तां स्त्रियं प्रति॥

१९. पूर्णार्यधर्मपत्नी च वाक्यं परुषमब्रवीत्।
एवं तयोस्तदा वध्वोः कलहस्समवर्तत॥

२०. पूर्णाचार्यः स्वभार्यायां कोपं कृत्वा महत्तरम्।
तद्वृत्तान्तं न शृणोति यावद्रामानुजोऽऽगतः॥

२१. रङ्गं प्रति ययौ तावत् कुटुम्बेन समावृतः।
ततो रामानुजः प्राज्ञः स्वाचार्यगृहमादरात्॥

---

வார்த்தையையும் கூறினாள் — "(ப்₃ருஹச்சரணமாகிற) தாழ்ந்த குலத்தில் உதி₃த்தவளே! தீய ஆசாரமுள்ளவளே! இப்போது உனது குடநீர் என் குடத்தில் விழுந்து விட்டதே. நல்ல ஆசாரமற்றவளே! உனது குலம், படிப்பு, ஆசாரம், பணம், வீடு முதலான செல்வங்கள் ஆகியவை எத்தனை தாழ்ந்தவை! எங்களுடைய (வடம) குலம், ஒழுக்கம், கல்வி, பணம், வீடு முதலான செல்வங்கள் ஆகியவை எத்தனை உயர்ந்தவை" என்று தொடங்கி, கொடிய வார்த்தையைப் பெரியநம்பி மனைவியைக் குறித்துச் சொல்லும் அவளைக் குறித்து, இவளும் கொடிய பதிலுரையைக் கூறினாள். இவ்வண்ணமாக அவ்விரு பெண்பிள்ளைகளுக்குமிடையே பெருஞ்சண்டை நடந்தது. பெரியநம்பியும், தன் மனைவியை மிகவும் கடிந்துகொண்டு, ராமாநுஜர் வீட்டிற்கு வந்து அச்செய்தியை அறிவதற்குமுன், குடும்பத்தோடு கூடியவராய் ஸ்ரீரங்க₃த்தை நோக்கிச் சென்றுவிட்டார்.

३२. मृदुस्वभावो विजहौ कोपं स करुणाकरः।
भार्याविसर्जनोपायं हृदि संचिन्तयंस्तदा॥
३३. लक्ष्मणार्यो महाप्राज्ञः कञ्चित्कालं समास्थितः।
कदाचित् वरदं देवं करिशैले जनार्दनम्॥
३४. सेवमानं लक्ष्मणार्यं दृष्ट्वा कश्चित् द्विजोत्तमः।
पीडितः क्षुत्पिपासाभ्यां भोजनं तमयाचत॥
३५. रामानुजस्तु तं विप्रं उवाच विनयान्वितः।
शीघ्रं मद्गृहमासाद्य मद्भार्यायै मयोदितम्॥
३६. अभिज्ञानं निवेद्याशु त्वं तस्यै द्विजपुङ्गव।
भुक्त्वा शीघ्रमिहागच्छ तया दत्तान्नमादरात्॥
३७. वरदोत्सवकालोऽयं गन्तुमद्य गृहं प्रति।
त्वया सह न युक्तं मे सेवां हित्वा जगत्पतेः॥

---

**அஸஹ்யாபசாரம்**

32*-46. பேரறிவாளரான ராமாநுஜர் (இத்தகைய) தன் மனைவியைக் கைவிடுவதற்கு உறுப்பான உபாயத்தை நெஞ்சில் ஆராய்ந்துகொண்டு சிறிதுகாலம் வாழ்ந்து வந்தார். அப்போது ஒருசமயம் அத்திகிரியில் அருளாளப் பெருமானை ஸேவித்துக்கொண்டிருக்கும் இளையாழ்வாரைக் கண்டு, அறிவாளியான ஒரு ப்₃ராஹ்மணோத்தமர், பசி, தா₃ஹம் மிகுந்திருக்கையாலே அவரிடம் உணவை யாசித்தார். ராமாநுஜரும் பணிவோடு அவ்வந்தணரிடம் "அந்தணர் தலைவரே! விரைவில் என்வீட்டை அடைந்து, என் மனைவியிடம் என்னால் சொல்லப்பட்ட அடையாளத்தைக் கூறி, அவளால் அளிக்கப்பட்ட உணவை அன்புடன் உண்டு, விரைவில் இங்கு வந்து சேருவீர். இப்போது வரத₃னுக்கு உத்ஸவகாலமாகையால், லோகநாத₂னை அவனுடைய ஸேவையைவிட்டு உம்மோடு வர என்னால் இயலாது. அந்தணரே! எம்பெருமானை ஆராதி₄ப்பதைக்

३८. विष्ण्वर्चनात् वरं लोके पूजनं चातिथेर्द्विज।
तथापि कारणं मेऽद्य विद्यते द्विजपुङ्गव॥
३९. इत्युक्तस्तेन वै विप्रो लक्ष्मणार्येण धीमता।
रामानुजगृहं गत्वा तस्य भार्यां महात्मनः॥
४०. उवाच वचनं धीमान् विनयेन स तां प्रति।
पतिव्रते महाभागे भर्ता ते भक्तवत्सलः॥
४१. वरदं सेवयन्नास्ते करिशैलेऽधुना हरिम्।
तेनाहं प्रेषितः साध्वि भोजनार्थमिहाधुना॥
४२. आगतोऽभवमार्ये! मे शीघ्रमन्नं प्रदीयताम्।
लक्ष்மणार्यस्य महिषी श्रुत्वा तत् द्विजभाषितम्॥
४३. अनादृत्य रुषा देवी प्रोवाच परुषं वचः।
अन्नं वा तण्डुलं वापि मद्गृहे नास्ति चाधुना॥

---

காட்டிலும், விருந்தாளிகளான அவனடியார்களை ஆராதி₄ப்பதே இவ்வுலகில் சிறந்தது. ப்₃ராஹ்மண ஶ்ரேஷ்ட₂ரே! ஆனாலும், எனக்கு (உம்மோடுகூட வராமலிருப்பதில், மனைவியின் தன்மையைக் கடைசிமுறையாக ஶோதி₄ப்பதாகிற) ஓர் காரணம் உள்ளது" என்றுரைத்தார். அறிவாளியான ராமாநுஜரால் இவ்வண்ணம் சொல்லப்பட்ட அறிவாளியான அவ்வந்தணர், மஹாத்மாவான அவரது வீட்டிற்குச் சென்று அவரது மனைவியிடம் "பதிவ்ரதையே! மஹாப₄ாக்₃யஶாலியே! ப₄க்தவத்ஸலரான உனது கணவர் இப்போது அத்திகிரியில் வரத₃ராஜப்பெருமாளை ஸேவித்துக்கொண்டிருக்கிறார். நல்லாளே! அவரால் அனுப்பப்பட்டு உணவுண்பதற்காக நான் இங்கு வந்திருக்கிறேன். நற்குடிப் பிறந்தவளே! எனக்கு விரைவில் அன்னமிடுவாயாக" என்று பணிவோடு கூறினார். ராமாநுஜருடைய மனைவி அவ்வந்தணர் கூறியதைக் கேட்டு அலட்சியப்படுத்தி "என் வீட்டில் இப்போது அன்னமுமில்லை; அரிசியுமில்லை;

४४. अत्र स्थातुं न युक्तं ते याहि याहि द्विजोत्तम।
येन त्वं प्रेषितो यातः तं याचय दयानिधिम्॥
४५. इत्युक्त्वा रोषताम्राक्षी दृढं बद्ध्वा करं तदा।
वदन्ती क्रूरवाक्यानि रुषा देवी समास्थिता॥
४६. विप्रो निराशः संप्रेत्य लक्ष्मणार्याय धीमते।
तथोवाच रुषा युक्तः क्षुत्पिपासार्दितस्तदा॥
४७. तदुपाकर्ण्य वृत्तान्तं लक्ष्मणार्यो विचार्य सः।
लेख्यं कृत्वा प्रयत्नेन भार्यायाः पितुरालयात्॥
४८. विवाहार्थं समुद्दिश्य प्रेषितं श्वशुरेण तु।
इति रामानुजः शीघ्रं हरिद्रां च फलानि च॥

---

ப்₃ராஹ்மணோத்தமரே; இங்கு நில்லாதீர்! போம், போம்! உம்மை அனுப்பிய த₃யாநிதி₄யிடமே சென்று கேளும்" என்று கோபத்தாலே கொடிய வார்த்தையைச் சொன்னாள். அப்போது இப்படிச் சொல்லிவிட்டு, கோபத்தாலே சிவந்த கண்களை உடையவளாய், கைத்தலத்தை உறுதியாக மடக்கிக்கொண்டு, கோபத்தாலே கொடிய வாக்கியங்களைச் சொல்லிக்கொண்டிருந்தாள். விருப்பம் நிறைவேறாத அந்தணரும், அப்போதே (கோயிலுக்குச்) சென்று, பசியாலும், தா₃ஹத்தாலும் வருத்தமுற்றவராய், அறிவாளியான ராமா நுஜரிடம் கோபத்தோடு நடந்ததைச் சொன்னார்.

### மனைவியைத் துறக்கும் உபாயம்

47-64. அச்செய்தியைக் கேட்டு, ("ப₄க₃வத்₃ ப₄ாக₃வத ஆசார்ய அஸஹ்யாபசாரங்களைப் புரிவதையே இயல் வாகக் கொண்ட இவள் ஏதாவது ஒருவகையில் முயன்று கைவிடத்தக்கவளே") என்று ஆராய்ந்து முடிவுகட்டிய அறிவாளியான ராமாநுஜர், மனைவியின் தந்தை வீட்டி லிருந்து, (அவளது தம்பியின்) விவாஹத்திற்காகத் தன் மாமனாரால் அனுப்பப்பட்டது போன்றதொரு கடிதத்தை

४९. विचित्रनूतनपटं समादाय प्रयत्नतः।
तं ब्राह्मणमुवाचेदं मतिमान् सान्त्वपूर्वकम्॥

५०. इदं लेख्यं हरिद्रादि सर्वमादाय सत्वरम्।
पुनर्वेश्म द्विजश्रेष्ठ गत्वा त्वत्पितुरालयात्॥

५१. आगतोऽभवमद्याहं तवानयनकारणात्।
मद्भार्यामेवमुक्त्वाऽथ त्वं लेख्यमिदमादरात्॥

५२. वाचयित्वा तत्समीपे तस्यै वस्त्रादि चार्पय।
तद्वाक्यश्रवणात्प्रीत्या त्वयि प्रीतिं करिष्यति॥

५३. अस्मिन्नर्थे न संदेहः गच्छाशु द्विजपुङ्गव।
रामानुजस्य तद्वाक्यं श्रुत्वा विप्रस्तथाऽकरोत्॥

५४. तदाकर्ण्य हि सा देवी हर्षेण सुसमाहिता।
पित्रा दत्तमिदं सर्वमिति वस्त्रादिकं तदा॥

---

முயன்று எழுதி, மஞ்சள், பழங்கள், விசித்திரமான புதுப் புடவை ஆகியவற்றை முயற்சி செய்து விரைவில் ஸம்பாதித்துக் கொடுத்து, அவரிடம் ஸமாதான வார்த்தைகளைச் சொல்லி, "அந்தணர் தலைவரே! இக்கடிதத்தையும், மஞ்சள் முதலான அனைத்தையும் எடுத்துக்கொண்டு, மறுபடியும் என் வீட்டிற்கு விரைந்துசென்று, 'உன்னுடைய தந்தை வீட்டிலிருந்து, உன்னை அழைத்துச் செல்வதற்காக நான் இப்போதே வந்திருக்கிறேன்' என்று என் மனைவியிடம் சொல்லி, அவளருகில் இக்கடிதத்தையும் வாசித்துக் காண்பித்து, அவளிடம் இப்புடவை முதலானவற்றைக் கொடும். இவ்வார்த்தையைக் கேட்ட உகப்பாலே உம்மிடம் (முன்போலல்லாமல்) ப்ரீதியைச் செய்வாள். இதில் ஐயமில்லை. அந்தண ஶ்ரேஷ்டரே! விரைவில் செல்லும்" என்று கூறினார். ராமானுஜருடைய அவ்வாக்யத்தைக் கேட்டு, அந்தணர் அவ்வண்ணமே செய்தார். அந்தணருடைய வார்த்தையைக் கேட்ட ராமானுஜ

௫௫. गृहीत्वाऽजानती मुग्धा भर्तुः कुटिलतां यथा ।
परिपप्रच्छ तं विप्रं पित्रोः कुशलमादरात् ॥

௫௬. तस्यास्तद्वचनं श्रुत्वा द्विजस्तां वाक्यमब्रवीत् ।
तेषामनामयं सुभ्रु येषां कुशलमीहसे ॥

௫௭. अनुजस्य विवाहं ते कर्तुकामः पिताऽधुना ।
अभवं प्रेषितस्तेन तवानयनकारणात् ॥

௫௮. तद्द्विजस्य वचः श्रुत्वा सा देवी ब्राह्मणोत्तमम् ।
इति तं पूजयामास सकाशात् पितुरागतम् ॥

௫௯. पाकं कृत्वा प्रयत्नेन भोजयामास तं द्विजम् ।
ततो रामानुजः शीघ्रमागत्य स्वनिकेतनम् ॥

௬௦. अजानन्निव तत्सर्वं वृत्तान्तं द्विजपुङ्गवः ।
निशम्य निपुणो हृष्टः तां भार्यामेवमब्रवीत् ।

---

பத்னியும், பேரானந்த₃ம் கொண்டவளாய், 'என் தந்தையால் கொடுக்கப்பட்டது இவையெல்லாம்' என்னும் அபி₄மானத்தோடு புடவை முதலானவற்றை எடுத்துக்கொண்டு. அறிவிலியாகையாலே கணவரின் வஞ்சனையை உள்ளபடி அறியாமல், அன்போடு தாய்தந்தையரைப்பற்றிய க்ஷேம ஸமாசாரங்களை அவ்வந்தணரிடம் கேட்டாள். அவளது அவ்வார்த்தையைக் கேட்டு, அவ்வந்தணரும் "அழகியவளே! நீ விரும்பிக் கேட்கும் அனைவரும் ஸுக₂மாகவேயிருக்கிறார்கள். உனது தந்தை, உன் தம்பியின் விவாஹத்தை இப்போது செய்யவிரும்புகிறார். உன்னை அழைத்து வருவதற்காக அவரால் அனுப்பப்பட்டேன்" என்று உரைத்தார். அவ்வந்தணருடைய வார்த்தையைக் கேட்டு, தந்தையிடமிருந்து வந்தவர் என்னும் காரணத்தாலே அவரை ஆராதி₄த்தாள். முயன்று தளிகை செய்து அவ்வந்தணர்தலைவருக்கு உணவிட்டாள். அதன் பிறகு, அந்தணர்தலைவரான ராமாநுஜர் தன் வீட்டிற்கு வந்து, யாதொன்றையும் அறியாதவர்போலே அச்செய்திகளனைத்தையும் கேட்டு, தந்திரத்

६१. अधुनैतेन विप्रेण गच्छ त्वं जनकालयम् ।
तदाभरणवस्त्रेषु समादाय यदिच्छसि ॥

६२. आगमिष्याम्यहं तत्र नीत्वा पञ्चदिनान्यनु ।
पतिवाक्यं तदाकर्ण्य साध्वी हर्षसमन्विता ॥

६३. देहबन्धुजनोपेता दासीदासजनावृता ।
निर्गत्य स्वगृहात्तूर्णं प्रययौ पितुरालयम् ॥

६४. तत्त्वोपायवशात्स लक्ष्मणगुरुर्नीत्वा स्वकीयां सतीं
तत्पित्रोर्गृहमञ्जसा तदनु तां चित्तेन नाचिन्तयत् ।
बुद्धिं चागमजाभिलाषविषयां तुर्याश्रमाप्तिक्रियां
नैपुण्येन चिकीर्षुरात्मनि परब्रह्माभिधे निश्चलाम् ॥

इति श्रीप्रपन्नामृते रामानुजचरित्रे भार्याविसर्जनोपायसिद्धिर्नाम
द्वादशोऽध्यायः ॥

---

தில் வல்லவராய், "உனது ஆப$_4$ரணம், வஸ்த்ரம் முதலிய வற்றில் வேண்டியதை எடுத்துக்கொண்டு, நீ இப்போதே இவ்வந்தணருடன் உன் தந்தை வீட்டிற்குப்போ. ஐந்து தினங்கள் கழிந்த பின்னர் நான் அங்கு வருகிறேன்" என்று உகப்புடன் கூறினர். அப்பாவியான அவளும், கணவருடைய அவ்வாக்யத்தைக் கேட்டு உகந்தவளாய், உறவினரோடும், வேலைக்காரர்களோடும் கூடியவளாய், தன் வீட்டிலிருந்து விரைவில் வெளிப்பட்டு, தந்தை வீட்டிற்குச் சென்றாள். நியாயமான உபாயத்தின்மூலம் தன் மனைவியை அவளது தாய்தந்தையர் வீட்டிற்கு உடனே அனுப்பிவிட்டு, ராமாநுஜர் — பரப்ர$_3$ஹ்மம் எனப்படும் ஸர்வாத்மாவிடம் ஶாஸ்த்ர ஜ்ஞாநத்தாலுண்டாயிருந்த காமத்தைப் பற்றி நிற்கும் அறிவை உறுதியாக்குவதற்கும், அதற்குறுப்பாக ஸந்யாஸாஶ்ரமஸ்வீகார க்ரியையை நன்றாகச் செய்வதற்கும் விரும்பியவராய், தன் பத்னியை மறுபடியும் நெஞ்சாலும் நினைக்கவில்லை.

**ஸ்ரீப்ரபந்நாம்ருதத்தில், ராமாநுஜ சரிதத்தில்**
**மனைவியைத் துறக்கும் உபாயம் ஸித்$_3$தி$_4$த்தலாகிற**
**பனிரண்டாம் அத்தியாயம் நிறைவுற்றது.**

## त्रयोदशोऽध्यायः

१. उपायेन तदा भार्यां नीत्वा तज्जनकालयम् ।
गृहधामादिकं सर्वं विहाय विगतस्पृहः ॥

२. तुर्याश्रमप्रवेशाय त्रिदण्डं कुण्डिकां तदा ।
सर्वोपकरणं धीमान् काषायवसनादिकम् ॥

३. संपाद्य तरसा शिष्यैः आनीय प्रयतः शुचिः ।
सन्निधौ देवराजस्य सन्निधाय जगत्पतेः ॥

४. रामानुजः प्रणम्याथ वरदं भक्तवत्सलम् ।
तेनानुज्ञापितो धीमान् अनन्तसरसस्तटे ॥

५. संस्मरन् यामुनार्यस्य चरणौ लोकपावनौ ।
लक्ष्मणार्यः प्रसन्नात्मा चक्रे संन्यासमादरात् ॥

---

## பதின்மூன்றாம் அத்தியாயம்

## ஸங்யாஸாஶ்ரமஸ்வீகாரம்

1-10. அப்போது அறிவாளியான ராமாநுஜர் — உபாயத்தினாலே மனைவியை அவளுடைய தந்தை வீட்டுக்கு அனுப்பிவிட்டு, வீடு, இருப்பிடம் முதலான எல்லாவற்றையும் விட்டு, ஆசையற்றவராய், ஸங்யாஸாஶ்ரமத்தை ஏற்பதற்காக, த்ரித$_3$ண்ட$_3$ம், குண்டி$_3$கை, காஷாய வஸ்த்ரம் முதலான எல்லா உபகரணங்களையும் ஶிஷ்யர்களைக் கொண்டு நன்கு ஸம்பாதி$_3$த்து வரவழைத்து, புலனடக்கமுள்ளவராய், பரிஶுத்$_3$த$_4$மானவராய், லோகநாத$_2$னை தே$_3$வப்பெருமாளுடைய ஸந்நிதி$_4$யில் அவற்றை வைத்து, ப$_4$க்தவத்ஸலனை வரத$_3$னை வணங்கி, அப்பெருமானது அநுமதிபெற்றவராய், துரீயாஶ்ரமஸ்வீகார முறையறிந்தவராய், அநந்த ஸரஸ்ஸின் கரையிலே, யாமுநாசார்யரின் லோகபாவநமான திருவடிகளை தியானித்துக் கொண்டு,

६. तदा देवगणास्सर्वे हर्षनिर्भरमानसाः ।
ववृषुः पुष्पवर्षाणि यतिराजस्य मूर्धनि ॥

७. देवदुन्दुभिनिर्घोषो महानासीत्तदा दिवि ।
ववौ वायुः सुखस्पर्शः सुप्रभोऽभूद्दिवाकरः ॥

८. दिशो विरेजुर्विमला जनास्सर्वे मुदं ययुः ।
तदा रामानुजं दृष्ट्वा यतिसाम्राज्यदीक्षितम् ॥

९. निराशः पृथिवीं हित्वा प्रपेदे काननं कलिः ।
काषायचीरसंवीतः सदण्डः सकमण्डलुः ॥

१०. ऊर्ध्वपुण्ड्रैर्द्वादशभिः परिशोभितविग्रहः ।
रामानुजस्तदा रेजे नारायणमुनिर्यथा ॥

११. देवराजस्तदा वाक्यं काञ्चीपूर्णमुवाच सः ।
काञ्चीपूर्ण समादाय मामकान् परिचारकान् ॥

---

தெளிந்த மனத்தினராய் ஆத$_3$ரத்தோடு ஸந்யாஸாஶ்ர மத்தை ஏற்றுக்கொண்டார். அப்போது, ஆநந்த$_3$ங்கொண்ட நெஞ்சினரான எல்லா தே$_3$வக$_3$ணங்களும் யதிராஜருடைய தலையில் பூமாரி பொழிந்தனர். தேவலோகத்தில் தே$_3$வ து$_3$ந்து$_3$பி$_4$களின் பெருமுழக்கம் அப்போது ஏற்பட்டது. காற்று இனியதாய் வீசிற்று; ஸூர்யன் சிறந்த ஒளியுடையவனானான். தி$_3$க்குகள் அழுக்கற்றுப் பிரகாஶித்தன. எல்லா ஜனங்களும் இன்புற்றனர். யதிஸாம்ராஜ்யத்தில் அபி$_4$ஷேகம் செய்யப்பெற்ற ராமாநுஜரைக்கண்டு, ஆசை அழியப்பெற்று நாட்டை விட்டுக் காட்டுக்குச் சென்றான் கலிபுருஷன். காஷாயவஸ்த்ரம் உடுத்தவராய், த்ரித$_3$ண்ட$_3$ கமண்ட$_3$லங்களை ஏந்தியவராய், பன்னிரு திருமண்காப்பு களாலே அலங்கரிக்கப்பெற்ற திருமேனியை உடையவரான ராமாநுஜர் அப்போது (ப$_3$த$_3$ரியில்) நாராயண முனிவரைப் போலே விளங்கினார்.

१२. ध्वजच्छत्रादिकान् सर्वान् वैष्णवांश्च द्विजोत्तमान् ।
शिबिकायां प्रतिष्ठाप्य शठकोपं च मामकम् ॥

१३. तत्र गत्वा महात्मानं तं रामानुजमादरात् ।
इहानयस्व भक्तं तं द्रष्टुमिच्छामि सत्वरम् ॥

१४. काञ्चीपूर्णः संहृष्टः तद्वाक्यश्रवणात्तदा ।
वरदोक्तप्रकारेण सर्वैस्तैः परिचारकैः ॥

१५. रामानुजं प्रति ययौ सहसा स हरिप्रियः ।
तुर्याश्रमस्य कृत्यानि कृत्वा सर्वाणि शास्त्रतः ॥

१६. अनेकैर्ब्राह्मणैस्साकं वेदवेदान्तपारगैः ।
रामानुजार्यस्सहसा वरदं सेवितुं ययौ ॥

---

### வரத₃ராஜனும் யதிராஜனும்

11-26. அப்போது, தேவப்பெருமாள் திருக்கச்சிநம்பியைப் பார்த்து "காஞ்சீபூர்ணரே! எனது பரிசாரகர்களையும், அந்தணர் தலைவரான வைஷ்ணவர்களையும் அழைத்துக் கொண்டு, கொடி, குடை முதலானவற்றையும் எடுத்துக் கொண்டு, எனது ஶடா₂ரியையும் பல்லக்கில் எழுந்தருளப் பண்ணுவித்து, ராமாநுஜர் இருக்குமிடம் சென்று, எனது ப₄க்தராய், மஹாத்மாவான அவரை அன்போடு இங்கு அழைத்துவருவீராக. அவரை விரைவில் காணவிரும்பு கிறேன்." என்று அருளினர். வரத₃னுக்கு இனியவரான திருக்கச்சிநம்பியும் அவ்வாக்யத்தைக் கேட்டு மிகவும் ஆநந்த₃ மடைந்து, வரத₃ன் நியமித்தபடி எல்லாப் பரிசாரகர் களோடும் அப்போது விரைவில் ராமாநுஜரிருக்குமிடம் நோக்கிச் சென்றார். ராமாநுஜரும், ஸந்யாஸாஶ்ரம ஸ்வீகார முறைகளனைத்தையும ஶாஸ்த்ர விதி₄ப்படி செய்து, வேத₃ வேதா₃ந்தங்களைக் கரைகண்ட அநேக ப்₃ராஹ்மணர்களோடு கூட விரைவில் வரத₃னை ஸேவிக்க வந்தார். அப்போது

१७. तावन्योन्यं तदा दृष्ट्वा काञ्चीपूर्णयतीश्वरौ।
हर्षमापतुरन्योन्यं यथार्हं कृतसत्क्रियौ॥

१८. काञ्चीपूर्णस्ततस्तस्मै यतिराजाय धीमते।
तत्तीर्थं शठकोपादीन् दापयित्वा तदर्चकैः॥

१९. वरदोक्तप्रकारेण निधाय परिचारकान्।
व्यादिदेश जनान् सर्वान् कैङ्कर्यार्थं महात्मनः॥

२०. ब्राह्मणाः स्वस्तिपठनं चक्रुर्हर्षसमन्विताः।
भेरिकाहलिवाद्यादीन् वादयन्तो जनास्तदा॥

२१. रामानुजस्य पुरतो ययुः शीघ्रं मृदङ्गकाः।
पुरतः शठकोपं तु कृत्वा रामानुजस्तदा॥

२२. करिशैलाधिनाथं च काञ्चीपूर्णेन सङ्गतः।
ब्रह्मज्ञैर्ब्राह्मणैस्साकं वरदस्य जगत्पतेः॥

---

திருக்கச்சிநம்பியும், யதிகள் தலைவரும் ஒருவரையொருவர் கண்டு, இன்புற்றவர்களாய், முறைப்படி ஒருவர்க்கொருவர் ஸத்காரம் செய்துகொண்டனர். அப்போது திருக்கச்சி நம்பியும் தேவப்பெருமாளது தீர்த்தமும் ஶடாரி முதலானவற்றை அவரது அர்ச்சகர்களைக் கொண்டு அறிவாளியான ராமாநுஜருக்கு ப்ரஸாதிக்கச் செய்து, வரதன் நியமனப்படி அவனது பரிசாரக ஜனங்கள் அனைவரையும மஹாத்மாவான அவருக்குக் கைங்கர்யத்தைச் செய்யும்படி நியமித்தார். அந்தணர்கள் பேரானந்தத்தோடு பல்லாண்டு பாடினார்கள். ஜனங்கள் அனைவரும் அப்போது பேரி, காஹளி வாத்யங்கள் முதலானவற்றையும், மிருதங்கங்களையும் வாசித்துக் கொண்டு ராமாநுஜருக்கு முன்னால் விரைவில் சென்றனர். அப்போது ஶடாரியை முன்னிட்டுக் கொண்டு, திருக்கச்சிநம்பியோடு கூட அத்திகிரியப்பனை அடைந்தார் ராமாநுஜர். வேதமறிந்த அந்தணர்களோடு

२३. ववन्दे लक्ष्मणाचार्यश्चरणौ ब्रह्मणार्चितौ।
रामानुजं देवराजस्तं दृष्ट्वा यतिशेखरम्॥

२४. हर्षेण महता युक्तस्तां चिन्तां विजहौ तदा।
रामानुजाय विप्रेभ्यस्सर्वेभ्यः स तदा हरिः॥

२५. स्वतीर्थं शठकोपादीन् दापयित्वार्चकैर्मुदा।
प्रत्येकं लक्ष्मणार्याय सन्मानं सुमहत्तरम्॥

२६. स भूयः कारयित्वाऽऽशु प्रीत्या तस्मै महात्मने।
नामधेयं तस्य चक्रे यतिराज इति प्रभुः॥

२७. काञ्चीपूर्णमुवाचेदं वरदो भक्तवत्सलः।
यतीन्द्राय मठं सम्यक् दर्शयित्वा मनोहरम्॥

---

கூட லோகநாத₂னை வரத₃னுடைய சதுர்முக₂ பூஜிதமான திருவடிகளை வணங்கினார் ராமாநுஜர். யதிகள் தலைவரான அவரைக்கண்டு, பேரானந்த₃ம் கொண்ட ப்ரபு₄வான **வரத₃ராஜன்,** அப்போதே சேதந ரக்ஷண சிந்தையைக் கைவிட்டான். அப்போது அப்பெருமான் ராமாநுஜர்க்கும், எல்லா அந்தணர்க்கும் தனித்தனியாகத் தனது தீர்த்த₂ ஶட₂ாரிகளை அர்ச்சகர்களைக் கொண்டு அன்போடு ப்ர ஸாதி₃க்கச் செய்து, மறுபடியும் ராமாநுஜர்க்கு மிகப்பெரிய ஸன்மானங்களைச் செய்வித்து, உடனே அன்புடன் அந்த மஹாத்மாவுக்கு "**யதிராஜன்**" என்னும் திருநாமத்தைச் சூட்டினான்.

### மட₂ஸ்த₂ாபநம்

27-36. ப₄க்தவத்ஸலனை வரத₃ன் திருக்கச்சிநம்பியைப் பார்த்து "யதிராஜருக்கு அழகியதான மட₂த்தைக் காண்பித்து, தவத்தையே செல்வமாகக் கொண்ட யதிராஜரை உடனே அம்மட₂த்தில் எழுந்தருளச் செய்வீர்" என்று அருளினான். லோகநாத₂னுடைய அவ்வார்த்தை

२८. तत्र त्वं विनिधेह्याशु यतिराजं तपोधनम्।
काञ्चीपूर्णस्तदाकर्ण्य तद्वाक्यं जगतीपतेः॥

२९. यतिराजं समादाय तैस्साकं परिचारकैः।
मठे निवेशयामास वरदानुज्ञया तदा॥

३०. रामानुजोऽपि सहसा मठं प्राप्य यतीश्वरः।
समागतजनान् सर्वान् यथोचितमपूजयत्॥

३१. तदा पौरजनास्सर्वे संसेव्य यतिशेखरम्।
अयुर्निकेतनान्यार्याः स्वानि हृष्टा द्विजोत्तमाः॥

३२. अनुज्ञातस्तदा तेन काञ्चीपूर्णो महात्मना।
देवराजाय वृत्तान्तं तद्विज्ञाप्य महात्मने॥

३३. तत्सन्निधौ यथापूर्वं निधाय परिचारकान्।
संसेव्य चरणौ तस्य स्वमठं प्रविवेश ह॥

---

யைக் கேட்டு, திருக்கச்சிநம்பியும், வரத3னுடைய பரிசாரகர்களோடு கூட யதிராஜரை அழைத்துச் சென்று, வரத3னுடைய நியமனத்தின்படி அப்போதே அவரை மட2த்தில் எழுந்தருளச்செய்தார். யதிகள் தலைவரான ராமாநுஜரும் மட2த்தை அடைந்தவுடன், அங்கு கூடியிருந்த அனைவரையும் அவரவர்க்குரிய முறையில் ஆராதி4த்தார். அப்போது அந்நக3ரவாஸிகளும், அந்தணர் தலைவர்களும் யதிராஜரை நன்கு ஸேவித்து உகந்து, தத்தம் வீடுகளுக்குச் சென்றனர். மஹாபுருஷரான அந்த யதிராஜரால் விடை கொடுக்கப் பெற்ற திருக்கச்சிநம்பியும், பரமாத்மாவான தே3வப்பெருமாளுக்கு அச்செய்தியை விண்ணப்பித்து, பரிசாரகர்களை அவரது ஸந்நிதி4யிலேயே முன்போலே அமர்த்தி, எம்பெருமானுடைய திருவடிகளை நன்கு வணங்கி, தமது மட2த்திற்குச் சென்றார். அதற்குப்பின் பா3ல ஸூர்யனை ஒத்த அந்த யதிராஜர், எல்லா ஜனங்களையும் முழுத்

३४. ततो यतीन्द्रस्तरुणार्कसंनिभः
सर्वान् जनान् पूर्णकटाक्षवीक्षणैः।
स्वपादपद्माभिमुखान् निरन्तरं
कुर्वन् स तस्थौ वरदार्पिते मठे॥

३५. एवं स रामानुजवैष्णवोत्तमः
संत्यज्य भार्यां प्रतिकूलधर्मिणीम्।
अनुज्ञयाऽनन्तसरस्तटे हरेः
तुर्याश्रमं स प्रतिपेदिवांस्तदा॥

३६. संसेव्य विष्णुं करिशैलनाथं
हर्षेण तेनार्पितनामधेयः।
यतीश्वरस्तत्र समास्थितोऽभूत्
काञ्चीपुरे वेदविदां वरिष्ठः॥

३७. इदं चरित्रं भवरोगनाशनं
रामानुजार्यस्य महात्मनः शुभम्।
शृण्वन्ति भक्त्या सततं नरोत्तमाः
ते यान्ति लोकं मधुवैरिणो हरेः॥

---

திருக்கண்ணோக்குகளாலே தமது திருவடித்தாமரையில் எப்போதும் ஈடுபடுபவர்களாகச் செய்துகொண்டு வரத₃னளித்த மட₂த்தில் வாழ்ந்துவந்தார். இவ்வண்ணமாக வைஷ்ணவோத்தமரான அவ்விராமாநுஜர், ஏறுமாறாக இருந்த மனைவியைக் கைவிட்டு, வரத₃னுடைய அநுமதியோடு அநந்த ஸரஸ்ஸின் கரையிலே ஸந்யாஸாஶ்ரமத்தை அப்போது ஏற்றுக்கொண்டார். வேத₃மறிந்தவர்களில் தலைவரான யதிராஜர் அத்திகிரியப்பனை அருளாளனை நன்கு ஸேவித்து, அவரால் கொடுக்கப்பெற்ற 'யதிராஜர்' எனும் பட்டப் பெயரை உடையவராய் காஞ்சீபுரத்தில் வாழ்ந்துவந்தார்.

३८. ज्ञानप्रदं पापहरं पवित्रं
श्रोतुः श्रवःप्रीतिकरं विचित्रम्।
वैकुण्ठलोकप्रदमाशु पुंसां
इदं चरित्रं यतिशेखरस्य॥

३९. रामानुजाय नाथाय यतीन्द्राय महात्मने।
कृपामात्रप्रसन्नाय लक्ष्मणार्याय ते नमः॥

इति श्रीप्रपन्नामृते रामानुजचरित्रे रामानुजार्यस्य तुर्याश्रमप्रवेशो नाम त्रयोदशोऽध्यायः॥

---

ப₂லஶ்ருதி

37-39. மஹாத்மாவான ராமாநுஜருடையதாய், ஸம்ஸார நோயை அழிப்பதாய், மங்க₃ளமானதான இந்தச் சரித்திரத்தை ப₄க்தியோடு எப்போதும் கேட்பவர்கள் மது₄ஸூத₃னனை எம்பெருமானுடைய உலகத்தை அடைவார்கள். யதிஶேக₂ரருடைய இந்தச் சரித்திரம் சொல்லுபவனுக்கும், கேட்பவனுக்கும் ஞானத்தை அளிக்கும்; பாபங்களைப் போக்கும்; பரிஶுத்₃த₄ப்படுத்தும்; கேட்பவனுடைய காதுக்கு இனியதாயிருக்கும்; ஆஶ்சர்யமாயிருக்கும்; விரைவிலேயே அனைவர்க்கும் வைகுண்ட₂லோகத்தை அளிப்பதாயிருக்கும். க்ருபாமாத்ர ப்ரஸந்நாசார்யராய், மஹாபுருஷராய், (ப்ரபந்ந ஜனங்களுக்குத்) தலைவராய், யதிராஜரான ராமாநுஜரென்னும் இளையாழ்வாரான தேவரீருக்கு நமஸ்காரம்.

**ஸ்ரீப்ரபந்நாம்ருதத்தில், ராமாநுஜ சரிதத்தில்**
**ராமாநுஜர் ஸந்யாஸாஶ்ரமத்தை ஏற்றுக்கொள்வதாகிற**
**பதின்மூன்றும் அத்தியாயம் நிறைவுற்றது.**

चतुर्दशोऽध्यायः

१. काञ्चीपुर्याः पूर्वभागे कश्चित्पुरुषमङ्गलः।
अग्रहारो महानासीत् विद्वज्जनसमावृतः॥

२. तत्र वेदविदां श्रेष्ठः सर्वधर्मपरायणः।
अनन्तदीक्षित इति द्विजवर्यो महानभूत्॥

३. स सर्वगुणसम्पन्नां सर्वलक्षणशोभिताम्।
उपयेमे यथाशास्त्रं कन्यां केशवयज्वनः॥

४. भरतांशः सुतो जज्ञे पत्न्यां पुत्रो विचक्षणः।
श्रीमान् दाशरथिर्नाम विख्यातः सकलावनौ॥

५. वेदवेदाङ्गसम्पन्नो हरिभक्तिपरायणः।
स्वमातुलं महात्मानं तुर्याश्रमसमागतम्॥

---

## பதினான்காம் அத்தியாயம்

## கூரேசவிஜயம்.

### த$_3$ாஶரதி$_2$ ஸமாஶ்ரயணம்

1-6. காஞ்சீபுரத்திற்குக் கிழக்கே, வித்$_3$வான்கள் நிறைந்த புருஷமங்கலம் என்னும் பெரிய அக்ரஹாரம் இருந்தது. அங்கு வேத$_3$மறிந்தவர்களில் தலைவராய், எல்லா த$_4$ர்மங்களையும் அனுஷ்டி$_2$ப்பவராய், அந்தணர் தலைவரான அநந்த தீ$_3$க்ஷிதர் என்னும் பெரியவர் இருந்தார். எல்லா நற்குணங்களும் பொருந்தியவளும், எல்லா லக்ஷணங்களாலும் அலங்கரிக்கப் பெற்றவளுமான கேஶவ ஸோமயாஜியாரின் குமாரியை ஶாஸ்த்ர முறைப்படி மணந்தார் அவர். அம்மனைவியிடம் அவருக்கு அறிவாளியாய், எல்லாவுலகிலும் "த$_3$ாஶரதி$_2$" (முதலியாண்டான்) என்று பெயர் பெற்றவராய், வேத$_3$ வேத$_3$ாங்க$_3$ங்களைக் கற்ற

६. ज्ञात्वा स तु महाप्राज्ञः काञ्चीमागत्य सत्वरम्।
शिश्रिये लक्ष्मणाचार्यं प्रथमं प्रेमपूर्वकम्॥

७. ततो रामांशसंभूतः कूरनाथ इति श्रुतः।
अनन्तभट्टतनयः सर्वशास्त्रार्थकोविदः॥

८. हारितान्वयसंभूतः सदा हरिपरायणः।
अशिश्रियत्तदा सोऽपि यतिराजं गुणाश्रयम्॥

९. लक्ष्मणार्यस्तदा ताभ्यां शिष्याभ्यां यतिपुङ्गवः।
ग्रन्थानुपदिशन् सम्यक् काञ्च्यां तस्थौ महायशाः॥

१०. कदाचिद्यादवस्याथ जननी यतिशेखरम्।
वदन्तं वैष्णवग्रन्थान् शिष्येभ्यः प्रीतिपूर्वकम्॥

---

வராய், ஹரி ப₄க்திப் பெருஞ் செல்வமுடைய ப₄ரதாம்ஶ ரான பிள்ளை பிறந்திருந்தார். தனது மாமாவான மஹாத்மா ராமானுஜர் ஸந்யாஸாஶ்ரமத்தை ஏற்றுக் கொண்டதை அறிந்த அப்பேரறிவாளர் காஞ்சியை விரைந்தடைந்து, அன்போடு முதலில் ராமானுஜரை ஆஶ்ரயித்தார்.

### கூரேஶஸமாஶ்ரயணம்

7-9. ராமாம்ஶராக அவதரித்தவராய், "கூரநாத₂ர்" (கூரத்தாழ்வான்) என்று பெயர் பெற்றவராய், அநந்த ப₄ட்டரின் குமாரராய் எல்லா ஶாஸ்த்ரார்த்த₂ங்களிலும் வல்லவராய், ஹாரீத கோ₃த்ரத்தில் உதி₃த்தவராய், எப் போதும் ஹரியையே பரமப்ராப்யப்ராபகங்களாகக் கொண்ட வரான மஹாபுருஷர், கு₃ணநிதி₄யான யதிராஜரை முதலி யாண்டானுக்கு அடுத்தபடியாக ஆஶ்ரயித்தார். பெரும் புகழாளரான ராமானுஜரெனும் யதிராஜரும் அவ்விரு ஶிஷ்யர்களுக்கும் கிரந்தங்களை நன்கு உபதே₃ஶித்துக் கொண்டு காஞ்சியில் எழுந்தருளியிருந்தார்.

११. ऊर्ध्वपुण्ड्रधरं धीरं काषायाम्बरशोभितम्।
त्रिदण्डधारिणं प्राज्ञं नारायणमुनिं यथा॥

१२. स्वतेजसा भासमानं प्रोद्यन्तं भास्करं यथा।
दृष्ट्वा भक्तिसमायुक्ता नमश्चक्रे यतीश्वरम्॥

१३. ततस्सा मठमागत्य यादवं वाक्यमब्रवीत्।
वत्स यादव मद्वाक्यं शृणु भक्तिसमन्वितः॥

१४. रामानुजं महात्मानं नावमंस्व च पूर्ववत्।
तं समाश्रय तत्त्वज्ञं वैरं हित्वा सुभक्तितः॥

१५. धर्मसंस्थापनार्थाय हरिणा प्रेषितोऽधुना।
वैकुण्ठादागतोऽनन्तो जातः केशवयज्वनः॥

---

### யாத$_3$வர்க்குத் தாய் உண்மையுணர்த்தல்

10-*20. ஒரு நாள் யதிராஜர் சிஷ்யர்களுக்கு அன்போடு வைஷ்ணவ க்$_3$ரந்த$_2$ங்களை உபதே$_3$ஶித்துக்கொண்டிருக்கும்போது, ஊர்த்$_4$வபுண்ட்$_3$ரங்களை அணிந்தவராய், அறிவாளிகளில் சிறந்தவராய், காஷாய வஸ்திரத்தால் அலங்கரிக்கப் பெற்றவராய், திரித$_3$ண்ட$_3$த்தை த$_4$ரித்தவராய், பேரறிவாளராய், நாராயண முனியைப்போல் விளங்குமவராய், ஸூர்யனைப்போல் தன் தேஜஸ்ஸால் பிரகாஶிப்பவரான அந்த யதிகட்கிறைவரைக் கண்டு யாத$_3$வரின் தாய் ப$_4$க்தியோடு கூடியவளாய் வணங்கினாள். (பிள்ளையின்) மட$_2$த்திற்கு வந்து, அவள் யாத$_3$வரைக்குறித்து, "குழந்தாய் யாத$_3$வா! ப$_4$க்தியோடு கூட என் வார்த்தையைக் கேள். பெரியவரான ராமானுஜரை முன்போல் அவமதிக்காதே; விரோத$_4$த்தை விட்டு, தத்துவமறிந்த அவரை ப$_4$க்தியோடு ஆஶ்ரயிப்பாய்; பிள்ளாய்! த$_4$ர்மத்தை நிலைநிறுத்துவதற்காக ஹரியினால் அனுப்பப்பட்ட ஆதி$_3$ஶேஷனே வைகுண்ட$_2$த்திலிருந்து வந்து கேஶவஸோம

१६. रामानुज इति ख्यातः पुत्रः सर्वहिते रतः।
काञ्चीपूर्णादयः सर्वे ज्ञानिनस्तं यतीश्वरम्॥

१७. एवं विदुर्महात्मानं पुत्र लक्ष्मणदेशिकम्।
विष्णुभक्तिविहीनस्य विप्रस्य विदुषां वर॥

१८. विद्याचारादिकं व्यर्थं शवालङ्करणं यथा।
विष्णुरेव जगत्कर्ता सृष्टिस्थित्यन्तकारकः॥

१९. तदंशभूता विप्रेन्द्र ब्रह्मरुद्रादिदेवताः।
पराशरादिमुनयः सर्वे तत्त्वार्थवेदिनः॥

२०. नारायणं समाश्रित्य ययुर्मुक्तिं जगत्पतिम्।
मातृवाक्यं तदाकर्ण्य तथ्यं मत्वा स यादवः॥

---

யாஜியின் பிள்ளையாக இப்போது பிறந்து, ராமானுஜர் என்று பெயர்பெற்று, அனைவர்க்கும் ஹிதம் செய்வதில் ஈடுபட்டிருக்கிறார்; குழந்தாய்! மஹாத்மாவான ராமானுஜரெனும் யதிராஜரைத் திருக்கச்சி நம்பி முதலான ஞானிகளெல்லாம் இவ்வண்ணமே அறிகிறார்கள். அறிவாளிகளில் சிறந்தவனே! விஷ்ணு பக்தியற்ற அந்தணனுடைய கல்வி ஒழுக்கம் முதலான சிறப்புகளெல்லாம் பிணத்துக்குச் செய்த அலங்காரம்போலே வீணானதாகும். விஷ்ணுவே எல்லா உலகையும் படைத்து, அளித்து, அழிக்கும் ஜகத் காரணமாவான். அந்தணர் தலைவனே! பிரமன், உருத்திரன் முதலான தேவர்களெல்லாம் அவனுடைய அம்ஶமாயிருப்பவர்கள். தத்துவப் பொருளறிந்த பராஶரர் முதலான எல்லா முனிவர்களும் லோகநாதனான நாராயணனை ஆஶ்ரயித்தே முக்தியடைந்தனர்'' என்று கூறினாள்.

### யாதவரின் ஸந்தேஹம்

20*-*25. தாயினுடைய அந்த வாக்கியத்தைக் கேட்ட யாதவர், அதை உண்மையென்றே எண்ணி, சிறிது நேரம்

२१. ध्यात्वा मुहूर्तं जननीमुवाच वचनं तदा।
त्वयोदितमिदं मातः सत्यं वाक्यं हितं मम॥
२२. तदर्थाय मयावश्यं कर्तव्यं भूप्रदक्षिणम्।
अधुना जरयाऽऽक्रान्तं शरीरं मामकं प्रसूः॥
२३. ममाशक्यमिदं तस्मात् इदानीं भूप्रदक्षिणम्।
ततस्तद्वाक्यमाकर्ण्य सा यादवमभाषत॥
२४. प्रदक्षिणं कुरुष्वाद्य यतिराजममानुषम्।
विचारं मा कुरुष्वाद्य तस्य तुल्यं फलं द्विज॥
२५. तत्कार्ये यादवः प्राप मातृवाक्यादनिश्चयम्।
ततः कदाचिद्विप्रेन्द्रः संशयापन्नमानसः॥

---

ஆலோசித்து, தாயைக் குறித்துப் பின்வருமாறு கூறினார். "தாயே! நீ சொன்ன வாக்யம் உண்மையானது; எனக்கு ஹிதமானதுமாகும். ஆனால், (நான் ஏற்றுக்கொண்டிருக்கும் பாஷண்டி$_3$ வேஷத்திற்கு) ப்ராயஶ்சித்தமாக நான் பூ$_4$மிப்ரத$_3$க்ஷிணத்தை அவஶ்யம் செய்யவேண்டும். அம்மா! என் உடலோ கிழத்தனத்தால் நலிந்துள்ளது. ஆகையால் என்னால் இப்போது பூ$_4$மிப்ரத$_3$க்ஷிணம் செய்ய முடியாதே" என்று. அவ்வார்த்தையைக் கேட்ட தாய் யாத$_3$வரைக் குறித்து, "அந்தணனே! அதிமாநுஷரான யதிராஜரை இன்றே ப்ரத$_3$க்ஷிணம் செய். இதில் விசாரம் செய்யாதே. (ஆதி$_3$ஶேஷனின் அவதாரமான) அவரை ப்ரத$_3$க்ஷிணம் செய்வது (அவ்வாதி$_3$ஶேஷனால் தாங்கப்படும்) பூ$_4$மியை ப்ரத$_3$க்ஷிணம் செய்வதற்கு ஸமானமேயாகும்" என்று கூறினாள். தாயின் வாக்யத்தைக் கேட்டபின்பும் அதைச் செய்வதில் யாத$_3$வர் உறுதியற்றவராகவே இருந்தார்.

### யாத$_3$வரின் கேள்வி

25*-*28. பிறகு ஒரு நாள் ஐயப்பாடுடைய நெஞ்சினரான அவ்வந்தணர்தலைவரான யாத$_3$வர் ராமானுஜரின்

२६. मठमागत्य तरसा दृष्ट्वा लक्ष्मणदेशिकम् ।
अत्रोचद्यादवो वाक्यं तं यतीश्वरमर्थदम् ॥

२७. शङ्खचक्रोर्ध्वपुण्ड्रादिधारणं च त्वया कृतम् ।
ब्रह्मणो निर्गुणस्यापि गुणित्वं प्रतिपादितम् ॥

२८. नास्त्यत्र मानं शास्त्रेषु विद्यते चेद्वदाधुना ।
यतिराजस्तदा वाक्यं श्रुत्वा यादवभाषितम् ॥

२९. तस्य संभाषणे शिष्यं कूरेशं व्यादिदेश ह ।
अनुज्ञातस्तदा तेन देशिकेन महात्मना ॥

३०. कूरेशो यादवं वाक्यं जगाद विदुषां वरम् ।
श्रूयताममिधास्यामि शङ्खचक्रादिधारणे ॥

---

மட₂த்தை விரைவில் அடைந்து, ராமாநுஜரைக் கண்டு, அந்த யதிராஜரிடம் பொருள் நிறைந்த கேள்வி ஒன்றைக் கேட்டார்—"ஶங்க₂ம்: சக்ரம், ஊர்த்₄வபுண்ட்₃ரம் முதலான வற்றை நீர் த₄ரிக்கிறீர். கு₃ணமற்ற ப்₃ரஹ்மத்தை கு₃ண முள்ளதாகக் கூறுகின்றீர். இவ்விஷயங்களில் ஶாஸ்த்ரங் களில் ப்ரமாணமில்லை; உள்ளதானால் இப்போதே சொல் லும்" என்று.

**கூரேசரின் பதில்—தொடக்கம்**

28*-31. யாத₃வர் கூறிய அவ்வாக்யத்தைக்கேட்டு, யதிராஜர் அவருக்கு பதில் உரைக்கும்படி கூரத்தாழ்வானை நியமித்தார். மஹாத்மாவான அவ்வாசார்யரால் அனுமதிக் கப்பெற்ற கூரத்தாழ்வான், வித்₃வான்களில் சிறந்தவரான யாத₃வரைக் குறித்து, "அந்தணர் தலைவரே! ஶங்க₂ம், சக்ரம், ஊர்த்₄வபுண்ட்₃ரம் ஆகியவற்றை த₄ரிக்கவேண்டும் என்னும் விஷயத்திலும், ப்₃ரஹ்மம் கு₃ணங்களோடு கூடிய தாகவே உள்ளது என்னும் விஷயத்திலும், விஷ்ணுவே அனைவரிலும் உயர்ந்தவனான அந்த ஸகு₃ணப்₃ரஹ்மம் என்

३१. सगुणब्रह्मसद्भावे विष्णुसर्वोत्तमत्वके।
श्रुतिस्मृतिपुराणेषु प्रमाणानि द्विजोत्तम ॥
श्रुतिः—प्रते विष्णो अब्जचक्रे पवित्रे
जन्मांभोधिं तर्तवे चर्षणीन्द्राः।
मूले बाह्वोर्दधतेऽन्ये पुराणाः
लिङ्गान्यङ्गे तावकान्यर्पयन्ति ॥

साग्निपवित्रमित्यग्निः, अग्निर्वै सहस्रारः। सहस्रारो नेमिः। नेमिना तप्ततनुर्ब्राह्मणः। सायुज्यं सलोकतामाप्नोति। देवासो ये विधृतेन

---

னும் விஷயத்திலும் ஶ்ருதி ஸ்ம்ருதி புராணங்களில் உள்ள ப்ரமாண வாக்யங்களைக் கூறுகிறேன் கேளீர்" என்று உரைத்து ப்ரமாணங்களை உபந்யஸிக்கத் தொடங்கினார்.

### ஶங்க சக்ரத₄ாரணவிதி₄

31*-41. I இவ்விஷயத்தில் ஶ்ருதிப்ரமாணங்கள் பின்வருமாறு :—

(1) ருக்₃வேத₃ம் பா₃ஷ்கலஸம்ஹிதை — விஷ்ணுவே! ஞானிகளுள் தலைசிறந்தவர்கள் உன்னுடைய ஶங்க₂ சக்ரங்களைப் பிறவிக்கடலைத் தாண்டுவதற்காக பா₃ஹுமூலத்தில் த₄ரிக்கிறார்கள். பழமையானவர்களான மற்றும் சிலர் (பா₃ஹுமூலங்கள், தலை, நெற்றி, ஹ்ருத₃யம் ஆகிய) அவயவங்களில், உன்னுடைய பஞ்சாயுத₄ங்களாகிற சிங்நங்களை த₄ரிக்கிறார்கள்.

(2) ஸுத₃ர்ஶனோபநிஷத்து — அக்₃நியில் காய்ச்சப் பெற்ற சக்ரம் 'அக்₃நி' எனப்படுகிறது. அவ்வக்₃னி ஆயிரம் அரங்களையுடையது. அதுவே நேமி எனும் சக்ரம். அச்சக்ரத்தால் அடையாளமிடப்பெற்ற ஶரீரத்தையுடைய ப்₃ராஹ்மணன் (விஷ்ணு)ஸாயுஜ்யத்தையும், ஸாலோக்யத்தையும் அடைகிறான். ஸுத₃ர்ஶனத்தை த₄ரித்த

बाहुना सुदर्शनेन प्रयतमानसा लोकसृष्टिं वितन्वन्ति। ब्राह्मणास्तद्वदन्ति–
अग्निना वै तप्तं द्विभुजे धार्यं। ऊर्ध्वपुण्ड्रमालिखेत्। तस्मात् द्विरेखं
भवति। न पुनरागमनमेति ब्रह्मणः सायुज्यं सलोकतामाप्नोति ॥

चक्रं बिभर्ति वपुषा प्रतप्तं बलं देवानाममितस्य विष्णोः।
स एति नाकं दुरिता विधूय प्रयान्ति यद्यतयो वीतरागाः॥

आथर्वणे—**एभिर्वयमुरुक्रमस्य चिह्नैरङ्किता लोके सुभगा भवेम।**
**तद्विष्णोः परमं पदं येऽधिगच्छन्ति लांछिताः॥**

---

தோளாலே பரிஶுத்3த4மான நெஞ்சையுடைய தே3வர்கள் லோகஸ்ருஷ்டியைச் செய்கின்றனர். அதனால் வேத3மறிந்தவர்கள் கூறுகிறார்கள்:—நெருப்பால் காய்ச்சப்பெற்ற ஶங்க2 சக்ரங்கள் இரு தோள்களிலும் த4ரிக்கத்தக்கவை. ஊர்த்4வ புண்ட்3ரத்தையும் த4ரிக்கவேண்டும். அது இரண்டு ரேகை2களை உடையதாயிருக்கவேண்டும். ப்3ரஹ்மத்தோடு ஸாயுஜ்ய ஸாலோக்யங்களை அடைகிறான். இவ்வுலகிற்கு மறுபடி திரும்புவதில்லை.

(3) **ருக்3வேத3ம்** — தே3வர்களுக்கு ரக்ஷகமானதும், பரிபூர்ணனான விஷ்ணுவினுடையதுமான தீயிற்பொலிகின்ற சக்கரத்தை எவனொருவன் தன் ஶரீரத்தில் த4ரிக்கிறானோ, அவன் பாபங்கள் நீங்கப்பெற்று, பற்றற்ற முனிவர்கள் அடையும் பரமபத3த்தை அடைகின்றான்.

(4) **அத2ர்வணவேத3ம்** — திரிவிக்ரமாவதாரம் செய்த பெருமானுடைய சிந்நங்களால் அடையாளம் செய்யப்பட்டவர்கள் எவர்களாயினும் விஷ்ணுவினுடைய விலக்ஷணமான பரமபத3த்தை அடைகிறார்கள். ஆகையால், நாங்களும் இந்தச் சின்னங்களால் அடையாளம் செய்விக்கப்பெற்று வைகுண்ட2த்தில் ப4க3வானுடைய அந்தரங்க3 கிங்கரர்களாக ஆகக்கடவோம்.

३२. पराशरसंहितायां—उपवीतादिवद्धार्याः शङ्खचक्रादयस्तथा।
ब्राह्मणस्य विशेषेण वैष्णवस्य विशेषतः॥

३३. भीष्मपर्वणि— ब्राह्मणैः क्षत्रियैर्वैश्यैः शूद्रैश्च कृतलक्षणैः।
अर्चनीयश्च वन्द्यश्च नित्ययुक्तैः स्वकर्मसु॥

३४. हारीतस्मृतौ— तापादिपञ्चसंस्कारी महाभागवतोत्तमः।
अन्ये त्ववैष्णवा ज्ञेयाः हीनास्तापादिभिर्जनाः॥

---

(5) (39-வது ப்ரமாணம்) **கட₂வல்லியில் ஊர்த்₄வ புண்ட்₃ர விதி₄** — ஊர்த்₄வபுண்ட்₃ரத்தை த₄ரித்தவனும், சக்ரத்தையும் அணிந்தவனுன எந்தச் சேதநன், உயர்வற உயர்ந்தவனும், ஒப்பாருமிக்காருமில்லாதவனும், எப்போதும் ஹ்ருத₃ய கமலத்தில் எழுந்தருளியிருப்பவனுன மஹா விஷ்ணுவை ஓங்காரமாகிற மந்திரத்திஞல் இடைவிடாமல் சிந்திக்கிருனே அவனே மஹாத்மா.

II **இவ்விஷயத்தில் ஸ்ம்ருதிஇதிஹாஸ புராண ப்ரமாணங்கள் பின்வருமாறு:—**

(1) **பராஶரஸம்ஹிதை** — ப்₃ராஹ்மணஞல் யஜ்ஞோபவீதம் போலே ஶங்க₂சக்ராதி₃களும் சிறப்பாக த₄ரிக்கப் படவேண்டும். குறிப்பாக வைஷ்ணவன் இவற்றை த₄ரிக்க வேண்டும்.

(2) **ப₄ாரதம் - பீ₄ஷ்மபர்வம்** — தமது கர்மங்களில் எம்பெருமானை எப்போதும் அநுஸந்தி₄ப்பவர்களாய் (ஶங்க₂ சக்ரங்களால்) அடையாளமிடப் பெற்றவர்களான ப்₃ராஹ்மண க்ஷத்ரிய வைஶ்ய ஶூத்₃ரர்களாலே விஷ்ணுவானவன் அர்ச்சிக்கப்படவும், வணங்கப்படவும் தக்கவன்.

(3) **ஹாரீத ஸ்ம்ருதி** — தாபம் முதலிய ஐந்து ஸம்ஸ்காரங்களை உடையவனே மஹாப₄ாக₃வதோத்தமன்.

३५. विना यज्ञोपवीतेन विना चक्रस्य धारणात्।
विना द्वयेन वै विप्रश्चण्डालत्वमवाप्नुयात्॥
वामने—
३६. श्वपाकमिव वीक्षेत लोके विप्रमवैष्णवम्।
वैष्णवो वर्णबाह्योऽपि पुनाति भुवनत्रयम्॥
लैङ्गे—
३७. अष्टाक्षरविदस्सर्वे तप्तचक्राङ्कितास्तथा।
सेवका वासुदेवस्य तथैव नटनर्तकाः॥
३८. अन्ये च वैष्णवास्तत्र सर्वे चक्रेण लाञ्छिताः।
अग्निनैव तु संतप्तं चक्रमादाय वैष्णवः॥
दाहयेत्सर्ववर्णानां विष्णुसालोक्यसिद्धये॥

---

தாபம் முதலான ஸம்ஸ்காரமற்றவர்கள் அவைஷ்ணவர் களேயாவர். யஜ்ஞோபவீதம், சக்ரதா₄ரணம், த்₃வய மந்திரம் ஆகிய இவையில்லாத அந்தணன் விரைவில் சண்டா₃ளனாவான்.

(4) **வாமநபுராணம்**—அவைஷ்ணவனான அந்தணனைச் சண்டா₃ளனைப்போலவே கருதவேண்டும். சண்டா₃ளனா யிருந்தாலும், வைஷ்ணவனாயிருப்பவன் மூவுலகையும் பரிஶுத்₃த₄ப்படுத்துகிறான்.

(5) **லிங்க₃புராணம்**—அஷ்டாக்ஷர மந்திரத்தை அறிந் தவர்களும், காய்ச்சப்பெற்ற சக்ரத்தால் அடையாளம் செய்யப்பெற்றவர்களும் வாஸுதே₃வனின் அடியார்களே; கூத்தாடிகளும், மற்ற தாழ்ந்த சாதியினரும் சக்ரத்தினால் அடையாளம் செய்யப்பெற்றால் வைஷ்ணவர்களே. எல்லா வர்ணத்தவர்களும் விஷ்ணு ஸாலோக்யமடைவதற்கு, நெருப்பால் காய்ச்சப்பெற்ற சக்ரத்தை எடுத்து, அவர் களது உடலை வைஷ்ணவனான ஆசார்யன் அடையாள மிடவேண்டும்.

३९. कठवल्ल्यामूर्ध्वपुण्ड्रविधिः—

धृतोर्ध्वपुण्ड्रः कृतचक्रधारी
विष्णुं परं ध्यायति यो महात्मा।
स्वरेण मन्त्रेण सदा हृदिस्थं
परात्परं यं महतो महान्तम् ॥

४०. स्कान्दे— येषां चक्राङ्कितं गात्रं शूद्रेष्वपि च दृश्यते।
ते वै स्वर्गस्य नेतारो ब्राह्मणा भुवि दुर्लभाः॥

४१. पराशरः— विना यज्ञोपवीतेन विना चक्रस्य धारणात्।
विना द्वयेन वै विप्रश्चण्डालत्वमवाप्नुयात्॥

४२. अथर्वणोपनिषदि—

हरेः पादाकृतिमात्मनो हिताय मध्येच्छिद्रमूर्ध्वपुण्ड्रं यो धारयति, स परस्य प्रियो भवति, स पुण्यवान् भवति, स मुक्तिमान् भवति ॥

---

(6) **ஸ்கந்த₃புராணம்** — ஶூத்₃ரர்களாயினும், எவர்களுடைய உடல் சக்ரத்தினால் அடையாளமிடப்பெற்றதாய் விளங்குகிறதோ, அவர்களே இவ்வுலகில் கிடைத்தற்கரியவர்களாய், பரமபத₃த்திற்கு வழிகாட்டிகளான அந்தணர்கள்.

(7) **பராஶரஸ்ம்ருதி** — யஜ்ஞோபவீதம், சக்ரத₄ாரணம், த்₃வயமந்திரம் ஆகியவையில்லாத அந்தணன் சண்டா₃ளத் தன்மையை அடைவான்.

## ஊர்த்₄வபுண்ட்₃ரவிதி₄

42-54. **இவ்விஷயத்தில் ஶ்ருதிஸ்ம்ருதி ப்ரமாணங்கள் பின்வருமாறு:—**

(1) **அத₂ர்வணோபநிஷத்** — ஹரியினுடைய இரு திருவடிகளின் ஆகாரத்தில் நடுவில் இடைவெளியுள்ளதாய்,

४३. महोपनिषदि—

धृतोर्ध्वपुण्ड्रः परमेशितारं नारायणं साङ्ख्ययोगाधिगम्यम् ।
ज्ञात्वा विमुच्येत नरः समस्तैः संसारपाशैरिह चैति विष्णुम् ।।

४४. आग्नेये— त्रिपुण्ड्रधारणं विप्रो लीलयापि न कारयेत् ।
धारयेद्विधिना सम्यगूर्ध्वपुण्ड्रं प्रयत्नतः ।।

४५. ब्रह्माण्डे— ब्राह्मणस्योर्ध्वपुण्ड्रं तु क्षत्रियस्यार्धचन्द्रकम् ।
वैश्यस्य वर्तुलाकारं शूद्रस्यैव त्रिपुण्ड्रकम् ।।

४६. ब्राह्मणेन न कर्तव्यं तिर्यक्पुण्ड्रस्य धारणम् ।
स शूद्र एव मन्तव्यः तिर्यक्पुण्ड्रस्य धारणात् ।।

---

தன் நன்மைக்காக எவனொருவன் ஊர்த்$_4$வபுண்ட்$_3$ரத்தை த$_4$ரிக்கிருனோ, அவன் பரமாத்மாவுக்கு இனியவனுகிருன்; அவன் புண்யவானுகிருன்; அவன் முக்தியடைபவனுகிருன்.

(2) **மஹோபநிஷத்** — ஊர்த்$_4$வபுண்ட்$_3$ரமணிந்தவனுய், பரமேஶ்வரனும், கர்ம ஜ்ஞாந ப$_4$க்தி யோகங்$_3$களால் அடையத்தக்கவனுமான நாராயணனே அறிந்து, இந்த ஜன்மத்திலேயே மனிதன் எல்லா ஸம்ஸாரக்கட்டுகளினின் றும் விடுபடுகிருன். விஷ்ணுவையும் அடைகிருன்.

(3) **ஆக்$_3$நேயபுராணம்**—த்ரிபுண்ட்$_3$ரத்தை அந்தணன் விளையாட்டுக்காகக்கூட த$_4$ரிக்கக் கூடாது. விதி$_4$ப்படியான ஊர்த்$_4$வபுண்ட்$_3$ரத்தை முயன்று நன்கு த$_4$ரிக்கவேண்டும்.

(4) **ப்$_3$ரஹ்மாண்ட$_3$புராணம்** — அந்தணனுக்கு ஊர்த்$_4$வ புண்ட்$_3$ரமும் க்ஷத்ரியனுக்கு அர்த்த$_4$சந்த்$_3$ராகார புண்ட்$_3$ர மும், வைஶ்யனுக்கு வட்டவடிவமான புண்ட்$_3$ரமும், ஶூத்$_3$ர னுக்கே த்ரிபுண்ட்$_3$ரமும் ஏற்பட்டது. அந்தணன் ஒரு போதும் குறுக்குப் புண்ட்$_3$ரத்தை த$_4$ரிக்கலாகாது. அதை த$_4$ரிப்பதனுல் அவன் ஶூத்$_3$ரன் என்றே மதி$_3$க்கத்தக்க வனுவான்.

४७. ब्रह्मरात्रे— प्रणवेनैव मन्त्रेण मृदा वै मामनुस्मरन्।
ललाटे धारयेन्नित्यं मम सायुज्यमाप्नुयात्॥

४८. वसिष्ठस्मृतौ— नासिकामूलमारभ्य आकेशान्तं प्रकल्पयेत्।
अङ्गुलं पार्श्वमेकं तु ऊर्ध्वपुण्ड्रस्य लक्षणम्॥

४९. सनत्कुमारसंहितायां—
ऊर्ध्वपुण्ड्रं मृदा धार्यं सच्छिद्रं सौम्यमेव च।
तदलङ्करणार्थाय हरिद्रां धारयेत् श्रियम्॥

५०. ऊर्ध्वपुण्ड्रस्य मध्ये तु अन्यत् द्रव्यं न धारयेत्।
हरिद्रां धारयेच्चूर्णं सर्वपापैः प्रमुच्यते॥

---

(5) **ப்₃ரஹ்மராத்ரம்** — ப்ரணவமாகிற மந்திரத்தாலே என்னை நினைத்துக்கொண்டு, மண்ணாலே நெற்றியில் ஊர்த்₄வபுண்ட்₃ரத்தை தினந்தோறும் த₄ரிக்கவேண்டும். அப்படி த₄ரிப்பவன் எனது ஸாயுஜ்யத்தை (ஸாம்யத்தை) அடைவான்.

(6) **வஸிஷ்ட₂ஸ்ம்ருதி** — மூக்கின் அடியிலிருந்து தொடங்கி, கேஶம் வரையில் ஊர்த்₄வபுண்ட்₃ரமிடவேண்டும். உள் இடைவெளி ஓரங்குலம் இருக்கவேண்டும். இது ஊர்த்₄வபுண்ட்₃ர லக்ஷணமாகும.

(7) **ஸநத்குமாரஸம்ஹிதை** — ஊர்த்₄வபுண்ட்₃ரம் மண்ணாலே இடைவெளியுள்ளதாகவும், அழகாகவும் த₄ரிக்கப் படவேண்டும். அதை அலங்கரிப்பதற்காக ஸ்ரீ தே₃வியை ஹரித்₃ரா சூர்ண ரூபத்தில் த₄ரிக்கவேண்டும். ஊர்த்₄வ புண்ட்₃ரத்தின் நடுவில் வேறு த்₃ரவ்யத்தை த₄ரிக்கலாகாது. ஹரித்₃ரா சூர்ணத்தையே த₄ரிக்கவேண்டும். இப்படி த₄ரிப்பவன் எல்லாப் பாபங்களினின்றும் நீங்குகிறான். எந்த ப்₃ராஹ்மணத₄மர்கள் இடைவெளியில்லாமல் ஊர்த்₄வ

५१. अच्छिद्रमूर्ध्वपुण्ड्रं तु ये कुर्वन्ति द्विजाधमाः।
तेषां ललाटे सततं श्वानपादो न संशयः॥

५२. पाद्मे— ये कण्ठलग्नतुलसीनलिनाक्षमालाः
ये बाहुमूलपरिचिह्नितशङ्खचक्राः।
ये वा ललाटफलके लसदूर्ध्वपुण्ड्राः
ते वैष्णवा भुवनमाशु पवित्रयन्ति॥

ईश्वरसंहितायां—

५३. विष्णुदेहपरामृष्टं यश्चूर्णं शिरसा वहेत्।
सोऽश्वमेधफलं प्राप्य विष्णुलोके महीयते॥

५४. सान्तरालोर्ध्वपुण्ड्रस्य मध्ये श्रीशस्य धामनि।
हरिद्रासारसंभूतरजसा धारयेत् श्रियम्॥

---

புண்ட்$_3$ரத்தை த$_4$ரிக்கிறார்களோ, அவர்களின் நெற்றியில் எப்போதும் நாய்க்காலே உள்ளது. ஐயமில்லை.

(8) **பாத்$_3$மபுராணம்** — எவர்கள் கழுத்தில் தொங்கும் துளஸி மணிமாலைகளையும், தாமரை மணிமாலைகளையும் உடையவர்களோ, எவர்கள் தோள்களிலே அடையாள மிடப்பெற்ற ஶங்க$_2$சக்ரங்களை உடையவர்களோ. எவர்கள் நெற்றியில் விளங்கும் ஊர்த்$_4$வபுண்ட்$_3$ரத்தை உடையவர் களோ, வைஷ்ணவர்களான அவர்களே உலகை உடனே பரிஶுத்$_3$த$_4$ப்படுத்துகிறார்கள்.

(9) **ஈஶ்வரஸம்ஹிதை** — விஷ்ணுவின் திருமேனியைத் தீண்டிய சூர்ணத்தை எவன் தலையால் த$_4$ரிக்கிறானோ, அவன் அஶ்வமேத$_4$யாக$_3$ ப$_2$லனை அடைந்து, விஷ்ணுவின் உலகில்ஆராதி$_4$க்கப்படுகிறான்.இடைவெளியுடைய ஊர்த்$_4$வ புண்ட்$_3$ரத்தின் நடுவில், எம்பெருமானுடைய ஸ்த$_2$ானத் தில் ஹரித்$_3$ரா(மஞ்சள்)ஸாரத்திலிருந்து உண்டான ஸ்ரீ சூர்ணத்தால் ஸ்ரீதே$_3$வியை த$_4$ரிக்கவேண்டும்.

५५. पराशरस्मृतौ— एकोपवीतं धार्यं स्यात् यतीनां ब्रह्मचारिणाम्।
गृहस्थानां वनस्थानामुपवीतोभयं स्मृतम्॥

पञ्चरात्रे—

५६. काषायवस्त्रायुग्मं च वेणुयष्टिं च धारयेत्।
कौपीनं कटिसूत्रं च छत्रं ताम्रकमण्डलुम्॥

५७. छिद्रोर्ध्वपुण्ड्रमेकं वा तथा द्वादशमेव वा।
तुलसीनलिनाक्षाणां मालिकाधारणं तथा॥

५८. भुजयोर्गुरुणा सम्यक् शङ्खं चक्रं च धारयेत्।
यज्ञोपवीतमेकं च सम्यक् धारयतीश्वरः॥

५९. यस्त्वेकदण्डमालम्ब्य धर्मं ब्राह्मं परित्यजेत्।
विकर्मस्थो भवेद्विप्रः स याति नरकं ध्रुवम्॥

---

## ஆஶ்ரம த₄ர்மம்

55-62. இவ்விஷயத்தில் ஸ்ம்ருதி ஆக₄ம ப்ரமாணங்கள்

(1) பராஶரஸம்ஹிதை — யதிகளும் ப்₃ரஹ்மசாரிகளும் ஒற்றைப் பூணூலும், க்₃ருஹஸ்த₂ரும் வாநப்ரஸ்த₂ரும் இரட்டைப் பூணூலும் த₄ரிக்கவேண்டும்.

(2) பாஞ்சராத்ரம் — (யதியானவன்) இரு காஷாய வஸ்திரங்களையும், மூங்கிலினால் ஆன த்ரித₃ண்ட₃த்தையும், கௌபீநம், அரைநாண், குடை, தாம்ரகமண்ட₃லம் ஆகிய வற்றையும் த₄ரிக்கவேண்டும்; இடைவெளியுள்ள ஊர்த்₄வ புண்ட்₃ரம் ஒன்றையாவது, பனிரண்டையாவது த₄ரிக்க வேண்டும்; துளஸீமணி மாலை, தாமரைமணி மாலைகளை யும் த₄ரிக்கவேண்டும். ஆசார்யனைக்கொண்டு தோள் களில் ஶங்க₂சக்ரங்களை நன்கு த₄ரிக்கவேண்டும். யதீஶ் வரனாயிருப்பவனும் ஒற்றைப் பூணூலை த₄ரிக்கவேண்டும். எவன் ஏகத₂ண்ட₃த்தைப் பற்றிநின்று வேத₃ த₄ர்மத்தைக்

६०. शिखायज्ञोपवीतादि ब्रह्मकर्म यतिस्त्यजेत्।
स जीवन्नेव चण्डालो मृतः श्वानोऽभिजायते ॥

६१. मौञ्ज्येणाजिनदण्डादि धार्याणि ब्रह्मचारिणा।
कटिसूत्रं तु कौपीनं शुक्लवस्त्रद्वयं शुभम् ॥

६२. मुण्डनं चाङ्गुलीयादि गृहस्थस्य विशिष्यते ॥

६३. सगुणत्वे श्रुतयः—

(१) सर्वज्ञस्सर्ववित्, (२) परास्य शक्तिर्विविधैव श्रूयते स्वाभाविकी ज्ञानबलक्रिया च, (३) तेजोबलैश्वर्यमहावबोधसुवीर्य शक्त्यादिगुणैकराशिः, (४) अपहतपाप्मा विजरो विमृत्युर्विशोको विजिघत्सोऽपिपासः सत्यकामः सत्यसङ्कल्पः इति ॥

---

கைவிடுகிருனே, அவ்வந்தணன் கர்மப்₄ரஷ்டனுகி, நரக மடைவான் என்பதில் ஐயமில்லை. ஶிகை₂, யஜ்ஞோபவீதம் முதலியவற்றையும், வேதத்தில், விதி₄க்கப்பட்ட நித்ய நைமித்திக கர்மங்களையும் எவன் கைவிடுகிருனே, அவன் உயிரோடிருக்கும்போதே சண்டா₃ளனுகி, இறந்தவுடன் நாயாகப் பிறக்கிருன். மௌஞ்ஜி, க்ருஷ்ணுஜிநம். த₃ண்ட₃ம் முதலியவை ப்₃ரஹ்மசாரியால் த₄ரிக்கத்தக்கவை. அரை நாணும், கௌபீநமும், மங்க₃ளமான இருவெள்ளை வஸ்தி ரங்களும், (ஶிகை₂தவிர மற்ற) ஶிரோப₄ாக₃த்தின் முண்ட₃நமும், மோதிரம் முதலானவற்றை த₄ரிப்பதும் க்₃ருஹஸ்த₂னுக்குச் சிறப்புற்றவை.

## ப்₃ரஹ்மம் கு₃ணங்களோடு கூடியது

63-67. I **இவ்விஷயத்தில் ஶ்ருதி ப்ரமாணங்கள்:—**

(1) **முண்ட₃க 1-1-10** (ப்ரஹ்மம்) எல்லாப்பொருள்களின் ஸ்வரூபங்களையும்,ஸ்வப₄ாவங்களையும் அறிந்ததாய் உள்ளது.

६४. तमीश्वराणां परमं महेश्वरं तं देवतानां परमं च दैवतम् ।
पतिं पतीनां परमं परस्तात् विदाम देवं भुवनेशमीड्यम् ॥

६५. ज्ञाज्ञौ द्वावजावीशनीशौ

६५†. नित्यो नित्यानां चेतनश्चेतनानामेको बहूनां यो विदधाति कामान् ।

---

(2) ஶ்வேதாஶ்வதர 6-8. இப்பரமாத்மாவுக்கு மேலானதும், வித₄வித₄மானதும், இயற்கையானதுமான ஶக்தியும், ஜ்ஞாநமும், ப₃லமும், க்ரியையும் (ப்ரமாணங்களில்) அறியப்படுகிறது.

(2)* வி-பு 6-5-85. தேஜஸ், ப₃லம், ஐஶ்வர்யம், பேரறிவு, பெருவீர்யம், ஶக்தி முதலான கு₃ணங்களுக்கு ஒரே கொள்கலமாயிருப்பவன் பரமாத்மா.

(3) சா₂ந்தோ₃க்₃யம் 8-7-1. பாபமற்றவன்; கிழத்தனம், மரணம், ஶோகம், பசி, தா₃ஹம் ஆகியவையுமற்றவன்; ஸத்யமான கு₃ணங்களையும், தடைபடாத ஸங்கல்பத்தையும் உடையவன்.

(4) ஶ்வேதாஶ்வதரம் 6-7. ஈஶ்வரர்களுக்கெல்லாம் மேலான மஹேஶ்வரனும், தே₃வதைகளுக்கெல்லாம் மேலான பரதே₃வதையும், ஸ்வாமிகளுக்கெல்லாம் ஸ்வாமியும், மேலானவற்றுக்கெல்லாம் மேலானவனும், லோகநாத₂னும், துதிக்கத்தக்கவனுமான பரமேஶனை உபாஸிப்போம்.

(5) ஶ்வேதாஶ்வதரம் 1-9. பிறப்பற்ற ஈஶ்வரனும், ஜீவனும் (முறையே) எல்லாமறிந்த ஸர்வஜ்ஞனாகவும் ஒன்றுமறியாத அஜ்ஞனாகவும், எல்லாவற்றையும் நியமிப்பவனாகவும் ஒன்றையும் நியமிக்க வல்லமையற்றவனாகவும் உள்ளனர்.

---

* அந்தந்த ஶ்ருதிகளுக்கு உபப்₃ரும்ஹணங்களான ஸ்ம்ருதிகளும் அடுத்தடுத்துக் கொடுக்கப்படுகின்றன.

६६. नारायणपरं ब्रह्म तत्त्वं नारायणः परः।

*६६†. नारायणपरा वेदाः

६६‡. नारायण एवेदं सर्वं निष्कलङ्को निरञ्जनो निर्विकल्पो
निराख्यातः शुद्धो देव एको नारायणः।

६७. एको हवै नारायण आसीत्, न ब्रह्मा नेशानः।

६८. ज्ञानशक्तिबलैश्वर्यवीर्यतेजांस्यशेषतः।
भगवच्छब्दवाच्यानि विना हेयैर्गुणादिभिः॥

---

(6) **கட₂ 2-5, ஶ்வே 6-13.** நித்யர்களான பல சேதனர்களுக்கு, நித்யனுன எந்த ஒரு சேதனன் விருப்பங்களை அளிக்கிருனே.

(7) **தை-நா-11.** நாராயணனே பரப்₃ரஹ்மம்; நாராயணனே பரதத்வம்.

(7)* **ப₄ாக₃வதம்** — வேத₃ங்கள் நாராயணனைப் பரம் பொருளாகச் சொல்லுமவை.

(8) **நாராயணுேபனிஷத்** — இவையெல்லாம் நாராயணனே; குற்றமும், பாபங்களும் அற்றவனும், விகல்ப மற்றவனும், பெயரால் அளவுபடாதவனும் பரிஶுத்₃த₄னுமாயிருப்பவன் தே₃வனுன நாராயணன் ஒருவனே.

(9) **மஹோபனிஷத்**—நாராயணன் ஒருவனே (முதலில்) இருந்தான். பிரமனுமில்லை; சிவனுமில்லை.

68-72. **II இந்த ஶ்ருதிகளுக்கு உபப்₃ரும்ஹணங்கள்:—**

(1) **விஷ்ணுபுராணம் (6-5-79): —** ஜ்ஞாநம், ஶக்தி, ப₃லம், ஐஶ்வர்யம் வீர்யம், தேஜஸ் என்னும் ஆறுகு₃ணங்களும், தாழ்ந்த கு₃ணங்கள் இல்லாமையும் 'ப₄க₃வான்' என்னும் ஶப்₃த₃த்திற்குப் பொருளாமவை.

६९. भारते— हरिः परायणं परं हरिः परायणं परं।
पुनः पुनर्वदाम्यहं हरिः परायणं परम्॥

७०. मोक्षधर्मे— त्वयापि सततं राजन्नभ्यर्च्यः पुरुषोत्तमः।
स हि माता पिता चैव कृत्स्नस्य जगतो गुरुः॥

७१. जगतः कारणत्वं च सगुणत्वं स्वभावतः।
त्रिपाद्विभूतियुक्तत्वं ब्रह्मणो रूपमुच्यते॥

७२. विष्णुधर्मोत्तरे—तस्मात्सर्वेषु देवेषु विष्णुरेव सनातनः।
तस्मात् सर्वप्रयत्नेन विष्णुमेव समाश्रयेत्॥

७३. एवं शतसहस्राणि प्रमाणानि महान्ति च।
सत्तर्कसहितान्येव सर्वशास्त्राविरोधतः॥

---

(2) ப₄ாரதம் — ஹரியே மேலான பராயணம்; ஹரியே மேலான பராயணம். ஹரியே மேலான பராயணம். இதை மறுபடியும் மறுபடியும் சொல்லுகிறேன்.

(3) ப₄ாரத மோக்ஷத₄ர்மம் — அரசனே! உன்னாலும் எப்போதும் புருஷோத்தமனே ஆராதி₄க்கத் தகுந்தவன்; அவனே எல்லா உலகிற்கும் தாயாகவும், தந்தையாகவும், ஆசார்யனுகவுமிருப்பவன். உலகிற்குக் காரணமாயிருக்கையும், இயல்வாகவே (கல்யாண) கு₃ணங்களே உடையவனுயிருக்கையும், நித்யவிபூ₄தியை உடையவனுயிருக்கையும் ப்₃ரஹ்மத்திற்குத் தனிப் பெருமைகள்.

(4) விஷ்ணு த₄ர்மோத்தரம் — ஆகையால், எல்லா தே₃வர்களிலும் விஷ்ணுவே பழைமையானவன். ஆகையால் விஷ்ணுவையே மிக முயன்று ஆஶ்ரயிக்கவேண்டும்.

### கூரேஶரின் வெற்றி

73-76. இவ்வண்ணமாக ஶ்ருதிஸ்ம்ருதி புராணங்களிலிருந்து நூறுயிரக்கணக்கான மிகச் சிறந்த ப்ரமாணங்

७४. श्रुतिस्मृतिपुराणानि कूरेशो व्याजहार सः।
श्रुत्वा सर्वाणि वाक्यानि यादवो विस्मयान्वितः॥

७५. अनुज्ञातस्तदा ताभ्यां स्वमठं प्रविवेश ह।

७६. श्रुत्यादिप्रचुरप्रमाणवचनैः सर्वोत्तमत्वे हरेः
चक्राद्यङ्कनधारणे च सगुणब्रह्मण्यनन्ते परे।
कूरेशः प्रतिपाद्य दार्ढ्यमधिकं सद्योऽनवद्यां प्रथां
विख्यातं यतिशेखरं समभजज्जित्वा तदा यादवम्॥

इति श्रीप्रपन्नामृते रामानुजचरित्रे कूरेशयादवसंवादे
विष्णुपरतत्त्वनिर्णयो नाम चतुर्दशोऽध्यायः॥

---

களை, நல்ல தர்க்கங்களோடு சேர்ந்தவையாகவும் எல்லா ஶாஸ்த்ரங்களுக்கும் விரோத₄மில்லாமலும் கூரத்தாழ்வான் எடுத்துரைத்தார். அந்த வாக்யங்கள் அனைத்தையும் கேட்டு, யாத₃வர் வியப்புற்று, ராமாநுஜரிடமும், கூரேஶரிடமும் விடைபெற்றுத் தன் மட₂த்தை அடைந்தார். ஶ்ருதி முதலான ப்ரமாணவாக்யங்களாலே, (1) நாராயணனே பரமாத்மாவென்கை, (2) சக்ரம் முதலியவற்றின் அடையாளங்களை த₄ரிப்பது, (3) அநந்தனான பரமாத்மா கு₃ணங்களோடு கூடியவனென்கை ஆகிய மூன்று விஷயங்களையும் ஒருபடியாலும் அசைக்க முடியாதபடி நிலைநாட்டி, யாத₃வரை வெற்றிகொண்டு, உடனே குற்றமற்ற புகழை அடைந்தார் கூரத்தாழ்வான்; புகழ்பெற்ற யதிராஜரிடமும் வந்து சேர்ந்தார்.

ப்ரபந்நாம்ருதத்தில் ராமாநுஜ சரித்திரத்தில், கூரேஶயாத₃வ ஸம்வாத₃த்தில் விஷ்ணு பரத்வ நிர்ணயம் எனும் பதினான்காவது அத்தியாயம் நிறைவுபெற்றது.

## पञ्चदशोऽध्यायः

१. तस्यां रात्र्यां देवराजः स्वप्ने तस्य जगत्पतिः।
आगत्य यादवं विप्रं संशयापन्नमानसम्॥

२. उवाच कृपया वाक्यं दयार्द्रीकृतमानसः।
जनन्या तव यच्चोक्तं तत्सत्यं यादवाधुना॥

३. यतिराजाश्रयान्मुक्तिर्नान्यथा द्विजपुङ्गव।
चिन्तां विहाय सहसा सर्वकार्यविनाशिनीम्॥

४. यतिराजं महात्मानं समाश्रय गुणाश्रयम्।
इत्युक्त्वान्तर्दधे विष्णुर्यादवं करुणालयः॥

५. तद्वाक्यश्रवणात् सोऽपि निश्चयं नाध्यगच्छत।
यादवस्य प्रसूः साध्वी कदाचित् वरदं हरिम्॥

---

## பதினைந்தாம் அத்தியாயம்

# யாத₃வ ஸமாச்ரயணம்

### யாத₃வரின் கனவு

1-4. லோகநாத₂னைய், கருணைக்கடலான வரத₃ராஜப் பெருமாள் அன்றிரவு, ஐயமுற்ற நெஞ்சினரான யாத₃வரின் கனவில் தோன்றி, அந்தணரான அவரைக் குறித்துக் கருணையால் நனைந்த நெஞ்சையுடையவராய் "அந்தணர் தலைவரான யாத₃வரே! உம் தாயால் உமக்குச் சொல்லப் பட்டது உண்மையேயாகும். இப்போது யதிராஜரை ஆஶ்ரயிப்பதாலேயே (எவர்க்கும்) மோக்ஷமுண்டாகும். இல்லாவிடில் மோக்ஷமில்லை. எல்லா நற்செயல்களையும் அழிக்கும் ஐயத்தைவிட்டு, கு₃ணங்களின் கொள்கலமான யதிராஜரைச் சடக்கென ஆஶ்ரயிப்பீர்." என்று கருணை யோடு வாக்யத்தைக் கூறி மறைந்தார்.

७४. श्रुतिस्मृतिपुराणानि कूरेशो व्याजहार सः।
श्रुत्वा सर्वाणि वाक्यानि यादवो विस्मयान्वितः॥

७५. अनुज्ञातस्तदा ताभ्यां स्वमठं प्रविवेश ह।

७६. श्रुत्यादिप्रचुरप्रमाणवचनैः सर्वोत्तमत्वे हरेः
चक्राद्यङ्कनधारणे च सगुणब्रह्मण्यनन्ते परे।
कूरेशः प्रतिपाद्य दार्ढ्यमधिकं सद्योऽनवद्यां प्रथां
विख्यातं यतिशेखरं समभजज्जित्वा तदा यादवम्॥

इति श्रीप्रपन्नामृते रामानुजचरित्रे कूरेशयादवसंवादे
विष्णुपरतत्त्वनिर्णयो नाम चतुर्दशोऽध्यायः॥

---

களை, நல்ல தர்க்கங்களோடு சேர்ந்தவையாகவும் எல்லா ஶாஸ்த்ரங்களுக்கும் விரோத₄மில்லாமலும் கூரத்தாழ்வான் எடுத்துரைத்தார். அந்த வாக்யங்கள் அனைத்தையும் கேட்டு, யாத₃வர் வியப்புற்று, ராமாநுஜரிடமும், கூரேஶரிடமும் விடைபெற்றுத் தன் மட₂த்தை அடைந்தார். ஶ்ருதி முதலான ப்ரமாணவாக்யங்களாலே, (1) நாராயணனே பரமாத்மாவென்கை, (2) சக்ரம் முதலியவற்றின் அடையாளங்களை த₄ரிப்பது, (3) அநந்தனை பரமாத்மா கு₃ணங்களோடு கூடியவனென்கை ஆகிய மூன்று விஷயங்களையும் ஒருபடியாலும் அசைக்க முடியாதபடி நிலைநாட்டி, யாத₃வரை வெற்றிகொண்டு, உடனே குற்றமற்ற புகழை அடைந்தார் கூரத்தாழ்வான்; புகழ்பெற்ற யதிராஜரிடமும் வந்து சேர்ந்தார்.

ப்ரபந்நாம்ருதத்தில் ராமாநுஜ சரித்திரத்தில், கூரேஶயாத₃வ ஸம்வாத₃த்தில் விஷ்ணு பரத்வ நிர்ணயம் எனும் பதினான்காவது அத்தியாயம் நிறைவுபெற்றது.

११. अनिश्चयात् पुनस्सोऽपि मात्रा चाज्ञापितस्तदा।
काञ्चीपूर्णं समासाद्य यादवः करुणानिधिम् ॥
१२. विनयावनतो भूत्वा वचनं चेदमब्रवीत्।
काञ्चीपूर्ण कृपासिन्धो कमलापतिनन्दन ॥
१३. मयि निक्षिप्य करुणां रक्ष मां शरणागतम्।
मयाधुना कश्चिदर्थश्चिन्तितो मानसे महान् ॥
१४. संशयस्तस्य करणे विद्यते मे तपोधन।
मनश्चलति तत्कार्ये वाते दीपशिखा यथा ॥
१५. मदर्थं देवराजं त्वं कृत्वा विज्ञापनं जवात्।
यदुक्तं तेन कृपया मह्यं ब्रूह्यकृतात्मने ॥
१६. काञ्चीपूर्णस्तदाकर्ण्य यादवोक्तं वचः शुभम्।
देवराजाय सहसा तद्वृत्तान्तं न्यवेदयत् ॥

---

### திருக்கச்சிநம்பியை அடைதல்

11-15. தாயினால் கட்டளையிடப்பட்ட பின்பும் உறுதியற்றவரான யாத₃வர், கருணைக் கடலான திருக்கச்சிநம்பியை அடைந்தவராய், பணிவோடு வணங்கி, பின் வருமாறு கூறினார்:- “கருணைக்கடலாய், கமலாபதி குமாரரான திருக்கச்சிநம்பியே! என்னிடம் கருணை கூர்ந்து, ஶரணமடைந்த என்னை ரக்ஷிப்பீர். நான் இப்போது ஓர் விஷயத்தை நெஞ்சில் எண்ணியிருக்கிறேன். தபோத₄னரே! அதைச் செய்வதில் எனக்குப் பெருத்த ஐயமுள்ளது. காற்றில் விளக்கொளிபோலே அதைச் செய்ய மனம் நிலையற்றதாகிறது. எனக்காக நீர் இவ்விஷயத்தை தே₃வப் பெருமாளிடம் உடனே விண்ணப்பித்து, கருணையோடு அவர் அருளுவதை நிஶ்சயமற்ற எனக்குச் சொல்லுவீராக.”

### வரத₃னின் ஆணை

16-*22. யாத₃வரால் சொல்லப்பட்ட அவ்வழகிய வார்த்தையைக் கேட்ட திருக்கச்சிநம்பி, உடனே தே₃வப் பெருமாளிடம் அச்செய்தியை விண்ணப்பித்தார். அதைக்

७४. श्रुतिस्मृतिपुराणानि कूरेशो व्याजहार सः।
श्रुत्वा सर्वाणि वाक्यानि यादवो विस्मयान्वितः॥

७५. अनुज्ञातस्तदा ताभ्यां स्वमठं प्रविवेश ह।

७६. श्रुत्यादिप्रचुरप्रमाणवचनैः सर्वोत्तमत्वे हरेः
चक्राद्यङ्कनधारणे च सगुणब्रह्मण्यनन्ते परे।
कूरेशः प्रतिपाद्य दार्ढ्यमधिकं सद्योऽनवद्यां प्रथां
विख्यातं यतिशेखरं समभजज्जित्वा तदा यादवम्॥

इति श्रीप्रपन्नामृते रामानुजचरित्रे कूरेशयादवसंवादे
विष्णुपरतत्त्वनिर्णयो नाम चतुर्दशोऽध्यायः॥

---

களை, நல்ல தர்க்கங்களோடு சேர்ந்தவையாகவும் எல்லா ஶாஸ்த்ரங்களுக்கும் விரோத₄மில்லாமலும் கூரத்தாழ்வான் எடுத்துரைத்தார். அந்த வாக்யங்கள் அனைத்தையும் கேட்டு, யாத₃வர் வியப்புற்று, ராமானுஜரிடமும், கூரேஶ ரிடமும் விடைபெற்றுத் தன் மட₂த்தை அடைந்தார். ஶ்ருதி முதலான ப்ரமாணவாக்யங்களாலே, (1) நாரா யணனே பரமாத்மாவென்கை, (2) சக்ரம் முதலியவற்றின் அடையாளங்களை த₄ரிப்பது, (3) அநந்தனான பரமாத்மா கு₃ணங்களோடு கூடியவனென்கை ஆகிய மூன்று விஷ யங்களையும் ஒருபடியாலும் அசைக்க முடியாதபடி நிலை நாட்டி, யாத₃வரை வெற்றிகொண்டு, உடனே குற்ற மற்ற புகழை அடைந்தார் கூரத்தாழ்வான்; புகழ்பெற்ற யதிராஜரிடமும் வந்து சேர்ந்தார்.

ப்ரபந்நாம்ருதத்தில் ராமானுஜ சரித்திரத்தில், கூரேஶயாத₃வ ஸம்வாத₃த்தில் விஷ்ணு பரத்வ நிர்ணயம் எனும் பதினான்காவது அத்தியாயம் நிறைவுபெற்றது.

२३. बभाषे यादवं वाक्यं वरदोक्तं हरिप्रियः।
काञ्चीपूर्णस्य तद्वाक्यं निशम्यात्यन्तविस्मितः॥

२४. विच्छिन्नसंशयो हृष्टः काञ्चीपूर्णमपूजयत्।
तरसा मठमागत्य यादवस्तं यतीश्वरम्॥

२५. भक्त्या प्रदक्षिणं कृत्वा यादवो ह्यपतत्तदा।
यतिराज दयासिन्धो दीनं मामवलोकय॥

२६. मत्कृतानपराधांस्तान् क्षमस्व बहुधा किल।
संसारार्णवनिर्मग्नं मामुद्धर कचग्रहात्॥

२७. लक्ष्मणार्यस्तदा दृष्ट्वा यादवं दीनमानसम्।
उवाच प्रहसन् वाक्यं दयार्द्रीकृतमानसः॥

---

**யாத₃வஸமாஶ்ரயணம்**

22*-26. தே₃வப்பெருமாளுடைய அந்த வார்த்தையைக் கேட்டு, எம்பெருமானுக்கினிய திருக்கச்சிநம்பி, வரத₃ன் சொன்ன அச்செய்தியை யாத₃வருக்குக் கூறினார். திருக்கச்சிநம்பியின் அவ்வார்த்தையைக் கேட்டு மிகவும் வியப்புற்ற யாத₃வர், ஐயம் நீங்கப்பெற்று உகந்தவராய், திருக்கச்சிநம்பியை ஆராதி₄த்தார். விரைவில் யதிராஜரின் மட₂த்திற்கு வந்து, அந்த யதீந்த்₃ரரை ப₄க்தியோடு ப்ரத₃க்ஷிணம் செய்து, அவர் திருவடிகளில் வீழ்ந்தார் யாத₃வர். "கருணைக்கடலான யதிராஜரே! வருந்தத்தக்க அடியேனைக் கடாக்ஷிப்பீர். அடியேன் செய்த பலவித₄மான குற்றங்களைக் கருணையாலே பொறுத்தருள்வீர்! ஸம்ஸாரக்கடலில் மூழ்கிய அடியேனை முடிபிடித்துக் கை தூக்கிவிடுவீர்" (என்றும் உரைத்தார்.)

**யாத₃வஸம்ரக்ஷணம்**

27-33. வருந்தும் நெஞ்சினரான யாத₃வரைக் கண்ட ஸ்ரீராமாநுஜர், கருணையால் நிறைந்த நெஞ்சையுடைய

२८. उत्तिष्ठ भूसुरश्रेष्ठ न ते दुःखमितःपरम् ।
विद्यते देवराजस्य कृपा त्वयि जगत्पतेः ॥

२९. इत्युक्त्वा यादवं प्रीत्या पतितं पादयोस्तदा ।
उद्धृत्य पाणिना शीघ्रं यतिराजः कृपार्णवः ॥

३०. तस्य संरक्षणे यत्नं चकार विबुधाग्रणीः ।
मौञ्जीबन्धादिकं कृत्वा यादवस्य यतीश्वरः ॥

३१. आदरात् पञ्चसंस्कारानथ तुर्याश्रमं ददौ ।
गोविन्ददास इति च दास्यनामाकरोत् प्रभुः ॥

३२. यादवः शुशुभे श्रीमान् कृतसंस्कारपञ्चकः ।
निष्कल्मषमना भूत्वा शरच्चन्द्र इवामलः ॥

३३. तस्मै गोविन्ददासाय यतीन्द्रः करुणाकरः ।
समस्तवैष्णवग्रन्थान् स्वयमेवोपदिश्य च ॥

---

வராய், சிரித்துக் கொண்டே பின்வரும் வார்த்தையைச் சொன்னார்,—"அந்தணர் தலைவரே! எழுந்திருப்பீர்! இனி உமக்குத் துன்பமில்லை. லோகநாத₂னை தே₃வராஜனின் கருணை உம்மிடமிருக்கிறது" என்று யாத₃வரைப் பார்த்துச் சொல்லி, அறிவாளிகளில் தலைவராய், கருணைக்கடலான யதிராஜர் விரைவில் அவரைக் கையால் தூக்கியெடுத்து, அவரை ரக்ஷிப்பதற்கு முயற்சியெடுத்துக் கொண்டார். யதிராஜர் யாத₃வருக்கு மௌஞ்ஜீப₃ந்த₄ம் (உபநயனம்) முதலான எல்லா ஸம்ஸ்காரங்களையும் செய்து, ஆத₃ரத்தோடு பஞ்சஸம்ஸ்காரத்தையும் செய்து, ஸந்யாஸாஶ்ரமத்தையும் அளித்தார். ஸ்வாமியான அவர் கோ₃விந்த₃ தா₃ஸர் என்னும் தா₃ஸ்ய நாமத்தையும் அளித்தார். பஞ்ச ஸம்ஸ்காரம் செய்யப்பெற்று வைஷ்ணவஸ்ரீயுடையவரான யாத₃வர் குற்றமற்ற நெஞ்சுடையவராய், குற்றமற்ற ஶரத்காலசந்திரன் போலே பிரகாசித்தார். அந்த

३४. गोविन्ददासं प्रत्याह लक्ष्मणार्यो विचक्षणः।
पूर्वं त्वया वैष्णवानां यतीनां दूषणं कृतम्॥

३५. तद्दोषपरिहाराय ग्रन्थं कुरु महामते।
अस्मिन्मते महाप्राज्ञ स्वदृढप्रत्ययाय च॥

३६. अनुज्ञातस्तदा तेन लक्ष्मणार्येण यादवः।
चक्रे तद्दोषशान्त्यर्थं यतिधर्मसमुच्चयम्॥

३७. सर्वशास्त्रार्थसारार्थान् समुद्धृत्यार्यसम्मतम्।
त्रिदण्डसंन्यासविधिं योऽवदत्तमनुत्तमम्॥

३८. यतिराजस्य निकटे कञ्चित्कालं स यादवः।
स्थित्वाशु वैष्णवं लोकं जगामात्यन्तनिर्मलम्॥

---

கோ$_3$விந்த$_3$தா$_3$ஸருக்கு கருணைகரரான யதிராஜர் எல்லா ஸ்ரீவைஷ்ணவ க்$_3$ரந்த$_2$ங்களையும் தாமே உபதே$_3$ஶித்தார்.

### யாத$_3$வரின் உஜ்ஜீவநம்

34-39. அறிவாளியான ஸ்ரீ ராமாநுஜர் கோ$_3$விந்த$_3$ தா$_3$ஸரைக் குறித்து, “நீர் முன்பு வைஷ்ணவ ஸங்யாஸி களை நிந்தி$_3$த்து வந்தீர். பேரறிவாளரே! அந்த தோ$_3$ஷம் நீங்குவதற்காகவும், இந்த வைஷ்ணவ மதத்தில் உமக்கு உறுதியான நம்பிக்கை ஏற்படுவதற்காகவும், ஓர் நூலைச் செய்வீர்” என்று கூறினார். இவ்வண்ணம் யதிராஜரிட மிருந்து அநுமதிபெற்ற யாத$_3$வர், தமது முந்திய தோ$_3$ஷம் போவதற்காக யதித$_4$ர்ம ஸமுச்சயம் எனும் நூலைச் செய் தார். நல்லோர்களால் ஆத$_3$ரிக்கப்பெற்ற எல்லா ஶாஸ்த்ர ஸாரப்பொருள்களையும் திரட்டி ஒப்பற்றதான த்ரித$_3$ண்ட$_3$ ஸங்யாஸ விதி$_4$யை அவர் அதில் விவரித்தார். சிறிது காலம் யதிராஜரோடு வாழ்ந்து, குற்றமற்ற விஷ்ணுவின் பரமபத$_3$த்தை யாத$_3$வர் விரைவிலேயே அடைந்தார். அத்திகிரியருளாளனின் நியமனத்தாலே யதிராஜரை ப$_4$க்தி

३९. हस्त्यद्रीश्वरशासनाद्यतिपतिं भक्त्या समाश्रित्य तं
तेनैवाप्तदृढाशयो मुरहरेर्विष्णोः परत्वेऽनिशम्।
सम्यग्वैष्णवतामुपेत्य मतिमान् गोविन्ददासाभिधः
मोक्षं प्राप भवाद्यगम्यमतुलं विष्णोः पदं यादवः॥

इति श्रीप्रपन्नामृते रामानुजचरिते यादवेन वरदराजाज्ञया
यतिराजाश्रयणं नाम पञ्चदशोऽध्यायः॥

## षोडशोऽध्यायः

१. काञ्च्यां यतीन्द्रः करुणाकरेन्द्रः कामादिदोषान् करुणार्द्रदृष्ट्या।
जनस्य सर्वान् प्रणुदन् विरेजे यथाऽऽतपं शीतकरो निशायाम्॥

---

யோடு ஆஶ்ரயித்து, அதனாலேயே முராரியான விஷ்ணுவின் பரத்வத்தில் எப்போதும் உறுதியான கருத்துடையவராய், வைஷ்ணவத்வத்தை நன்கடைந்து, அறிவாளியான கோ₃விந்த₃தா₃ஸர் எனும் யாத₃வர் சிவன் முதலானவர்களாலும் செல்லவரிய விஷ்ணுவின் ஒப்பற்ற பரமபத₃மாகிய மோக்ஷத்தை அடைந்தார்.

ஸ்ரீப்ரபந்நாம்ருதத்தில் ராமாநுஜ சரித்திரத்தில் வரத₃ராஜரின் ஆணையால் யாத₃வர் ராமாநுஜரை ஆஶ்ரயித்தலாகிற பதினைந்தாம் அத்தியாயம் நிறைவுபெற்றது.

## பதினாறும் அத்தியாயம்

# வரத₃ராஜன் ரங்க₃ராஜனுக்கு யதிராஜனை ஸமர்ப்பித்தல்

### காஞ்சியில் யதிராஜர்

1-*5. கருணைக்கடலான யதிராஜர், காஞ்சியில் எல்லா ஜனங்களுடைய காமம் முதலிய குற்றங்களையும், இரவில் சந்திரன் உஷ்ணத்தைப் போக்கடிப்பதுபோலே, கருணை நிறைந்த திருக்கண்ணோக்கினாலே போக்கடித்துக்கொண்டு

२. सर्वे जनास्तस्य कटाक्षपूताः
संत्यक्तसंसारमहाभिलाषाः ।
शिष्या यतीन्द्रस्य यथा महान्तः
चकाशिरे विष्णुपुरे सुरेन्द्राः ॥

३. कालहस्तिमाश्रितस्य गोविन्दस्य यतीश्वरः ।
हितार्थं प्रेषयामास मातुलाय महात्मने ॥

४. लेख्यं श्रीशैलपूर्णाय लक्ष्मणार्यः कृपानिधिः ।
यतिराजः प्रतिदिनं शिष्येभ्यः प्रेमपूर्वकम् ॥

५. शास्त्राण्युपदिशन् तस्थौ काञ्च्यां विष्णुपरायणः ।
यामुनाचार्यशिष्यास्ते रङ्गक्षेत्रनिवासिनः ॥

६. वैभवं यतिराजस्य श्रुत्वा हर्षसमन्विताः ।
सम्यक् प्रणम्य रङ्गेशं लोकेशं भक्तवत्सलम् ॥

---

பிரகாசித்தார். எல்லா ஜனங்களும் ஶிஷ்யர்களாகி, அவருடைய கடாக்ஷத்தால் பரிஶுத்தி பெற்றவர்களாய், ஸம்ஸாரத்தில் பேராசை விடப்பெற்றவர்களாய், விஷ்ணு லோகத்தில் நித்யஸூரிகள் போலே பிரகாசித்தார்கள். கருணைக்கடலான யதிராஜராம் ராமானுஜர், காளஹஸ்தி யில் சைவராயிருந்த கோவிந்தரைத் திருத்தும்பொருட்டு, தமது மாமாவான திருமலைநம்பிக்குக் கடிதம் அனுப்பினர். யதிராஜர் தினந்தோறும் சிஷ்யர்களுக்கு அன்போடு ஶாஸ்த்ரங்களை உபதேஶித்துக்கொண்டு காஞ்சியில் தேவப்பெருமாளையே எல்லாமாகக் கொண்டவராய் வாழ்ந்து வந்தார்.

**ஸ்ரீரங்க ரஸிகப்ரார்த்தனை.**

5*-*8. ஸ்ரீரங்கக்ஷேத்திரத்தில் வாழும் யாமுநாசார்ய ஶிஷ்யர்கள் யதிராஜருடைய பெருமையைக் கேள்விப்பட்டு உகந்தவர்களாய், லோகநாதனாய், பக்தராவியான அரங்கனை

७. विनयावनता भूत्वा वचनं चेदमब्रुवन्।
असाकं रक्षणार्थाय यतिराजो जगद्गुरुः॥

८. आनेतव्यः प्रयत्नेन त्वयात्र करुणाकरः।
स तद्वाक्यं निशम्याशु रङ्गेशो भक्तवत्सलः॥

९. प्राहिणोत् देवराजाय लेख्यं तत्कार्यसिद्धये।
वाचयामास वरदः तल्लेख्यं भक्तिपूर्वकम्॥

१०. एतावन्तं चिरं कालं देवराज यतीश्वरः।
भगवंस्त्वत्समीपे तु लक्ष्मणार्यः स्थितोऽभवत्॥

११. तमिदानीं दयासिन्धो मह्यं देहि यतीश्वरम्।
एवं ज्ञात्वा पत्रिकार्थं प्रहसन् वरदोऽब्रवीत्॥

---

நன்கு அடிவணங்கி, அடக்கத்தால் பணிவுற்றவர்களாய், இவ்வார்த்தையைக் கூறினர்கள், — "கருணைக்கடலாய், லோகாசார்யரான யதிராஜர் எங்களை ரக்ஷிப்பதற்காக தேவரீரால் இங்கு முயன்று அழைத்துவரப்படவேண்டும்" என்று.

### அரங்கனின் முதல் முயற்சி

8*-*14. பத்தராவியான திருவரங்கநாதன் அவ்வார்த்தையைக் கேட்டு, அவர்கள் விரும்பிய காரியம் நிறைவேறுவதற்காக தே₃வப் பெருமாளுக்கு (ஓர் அந்தணர் மூலம்) ஸ்ரீமுகம் அனுப்பினர். அதைப்பெற்ற வரத₃ன் ப₄க்தியோடு அதை வாசிக்கச் செய்தார். (அது பின் வருமாறு இருந்தது:—) "தேவராஜப்பெருமானே! இத்தனை நீண்டகாலம் யதிகட்கிறைவரான ஸ்ரீ ராமானுஜர் தேவரீருக்கு அருகிலேயே இருந்துவிட்டார். கருணைக் கடலே! அந்த யதிகள் தலைவரை இப்போது எனக்குத் தரவேணும்" என்று இவ்வண்ணம் அந்த ஸ்ரீமுகம் எழுதப்பட்டிருப்பதை அறிந்த வரத₃ன் சிரித்துக்கொண்டே பின்வருமாறு கூறினர் — "கொடுப்பதையே இயல்வாகக்

१२. दानशीला नरा लोके याचितानि ददत्यलम्।
अभिमतं न प्रदास्यन्ति कितवस्तावकान् क्वचित्॥

१३. एवमुक्त्वा द्विजवरं गच्छेत्याह यथागतम्।
स द्विजो रङ्गमागत्य रङ्गेशाय महात्मने॥

१४. सर्वं निवेदयामास वृत्तान्तं विष्णुसेवकः।
तस्य वाक्यं तदाकर्ण्य रङ्गेशो निपुणो महान्॥

१५. वररङ्गं समाहूय वचनं चेदमब्रवीत्।
यामुनाचार्यसत्पुत्र! देवगानविशारद॥

१६. गत्वा सत्यव्रतं क्षेत्रं देवराजं रमापतिम्।
नाट्येन देवगानेन स्वशक्त्या च महामते॥

---

கொண்ட வள்ளல்கள் இவ்வுலகில் யாசிப்பவர்களுக்கு வேண்டிய மட்டும் கொடுக்கவே செய்வார்கள். ஆனாலும், (வள்ளல்கள் தங்களுடைய; உயிரினும் சிறந்ததாக) அபி₄ மானித்திருக்கும் விஷயத்தைப் பறிக்கவேண்டி வஞ்சனை யாகத் துதிக்கிறவர்களுக்கு அவ்விஷயத்தைக்கொடுத்து விட மாட்டார்கள்" என்று கூறி, அவ்வந்தணர்தலைவரை 'வந்த வழியே போம்' என்று சொல்லிவிட்டார் தே₃வப் பெருமாள். விஷ்ணுகிங்கரரான அவ்வந்தணர்தலைவரும் ஸ்ரீரங்க₃ம் வந்து அர்ச்சாவதார சக்ரவர்த்தியான அரங்க னுக்கு நடந்தது அனைத்தையும் விண்ணப்பித்தார்.

## அரங்கனின் தந்திரமுயற்சி

14*-*19. மிகவும் ஸமர்த்த₂ராய், பெரிய பெருமாள் என்று பெயர்பெற்ற அரங்கன் வரத₃னுடைய அவ்வார்த்தை யைக் கேட்டு, திருவரங்கப்பெருமாளரையரை அழைத்து, பின்வருமாறு கூறினர்.—"யாமுநாசார்யரின் நல்ல குமா ரரே! தே₃வக₃ானத்தில் வல்லவரே! பேரறிவாளரே! வைஷ்ணவர் தலைவரே! ஸத்யவ்ரத (காஞ்சீ) க்ஷேத்ரத்

१७. प्रलोभयित्वा वरदं मदर्थं वैष्णवोत्तम।
अन्यान्यनर्घवस्तूनि प्रदत्तान्यपि तेन ते॥

१८. न गृहाण तमेव त्वं याचयस्व यतीश्वरम्।
येन केनाप्युपायेन यतिराजं जगद्गुरुम्॥

१९. आदाय शीघ्रमागच्छ तं गायकवरोत्तम।
इत्युक्तस्तेन हरिणा वररङ्गस्त्वरान्वितः॥

२०. काञ्चीमवाप सहसा तमानेतुं यतीश्वरम्।
काञ्चीपूर्णादयस्सर्वे वररङ्गस्य धीमतः॥

२१. विज्ञायागमनं तस्य गुरुपुत्रस्य सत्वरम्।
प்रतिजग्मुर्महात्मानं शङ्खकाहलनिस्स्वनैः॥

---

திற்குச் சென்று பெருந்தேவிநாயகனை தே₃வராஜனை— உமது நாட்டியத்தாலும், தே₃வகா₃னத்தாலும் உமது ஶக்தி முழுவதையுங்கொண்டு என் கார்யத்தின் பொருட்டு மயங்கச்செய்து வரம்பெற்று, விலைமதிக்கவொண்ணாத மற்ற பொருள்களை அவர் கொடுத்தாலும் ஏற்காமல் யதிகட்கிறை வரையே நீர் யாசிப்பீர்! பாடவல்லாரில் தலைவரே! ஏதாவதொரு தந்திரத்தைச் செய்து லோகாசார்யரான யதீந்த்₃ரரை அழைத்துக்கொண்டு விரைவில் இங்குவாரும்" என்று.

### அரையர் காஞ்சியடைதல்

19*-*27. இவ்வண்ணமாகப் பெரிய பெருமாளால் நியமிக்கப்பெற்ற திருவரங்கப் பெருமாளரையர், யதிராஜரை அழைத்துவருவதற்காக, அதிவேக₃மாகக் காஞ்சிக்குச் சென்றார். அறிவாளியாய், ஆசார்ய புத்ரரான அரையருடைய வருகையைக் கேள்விப்பட்டு, திருக்கச்சி நம்பி முதலான எல்லா ஸ்ரீவைஷ்ணவர்களும் விரைந்து சென்று ஶங்க₂ம், காளம் (திருச்சின்னம்) முதலானவற்றின் முழக்கத்தோடு அவரை எதிர் கொண்டழைத்தனர்.

२२. यामुनाचार्यतनयमर्घ्यपाद्यादिकैः परम् ।
पूजार्हं पूजयामासुः काञ्चीपुरनिवासिनः ॥

२३. वररङ्गः संप्रहृष्टः काञ्चीपूर्णादिभिस्तदा ।
करिशैलं समारुह्य कनकाम्बरधारिणः ॥

२४. ववन्दे चरणौ तस्य देवराजस्य भक्तितः ।
तत्तीर्थं शठकोपं च गृहीत्वा भक्तिपूर्वकम् ॥

२५. काञ्चीपूर्णेन निर्दिष्टे गृहे वासं तदाऽकरोत् ।
गुरुपुत्राय सहसा तस्मै वैष्णवपुङ्गवः ॥

२६. प्रसादान्यखिलान्याशु काञ्चीपूर्णः प्रदापयत् ।
अध्वग्लानिनिवृत्त्यर्थं वररङ्गः कुशाग्रधीः ॥

२७. तं वासरं व्यपनयत्तिष्ठन् वेश्मनि वैष्णवः ।
ततः कल्ये समुत्थाय कृतपूर्वाह्णिकक्रियः ॥

---

காஞ்சீபுரத்திலுள்ளார் அனைவரும்—யாமுநாசார்யரின் குமாரராய், மிகுந்த பூஜைக்குரியவரான அவரை அர்க்₄யம், பாத்₃யம் முதலானவற்றை அளித்து ஆராதி₄த்தனர். அவ்வரையரும் மிகவுகந்து, திருக்கச்சிநம்பி முதலானோரோடு கூடக் கரிகிரி₃யின்மேல் ஏறி, பீதாம்ப₃ரத₄ாரியான தே₃வப் பெருமாளின் திருவடிகளை ப₄க்தியோடு வணங்கினார். அவரது தீர்த்த₂ஶட₂கோபங்களையும் ப₄க்தியோடு பெற்று, திருக்கச்சிநம்பி ஏற்பாடு செய்த வீட்டில் தங்கினார். வைஷ்ணவர்தலைவரான திருக்கச்சிநம்பியும் ஆசார்ய புத்ரரான அவர்க்கு எல்லாவித₄மான ப₄க₃வத் ப்ரஸாத₃ங் களையும் அளிக்கச்செய்தார். வழிநடந்த களைப்பு ஆறு வதற்காக, நுண்ணறிவாளராய் வைஷ்ணவரான திரு வரங்கப்பெருமாளரையர் அவ்வீட்டில் அந்த ஒரு நாளைக் கழித்தார்.

२८. वेषं रुचिरमास्थाय सन्नद्धो नाट्यकर्मणि ।
देवराजस्य सेवार्थं वररङ्गो जवात् ययौ ॥

२९. त्यागमण्टपमासाद्य वरदः करुणाकरः ।
सर्वैः परिजनैर्देव्या श्रिया भूम्या च शोभितः ॥

३०. स्वतेजसा दश दिशः भासयन् भानुमानिव ।
मन्दस्मितमुखः श्रीमान् तस्थौ तत्र जगत्पतिः ॥

३१. वररङ्गः प्रणम्याथ वरदं भक्तवत्सलम् ।
देवगानेन महता जगावग्रे जगत्पतेः ॥

३२. चकार बहुधा नाट्यं वरदस्य स वैष्णवः ।
देवगानेन देवेशः सन्तुष्टो नर्तनेन च ॥

---

### வரத3னின் வரதா3னம்

27*-35. அதற்குப்பின் திருவரங்கப் பெருமாளரையர் சிற்றஞ் சிறுகாலே எழுந்திருந்து காலைக்கடன்களைச்செய்து, தம்மை நன்கு அலங்கரித்துக் கொண்டவராய், நாட்டிய மாடுவதற்குப் பாங்காகத் தம்மை அமைத்துக்கொண்டு, தேவப்பெருமாளை ஸேவிப்பதற்காக வேகமாகச் சென்றார். லோகநாத2னாய், கருணாநிதி4யாய், ஶ்ரிய:பதியான வரத3னும், த்யாக3மண்டபத்தை அடைந்து, எல்லாப் பரிஜனங்களோடும், ஸ்ரீ பூ4மிதே3விகளோடும் சேர்ந்து விளங்காநிற்பவனாய், தன் தேஜஸ்ஸாலே ஸூர்யனைப்போலே பத்து தி3க்குகளையும் விளங்கச்செய்பவனாய், புன்சிரிப்போடு கூடியவனாய் எழுந்தருளியிருந்தான். அரையரும் ப4க்தவத்ஸலனான வரத3னை வணங்கி, லோகநாத2ன் திருமுன்பே மிகச்சிறந்த தே3வகா3னத்தாலே பாடினார். விஷ்ணு ப4க்தரான அவர் வரதன் முன்னே பலவித4மாக நாட்டியமும் ஆடினார். அவருடைய தே3வகா3னத்தாலும் நாட்டியத்தாலும் மிகவுகந்த லோகநாத2னான தே3வராஜன்,

३३. अनर्घाभरणादीनि ददौ तस्मै जगत्पतिः ।
वररङ्गस्तानि दृष्ट्वा वरदं प्राह बुद्धिमान् ॥

३४. किं प्रयोजनमेतेन मम भक्तहिते रत ।
मया यद्वाञ्छितं नाथ तत्प्रदेह्यधुनाऽऽदरात् ॥

३५. तस्य वाक्यं तदाकर्ण्य वरदः प्राह तं प्रति ।
मां च लक्ष्मीं विना वत्स यद्वाञ्छसि ददामि तत् ॥

३६. देवराजस्य वचनं श्रुत्वाऽसौ वैष्णवोत्तमः ।
वररङ्गः संप्रहृष्टो वरदं वाक्यमब्रवीत् ॥

३७. रङ्गेशाय दयासिन्धो यतिराजं समर्पय ।
वाञ्छा ममेयं वरद नास्त्यन्या जगदीश्वर ॥

---

விலைமதிப்பற்ற திருவாப₄ரணங்கள் முதலானவற்றை அவர்க்கு அளித்தான். அறிவாளியான அரையர் அவற்றைப்பார்த்து, வரத₃னைக்குறித்து, "எம்பிரானே! ப₄க்தர்களுக்கு நன்மை செய்பவனே! இவற்ருல் எனக்கு என்ன பயன்? நான் விரும்புகிறதை இப்போதே எனக்கு உகந்து அளிக்கவேணும்" என்று கூறினுர். அவருடைய அந்த வாக்யத்தைக்கேட்டு. "குழந்தாய்! என்னையும் ஸ்ரீதே₃வி முதலான நாய்ச்சிமாரையும் தவிர்ந்த எதை நீ கேட்டாலும் உனக்குத் தருகிறேன்" என்று அரையர்க்கு வரமளித்தான் வரத₃ன்.

## வரத₃னின் ஶோகம்

36-40. தே₃வராஜனின் அவ்வார்த்தையைக் கேட்ட வைஷ்ணவோத்தமரான திருவரங்கப் பெருமாளரையர் மிகவுகந்தவராய், "லோகநாத₂னே! கருணைக்கடலே! யதிராஜனை ரங்க₃ராஜனுக்கு ஸமர்ப்பிப்பீர். வரத₃னே! இதுவே என் விருப்பம். வேறு எதையும் அடியேன் வேண்டவில்லை. மஹாத்மாவான ராமாநுஜனிடமே அரங்க

२८. वेषं रुचिरमास्थाय सन्नद्धो नाट्यकर्मणि।
देवराजस्य सेवार्थं वररङ्गो जवात् ययौ॥

२९. त्यागमण्टपमासाद्य वरदः करुणाकरः।
सर्वैः परिजनैर्देव्या श्रिया भूम्या च शोभितः॥

३०. स्वतेजसा दश दिशः भासयन् भानुमानिव।
मन्दस्मितमुखः श्रीमान् तस्थौ तत्र जगत्पतिः॥

३१. वररङ्गः प्रणम्याथ वरदं भक्तवत्सलम्।
देवगानेन महता जगावग्रे जगत्पतेः॥

३२. चकार बहुधा नाट्यं वरदस्य स वैष्णवः।
देवगानेन देवेशः सन्तुष्टो नर्तनेन च॥

---

### வரத₃னின் வரத₃ானம்

27*-35. அதற்குப்பின் திருவரங்கப் பெருமாளரையர் சிற்றஞ் சிறுகாலே எழுந்திருந்து காலைக்கடன்களைச்செய்து, தம்மை நன்கு அலங்கரித்துக் கொண்டவராய், நாட்டிய மாடுவதற்குப் பாங்காகத் தம்மை அமைத்துக்கொண்டு, தேவப்பெருமாளை ஸேவிப்பதற்காக வேகமாகச் சென்றார். லோகநாத₂னாய், கருணாநிதி₄யாய், ஶ்ரிய:பதியான வரத₃னும், த்யாக₃மண்டபத்தை அடைந்து, எல்லாப் பரிஜனங் களோடும், ஸ்ரீ பூ₄மிதே₃விகளோடும் சேர்ந்து விளங்கா நிற்பவனாய், தன் தேஜஸ்ஸாலே ஸூர்யனைப்போலே பத்து தி₃க்குகளையும் விளங்கச்செய்பவனாய், புன்சிரிப் போடு கூடியவனாய் எழுந்தருளியிருந்தான். அரையரும் ப₄க்தவத்ஸலனை வரத₃னை வணங்கி, லோகநாத₂ன் திருமுன்பே மிகச்சிறந்த தே₃வகா₃னத்தாலே பாடினார். விஷ்ணு ப₄க்தரான அவர் வரதன் முன்னே பலவித₄மாக நாட்டியமும் ஆடினார். அவருடைய தே₃வகா₃னத்தாலும் நாட்டியத்தாலும் மிகவுகந்த லோகநாத₂னை தே₃வராஜன்,

४३. दास्यामीति प्रतिश्रुत्य पूर्वं मे वाञ्छितं हरे।
त्वया संप्रति मां देव न ददामीति भाषितम्॥

४४. द्विरुक्तिस्तव नास्तीति जनास्सर्वे वदन्ति हि।
त्वयोक्तान्यवतारेषु वचनानि स्मराऽधुना॥

४५. चिन्तां मा कुरु देवेश त्वया किं साध्यतेऽधुना।
हर्षेण रङ्गराजाय यतिराजं समर्पय॥

४६. इत्युक्त्वा वरदं देवं वररङ्गस्तदा हरिम्।
आगच्छ यतिराजेति रङ्गं प्रति महामते॥

---

பின் 'ஏன் கொடுத்தோம்'என்று கலங்காதவராகவும்,உரைக்கிறார்கள். எம்பெருமானே! நான் வேண்டியதை 'அளிக்கிறேன்' என்று முதலில் என்னிடம் கூறிவிட்டு, நீர் இப்போது, 'கொடுக்கமாட்டேன்' என்கிறீர். நீர் (ப்ரதிஜ்ஞைக்கு முரணாக) இரண்டு வார்த்தை பேசமாட்டீர் என்று எல்லா ஜனங்களும் சொல்லுகிறார்கள். '**ராமோ த்₃விர் நாऽபி₄ப₄ாஷதே**' [ராமன் (ஒன்று சொல்லி, அதற்கு முரணாக மற்றொன்று சொல்லி இப்படி) இரண்டு வார்த்தை பேசமாட்டான்.] என்று ஸ்ரீராமாவதாரத்திலும், '**க்ருஷ்ணே! ந மே மோக₄ம் வசோ ப₄வேத்**' [த்₃ரௌபதி₃யே! என் வார்த்தை வீணாகாது] '**அந்ருதம் நோக்தபூர்வம் மே ந ச வக்ஷ்யே கதா₃சந**' [இதற்குமுன் நான் பொய் சொன்னது மில்லை; இனி ஒருபோதும் சொல்லவும் மாட்டேன்.] என்று ஸ்ரீ க்ருஷ்ணாவதாரத்திலும் நீர் சொன்னதை இப்போது நினைத்துப் பார்ப்பீர். தே₃வராஜனே! கலக்கத்தைக் கைவிடுவீர். நீர் இப்போது என்ன செய்ய முடியும்? யதிராஜனை ரங்க₃ராஜனுக்கு உகப்புடன் அளிப்பீர்!" என்று தே₃வப்பெருமாளிடம் சொல்லிவிட்டு, திருவரங்கப் பெருமாளரையர், 'யதிராஜரே! பேரறிவாளரே! ஸ்ரீரங்க₃த்திற்கு வருவீர்!' என்று சொல்லி

४७. ब्रुवाणस्त्वरया पाणिं जग्राह यतिभूपतेः ।
यतिराजस्तदा भूम्यां देवराजाय भक्तितः ॥

४८. कृत्वा प्रणामं साष्टाङ्गं श्रीहस्तिगिरिवासिने ।
तेनानुज्ञापितो धीमान् वररङ्गेण संयुतः ॥

४९. मठमागत्य तरसा सर्ववृत्तान्तमादरात् ।
स्वशिष्येभ्यो विधायाऽथ लक्ष्मणार्यस्तपोधनः ॥

५०. प्रतस्थे वररङ्गेण रङ्गक्षेत्रं महात्मना ।
यतिराजस्य तद्वाक्यं श्रुत्वा श्रोत्रसुखावहम् ॥

५१. कूरेशदाशरथ्यादिशिष्याः सन्तुष्टमानसाः ।
अनुजग्मुर्लक्ष्मणार्यं रङ्गराजदिदृक्षया ॥

---

வேக₃மாக யதிராஜருடைய கையைப் பிடித்துக்கொண்டார். அறிவாளியான யதிராஜரும் ப₄க்தியோடு அத்திகி₃ரியப்பனை தே₃வப்பெருமாளுக்கு பூ₄மியில் விழுந்து ஸாஷ்டாங்க₃மாக வணக்கம் செலுத்தி, அவருடைய அனுமதிபெற்று, அரையரோடு சேர்ந்தார்.

## யதிராஜரின் ரங்க₃யாத்ரை

49-52. தவச் செல்வரான யதிராஜரும் விரைவில் மட₂த்தை அடைந்து, எல்லாச் செய்தியையும் தன் ஶிஷ்யர்களுக்குக் கூறி, மஹாத்மாவான திருவரங்க₃ப் பெருமாளரையரோடு ஸ்ரீரங்க₃த்திற்குப் புறப்பட்டார். செவிக்கினிய அந்த யதிராஜ வாக்யத்தைக் கேட்ட கூரத்தாழ்வான், முதலியாண்டான் முதலான சிஷ்யர்கள் உகந்த நெஞ்சினராய், ஸ்ரீரங்க₃ராஜனைக் காணவிரும்பி ஸ்ரீராமாநுஜரைப் பின் தொடர்ந்தனர். இவ்வுலகில் புதிதாக மணமான பெண் தாய்வீட்டிலிருந்து கணவனது வீடு செல்லும்போது, தாய் தந்தையரை நினைத்துக் கண்ணீர்

५२. लोके मातृगृहात् यथा पतिगृहं याता नवोढाङ्गना
ध्यायन्ती पितरौ हृदाऽश्रुनयना तद्वद्यतीनां प्रभुः ।
त्यक्त्वा लक्ष्मणदेशिकः स महतीं काञ्चीं कथञ्चित्तदा
चिन्ताशोकसमन्वितो हरिपरो रङ्गं प्रतस्थे शनैः ॥

इति श्रीप्रपन्नामृते रामानुजचरित्रे रङ्गराजाय
यतिराजसमर्पणं नाम षोडशोऽध्यायः ॥

सप्तदशोऽध्यायः

१. रामानुजो ददर्शाथ कावेरीं कलिनाशिनीम् ।
शुद्धां मनोहरां दिव्यां अपङ्कां पङ्कजावृताम् ॥

२. स्वच्छतोयसमायुक्तां श्रीरङ्गोत्सङ्गगामिनीम् ।
तस्यां विगाह्य कावेर्यां शिष्यैस्सह यतीश्वरः ॥

---

விடுவதுபோலே. யதிராஜரும் ஒருவாறு காஞ்சி மாநக ரத்தைக் கைவிட்டு, கவலையால் வருந்தியவராய், எம் பெருமானைக் காண விரும்பி ஸ்ரீரங்க₃த்திற்கு மெள்ளமெள்ளச் சென்றார்.

ஸ்ரீப்ரபந்நாம்ருதத்தில் ஸ்ரீராமாநுஜ சரித்திரத்தில்
ரங்க₃ராஜருக்கு யதிராஜரை ஸமர்ப்பித்தலாகிற பதினாறுவது
அத்தியாயம் நிறைவுபெற்றது.

## பதினேழாம் அத்தியாயம்

## ஸ்ரீ ராமாநுஜர் உடையவரானது

### ஸ்ரீரங்க₃ப்ராப்தி

1-6. ஸ்ரீரங்க₃த்தை அணுகியதும் — கலிதோ₃ஷத்தை அழிக்கும் பெருமைபெற்றதாய், பரிஶுத்₃த₄மானதாய், அழகியதாய், குற்றமற்றதாய், கலக்கமற்றதாய், தாமரைகள் நிறைந்ததாய், தெளிந்த நீரையுடையதாய், ஸ்ரீரங்க₃த்தின்

३. सम्यक् धृत्वोर्ध्वपुण्ड्राणि सैकते सुमनोहरे।
मन्त्रराजं जपंस्तस्थौ लक्ष्मणार्यो हरिप्रियः॥

४. वररङ्गः पुरा शीघ्रं श्रीरङ्गं प्राप हर्षतः।
आरंभकर्मसंसिद्धिं रङ्गेशाय निवेदितुम्॥

५. पूर्णाचार्येण संयुक्तो यामुनार्यस्य नन्दनः।
रामानुजस्यागमनं रङ्गेशाय न्यवेदयत्॥

६. वररङ्गस्य वचनं श्रुत्वा हर्षसमन्वितः।
रङ्गेशो वररङ्गाय संमानं बहुधाऽकरोत्॥

७. रङ्गनाथस्ततः पूर्णमुवाच वचनं शुभम्।
इदानीं बहुमानेन कनकछत्रचामरैः॥

---

மடியில் தவழ்வதான காவேரியைக் கண்டார் ராமாநுஜர். ஶிஷ்யர்களோடு கூட அக்காவேரியில் குடைந்து நீராடி, எம்பிராற்கினியவராய், யதிராஜரான ராமாநுஜர், அதி னுடைய மிக அழகிய மணற்பரப்பில் அமர்ந்து ஊர்த்₄வ புண்ட்₃ரங்களை நன்கு அணிந்துகொண்டு மந்த்ரராஜமான அஷ்டாக்ஷர மஹாமந்திரத்தை ஜபித்துக்கொண்டு எழுந் தருளியிருந்தார். திருவரங்கப் பெருமாளரையர், தொடங்கிய கார்யம் நிறைவேறியதை ரங்கராஜனுக்குத் தெரிவிப்பதற் காக யதிராஜருக்கு முன்னே உகப்போடு ஸ்ரீரங்க₃த்தை அடைந்தார். பெரியநம்பியோடு கூடிய யாமுநாசார்ய புத்ரரான திருவரங்கப் பெருமாளரையர் ராமாநுஜருடைய வரவை ரங்கராஜனுக்கு விண்ணப்பித்தார். அரையருடைய வார்த்தையைக்கேட்ட அரங்கநகரப்பன் மிகவுகந்தவனாய், அவருக்குப் பலவித₄மாக ஸம்மானங்களைச் செய்தருளினான்.

## அரங்கனின் வரவேற்பு

7-16. அதன்பிறகு, அரங்கநகரப்பன் பெரியநம்பியிடம் மங்க₃ளமான (பின்வரும்) வார்த்தையைச் சொன்னார்,—

८. अस्मद्दिव्यकथाः पूर्णाः पठद्भिर्वैष्णवोत्तमैः ।
देशिकेन्द्रैर्महाभागैः अन्यैश्च पुरवासिभिः ॥

९. वाचामगोचरेणैव वैभवेन यतीश्वरम् ।
तत्र गत्वा लक्ष्मणार्यं आनयस्व जवादिति ॥

१०. रङ्गेशस्य वचः श्रुत्वा पूर्णार्यः पूर्णवत्सलः ।
प्रत्युज्जगाम सहसा वैष्णवैर्वेदपारगैः ॥

११. समस्तैः परिवारैस्तं लक्ष्मणार्यं यतीश्वरम् ।
रङ्गराजः स्वयं प्रीत्या निर्ययावग्रमण्डपे ॥

१२. कृतनित्यक्रियो धीमान् लक्ष्मणार्यस्तपोधनः ।
विलोक्य निवहं तेषां वैष्णवानां महात्मनाम् ॥

१३. तत्सेवाभिमुखः श्रीमान् प्रतस्थे शिष्यसंवृतः ।
आयान्तं लक्ष्मणाचार्यं दृष्ट्वा हर्षसमन्विताः ॥

---

"இப்போது கோயில் வெகுமதிகளோடும் பொன்குடை, பொற்சாமரம் முதலானவற்றோடும், எம்முடைய தி₃வ்ய சரித்திரங்களைப் பூர்ணமாகப் பாராயணம் செய்யும் வைஷ்ணவர்களோடும், பெரியோர்களான ஆசார்ய ஶ்ரேஷ்ட₂ர்களோடும், மற்றுமுள்ள இங்நகூ₃ரத்தார்களோடும், வாக்குக்கு நிலமல்லாத வைப₄வத்தோடு காவேரிக்குச் சென்று, யதிராஜரான ராமாநுஜரை விரைவில் அழைத்து வருவீர்" என்னும் அரங்கனின் வார்த்தையைக்கேட்ட பெரியநம்பி, நிறைந்த அன்பினராய், வேத₃ங்கரைகண்ட வைஷ்ணவர்களோடும், எல்லாப் பரிவாரங்களோடும் யதிராஜரான ஸ்ரீராமாநுஜரை உடனே எதிர்கொண்டு அழைக்கச்சென்றார். ரங்க₃ராஜனும் தானே உகந்து முன் மண்டபத்திற்கு எழுந்தருளினன். அறிவாளியாய், தவச் செல்வரான ராமாநுஜரும், நித்யகர்மங்களைச் செய்து,

१४. तूर्णं गत्वा तत्समीपं तदा भागवतोत्तमाः ।
भूम्यां प्रणामं सञ्चक्रुः यतिराजाय भक्तितः ॥

१५. रामानुजश्च पूर्णाय स्वाचार्याय महात्मने ।
अकरोद्वन्दनं तस्मै मुदा भक्त्या च सत्वरम् ॥

१६. लक्ष्मणार्यादयस्सर्वे रङ्गक्षेत्रनिवासिनः ।
अन्योन्यवन्दनं चक्रुर्वैष्णवाश्च महौजसः ॥

१७. पूर्णार्यं लक्ष्मणाचार्यः स्वाचार्यं देशिकप्रियः ।
निधाय भक्त्या पुरतः श्रीवैष्णवशिखामणिः ॥

१८. श्रीवैष्णवानां निवहैः संयुक्तः सत्वरं गुरुः ।
संप्राप रङ्गनिलयं सप्तप्राकारशोभितम् ॥

---

மஹாத்மாக்களான வைஷ்ணவர்களின் திரளைக் கண்டு அவர்களை ஸேவிப்பதற்காக ஶிஷ்யர்களோடு புறப்பட்டார். அந்த ப₄ாக₃வதோத்தமர்களும், ஸ்ரீராமாநுஜர் எழுந்தருள் வதைக்கண்டு உகப்புடையவர்களாய், அவரருகே விரைந்து சென்று, யதிராஜரை ப₄க்தியுடன் பூ₄மியில் விழுந்து வணங்கினார்கள். ராமாநுஜரும் தமது ஆசார்யராய், மஹாத்மாவான பெரியநம்பியை விரைந்தடைந்து உகப் போடும் ப₄க்தியோடும் வணங்கினர். ராமாநுஜரும், அவருடைய ஶிஷ்யர்கள் அனைவரும், ஸ்ரீரங்க₃த்தில் வாழும் பெரியோர்களான வைஷ்ணவர்களும் ஒருவரையொருவர் வணங்கினர்.

## எதிர்கொண்டழைத்தல்

17-*24. ஸ்ரீவைஷ்ணவர்களால் தலையில் வைத்துப் போற்றப்படுகிறவராய், ஆசார்யரிடம் ப₄க்தியுடையவரான ஸ்ரீராமாநுஜாசார்யர், ப₄க்தியோடு தமது ஆசார்யரான பெரியநம்பியை முன்னிட்டுக்கொண்டு, ஸ்ரீ வைஷ்ணவர் திரளோடு கூடியவராய், ஏழு மதிள்களால் அலங்கரிக்கப்

१९. अनेकगोपुरयुतं मण्डपैः प्रविराजितम् ।
देवालयं प्रविश्याशु क्रमेण यतिशेखरः ॥

२०. विष्वक्सेनादिदेवेभ्यः कृत्वा वन्दनमादरात् ।
रङ्गराजस्य सेवार्थं विमानं रङ्गमध्यगात् ॥

२१. तदा रङ्गेश्वरः श्रीमान् यतिराजस्य धीमतः ।
प्रतस्थेऽभिमुखं देवः कृपया भक्तवत्सलः ॥

२२. स्वस्याभिमुखमायान्तं रङ्गेशं वीक्ष्य विस्मितः ।
किमेतदिति संचिन्त्य समीपं प्राप्य रङ्गिणः ॥

२३. संसेव्य चरणौ तस्य यतीन्द्रो वाक्यमब्रवीत् ।
रङ्गनाथ हरे विष्णो त्वद्दासस्य जगत्पते ॥

२४. ममाभिमुखमायातुं युष्माकं न हि सांप्रतम् ।
यतिराजस्य तद्वाक्यं श्रुत्वा रङ्गस्तमब्रवीत् ॥

---

பெற்ற திருவரங்கம் பெரியகோயிலே வேக₃மாகச் சென்றடைந்தார். பல கோ₃புரங்களோடு கூடியதும், மண்டபங்களால் விளங்காநிற்பதுமான பெரியகோயிலினுள் முறையாக நுழைந்து, விஷ்வக்ஸேநர் முதலான நித்யஸூரிகளுக்கு அன்போடு வணக்கம் செலுத்தி, திருவரங்க₃ராஜனை ஸேவிப்பதற்காக ஸ்ரீரங்க₃விமானத்தை அடைந்தார். அப்போது ப₄க்தவத்ஸலனும், *ஸ்ரீ*ய:பதியான ரங்க₃நாத₂னுகிற நம்பெருமாள், யதிகட்கிறைவனின் முன் கருணையோடு எதிர்கொண்டழைப்பவராய் எழுந்தருளினர். தன்னை எதிர்கொண்டழைக்கவரும் அரங்கனைக் கண்டு வியப்புற்ற ராமாநுஜர், 'இதுவென்!' என்று சிந்தித்து, அரங்கனின் அருகே வந்து, அவனது திருவடிகளை வணங்கி, பின்வருமாறு சொன்னர், — "லோகநாத₂னே! ஹரே! விஷ்ணோ! ரங்க₃நாத₂! உமது அடியானை என்னை தேவரீர் எதிர்கொண்டழைப்பது தக்கதல்லவே" என்று.

२५. आगता मे यथा यूयं वयं तेऽभिमुखं तथा।
को वात्रातिशयस्तावत् विद्यते यतिभूमिप॥

२६. द्वयोर्विभूत्योस्सर्वेषां आश्रितानां यतीश्वर।
जनानामभयं दत्वा योगक्षेमं वहन् वस॥

२७. एतावन्तमहं कालं रक्षंस्तानास्थितोऽभवम्।
संप्रत्यहं विश्रमितुमिच्छामि शृणु मद्वचः॥

२८. अधुना मद्वचः श्रुत्वा लोकान् रक्षस्व शीघ्रतः।
समस्तानि च कार्याणि कुर्वन्नस्माकमादरात्॥

२९. सर्वान् जनान् शेषभूतान् कृत्वा तव यतीश्वर।
सुपोष्यास्मत्परिकरं शेषी भूत्वा महामते॥

---

## உப₄யவிபூ₄திச் செல்வமளித்தல்

24*-33. யதிராஜரின் அவ்வாக்யத்தைக்கேட்ட ரங்க₃ ராஜன் பின்வருமாறு அருளினன்:—"நீர் என்னைக்குறித்து (நெடுந்தூரம்) வந்ததுபோலே, நாம் உம்மைக் குறித்து (நாலடி) நடந்து வந்தோம். யதிராஜரே! அப்படியிருக்க, நான் நடந்துவந்ததில் சிறப்பு என்ன? யதிகட்கிறைவரே! உப₄யவிபூ₄தியிலுமுள்ள எல்லாச் சேதனர்களுக்கும் அப₄யமளித்து, அவர்களுடைய யோக₃க்ஷேமங்களை உமது பேருகக் கொண்டவராய் வாழ்வீர். இவ்வளவுநாள் நான் அவர்களை ரக்ஷித்துவந்தேன். இப்போது ஓய்வு பெற விரும்புகிறேன். என் வார்த்தையைக் கேட்பீர். எனது நியமனப்படி உலகங்களை விரைவில் ரக்ஷிப்பீர். யதிராஜரே! பேரறிவாளரே! லோககு₃ருவே! எமது எல்லாக் கார்யங்களையும் உகப்போடு செய்துகொண்டு, எல்லா ஜனங்களையும் உமக்கு ஆட்பட்டவராக்கி, அவர்களுக்கு ஸ்வாமியாயிருந்துகொண்டு, எனது பரிஜனங்களை நன்கு போஷித்துக்கொண்டு எனது ஆணையை நடத்துவீர்.

३०. जगद्गुरो पालयस्व ममाज्ञां तां यतीश्वर।
विभूतिद्वयमस्माकं त्वदधीनं स्थितं किल॥

३१. मत्सन्निधौ मदीयस्त्वं मां पुष्यन् मत्परायणः।
इहैव वस योगीश मत्प्रियार्थं विचक्षणः॥

३२. यथाशेमुषि योगीन्द्र तथा कुरु महामते।
इत्युक्त्वा लक्ष्मणमुनिं रङ्गेशः कृपया हरिः॥

३३. अकरोद्यतिराजाय विभूतिद्वयनायकः।
इति तस्मै नामधेयं मुदा श्रीरङ्गनायकः॥

३४. यतीन्द्रो रङ्गिणः श्रुत्वा वचनं विस्मयान्वितः।
विनयेन स्तुतिं कृत्वा रङ्गेशाय महौजसे॥

---

என்னுடைய இரண்டு விபூ₄திகளும் உமக்கு அதீ₄னமாக வன்றோ என்னால் ஆக்கப்பட்டுள்ளது. யோகி₃யர் தலைவரே! என் ஸந்நிதி₄யிலே என்னுடையவரான நீர் என்னைப் போஷித்துக்கொண்டு, என்னையே பரமப்ராப்யப்ராபகங் களாகக் கொண்டவராய், என் உகப்பின்பொருட்டு இங் கேயே வாழவீர். பேரறிவாளரான யதீந்த்₃ரரே! உம் அறிவில் எப்படித் தோன்றுகிறதோ அப்படியே செய்யும்.'' என்று. ஸ்ரீரங்க₃நாத₂னுகிற எம்பெருமான் ராமாநுஜரைக் குறித்து இவ்வண்ணமாக அருளி, "விபூ₄தித்₃வயநாயகர்" [உடையவர்] என்னும் பெயரை உகப்புடன் அந்த யதி ராஜருக்குச் சூட்டினன்.

## உடையவர் அவதார ரஹஸ்யம்

34-44. அரங்கனது இவ்வார்த்தையைக்கேட்டு, யதி ராஜர் வியப்புற்றவராய், பேரொளியுடைய ரங்க₃ராஜனை அடக்கத்துடன் துதித்து, சொல்லின் செல்வராகையாலே "பெரியநம்பியின் கருணையாலேயே எனக்கு இப்பெருமை ஏற்பட்டது" என்னும் இனிய சொல்லைக் கூறினர். பெரிய

३५. अवदद्वदतां श्रेष्ठो वचनं मधुराक्षरम्।
पूर्णार्यकृपया मेऽद्य वैभवोऽयं महानभूत्॥

३६. पूर्णाचार्यस्तु तच्छ्रुत्वा यतिराजमथाब्रवीत्।
वैकुण्ठलोकादागत्य शठकोपो महामुनिः॥

३७. पुरा धरायां जननं कृत्वा करुणया तदा।
भवबन्धविनिर्मुक्तान् कर्तुकामो जनानिमान्॥

३८. अशक्यमिति मत्वाऽथ तेषां संरक्षणं महत्।
त्रिकालज्ञो मुनिरिदं स्वप्रबन्धे स चाब्रवीत्॥

३९. क्षित्यामग्रे महान् कश्चित्पुरुषोऽत्र भविष्यति।
स महात्मा सर्वजनान् रक्षिष्यति न संशयः॥

४०. कलिधर्मस्तदा पूर्णस्तेन नष्टो भविष्यति।
इममर्थं जना यूयं जानीत निश्चयं बुधाः॥

---

நம்பியோவெனில், இவ்வார்த்தையைக் கேட்டபின் யதி ராஜரிடம் பின்வருமாறு கூறினர்:— "ஆழ்வார்களில் தலைவரான ஶட$_2$கோபராகிய நம்மாழ்வார், முன்னொரு காலத்தில் இவ்வுலகிலுள்ள ஜனங்களை ஸம்ஸாரப$_3$ந்த$_4$த்தினின்றும் விடுபட்டவராகச் செய்யவிரும்பி, கருணையாலே ஸ்ரீவைகுண்ட$_2$த்திலிருந்து இவ்வுலகில் வந்து அவதரித்தபின்பு, ["அகலிடத்தை ஆராய்ந்து அது திருத்தலாவதே" (பெரிய திருவந்தாதி 25) என்கிறபடியே] மிக அரிதான ஸம்ஸாரி ரக்ஷணத்தைச் செய்ய இயலாது என்று எண்ணி, முக்காலமும் உணர்ந்த முனிவராகையாலே, தமது திருவாய்மொழி எனும் க்$_3$ரந்த$_2$த்தில், ["பொலிக பொலிக பொலிக போயிற்று வல்லுயிர்ச்சாபம், நலியும் நரகமும் நைந்த நமனுக்கு இங்கு யாதொன்றுமில்லை, கலியும் கெடும் கண்டுகொண்மின்" (திருவாய் 5-2-1) என்னுமிடத்திலே,] "பின்பொரு காலத்தில் இவ்வுலகில் ஒரு மஹா புருஷர்

४१. कारिपुत्रस्य वचसः तत्र संप्रति जन्मनः।
तुल्यमासीदत्र चार्थे विचिकित्सा न विद्यते॥

४२. रङ्गराजस्ततस्तेऽद्य विभूतिद्वयमप्यदात्।
अत्रैव वासं योगीश कुरु रङ्गाज्ञया सुखम्॥

४३. अस्मिन् लोके वर्तमानान् जनान् सर्वान् रमापतेः।
पादाब्जयोर्मधुलिहः कुर्वन् लक्ष्मणदेशिक॥

४४. अनेकान् वत्सरान् भूम्यां सुखं तिष्ठ यतीश्वर।
महता वैभवेनात्र पालयन् परितो जनान्॥

४५. पूर्णाचार्यस्य वचनं निशम्यात्यन्तविस्मयः।
रङ्गेशाय पुनर्भक्त्या नत्वा रामानुजस्तदा॥

---

அவதரிக்கப்போகிறார். மஹாத்மாவான அவர் எல்லா ஜனங்களையும் ரக்ஷிப்பார் என்பதில் ஐயமில்லை. கலியின் கோலாஹலம் முழுவதும் அவரால் கெட்டழியப்போகிறது. அறிவாளிகளான ஜனங்களே! இவ்விஷயத்தை நீங்கள் உறுதியாகக் கண்டுகொள்ளுங்கள்'' என்று கூறினார். உம்முடைய அவதாரம் நம்மாழ்வாருடைய இந்த வாக்கோடு ஒத்திருக்கிறது. இவ்விஷயத்தில் ஐயம் இல்லை. அதனால்தான் ரங்க₃ராஜன் உமக்கு உப₄யவிபூ₄தியையும் அளித்தான். யோகி₃யர் தலைவரே! அரங்கனின் ஆணையால் இங்கேயே இனிது வாழ்வீர். ராமாநுஜாசார்யரே! இவ்வுலகிலுள்ள எல்லா ஜனங்களையும் ஸ்ரிய:பதியின் திருவடித்தாமரைகளில் வண்டுகள்போலே ஈடுபடுகிறவர்களாகச் செய்துகொண்டு, பெரும் பெருமையோடு மண்ணிலிருந்துகொண்டே விண்ணையும் ஆள்பவராய், பல வருஷங்கள் இவ்வையத்திலே மன்னி வாழ்வீர்'' என்று.

४६. कृताञ्जलिपुटो भूत्वा श्लक्ष्णं वचनमब्रवीत् ।
आज्ञा यथा त्वया दत्ता तथैव क्रियते मया ॥

४७. आज्ञां विहातुं युष्माकं कथमर्हाम्यहं हरे ।
मम त्वद्दासभूतस्य त्वदाज्ञापरिपालनम् ॥

४८. विना किमन्यद्भगवन् कर्तव्यं कार्यमस्ति हि ।
एवमुक्त्वा रङ्गराजं यतिराजो रमापतिम् ॥

४९. अन्तर्गृहं प्रविश्याशु कृत्वा तत्र प्रदक्षिणम् ।
शयानं शेषशय्यायां अपश्यद्रङ्गशायिनम् ॥

५०. विवस्वत्कोटिसंकाशं शरच्चन्द्रनिभाननम् ।
नवीनरत्नखचितकवचेन विराजितम् ॥

---

### உடையவரது அங்கீ$_3$காரம்

45-*48. பெரியநம்பியின் வார்த்தையைக் கேட்டு, ராமாநுஜர் மிக வியப்புற்றவராய், அரங்கநகரப்பனை மறுபடியும் ப$_4$க்தியுடன் வணங்கி, கைகூப்பியவராய், "எம்பெருமானே! தேவரீருடைய ஆணையை அடியேன் எப்படி உபேக்ஷிப்பேன்? உமது அடியானான எனக்கு உமது ஆணையை நிறைவேற்றுவதைக் காட்டிலும் செய்யதக்க காரியம் வேறு என்ன இருக்கிறது?" என்று அழகாக வார்த்தை சொன்னார்.

### பெரியபெருமாளை ஸேவித்தல்

48*-53. யதிராஜர் ஸ்ரீய:பதியான ரங்க$_3$ராஜனாகிற நம்பெருமாளிடம் இவ்வண்ணம் சொல்லிவிட்டு, க$_3$ாயத்ரீ மண்டபத்தினுள் விரைவாக நுழைந்து, க$_3$ர்ப்ப$_4$க்$_3$ருஹத்தை ப்ரத$_3$க்ஷிணம் செய்து, ஆதி$_3$ஶேஷ ஶயனத்தில் பள்ளிகொண்டிருப்பவனாய், கோடிஸூர்ய ப்ரகாஶத்தை உடையவனாய், ஶரத்காலசந்திரனைப் போன்ற திருமுகமண்ட$_3$லததை உடையவனாய், புதிய ரத்னங்களால் செய்யப்பெற்ற கவசத்தால் அலங்கரிக்கப் பெற்றவனாய், காளமேக$_4$ம் போன்றவனாய், பீதாம்ப$_3$ரத்தை த$_4$ரித்தவனான ஸ்ரீரங்க$_3$ஶாயியைக் கண்டார்.

५१. कालाम्बुदनिभाकारं पीताम्बरधरं हरिम्।
हर्षेणोत्फुल्लनयनः पुलकाङ्कितविग्रहः॥

५२. आनन्दबाष्पनयनस्तस्य चापादमस्तकम्।
यतिराजो महाभक्त्या ननाम बहुधा तदा॥

५३. तत्तीर्थं शठकोपं च गृहीत्वा भक्तिपूर्वकम्।
मण्डपे वैनतेयस्य निषसाद यतीश्वरः॥

५४. पूर्णाचार्यादयस्सर्वे वैष्णवा वैष्णवोत्तमम्।
लक्ष्मणार्यं महात्मानं परिवार्योपतस्थिरे॥

५५. आनयामास योगीन्द्रः स्वभटैः परिचारकान्।
अर्चकान् पाचकांश्चैव प्रस्थानसमयोचितान्॥

५६. वैष्णवान् गणकान् वैश्यान् शैलूषान् रजकांस्तदा।
मालाकारान् पानकांश्च लेखकानधिकारिणः॥

---

ஆனந்த₃த்தால் மலர்ந்த திருக்கண்களை உடையவராய், மயிர்க்கூச்செறியும் திருமேனியுடையவராய், ஆனந்த₃க் கண்ணீர் பெருகும் கண்களையுடையவராய், அந்தப் பெரிய பெருமாளுடைய திருவடிமுதல், திருமுடிவரையில் பேரன்போடு பலகால் வணங்கினர். அவருடைய தீர்த்த₂ஶட₂கோபங்களை ப₄க்தியோடு பெற்றுக்கொண்டு, (ஸந்நிதி₄) க₃ருட₃மண்டபத்திலே யதிராஜர் அமர்ந்தார்.

**ராமாநுஜார்யதி₃வ்யாஜ்ஞை**

54-60. (அங்கு) பெரியநம்பி முதலான எல்லா வைஷ்ணவர்களும் — வைஷ்ணவர்தலைவராய், மஹாபுருஷரான யதிராஜரைச் சூழ்ந்திருந்தனர். அப்போது—கோயில் கைங்கர்யபரர்களான அர்ச்சகர்கள், பரிசாரகர்கள், ஸ்ரீபாத₃ம்தாங்குவார், வைஷ்ணவர்கள், கணக்கர்கள், வைஶ்யர்கள், வேஷக்காரர்கள், துணிவெளுக்கும் ஈரங்கொல்லிகள், திருமாலை

५७. ये चान्ये रङ्गराजस्य सेवकाः परमात्मनः।
ते सर्वे लक्ष्मणाचार्यशासनात्तूर्णमागताः॥

५८. तान् दृष्ट्वा लक्ष्मणाचार्यः सर्वानेवं वचोऽब्रवीत्।
सेवाकालेषु सर्वेषु रङ्गराजस्य भक्तितः॥

५९. सावधानेन वर्तध्वं कैङ्कर्येष्वनिशं हरेः।
अवज्ञया न वर्तध्वं न क्वचिल्लीलयापि वा॥

६०. युष्माभिस्सावधानेन यथाशास्त्रं यथाविधि।
कर्तव्यान्यखिलान्यस्य कैङ्कर्याणि जगत्पतेः॥

६१. अन्यान्विधाय चतुरान् कैङ्कर्ये रङ्गभूपतेः।
परकालकृतं भक्त्या कैङ्कर्यं यदनुत्तमम्॥

---

கட்டுவார், பானகம் வழங்குவார், எழுதுபவர்கள், அதி$_4$காரி கள், பரமாத்மாவான ரங்க$_3$ராஜனுக்கு மற்றுமுள்ள வேலைக் காரர்கள், ஆகிய அனைவரையும் தன் ஆட்களைக்கொண்டு யதிராஜர் வரவழைத்தார், அவர்களும் ஸ்ரீராமாநுஜரது ஆணையைச் சிரமேற்கொண்டு விரைவில் வந்தனர். அவர் களைக்கண்ட ராமாநுஜர் பின்வருமாறு சொல்லலுற்றார்,— "ரங்க$_3$ராஜனை பெரியபெருமாளுடைய எல்லா ஸேவா காலங்களிலும் ப$_4$க்தியோடும் கவனத்தோடும் இருங்கள். அப்பெருமாளுடைய கைங்கர்யங்கள் எதிலும் அவமதிப் போடு இராதீர்கள். விளையாட்டாகவும் நடக்காதீர்கள். லோகநாத$_2$னை இவனது எல்லாக் கைங்கர்யங்களும் ஶாஸ்த்ரவிதி$_4$ப்படியும், ஶிஷ்டாசாரமுறைப்படியும் உங்க ளால் கவனத்தோடு செய்யப்படவேண்டும்" என்று.

## ஸ்ரீரங்க$_3$ கைங்கர்ய ஸாம்ராஜ்யம்

61-67. ஸ்ரீரங்க$_3$ராஜனுக்கு ஸமர்த்த$_2$ரான மற்ற பல கைங்கர்யபரர்களையும் ஏற்பாடு செய்து, பரகாலரான திரு

६२. द्रष्टुं प्रतस्थे स्वजनैस्तस्मात् गरुडमण्डपात् ।
पूर्णाचार्यमुखाच्छ्रुत्वा तत्कैङ्कर्यं विलोक्य च ॥

६३. विस्मयाविष्टहृदयः सन्तुष्टो यतिभूपतिः ।
तत्रैव वासमकरोत् श्रीरङ्गे रङ्गशासनात् ॥

६४. श्रीरङ्गेश्वरशासनात् यतिपतिः कूरेश्वराख्यादिभिः
शिष्यैः शास्त्रविदुत्तमैः श्रुतिवरैर्वेदान्तयुग्माधिकैः।
कालक्षेपपरायणो हरिपरः सर्वान् जनान् पूर्णया
पुष्णन् सौम्यदृशा निवासमकरोत्तत्रैव रङ्गे महान् ॥

६५. ये ये दृष्टिपथं गता यतिपतेर्निर्व्याजसंरक्षतः
ते तेऽगाधमहाभवाब्धितरणं मन्नाथपादाम्बुजम् ।
संप्राप्ताः सकलाघकोटिनिवहानुन्मूल्य तूर्णं जनाः
सर्वे विष्णुरता बभूवुरमला निर्मुक्तमायान्वयाः ॥

---

மங்கையாழ்வாரால் ப₄க்தியோடு செய்யப்பெற்ற ஒப்பற்ற (மண்டப கோபுர மதிள்) கைங்கர்யங்களை ஸேவிப்பதற்காகத் தன் அடியார்களோடு அந்த க₃ருட₃மண்டபத்திலிருந்து புறப்பட்டார். அக்கைங்கர்யங்களைப் பெரியநம்பிகள் சொல்லக்கேட்டு ஸேவித்து, வியப்புற்ற நெஞ்சினராய், உகப்படைந்த யதிராஜர், திருவரங்கனின் ஆணைப்படி அத்திருவரங்கத்திலேயே வாழ்ந்து வந்தார். ஶாஸ்த்ர மறிந்தவர்களில் சிறந்தவர்களாய், மறைவல்லாராய், தென் மொழி வடமொழி வேதா₃ந்தங்களாலே சிறப்புற்றவர்க ளான கூரத்தாழ்வான் முதலான ஶிஷ்யர்களுக்குக் கால க்ஷேபம் ஸாதி₃த்துக்கொண்டிருப்பவராய், எம்பெருமானிடம் ஈடுபட்டவராய், எல்லா ஜனங்களையும் நிறைந்த திருக் கண்ணோக்குகளாலே நிறைவடையச் செய்துகொண்டு, பெரியவரான யதிராஜர் அந்த ஸ்ரீரங்க₃த்திலேயே வாழ லுற்றார். நிர்ஹேதுகமாக ரக்ஷிக்கும் யதிபதியின் கடாக்ஷத்

६६. रङ्गेशोत्करुणादहर्निशमसौ पूर्णार्यसंलापनात्
पौराणां प्रियपूर्वकात् प्रतिदिनं संमानतस्सादरात्।
दुःखं हस्तिगिरीश्वरस्य महतो यद्विप्रयोगोत्थितं
त्यक्त्वा लक्ष्मणदेशिकः सुखतरं तत्रैव वासं व्यधात्॥

६७. आख्यानमेतत् शुभदं शुभाढ्यं रङ्गेशदेवेशयतीश्वराणाम्।
संवादभूतं च पठन्ति सन्तः ते यान्ति वैकुण्ठपदं हि सत्यम्॥

इति श्रीप्रपन्नामृते रामानुजचरित्रे रामानुजस्य
विभूतिद्वयाधिपत्यं नाम सप्तदशोऽध्यायः॥

---

திற்கு இலக்கானவர்கள் அனைவரும், ஆழங்காணவொண்ணாத ஸம்ஸாரக்கடலைத் தாண்டுவிக்கும் நம்பெருமாளின் திருவடித்தாமரையை அடைந்தவர்களாய், கணக்கற்ற எல்லாப்பாபங்களையும் விரைவில் வேரறுத்தவர்களாய், விஷ்ணுப$_4$க்தர்களாய், (தே$_3$வதாந்தர விஷயாந்தர உபாயாந்தர ஸம்ப$_3$ந்த$_4$ங்களாகிற)குற்றங்களற்றவர்களாய், மாயையெனும் ப்ரக்ருதியினால் ஏற்படும் மயக்கினின்றும் விடுபட்டவர்களானார்கள். ஸ்ரீரங்க$_3$நாத$_2$னின் மிகுந்த கருணையாலும், இரவுபகலாகப் பெரியநம்பிகளோடு பேசுவதாலும், ஸ்ரீரங்க$_3$வாஸிகளின்-ப$_4$க்தியோடும் அன்போடும் கூடிய உபசாரங்களாலும், பெரியோனை அத்திகிரியப்பனைப் பிரிந்ததாலுண்டான துன்பத்தை மறந்து,ஸ்ரீராமாநுஜாசார்யர் அந்த ஸ்ரீரங்க$_3$த்திலேயே வாழலுற்றார். ரங்க$_3$ராஜனுக்கும் தே$_3$வராஜனுக்கும், யதிராஜனுக்கும் ஸம்வாத$_3$ரூபமாய், மங்க$_3$ளங்கள் நிறைந்ததாய், மங்களங்களையளிப்பதான இந்தச் சரித்திரத்தைப் படிக்கும் நல்லோர்கள் வைகுண்ட$_2$பத$_3$வியை அடைவார்களென்பது ஸத்யமன்றோ.

ஸ்ரீப்ரபந்நாம்ருதத்தில், ராமாநுஜசரித்திரத்தில்
ராமாநுஜர் உப$_4$யவிபூ$_4$தி நாயகராவதாகிற பதினேழாவது அத்தியாயம்
நிறைவுற்றது.

॥ अष्टादशोऽध्यायः ॥

१. गोविन्दरक्षणार्थाय यतिराजेन वैष्णवाः ।
श्रीशैलपूर्णमुद्दिश्य ये तु संप्रेषिताः पुरा ॥

२. कृतकार्यास्ततस्ते तु रामानुजदिदृक्षया ।
आययू रङ्गनगरं वैष्णवाः कृतसत्वराः ॥

३. यतीश्वरस्स तान् दृष्ट्वा वैष्णवान् कृतवन्दनान् ।
उवाच मधुरं वाक्यं तेषां हर्षं विधाय च ॥

४. श्रीशैलपूर्णः कुशली वर्तते किं तु वैष्णवाः ।
गोविन्दस्तस्य कृपया जुष्टः किं सत्पथे स्थितः ॥

५. लक्ष्मणार्यस्य तद्वाक्यं श्रुत्वा ते वैष्णवास्तदा ।
सर्वं निवेदयामासुर्लक्ष्मणार्याय तत्त्वतः ॥

---

### பதினெட்டாம் அத்தியாயம்

## ஸ்ரீ சைலபூர்ண கோ3விந்த3 ஸம்வாத3ம்

### கோ3விந்த3 வ்ருத்தாந்த ப்ரஶ்னம்

1-7. கோ3விந்த3ருடைய ரக்ஷணத்தின் பொருட்டுப் பெரியதிருமலைநம்பியைக்குறித்து அனுப்பப்பட்டிருந்த ஸ்ரீ வைஷ்ணவர்கள், நியமித்த கார்யத்தைச் செய்துவிட்டு, ராமாநுஜரைக் காண்பதற்காக ஸ்ரீரங்க3த்தை விரைந்து வந்தடைந்தனர். தன்னை வணங்கிய அந்த வைஷ்ண வர்களைக் கண்ட யதிராஜர், அவர்களைக்கண்டு, அவர்களை (உபசாரங்களாலே) ஆநந்த3மடையச்செய்து, "வைஷ்ண வர்களே! பெரியதிருமலைநம்பி க்ஷேமமாயிருக்கிறாரா? கோவிந்தன் அவருடைய கிருபையாலே நல்வழிப்பட்ட வனாயிருக்கிறானா?" என்று இனிதாக வார்த்தை சொன்னார். ராமாநுஜருடைய அவ்வார்த்தையைக் கேட்ட வைஷ்ண

६. तानाह लक्ष्मणाचार्यः कथमासीत्समागमः।
तस्य श्रीशैलपूर्णस्य गोविन्दस्य शिवात्मनः॥

७. अयमग्रे किमवदत् सोऽपि तं किमथाब्रवीत्।
मम कौतूहलं श्रोतुं विस्तराद्वदताधुना॥

८. निशम्य तद्वाक्यमतिप्रहृष्टाः
ते वैष्णवास्तत्र यतीश्वराय।
ऊचुस्तयोस्तां सकलां कथां च
महात्मने लक्ष्मणदेशिकाय॥

९. आज्ञापितास्त्वया ब्रह्मन् वयं लक्ष्मणदेशिक।
वेङ्कटाचलमारूढाश्चतुर्थदिवसे तदा॥

---

வர்கள், (நம்பி கோவிந்த₃னைத் திருத்திய) செய்திகள் அனைத்தையும் அவரிடம் உள்ளபடி சொன்னார்கள். அவர்களைக்குறித்து ராமாநுஜர், "சைவனாகிவிட்ட கோ₃விந்த₃னுக்கும் அந்தப் பெரியதிருமலைநம்பிக்கும் எப்படிச் சேர்த்தி ஏற்பட்டது? முதலில் பெரியதிருமலைநம்பி கோ₃விந்த₃னிடம் என்ன சொன்னார்? அவன் அதற்கு என்ன பதில் சொன்னான். இச்செய்தியைக் கேட்பதில் எனக்கு மிகவும் விருப்பமுள்ளது. விரிவாக இதை இப்போதே சொல்லுங்கள்" என்று கேட்டார்.

## திருமலைநம்பி காளஹஸ்தி சென்றது

8-20. அந்த வாக்யத்தைக் கேட்ட அவ்வைஷ்ணவர்கள் மிகவுகந்தவர்களாய், கோ₃விந்த₃ரைப்பற்றிய எல்லாச் செய்தியையும் மஹாத்மாவாய், யதிராஜரான ராமாநுஜருக்கு விரிவாகச் சொன்னார்கள்:— பேரறிவாளராய், அந்தணர் தலைவரான ராமாநுஜாசார்யரே! உம்மால் நியமிக்கப்பெற்ற நாங்கள் நாலாவது நாளன்று வேங்கடாசலத்தில் ஏறி, லோகநாத₂னை, திருவேங்கடமுடையானை

१०. नत्वा रमापतिं नाथं श्रीनिवासं जगद्गुरुम्।
नत्वा श्रीशैलपूर्णाय त्वदुक्तार्थं महामते॥

११. तस्मै विज्ञापितं सम्यगस्माभिः शीघ्रगामिभिः।
तत्तदाकर्ण्य सुप्रीतः स सम्यग्वाचमब्रवीत्॥

१२. मत्स्वस्त्रियस्तु गोविन्दो धीमान् शास्त्रविचक्षणः।
यादवस्य सहायेन गङ्गास्नानपरोऽभवत्॥

१३. तस्य तेनाशु शैवत्वं गोविन्दस्य तदोत्थितम्।
अहो दुर्जनसंसर्गः सतामपि विमोहकः॥

१४. ब्रह्मेशानादयो देवा मायया यस्य मोहिताः।
किमुतान्ये नरास्तस्मै विष्णवे महते नमः॥

१५. ब्राह्मणा अपि शास्त्रज्ञा न जानन्ति महर्षयः।
ब्रह्मेशानादिकर्तारं नारायणमनामयम्॥

---

ஸ்ரீநிவாஸனை வணங்கி, விரைந்து சென்று நீர் விண்ணப்பித்த செய்தியைப் பெரியதிருமலைநம்பியிடம் நன்றாகச் சொன்னோம். அதைக்கேட்டு மிகவுகந்தவராய், அவர் பின்வரும் நல்வார்த்தையைக் கூறினார்,—"எனது ஸஹோதரிபிள்ளையான கோவிந்தன் அறிவாளியாகவும், ஶாஸ்த்ரம் வல்லவனாகவுமிருப்பவனே. (ஆயினும்) யாதவருடைய துணையோடு கங்காஸ்நாநம் செய்யச்சென்றான். அதனாலே அவன் விரைவிலேயே சைவனாகிவிட நேர்ந்தது. அந்தோ! தீயவர்களின் தொடர்பு நல்லவர்களையும் மயக்கிவிடுகிறதே! பிரமன் சிவன் முதலான தேவர்களும், எந்த நாரணனுடைய மாயையாலே மயங்குகிறார்களோ, அந்த மஹாவிஷ்ணுவை வணங்குகிறேன். ஶாஸ்த்ரம் வல்ல அந்தணர்களும், மஹரிஷிகளுங்கூடப் பலர் பிரமன், சிவன் முதலிய அனைவரையும் படைத்தவன் குற்றமற்ற நாராயணனே என்று உணர்வதில்லையே. கோவிந்தனைத்

१६. पुरैवाहमिदं कार्यं कर्तुकामः समास्थितः ।
रामानुजोऽपि संचरुयौ इति युष्माभिरीरितम् ।

१७. तेनोदीरितमस्माकं सुतरां कार्यमेव हि ।
इति हृष्टमनाः शीघ्रं शिष्यैस्सह यतीश्वर ॥

१८. श्रीशैलपूर्णः प्रययावस्माभिर्वेङ्कटाचलात् ।
कालहस्तिपुरं प्राप्य तस्योद्याने स वैष्णवः ॥

१९. तत्रत्यैः पुरुषैर्ज्ञात्वा गोविन्दगमनागमम् ।
तं दिदृक्षुस्तदा ब्रह्मन् गोविन्दहितकारणात् ॥

२०. तडाकतीरे शिष्येभ्यो ग्रन्थानुपदिशन् स्थितः ।
मृगाहरणकामस्तु मृगार्थं मृगयुर्यथा ॥

२१. तदा रुद्राभिषेकार्थं घटमादाय भक्तितः ।
ग्रहीतुकामस्तत्तोयं गोविन्दस्तत्र चागमत् ॥

---

திருத்துவதாகிற இக்காரியத்தை நான் முன்னமே செய்ய விரும்பியிருந்தேன். ராமாநுஜரும் இதையே செய்ய விரும்புகிறார் என்று நீங்கள் சொல்லுகிறீர்கள். அவர் சொன்னதை நாம் அவஶ்யம் செய்தேயாகவேண்டும்." என்று கூறி, உகந்த நெஞ்சினராய் ஶிஷ்யர்களோடு கூட எங்களையும் கூட்டிக்கொண்டு வைஷ்ணவரான பெரியதிருமலைநம்பி, வேங்கடமலையிலிருந்து காளஹஸ்தி நகரை அடைந்து, அந்நகரின் சோலையொன்றில் கோவிந்தர்சென்று வருவதுண்டென்று அங்குள்ள ஜனங் களிடமிருந்து அறிந்து, அவரைக் காண்பதற்காகவும், அவருக்கு நன்மை செய்வதற்காகவும், அச்சோலையின் குளக்கரையில்,— மிருகத்தைப் பிடிக்கவிரும்பும் வேட்டைக் காரன் மிருகம் வருவதற்காகக் காத்திருப்பதுபோலே,— (கோ₃விந்த₃ர் வரும்வரையில்) சிஷ்யர்களுக்கு கிரந்தங்களை உபதே₃ஶம் செய்துகொண்டு காத்திருந்தார்.

२२. पठन् रुद्रपरान् श्लोकान् गाथास्ता द्राविडीस्तथा।
गृहीततोयस्तानस्मान् संपश्यन्मौनमास्थितः॥

२३. स गोविन्दो यतिश्रेष्ठो यातुकामस्ततोऽभवत्।
श्रीशैलपूर्णस्तं प्राह गोविन्दं वैष्णवोत्तमः॥

२४. चूडाऽऽरग्वधपुष्पस्य शिवस्य कृतमज्जनात्।
शीतलेन च तोयेन श्रमेण महता तव॥

२५. किं फलं भवति ब्रह्मन् तत्त्वं ब्रूहि तपोधन।
गोविन्दस्तद्वचः श्रुत्वा तं च दृष्ट्वा क्षणं स्थितः॥

२६. पूर्णमुक्त्वा यतिश्रेष्ठ न किञ्चिद्विस्मितो ययौ।
श्रीशैलपूर्णस्स तदा गोविन्दस्य विचेष्टितम्॥

---

## முதல் சந்திப்பு

21-*27. அப்போது சிவனுக்கு அபி₄ஷேகம் செய்வதற்கு அக்குளத்திலிருந்து நீர் எடுப்பதற்காக, கோ₃விந்த₃ர் ப₄க்தியோடு குடத்தை எடுத்துக்கொண்டு அங்கு வந்தார். சிவபரமான ஶ்லோகங்களையும், (நாயன்மார்கள் இயற்றிய) தமிழ்ப்பாட்டுக்களையும் பாடிக்கொண்டு ,நீர் எடுத்த அவர் எங்களைப்பார்த்து மௌனமாயிருந்தார். பிறகு, புலன்வென்றவர்களில் தலைவரான அந்த கோ₃விந்த₃ர் (நீர் எடுத்துக் கொண்டு) போகலுற்றார். வைஷ்ணவோத்தமரான திருமலை நம்பி "அந்தணரே! *தலையில் கொன்றை என்னும் எரிக்கும் மலரைச் சூடியிருக்கும் சிவனுக்குக் குளிர்ந்த நீரால் அபி₄ஷேகம் செய்யும் உனது பெரிய சிரமத்திற்கு என்ன பயன் உண்டாகும்?* தபஸ்வியே! உண்மையை உரைப்பாய்" என்று கேட்டார். யதிராஜரே! கோ₃விந்

---

* "கொன்றைச் சடையானைக் குளிர நீராட்டினால் என்னுனக் குண்டாம் பயன்" என்று கு₃ருபரம்பராப்ரப₄ாவத்தில் உள்ளது.

२७. विलोक्य पुनरायातो ह्यस्माभिर्वेङ्कटाचलम् ।
ततः कतिषु यातेषु वासरेषु गुरूत्तमः ॥

२८. स गोविन्दहितार्थाय शिष्यैश्चास्माभिरादरात् ।
कालहस्तिपुरं प्राप्य पूर्णः श्रीशैलपूर्वकः ॥

२९. तीरे तस्य तडागस्य वटच्छायां समाश्रितः ।
दयानिधिः पूर्वरीत्या तस्थौ तस्य दिदृक्षया ॥

३०. जलार्थं घटमादाय गोविन्दस्तत्र चागतः ।
ददर्श स तमायान्तं गोविन्दं घटहस्तकम् ।

३१. भस्मोद्धूलितसर्वाङ्गं त्रिपुण्ड्राङ्कितमस्तकम् ।
रुद्राक्षमालाभरणं कृतपञ्चाक्षरीजपम् ॥

---

த₃ரும் அவ்வார்த்தையைக் கேட்டு, அவரை ஒருகணம் நின்றுபார்த்து, அப்பெரியநம்பியிடம் ஒன்றும் சொல்லாமல் வியப்புற்றவராய்ச் சென்றார். அப்போது திருமலைநம்பியும் கோ₃விந்த₃ரின் அச்செயலைப் பார்த்துவிட்டு, எங்களோடு திருவேங்கடமலைக்குத் திரும்பிவந்துவிட்டார்.

## இரண்டாவது சந்திப்பு

27 - 34. ஆசார்யஶ்ரேஷ்ட₂ராய், கருணைக்கடலான அத்திருமலைநம்பி, மேலும் சில நாட்கள் கழிந்தபின், சீடர்களான எங்களோடுகூட கோ₃விந்த₃ருக்கு நன்மை செய்வதற்காக ஆர்வத்துடன் காளஹஸ்திக்குச் சென்று, அக்குளக்கரையில் உள்ள ஆலமரத்தின் நிழலில் முன் போலே கோ₃விந்த₃ரைக் காண்பதற்காகத் தங்கியிருந்தார். நீர் எடுத்துச்செல்லக் குடத்தை எடுத்துக்கொண்டு கோ₃விந்த₃ரும் அங்கு வந்தார். குடத்தைக் கையில் ஏந்தியவராய், உடல் முழுவதும் நீறு பூசியவராய், நெற்றியில் மூன்று திர்யக்புண்ட்₃ரங்களை த₄ரித்தவராய், ருத்₃ராக்ஷ

३२. मौनेन महता युक्तमकम्प्यं गिरिसन्निभम्।
प्रशस्तं शिवभक्तानां बाणादीनां महत्तरम्॥

३३. शिवात्मकमिदं विश्वं भावयन्तमहर्निशम्।
शिवादन्यत्परं नास्ति शिवः सत्यमहं शिवः॥

३४. इति भावनया नित्यं पुलकाङ्कितविग्रहम्।
श्रीशैलपूर्णस्स तदा तन्मनश्शोधनाय च॥

३५. चिन्तयित्वा पत्रिकायां कांश्चिच्च द्राविडागमान्।
स्तोत्रराजे यामुनेन कृते पूर्वं महात्मना॥

३६. स्वाभाविकेति यः श्लोको विद्यते यतिशेखर।
तं श्लोकं विलिखित्वाशु गोविन्दागमनेऽध्वनि॥

---

மாலையை அணிந்தவராய், பஞ்சாக்ஷரஜபம் செய்பவராய், பெரிய மௌனவிரதத்தோடு கூடியவராய், மலைபோலே (சிவப₄க்தியில்) அசையாதவராய், சிவப₄க்தர்களால் கொண்டாடப்படுபவராய், பா₃ணாஸுரன் முதலான மஹா ஶிவப₄க்தர்களைக் காட்டிலும் பெரியவராய், இராப்பகலாக இவ்வுலகை சிவாத்மகமாக தியானிப்பவராய், "சிவனைக் காட்டிலும் மேலானதில்லை; சிவனே உண்மை; நானும் சிவனே" என்று எப்போதும் நினைப்பதால் மயிர்க்கூச் செறியும் மேனியையுடையவராக கோ₃விந்தர் வருவதைத் திருமலைநம்பியும் கண்டார்.

### கோ₃விந்த₃ரின் வருத்தம்

34*-*41. யதிராஜரே! திருமலைநம்பியும், அவரது மனத்தைப் பரீக்ஷிப்பதற்காக, அப்போது ஒரு சிந்தை செய்து, ஓர் ஏட்டில் (ப₄க₃வத்பரத்வத்தைச் சொல்லும்) சில பாசுரங்களையும், தமது ஆசார்யராய், மஹாத்மாவான ஆளவந்தார் முன் அருளிய ஸ்தோத்ரரத்னத்தில் உள்ள

२७. विलोक्य पुनरायातो ह्यस्माभिर्वेङ्कटाचलम् ।
ततः कतिषु यातेषु वासरेषु गुरूत्तमः ॥

२८. स गोविन्दहितार्थाय शिष्यैश्चास्माभिरादरात् ।
कालहस्तिपुरं प्राप्य पूर्णः श्रीशैलपूर्वकः ॥

२९. तीरे तस्य तडागस्य वटच्छायां समाश्रितः ।
दयानिधिः पूर्वरीत्या तस्थौ तस्य दिदृक्षया ॥

३०. जलार्थं घटमादाय गोविन्दस्तत्र चागतः ।
ददर्श स तमायान्तं गोविन्दं घटहस्तकम् ।

३१. भस्मोद्धूलितसर्वाङ्गं त्रिपुण्ड्राङ्कितमस्तकम् ।
रुद्राक्षमालाभरणं कृतपञ्चाक्षरीजपम् ॥

---

த₃ரும் அவ்வார்த்தையைக் கேட்டு, அவரை ஒருகணம் நின்றுபார்த்து, அப்பெரியநம்பியிடம் ஒன்றும் சொல்லாமல் வியப்புற்றவராய்ச் சென்றார். அப்போது திருமலைநம்பியும் கோ₃விந்த₃ரின் அச்செயலைப் பார்த்துவிட்டு, எங்களோடு திருவேங்கடமலைக்குத் திரும்பிவந்துவிட்டார்.

## இரண்டாவது சந்திப்பு

27 — 34. ஆசார்யஶ்ரேஷ்ட₂ராய், கருணைக்கடலான அத்திருமலைநம்பி, மேலும் சில நாட்கள் கழிந்தபின், சீடர்களான எங்களோடுகூட கோ₃விந்த₃ருக்கு நன்மை செய்வதற்காக ஆர்வத்துடன் காளஹஸ்திக்குச் சென்று, அக்குளக்கரையில் உள்ள ஆலமரத்தின் நிழலில் முன் போலே கோ₃விந்த₃ரைக் காண்பதற்காகத் தங்கியிருந்தார். நீர் எடுத்துச்செல்லக் குடத்தை எடுத்துக்கொண்டு கோ₃விந்த₃ரும் அங்கு வந்தார். குடத்தைக் கையில் ஏந்திய வராய், உடல் முழுவதும் நீறு பூசியவராய், நெற்றியில் மூன்று திர்யக்புண்ட்₃ரங்களை த₄ரித்தவராய், ருத்₃ராக்ஷ

४१. यथेति तमसातीरे तद्वत्सोऽयमचिन्तयत्।
ततोऽग्रे सहसा स्थित्वा गोविन्दः सस्मितस्तदा॥

४२. श्रीशैलपूर्णमाहेदं वचनं देशिकोत्तमम्।
येऽर्थाः करस्था भवतां गलिता वैष्णवोत्तमाः॥

४३. त इमे इति तां तस्मै दर्शयामास पत्रिकाम्।
श्रीशैलपूर्णस्तच्छ्रुत्वा स गोविन्दमथाब्रवीत्॥

४४. अन्येषामर्थजालानि गलितानि भवन्ति हि।
अस्माकं त्वर्थजालानि न स्कन्नानि कदाचन॥

४५. तच्छ्रुत्वा तमुवाचेदं गोविन्दो वैष्णवोत्तमम्।
अलं चातुर्यवचनैः तानि तिष्ठन्त्विदं शृणु॥

४६. बहवस्सन्ति पन्थानस्तान्विहाय महामते।
किमर्थमेकमार्गेऽस्मिन् वर्तन्ते वैष्णवास्सदा॥

---

## ஸ்ரீ சைலபூர்ண கோ₃விந்த₃ ஸம்வாத₃ம்

41*-60. அப்போது நம்பிக்கு முன்னால் சடக்கென நின்று, புன்முறுவலோடு கூடிய கோ₃விந்த₃ர், ஆசார்யோத்தமரான பெரியதிருமலை நம்பியைக் குறித்து, "வைஷ்ணவோத்தமர்களே! தங்கள் கையிலிருந்து நழுவிய பொருள்கள் இவைதானே" என்று அவ்வேட்டைக் காட்டினார். அதைக்கேட்ட திருமலைநம்பி "மற்றவர்களுடைய பொருள்கள் நழுவுமேயொழிய எங்களுடைய பொருள்கள் ஒருபோதும் நழுவமாட்டா" என்று கோ₃விந்த₃ருக்கு பதில் கூறினார். அதைக்கேட்ட கோ₃விந்த₃ர் "பேரறிவாளரே! சாதுர்யமான பேச்சுக்கள் போதும்; அவைநிற்க இதைக் கேட்பீர். (மோக்ஷமடைய) வேறு பல மார்க்க₃ங்கள் உள்ளன. அவற்றைவிட்டு வைஷ்ணவர்கள் (வைஷ்ணவமாகிற) ஒரு வழியிலேயே எப்போதும் ஏன் நிற்கின்றனர்?"

४७. एकस्मिन्नपि मार्गेऽस्मिन् वर्तमाना वयं सदा।
म.र्गस्यास्य सुगम्यत्वादित्युवाच स तं तदा॥

४८. तस्य तद्वचनं श्रुत्वा गोविन्दः प्रत्यभाषत।
संप्रेषणाय बन्धूनां भवन्तः किं समागताः॥

४९. तेनैवमुक्तस्तं प्राह पूर्णः श्रीशैलपूर्वकः।
क्रेतुकामा वयं धेनूर्गोविन्दात्र समागताः॥

५०. तन्निशम्य स गोविन्दः तं पूर्णं प्रत्यभाषत।
अनुष्ठातुर्गवां पादरजः किं पावनं नहि॥

५१. इत्युक्तवन्तं तं प्राह स पूर्णो यतिशेखर।
उचितस्थानलब्धं चेत्पावनं तद्भवेद्ध्रुवम्॥

५२. पूर्णाचार्यवचः श्रुत्वा गोविन्दः पुनरब्रवीत्।
ऋजुर्वा स च वक्रो वा को भेदो ऋजुवक्रयोः॥

---

என்று அவ்வைஷ்ணவோத்தமரைக் குறித்துக் கேட்டார். அப்போது திருமலைநம்பி "இவ்வழி கலக்கமில்லாமல் எளிதில் (மோக்ஷத்தை) அடைவிக்குமாகையால் இவ்வொரு வழியிலேயே நாங்கள் நிற்கிறோம்" என்று பதில் கூறினர். அதைக்கேட்ட கோ₃விந்த₃ர் "நீங்கள் உறவினர்களை விடவந்தீர்களா?" என்று கேட்டார். அதைக்கேட்ட திருமலைநம்பி "கோ₃விந்த₃ரே! நாங்கள் கறவைப் பசுக்களை வாங்கவந்தோம்" என்று பதில் கூறினர். அதைக்கேட்ட கோ₃விந்த₃ர் "நல்ல அநுஷ்டா₂னமுடையவர்களுக்குப் பசுவின் அடிப்பொடி பவித்திரமன்றோ; (அதனுல்தான் பசுவை வாங்கவந்தீர்களா?)" என்று பதிலுரைத்தார். அதைக்கேட்ட திருமலைநம்பி "சரியான இடத்திலிருந்து கிடைத்தால், பசு பாவனமாகத்தான் இருக்கும்" என்று பதில் உரைத்தார். திருமலைநம்பியின் இவ்வார்த்தையைக்

५३. एवमुक्ते तु गोविन्दे स पूर्णः पुनरब्रवीत्।
विद्यमाने ऋजौ वक्रे भेद एव किलाऽनघ॥

५४. अङ्गीकृत्य वचस्तस्य प्रत्यभाषत स द्विजः।
इदं वाग्बन्धनं वाक्यं त्वया पूर्ण प्रभाषितम्॥

५५. तस्य तद्वचनं श्रुत्वा भूयः पूर्णोऽब्रवीद्वचः।
सद्वाक्यानामिदं शीलमिति गोविन्द भावय॥

५६. स तद्वाक्यं समाकर्ण्य गोविन्दस्तमथाब्रवीत्।
तत्रात्यन्तविचारः किं अस्ति श्रीवैष्णवोत्तम॥

५७. गोविन्दवचनं श्रुत्वा स पूर्णः पुनरब्रवीत्।
परत्वे तद्विचारोऽस्ति गोविन्द विदुषां वर॥

---

கேட்ட கோ₃விந்த₃ர் "*குறுக்குக்கும் நெடுக்குக்கும் வேறுபாடு என்ன?" என்று கேட்டார். இதைக்கேட்ட திருமலைநம்பி, "குற்றமற்றவரே! நேர்வழியிருக்கும்போது குறுக்கு (கோணல்) வழியில் போவதே வேறுபாடு" என்று பதில் கூறினார். இதை ஒப்புக்கொண்ட கோ₃விந்த₃ர் "வாயடைக்கும் இச்சொற்கள் (நீர் கண்டு பிடித்த) புது வார்த்தைகளோ?" என்று கேட்டார். அதைக்கேட்ட திருமலைநம்பி "கோ₃விந்த₃ரே! பழைய நல்வாக்கியங்களும் இவ்வியல்வையே உடையவை என்று அறிவீர்" என்று கோ₃விந்த₃ர்க்கு பதிலுரைத்தார். அதைக்கேட்ட கோ₃விந்த₃ர் "ஸ்ரீ வைஷ்ணவோத்தமரே! இந்தக் குறுக்கு நெடுக்கு விஷயத்தில் அதி₄கமான பூர்வவிசாரம் (முன்னோர்களின் ஆராய்ச்சி) உள்ளதோ?" என்று கேட்டார். கோ₃விந்த₃ரின் இவ்வார்தைதையைக்கேட்ட திருமலைநம்பி "அறிவாளிகளில் சிறந்தவரே! பரவஸ்து எது என்பதில் பூர்வவிசாரம் ஏராளமாக உண்டு" என்று பதில் கூறினர். யதிராஜரே!

---

* குறுக்கு – திர்யக்புண்ட்₃ரம்; நெடுக்கு – ஊர்த்₄வபுண்ட்₃ரம்.

५८. श्रीशैलपूर्णवाक्यानि युक्तियुक्तानि स द्विजः।
निरुत्तरः संप्रतस्थे निशम्य यतिपुङ्गव॥

५९. दृष्ट्वा श्रीशैलपूर्णोऽपि गोविन्दाचार्यलक्षणम्।
प्रसादमगमच्चित्तमिति वाक्यमनुस्मरन्॥

६०. तं साध्यकोट्यां निक्षिप्य शिष्यैस्सह यतीश्वर।
प्रहर्षमाणः प्रययौ भूयः श्रीवेङ्कटाचलम्॥

६१. तद्वैष्णवानां वचनं श्रुत्वा रामानुजस्तदा।
अतिहर्षसमायुक्तो वैष्णवांश्च सभासदः॥

६२. शिष्यं दाशरथिं दृष्ट्वा कूरनाथं वचोऽब्रवीत्।
युष्माभिस्तत्कथास्सम्यक् श्रुताः किं वैष्णवोत्तमाः॥

---

திருமலைநம்பியின் யுக்தியோடு கூடிய இவ்வாக்யங்களைக் கேட்டு, கோ₃விந்த₃ர் பதில் பேசாமல் புறப்பட்டார். கோ₃விந்த₃ாசார்யரின் முகக்குறியைக்கண்ட திருமலைநம்பியும் "நெஞ்சம் தெளிவடைந்தது" என்கிற ப்ரமாணத்தில் சொன்னதை நினைத்துக்கொண்டு, 'இவர் இனி நம் வசப்படக்கூடியவரே' என்று உறுதிகொண்டு மிக உகந்தவராய், சீடர்களோடுகூட மறுபடியும் திருவேங்கடமலைக்குப் புறப்பட்டார்.

## திருமலைநம்பியின் சாதுர்ய விளக்கம்

61-78. வைஷ்ணவர்களுடைய அவ்வார்த்தையைக் கேட்ட ஸ்ரீராமாநுஜர், மிகவுகந்தவராய், அந்த ஸபை₄யிலுள்ள வைஷ்ணவர்களையும், சிஷ்யரான முதலியாண்டானையும், கூரத்தாழ்வானையும் பார்த்துப் பின்வருமாறு அருளினர்,— "வைஷ்ணவோத்தமர்களே! இந்தச் செய்திகள் அனைத்தையும் கேட்டீர்களா? யாமுநாசார்யருடைய **"ஸ்வாபா₄விக"** என்று தொடங்கும் ஶ்லோகம் கோ₃விந்த₃ருடைய நெஞ்சில் பட்டிருக்கிறது (என்பது இதிலிருந்து விளங்குகிறது.)

६३. श्रीमद्भिर्यामुनार्यस्य सक्ता गोविन्दमानसे।
दृष्ट्वा वैतण्डिककच्छायां वाङ्मात्रेण महात्मना॥

६४. श्रीशैलपूर्णो वचसां चातुर्येण सदुत्तरम्।
कृपया तस्य वाक्यानां छायामात्रेण दत्तवान्॥

६५. विदग्धत्वाच्च शास्त्रेषु गोविन्दस्य महात्मनः।
विद्यावैदग्ध्यवाक्येषु तेन सक्तोऽभवत्तदा॥

६६. यूयं मां तत्कथमिति यदि पृच्छथ वैष्णवाः।
शृणुध्वं तत्त्वतो वक्ष्ये सावधानेन तन्मनाः॥

६७. तेनैवमुक्तस्तं प्राह पूर्णः श्रीशैलपूर्वकः।
क्रेतुकामा वयं धेनूः गोविन्दं त्वां समागताः॥

---

தம் பேரறிவுள்ள நெஞ்சினால்—கோ₃விந்த₃னிடம் அவரது வாக்கைக்கொண்டே விதண்ட₃வாத₃ம் நிழலிடுவதைக் கண்டு, பரமகருணையால் திருமலைநம்பி அவரது வார்த்தைகளுக்கு நேர்மையான பதில்களை மிகவும் திறமையுடன் ஸூசநம் செய்துவிட்டார். அதனாலேயே—பேரறிவாளனான கோவிந்தனும் சாஸ்திரங்களில் வல்லவனாகையாலே, நம்பியின் கல்வித் திறமைமிக்க வார்த்தைகளில் அப்போதே மிகவும் ஈடுபட்டுவிட்டான். வைஷ்ணவர்களே! இதை எப்படி நான் அறிந்தேன் எனக்கேட்பீர்களாகில், உள்ளபடி கூறுகிறேன். அதிலேயே நெஞ்சு செலுத்திக் குறிக்கொண்டு கேளுங்கள்:— "நீங்கள் உறவினர்களை விட வந்தீர்களோ"? என்று கோ₃விந்த₃ன் சொன்னவுடன், திருமலைநம்பி, "நாங்கள் கறவைப்பசுக்களை வாங்க கேவிந்தராகிய உம்மிடம் வந்தோம்" என்று கூறினார். [இதன் கருத்து "நாங்கள் உறவினர்களை சைவமதத்திற்கு விடுவதற்காக உன்னிடம் வரவில்லை; சாஸ்திர ஞானமுள்ளவனாகையாலே, கறவைப்பசு போன்றவனாயிருந்தும்,

६८. श्रुतिस्मृतिपुराणेषु सेतिहासेषु सर्वशः।
वीक्ष्य प्रमाणजालानि "कश्चिन्मां वेत्ति तत्त्वतः"॥

६९. "क्षरः सर्वाणि भूतानि कूटस्थोऽक्षर उच्यते"।
"ज्ञानं नराणामधिको विशेषः ज्ञानेन हीनः पशुभिस्समानः"॥

७०. "ये वा ललाटफलके लसदूर्ध्वपुण्ड्राः
ते वैष्णवा भुवनमाशु पवित्रयन्ति"॥

---

பட்டிமேய்ந்து பிறர் சொத்தாகிவிட்ட உன்னைத் திரும்பி வாங்கவே வந்தோம்" என்பதே.] இதைக் கேட்டவுடன் கோவிந்தனின் நெஞ்சு பின்வரும் ஶ்ருதி ஸ்ம்ருதி இதிஹாஸபுராணங்களிலுள்ள ப்ரமாண வசனங்களைச் சிந்திக்கத் தொடங்கிற்று:— "முயற்சி செய்பவர்களில் பல்லாயிரத்தில் ஒருவன்தான் என்னை உள்ளபடி அறிகிறுன்" [ கீ₃தை 7-3 ] "எல்லா பூ₄தங்களும் ஞானமாறுபாடடையும் க்ஷரபுருஷனுகும்; கூடஸ்த₂னுன முக்தாத்மா ஞானமாறுபாடற்றவனுகையாலே அக்ஷரபுருஷனுகிறுன். (இருவிதமான புருஷர்களிலும் சிறந்தவனுகையாலே நான் புருஷோத்தமனுகிறேன்.)" [கீ₃தை 15-16, 17, 18] "(ஆஹாரம், நித்திரை, ப₄யம், ஆண்பெண் சேர்க்கை என்பவை எல்லாப் பிராணிகளுக்கும் பொதுவானது.) மற்றவைகளைக் காட்டிலும் மனிதன் பகுத்தறிவினுல் மேலானவனுயிருக்கிறுன். அந்தப் பகுத்தறிவு அற்றவன் பசுக்களுக்கு ஸமாநமானவன்." [நாரஸிம்ஹபுராணம் 16-13] "(எவர்கள் கழுத்திலே பூட்டப்பெற்ற துளஸிமணிமாலைகளையும், தாமரைமணிமாலைகளையும் உடையவர்களோ,) எவர்கள் நெற்றியில் விளங்குகிற ஊர்த்₄வபுண்ட்₃ரமுடையவர்களோ, (எவர்கள் தோள்களின் அடிப்பாகத்தில் ஶங்க₂ சக்ரங்களால் அடையாளமிடப் பெற்றிருக்கிறுர்களோ) அவர்களே வைஷ்ணவர்கள்; இவ்வுலகை உடனே பரிசுத்தப்படுத்துகிறுர்கள் அவர்கள்" [ பாத்₃மபுராணம் ]

७१. "ऊर्ध्वपुण्ड्रं द्विजातीनां शङ्खचक्रादिधारणम्।
वेदमूलप्रमाणाद्धि" "धर्मे सर्वं प्रतिष्ठितम्"॥

७२. "अविद्यया मृत्युं तीर्त्वा विद्ययाऽमृतमश्नुते"।
"प्रणवो धनुश्शरो ह्यात्मा ब्रह्म तल्लक्ष्यमुच्यते।
अप्रमत्तेन वेद्धव्यं शरवत्तन्मयो भवेत्"॥

७३. "सदे"वेत्यादिवाक्यानि "सत्यज्ञाना"दिकान्यपि।
"एकमे"वेति वाक्यानि "बहु स्यां"प्रभृतीनि च॥

---

"அந்தணர்களுக்கு ஊர்த்₄வபுண்ட்₃ரமும், ஶங்க₂சக்ராதி₃ தா₄ரணமும் வேத₃மாகிற மூலப்ரமாணத்தினலேயே ஸித்₃தி₄க்கின்றனவன்றே." "தா₄ர்மத்திலேயே எல்லாம் நிலைநிற்கிறது." [தை-நா 50] "கர்மயோக₃த்தாலே ஸம்ஸார காரணமான புண்யபாபங்களைக் கடந்து, உபாஸனத்தாலே மரணமற்ற பரமாத்மாவை அடைகிறுன்"[ஈஶாவாஸ்யம் 11] "ஆத்மாவானது அம்பாகவும், ப்ரணவமானது அவ்வம்பை எய்யும் வில்லாகவும், ப்₃ரஹ்மமானது–அந்த அம்பு சென்றடையும் இலக்காகவும் கூறப்படுகிறது. (விஷயாந்தரங்களில் பற்றற்று) கவனத்துடன் இவ்வாத்மாவாகிற அம்பை ப்₃ரஹ்மமாகிற இலக்கைக்குறித்து எய்யவேனும். அம்பு இலக்குடன் ஒன்ருகக் கலப்பதுபோல் ஆத்மாவும் ப்₃ரஹ்மத்தோடு ஒன்ருகக்கலக்கிறது." [முண்ட₃க 2-2-4] "ஸத்தாகவே இது முதலில் இருந்தது; அது ஒன்ருகவும், இரண்டாவதற்றதாகவுமிருந்தது ; அது 'நானே பலவாகிறேன்" என்று ஸங்கல்பித்தது" [சா₂ந் 6-2-1] "ப்₃ரஹ்மமாகவே இது முதலில் இருந்தது" [ப்₃ருஹ 3-4-11] "ஆத்மாவாகவே இது முதலில் இருந்தது" [ஐதரேய 1-1-1] நாராயணன் ஒருவனே முதலில் இருந்தான்; பிரமனுமில்லை சிவனுமில்லை" [ மஹோபனிஷத் ] "நாராயணனிடமிருந்து பிரமன் பிறக்கிருன். நாராயணனிடமிருந்து உருத்திரன் உண்டாகிருன்" [நாராயணேபனிஷத்] "ஸத்யமாகவும், ஞானமாக

७४. आपादितानि गोविन्दे तत्र तत्र बुधर्षभाः।
एतैः प्रमाणजालैश्च प्रतिपाद्यो जनार्दनः॥

७५. नारायणो जगत्कर्ता कल्याणगुणसागरः।
अतो मुमुक्षुभिः कार्यं सुतरां विष्णुपूजनम्॥

७६. शङ्खचक्रोर्ध्वपुण्ड्रादिधारणं च द्विजोत्तमैः।
इत्येवं मनसा सम्यग्विचार्य च पुनः पुनः॥

७७. डोलायमानचित्तस्तु तद्वाक्येभ्यो निरुत्तरः।
शास्त्रज्ञत्वात्स गोविन्दस्तूष्णीं भूतोऽभवत्तदा॥

७८. स पूर्णोऽपि महाप्राज्ञः तत् ज्ञात्वा तस्य मानसम्।
न्ययोजयत्साध्यकोट्यां तं तदा वैष्णवोत्तमः॥

७९. सभासदस्स तानुक्त्वा वैष्णवान् यतिपुङ्गवः।
तं पूर्णं श्लाघयित्वार्यं वैष्णवांस्तानुवाच ह॥

---

வும், அநந்தமாகவுமிருப்பது ப்₃ரஹ்மம்" [தைத்-ஆந] என்று ஶாஸ்த்ரங்களில் ஆங்காங்குள்ள வாக்கியங்கள் கோவிந்தருக்கு உணர்த்தப்பெற்றன. "இந்தப் பல ப்ரமாணங்களாலே ஜநார்த்த₃னனை நாராயணனே ஜக₃த்காரணமாகவும், கல்யாணகுணக் கடலாகவும் கூறப்படுகிறுன். ஆகையால், முமுக்ஷுக்களான அந்தணர்களாலே விஷ்ணு பூஜையே மிகவும் செய்யப்படவேண்டும். ஶங்க₂சக்ராதி₃ த₄ாரணமும் செய்யப்படவேண்டும்" என்று இவ்வண்ணமாக மனத்தினல் நன்கு பலகால் ஆராய்ந்து, நம்பியின் வார்த்தைகளாலே ஊசலாடும் நெஞ்சுடையவனுய், பதில் சொல்ல இயலாதவனுய், ஶாஸ்த்ரமறிந்தவனுகையாலே அப்போது மௌனமுடையவனுனன் கோவிந்தன். பேரறிவாளராய். வைஷ்ணவோத்தமரான நம்பியும், அவனது நெஞ்சை அறிந்து, 'கோ₃விந்த₃ன் இனி நம் வசப்படக் கூடியவனே' என்று அறுதியிட்டார்.

८०. ततः किमासीत् तत्सर्वं ब्रूत विस्तरतो मम।
तच्छ्रुत्वा यतिराजस्य वाक्यं वैष्णवसत्तमाः॥

८१. इदमूचुर्लक्ष्मणार्यं ब्रह्माणमृषयो यथा।
यं यं स्पृशति पाणिभ्यां यं यं पश्यति चक्षुषा॥

८२. स्थावराण्यपि मुच्यन्ते किं पुनर्बान्धवा जनाः।
इत्युक्तरीत्या भवतः संबन्धेन गतिर्भवेत्॥

८३. विभूतिद्वयनाथस्य स्थावराणामपि ध्रुवम्।
को विचारोऽस्ति गोविन्दे यतीश्वर जगद्गुरो॥

८४. इत्युक्त्वा लक्ष्मणाचार्यं वैष्णवास्ते महात्मनः।
अवशिष्टां कथां तस्मै प्रवक्तुमुपचक्रिरे॥

---

### யதிராஜ வைப₄வம்

79-85. யதிராஜர்—அங்கு குழுமியிருந்த வைஷ்ணவர்களைக் குறித்து, இவ்வண்ணமாக ஆசார்யரான திருமலை நம்பியைப் புகழ்ந்துரைத்து, அவர்களிடம், "அதற்குப் பின் என்ன ஆயிற்று என்பது அனைத்தையும் விரிவாக என்னிடம் சொல்லுவீர்களாக" என்று கேட்டார். யதிராஜருடைய அவ்வார்த்தையைக்கேட்ட வைஷ்ணவோத்தமர்கள், பிரமனிடம் ருஷிகள் உரைப்பதுபோலே பின்வரும் வார்த்தையை ராமாநுஜரிடம் உரைத்தார்கள்:—" '(பரமபா₄கவதன்) தன் திருக்கைகளினால் எதையெதைத் தொடுகிறானோ, எதையெதைத் திருக்கண்களால் காண்கிறானோ, அவையவை தாவரங்களாயிருந்தாலும் மோக்ஷமடைகின்றன. உறவினர்களைப்பற்றிச் சொல்லவும் வேண்டுமோ?' என்று ஶாஸ்த்ரங்களில் சொல்லப்பட்ட ரீதியில், உப₄யவிபூ₄திகளையும் உடையவரான தேவரீருடைய ஸம்ப₃ந்த₄த்தால் தாவரங்களும் மோக்ஷமடையும் என்பது நிஶ்சயம். ஜக₃த்₃கு₃ருவான யதிராஜரே! (தம்பியான) கோவிந்தர் நற்கதியடைவார் என்பதைப்பற்றிச் சொல்ல

८५. कूरेशादिसमस्तशिष्यनिकरैः विद्वत्सभामण्डले
ह्यासीनः परमासने यतिपतिर्लोकैकशिक्षाकरः।
श्रोतुं तस्य कथां महाद्भुततरां चक्रे मनस्सादरं
गोविन्दस्य महात्मनः प्रियतमां तेभ्यो जनेभ्यो महान्॥

इति श्रीप्रपन्नामृते रामानुजचरित्रे
भूरिश्रीशैलपूर्णगोविन्दसंवादो नाम अष्टादशोऽध्यायः॥

एकोनविंशोऽध्यायः

१. तेन संचोदितास्तत्र यतिराजेन वैष्णवाः।
कृताञ्जलिपुटा वाक्यं ते तमूचुर्महौजसम्॥

---

வும் வேண்டுமோ ?'' என்று மஹாத்மாவான ராமாநுஜ ரிடம் உரைத்துவிட்டு, கோ₃விந்த₃ரைப்பற்றிய எஞ்சிய செய்திகளைச் சொல்லத் தொடங்கினர்கள். கூரத்தாழ்வான் முதலான எல்லா ஶிஷ்யர்களோடும், பேரறிவாளர்களின் ஸபையிலே மேலான ஆஸனத்திலே வீற்றிருந்தவராய், உலகனைத்திற்கும் நல்லறிவு புகட்டுகின்ற மஹாபுருஷரான யதிராஜர், மஹாத்மாவான கோ₃விந்த₃ருடைய மிக இனியதும், மிக ஆச்சர்யமானதுமான கதையை அந்த ஸ்ரீ வைஷ்ணவர்களிடமிருந்து கேட்க விரும்பினர்.

ஸ்ரீப்ரபந்நாம்ருதத்தில், ராமாநுஜசரித்திரத்தில்
''பெரியதிருமலைநம்பிக்கும் கோ₃விந்த₃ருக்கும் ஸம்வாத₃ம்'' எனும்
பதினெட்டாவது அத்தியாயம் நிறைவுபெற்றது.

## பத்தொன்பதாம் அத்தியாயம்

## கோ₃விந்த₃ ஸமாச்ரயணம்

### கோவிந்தர் ஐயம் நீங்குதல்

1-17. யதிராஜரால் கேட்கப்பட்ட அவ்வைஷ்ணவர்கள், அங்கேயே கைகூப்பி நின்றவர்களாய், மஹாதேஜஸ்வியான அவரைக்குறித்துப் பின்வருமாறு கூறினர்கள்:—

२. कक्षे तृतीये वक्ष्यामः कार्यसिद्धिं शृणुष्व च।
भूयः श्रीशैलपूर्णार्यो नत्वा श्रीवेङ्कटेश्वरम्॥

३. अस्माभिः शिष्यसङ्घैश्च कालहस्तिसमीपतः।
गत्वा तत्र वने स्थित्वा सुवर्णमुखरीतटे॥

४. सहस्रगीतेर्व्याख्यानं शिष्येभ्यो बोधयन् स्थितः।
पुष्पाण्यपचितुं तत्र गोविन्दश्च समागतः॥

५. पाटलीवृक्षमारुह्य पुष्पाण्यपचयन् स्थितः।
द्वितीयशतके तत्र श्रीपराङ्कुशसत्कृतौ॥

६. गतासु दशगाथासु महतीषु ततः परम्।
तृतीयगाथाव्याख्यानपर्यन्तं तत्र स द्विजः॥

७. पुष्पाण्यपचयन् तस्थौ तत् शृण्वन् मौनमास्थितः।
अर्थश्चतुर्थगाथायामेवंभूतः समास्थितः॥

---

மூன்ருவது முறை முயன்றபோது காரியம் நிறைவேறி யதைக் கூறுகிருேம்; கேட்பீர். திருமலைநம்பி, திருவேங்கட முடையானைத் தொழுது, மறுபடியும் எங்களோடு கூடக் காளஹஸ்திக்கு அருகில் சென்று, அங்கு பொன்முகலி யாற்றங்கரையில் உள்ள தோட்டத்தில் வீற்றிருந்து, ஶிஷ்யர்களுக்குத் திருவாய்மொழி வ்யாக்₂யானம் ஸாதி₃த் துக்கொண்டிருந்தார். ( சிவனுக்குப் ) பூப்பறிப்பதற்காக கோவிந்தரும் அங்கு வந்து, பாதிரி மரத்தின் மேல் ஏறி, பூப் பறித்துக் கொண்டிருந்தார். நம்மாழ்வார் அருளிய திருவாய் மொழியின் இரண்டாம் பத்திலே, பத்துப்பாசுரங்களடங்கிய முதல் திருவாய்மொழியானபிறகு, “ திண்ணன்வீடு ” என்னும் இரண்டாம் திருவாய்மொழியில் முதல் மூன்று பாசுரங்களின் வியாக்கியானம் முடியும்வரையில் பூக்களைப் பறித்துக்கொண்டே அதைக்கேட்டுக்கொண்டு மௌனமா யிருந்தார் கோ₃விந்த₃ர். “தேவும் எப்பொருளும் படைக்கப்

८. स्वनाभिपङ्कजोत्पन्नसृष्टिकर्तृचतुर्मुखात् ।
तस्मान्नारायणाद्देवात् कल्याणगुणसागरात् ॥

९. सम्यगाराधनं पुष्पं चान्येषां कथमर्हति ।
श्रुत्वा तमर्थं गोविन्दः स पूर्णमिदमब्रवीत् ॥

१०. तस्यैवाराधनं पुष्पं किमन्येषां तु नार्हति? ।
श्रीशैलपूर्णस्तद्वाक्यं निशम्य यतिपुङ्गव ॥

११. तमुवाच ततो धीमान् गोविन्दं प्रति सत्वरम् ।
तस्यैवार्हति गोविन्द पूजा पुष्पं च चक्रिणः ॥

१२. तं विना पूजनं पुष्पं चान्येषां नार्हति ध्रुवम् ।
ततस्त्रिवारं तं पूर्णं सम्यक् पप्रच्छ बुद्धिमान् ॥

१३. तस्यैवार्हत्यदः पुष्पं किमन्येषां तु नार्हति? ।
स च श्रीशैलपूर्णार्यस्तमाचख्यौ यतीश्वर ॥

---

பூவில் நான்முகனைப் படைத்த தேவன் எம்பெருமானுக் கல்லால் பூவும் பூசனையும் தகுமே ?" என்னும் மூன்ருவது பாசுரத்துக்கு, "தன் திருநாபீ₄கமலத்தில், படைக்கும் கடவுளான நான்முகனையே படைத்தவனும், கல்யாண குணக்கடலான அந்த நாராயணனுகிற தேவனுக்கல்லாது, நல்ல பூஜையும், பூவும் வேறொரு தெய்வத்திற்குத் தகுமோ?" என்று நம்பி பொருள் உரைப்பதைக் கேட்ட கோவிந்தர், "நாராயணனுக்குத்தான் பூவும் பூசனையும் தகுமோ ? மற்றவர்களுக்குத் தகாதோ ?" என்று கேட்டார். அதைக் கேட்ட பேரறிவாளரான நம்பி, "கோ₃விந்த₃ரே ! சக்கரத் தானுக்கே பூவும் பூசனையும் தகும்; வேறெவர்க்கும் நிஶ்சய மாகத் தகாது" என்று சடக்கெனக் கூறினர். அக்கேள்வி யையே கோ₃விந்த₃ர் நம்பியை மூன்றுமுறை கேட்டார். நம்பி யும்"எம்பெருமானுக்கல்லால் வேறுஎவர்க்கும் பூவிட்டு அர்ச் சிப்பது தகாது" என்று மூன்று முறையும் பதில் சொன்னர்.

१४. नार्हतीति त्रिवारं च परेषामर्चनं ध्रुवम्।
तदाकर्ण्य च तान् वीक्ष्य वैष्णवान् मुक्तसंशयः॥

१५. वृक्षस्थ एव गोविन्दः छिन्नां कृत्वाऽथ मालिकाम्।
दूरेण पुष्पसंपूर्णां हित्वा तां पुष्पपेटिकाम्॥

१६. रुद्राक्षमालिकास्त्यक्त्वा भस्म वस्त्रेण मार्जयन्।
त्रिवारं नार्हतीत्येवं स्वरेण महताऽवदत्॥

१७. महापातकसंवृत्तः पर्वताग्रादधो भुवि।
यथा, पपात वृक्षाग्रात् सहसा मुक्तसंशयः॥

१८. तदा गोविन्दमायान्तं पूर्णः पूर्णमनोरथः।
सहस्रगीतेर्बहुधा मानयन् विस्मितोऽभवत्॥

---

அதைக்கேட்டு, அவ்வைஷ்ணவர்களைப்பார்த்து, ஐயம் நீங்கப்பெற்றவரான கோ₃விந்த₃ர், மரத்திலிருந்தபடியே, (சிவனுக்கு கட்டிய) அம்மாலையை அறுத்து, அப்பூக்கூடையையும் தூர எறிந்து, ருத்₃ராக்ஷ மாலைகளையும் அறுத்தெறிந்து, உடம்பில் பூசியிருந்த நீறையும் வஸ்திரத்தால் துடைத்து, 'தகாது, தகாது, தகாது' என்று மூன்று முறை பெருங்குரலோடு முழங்கினர். பெரும் பாவம் செய்தவன் மலையுச்சியிலிருந்து பூமியில் விழுவது போலே, மரத்தின் நுனியிலிருந்து, ஐயம் நீங்கப்பெற்றவராய் உடனே விழுந்தார்.

## கோ₃விந்த₃ரின் வருத்தம்

18-*28. அப்போது மனோரத₂ம் நிறைவேறப்பெற்ற திருமலைநம்பி, தன்னை நோக்கி வருகிற கோ₃விந்த₃ரைக் குறித்துத் திருவாய்மொழிப்பாசுரங்களைச் சொல்லிப் பல விதமாக கௌ₂ரவித்து ஆச்சரியமுற்றார். கோ₃விந்த₃ரும்

१९. गोविन्दः सहसा तस्य पादयोरपतत्तदा।
अज्ञश्चाचारहीनश्च विस्तीर्णे दुःखसागरे॥

२०. पतितोऽहं दयासिन्धो! रक्ष मां शरणागतम्।
इति निर्वेदमापन्नः स्वापराधमथाब्रवीत्॥

२१. विभूतिद्वयनिर्वाहिकिरीटधरमस्तकम्।
हित्वा विस्रस्तकेशाग्रमस्तके मोहितोऽभवम्॥

२२. विश्वकुण्ठं विहायामुं विषकण्ठे विमोहितः।
श्रीवक्षसं परित्यज्य निःश्रीवक्षाः समाश्रितः॥

२३. विहाय पुण्डरीकाक्षं विरूपाक्षे विमोहितः।
गिरिमुद्धृत्य हस्तेन महावर्षाच्च गोकुलम्॥

२४. योऽरक्षत्तं विसृज्याहं कपालकरमाश्रितः।
ब्रह्मादिस्थावरान्तेषु स्थितं सर्वेश्वरं हरिम्॥

---

அவருடைய திருவடிகளில் சடக்கென விழுந்தார். "அடியேன் அறிவற்றவன்; ஒழுக்கமற்றவன்; பரந்த துன்பக் கடலில் விழுந்துவிட்டேன். கருணைக்கடலே! என்னைக் கைதூக்கியெடுத்துக் காத்தருள்வீர்" என்று கதறி, பெரு வருத்தமுற்றவராய், கோவிந்த$_3$ர் தன் குற்றத்தைப் பின் வருமாறு புலம்பினார்,—"உப$_4$யவிபூ$_4$தி நிர்வாஹத்திற்கு முடி சூடினவனைவிட்டு, விரிதலையாண்டியை விரும்பினேனே! உலகமுண்ட பெருவாயனைக் கைவிட்டு, விஷமுண்ட கண்டனிடம் மயங்கினேனே! திருவிருந்தமார்பனைவிட்டு திருவில்லாத்தேவனைத் தொழுதேனே! புதுக்கணிப்புடைய புண்ட$_3$ரீகாக்ஷனை விட்டு, பொறிபறக்குங் கண்ணனைக் காமுற்றேனே! ஆய்ப்பாடியைக் கையினால் கல்லெடுத்துக் கல்மாரி காத்த கற்பகமிருக்கக் கையார் கபாலியைக் கண்டு வணங்கினேனே! பிரமன் முதலாகப் புல்லீருகவுள்ள ஜீவ ராசிகள் அனைத்திலுமிருப்பவனாய், உலகம் யாவையும்

२५. हित्वा नारायणं देवं सृष्टिस्थित्यन्तकारकम् ।
श्मशानवासिरुद्राय कृतसम्यक्प्रदक्षिणः ॥

२६. हेमाम्बरं परित्यज्य दिगम्बरमुपाश्रितः ।
देवरूपमिदं त्यक्त्वा तुलसीवनमादरात् ।

२७. तिक्तकोशातकी वल्ली मया संवर्धिता वृथा ।
वाक्यान्येतानि बहुशश्चोक्त्वा स द्विजपुङ्गवः ॥

२८. नोत्थितः पादयोस्तस्य तूष्णींभूतोऽभवत्तदा ।
तं च श्रीशैलपूर्णार्यो दृष्ट्वाऽस्मानिदमब्रवीत् ॥

२९. भविष्यच्छुद्धियोगस्य गोविन्दस्याधुनाऽभवत् ।
महात्मनो यामुनस्य करुणा न वृथा भवेत् ॥

३०. पाणिभ्यां शिर उद्धृत्य तस्याङ्गं प्रममार्ज च ।
सांत्ववाक्यैर्बहुविधैर्गोविन्दं लालयन्मुहुः ॥

---

படைத்தளித்து அழிப்பவனை ஸர்வேஶ்வரனும் நாரா யணனை விட்டு, சுடுகாடு காவலனைச் சுற்றிவலம்வந்தேனே! பொன்னிறவாடையணிந்தவனை விட்டு ஆடையில்லாதவனை ஆஶ்ரயித்தேனே! பரமாத்மரூபமான துளஸீவனத்தைக் கணிசியாமல், வீணே பேய்த் தும்மட்டிக்கொடியை ஆர் வத்தோடு நீர் வார்த்து வளர்த்தேனே!" என்கிற ரீதியில் பலவாறு வாக்கியங்களைச் சொல்லிப் புலம்பிய பின்பும் அவ் வந்தணர் தலைவரான கோவிந்தர் திருமலைநம்பியின் திரு வடிகளை விட்டு எழுந்திருக்காமல், மௌனமாகக் கிடந்தார்.

## திருமலைநம்பியின் பேரருள்

28*-31. அவரைக்கண்ட திருமலைநம்பி "கோவிந்த ருக்கு மஹாத்மாவான யாமுனரின் கருணையால் ஶுத்தி ஏற்படப்போகிறது. அக்கருணை ஒருபோதும் வீணாகாது." என்று எங்களைப் பார்த்து அருளிச்செய்து, இரு

३१. तं पिबन्निव चक्षुर्भ्यां पूर्णः श्रीशैलपूर्वकः।
सुखसंलापकथनैर्गोविन्दं लालयन् स्थितः॥

३२. एतस्मिन्नन्तरे शैवास्तच्छिवालयपालकाः।
सम्यक् विज्ञाय वृत्तान्तं कालहस्तिनिवासिनः॥

३३. आगत्य सहसा तत्र परिवार्य समन्ततः।
विलोक्य विमुखं स्वेषां तेषामभिमुखं च तम्॥

३४. दृष्ट्वा श्रीशैलपूर्णार्य वाक्यमूचुर्यतीश्वर।
अस्मद्दर्शननिर्वाहं गोविन्दं यूयमागताः॥

३५. चूर्णैर्विकीर्य भैषज्यैर्मोहयित्वा च मायया।
युक्तं खलु वशीकर्तुं भवतां वैष्णवोत्तमाः॥

---

கைகளாலும் அவரை முடிபிடித்து எடுத்து, உடம்பையும் தடவி, பலவிதமான ஆறுதல் மொழிகளைச் சொல்லி அவரைப் பலகால் சீராட்டி, கண்களாலே பருகுபவர் போலே குளிரநோக்கி, அவரோடு ஆனந்த₃மாகப் பேச்சு வார்த்தைகளைச் செய்துகொண்டிருந்தார்.

## சைவர்களின் ஆக்ஷேபம்

32-*49. யதிராஜரே! இதற்கிடையில், காளஹஸ்தியில் வாழும் அந்த ஶிவாலய நிர்வாஹிகள், கோ₃விந்த₃ர் கைமாறிப்போன செய்தியை நன்கு அறிந்து, உடனே அவர் இருக்குமிடம் வந்து சூழ்ந்து கொண்டு, அவர் தங்களைக் கணிசியாதவராகவும், வைஷ்ணவர்களிடமே ஈடுபட்டவராகவும் இருப்பதைக் கண்டு, திருமலைநம்பியைப் பார்த்துப் பின்வருமாறு வார்த்தை சொன்னார்கள். "வைஷ்ணவோத்தமர்களே! எங்கள் ஶைவ மதத்துக்குத் தலைவரான கோ₃விந்த₃ரை, இங்கு வந்து நீங்கள் மருந்தும் சொக்குப்பொடியும் இட்டு மாயையாலே மயக்கி வசப்

३६. शैवानां वचनं श्रुत्वा पूर्णस्तान् वाक्यमब्रवीत्।
युष्माभिरेव गोविन्दः प्रष्टव्योऽयं शिवद्विजाः॥

३७. अस्माभिरोषधैः क्षिप्तः किमर्थमिति विग्रहः।
तथ्यमन्यादृशं मार्गं यूयं जानीथ नो द्विजाः॥

३८. अन्यमार्गं न गच्छामः सन्मार्गे ह्यास्थिता वयम्।
ततः श्रीशैलपूर्णस्य वचः श्रुत्वा शिवद्विजाः॥

३९. तं विहायाथ गोविन्दं परिवार्येदमब्रुवन्।
गोविन्द शिवभक्ताग्र्य पूजाकालोऽतिवर्तते॥

४०. कालहस्तीश्वरस्त्वद्य तव पूजां प्रतीक्षते।
किमर्थमत्र हे तात वर्तसे नाभिभाषसे॥

४१. तद्धस्तमिति संगृह्य गच्छाम इति तेऽब्रुवन्।
हस्तबन्धं विधूयाशु गोविन्दो मुक्तसंशयः॥

---

படுத்தியது தகுமா?" என்று ஶைவர்கள் சொன்னதைக் கேட்டு, "எங்களால் மருந்திடப்பட்ட அந்த கோ3விந்த3ரையே நீங்கள் கேட்டுக்கொள்ளலாமே! எதற்காக இப்படிச் சண்டையிடுகிறீர்கள்? சிவத்3விஜர்களே! எங்களுடைய வழி உண்மையில் ஒப்பற்றதாய் உள்ளதென அறிவீர். பிறர் வழிக்கு நாங்கள் வரமாட்டோம். நாங்கள் நல்வழியிலேயே நிற்கிறோமன்றோ" என்று திருமலைநம்பி பதிலுரைத்தார். இதைக்கேட்ட ஶிவத்3விஜர்கள், அவரைவிட்டு, கோவிந்த3ரைச் சூழ்ந்துகொண்டு, "சிவப4க்தர்கள் தலைவரான கோ3விந்த3ரே! பூஜாகாலம் கடந்து செல்கிறதே! காளஹஸ்தீஶ்வரர் இன்று உமது பூஜையை எதிர்பார்த்து நிற்கிறீரே. ஐயா! இப்படியிருக்கும்போது நீர் இங்கிருந்துகொண்டு ஏன் எங்களுடன் பேசாமலிருக்கிறீர்?" என்று சொல்லி, அவருடைய கையைப் பிடித்துக்கொண்டு "போவோம் வாரீர்!" என்று கூறினார்கள். ஐயம் நீங்கப்

४२. तानुवाच वचः श्रेष्ठं सर्वेषां शृण्वतां तदा ।
पाणिं गृहीतुं युष्माकं अयुक्तं मे शिवद्विजाः ॥

४३. अस्माकं चाद्य युष्माकं संबन्धो नास्ति नास्ति हि ।
वयमेव पुरा यूयं यूयमेव पुरा वयम् ॥

४४. इदानीं विष्णुसंबन्धात् यूयं यूयं वयं वयम् ।
अङ्गुलीयाद्यशेषाणि स्वद्रव्यादीनि कानि च ॥

४५. तेभ्यो विसृज्य सहसा हस्ततालध्वनिं व्यधात् ।
शैवैः परमधर्मोऽयं शिव एवामृतप्रदः ॥

४६. इति प्रलोभितोऽत्यन्तं स तेषां विमुखोऽभवत् ।
तेषामासाद्य चास्माकं कलहः सुमहानभूत् ॥

४७. युष्मत्कृतमिदं कार्यं युष्मत्कृतमिदं त्विति ।
तेषां दुरभिमानत्वात् शैवानां यतिपुङ्गव ॥

---

பெற்ற கோ₃விந்த₃ரோவெனில், அவர்களுடைய கையை உடனே உதறி, அவர்கள் அனைவரும் கேட்கும்படியாக, அப்போதே பின்வரும் சிறந்த வார்த்தையை உரைத்தார்:— "ஶிவத்₃விஜர்களே! நீங்கள் என் கையைக் பிடிப்பது தகாது. எமக்கும் உமக்கும் இனி எத்தொடர்பும் இல்லவேயில்லை. முன்பு நீங்களே நாமாயிருந்தோம்; நாமே நீங்களாயிருந்தீர்கள். இப்போதோ (எனக்கு ஏற்பட்ட) விஷ்ணு ஸம்ப₃ந்த₄த்தால் நீங்கள் வேருகவும், நாம் வேருகவும் ஆகிவிட்டோம்." என்று கூறிய கோ₃விந்த₃ர், (காளஹஸ்திக் கோவிலைச் சேர்ந்த) இலச்சினைமோதிரம் முதலிய அனைத்தையும், தமது பொருள்களில் சிலவற்றையும் அவர்களிடம் கொடுத்து, கைதட்டி நின்ருர். "ஶிவனே மோக்ஷமளிப்பவன்; சிவத₄ர்மமே சிறந்தது" என்று ஶைவர்களால் மிகவும் மயக்கப்பட்டபோதிலும், அவர் அவர்களுக்கு முகங்கொடுக்காமலேயிருந்தார்.

४८. तथापि विमुखस्तेषां स युष्मत्कृपया गुरो।
शैवैर्निवारितः पूर्णस्तत्रैव स दृढव्रतः॥

४९. गोविन्दसहितो धीमान् तं वासरमवर्तत।
तस्यां रात्र्यां व्यतीतायां कृतनित्यक्रियो महान्॥

५०. श्रीशैलपूर्णस्तत्रैव निश्चलः सुखमास्थितः।
ततो निराशास्ते शैवास्तं पूर्णमिदमब्रुवन्॥

५१. गोविन्दनयनार्थाय यूयमत्रागता इति।
विदित्वा कलहायाथ सन्नद्धा ह्यास्थिता वयम्॥

---

ஆசார்யரான யதிராஜரே! அவர்கள் து₃ரபி₄மானம் கொண்டவர்களாயிருந்தபடியால், "(கோவிந்தருக்கு மருந்து வைக்கும்) இக்கார்யத்தை நீங்களே செய்துவிட்டீர்கள்! நீங்களே செய்துவிட்டீர்கள்" என்று கத்திக்கொண்டிருக்கும் அவர்களுக்கும் எங்களுக்கும் பெருத்த சண்டை ஏற்பட்டது. அப்போதும் கோ₃விந்த₃ர் உமது கருணையால் அவர்களுக்கு முகங்கொடுக்காமலேயிருந்தார். (இவ்வூரைவிட்டு கோ₃விந்த₃ரை அழைத்துச் செல்லலாகாது என்று) சைவர்களால் தடைசெய்யப்பெற்ற திருமலைநம்பி உறுதிமிக்கவராய் கோ₃விந்த₃ரோடுகூட அங்கேயே அன்றைப்பொழுதைக் கழித்தார்.

## சிவன் தெளிவுபடுத்தல்

49*-*60. அன்றிரவு கழிந்தபின், மஹாபுருஷரான திருமலைநம்பி, காலைக்கடன்களை முடித்துக்கொண்டு அவ்விடத்திலேயே சஞ்சலமற்றவராய் இனிதே இருந்தார். அதன் பின் கோ₃விந்த₃ரிடம் பற்றுவிட்டுபோன அந்த சைவர்களும் திருமலைநம்பியிடம் பின்வருமாறு கூறினர்கள், — "கோ₃விந்த₃ரை இங்கிருந்து அழைத்துச் செல்லவே நீங்கள் வந்திருப்பதை அறிந்து, இன்று பெரும் கலஹம் செய்யவே நாங்கள் ஸித்₃த₄ப்படுத்திக்கொண்டிருந்தோம்.

५२. कालहस्तीश्वरः स्वप्ने वाक्यमेवं जगाद नः।
पाषण्डबौद्धचार्वाकैस्त्रयीधर्मो विलोपितः॥

५३. त्रिदण्डधारिणा पूर्वं विष्णुना रक्षिता त्रयी।
दत्तात्रेयस्वरूपेण लोके पाषण्डसङ्कुले॥

५४. विष्णोः पारिषदास्त्वद्य शेषशेषाशनादयः।
अवतीर्णाः क्षितावासन् दत्तात्रेयादयो यथा॥

५५. शेषशेषारिशङ्खादिभागैः भूमिं समागताः।
रामानुजार्यगोविन्ददाशरथ्यादिदेशिकाः॥

५६. गङ्गास्नानेच्छया पूर्वं गोविन्दस्तु यदा गतः।
इदमस्मत्प्रियतया गोविन्दकृतपूजनम्॥

---

அப்போது காளஹஸ்தீஶ்வரர் எங்களது கனவிலே பின் வரும் வார்த்தையைக் கூறினர்,— 'பாஷண்ட$_3$ர்கள், பௌத்$_3$த$_4$ர்கள், சார்வாகர்கள் ஆகியவர்களால் வேத$_3$ த$_4$ர்மம் நலியப்பட்டது. இவ்வண்ணம் உலகமானது வேத$_3$த்திற்கு முரண்பட்ட பாஷண்ட$_3$ர்களால் நிறைந்த வளவில் திரித$_3$ண்ட$_3$த்தை த$_4$ரித்த த$_3$த்தாத்ரேய ஸ்வரூபி யான விஷ்ணுவினல், முன்னொரு காலத்தில் வேத$_3$ம் ரக்ஷிக்கப்பட்டது. அந்த த$_3$த்தாத்ரேயர் முதலானுரைப் போலே, ஆதி$_3$ஶேஷன், விஷ்வக்ஸேநர் முதலான விஷ்ணு கிங்கரரான நித்யஸூரிகள் இப்போது பூ$_4$மியில் அவதரித் துள்ளனர். அவர்களில் ஆதி$_3$ஶேஷன் ஸ்ரீராமாநுஜராக வும், க$_3$ருட$_3$ன் கோ$_3$விந்த$_3$ராகவும், ஶங்க$_2$சக்ரங்கள் (முறையே) முதலியாண்டான் கூரத்தாழ்வாகைவும் பூ$_4$மியில் தோன்றியுள்ளனர். கோ$_3$விந்த$_3$ர் முன்னொரு சமயம் க$_3$ங்க$_3$ா ஸ்நாநம் செய்யவிரும்பிக் காசியிலேயே வாழச்சென்ற போது, அந்த நினைவைத் தவிர்ப்பதற்காக நாமே கங்கை நீரில் மஹாத்மாவான அவருடைய கையில் லிங்க$_3$த்தை அகப்படச் செய்து இங்கு வரவழைத்தோம். ஏனெனில், அவரால் பூஜை செய்யப்படுவதை நாமே விரும்பினேம்.

५७. तदा ह्यपोह्य तद्बुद्धिं लिङ्गं तस्य करे कृतम्।
गङ्गाम्भसि मया पूर्वं गोविन्दस्य महात्मनः॥

५८. तेन व्याजेन गोविन्दो मां नित्यं पूजयन् स्थितः।
अतो गोविन्दभट्टाद्या नास्माकं वशवर्तिनः॥

५९. स्वेच्छाविहारिणस्ते च न कर्मवशवर्तिनः।
तेनेदं भाषितमिति शङ्करेणैव वैष्णवाः॥

६०. श्रीशैलपूर्णं प्रत्युक्त्वा प्रतियाताः शिवद्विजाः।
तस्मिन् क्षणे स पूर्णार्यो गोविन्दं तं यतीश्वर॥

६१. आदाय वेङ्कटगिरिं स्वजनैः प्रविवेश ह।
वपनं कारयित्वाऽऽशु गोविन्दस्य यतीश्वर॥

---

அந்த வ்யாஜத்தாலே கோ₃விந்த₃ர் என்னை தினந்தோறும் பூஜை செய்துகொண்டிருந்தார். ஆகையால், கோ₃விந்த₃ப₄ட்டர் முதலானவர்கள் நமக்கு வஶப்பட்டவர்களல்லர். கர்மவஶப்படாதவர்களான அவர்கள் தங்கள் விருப்பப்படி வாழவேண்டியவர்கள்.' என்று இவ்வண்ணமாக சிவனே எங்கள் கனவில் உரைத்தார்.'' என்று திருமலைநம்பியிடம் உரைத்துவிட்டு சிவத்₃விஜர்கள் வந்த வழியே திரும்பினார்கள்.

## கோ₃விந்த₃ஸமாஶ்ரயணம்

60*-*64. யதிராஜரே! அப்போதே கோ₃விந்த₃ரை அழைத்துக்கொண்டு, தமது சிஷ்யர்களோடு திருவேங்கடமலைக்குச் சென்றார் திருமலைநம்பி. விரைவில் கோ₃விந்த₃ருக்கு வபனம் (சிகைவைத்தல்) செய்வித்து, பஞ்சஸம்ஸ்காரங்களையும் செய்வித்தார் திருமலைநம்பி. பெரியாழ்வார் முதலான ஆழ்வார்கள் அருளிச்செய்த திருப்பல்லாண்டு முதலான த்₃ராவிட₃வேத₃மான நாலாயிர தி₃வ்யப்ரப₃ந்த₄ங்

६२. अकरोत्पञ्चसंस्कारान् पूर्णः श्रीशैलपूर्वकः ।
विष्णुचित्तादियोगीन्द्रैः कृतां द्राविडसंहिताम् ।
६३. स तेनाध्यापयित्वाथ चतुष्टयसहस्रिकाम् ।
अर्थपञ्चकविज्ञानं मन्त्रार्थज्ञानमुत्तमम् ॥
६४. सम्पूर्णं बोधयामास गोविन्दाय यतीश्वर।
गोविन्दोऽपि विनीतात्मा प्राप्तसर्वार्थसञ्चयः॥
६५. "अहं सर्वं करिष्यामि जाग्रतः स्वपतश्च ते।"
इति रामाय सौमित्रिः शुश्रूषामकरोद्यथा॥
६६. तथा श्रीशैलपूर्णाय गुरवे विनयान्वितः।
अधुना लक्ष्मणाचार्य! शुश्रूषणपरायणः॥
६७. नित्यानपायी शुश्रूषां कुर्वन्नास्ते यतीश्वर!।
श्रुत्वा गोविन्दवृत्तान्तं सम्यक् तेभ्यः प्रहर्षितः॥

---

களையும் கோ₃விந்த₃ருக்குக் கற்பித்து, ((1) ப்ராப்யமான (அடையப்படும்) ப்₃ரஹ்மஸ்வரூபம், (2) ப்ராப்தாவான (அடைபவனான) ஜீவாத்மஸ்வரூபம், (3) அடைவதற்கு உபாயம், (4) அடைந்து பெறும் ப₂லன், (5) அடைவதற்கு விரோதி₄ என்னும் ஐந்துவகைப்பட்ட) அர்த்த₂பஞ்சகத்தையும், (திருமந்த்ரம், த்₃வயம், சரமஶ்லோகம் என்னும்) ரஹஸ்யமந்த்ரங்கள் மூன்றின் பொருளையும் அவருக்கு முழுவதும் உபதே₃ஶித்தார்.

### கோ₃விந்த₃ரின் ஆசார்யநிஷ்டை₂

64*-*69. யதிராஜரே! திருந்திய மனத்தினரான கோ₃விந்த₃ரும், எல்லா அர்த்த₂ங்களையும் உணரப்பெற்றவராய், "நீர் விழித்திருக்கும்போதும், தூங்கும்போதும் அடியேன் எல்லா அடிமைகளையும் செய்வேன்" [ரா-அ 31-17] என்று ராமபிரானுக்கு லக்ஷ்மணன் அடிமைசெய்தது போலே, அடக்கம் மிகுந்தவராய்த் திருமலை நம்பிக்கு எல்லா

६८. यथार्हं पूजयामास वैष्णवांस्तान् यतीश्वरः।
ततः समासदस्सर्वान् वैष्णवान् यतिपुङ्गवः॥
६९. विसर्जयित्वा स्वमठं प्रविवेश महायशाः।
इदं गोविन्दचरितं यः शृणोतीह मानवः॥
मुकुन्दे तस्य सुदृढा भवेद्भक्तिर्न संशयः॥
७०. संवादमेतत्सकलार्थसारं
श्रीशैलपूर्णस्य महात्मनोऽथ।
गोविन्ददेवस्य च ये पठन्ति
शृण्वन्ति ते विष्णुरता भवेयुः॥
इति श्रीप्रपन्नामृते रामानुजचरिते
गोविन्दार्यस्य श्रीशैलपूर्णाश्रयणं नाम एकोनविंशोऽध्यायः॥

---

அடிமைகளையும் செய்வதையே யாத்ரையாகக்கொண்டவராய், அவரை எப்போதும் விட்டுப்பிரியாதவராய்க் கைங்கர்யம் செய்துவருகிறார் — என்று ஸ்ரீவைஷ்ணவர்கள், கோ₃விந்த₃ர் திருத்தப்பெற்ற செய்தியைக் கூறியதை நன்கு கேட்ட யதிராஜர் அவர்களிடம் மிகவுகந்தவராய், அவர்களை உரிய முறையில் உபசரித்தார். அவர்களுக்கு விடை கொடுத்துவிட்டுத் தன் மடத்தினுள் பிரவேசித்தார் பெரும் புகழாளரான யதிராஜர்.

### ப₂லஶ்ருதி

69*-70. கோ₃விந்த₃ருடைய இச்சரிதத்தைக் கேட்கும் மனிதனுக்கு, முக்தியளிக்கும் முகுந்தனிடத்தில் அசையாத உறுதியையுடைய ப₄க்தி உண்டாகும் என்பதில் ஐயமில்லை. மஹாத்மாவான திருமலைநம்பிக்கும், கோ₃விந்த₃ப்பெருமாளுக்கும் நடந்த ஸகலார்த்த₂ஸாரமான இந்த ஸம்வாத₃த்தைப் படிப்பவர்களும், கேட்பவர்களும் விஷ்ணுவிடம் ஈடுபட்டவராவார்கள்.

ஸ்ரீ ப்ரபந்நாம்ருதத்தில், ராமாநுஜசரித்திரத்தில்
"கோ₃விந்த₃ர் திருமலைநம்பியை ஆஶ்ரயித்தல்" என்னும்
பத்தொன்பதாவது அத்தியாயம் நிறைவுபெற்றது.

विंशोऽध्यायः

१. अथ श्रीलक्ष्मणाचार्यः पूर्णाचार्यगृहं प्रति।
गत्वा सम्यक् प्रणम्याह पादयोर्देशिकस्य सः॥

२. यामुनादर्शजः शोको गलितस्त्वत्पदाश्रयात्।
मम त्वद्दासभूतस्य विशेषार्थान् त्वयि स्थितान्।

३. पूर्णार्य कृपया ब्रूहि गुरूत्तम! दयानिधे!।
तच्छ्रुत्वा वचनं तस्य महापूर्णः कृपानिधिः॥

४. अहो द्वयस्य माहात्म्यं अहो वीर्यमहो बलम्।
मन्त्ररत्नं शुभकरं वेदसारं सनातनम्॥

५. सर्वपापक्षयकरं सर्वपुण्यविवर्धनम्।
श्रीकरं लोकवश्यं च सद्यः संसारतारणम्॥

---

## இருபதாவது அத்தியாயம்

# திருக்கோட்டியூர் எழுந்தருளல்

### பெரியநம்பி த்₃வயாதி₃களை உபதே₃ஶித்தல்

1-*12. பின்பொருநாள், ஸ்ரீராமாநுஜர் பெரியநம்பியின் திருமாளிகைக்கு எழுந்தருளி, ஆசார்யரான அவரது திருவடிகளில் நன்கு வணங்கிப் பின்வருமாறு கூறினார்,— "உமது திருவடிகளை ஆஶ்ரயித்ததால், யாமுநாசார்யரைக் காணாததினால் ஏற்பட்ட துன்பம் மறைந்தது. கருணாநிதி₄யாய், ஆசார்யோத்தமரான பெரியநம்பிகளே! உம்மிடமிருக்கும் விஶேஷார்த்த₂ங்களை உமது அடியேனான எனக்கு அருளிச்செய்யவேண்டும்" என்று. ராமாநுஜருடைய இவ்வார்த்தையைக்கேட்ட கருணாநிதி₄யான பெரியநம்பி, "த்₃வயத்தின் பெருமையையும், வீர்யத்தையும், ப₃லத்தையும் என்னென்று சொல்லுவேன்! மந்திரங்களுள் மாணிக்கமாய், ஶுப₄மளிப்பதாய், வேத₃ஸாரமாய், பழைய

६. मूर्खो वा धर्मशीलो वा निन्दितो वाप्यनिन्दितः।
द्वयोच्चारणमात्रेण नरः पूज्यो विशेषतः।

७. मानसं वाचिकं पापं कायिकं च त्रिधा कृतम्।
द्वयस्मरणमात्रेण नाशं याति सुनिश्चितम्॥

८. नारी वा पुरुषो वापि गुरुवन्दनपूर्वकम्।
द्वयेन प्राप्नुयाद्यच्च तद्विष्णोः परमं पदम्॥

९. संसारार्णवमग्नानां सद्यः संसारतारणम्।
द्वयमेकं तु विप्रेन्द्र नास्त्यस्य सदृशं भुवि॥

१०. एवं द्वयं प्रशस्याथ यतिराजाय तत्त्वतः।
द्वयार्थं लोकरक्षार्थं कृपया चोपदिश्य च॥

---

தாய், எல்லாப்பாபங்களையும் அழிப்பதாய், எல்லாப்புண் யங்களையும் வளரச்செய்வதாய், செல்வங்களையெல்லாம் அளிப்பதாய், உலகையே வசப்படுத்துவதாய், ஸம் ஸாரத்தை உடனே தாண்டுவிப்பதாயிருப்பது த்₃வயமந் திரம். (அறத்தை அறியாத) அறிவிலியானாலும், அறவழி நிற்பவனாயினும், இகழப்படுபவனாயினும், புகழப்படுபவனா யினும் எந்த மனிதனும் த்₃வயோச்சாரணமாத்ரத்தாலே விசேஷமாகப் பூஜிக்கத்தக்கவனாகிறான். மனம், மொழி, மெய் என்னும் முக்கரணங்களால் செய்யப்பட்ட பாபங் களும், த்₃வயத்தை நினைத்த மாத்திரத்தில் அழிகின்றன வென்பது மிகவுறுதி. ஸ்த்ரீயானாலும், புருஷனானாலும் ஆசார்யனை வணங்கி த்₃வயத்தை உச்சரிப்பதால் விஷ்ணு வின் பரமபத₃த்தையே அடைகிறார்கள். அந்தணர்தலைவரே! ஸம்ஸாரக்கடலில் மூழ்கினவர்களுக்கு உடனே ஸம்ஸாரத் தைத் தாண்டச்செய்வது த்₃வயம் ஒன்றேயாகும். உலகில் இதற்கு இணையானது இல்லை." என்று த்₃வயத்தின் பெருமையைச்சொல்லி, யதிராஜருக்குக் கருணையோடு த்₃வயத்தின் பொருளை உலகெல்லாம் உய்யும்பொருட்டு

११. न्यायतत्त्वं महाशास्त्रं शास्त्रं पुरुषनिर्णयम् ।
गीतार्थसंग्रहं नाम ग्रन्थं सिद्धित्रयं तथा ॥

१२. व्याससूत्राणि सर्वाणि पञ्चरात्रागमं महत् ।
पूर्णार्यो लक्ष्मणाचार्यं मत्वा सर्वोत्तमं तदा ॥

१३. स्वपुत्रं यतिराजाय पुण्डरीकाक्षनामकम् ।
शिष्यं कृत्वा ततः प्रीतो यतिराजं वचोऽब्रवीत् ।

१४. गोष्ठीपुरे यतिश्रेष्ठ! गोष्ठीपूर्ण इति श्रुतः ।
सर्वशास्त्रार्थतत्त्वज्ञो वर्तते वैष्णवोत्तमः ॥

१५. महार्थाः कतिचित्तस्मिन् स्थापिता यामुनेन वै ।
तत्र गत्वाऽञ्जसा तस्मात्तान् शृणुष्व महात्मनः ॥

---

உள்ளபடி உபதே₃ஶித்து, (நாத₂முனிகள் அருளிய) ந்யாயதத்வம் என்னும் மஹாஶாஸ்த்ரத்தையும், (ஆளவந்தார் அருளிய) புருஷநிர்ணயம் என்னும் ஶாஸ்த்ரத்தையும், கீ₃தார்த்த₂ஸங்க்₃ரஹம் என்னும் நூலையும், ஸித்₃தி₄த்ரயத்தையும், வ்யாஸர் அருளிய ப்₃ரஹ்மஸூத்ரங்கள் அனைத்தையும், பெரியதான பாஞ்சராத்ராக₃மத்தையும் உபதே₃ஶித்தார்.

## திருக்கோட்டியூர் நம்பியிடம் அனுப்புதல்

12*-15. ஸ்ரீராமாநுஜரை ஆசார்யர்களில் சிறந்த உத்தாரகாசார்யராக எண்ணி, பெரியநம்பி அப்போதே தமது புத்திரரான புண்ட₃ரீகாக்ஷர் என்பவரை யதிராஜருக்கு சிஷ்யராக்கி, மிகவுகந்தவராய் அவரிடம் பின்வருமாறு அருளினர்,— "யதிராஜரே! திருக்கோட்டியூரில், திருக்கோட்டியூர்நம்பி என்று புகழ்பெற்றவராய், எல்லா சாஸ்திரங்களின் உண்மைப்பொருளையும் அறிந்தவரான வைஷ்ணவோத்தமர் வாழ்கிறார். யாமுநாசார்யரால் அவ

१६. पूर्णाचार्यवचः श्रुत्वा सुप्रीतो यतिपुङ्गवः।
गोष्ठीपुरं तदासाद्य गोष्ठीपूर्णपदाब्जयोः॥

१७. प्रणामं विधिवत्कृत्वा गोष्ठीपूर्णमुवाच सः।
मन्त्रार्थमधुना मह्यं दत्वा रक्ष कृपानिधे॥

१८. यतिराजस्य तद्वाक्यं गोष्ठीपूर्णो निशम्य सः।
व्यवसायस्य बाहुल्यं ज्ञातुकामो महात्मनः॥

१९. गौरवं दर्शयन् लोके मन्त्रार्थस्य महामतिः।
रामानुजमुवाचेदं गोष्ठीपूर्णो यतीश्वरम्॥

२०. मन्त्रार्थस्याधुना लोके नाधिकारी च विद्यते।
कथं दास्यामि योगीन्द्र मन्त्रार्थं तव सत्वरम्॥

---

ரிடம் பெரிய ரஹஸ்யார்த்த₂ங்கள் சில சேமித்து வைக்கப் பட்டிருக்கின்றன. அங்கு சென்று அந்த மஹாபுருஷரிட மிருந்து அவற்றை நன்கு கேட்பீராக" என்று.

## திருக்கோட்டியூர் சென்று திரும்பியது

16-*22. பெரியநம்பியின் வார்த்தையைக் கேட்டு மிக வுகந்த யதிராஜர், திருக்கோட்டியூர் சென்று, திருக் கோட்டியூர் நம்பியின் திருவடித் தாமரைகளில் முறைப்படி வணங்கி, "கருணாநிதி₄யே! திருமந்திரத்தின் பொருளை அடி யேனுக்கு இப்போதே அளித்து ரக்ஷிக்கவேண்டும்" என்று பிரார்த்தித்தார். யதிராஜருடைய அவ்வார்த்தையைக் கேட்ட பேரறிவாளரான நம்பி, மஹாத்மாவான அவருடைய உறுதியின் மிகுதியை அறிய விரும்பியும், மந்திரப்பொருளின் பெருமையை காட்ட எண்ணியும் யதிராஜரிடம் பின் வருமாறு கூறினார்,— "யதிராஜரே! திருமந்திரத்தின் பொருளை அறிய இவ்வுலகில் இப்போது அதி₄காரி எவனு மில்லை. அப்படியிருக்கும்போது திருமந்திரத்தின் பொருளை

२१. एवमुक्त्वा ततस्तस्य स पूर्णो विमुखः स्थितः ।
गोष्ठीपूर्णस्य तद्वाक्यं निशम्य स विलोक्य तम् ॥

२२. अवाप रङ्गनिलयं सहसा यतिशेखरः ।
ततः श्रीरङ्गनगरे रङ्गराजमहोत्सवम् ॥

२३. गोष्ठीपूर्णो द्रष्टुकामः श्रीरङ्गं सहसाऽभ्यगात् ।
गोष्ठीपूर्णे ततस्तस्मिन् गमनाभिमुखे तदा ॥

२४. स्वतीर्थं शठकोपादीन् दापयित्वा प्रयत्नतः ।
रङ्गराडर्चकमुखैर्गोष्ठीपूर्णमुवाच तम् ।

२५. गोष्ठीपूर्ण ! गुरुश्रेष्ठ ! रहस्यार्थान् विशेषतः ।
मामकाय वद प्राज्ञ लक्ष्मणार्याय धीमते ॥

---

உமக்கு எப்படி உடனே சொல்லுவேன் ?" என்று கூறி, திருக்கோட்டியூர்நம்பி அவருக்கு முகங்கொடுக்காமலிருந்தார். நம்பியின் வார்த்தையைக்கேட்டு, அவரையும் பார்த்து, யதிராஜர் உடனே ஸ்ரீரங்க₃த்திற்கு எழுந்தருளி விட்டார்.

### அரங்கனின் நியமனம்

22*-25. அதன்பிறகு திருவரங்கப்பெருநகரில் ஸ்ரீரங்க₃ ராஜனின் திருநாளை ஸேவிப்பதற்காகத் திருக்கோட்டியூர் நம்பி ஆர்வத்தோடு எழுந்தருளினர். உத்ஸவம் ஸேவித்து விட்டுத் திரும்பி எழுந்தருள விடைகொள்ளும்போது, ஸ்ரீரங்க₃ராஜன் தனது தீர்த்த₂ம் ஶட₂கோபம் முதலானவற்றை அவருக்கு அருளி, "அறிவாளியாய், ஆசார்ய ஶ்ரேஷ்ட₂ரான திருக்கோட்டியூர்நம்பியே! அறிவாளியாய், என்னுடையவனை இராமாநுசனுக்கு ரஹஸ்யார்த்த₂ங்களைச் சிறப்பாக உபதே₃ஶிக்கவேணும்" என்று அர்ச்சகர்கள் மூலமாகத் திருக்கோஷ்டியூர் நம்பிக்கு நியமனம் செய்தான்.

२६. गोष्ठीपूर्णस्तदाकर्ण्य रङ्गराजमभाषत।
'इदं ते नातपस्काय नाभक्ताय न मानिने॥

२७. न चाशुश्रूषवे वाच्यं न च मां योऽभ्यसूयति।'
'संवत्सरं तदर्धं वा मासं मासार्धमेव च॥

२८. परीक्ष्य विविधोपायैः कृपया निःस्पृहो वदेत्।'
युष्माभिरेव गदितं पूर्वं श्रीरङ्गभूपते!॥

---

## திருக்கோட்டியூர் நம்பியின் மறுப்பு

26-28. அரங்கனின் இவ்வார்த்தையைக்கேட்ட திருக்கோட்டியூர் நம்பி, "ஸ்ரீரங்கராஜனே! 'இந்த கீ₃தாசரம ஶ்லோகார்த்த₂த்தைத் தவம் புரியாதவனுக்குச் சொல்லலாகாது; (தவம் புரிந்தவனுயினும் ஆசார்யனிடமும் என்னிடமும்) ப₄க்தியில்லாதவனுக்கும், தான் என்னும் அஹங்காரமுள்ளவனுக்கும் ஒருபோதும் உபதேசிக்கக் கூடாது; (தவமும் ப₄க்தியும் இருந்தாலும்) ஶுஶ்ரூஷை செய்யாதவனுக்குக் கூறலாகாது; (வேறு எத்தனை கு₃ணமிருந்தாலும்) என்னைக்குறித்து அஸூயைகொள்பவனுக்குச் சொல்லவே கூடாது' [கீ₃தை 18-66] 'ஒரு வருடமோ, ஆறு மாதமோ, ஒரு மாஸமோ, குறைந்த பக்ஷம் ஒரு பக்ஷமாவது, பலவித₄மான உபாயங்களால் பரீக்ஷித்து, அதன்பிறகே ஆசார்யன் சிஷ்யனுக்குக் கருணையோடு கைம்மாறு கருதாமல் (ரஹஸ்யார்த்த₂ங்களை) உபதே₃ஶிக்கவேண்டும்' என்று தேவரீரேயன்றோ ஶாஸ்த்ரங்களில் முன் அருளிச் செய்திருக்கிறீர்! (அப்படியிருக்க, நான் இவரைப் பரீக்ஷிக்காமல் எப்படிச் சடக்கென உபதே₃ஶிப்பேன்?)" என்று பதில் கூறினர்.

२९. रङ्गेशस्तन्निशम्याशु गोष्ठीपूर्णं वचोऽब्रवीत्।
न तथायं शृणुष्वाद्य गोष्ठीपूर्ण वदामि ते॥

३०. 'शरीरं वसु विज्ञानं वासः कर्म गुणानसून्।
गुर्वर्थं धारयेद्यस्तु स शिष्यो नेतरः स्मृतः॥'

३१. इत्यादिगुणयुक्ताय यतिराजाय धीमते।
मन्त्रराजोपदेशाय न्यूनता नास्ति सत्तम॥

३२. रङ्गभर्तृवचः श्रुत्वा तदलङ्घ्यं स वैष्णवः।
श्रीमते रङ्गराजाय विज्ञाप्य स तथोमिति॥

---

### அரங்கனின் நிர்ப்ப₃ந்த₄நியமனம்

29-31. அரங்கநகரப்பன் அவ்வார்த்தையைக்கேட்டவுடன், "நல்லவரான திருக்கோட்டியூர் நம்பியே! இப்போது ஒன்று சொல்லுகிறேன் கேளீர். இவர் நான் கீ₃தையில் சொன்னபடி தவம் புரியாதவரோ, ப₄க்தியற்றவரோ, ஶுஶ்ருஷைசெய்யாதவரோ, அஸூயை உள்ளவரோ அல்லர். 'தன் ஶரீரத்தையும், பொருளையும், அறிவையும், தான் வாழுமிடத்தையும், தன் செயல்களையும், கு₃ணங்களையும், உயிரையுங்கூட ஆசார்யனுக்காகவே எவன் கொண்டிருக்கிறனே, அவனே சிஷ்யன் எனத்தக்கவன். வேறுவித₄மாக இருப்பவன் சீடனல்லன்.' என்று ஶாஸ்திரங்களில் சொன்ன நற்குணங்களைக் கொண்டிருக்கும் பேரறிவாளரான இந்த யதிராஜருக்குத் திருமந்திரத்தின் பொருளை உபதே₃ஶிப்பதினல் எக்குறையுமில்லை; (ஆகையால் இவர்க்கு அவஶ்யம் உபதே₃ஶிக்கவேணும்)" என்று வலியுறுத்தி வார்த்தை அருளினன்.

### நம்பியின் அங்கீ₃காரம்

32-*34. அறிவாளியாய், விஷ்ணுப₄க்தரான திருக்கோட்டியூர் நம்பியும், ரங்க₃ராஜனின் அந்தத் தட்டமுடி

२६. गोष्ठीपूर्णस्तदाकर्ण्य रङ्गराजमभाषत।
'इदं ते नातपस्काय नाभक्ताय न मानिने॥

२७. न चाशुश्रूषवे वाच्यं न च मां योऽभ्यसूयति।'
'संवत्सरं तदर्धं वा मासं मासार्धमेव च॥

२८. परीक्ष्य विविधोपायैः कृपया निःस्पृहो वदेत्।'
युष्माभिरेव गदितं पूर्वं श्रीरङ्गभूपते!॥

---

## திருக்கோட்டியூர் நம்பியின் மறுப்பு

26-28. அரங்கனின் இவ்வார்த்தையைக்கேட்ட திருக்கோட்டியூர் நம்பி, "ஸ்ரீரங்கராஜனே! 'இந்த கீ₃தாசரம ஶ்லோகார்த்த₂த்தைத் தவம் புரியாதவனுக்குச் சொல்லலாகாது; (தவம் புரிந்தவனாயினும் ஆசார்யனிடமும் என்னிடமும்) ப₄க்தியில்லாதவனுக்கும், தான் என்னும் அஹங்காரமுள்ளவனுக்கும் ஒருபோதும் உபதேசிக்கக் கூடாது; (தவமும் ப₄க்தியும் இருந்தாலும்) ஶுஶ்ரூஷை செய்யாதவனுக்குக் கூறலாகாது; (வேறு எத்தனை கு₃ணமிருந்தாலும்) என்னைக்குறித்து அஸூயைகொள்பவனுக்குச் சொல்லவே கூடாது' [கீ₃தை 18-66] 'ஒரு வருடமோ, ஆறு மாதமோ, ஒரு மாஸமோ, குறைந்த பக்ஷம் ஒரு பக்ஷமாவது, பலவித₄மான உபாயங்களால் பரீக்ஷித்து, அதன்பிறகே ஆசார்யன் சிஷ்யனுக்குக் கருணையோடு கைம்மாறு கருதாமல் (ரஹஸ்யார்த்த₂ங்களை) உபதே₃ஶிக்கவேண்டும்' என்று தேவரீரேயன்றோ ஶாஸ்த்ரங்களில் முன் அருளிச் செய்திருக்கிறீர்! (அப்படியிருக்க, நான் இவரைப் பரீக்ஷிக்காமல் எப்படிச் சடக்கென உபதே₃ஶிப்பேன்?)" என்று பதில் கூறினர்.

३८. रामानुजो रुदन् यातः तत्सकाशात्स्वमालयम् ।
स पूर्णो लक्ष्मणार्यस्य विलोक्यार्तिं ततः परम् ॥

३९. प्रदातुमैच्छत् मन्त्रार्थं यतीन्द्राय विचक्षणः ।
तत्रत्यो वैष्णवः कश्चित् सकाशाद्रङ्गमागतः ॥

४०. परितप्तं लक्ष्मणार्यं मन्त्रार्थाय दिवानिशम् ।
विलोक्य पुनरागत्य स गोष्ठीनगरं प्रति ॥

४१. गोष्ठीपूर्णाय तां सर्वां यतीन्द्रार्तिं न्यवेदयत् ।
गोष्ठीपूर्णस्ततस्तस्य मन्त्रे भक्तिं महात्मनः ॥

४२. दृष्ट्वा पूर्णां पुनः श्रुत्वा पश्चात्तापसमाकुलः ।
प्राहिणोद्यतिराजाय शिष्यं कञ्चिज्जवेन सः ॥

---

வந்தார். பதினெட்டாவதுமுறையில் நம்பியால் "உடனே போ; போ" என்று விரட்டப்பெற்ற ராமாநுஜர் உடனே அவரிடமிருந்து அகன்று அழுதுகொண்டே ஸ்ரீரங்க₃த்திற்குச் சென்றார்.

## நம்பியின் இரக்கம்

38*-45. அதற்குப்பின், ஸ்ரீராமாநுஜரின் ஆர்த்தியைக் கண்டு, ஸமர்த்த₂ரான நம்பி யதிராஜருக்குத் திருமந்திரார்த்த₂த்தை உபதே₃ஶிக்கத் திருவுள்ளங்கொண்டார். திருக்கோட்டியூரிலிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர் ஒருவர் அங்கிருந்து திருவரங்கத்திற்கு வந்து, திருமந்திரார்த்த₂த்தைப் பெறவேணுமென்று இராப்பகலாக வருந்திநிற்கும் ஸ்ரீராமாநுஜரைக்கண்டு, மறுபடியும் திருக்கோட்டியூருக்கு வந்து, திருக்கோட்டியூர் நம்பியிடம் யதிராஜரின் நிறைந்த ஆர்த்தியை தெரிவித்தார். நம்பியும், மஹாத்மாவான ஸ்ரீராமாநுஜருக்குத் திருமந்திரத்தில் பூர்ணப₄க்தியை முன்னமே கண்டிருந்தவராய், இப்போது மறுபடியும் கேட்கையாலே

२६. गोष्ठीपूर्णस्तदाकर्ण्य रङ्गराजमभाषत।
'इदं ते नातपस्काय नाभक्ताय न मानिने॥

२७. न चाशुश्रूषवे वाच्यं न च मां योऽभ्यसूयति।'
'संवत्सरं तदर्धं वा मासं मासार्धमेव च॥

२८. परीक्ष्य विविधोपायैः कृपया निःस्पृहो वदेत्।'
युष्माभिरेव गदितं पूर्वं श्रीरङ्गभूपते!॥

---

## திருக்கோட்டியூர் நம்பியின் மறுப்பு

26-28. அரங்கனின் இவ்வார்த்தையைக்கேட்ட திருக்கோட்டியூர் நம்பி, "ஸ்ரீரங்க₃ராஜனே! 'இந்த கீ₃தாசரமஶ்லோகார்த்த₂த்தைத் தவம் புரியாதவனுக்குச் சொல்லலாகாது; (தவம் புரிந்தவனுயினும் ஆசார்யனிடமும் என்னிடமும்) ப₄க்தியில்லாதவனுக்கும், தான் என்னும் அஹங்காரமுள்ளவனுக்கும் ஒருபோதும் உபதேசிக்கக் கூடாது; (தவமும் ப₄க்தியும் இருந்தாலும்) ஶுஶ்ரூஷை செய்யாதவனுக்குக் கூறலாகாது; (வேறு எத்தனை கு₃ணமிருந்தாலும்) என்னைக்குறித்து அஸூயைகொள்பவனுக்குச் சொல்லவே கூடாது' [கீ₃தை 18-66] 'ஒரு வருடமோ, ஆறு மாதமோ, ஒரு மாஸமோ, குறைந்த பக்ஷம் ஒரு பக்ஷமாவது, பலவித₄மான உபாயங்களால் பரீக்ஷித்து, அதன்பிறகே ஆசார்யன் சிஷ்யனுக்குக் கருணையோடு கைம்மாறு கருதாமல் (ரஹஸ்யார்த்த₂ங்களை) உபதே₃ஶிக்கவேண்டும்' என்று தேவரீரேயன்றோ ஶாஸ்த்ரங்களில் முன் அருளிச்செய்திருக்கிறீர்! (அப்படியிருக்க, நான் இவரைப் பரீக்ஷிக்காமல் எப்படிச் சடக்கென உபதே₃ஶிப்பேன் ?)" என்று பதில் கூறினுர்.

४७. वृत्तान्तमेतत्सकलं हि तस्मै
विज्ञाप्य भक्त्या यतिसार्वभौमः ।
आज्ञापितो येन स रङ्गभर्त्रा
गोष्ठीपुरं शिष्यजनैः प्रतस्थे ॥

इति श्रीप्रपन्नामृते रामानुजचरिते
मन्त्रोपदेशार्थं गोष्ठीपुराभिगमनं नाम विंशोऽध्यायः ॥

## एकविंशोऽध्यायः

१. गोष्ठीपुरमवाप्याथ गोष्ठीपूर्णपदाब्जयोः ।
प्रणम्य शिरसा ताभ्यां शिष्याभ्यां विनयान्वितः ॥

२. हर्षेण महता युक्तस्तस्थौ लक्ष्मणदेशिकः ।
शिष्याभ्यां सहितं दृष्ट्वा गोष्ठीपूर्णो यतीश्वरम् ॥

---

யதிராஜர் திருக்கோட்டியூருக்கு ஶிஷ்யர்களோடு புறப்பட்டார்.

ஸ்ரீ ப்ரபந்நாம்ருதத்தில், ராமாநுஜசரித்திரத்தில்
'திருமந்திரோபதே₃ஶம் பெறுவதற்காகத் திருக்கோட்டியூர் எழுந்தருளல்'
என்னும் இருபதாவது அத்தியாயம் நிறைவுபெற்றது.

## இருபத்தோராவது அத்தியாயம்

## திருமந்த்ரார்த்தோபதேசம்

### நம்பியின் ஆக்ஷேபம்

1-*4. அதற்குப்பின் ஸ்ரீ ராமாநுஜாசார்யர் திருக்கோட்டியூரை அடைந்து, முதலியாண்டான், கூரத்தாழ்வானுகிற இரு ஶிஷ்யர்களோடு திருக்கோட்டியூர்நம்பியின் திருவடித்தாமரைகளில் அடக்கத்தோடு தலையாலே வணங்கி, பேரானந்தத்தோடு (நம்பியருகே) நின்றார். இரண்டு சிஷ்யர்களோடுகூட வந்திருக்கும் யதிராஜரைப்

२६. गोष्ठीपूर्णस्तदाकर्ण्य रङ्गराजमभाषत।
'इदं ते नातपस्काय नाभक्ताय न मानिने॥

२७. न चाशुश्रूषवे वाच्यं न च मां योऽभ्यसूयति।'
'संवत्सरं तदर्धं वा मासं मासार्धमेव च॥

२८. परीक्ष्य विविधोपायैः कृपया निःस्पृहो वदेत्।'
युष्माभिरेव गदितं पूर्वं श्रीरङ्गभूपते!॥

---

## திருக்கோட்டியூர் நம்பியின் மறுப்பு

26-28. அரங்கனின் இவ்வார்த்தையைக்கேட்ட திருக்கோட்டியூர் நம்பி, "ஸ்ரீரங்கராஜனே! 'இந்த கீ₃தாசரம ஶ்லோகார்த்த₂த்தைத் தவம் புரியாதவனுக்குச் சொல்லலாகாது; (தவம் புரிந்தவனாயினும் ஆசார்யனிடமும் என்னிடமும்) ப₄க்தியில்லாதவனுக்கும், தான் என்னும் அஹங்காரமுள்ளவனுக்கும் ஒருபோதும் உபதேசிக்கக் கூடாது; (தவமும் ப₄க்தியும் இருந்தாலும்) ஶுஶ்ருஷை செய்யாதவனுக்குக் கூறலாகாது; (வேறு எத்தனை கு₃ணமிருந்தாலும்) என்னைக்குறித்து அஸூயைகொள்பவனுக்குச் சொல்லவே கூடாது' [கீ₃தை 18-66] 'ஒரு வருடமோ, ஆறு மாதமோ, ஒரு மாஸமோ, குறைந்த பக்ஷம் ஒரு பக்ஷமாவது, பல வித₄மான உபாயங்களால் பரீக்ஷித்து, அதன்பிறகே ஆசார்யன் சிஷ்யனுக்குக் கருணையோடு கைம்மாறு கருதாமல் (ரஹஸ்யார்த்த₂ங்களை) உபதே₃ஶிக்கவேண்டும்' என்று தேவரீரேயன்றோ ஶாஸ்த்ரங்களில் முன் அருளிச்செய்திருக்கிறீர்! (அப்படியிருக்க, நான் இவரைப் பரீக்ஷிக்காமல் எப்படிச் சடக்கென உபதே₃ஶிப்பேன் ?)" என்று பதில் கூறினார்.

८. विशेषं ज्ञातुमिच्छामि शिष्ययोर्योगिपुङ्गव ।
गोष्ठीपूर्णस्य वचनं निशम्य यतिपुङ्गवः ॥

९. गोष्ठीपूर्णमुवाचेदं तयोर्वृत्तान्तकारणात् ।
दर्शयित्वा ततश्शिष्यौ गोष्ठीपूर्णाय तावुभौ ॥

१०. यज्ञोपवीतं कूरेशो दण्डो दाशरथिर्मम ।
एवं जानीहि भगवन्! तस्मान्नान्योऽत्र विद्यते ॥

११. प्रतिगृह्य वचस्तस्य गोष्ठीपूर्णस्तमब्रवीत् ।
एतयोरेव योगीन्द्र ब्रूहि मन्त्रं स्वशिष्ययोः ॥

---

த்ரிதண்டமாயிருப்பவர் யார்? இவ்விரு சிஷ்யர்களுக்கிடையே எந்தப் பெருமை யாருக்குச் சேரும் என்பதை அறியவிரும்புகிறேன். அதைக்கூறும்" என்னும் பொருள் பொதிந்த கேள்வியை ராமாநுஜரிடம் கேட்டார். நம்பியின் இக்கேள்வியைச் செவியுற்ற யதிராஜரும், நம்பியிடம் அவ்விரண்டு சிஷ்யர்களையும் காட்டி, அவ்விருவருடைய நடத்தைகளைக் காரணமாகக்கொண்டு, "பகவானே! கூரத்தாழ்வான் எனக்கு யஜ்ஞோபவீதமாயிருப்பவர். தாஶரதி (முதலியாண்டான்) எனக்கு த்ரிதண்டமாயிருப்பவர். ஆகையால் (த்ரிதண்ட யஜ்ஞோபவீதங்களோடுகூடிய) என்னைத்தவிர வேறு எவரும் இங்கு இல்லை என்று திருவுள்ளம்பற்றவேணும்" என்று நம்பியிடம் கூறினார்.

## திருமந்த்ரார்த்தோபதேஶம்

11-16. திருக்கோட்டியூர் நம்பியும் அவருடைய வார்த்தையை ஏற்று, "யதிராஜரே! உமது சிஷ்யர்களான இவ்விருவர்க்கே நீர் திருமந்திரத்தைப் பொருளோடு கூறுவீர்; மிக ரஹஸ்யமான அதை ஒருபோதும் வேறு எவர்க்கும் சொல்லலாகாது.

१२. कदाचिदपि तं गोप्यं नान्येषां वक्तुमर्हसि।
तथाप्येतौ परित्यज्य त्वमेवायाहि सत्वरम् ॥

१३. अधिकारस्तवैवात्र मन्त्रार्थे यतिपुङ्गव।
नान्येषामधिकारोऽस्ति मन्त्रार्थे मोक्षसाधने॥

१४. लक्ष्मणार्यं तमादाय रहः प्रीतिपुरस्सरम्।
अनेकशपथांस्तेन कारयित्वा महात्मना॥

१५. गोष्ठीपूर्णः कृपापूर्णः लक्ष्मणार्याय निश्चलः।
प्रणवाद्यं नमोमध्यं नारायणपदान्तिमम्॥

१६. सन्यासं च समुद्रं च सर्षिंच्छन्दोधिदैवतम्।
सार्थं सजपं सध्यानं इमं मन्त्रमुदीरयत् ॥

---

நீர் இவ்விருவர்க்கும் உபதேசிக்கலாமாயினும், இப்போது இவ்விருவரையும் விட்டு நீர் மாத்திரம் விரைவில் வருவீர். இத்திருமந்திரார்த்த₂த்தில் உம்மொருவர்க்கே அதி₄கார முள்ளது. மோக்ஷஸாத₄னமான இதில் வேறு எவர்க்கும் அதி₄காரமில்லை" என்று கூறினர். உறுதியினின்றும் அசையாதவராய், கருணை நிறைந்தவரான திருக்கோட்டியூர் நம்பி, அன்போடு ராமாநுஜரை ரஹஸ்யமான இடத்திற்கு அழைத்துச்சென்று, மஹாபுருஷரான அவரை 'இதை அநதி₄காரிகளுக்கு வெளியிடுவதில்லை' என்று பல ஶபத₂ங்களைச் செய்யச்சொல்லி, ப்ரணவத்தை முதலிலும், நம:பத₃த்தை இடையிலும், நாராயணபத₃த்தைக் கடைசியிலும் கொண்ட இத்திருமந்திரத்தை ந்யாஸம், முத்₃ரை, ருஷி, ச₂ந்த₃ஸ், தே₃வதை, அர்த்த₂ம், ஜபம், த்₄யானம் ஆகியவற்றோடு கூட அவருக்கு உபதே₃ஶித்தார்.

८. विशेषं ज्ञातुमिच्छामि शिष्ययोर्योगिपुङ्गव ।
गोष्ठीपूर्णस्य वचनं निशम्य यतिपुङ्गवः ॥

९. गोष्ठीपूर्णमुवाचेदं तयोर्वृत्तान्तकारणात् ।
दर्शयित्वा ततश्शिष्यौ गोष्ठीपूर्णाय तावुभौ ॥

१०. यज्ञोपवीतं कूरेशो दण्डो दाशरथिर्मम ।
एवं जानीहि भगवन्! तस्मान्नान्योऽत्र विद्यते ॥

११. प्रतिगृह्य वचस्तस्य गोष्ठीपूर्णस्तमब्रवीत् ।
एतयोरेव योगीन्द्र ब्रूहि मन्त्रं स्वशिष्ययोः ॥

---

த்ரித₃ண்ட₃மாயிருப்பவர் யார்? இவ்விரு சிஷ்யர்களுக்கிடையே எந்தப் பெருமை யாருக்குச் சேரும் என்பதை அறியவிரும்புகிறேன். அதைக்கூறும்" என்னும் பொருள் பொதிந்த கேள்வியை ராமாநுஜரிடம் கேட்டார். நம்பியின் இக்கேள்வியைச் செவியுற்ற யதிராஜரும், நம்பியிடம் அவ்விரண்டு சிஷ்யர்களையும் காட்டி, அவ்விருவருடைய நடத்தைகளைக் காரணமாகக்கொண்டு, "ப₄க₃வானே! கூரத்தாழ்வான் எனக்கு யஜ்ஞோபவீதமாயிருப்பவர். தா₃ஶரதி₂ (முதலியாண்டான்) எனக்கு த்ரித₃ண்ட₃மாயிருப்பவர். ஆகையால் (த்ரித₃ண்ட யஜ்ஞோபவீதங்களோடுகூடிய) என்னைத்தவிர வேறு எவரும் இங்கு இல்லை என்று திருவுள்ளம்பற்றவேணும்" என்று நம்பியிடம் கூறினார்.

## திருமந்த்ரார்த்தோ₂பதே₃ஶம்

11-16. திருக்கோட்டியூர் நம்பியும் அவருடைய வார்த்தையை ஏற்று, "யதிராஜரே! உமது சிஷ்யர்களான இவ்விருவர்க்கே நீர் திருமந்திரத்தைப் பொருளோடு கூறுவீர்; மிக ரஹஸ்யமான அதை ஒருபோதும் வேறு எவர்க்கும் சொல்லலாகாது.

२२. अष्टाक्षरस्य जप्तारं प्रणमेद्यस्तु भक्तितः।
सर्वपापविनिर्मुक्तो विष्णुलोके महीयते॥

२३. अवैष्णवात् गुरोर्मन्त्रं यः पठेत् वैष्णवं द्विजः।
कल्पकोटिसहस्राणि पच्यते नरकाग्निना॥

२४. अचक्रधारिणं विप्रं मन्त्रमध्यापयेत्तु यः।
रौरवं नरकं प्राप्य चाण्डालीं योनिमाप्नुयात्॥

२५. अचिन्त्यमेतन्माहात्म्यं मनोरम्यं जगत्पतेः।
नहि वक्तुं मया शक्यं ब्रह्मादित्रिदशैरपि॥

२६. किमत्र बहुनोक्तेन सर्वसिद्धिप्रदो नृणाम्।
एवंविधं मन्त्रराजं मन्त्रार्थं सम्यगेव च॥

---

ராசிகளோடு கூடிய எவ்லாவுலகங்களையும் பரிசுத்தப் படுத்துகின்றனர். அஷ்டாக்ஷரத்தை ஜபிப்பவனை எவ னொருவன் அன்போடு வணங்குகிருனே, அவன் எல்லாப் பாபங்களிலிருந்தும் விடுபட்டு விஷ்ணுலோகத்தில் விளங்கு வான். வைஷ்ணவனல்லாத ஆசார்யனிடமிருந்து இம் மந்திரத்தை அடைபவன், ஆயிரங்கோடி கல்பகாலங்கள் (ஸம்ஸார) நரக நெருப்பில் எரிக்கப்படுவான். சக்ராங் கனமில்லாத அந்தணனுக்கு எவன் இம்மந்திரத்தை உப தேசிக்கிருனே, அவன் ரௌரவநரகத்தை அடைந்து, அதற்குப்பின் சண்டா₃ளஜாதியில் பிறக்கிருன். இம்மந்தி ரத்தின் பெருமை எவராலும் அளவிட்டு நினைக்கவும் ஒண் ணுதது; ஜக₃ந்நாத₂னை பெருமானுடைய நெஞ்சுக்கு இனியது இம்மந்திரம். என்னுலும், பிரமன் முதலான தே₃வர்களாலும் இதன் பெருமையைக் கூறமுடியாது. பல சொல்லியென்? இம்மந்திரம் மனிதர்களுக்கு எல்லாப் ப₂லன்களையும் அளிக்கவல்லது.

२७. उपदेशं चकाराशु यतिराजाय धीमते।
मुमोद सुतरां तस्य सत्पात्रविनियोगतः॥
२८. स तदा लब्धमन्त्रार्थः कृतार्थो यतिपुङ्गवः।
कृतसम्यक्प्रणामश्च तेनानुज्ञापितो ययौ॥
२९. गोष्ठीपुर्यां तदा तस्यां नृसिंहस्वामिनो हरेः।
महोत्सवं द्रष्टुकामान् नानादिग्भ्यस्समागतान्॥
३०. वैष्णवान् वीक्ष्य हृष्टात्मा लक्ष्मणार्यः कृपानिधिः।
सन्निधौ तस्य देवस्य वैष्णवेभ्योऽञ्जसा तदा।
३१. गोपुरादथ रात्र्यर्धे वदन्नुच्चैः स्वरेण तम्।
चतुस्सप्ततिसंख्याकाः श्रुत्वा तद्ब्राह्मणोत्तमाः॥

---

## திருமந்த்ரார்த்த₂த்தை வாரி வழங்கியது

26 * - * 32. இத்தகைய பெருமையை உடைய மந்த்ர ஶ்ரேஷ்ட₂மான அஷ்டாக்ஷரத்தையும், அதன் பொருளை யும் அறிவாளிகளில் சிறந்தவரான யதிராஜர்க்குச் சடக் கென நன்கு உபதே₃ஶம் செய்தார் நம்பி. அம்மந்தி ரத்தை நல்ல பாத்திரத்திற்கு உபதே₃ஶித்ததை எண்ணி மிகவும் உகந்தார். திருமந்த்ரார்த்த₂த்தைப் பெற்றுப் பிறவிப்பயனை அடைந்த யதிகட்கிறைவரும், அப்போதே நம்பியை நன்கு வணங்கி, அவரது அனுமதியைப் பெற் றுப் புறப்பட்டார். அப்போது அந்தத் திருக்கோட்டியூரில் நரசிங்கப்பெருமாளுடைய மஹோத்ஸவத்தைக் காண விரும்பி நாற்றிசைகளிலிருந்தும் வந்திருந்த வைஷ்ணவர் களைக் கண்டு உகந்த கருணைநிதி₄யான ஸ்ரீராமாநுஜர், அந்தப் பெருமாளுடைய ஸந்நிதி₄கோ₃புரத்திலிருந்து நள் ளிரவில் அத்திருமந்திரத்தை உரத்த குரலில் அந்த வைஷ் ணவர்களுக்கு நன்கு உபதே₃ஶித்துக்கொண்டிருந்தார். எழுபத்து நாலு ப்₃ராஹ்மணோத்தமர்கள் அத்திரு

३२. कृपयाष्टाक्षरं तेभ्यः प्रददौ मन्त्रमुत्तमम्।
गोष्ठीपूर्णस्तदाकर्ण्य तत्रत्यैस्स्वजनैस्तदा॥

३३. आनयित्वा यतिश्रेष्ठं वचनं चेदमब्रवीत्।
अतिगोप्यमिमं मन्त्रं न कस्यापि वदेति च॥

३४. एवं नियम्य योगीन्द्र तत्प्रदानं मया कृतम्।
सर्वं विधूय सहसा कथं भोः साहसं कृतम्॥

३५. किं फलं भवति ब्रह्मन् गुरुद्रोहकृतस्य ते।
तस्य तद्वचनं श्रुत्वा यतीन्द्रस्तमथाऽब्रवीत्॥

३६. गुरुद्रोहकृतस्यास्य फलं नरकमेव हि।
तच्छ्रुत्वा तमुवाचाथ गोष्ठीपूर्णो यतीश्वरम्॥

---

மந்திரத்தைக் கேட்டு (உகந்தனர்). மிகச்சிறந்த திரு வஷ்டாக்ஷர மந்திரத்தைப் பரமகருணையோடு அவர்களுக்கு (இவ்வாறு) வழங்கினார் யதிராஜர்.

## 'எம்பெருமானார்' என்னும் பட்டம் பெற்றது

32 * - * 46. அங்குள்ள தமது மனிதர்கள் மூலம் இதைக்கேள்விப்பட்ட திருக்கோட்டியூர் நம்பி, அப்போதே யதிராஜரை வரவழைத்து, "யதிராஜரே! 'இந்தத் திரு மந்திரம் மிகவும் ரஹஸ்யமானது; வேறு எவர்க்கும் சொல் லாதே' என்று கட்டளையிட்டு உமக்கு நான் இம்மந்தி ரத்தை உபதேசித்தேன். அந்தக் கட்டளையை உடனே அடியோடு மீறி, இத்தகைய ஸாஹஸத்தை ஏன் செய்தாய்? அந்தணரே! உமது இந்த ஆசார்யத்₃ரோஹச் செய லுக்கு என்ன ப₂லன் கிடைக்கும் தெரியுமா?" என்னும் வார்த்தையைக் கூறினார். அவருடைய இவ்வார்த்தையைக் கேட்ட யதிராஜர், 'இந்த ஆசார்யத்₃ரோஹச் செயலுக்குப் ப₂லம் நரகமேயன்றோ' என்று பதிலுரைத்தார். இதைக் கேட்ட திருக்கோட்டியூர் நம்பி, 'இதை அறிந்திருந்தும்

२७. उपदेशं चकाराशु यतिराजाय धीमते।
मुमोद सुतरां तस्य सत्पात्रविनियोगतः ॥

२८. स तदा लब्धमन्त्रार्थः कृतार्थो यतिपुङ्गवः।
कृतसम्यक्प्रणामश्च तेनानुज्ञापितो ययौ ॥

२९. गोष्ठीपुर्यां तदा तस्यां नृसिंहस्वामिनो हरेः।
महोत्सवं द्रष्टुकामान् नानादिग्भ्यस्समागतान् ॥

३०. वैष्णवान् वीक्ष्य हृष्टात्मा लक्ष्मणार्यः कृपानिधिः।
सन्निधौ तस्य देवस्य वैष्णवेभ्योऽञ्जसा तदा।

३१. गोपुरादथ रात्र्यर्धे वदन्नुच्चैः स्वरेण तम्।
चतुस्सप्ततिसंख्याकाः श्रुत्वा तद्ब्राह्मणोत्तमाः ॥

---

## திருமந்த்ரார்த்த₂த்தை வாரி வழங்கியது

26 * - * 32. இத்தகைய பெருமையை உடைய மந்த்ர ஶ்ரேஷ்ட₂மான அஷ்டாக்ஷரத்தையும், அதன் பொருளே யும் அறிவாளிகளில் சிறந்தவரான யதிராஜர்க்குச் சடக் கென நன்கு உபதே₃ஶம் செய்தார் நம்பி. அம்மந்தி ரத்தை நல்ல பாத்திரத்திற்கு உபதே₃ஶித்ததை எண்ணி மிகவும் உகந்தார். திருமந்த்ரார்த்த₂த்தைப் பெற்றுப் பிறவிப்பயனே அடைந்த யதிகட்கிறைவரும், அப்போதே நம்பியை நன்கு வணங்கி, அவரது அனுமதியைப் பெற் றுப் புறப்பட்டார். அப்போது அந்தத் திருக்கோட்டியூரில் நரசிங்கப்பெருமாளுடைய மஹோத்ஸவத்தைக் காண விரும்பி நாற்றிசைகளிலிருந்தும் வந்திருந்த வைஷ்ணவர் களேக் கண்டு உகந்த கருணைநிதி₄யான ஸ்ரீராமாநுஜர், அந்தப் பெருமாளுடைய ஸந்நிதி₄கோ₃புரத்திலிருந்து நள் ளிரவில் அத்திருமந்திரத்தை உரத்த குரலில் அந்த வைஷ் ணவர்களுக்கு நன்கு உபதே₃ஶித்துக்கொண்டிருந்தார். எழுபத்து நாலு ப்₃ராஹ்மணோத்தமர்கள் அத்திரு

४२. इत्युक्त्वा लक्ष्मणाचार्यं गोष्ठीपूर्णः प्रहृष्टधीः ।
मन्नाथ इति हर्षात्तं नाम दत्वाथ सस्वजे ॥

४३. तत्रत्यान् तान् स पूर्णार्यो वैष्णवानिदमब्रवीत् ।
अयं वैष्णवसिद्धान्तो ह्यस्माभिस्त्वद्य वैष्णवाः ॥

४४. रामानुजार्यसिद्धान्त इति सर्वत्र कीर्त्यताम् ।
एतदारभ्य लोकेऽस्मिन् श्रीमद्वैष्णवदर्शनम् ॥

४५. रामानुजार्यसिद्धान्त इति सत्यं भविष्यति ।
ततःप्रभृति लोकेऽस्मिन् इदं वैष्णवदर्शनम् ॥

४६. रामानुजार्यसिद्धान्त इति सर्वैः प्रकाशितम् ।
मन्नाथ इति वाहूय गोष्ठीपूर्णो यतीश्वरम् ॥

---

ஞகிற எம்பெருமாஞயிருக்கிறீர்" என்று கூறி, திருக் கோட்டியூர் நம்பி, யதிராஜரைப் பேரானந்தத்துடன் 'எம்பெருமாஞரே' என்று பெயரிட்டு அழைத்து ஆரத் தழுவிஞர்: அங்குள்ள ஸ்ரீவைஷ்ணவர்களைப் பார்த்துப் பின்வருமாறு கூறிஞர் நம்பி, — "வைஷ்ணவர்களே! இந்த வைஷ்ணவ ஸித்₃த₄ாந்தத்தை இன்று முதல் 'ஸ்ரீராமானுஜ ஸித்₃த₄ாந்தம்' (அல்லது எம்பெருமாஞர் த₃ர்ஶனம்) என்றே நாம் எங்கும் வழங்குவோம். இதுதொடங்கி இவ்வுலகில் மிகச்சிறந்த வைஷ்ணவ மதமான இது ஸ்ரீராமாநுஜ ஸித்₃த₄ாந்தம் என்றே பெயர்பெற்று விளங்கும் என்பது உறுதி." என்று. இவ்வண்ணமாக நம்பி அறுதியிட்ட பின்பு, இவ்வுலகில் இவ்வைஷ்ணவ மதம் 'ஸ்ரீராமாநுஜ ஸித்₃த₄ாந் தம்' என்றே அனைவராலும் கொண்டாடப்பட்டு வருகிறது.

### சரமஶ்லோகார்த்தோ₂பதே₃ஶம்

46 * - * 60. பேரானந்தமடைந்த திருக்கோட்டியூர் நம்பி, யதிராஜரை 'எம்பெருமாஞரே!' என்று அழைத்து, ரஹஸ்யமாகப் பின்வரும் வார்த்தையைக் கூறிஞர், —

४७. हर्षेण महता युक्तो रहसीदं वचोऽब्रवीत् ।
पुरा रङ्गेश्वरः श्रीमान् मामाहूय यतीश्वर ॥

४८. जगाद वचनं प्रीत्या दृष्ट्वा कल्यात्मकं जगत् ।
कतिभ्यश्चरमं श्लोकं जनेभ्यो मोक्षसाधनम् ॥

४९. त्वं ब्रूहि कृपया विद्वन् अधुना मम शासनात् ।
तच्छ्रुत्वाहं यतिश्रेष्ठ ! रङ्गेशं तमथाब्रुवम् ॥

५०. अस्याधिकारी रङ्गेश कोऽपि नास्त्यधुना भुवि ।
ब्रवीम्यहं कथं गोप्यं चरमार्थं जनाय च ॥

५१. न शास्त्रसंमतमिदं प्रदानं नास्तिकाय तत् ।
निशम्य लक्ष्मणाचार्य ! मद्वाक्यं रङ्गभूपतिः ॥

५२. तथ्यं मत्वा पुनः प्राह मामेवं जगदीश्वरः ।
अहं मृगित्वा मेदिन्यां पुरुषं बुधसंमितम् ॥

---

"யதிராஜரே! உலகம் கலியிருளில் மூழ்கிக்கிடப்பதைக் கண்டு, முன்பொருகால் *ஶ்ரி*ய:பதியான ஸ்ரீரங்க$_3$நாத$_2$ன் என்னை அழைத்து, 'அறிவாளியே! நீர் மோக்ஷஸாத$_4$ன மான (கீ$_3$தா) சரம*ஶ்*லோகத்தையும், அதன் பொருளையும் எனது ஆணையாலே சில சிஷ்யர்களுக்காவது உபதே$_4$*ஶி*க்கவேணும்' என்று கூறினர். யதிராஜரே! அதைக் கேட்ட நான், 'அரங்கநகரப்பனே! இவ்வுலகில் இன்று இச்சரம*ஶ்*லோகத்தின் பொருளைப் பெறுவதற்குரிய அதி$_4$ காரி எவனுமே இல்லையே! அப்படியிருக்கும்போது பரம ரஹஸ்யமான இச்சரம*ஶ்*லோகப் பொருளைச் சிலர்க்கு எப்படி உபதே$_3$*ஶி*ப்பது? நாஸ்திகர்களுக்கு இவ்வரும் பொருளைச் சொல்லுவது *ஶா*ஸ்த்ரஸம்மதமல்லவே' என்று ரங்க$_3$ராஜனுக்கு பதிலுரைத்தேன்; ராமானுஜரே! எனது இவ்வார்த்தையைக் கேட்ட ரங்க$_3$ராஜன், அதை உண்மை யென்றே இசைந்து, இவ்வுலகை உடையவனுகையாலே மறுபடியும் என்னிடம் பின்வருமாறு உரைத்தான்,—

५३. प्रयत्नेन च संपाद्य सहसा वैष्णवोत्तमम् ।
त्वदन्तिकं प्रेषयामि तस्मात्त्वं गच्छ सांप्रतम् ॥
५४. स एव त्वं यतिश्रेष्ठ! तस्मात्तेऽद्य ब्रवीम्यहम् ।
इदं गुह्यतमं मन्त्रं ब्रूहि कस्यापि न क्वचित् ॥
५५. एवं वदन्तं स्वाचार्यं यतीन्द्रो वाक्यमब्रवीत् ।
आज्ञा त्वया यस्य दत्ता तस्यैवार्थोऽयमुच्यते ॥
५६. शपे त्वत्पादपद्माभ्यां नोल्लङ्घ्यं तव शासनम् ।
यतिराजस्य तद्वाक्यं निशम्य गुरुपुङ्गवः ॥
५७. प्रशस्य बहुधा वाक्यं गोष्ठीपूर्णोऽभ्यभाषत ।
इदं ते नातपस्काय नाभक्ताय न मानिने ॥

---

'நான் இவ்வுலகில் தேடிப்பார்த்து, வைஷ்ணவோத்தமனாய், பேரறிவாளனான ஒரு புருஷனை மிகமுயன்று கண்டுபிடித்து, உடனே உம்மிடம் (சரமஶ்லோகார்த்த2த்தைப்பெற) அனுப்புகிறேன். நீர் இப்போது போகலாம்' என்றுரைத்தான் அரங்கன். யதிராஜரே! அந்தப் புருஷன் நீரே. ஆகையால், உமக்கு அவ்வரும்பொருளை உபதே3ஶிக்கிறேன். பரமரஹஸ்யமான இம்மந்திரத்தை நீர் (கூரத்தாழ்வானைத்தவிர) வேறு எவர்க்கும் சொல்லாதீர்." என்று கூறினார். இப்படிக் கூறிய தமது ஆசாரியரைப்பார்த்து, "தேவரீர் எவருக்குச் சொல்ல ஆணையிடுகிறீரோ, அவருக்கே இவ்வரும்பொருளைக் கூறுவேன். தேவரீரது திருவடித்தாமரையிணையின் மீது ஆணையாகக் கூறுகிறேன். இந்த உமது ஆணையை மீறமாட்டேன்" என்று கூறினார் யதிராஜர். சீடரான அவரது அவ்வாக்யத்தைக்கேட்ட ஆசார்யஶ்ரேஷ்ட2ரான திருக்கோட்டியூர்நம்பி, அவ்வாக்யத்தைப் பலவாறு புகழ்ந்துரைத்தார். "இச்சரமஶ்லோகத்தை—தவம்புரியாதவனுக்கோ, ப4க3வத்3ப4க3வதாசார்ய

௫௮. न चाशुश्रूषवे वाच्यं न च मां योऽभ्यसूयति ।
संवत्सरं तदर्धं वा मासत्रयमथापि वा ॥

௫௯. परीक्ष्य विविधोपायैः कृपया निस्स्पृहो वदेत् ।
इत्येवमभिधायाथ रहः प्रीतिपुरस्सरम् ॥

௬௦. अर्जुनाय यथा कृष्णश्चरमार्थं समादिशत् ।
तथैव लक्ष्मणार्याय गोष्ठीपूर्णो महात्मने ॥

௬௧. ततः स्वपुत्रमाहूय सौम्यनारायणाभिधम् ।
शिष्यं कृत्वा यतीन्द्रस्य भूयो वचनमब्रवीत् ॥

௬௨. स्वपुत्रे वररङ्गे तु यामुनेन विपश्चिता ।
सुनिक्षिप्तान् रहस्यार्थान् गृहाण यतिपुङ्गव ॥

---

ப4க்தியில்லாதவனுக்கோ, அஹங்காரமுடையவனுக்கோ, ப4க3வத்3ப4ாக3வதாசார்யர்களுக்குக் கைங்கர்யம் செய்யாதவனுக்கோ, அவர்களைக்கண்டு பொருமைப்படுபவனுக்கோ உபதே3ஶிக்காதே. ஒரு வருஷம் அல்லது ஆறுமாஸம், அல்லது மூன்றுமாதமாவது பலவித4மான உபாயங்களாலே பரீக்ஷைசெய்து, அதற்குப்பின், கைம்மாறு கருதாமல் இதை உபதே3ஶிக்கவேண்டும்." என்று கூறி, அர்ஜுனனுக்குக் கண்ணன் உபதே3ஶித்ததுபோலே அன்போடு மஹாத்மாவான ஸ்ரீராமாநுஜர்க்கு ரஹஸ்யமாகச் சரமஶ்லோகார்த்த2த்தை உபதே3ஶித்தார் திருக்கோட்டியூர் நம்பி.

## நம்பியின் பேரருள்

61-66. அதற்குப்பின், திருக்கோட்டியூர்நம்பி தனது பிள்ளையான ஸௌம்யநாராயணனை அழைத்து அவரை யதிராஜர்க்கு ஶிஷ்யராக்கி, "யதிராஜரே! தமது குமாரரான திருவரங்கப் பெருமாளரையரிடம் பேரறிவாளரான ஆளவந்தார் சேமித்து வைத்திருக்கும் ரஹஸ்யார்த்த2ங்களை

६३. कृतकृत्यः स पूर्णार्यो मुमुदे तत्प्रदानतः।
अनुज्ञातोऽथ गुरुणा यतिराजो महायशाः॥

६४. शिष्यसङ्घयुतः श्रीमान् गमनायोपचक्रमे।
यतिराजः स्वशिष्याभ्यां गुरुपुत्रेण धीमता॥

६५. श्रीरङ्गनगरं प्राप्य स्वमठे सुखमास्थितः।
मन्त्रद्वयं प्राप्य गुरोः प्रयत्नात्
तत्राद्यमेकं स हि भूरिदानम्।
विधाय सर्वं जगदाशु विष्णोः
तच्छेषभूतं च ररक्ष धीरः॥

---

அவரிடமிருந்து உபதேஶம் பெறுவீர்" என்னும் வார்த்தையையும் அருளினர். திருமந்த்ர சரமஶ்லோகார்த்தங்களை யதிராஜர்க்கு உபதேஶித்ததனுல் ஆளவந்தாரின் நியமனத்தை நிறைவேற்றியதாக எண்ணி மிக உகந்தார் நம்பி. ஜ்ஞாநபக்தி வைராக்யச் செல்வமுடையவராய், பெரும்புகழாளரான யதிராஜரும் ஆசார்யரான நம்பியால் அனுமதிக்கப்பெற்றவராய், சிஷ்யர்களோடு கூடியவராய்த் திருக்கோட்டியூரிலிருந்து புறப்பட்டார். கூரத்தாழ்வான் முதலியாண்டான் ஆகிய இரு சீடர்களோடும், அறிவாளியாய் ஆசார்யபுத்ரனை ஸௌம்யநாராயணனோடும் திருவரங்கப்பெருநகரை அடைந்து, தனது மடத்தில் இனிது வாழ்ந்துவந்தார் எதிகட்கிறைவர். அறிவாளிகளிற்சிறந்தவரான யதிஸார்வபௌமர் திருமந்திர சரமஶ்லோகார்த்தங்களை ஆசார்யரான திருக்கோட்டியூர் நம்பியிடமிருந்து மிகமுயன்று அடைந்து, அவற்றில் முதலாவதான திருமந்திரார்த்தத்தை ஆசையுடையோர்க்கெல்லாம் வாரி வழங்கி, எல்லாவுலகுக்கும் விரைவிலேயே பகவச்சேஷத்வத்தை உணர்த்தி உய்வித்தார். திருவரங்கராஜனை அன்புடன் வணங்கி, நடந்தது அனைத்தையும் அவனிடம்

६६. रङ्गेश्वरं तं प्रणिपत्य भक्त्या
विज्ञाप्य वृत्तं सकलं स तस्मै।
मठं प्रविश्याशु तदीयसंघैः
सुखेन तस्थौ यतिसार्वभौमः॥

इति श्रीप्रपन्नामृते रामानुजचरित्रे कथञ्चित्
गोष्ठीपूर्णकृपया मन्त्रराजभूरिप्रदानं नाम एकविंशोऽध्यायः॥

## द्वाविंशोऽध्यायः

१. ततः कूरेश्वरः श्रीमान् यतिराजाङ्घ्रिपङ्कजम्।
प्रणम्यावनतो भूत्वा वचनं चेदमब्रवीत्॥

२. दासभूताय मे देहि चरमार्थं दयानिधे।
तच्छ्रुत्वा यतिराजस्तमेवमाह वचस्तदा॥

---

விண்ணப்பித்து, தன் அடியார்களோடு தன் மட₂த்தை அடைந்து இன்புற்றுவாழ்ந்தார் யதிசக்ரவர்த்தி.

ஸ்ரீ ப்ரபந்நாம்ருதத்தில், ராமாநுஜசரித்திரத்தில்,
முயன்றுபெற்ற திருக்கோட்டியூர் நம்பியின் கருணையால்
திருமந்திரார்த்த₂த்தை வாரிவழங்கியதாகிற
இருபத்தோராம் அத்தியாயம் நிறைவுபெற்றது

## இருபத்திரண்டாம் அத்தியாயம்

## கூரத்தாழ்வானுக்கும் முதலியாண்டானுக்கும் சரமச்லோகார்த்தோ₂பதே₃சம்

### கூரத்தாழ்வானுக்குச் சரமஶ்லோகார்த்தோ₂பதே₃ஶம்

1-8. அதற்குப்பின் ஜ்ஞாநப₄க்திவைராக்₃யச்செல்வம் மிக்கவரான கூரத்தாழ்வான், யதிராஜரின் திருவடித் தாமரையிணையை வணங்கி,"கருணைக்கடலே! அடியேற்குச் சரமஶ்லோகார்த்த₂த்தை உபதே₃ஶித்தருளவேண்டும்."

३. गोष्ठीपूर्णेन गुरुणा भाषितं यत् शृणुष्व तत्।
शुश्रूषां वत्सरं यो वा करोति श्रद्धयाऽन्वितः॥

४. योऽत्यन्तभक्तितो धीमान् शमादिगुणसंयुतः।
तस्मै शिष्याय वक्तव्यः श्लोकोऽयं सार्थकस्त्वया॥

५. गुरोर्वचनमाकर्ण्य कूरनाथस्ततोऽब्रवीत्।
शरीरमस्थिरं ज्ञात्वा सहिष्ये वत्सरं कथम्॥

६. कूरनाथवचः श्रुत्वा यतीन्द्रस्तमथाब्रवीत्।
मासोपवासं कृतवान् यद्याचार्यगृहोत्तमे॥

७. स तत्फलमवाप्नोति शास्त्रदृष्टमिदं ध्रुवम्।
धन्योऽस्मीति वदन् भक्त्या प्रतिगृह्य गुरोर्वचः॥

---

என்று அடக்கத்தோடு பிரார்த்தி2த்தார். அதைக்கேட்ட யதிராஜர், "திருக்கோட்டியூர்நம்பி இதுபற்றிச் சொல்லிய பின்வரும் வார்த்தையைக் கேட்பீர், — 'எந்த ஶிஷ்யன் மிகுந்த ப4க்தியுடனும், ஶ்ரத்3தை4யுடனும் ஒரு வருடத்திற்குக் கைங்கர்யம் செய்கிறானோ, அறிவாளியாய், புலனடக்கமும், மனவடக்கமுமுடைய அவனுக்கே, இச்சரம ஶ்லோகம் அர்த்த2த்தோடு உம்மால் உபதே3ஶிக்கத் தக்கது' என்று." என்று ஆழ்வானுக்கு பதில் உரைத்தார். ஆசார்யருடைய அவ்வார்த்தையைக்கேட்ட கூரத்தாழ்வான், 'இவ்வுடல் (மின்னலைக்காட்டிலும்) நிலையற்றது என்று அறியும் அடியேன் ஒருவருஷகாலம் எப்படிப் பொறுப்பேன்' என்று விண்ணப்பித்தார். அவ்வார்த்தையைக்கேட்ட யதிராஜர், "ஆசார்யனுடைய திருமாளிகையில் சீடன் ஒரு மாதம் உபவாஸமிருந்தானாகில், அது ஒரு வருடம் கைங்கர்யம் செய்ததற்கு ஸமானம் என்று சாஸ்திரங்களில் உறுதியாகச் சொல்லப்பட்டிருக்கிறது" என்று பதிலுரைத்தார். "த4ன்யனானேன்" என்று ப4க்தியுடன்

८. मासोपवासं कूरेशः कृत्वा लक्ष्मणदेशिकात्।
जग्राह चरमश्लोकं तत्तात्पर्यं च तत्त्वतः॥

९. अथ दाशरथिर्धीमान् प्रणम्य यतिपुङ्गवम्।
ममापि चरमश्लोकं प्रदेहीति तमब्रवीत्॥

१०. निशम्य तद्वचः प्राह स तं दाशरथिं गुरुः।
कूरेशस्यैव वक्ष्यामि चरमार्थं न कस्यचित्॥

११. गुरवेऽभिहितं पूर्वं मयैवं विबुधर्षभ।
त्वं तमेवानुवर्तस्व तत्र गत्वा गुरूत्तमम्॥

१२. स्वगुरोर्वचनं श्रुत्वा धीमान् दाशरथिस्तदा।
गोष्ठीपूर्णं समासाद्य गोष्ठीपूर्णपदाम्बुजम्॥

---

கூறிய ஆழ்வான், அவ்வார்த்தையை ஏற்று, ஒருமாஸம் (யதிராஜரின் மட₂த்திலேயே) உபவாஸமிருந்து, அவரிடமிருந்து சரமஶ்லோகத்தையும், அதன் உண்மைப்பொருளையும் உபதே₃ஶம் பெற்றூர்.

## முதலியாண்டானும் திருக்கோட்டியூர் நம்பியும்

9-22. அதற்குப்பின், அறிவாளியான முதலியாண்டான் யதிராஜரை வணங்கி, 'அடியேனுக்கும் சரமஶ்லோகார்த்த₂த்தை அருளவேணும்' என்று பிரார்த்தித்தார். அவ்வார்த்தையைக்கேட்ட ஆசார்யரான எம்பெருமானுர், "பேரறிவாளனே! 'இச்சரமஶ்லோகார்த்த₂த்தைக் கூரத்தாழ்வான் தவிர வேறு எவர்க்கும் உபதே₃ஶிக்கமாட்டேன்' என்று நான், ஆசார்யரான திருக்கோட்டியூர் நம்பிக்கு வாக்களித்திருக்கிறேன். நீ அங்கு சென்று அவ்வாசார்யோத்தமரையே பிரார்த்தித்து ஶுஶ்ரூஷை செய்து இவ்வர்த்த₂த்தைப் பெறுவாய்" என்று முதலியாண்டானிடம் உரைத்தார். ஆசார்யரான யதிராஜரின் வார்த்தையைக்

१३. प्रणम्य बहुधा भक्त्या तदर्थं प्रार्थयन् स्थितः।
स तस्य विमुखः पूर्णः तदा दाशरथेरभूत्॥

१४. सोऽपि दाशरथिस्तं च षण्मासाननुवर्तयन्।
ततः प्रसन्नः पूर्णार्यः तं तथा वाक्यमब्रवीत्॥

१५. संबन्धेन भवानद्य द्योतते यतिभूपतेः।
को भवान् सत्त्वसंपन्नः किमर्थं चागतोऽधुना॥

१६. गोष्ठीपूर्णस्य वचनं श्रुत्वा दाशरथिस्तदा।
बद्धाञ्जलिपुटो भूत्वा गोष्ठीपूर्णमुवाच सः॥

१७. दासोऽहं लक्ष्मणार्यस्य नाम्ना दाशरथिर्गुरो।
रहस्यचरमार्थाय तेनैव प्रेषितोऽस्म्यहम्॥

१८. ममोपदिश्य मन्त्रार्थं रक्ष मां करुणानिधे।
स तदाकर्ण्य तं प्राह गोष्ठीपूर्णो द्विजोत्तमम्॥

---

கேட்ட அறிவாளியான முதலியாண்டான், அப்போதே திருக்கோட்டியூர்நம்பியிடம் சென்று, அவரது திருவடித் தாமரையை வணங்கி, பலகால் ப₄க்தியோடு சரமஶ்லோகார்த்த₂த்தை உபதே₃ஶிக்கச் சொல்லிப் பிரார்த்தித்துக் கொண்டிருந்தார். அப்போது நம்பி முதலியாண்டானுக்கு முகங்கொடுக்காமலேயிருந்தார். முதலியாண்டான் நம்பிக்கு ஆறுமாஸங்கள் ஶுஶ்ரூஷை செய்துகொண்டிருந்தார். அதுகண்டு உகந்த நம்பி, "நீர் யதிராஜருடைய ஸம்ப₃ந்த₄த்தால் இப்போது மிகவும் பிரகாசிக்கிறீர். பரமஸாத்விகரான நீர் யார்? நீர் இப்போது எதற்காக இங்கு வந்திருக்கிறீர்?" என்று கேட்டார். திருக்கோட்டியூர் நம்பியின் அவ்வார்த்தையைக்கேட்ட முதலியாண்டானும், கைகூப்பிநின்று, "ஆசார்யரே! அடியேன் ஸ்ரீ ராமாநுஜாசார்யருக்கு அடிமைப்பட்டவன். 'தா₃ஶரதி₂' என்னும் பெயர்கொண்டவன். சரமஶ்லோக ரஹஸ்யார்த்த₂த்தைப்

१९. विद्यामदो धनमदः तृतीयोऽभिजनो मदः।
एते मदावलिप्तानां एत एव सतां दमाः॥

२०. एतैर्मदैर्विमुक्तो यस्तमेव शरणं व्रज।
स एव चरमार्थं हि तुभ्यं दास्यति देशिकः॥

२१. इत्यनुज्ञापितस्तेन तदा दाशरथिर्जवात्।
श्रीरङ्गनगरं प्राप्य शमादिगुणसंयुतम्॥

२२. प्रणम्य लक्ष्मणाचार्यं सर्ववृत्तान्तमादितः।
तस्मै निवेद्य पुरतः प्राञ्जल्यवनतः स्थितः॥

२३. एतस्मिन्नन्तरे साध्वी महापूर्णस्य पुत्रिका।
अतुलाधीति विख्याता महाशोकसमाकुला॥

---

பெறுவதற்காக அவராலேயே தேவரீரிடம் அனுப்பப் பெற்றவன். கருணைக்கடலே! அவ்வரும்பொருளை உபதே₃ஶித்து என்னை ரக்ஷிக்கவேணும்" என்று நம்பியிடம் விண்ணப்பித்தார். அதைக்கேட்ட நம்பி, அந்தணர் தலைவரான முதலியாண்டானைக் குறித்து, "கல்வியாகிற மத₃ம், பணமாகிற மத₃ம், குலமாகிற மத₃ம் என்னும் மும்மத₃ங்கள் செருக்குற்றவர்களிடம் உள்ளன. செருக்கற்ற நல்லோர்களிடம் இம்மூன்றுமே நேர் எதிராக 'த₃மங்கள்' (அடக்கங்கள்) ஆகின்றன. இந்த மூன்று மத₃ங்களுமற்ற உமது ஆசார்யரையே ஶரணமடையும், அவரே உமக்குச் சரமஶ்லோகார்த்த₂த்தை உபதே₃ஶிப்பார்" என்று பதிலுரைத்தார். இவ்வண்ணம் நம்பியால் விடைகொடுக்கப் பெற்ற முதலியாண்டான், விரைவில் திருவரங்கநகரை அடைந்து, ஶமம், த₃மம் முதலான கு₃ணங்கள் நிறைந்த யதிராஜரை வணங்கி, முதலிலிருந்து எல்லாச்செய்தியையும் விண்ணப்பித்தார். விண்ணப்பித்துவிட்டு, அவர் திருமுன்பே தலைவணக்கிக் கைகூப்பிநின்றார்.

२४. श्वश्र्वा गृहात्समागत्य जगाद पितरं प्रति ।
शृणु तात प्रवक्ष्यामि मद्वार्तां श्वश्रुमन्दिरे ॥

२५. एकयैव मया रात्रावानेतव्यं ह्रदाज्जलम् ।
सहायार्थं मयाऽऽहूता श्वश्रूर्मामेवमब्रवीत् ॥

२६. किं वा दासी तवानार्ये त्वया यातुं ह्रदं प्रति ।
दासीं कृत्वा प्रयच्छाशु तदर्थं जनकाधुना ॥

२७. तयैवमुक्तः पूर्णार्यः पुत्रिकां वाक्यमब्रवीत् ।
त्वं जातानि वदस्वेति भ्रात्रे स्वस्था मठे शुभे ।

---

## அத்துழாய் பட்ட துன்பம்

23-26. இதற்கிடையே — பெரியநம்பியின் குமாரியும், நற்குணங்கள் நிரம்பியவளுமான ' அத்துழாய் ' என்பவள் பெருந்துன்பத்தோடு மாமியார் வீட்டிலிருந்து திரும்பி வந்து, தன் தந்தையிடம் பின்வருமாறு கூறினள், — " ஐயா ! அடியேனது மாமியார் வீட்டில் நடந்ததைக் கூறுகிறேன் கேட்பீர். ராத்ரிவேளையில் நான் ஒருத்தியே குளத்திற்குச்சென்று தீர்த்தம் எடுத்துவர வேண்டியிருந்தது. 'துணைக்கு வரவேண்டும்' என்று என்னால் அழைக்கப்பட்ட மாமியார், 'து₃ஷ்டையே ! நீ குளத்திற்குச் செல்லும் போது உன் கூடவருவதற்கு நான் வேலைக்காரியா ? ( வேண்டுமாகில் பிறந்தகத்திலிருந்து வேலைக்காரியை அழைத்து வா )' என்று கூறி அனுப்பிவிட்டாள். ஐயா ! நீர் எனக்கு இப்போது ஓர் வேலைக்காரியை ஏற்பாடுசெய்து அனுப்பவேண்டும் " என்று கூறினள் அத்துழாய்.

## யதிராஜ நியமனம்

27-*32 அத்துழாயால் இவ்விதம் பிரார்த்திக்கப்பட்ட பெரியநம்பி, "மங்க₃ளமானவளே ! கவலையற்றவளாய், நீ

२८. तमेव प्रतिगच्छाशु स ते शोकविनाशनः।
सा तथोक्ता स्वपित्रा च यतिराजमुपागता॥

२९. सर्वं निवेदयामास स्वदुःखं बालिकाऽञ्जसा।
गुरुपुत्रीवचः श्रुत्वा यतिराजो विचक्षणः॥

३०. याचन्तं चरमार्थं च दृष्ट्वा दाशरथिं तदा।
वैष्णवानां सभामध्ये तमुवाच यतीश्वरः॥

३१. शृणु दाशरथे वाक्यं वक्ष्यामि हितकाम्यया।
गत्वा त्वमनया सार्धं योषितोऽस्या गृहं प्रति॥

३२. यान्युक्तानि च कार्याणि तत्र तानि कुरुष्व ह।
तस्याज्ञां शिरसा धृत्वा धीमान् दाशरथिस्तदा॥

---

நடந்ததனைத்தையும் மடத்திலுள்ள உன் தமயனிடம் சொல்லு; அவனை விரைவில் அடைவாய்; அவன் உன் துன்பத்தைத் தீர்ப்பான்" என்று தமது பெண்ணை அவளைக் குறித்துச் சொன்னார். தன் தந்தையால் அவ்வண்ணம் நியமிக்கப்பெற்ற அப்பெண்ணும், யதிராஜரை அடைந்து, தன் துன்பம் அனைத்தையும் விரிவாக விவரித்தாள். செயல்வல்லவரான யதிராஜரும், ஆசார்ய புத்ரியின் அவ்வார்த்தையைக்கேட்டு, சரமஶ்லோகார்த்தத்தை அளிக்கும்படி பிரார்த்திக்கும் முதலியாண்டானையும் பார்த்து, வைஷ்ணவர்களின் திரள்நடுவே அவரிடம் பின் வருமாறு வார்த்தை சொன்னார்:— "தாஶரதியே! (உமக்கும் இப்பெண்ணுக்கும்) நன்மையை விரும்பி ஒரு வார்த்தை சொல்லுகிறேன் கேளாய்; இப்பெண்ணோடு கூட இவளது புகுந்தகத்திற்குச் சென்று, புக்ககத்தார் நியமிக்கும் காரியங்களைச் செய்வாயாக" என்று.

## முதலியாண்டான் பெருமை

32*-*48 அறிவாளியான முதலியாண்டானும், அந்த யதிராஜருடைய நியமனத்தைத் தலைமேற்கொண்டு, அப்

३३. तथा गत्वा स तत्सर्वं कुर्वंस्तत्र समास्थितः।
कदाचिद्वैष्णवः कश्चित् तत्रत्यो द्विजपुङ्गवः॥

३४. शास्त्रार्थं संपरित्यज्य तत्रान्यं चार्थमब्रवीत्।
श्रुत्वा दाशरथिस्तत्र तद्वाक्यं तमथाब्रवीत्॥

३५. त्वयोक्तोऽर्थः समीचीनो न पदस्य महामते।
अर्थोऽन्यो विद्यते विद्वन् संप्रदायागतो महान्॥

३६. तच्छ्रुत्वा कुपितः प्राह सोऽपि दाशरथिं तदा।
किमन्येन विचारेण जलार्थं गच्छ पाचक!॥

३७. क्व गोमायुर्देवलः क्व क्व शास्त्रं क्व च पाचकः।
स तेनोक्तः पुनस्तस्मै प्रोवाच द्विजसत्तमः॥

---

போதே அத்துழாயுடன் அவள் புக்ககம் சென்று, அவர்க ளிட்ட வேலைகளனைத்தையும் செய்துகொண்டு அங்கேயே இருந்தார். அப்போது ஒரு சமயம் அங்குள்ள அந்தணர் தலைவனான வைஷ்ணவன் ஒருவன், ஶாஸ்த்ரத்தின் உண்மைப்பொருளை விட்டு, ஒரு வாக்யத்திற்கு அவப் பொருளுரைத்தான். அங்கிருந்த முதலியாண்டான், அவ் வார்த்தையைக் கேட்டு, "பேரறிவாளரே! நீர் இவ்வாக் யத்திற்குச் சொன்ன பொருள் சரியல்ல; பண்டி₃தரே! ஆசார்யபரம்பராப்ராப்தமான மற்றொரு சிறந்த பொருள் இதற்கு உண்டு" என்று அவனைக் குறித்துக் கூறினர். அப்போது அதைக்கேட்ட அவனும் கோபங்கொண்டு, "ஏ சமையற்காரா! உனக்குத் தொடர்பில்லாத இவ் வாராய்ச்சி உனக்கெதற்கு? நீ தண்ணீர் கொண்டுவரப்போ; குள்ளநரிபோன்ற நீ எங்கே? தே₃வார்ச்சகன்போன்ற நான் எங்கே? (பண்டி₃தர்களே அறியவல்ல) ஶாஸ்த்ரம் எங்கே? மடையனான (அறிவிலியான; சமையற்காரனான) நீ எங்கே?" என்று முதலியாண்டானைக் குறித்துச் சொன்

२८. तमेव प्रतिगच्छाशु स ते शोकविनाशनः।
सा तथोक्ता स्वपित्रा च यतिराजमुपागता॥
२९. सर्वं निवेदयामास स्वदुःखं बालिकाऽञ्जसा।
गुरुपुत्रीवचः श्रुत्वा यतिराजो विचक्षणः॥
३०. याचन्तं चरमार्थं च दृष्ट्वा दाशरथिं तदा।
वैष्णवानां सभामध्ये तमुवाच यतीश्वरः॥
३१. शृणु दाशरथे वाक्यं वक्ष्यामि हितकाम्यया।
गत्वा त्वमनया सार्धं योषितोऽस्या गृहं प्रति॥
३२. यान्युक्तानि च कार्याणि तत्र तानि कुरुष्व ह।
तस्याज्ञां शिरसा धृत्वा धीमान् दाशरथिस्तदा॥

---

நடந்ததனைத்தையும் மடத்திலுள்ள உன் தமயனிடம் சொல்லு; அவனை விரைவில் அடைவாய்; அவன் உன் துன்பத்தைத் தீர்ப்பான்'' என்று தமது பெண்ணை அவளைக் குறித்துச் சொன்னார். தன் தந்தையால் அவ் வண்ணம் நியமிக்கப்பெற்ற அப்பெண்ணும், யதிராஜரை அடைந்து, தன் துன்பம் அனைத்தையும் விரிவாக விவ ரித்தாள். செயல்வல்லவரான யதிராஜரும், ஆசார்ய புத்ரியின் அவ்வார்த்தையைக்கேட்டு, சரமஶ்லோகார்த் தத்தை அளிக்கும்படி ப்ரார்த்திக்கும் முதலியாண்டானையும் பார்த்து, வைஷ்ணவர்களின் திரள்நடுவே அவரிடம் பின் வருமாறு வார்த்தை சொன்னார்:— “ தாஶரதியே! (உமக்கும் இப்பெண்ணுக்கும்) நன்மையை விரும்பி ஒரு வார்த்தை சொல்லுகிறேன் கேளாய்; இப்பெண்ணோடு கூட இவளது புகுந்தகத்திற்குச் சென்று, புக்ககத்தார் நியமிக்கும் காரியங்களைச் செய்வாயாக'' என்று.

## முதலியாண்டான் பெருமை

32*-*48 அறிவாளியான முதலியாண்டானும், அந்த யதிராஜருடைய நியமனத்தைத் தலைமேற்கொண்டு, அப்

४३. त्वं दास इति चाज्ञानादस्माभिर्यत्कृतं द्विज।
ये तु त्वय्यपराधाश्च कृतास्तत् क्षम्यतां द्विज॥

४४. कृपां निक्षिप्य चास्मासु स्वस्थाने गम्यतां त्वया।
तैरेवमुक्तस्तानाह धीमान् दाशरथिस्तदा॥

४५. यस्याज्ञया नियुक्तोऽहमस्मिन् कर्मणि वैष्णवाः।
वदत क्वनु गच्छामि विना तस्याज्ञया द्विजाः॥

४६. तेनैवमुक्तास्ते तूर्णं यतिराजपदान्तिकम्।
प्राप्य विज्ञापनं चक्रुस्तत्सर्वं विशदं तदा॥

४७. ततस्तमानयामास शिष्येण यतिपुङ्गवः।
तेनाहूतो यतीन्द्रेण धीमान् दाशरथिस्तदा॥

---

முதலானவற்றை அளித்து அவரை விசேஷமாக கௌரவித்து, தங்களது அபசாரம் நீங்குவதற்காக, "அந்தணரே! நீர் வேலைக்காரர் என்றெண்ணி, அறியாமையாலே நாங்கள் உம்மை இவ்வளவு நாள் ஆணையிட்டு வந்ததையும், உம்மை அவமதித்தால் நாங்கள் உமக்குச் செய்த அபசாரங்களையும் மன்னித்தருள்வீர். எங்களிடம் கருணை கூர்ந்து உமது இருப்பிடம் சேர்வீர்" என்று பிரார்த்தித்தார்கள். அப்போது அவர்களால் இவ்வண்ணம் பிரார்த்திக்கப்பட்ட அறிவாளியான முதலியாண்டானும், "வைஷ்ணவ அந்தணர்களே! எவருடைய ஆணையால் நான் இக்கைங்கர்யம் செய்ய நியமிக்கப்பெற்றேனோ, அந்த யதிராஜரது ஆணையில்லாமல் நான் வேறு இடத்திற்கு எப்படிச் செல்வேன்? நீங்களே கூறுங்கள்" என்று அவர்களிடம் உரைத்தார். முதலியாண்டானல் இவ்வண்ணம் உரைக்கப்பட்ட அவர்கள், யதிராஜருடைய திருவடிவாரத்தை விரைவில் அடைந்து, நடந்தது அனைத்தையும் அவரிடம் தெளிவாக விண்ணப்பித்தார்கள். அதற்குப்பின், யதிராஜரும் ஓர் சிஷ்யரைக்கொண்டு

२८. तमेव प्रतिगच्छाशु स ते शोकविनाशनः।
सा तथोक्ता स्वपित्रा च यतिराजमुपागता॥
२९. सर्वं निवेदयामास स्वदुःखं बालिकाऽञ्जसा।
गुरुपुत्रीवचः श्रुत्वा यतिराजो विचक्षणः॥
३०. याचन्तं चरमार्थं च दृष्ट्वा दाशरथिं तदा।
वैष्णवानां सभामध्ये तमुवाच यतीश्वरः॥
३१. शृणु दाशरथे वाक्यं वक्ष्यामि हितकाम्यया।
गत्वा त्वमनया सार्धं योषितोऽस्या गृहं प्रति॥
३२. यान्युक्तानि च कार्याणि तत्र तानि कुरुष्व ह।
तस्याज्ञां शिरसा धृत्वा धीमान् दाशरथिस्तदा॥

---

நடந்ததனைத்தையும் மடத்திலுள்ள உன் தமயனிடம் சொல்லு; அவனை விரைவில் அடைவாய்; அவன் உன் துன்பத்தைத் தீர்ப்பான்'' என்று தமது பெண்ணை அவளைக் குறித்துச் சொன்னார். தன் தந்தையால் அவ் வண்ணம் நியமிக்கப்பெற்ற அப்பெண்ணும், யதிராஜரை அடைந்து, தன் துன்பம் அனைத்தையும் விரிவாக விவ ரித்தாள். செயல்வல்லவரான யதிராஜரும், ஆசார்ய புத்ரியின் அவ்வார்த்தையைக்கேட்டு, சரமஶ்லோகார்த் தத்தை அளிக்கும்படி பிரார்த்திக்கும் முதலியாண்டானையும் பார்த்து, வைஷ்ணவர்களின் திரள்நடுவே அவரிடம் பின் வருமாறு வார்த்தை சொன்னார் :— ''தாஶரதியே ! (உமக்கும் இப்பெண்ணுக்கும்) நன்மையை விரும்பி ஒரு வார்த்தை சொல்லுகிறேன் கேளாய்; இப்பெண்ணோடு கூட இவளது புகுந்தகத்திற்குச் சென்று, புக்ககத்தார் நியமிக்கும் காரியங்களைச் செய்வாயாக'' என்று.

## முதலியாண்டான் பெருமை

32*-*48 அறிவாளியான முதலியாண்டானும், அந்த யதிராஜருடைய நியமனத்தைத் தலைமேற்கொண்டு, அப்

५२. वररङ्गान्तिकं गत्वा वररङ्गान्महात्मनः।
द्राविडाम्नायसर्वस्वं गृहीत्वा यतिपुङ्गवः॥
५३. दाशरथ्यादिशिष्येभ्यस्तत्सर्वमुपदिश्य च।
स्वमठे कतिचिन्मासानुवास स महायशाः॥
५४. श्रीयामुनाचार्यसुतात्समस्तां
स द्राविडीयां सकलार्थसाराम्।
संप्राप्य तस्याः स चकार बुद्धिं
अर्थाधिकारे मतिमान् महात्मा॥

इति श्रीप्रपन्नामृते रामानुजचरित्रे दाशरथिकूरेशाभ्यां चरमश्लोकोपदेशो नाम द्वाविंशोऽध्यायः॥

---

தாஸன்' என்று புகழ்பெற்ற முதலியாண்டான் ஸ்ரீ வைஷ்ணவ கைங்கர்யம் செய்ததன்மூலமும், கீதா சரமஶ்லோகார்த்தத்தை அறிந்து மிக உகந்து பிறவிப் பயன் பெற்றூர்கள்.

### திருவரங்கப்பெருமாளரையரிடம் அருளிச்செயல் கேட்டல்

52-54. திருவரங்கப்பெருமாளரையரிடம் சென்று, மஹாத்மாவான அவரிடமிருந்து அருளிச்செயல் முழுவதை யும் கேட்டு, முதலியாண்டான் முதலிய எல்லாச் சீடர் களுக்கும் அதை முழுவதும் உபதேஶித்து, தமது மடத் தில் சில மாஸங்கள் வாழ்ந்து வந்தார் பெரும்புகழாளரான யதிராஜர். ஆளவந்தாருடைய பிள்ளையான அத்திருவரங்கப் பெருமாளரையரிமிடமிருந்து, தமிழில் ஆழ்வார்களால் அருளப்பெற்ற ஸகலார்த்தஸாரமான அருளிச்செயல் களைப்பெற்று, மஹாத்மாவான யதிராஜர் அதன் பொருளைக் கற்பதற்குத் திருவுள்ளங்கொண்டார்.

ஸ்ரீ ப்ரபந்நாம்ருதத்தில், ராமாநுஜசரித்திரத்தில், கூரத்தாழ்வானுக்கும், முதலியாண்டானுக்கும் சரமஶ்லோகார்த்தோபதேஶமாகிற இருபத்திரண்டாம் அத்தியாயம் நிறைவுபெற்றது.

२८. तमेव प्रतिगच्छाशु स ते शोकविनाशनः।
सा तथोक्ता स्वपित्रा च यतिराजमुपागता॥
२९. सर्वं निवेदयामास स्वदुःखं बालिकाऽञ्जसा।
गुरुपुत्रीवचः श्रुत्वा यतिराजो विचक्षणः॥
३०. याचन्तं चरमार्थं च दृष्ट्वा दाशरथिं तदा।
वैष्णवानां सभामध्ये तमुवाच यतीश्वरः॥
३१. शृणु दाशरथे वाक्यं वक्ष्यामि हितकाम्यया।
गत्वा त्वमनया सार्धं योषितोऽस्या गृहं प्रति॥
३२. यान्युक्तानि च कार्याणि तत्र तानि कुरुष्व ह।
तस्याज्ञां शिरसा धृत्वा धीमान् दाशरथिस्तदा॥

---

நடந்தததனைத்தையும் மடத்திலுள்ள உன் தமயனிடம் சொல்லு; அவனை விரைவில் அடைவாய்; அவன் உன் துன்பத்தைத் தீர்ப்பான்" என்று தமது பெண்ணை அவளைக் குறித்துச் சொன்னார். தன் தந்தையால் அவ் வண்ணம் நியமிக்கப்பெற்ற அப்பெண்ணும், யதிராஜரை அடைந்து, தன் துன்பம் அனைத்தையும் விரிவாக விவரித்தாள். செயல்வல்லவரான யதிராஜரும், ஆசார்ய புத்ரியின் அவ்வார்த்தையைக்கேட்டு, சரமஶ்லோகார்த்தத்தை அளிக்கும்படி பிரார்த்திக்கும் முதலியாண்டானையும் பார்த்து, வைஷ்ணவர்களின் திரள்நடுவே அவரிடம் பின் வருமாறு வார்த்தை சொன்னார் :— "தாஶரதியே! (உமக்கும் இப்பெண்ணுக்கும்) நன்மையை விரும்பி ஒரு வார்த்தை சொல்லுகிறேன் கேளாய்; இப்பெண்ணோடு கூட இவளது புகுந்தகத்திற்குச் சென்று, புக்ககத்தார் நியமிக்கும் காரியங்களைச் செய்வாயாக" என்று.

## முதலியாண்டான் பெருமை

32*-*48 அறிவாளியான முதலியாண்டானும், அந்த யதிராஜருடைய நியமனத்தைத் தலைமேற்கொண்டு, அப்

५. यामुनोक्तप्रकारेण मालाधरगुरूत्तमः ।
यतिराजाय गाथानां तत्रार्थमुपदिश्य च ॥

६. अर्थान्तरेण गाथायाः कस्याश्चिद्वैष्णवोत्तमः ।
उक्तवानश्रुतत्वेन शिष्यायार्थं विचक्षणः ॥

७. तच्छ्रुत्वा लक्ष्मणाचार्यो मालाधरमथाब्रवीत् ।
न चैवमर्थो गाथायास्तस्याश्चान्योऽस्ति देशिक ॥

८. यतीन्द्रेणैवमुक्तस्तु मालाधरगुरुस्तदा ।
विसृज्याशु च तस्योक्तिं दृष्ट्वा लक्ष्मणदेशिकम् ॥

---

### திருமாலையாண்டானின் சீற்றம்

5-9. வைஷ்ணவோத்தமராய், ஸமர்த்தரான திருமாலையாண்டான்—ஆளவந்தார் தமக்கு அருளிய ரீதியில் திருவாய்மொழிப் பாசுரங்களுக்கு அர்த்தத்தை யதிராஜர்க்குச் சொல்லிவருகையில், "**ஊனில் வாழ்**" [2-3] என்று தொடங்கும் பதிகத்தில் முதல் இரண்டு பாசுரங்களில் ஆழ்வார் மஹாப்ரீதியோடு பாசுரம் அருளிச்செய்கிறார் என்று (ஆளவந்தார் அருளியதாகக்) கூறிவிட்டு, மூன்றும் பாசுரத்தில் "அறியாமாமாயத்தடியேனை வைத்தாயால்" என்று ஆழ்வார் வருத்தத்தோடே பாசுரம் அருளியதாக நிர்வஹித்து, அத்திருவாய்மொழியின் முன் பின் பாசுரங்களிலில்லாத வருத்தத்தை அப்பாசுரத்தில் மாத்திரம் அர்த்தமாக சிஷ்யரான எம்பெருமானுர்க்குக் கூறினர். இதைக்கேட்ட எம்பெருமானுர் "ஆசார்யரே! இப்பாசுரத்திற்கு இது அர்த்தமன்று; முன்பின் பாசுரங்களுக்குச்சேர 'அறியாமாமாயத்தடியேனை, அறியாக்காலத்துள்ளே அடிமைக்கண் அன்புசெய்வித்து வைத்தாயால்' என்று ப்ரீதி தோற்ற ஆழ்வார் இந்த மூன்றும் பாசுரத்திலும் அருளுகிருர் என்பதே பொருந்தும்" என்று

२८. तमेव प्रतिगच्छाशु स ते शोकविनाशनः ।
सा तथोक्ता स्वपित्रा च यतिराजमुपागता ॥
२९. सर्वं निवेदयामास स्वदुःखं बालिकाऽञ्जसा ।
गुरुपुत्रीवचः श्रुत्वा यतिराजो विचक्षणः ॥
३०. याचन्तं चरमार्थं च दृष्ट्वा दाशरथिं तदा ।
वैष्णवानां सभामध्ये तमुवाच यतीश्वरः ॥
३१. शृणु दाशरथे वाक्यं वक्ष्यामि हितकाम्यया ।
गत्वा त्वमनया सार्धं योषितोऽस्या गृहं प्रति ॥
३२. यान्युक्तानि च कार्याणि तत्र तानि कुरुष्व ह ।
तस्याज्ञां शिरसा धृत्वा धीमान् दाशरथिस्तदा ॥

---

நடந்ததனைத்தையும் மடத்திலுள்ள உன் தமயனிடம் சொல்லு; அவனை விரைவில் அடைவாய்; அவன் உன் துன்பத்தைத் தீர்ப்பான்" என்று தமது பெண்ணை அவளைக் குறித்துச் சொன்னார். தன் தந்தையால் அவ்வண்ணம் நியமிக்கப்பெற்ற அப்பெண்ணும், யதிராஜரை அடைந்து, தன் துன்பம் அனைத்தையும் விரிவாக விவரித்தாள். செயல்வல்லவரான யதிராஜரும், ஆசார்ய புத்ரியின் அவ்வார்த்தையைக்கேட்டு, சரமஶ்லோகார்த்தத்தை அளிக்கும்படி பிரார்த்திக்கும் முதலியாண்டானையும் பார்த்து, வைஷ்ணவர்களின் திரள்நடுவே அவரிடம் பின்வருமாறு வார்த்தை சொன்னார் :— "தாஶரதியே! (உமக்கும் இப்பெண்ணுக்கும்) நன்மையை விரும்பி ஒரு வார்த்தை சொல்லுகிறேன் கேளாய்; இப்பெண்ணோடு கூட இவளது புகுந்தகத்திற்குச் சென்று, புக்ககத்தார் நியமிக்கும் காரியங்களைச் செய்வாயாக" என்று.

## முதலியாண்டான் பெருமை

32*-*48 அறிவாளியான முதலியாண்டானும், அந்த யதிராஜருடைய நியமனத்தைத் தலைமேற்கொண்டு, அப்

१४. सान्दीपिनेर्यथा कृष्णो विद्यां जग्राह सादरम्।
तथाभ्यस्यति योगीन्द्रस्त्वत्तो मालाधराधुना ॥

१५. हृदि योऽर्थः स्थितस्तस्य यामुनस्य महात्मनः।
अधुना लक्ष्मणार्यस्य स एवार्थः प्रकाशते ॥

१६. अज्ञातज्ञापनं तस्य करोमीति न चिन्तय।
हृदयं यामुनार्यस्य हृदयं यतिभूपतेः ॥

१७. एकमेव च तस्मात्त्वं विद्यां ब्रूहि महात्मने।
अयं रामानुजः श्रीमान् न सामान्यजनः परः ॥

१८. तथेति प्रतिगृह्याशु तद्वाक्यं तस्य वैष्णवः।
मालाधरो यतीन्द्राय तत्पुनर्वक्तुमुद्यतः ॥

---

ராஜர் கூறுகிறார்" என்று கூறினார். அதைக்கேட்ட நம்பியும் "மாலாத₄ரரே! ஸ்ரீக்ருஷ்ணன் ஸாந்தீ₃பினியிடம் கல்வி கற்றதுபோல் உம்மிடம் யதிராஜர் இப்போது அர்த்த₂ம் கேட்கிறார். மஹாத்மாவான ஆளவந்தார் நெஞ்சில் உள்ள அர்த்த₂மே இப்போது ஸ்ரீ ராமானுஜருடைய நெஞ்சில் தோன்றும். ஆகையால், அவருக்கு அறியாததை அறிவிப்பதாக நினையாதேகொள்ளும். ஆளவந்தாருடைய நெஞ்சமும், யதிராஜருடைய நெஞ்சமும் ஒன்றேயாகும். பேரறிவாளரே! இதைக் கருத்தில்கொண்டு அவருக்கு அர்த்த₂த்தை உபதே₃ஶிக்கக்கடவீர். லக்ஷ்மிஸம்பந்நரான இந்த லக்ஷ்மணமுனி ஸாத₄ாரணமான மனிதரல்லர். எம் பெருமானின் அவதாரமேயாவர்" என்று அவருக்குச் சொன்னார். அவ்வாக்யத்தை உடனே அப்படியே ஏற்றுக் கொண்ட வைஷ்ணவரான திருமாலையாண்டானும், மறுபடியும் யதிராஜர்க்குத் திருவாய்மொழியின் அர்த்த₂த்தை உபதே₃ஶிக்கத் திருவுள்ளங்கொண்டார்.

२८. तमेव प्रतिगच्छाशु स ते शोकविनाशनः।
सा तथोक्ता स्वपित्रा च यतिराजमुपागता॥
२९. सर्वं निवेदयामास स्वदुःखं बालिकाऽञ्जसा।
गुरुपुत्रीवचः श्रुत्वा यतिराजो विचक्षणः॥
३०. याचन्तं चरमार्थं च दृष्ट्वा दाशरथिं तदा।
वैष्णवानां सभामध्ये तमुवाच यतीश्वरः॥
३१. शृणु दाशरथे वाक्यं वक्ष्यामि हितकाम्यया।
गत्वा त्वमनया सार्धं योषितोऽस्या गृहं प्रति॥
३२. यान्युक्तानि च कार्याणि तत्र तानि कुरुष्व ह।
तस्याज्ञां शिरसा धृत्वा धीमान् दाशरथिस्तदा॥

---

நடந்ததனைத்தையும் மடத்திலுள்ள உன் தமயனிடம் சொல்லு; அவனை விரைவில் அடைவாய்; அவன் உன் துன்பத்தைத் தீர்ப்பான்" என்று தமது பெண்ணை அவளைக் குறித்துச் சொன்னார். தன் தந்தையால் அவ்வண்ணம் நியமிக்கப்பெற்ற அப்பெண்ணும், யதிராஜரை அடைந்து, தன் துன்பம் அனைத்தையும் விரிவாக விவரித்தாள். செயல்வல்லவரான யதிராஜரும், ஆசார்ய புத்ரியின் அவ்வார்த்தையைக்கேட்டு, சரமஶ்லோகார்த்தத்தை அளிக்கும்படி பிரார்த்திக்கும் முதலியாண்டானையும் பார்த்து, வைஷ்ணவர்களின் திரள்நடுவே அவரிடம் பின் வருமாறு வார்த்தை சொன்னார்:— "தாஶரதியே! (உமக்கும் இப்பெண்ணுக்கும்) நன்மையை விரும்பி ஒரு வார்த்தை சொல்லுகிறேன் கேளாய்; இப்பெண்ணோடு கூட இவளது புகுந்தகத்திற்குச் சென்று, புக்ககத்தார் நியமிக்கும் காரியங்களைச் செய்வாயாக" என்று.

### முதலியாண்டான் பெருமை

32*-*48 அறிவாளியான முதலியாண்டானும், அந்த யதிராஜருடைய நியமனத்தைத் தலைமேற்கொண்டு, அப்

२४. श्रुत्वा मालाधरवाक्यं अवोचद्यतिपुङ्गवः।
अत्रार्थं यामुनाचार्यो नैवं वदति देशिक!॥

२५. तेनैवमुक्तस्तं प्राह मालाधरगुरुस्तदा।
त्वया न दृष्टो दृष्ट्या वा कदाचिदपि यामुनः॥

२६. एवं तन्मानसं ज्ञात्वा वक्तुं को हेतुरुच्यताम्।
मालाधरवचः श्रुत्वा यतीन्द्रस्तमथाब्रवीत्॥

२७. यामुनस्यैकलव्योऽहं द्रोणार्यस्य यथा गुरोः।
निशम्य तद्वचस्तस्य मालाधरगुरुस्तदा॥

२८. गोष्ठीपूर्णोक्तवचनं तत्सत्यमिति हृष्टधीः।
अवतारं हरेर्मत्वा तदा लक्ष्मणदेशिकम्॥

२९. यामुनादश्रुताश्चार्थाः श्रुतास्त्वत्तोऽधुना मया।
इत्युक्त्वा तं परिक्रम्य प्रणम्य मुदितोऽभवत्॥

---

மாட்டார்" என்று உரைத்தார். யதிராஜரால் இப்படி உரைக்கப்பெற்ற ஆசார்யரான திருமாலையாண்டான் "நீர் யாமுநாசார்யரை (உயிரோடிருக்கும்போது) ஒரு நாளாவது கண்ணுல் கண்டதுகூட இல்லை. அப்படியிருக்க, அவருடைய திருவுள்ளத்தை நீர் உறுதியாகச் சொல்லக் காரணமென்ன வென்பதைச் சொல்லும்" என்று கேட்டார். திருமாலையாண்டானுடைய இவ்வார்த்தையைக் கேட்ட யதிராஜர் "த்₃ரோணுசார்யருக்கு ஏகலவ்யன்போலே, யாமுநாசார்யருக்கு நான் (சிஷ்யனுக) இருப்பவன்" என்று பதிலுரைத்தார். அவ்வார்த்தையைக் கேட்ட திருமாலையாண்டான், திருக்கோட்டியூர்நம்பி அருளியது மெய்யே என உணர்ந்து, மிகவுகந்து, ஸ்ரீராமாநுஜரை எம்பெருமானின் அவதாரமாக நினைத்து, "யாமுநாசார்யரிடம் கேளாத அர்த்த₂ங்களை உம்மிடமிருந்து இப்போது நான் கேட்கிறேன்" என்று சொல்லி, யதிராஜரை ப்ரத₃க்ஷிணம்

२८. तमेव प्रतिगच्छाशु स ते शोकविनाशनः।
सा तथोक्ता स्वपित्रा च यतिराजमुपागता॥

२९. सर्वं निवेदयामास स्वदुःखं बालिकाऽञ्जसा।
गुरुपुत्रीवचः श्रुत्वा यतिराजो विचक्षणः॥

३०. याचन्तं चरमार्थं च दृष्ट्वा दाशरथिं तदा।
वैष्णवानां सभामध्ये तमुवाच यतीश्वरः॥

३१. शृणु दाशरथे वाक्यं वक्ष्यामि हितकाम्यया।
गत्वा त्वमनया सार्धं योषितोऽस्या गृहं प्रति॥

३२. यान्युक्तानि च कार्याणि तत्र तानि कुरुष्व ह।
तस्याज्ञां शिरसा धृत्वा धीमान् दाशरथिस्तदा॥

---

நடந்ததனைத்தையும் மடத்திலுள்ள உன் தமயனிடம் சொல்லு; அவனை விரைவில் அடைவாய்; அவன் உன் துன்பத்தைத் தீர்ப்பான்" என்று தமது பெண்ணை அவளைக் குறித்துச் சொன்னார். தன் தந்தையால் அவ் வண்ணம் நியமிக்கப்பெற்ற அப்பெண்ணும், யதிராஜரை அடைந்து, தன் துன்பம் அனைத்தையும் விரிவாக விவரித்தாள். செயல்வல்லவரான யதிராஜரும், ஆசார்ய புத்ரியின் அவ்வார்த்தையைக்கேட்டு, சரமஶ்லோகார்த்தத்தை அளிக்கும்படி பிரார்த்திக்கும் முதலியாண்டானையும் பார்த்து, வைஷ்ணவர்களின் திரள்நடுவே அவரிடம் பின் வருமாறு வார்த்தை சொன்னார்:— "தாஶரதியே! (உமக்கும் இப்பெண்ணுக்கும்) நன்மையை விரும்பி ஒரு வார்த்தை சொல்லுகிறேன் கேளாய்; இப்பெண்ணோடு கூட இவளது புகுந்தகத்திற்குச் சென்று, புக்ககத்தார் நியமிக்கும் காரியங்களைச் செய்வாயாக" என்று.

## முதலியாண்டான் பெருமை

32*-*48 அறிவாளியான முதலியாண்டானும், அந்த யதிராஜருடைய நியமனத்தைத் தலைமேற்கொண்டு, அப்

३५. कृतनाट्यश्रमाङ्गाय वररङ्गाय भक्तितः।
हरिद्रालेपनं कृत्वा स्वयमेव यतीश्वरः॥

३६. काले कालेऽनुरूपेण शरीरोद्वर्तनादिभिः।
शुश्रूषामकरोत्तस्मै भक्त्या लक्ष्मणदेशिकः॥

३७. वररङ्गस्स तं दृष्ट्वा सन्तुष्टो यतिपुङ्गवम्।
अवोचत्प्रहसन्वाक्यं यामुनाचार्यनन्दनः॥

३८. ग्रहीतुं मम सर्वस्वं त्वमित्थं कृतवानसि।
शृणु वक्ष्यामि चरमं पुरुषार्थं यतीश्वर!॥

३९. दैवमन्यमजानानः शठकोपगुरुं विना।
यथाऽतिष्ठद्यतिश्रेष्ठ पुरा स मधुरः कविः॥

४०. तथा त्वमधुना तिष्ठ लक्ष्मणार्य! यतीश्वर!।
गुरुरेव परं ब्रह्म गुरुरेव परं धनम्॥

---

அளித்தார். ஸ்ரீரங்க₃ஶாயியான பெருமாளுக்கு மார்கழி மாதத்தில் அத்₄யயநோத்ஸவத்தில் அபி₄நயம் பிடித்ததிலுல் களைப்படைந்த அவருக்கு, ப₄க்தியோடு யதிராஜர் தாமே அவர் திருமேனிக்குத் தக்கபடி மஞ்சட்காப்பு அரைத்துச் சாத்தி, வாசனைப் பொடிகளாலே திருமேனியைத் தேய்த்து நீராடப் பண்ணிவைத்து, அன்போடு கைங்கர்யம் செய்தார். யாமுநாசார்யருடைய குமாரரான திருவரங்கப்பெருமாளரையர் யதிராஜரைப் பார்த்து மிக வுகந்து "என்னுடைய ஸர்வஸ்வத்தையும் (எனக்கு எல்லாச் சொத்துமாயிருக்கும் ரஹஸ்யார்த்த₂த்தை) கொள்ளை கொள்ளவோ நீர் இப்படிக் கைங்கர்யம் செய்கிறீர்?" என்று சிரித்துக்கொண்டே சொல்லிவிட்டு, "யதிராஜரே! சரம புருஷார்த்த₂த்தைச் சொல்லுகிறேன் கேட்பீராக. ஶட₂கோபரான நம்மாழ்வாரைத் தவிரத் தேவுமற்றறியாதவராக முற்காலத்தில் மது₄ரகவியாழ்வார் எப்படியிருந்தாரோ, அப்படியே நீரும் இப்போது இருப்பீராக. 'கு₃ருவே

४१. गुरुरेव परः कामः गुरुरेव परायणम्।
गुरुरेव परा विद्या गुरुरेव परा गतिः॥

४२. यस्मात्तदुपदेष्टासौ तस्माद्गुरुतरो गुरुः।
आचार्यस्तु हरिस्साक्षाच्चररूपी न संशयः॥

४३. न मर्त्यबुद्ध्याऽसूयेत सर्वदेवमयो गुरुः।
इत्युक्तेन प्रकारेण हृदि लक्ष्मणदेशिक!॥

४४. उपायश्चाप्युपेयश्च गुरुरेवेति भावय।
इति तस्मै यतीन्द्राय पञ्चमोपायमुक्तवान्॥

४५. अनपत्यतया तस्य वररङ्गस्य भक्तितः।
अनुजं शोट्टैनामानं लक्ष्मणार्याय सत्वरम्॥

४६. शिष्यं कृत्वा महाप्राज्ञः कृतकृत्यो बभूव सः।

---

மேலான ப்3ரஹ்மம்; கு3ருவே மேலான த4னம்; கு3ருவே மேலான காமம்; கு3ருவே மேலான ப்ராப்யம்; கு3ருவே மேலான கல்வி; கு3ருவே மேலான ப்ராபகம; அப்பரம் பொருளையே உபதே3ஶிப்பதால் கு3ரு அதைவிட உயர்ந்தவர்.' 'ஆசார்யனே நேரே நடமாடும் பரமபுருஷன்; இதில் ஐயமில்லை; அவரை மனிதனென நினைத்துப் பொருமைப்படக்கூடாது; எல்லா தே3வஸ்வரூபியாகவுமிருப்பவர் ஆசார்யர்.' என்று ப்ரமாணங்களில் சொல்லப்பட்ட ரீதியில், ஆசார்யனையே உபாயமாகவும், உபேயமாகவும் நினைப்பீராக" என்று, கர்மஜ்ஞாநப4க்திப்ரபத்திகளுக்கு மேற்பட்டதாய், ஐந்தாவதான சரமோபாயத்தை யதிராஜர்க்கு அருளிச்செய்தார். பேரறிவாளரான அந்தத் திருவரங்கப்பெருமாளரையர் பிள்ளையில்லாதவராகையாலே, கடைசித் தம்பியான சொட்டைநம்பியைச் சடக்கென ஸ்ரீராமாநுஜர்க்கு அன்போடு சிஷ்யராக்கித் தம் கடமையைச் செய்தவரானார்.

लब्ध्वा यतीन्द्रः सकलां गुरुभ्यो
विद्यां च लोकस्य हिते प्रवृत्तः।
श्रीरङ्गपुर्यां सह शिष्यसंघैः रेजे मुदा विष्णुरिवामरेन्द्रैः॥

४७. राजा स्वपुत्रस्य कृते यथा निधिं
निक्षिप्तवान् मन्त्रिषु सत्सु संमतः।
तथा यतीन्द्रस्य हिताय यामुनः
शिष्येषु पञ्चस्वखिलार्थसम्पदम्॥

४८. अथो यतीन्द्राय महात्मने तदा
पूर्णार्यमालाधरदेशिकादयः।
दत्वाऽखिलार्थान् स्वयमेव शीघ्रतः
शिष्यान् स्वपुत्रान् विदधुः प्रहृष्टाः॥

---

## திருமுடி திருவடி ஸம்ப₃ந்த₄ங்களாலே உத்தாரகரான நடுநாயகமணி

46*-51. இவ்வண்ணமாக ஐந்து ஆசார்யர்களிட மிருந்து, அறியவேண்டிய எல்லா அர்த்த₂ங்களையும் அறியப்பெற்ற யதிராஜர், உலகிற்கு நன்மை செய்வ திலேயே ஈடுபட்டவராய், ஸ்ரீரங்க₃நக₃ரத்தில் சிஷ்யர்க ளோடு கூடியவராய், நித்யஸூரிகளோடு கூடிய பரம பத₃நாத₂னைப்போலே உகப்புடன் விளங்கினார். குடிகளால் கொண்டாடப்படும் அரசனொருவன் நல்லோர்களான மந்திரிகளிடம் தன் பிள்ளைக்காக நிதி₄களைச் சேமித்து வைப்பதுபோலே, ஆளவந்தாரும் யதிராஜரின் நன்மை யைக் கருதித் தனது ஐந்து சிஷ்யர்களிடம் எல்லா அர்த்த₂ங்களையும் சேமித்து வைத்திருந்தார். மஹாத்மா வான அத்தகைய எதிராஜர்க்கு,—பெரியநம்பி, திருக் கோட்டியூர்நம்பி, திருமாலையாண்டான் முதலிய ஆசார் யர்கள் அந்த எல்லா அர்த்த₂ங்களையும் அளித்து, (அவர் உத்தாரகாசார்யர் என்பது விளங்கும்படி) தமது குமாரர்

४९. तच्छीर्षसम्बन्धबलाच्च देशिकाः
पूर्वे स्थिता मुक्तिमवापुरञ्जसा ।
तदङ्घ्रिसम्बन्धबलादिह स्थिताः
स्वरूपसिद्धिं परमां गता जनाः ॥

५०. विना च सम्बन्धबलेन तस्य जगद्गुरोर्लक्ष्मणदेशिकस्य ।
तद्दुर्गमं विष्णुपदं जनानां पूर्वं स्थितानामधुना स्थितानाम् ॥

५१. यथा मणिर्मौक्तिकहारमध्ये विराजयंस्तं परितस्तथैव ।
महात्मनां देशिकपुङ्गवानां मध्ये विरेजे यतिसार्वभौमः ॥

इति श्रीप्रपन्नामृते रामानुजचरित्रे रामानुजार्यसार्थोपदेशो नाम त्रयोविंशोऽध्यायः ॥

---

களை விரைவிலேயே உகப்புடன் அவருக்குச் சீடர்களாக்கினார்கள். எதிராஜர்க்கு முன்புள்ள ஆசார்யர்கள் (நம்மாழ்வாருடைய திருவடியாயிருந்த ப₄விஷ்யத₃ாசார்ய விக்₃ரஹத்தை தியானித்ததன்மூலம் ஏற்பட்ட) திருமுடி ஸம்ப₃ந்த₄த்தின் வலிமையாலே நன்கு முக்தி பெற்றார்கள். அவருக்குப் பின்பு இவ்வுலகில் வாழ்ந்த ஏராளமான ஜனங்கள் அவருடைய திருவடி ஸம்ப₃ந்த₄த்தின் வலிமையாலே பரமபத₃ம் சென்று மேலான ஸ்வரூபவிளக்கம் பெற்றார்கள். இவ்வண்ணமாக, முன்புள்ளார்க்கும், பின்புள்ளார்க்கும் ஜக₃த்₃ாசார்யரான அவ்விராமாநுஜரோடு ஸம்ப₃ந்த₄ப₃லம் இல்லாவிடில், விஷ்ணுவின் பரமபத₃த்திற்குச் செல்வது அரிதாயிற்று. ஒரு முத்துமாலைக்கு நடுவே நாயகரத்னமானது பிரகாசிப்பதுபோலே, முன்பும் பின்பும் விளங்கிய மஹாத்மாக்களான ஆசார்யோத்தமர்களுக்கு நடுவில், யதிசக்ரவர்த்தியானவர் நடுநாயகமணியாக விளங்கினார்.

ஸ்ரீப்ரபந்நாம்ருதத்தில், ராமாநுஜசரித்திரத்தில் ஸ்ரீராமாநுஜர்க்கு ஆசார்யர்கள் எல்லா அர்த்த₂ங்களையும் உபதே₃ஶித்தலாகிற இருபத்துமூன்றும் அத்தியாயம் நிறைவுபெற்றது.

## चतुर्विंशोऽध्यायः

१. अथ श्रीलक्ष्मणाचार्यो धीमान् लोकहिताय सः।
गद्यत्रयं तदा कृत्वा विष्णोराराधनक्रमम्॥

२. श्रीमन्नारायणो देवः परमात्मा सनातनः।
परब्रह्म स एवेति लोकेभ्यः प्रतिपादयन्॥

३. वैष्णवं दर्शनं लोके वर्धयन् वैष्णवोत्तमः।
काले कालेऽर्चकैर्नित्यं कैङ्कर्यं रङ्गभूपतेः॥

४. कारयन् वैष्णवान् सर्वान् कुर्वन् रङ्गे सुखं स्थितः।
यतीन्द्रशासनं तेषामर्चकानां तु रङ्गिणः॥

---

## இருபத்துநாலாம் அத்தியாயம்

# விஷமிடுதல்

### ஸ்ரீரங்க₃ஸ்ரீ நிர்வாஹம்

1-*4. இப்படி அகி₂லார்த்தே₂ாபதே₃ஶம் பெற்றபின், பேரறிவாளரான அந்த ஸ்ரீராமாநுஜாசார்யர்—உலகனைத்தும் உய்யும் பொருட்டு, க₃த்₃யத்ரயத்தையும், விஷ்ணுவின் நித்யதிருவாராத₄னத்தை விளக்கும் நித்யக்₃ரந்த₂த்தையும் அருளிச்செய்தார். "ஸ்ரீமானை நாராயணன் ஒருவனே இயற்கையான தெய்வத்தன்மையுடையவனாய், பழையவனாய், பரமாத்மா என்றும், பரப்₃ரஹ்மம் என்றும் கொண்டாடப்படுபவன்" என்று உலகினர்க்கு அறிவித்துக் கொண்டு, வைஷ்ணவ மதத்தை உலகில் வளர்த்துக் கொண்டு, அர்ச்சகர்கள்மூலம் உரிய காலங்களில் திருவரங்கராஜனுக்குத் திருவாராத₄ன கைங்கர்யத்தைச் செய்வித்துக்கொண்டு, அனைவரையும் விஷ்ணு ப₄க்தர்களாக்கிக்கொண்டு ஸ்ரீரங்க₃த்தில் இனிது வாழ்ந்து வந்தார் வைஷ்ணவோத்தமரான ஸ்ரீராமாநுஜர்.

५. नित्यं च द्रव्यहर्तॄणां बन्धनं समजायत।
अर्चकानां तदा तेषां प्रधानः पुरुषाधमः॥
६. हिंसितुं लक्ष्मणार्यं तं उद्युक्तः कश्चिदर्चकः।
वित्तेन स्ववशं कृत्वा द्विजं कञ्चिद्धनातुरम्॥
७. विषान्नं लक्ष्मणार्याय दीयतामिति सोऽब्रवीत्।
सोऽङ्गीकृत्य वचस्तस्य भार्यामाहूय चाब्रवीत्॥
८. विषान्नं लक्ष्मणार्याय प्रदेयं हि त्वयाऽधुना।
सा साध्वी तद्वचः श्रुत्वा मतिं तत्र न चाकरोत्॥
९. निर्भर्त्स्यमाना सा भर्त्रा विषान्नं भर्तृसन्निधौ।
दत्वा साध्वी यतीन्द्राय कृत्वा पादाभिवन्दनम्॥

---

### விஷான்னமிடும் முயற்சி வீணானது

4*-*12. ஸ்ரீரங்கநாதனுடைய த்ரவ்யத்தைத் திருடி வந்த அர்ச்சகர்களுக்கு யதிராஜர் தம்மை நியமிப்பது எப்போதும் இடையூறாயிருந்தது. அர்ச்சகர்களில் தலைவனாய், மனிதர்களில் கடைப்பட்டவனான ஒரு அர்ச்சகன் ஸ்ரீராமாநுஜரைக் கொல்லத் திட்டமிட்டான். பணத்தில் ஆசைகொண்ட அந்தணன் ஒருவனைப் பணங்கொடுத்து வசப்படுத்தி, 'ஸ்ரீராமாநுஜர்க்கு விஷான்னத்தை பிக்ஷையாக இடுவாய்' என்று அவனிடம் சொல்லி வைத்திருந்தான. அவனும் அதை ஏற்று, தன் மனைவியைக் கூப்பிட்டு, "நீ இன்று ராமாநுஜர் பிக்ஷைக்கு வரும்போது விஷங்கலந்த அன்னத்தை பிக்ஷையாக இடவேணும்" என்று நியமித்து வைத்தான். நல்லவளான அப்பெண்மணி கணவனின் அவ்வார்த்தையைக் கேட்டபின்பும் அதற்கு இசையவில்லை. கணவனால் பயமுறுத்தப்பட்ட அவள்— விஷங்கலந்த அன்னத்தைக் கணவன் முன்னிலையிலேயே யதிராஜர்க்கு அளித்து, அவர் திருவடிகளில் வணங்கி,

१०. लिलेख नखधाराभिः यतीन्द्रपदपङ्कजे।
इङ्गितज्ञो मनो ज्ञात्वा दृष्ट्वाऽश्रुनयनां स्त्रियम्॥

११. शुने तदन्नमदिशत् सोऽपि जग्ध्वा क्षयं गतः।
मृतं श्वानं तदा दृष्ट्वा हित्वा भिक्षाशनं सुधीः॥

१२. रामानुजस्तदा तस्थौ पीत्वा त्रीनुदकाञ्जलीन्।
गोष्ठीपूर्णस्ततस्तस्य वृत्तान्तं यतिभूपतेः॥

१३. श्रुत्वा रङ्गं प्रति ययौ कृपया शिष्यवत्सलः।
तच्छ्रुत्वा लक्ष्मणाचार्यः स्वाचार्यागमनं तदा॥

१४. रङ्गदक्षिणकावेर्यां स्वशिष्यजनसंवृतः।
अभिचक्राम सहसा गोष्ठीपूर्णं यतीश्वरः॥

---

அவர் திருவடிகளுக்கு அருகில் தன் கால் நகங்களாலே (விஷமென்று) எழுதிக் காட்டினாள். கண்ணீரோடு நிற்கும் அப்பெண்மணியைக்கண்டு, அவளது மனத்தையும், முகக்குறியையும் அறிந்து, அவ்வன்னத்தை நாய்க்கு இட்டார் யதிராஜர். அதைத் தின்ற நாயும் இறந்தது. இறந்த நாயைக்கண்ட அறிவாளியான ராமாநுஜர், பி₄க்ஷையுணவை ஏற்பதை விட்டு, மூன்றுகை நீர் மாத்திரம் குடித்து உபவாஸமிருந்தார்.

## திருக்கோட்டியூர் நம்பியின் தீ₃ர்க்க₄த₃ர்ஶனம்

12½-22. யதிராஜர்பற்றிய அச்செய்தியைக் கேள்விப்பட்ட திருக்கோட்டியூர்நம்பி, ஶிஷ்யரிடம் பரிவுகொண்டவராகையாலே கருணையோடு திருவரங்கத்திற்கு எழுந்தருளினார். தமது ஆசார்யன் எழுந்தருளுகிறார் என்று கேள்விப்பட்ட யதிராஜரும், தென்திருக்காவேரி மணலின் நடுவில் தன் சிஷ்யர்களோடு கூடியவராய், திருக்கோட்டியூர் நம்பியை எதிர்கொண்டு சென்றார். கடுங்கோடை காலத்தில் நடுப்பகலில், கொதிக்கும் காவேரி மணலில்

௫. नित्यं च द्रव्यहर्तॄणां बन्धनं समजायत ।
अर्चकानां तदा तेषां प्रधानः पुरुषाधमः ॥
௬. हिंसितुं लक्ष्मणार्यं तं उद्युक्तः कश्चिदर्चकः ।
वित्तेन स्ववशं कृत्वा द्विजं कञ्चिद्धनातुरम् ॥
௭. विषान्नं लक्ष्मणार्याय दीयतामिति सोऽब्रवीत् ।
सोऽङ्गीकृत्य वचस्तस्य भार्यामाहूय चाब्रवीत् ॥
௮. विषान्नं लक्ष्मणार्याय प्रदेयं हि त्वयाऽधुना ।
सा साध्वी तद्वचः श्रुत्वा मतिं तत्र न चाकरोत् ॥
௯. निर्भर्त्स्यमाना सा भर्त्रा विषान्नं भर्तृसन्निधौ ।
दत्वा साध्वी यतीन्द्राय कृत्वा पादाभिवन्दनम् ॥

---

## விஷான்னமிடும் முயற்சி வீணானது

4*-*12. ஸ்ரீரங்க$_3$நாத$_2$னுடைய த்$_3$ரவ்யத்தைத் திருடி வந்த அர்ச்சகர்களுக்கு யதிராஜர் தம்மை நியமிப்பது எப்போதும் இடையூறாயிருந்தது. அர்ச்சகர்களில் தலைவனாய், மனிதர்களில் கடைப்பட்டவனான ஒரு அர்ச்சகன் ஸ்ரீராமாநுஜரைக் கொல்லத் திட்டமிட்டான். பணத்தில் ஆசைகொண்ட அந்தணன் ஒருவனைப் பணங்கொடுத்து வசப்படுத்தி, 'ஸ்ரீராமாநுஜர்க்கு விஷான்னத்தை பி$_4$க்ஷையாக இடுவாய்' என்று அவனிடம் சொல்லி வைத்திருந்தான். அவனும் அதை ஏற்று, தன் மனைவியைக் கூப்பிட்டு, "நீ இன்று ராமாநுஜர் பி$_4$க்ஷைக்கு வரும்போது விஷங்கலந்த அன்னத்தை பி$_4$க்ஷையாக இடவேணும்" என்று நியமித்து வைத்தான். நல்லவளான அப்பெண்மணி கணவனின் அவ்வார்த்தையைக் கேட்டபின்பும் அதற்கு இசையவில்லை. கணவனால் ப$_4$யமுறுத்தப்பட்ட அவள்—விஷங்கலந்த அன்னத்தைக் கணவன் முன்னிலையிலேயே யதிராஜர்க்கு அளித்து, அவர் திருவடிகளில் வணங்கி,

१९. उद्धृत्योपरि निक्षिप्य स्वस्यैवासुकृतादरः।
प्रणतार्तिहरस्तस्थौ तदा सन्तप्तसैकते॥

२०. तदाकर्ण्य तमुद्वीक्ष्य तमुत्थाप्य कृतादरः।
यतीन्द्रपाणिं संगृह्य गोष्ठीपूर्णोऽभ्यभाषत॥

२१. अनेन कारयित्वा त्वं पाकं लक्ष्मणदेशिक।
भोजनं कुरु योगीन्द्र वैष्णवेषु दयां कुरु॥

२२. गोष्ठीपूर्णाज्ञया धीमान् यतीन्द्रः स तथाऽकरोत्।
ततः कदाचिद्योगीन्द्रः प्रेम्णा परवशो हरौ॥

---

கொதிக்கும் மணலில் கிடப்பதைக் கண்டு பொறுக்காத (கிடாம்பியாச்சான் எனப்படும்) அந்த ப்ரணதார்த்திஹரர், அவருடைய உயிரை ரக்ஷிக்க விரும்பி, பெரும்பரிவோடு, (காவேரி மணலில் தாம் படுத்துக்கொண்டு) யதிராஜரைத் தூக்கித் தம் மேலேயே படுக்கவைத்துக்கொண்டு, கொதிக்கும் மணலில் அப்படியே கிடந்தார். அக்கடுஞ் சொல்லைக்கேட்டு, அவரைக் கண்களாரக் கடாக்ஷித்து, (யதிராஜரைச் சுமந்துகொண்டு படுத்திருந்த) அந்தக் கிடாம்பியாச்சானைக் கையாலே தூக்கியெடுத்து, பேரன் போடு யதிராஜரின் கையைப்பிடிததுக்கொண்டு, "யதி ராஜரான ராமாநுஜரே! இக்கிடாம்பியாச்சானைக்கொண்டு உணவு சமைக்கச்செய்து ப்ரஸாதுப்படுவீராக. வைஷ்ணவ வுலகிடம் கருணைகொண்டு உபவாஸத்தைக் கைவிடுவீராக" என்று அருளினர் நம்பி. திருக்கோட்டியூர் நம்பியின் ஆணைப்படியே அறிவுள்ளவரான ராமாநுஜரும் கிடாம்பி யாச்சானல் சமைக்கப்பெற்ற உணவையே உண்டுவந்தார்.

### விஷதீர்த்தமளித்தல்

22*-*26. அதற்குப்பின் ஒருநாள் எம்பெருமானிடம் பொங்கும் பரிவாலே யதிராஜர் அரங்கநகரப்பனை மங்களா ஶாஸநம் செய்யவிரும்பித் தனியே எழுந்தருளினர். நல்ல சமயம் வாய்த்திருப்பதை உணர்ந்த கொடியவனை அந்த

२३. रङ्गराजस्य सेवार्थमेक एवाभ्यगान्मुदा।
तदन्तरं समालोक्य सोऽर्चको विषमिश्रितम्॥

२४. यतीन्द्रायादिशत्तीर्थं नृशंसस्तज्जिघांसया।
जानन्नपि स योगीन्द्रः तत्तीर्थमपिबन्मुदा॥

२५. हरौ न्यस्तभरः श्रीशे निर्भरो निश्चलो महान्।
शेषावतारे योगीन्द्रे हरिभक्ते जगद्गुरौ॥

२६. हरिपादोदकाक्रान्तं निर्वीर्यमभवत् विषम्।
एवं हि बहवः क्रूराश्चाभिचारादयः कृताः॥

२७. अर्चकैर्मरणोपायाः नृशंसैस्तज्जिघांसया।
यतीन्द्रतेजसैवाशु तत्सर्वं निहतं महत्॥

---

அர்ச்சகன், எம்பெருமானுரைக் கொல்லவிரும்பி, விஷங் கலந்த தீர்த்த₂த்தை அவருக்கு அளித்தான். விஷங்கலந் ததென அறிந்திருந்தும், பெரியவரான யதிராஜர் எமபெரு மானிடம் பொறுப்பை ஒப்படைத்து, தாம் விளைவில் பொறுப்பேற்காதவராய், உறுதிகொண்டவராய், அந்தத் தீர்த்த₂த்தை உகப்புடன் பருகினுர். ஆதி₃ஶேஷனின் அவதாரமாய், யோகி₃யர் தலைவராய், விஷ்ணுப₄க்தராய், லோகாசார்யரான அவர் விஷயத்தில், எம்பெருமானுடைய ஸ்ரீபாத₃தீர்த்த₂த்தோடு கலந்திருந்த அந்த விஷம் வீர்ய மற்றதாயிற்று.

## எம்பெருமானுரின் கருணை

26*-30. இவ்வண்ணமாக எம்பெருமானுரை அழிக்க வேண்டுமென்று அபி₄சாரம் (பில்லி சூனியம் முதலியவை) முதலிய பல கொடிய செயல்கள் கொடிய அர்ச்சகர்களால் செய்யப்பட்டன. வஸிஷ்ட₂ருடைய ப்₃ரஹ்மத₃ண்ட₃த்தால் விஶ்வாமித்ரருடைய பெரிய ஸேனை அழிக்கப்பட்டதுபோல், அவையனைத்தும் யதிராஜரின் தேஜஸ்ஸாலேயே உடனுக்குடன் அழிக்கப்பட்டன.

२८. वसिष्ठब्रह्मदण्डेन विश्वामित्रबलं यथा।
तत्रस्तैर्भग्नसङ्कल्पैः श्रीमानाराधितोऽर्चकैः॥

२९. यतिराजस्स तान् सर्वान् कृपया पर्यपालयत्।
ततो नैपुण्यवशतो मित्रोदासीनशात्रवान्॥
स्वशेषभूतांस्तान् सर्वान् कृत्वा जगदपालयत्॥

३०. दिगन्तकीर्तिर्यतिसार्वभौमो ह्यासेतुशीताचलभूमिभागे।
जितारिवर्गस्सुतरां विरेजे महेन्द्रवत्सर्वबुधैस्सुसेव्यः॥

इति श्रीप्रपन्नामृते रामानुजचरित्रे यतीन्द्रविषपानादिप्रदानं
नाम चतुर्विंशोऽध्यायः॥

---

முயற்சிகள் வீணானதால் ப4யமடைந்த அர்ச்சகர்களால் அரங்கன் ஆராதி4க்கப்பட்டான். யதிராஜரும் அவர்கள் அனைவரையும் தம் கருணையாலே ரக்ஷித்தார். அதற்குப் பின் தம் திறமையால், நண்பர், எதிரிகள், உதா3ஸீநர் என்னும் மூவகைப்பட்ட அவர்கள் அனைவரையும் தமக்கு ஆளாக்கி உலகை வாழ்வித்தருளினார் எதிராஜர். அறிவாளிகள் அனைவராலும் நன்கு ஸேவிக்கப்படும் யதி சக்ரவர்த்தியானவர் (தேவர்கள் அனைவராலும் நன்கு ஸேவிக்கப்படும்) தேவேந்திரனைப்போலே, ஸேதுமுதல் ஹிமாசலம் வரையிலான உலகெங்கும் திக்குநிறை புகழாளராய், எதிரிகளை வென்றிகொண்டவராய் மிகவும் விளங்கினார்.

ஸ்ரீ ப்ரபந்நாம்ருதத்தில், ராமாநுஜசரித்திரத்தில்
யதிராஜர்க்கு விஷங்கலந்த அந்நபானங்களையளித்தலாகிற
இருபத்துநாலாம் அத்தியாயம் நிறைவுபெற்றது.

## पञ्चविंशोऽध्यायः

१. ततो विद्वान् महान् कश्चित् यज्ञमूर्तिरिति श्रुतः।
गत्वा भागीरथीतीरं जित्वा सर्वविपश्चितः॥

२. लब्ध्वा तत्र च संन्यासं मायावादमते स्थितः।
शिष्यविद्यादिसंपद्भिः संयुक्तोऽप्रतिवैभवः॥

३. स श्रुत्वा यतिराजस्य वैभवं वैष्णवप्रभुम्।
जेतुकामो लक्ष्मणार्यं यज्ञमूर्तिः स तं जवात्॥

४. शास्त्राणि लेखयित्वाऽथ पुस्तकेषु बहूनि च।
तत्पुस्तकसहस्राणि निधाय शकटे मुदा॥

५. विद्यागर्वेण महता शिष्यसङ्घैः समावृतः।
आसाद्य रङ्गनगरं लक्ष्मणार्यं तमब्रवीत्॥

---

## இருபத்தைந்தாம் அத்தியாயம்

# யஜ்ஞமூர்த்தியை ஜயித்தல்

### யஜ்ஞமூர்த்தியின் கல்விச்செருக்கு

1-*10. அக்காலத்தில், மாயாவாத₃ (அத்₃வைத) மதத்தைச் சேர்ந்த யஜ்ஞமூர்த்தி என்னும் புகழ்பெற்ற மஹா வித்₃வான் ஒருவன் கங்கைக்கரைக்குச் சென்று, அங்குள்ள எல்லா வித்₃வான்களையும் ஜயித்து, அங்கேயே (ஏகத₃ண்ட₃) ஸந்யாஸாஶ்ரமத்தையும் ஏற்றுக்கொண்டு, சிஷ்யச் செல்வம், கல்விச்செல்வம் முதலானவற்ருேடு கூடியவனுய், ஒப்பற்ற பெருமையை உடையவனுய் வாழ்ந்து வந்தான். அவன் யதிராஜருடைய பெருமையைப்பற்றிக் கேள்விப் பட்டு, வைஷ்ணவர் தலைவரான அவ்விராமாநுசரை ஜயிப்பதற்காக, சுவடிகளில் பல சாஸ்திர நூல்களை எழுதி, ஆயிரக்கணக்கான அச்சுவடிகளை ஓர் வண்டியில் கட்டி எடுத்துப்போட்டுக்கொண்டு, தன் வித்₃யாக₃ர்வமெல்லாம்

६. रामानुज मया सार्धं शास्त्रवादं कुरु स्वयम्।
यज्ञमूर्तेर्वचः श्रुत्वा लक्ष्मणार्यस्तमब्रवीत्॥
७. मया यदि जितो वादे का शिक्षा तव तां वद।
तेनैवमुक्तस्तं प्राह यज्ञमूर्तिर्यतीश्वरम्॥
८. अहं त्वया यदि जितस्त्वन्मते संप्रविश्य च।
शिरसा पादुके धृत्वा नामधेयं वहामि ते॥
९. एवं त्वं लक्ष्मणाचार्य यज्जितश्चेन्मयाऽधुना।
तच्छ्रुत्वा लक्ष्मणाचार्यो यज्ञमूर्तिं जगाद तम्॥
१०. यदि त्वया जितो विद्वन् ग्रन्थत्यागं करोम्यहम्।
एवं कृतप्रतिज्ञौ तौ यज्ञमूर्तियतीश्वरौ॥

---

தோற்றப் பெரிய மதிப்போடு சிஷ்யஸமூஹத்தால் சூழப் பெற்றவனாய், மிக வேக₃மாக ஸ்ரீரங்க₃நக₃ரத்திற்கு வந்து ஸ்ரீராமாநுஜரைப்பார்த்து, "ராமாநுஜரே! என்னோடு நீர் நேரே ஶாஸ்த்ரதர்க்கம் புரியவேணும்" என்று கூறினான். யஜ்ஞமூர்த்தியின் வார்த்தையைக்கேட்ட ஸ்ரீராமாநுஜரும், "என்னால் நீர் வாத₃த்தில் ஜயிக்கப்பட்டீரானால் நீர் என்ன த₃ண்ட₃னையை ஏற்கிறீர்? அதை முதலில் சொல்லும்" என்று கேட்டார். இப்படி யதிராஜரால் கேட்கப்பட்ட யஜ்ஞமூர்த்தியும், "ராமாநுஜரே! உம்மால் ஜயிக்கப்பட்டால், உமது மதத்தைத் தழுவி, என்தலையில் உமது பாதுகைகளைத் தாங்கி, உமது பெயரையே எனக்குப் பெயராகக் கொள்கிறேன்; அதுபோலே நீர் இப்போது என்னால் ஜயிக்கப்பட்டால் என்ன செய்வீர் என்பதைச் சொல்லும்" என்று யதிராஜரிடம் கேட்டான். அதுகேட்ட ஸ்ரீராமாநுஜர் "வித்₃வானே! உம்மால் நான் ஜயிக்கப்பட்டால் நான் எழுதியுள்ள க்₃ரந்த₂ங்களைக் கைவிட்டுவிடுகிறேன். இனி எந்த நூலும் எழுதவும் மாட்டேன்" என்று யஜ்ஞமூர்த்தியிடம் கூறினார்.

११. अष्टादशदिनं कृत्वा शास्त्रवादावधिं तदा ।
दर्शयन्तौ स्वसामर्थ्यं शास्त्रेषु विगतक्रमौ ॥

१२. सिंहाविव विनर्दन्तौ वने मत्तगजाविव ।
वादं चक्रतुरन्योन्यं परस्परजयैषिणौ ॥

१३. दिने सप्तदशे तत्र यज्ञमूर्तेः कुयुक्तिभिः ।
सुष्ठूक्तयो यतीन्द्रस्य बाधिता इव ताः स्थिताः ॥

१४. यज्ञमूर्तिः स सन्तुष्टः तदा स्वमठमाविशत् ।
ततः स्वमठमाविश्य लक्ष्मणार्यो विचक्षणः ॥

---

## யஜ்ஞமூர்த்தியோடு வாதப்போர்

10*-*14. இவ்வண்ணமாக அப்போது ப்ரதிஜ்ஞை செய்துகொண்ட யஜ்ஞமூர்த்தியும், யதிராஜருமாகிற அவ் விருவரும், தமது ஶாஸ்த்ரவாதப்போருக்குப் பதினெட்டு நாட்களை மேலெல்லையாக நிர்ணயித்துக்கொண்டு, ஶாஸ்த் ரங்களில் தம் திறமையனைத்தையும் காட்டிக்கொண்டு, காட்டில் விஶேஷமாக ஸஞ்சரிக்கும் இரண்டு ஸிம்ஹங்கள் போலே கர்ஜிப்பவர்களாய், ஒருவரையொருவர் ஜயிக்க விரும்பி, மதங்கொண்ட யானைகளைப்போலே ஒருவரோ டொருவர் (பதினாறுநாட்கள் வெற்றிதோல்வியில்லாமல்) வாதப்போர் புரிந்தனர். பதினேழாவது நாளன்று யஜ்ஞ மூர்த்தியின் விதண்டாவாதங்களாலே, யதிராஜருடைய நேர்மையான வாதங்கள் தள்ளப்பட்டனபோலத் தோற்ற மளித்தன. மிகவும் உகப்படைந்த யஜ்ஞமூர்த்தியும் அன்று வாதம் முடிந்தவுடன் தன் மடத்திற்குச் சென்றான்.

## யதிராஜரின் மனவருத்தம்

14*-21. அதற்குப்பின் தமது மடத்திற்குச் சென்ற ஸமர்த்தரான அந்த ராமாநுஜர் நெஞ்சு கலங்கியவராய், மாலையில் செய்யவேண்டிய ஸ்நாநம் முதலான நற்கருமங்

१५. स व्याकुलान्तःकरणः कृतस्नानादिसत्क्रियः ।
आराधनीयं तं देवमाराध्य वरदं हरिम् ॥

१६. परिक्रम्य प्रणम्याह भगवन्तं कृताञ्जलिः ।
मम विज्ञापनं स्वामिन्! शृणुष्व करुणाकर! ॥

१७. बहुकालादनुस्यूतवादं वैष्णवदर्शनम् ।
श्रीपराङ्कुशनाथादिकालेषु पुरुषोत्तम! ॥

१८. कुत्राप्यव्याहतं देव त्वया सम्यक् प्रवर्तितम् ।
मम काले जगन्नाथ! तद्व्याहतमिव स्थितम् ॥

१९. त्वमेतत्कालपर्यन्तं त्वत्स्वरूपगुणादयः ।
सत्या इति प्रमाणानां वर्तनं कृतवानसि ॥

२०. इदानीं कश्चिदादाय मृषावादिनमादरात् ।
मम काले प्रमाणानि तान्यद्योपरतानि च ॥

---

களைச் செய்துமுடித்து, ஆராதி₄க்கத் தக்கவரான தமது
திருவாராத₄னப் பெருமாளான வரத₃ராஜப்பெருமாளை
ஆராதி₄த்து, ப்ரத₃க்ஷிண நமஸ்காரங்களைச் செய்து,
கைகூப்பியவராய்ப் பின்வருமாறு விண்ணப்பித்தார், —
"பேரருளாளப்பெருமாளே! அடியேன் செய்யும் இவ்
விண்ணப்பத்தைக் கேட்டருளவேணும். புருஷோத்தமனே!
நெடுங்காலமாக இந்த வைஷ்ணவ த₃ர்ஶனம் தோல்வி
யுறாமல் தொடர்ந்துவருகிறது. நம்மாழ்வார், நாத₂முனிகள்,
ஆளவந்தார் காலங்களில் எங்கும் எப்போதும் தோல்வி
யடையாதபடி இந்த மதம் தே₃வரீரால் நன்கு நடத்தப்
பட்டுவருகிறது. ஜக₃ந்நாத₂னே! அடியேன் காலத்தில்
அது தோல்வியடைந்துவிடும்போலிருக்கிறதே! இதுவரை
யில் தேவரீருடைய ஸ்வரூபம், ரூபம், கு₃ணம் முதலியவை
உண்மை என்று விளங்கும்படி ப்ரமாணங்களை தேவரீர்
நடத்திக்கொண்டுபோந்தீர். இப்போது என்காலத்தில் ஒரு

२१. तेन कारयितुं तेऽद्य सङ्कल्पः समजायत।
तथा कुर्विति विज्ञाप्य शेते साकृतभोजनः॥

२२. स्वप्ने प्रसन्नो भगवान् देवो वै यतिभूपतेः।
हरिः प्रोवाच तमिदं लक्ष्मणार्यं कृपानिधिः॥

२३. विषादं मा गमस्तात! समर्थो यतिशेखर!।
दत्तः शिष्यो मया तेऽद्य यत्नात्संपादितो महान्॥

१४. भारते परमाचार्ययामुनार्यकृतं महत्।
निर्दुष्टं वर्तते लोके मायावादस्य खण्डनम्॥

२५. तेन तं त्वं जयस्वाशु यज्ञमूर्तिं यतीश्वर।
यतिराजः संप्रहृष्टो हरिर्हरिरितीरयन्॥

---

பொய்வாதி3யை உகப்போடு கைக்கொண்டு அந்த ப்ரமாணங்களையே அழிக்கத் திருவுள்ளம்பற்றிவிட்டீராகில், அப்படியே செய்யும்" என்று விண்ணப்பித்து, உணவு கொள்ளாமல் உறங்கச் சென்றுவிட்டார் யதிராஜர்.

## பேரருளாளனின் பேரருள்

22-*27. யதிராஜர் உறங்கும்போது கனவில் தோன்றிய கருணைக்கடலான வரத3ராஜப்பெருமாள், "குழந்தாய்! வருந்தாதே! யதிராஜரே! நீர் வல்லவரன்றோ. மிகமுயன்று ஸம்பாதி3க்கப்பட்ட ஒரு பெரிய அறிவாளியை உமக்கு சிஷ்யனாக அளித்திருக்கிறேன். உமது பரமாசார்யரான ஆளவந்தாரால் இயற்றப்பெற்ற மாயாவாத3 க2ண்ட3னம் பெரும்புகழ்பெற்றதாகவும், குற்றமற்றதாகவும் பா4ரததே3ஶமெங்கும் பரவி விளங்குகிறது. யதிராஜரே! அதைக்கொண்டு நீர் யஜ்ஞமூர்த்தியை ஜயிப்பீர்" என்று ஸ்ரீராமாநுஜரிடம் கூறியருளினார். யதிராஜர் மிகவுகந்தவராய், "ஹரிர்ஹரி:" என்று ஹரிநாமஸ்மரணம் செய்து

२६. स्वप्नादुत्थाय सहसा परं विस्मयमागतः ।
कृतनित्यक्रियो धीमान् स्वप्नोक्तिं हृदि भावयन् ॥

*२७. ववन्दे चरणौ तस्य देवराजस्य भक्तिमान् ।

२७*. ततो यतीन्द्रः सह शिष्यसङ्घैः तद्वादगोष्ठीं विदुषां वरिष्ठः ।
तं यज्ञमूर्तिं सहसा विजेतुं प्रसन्नगंभीरमनाः प्रतस्थे ॥

२८. ततस्सभायां तमतिप्रहृष्टं स यज्ञमूर्तिर्यतिसार्वभौमम् ।
प्रवृद्धसत्त्वं गजराजतुल्यं दृष्ट्वा तदा विस्मितमानसोऽभूत् ॥

२९. यतो गतः पूर्वदिने यतीश्वरो भृशं विषण्णः सहसा स्वमालयम् ।
स चातिगंभीरगजेन्द्रवद्भृशं प्रशस्यतेऽद्यायमिति व्यचिन्तयत् ॥

---

கொண்டு சடக்கென உணர்ந்து மிகவும் ஆஶ்சர்யமடைந்தார். காலேக்கடன்களைச் செய்தபின், அறிவாளியான அவர், கனவில் எம்பெருமான் அருளியதை நெஞ்சிற்கொண்டு. ப₄க்தியோடு அந்த தே₃வராஜப்பெருமாளின் திருவடிகளை வணங்கினர்.

### யஜ்ஞமூர்த்தி ஆஶ்ரயித்தல்

27*-*34. அதற்குப்பின், அறிவாளிகளிற் சிறந்த யதிராஜர், தெளிந்து ஆழ்ந்த நெஞ்சையுடையவராய், யஜ்ஞமூர்த்தியை உடனே வெற்றிகொள்வதற்காக, அந்த வாத₃ஸபை₄க்குப் புறப்பட்டார்; மிகுந்த உகப்புடன் கூடியவராய், மநோப₃லம் நிறைந்தவராய், க₃ஜேந்திரன் போன்றவரான அந்த யதிராஜரை வாத₃ஸபை₄யில் கண்ட யஜ்ஞமூர்த்தி,வியப்புற்ற நெஞ்சினனானான். "நேற்று மிகவருந்தியவராய்ச சடக்கெனத் தம் இருப்பிடம் சேர்ந்த இந்த யதிராஜர், இன்று அதிக₃ம்பீ₄ரமான க₃ஜேந்திரனைப்போல் விளங்குவதற்குக் காரணம் யாது?" என்று சிந்திக்கலுற்றான். அதுவரையில் மாயாவாத₃மதத்திலேயே ஊன்றியிருந்த

३०. दृष्ट्वैनं यतिभूपतिं भुवि हरेर्भागेन जातं तदा
मत्वा तं परिवृत्य पादकमलं धृत्वा च शीर्षे मुदा ।
सोऽयं मायिमतंकलग्रहृदयस्तद्यज्ञमूर्तिस्तदा
शिष्यत्वं समवाप तस्य यमिनां धुर्यस्य मान्याकृतेः ॥

३१. यज्ञमूर्तिं लक्ष्मणार्यस्तं दृष्ट्वा विस्मितोऽब्रवीत् ।
किमिदं यज्ञमूर्तेऽद्य किं वादं न करोषि च ॥

३२. तस्य तद्वचनं श्रुत्वा यतीन्द्रस्य महात्मनः ।
बद्धाञ्जलिर्यज्ञमूर्तिर्बभाषे तं यतीश्वरम् ॥

३३. भवतो भगवान्विष्णुः देवः प्रत्यक्षतां गतः ।
इदानीं तव विष्णोश्च को भेदोऽस्ति यतीश्वर! ।

३४. अतस्तवाग्रे गदितुं कथमर्हामि तद्वचः ।
तच्छ्रुत्वा लक्ष्मणाचार्यः सन्तुष्टः पुनरब्रवीत् ॥

---

அந்த யஜ்ஞமூர்த்தி, அப்படிச் சிந்தித்துக்கொண்டு யதிராஜரைப்பார்த்து, 'இவர் இவ்வுலகில் ஹரியின் அம்சாவதாரமாகப் பிறந்தவரே' என்று அறுதியிட்டு, அவரை ப்ரத3க்ஷிணம்பண்ணி, அவரது திருவடித்தாமரைகளை உகப்புடன் தன் தலையில் த4ரித்து, அனைவராலும் மதிக்கத்தக்க திருமேனியையுடைய அந்த யதிராஜர்க்கு அப்போதே சிஷ்யரானார். அந்த யஜ்ஞமூர்த்தியைக் கண்டு வியப்புற்ற யதிராஜர் "யஜ்ஞமூர்த்தியே! இது என்ன? ஏன் நீர் வாத3ம் செய்யவில்லை?" என்று கேட்டார். மஹாபுருஷரான யதிராஜருடைய அவ்வார்த்தையைக்கேட்ட யஜ்ஞமூர்த்தியும், கை கூப்பியவராய் யதிராஜரைப்பார்த்து, "யதிராஜரே! தேவரீர்க்கு ப4க3வான் விஷ்ணுவே ப்ரத்யக்ஷமாக ஸேவை ஸாதி3த்திருக்கிறார். இப்போது தே3வரீருக்கும் விஷ்ணுவுக்கும் வேற்றுமையில்லை; ஆகையால் தேவரீர் திருமுன்பே அடியேன் எப்படி வாத3ம் புரிவேன்?" என்று கூறினார்.

३५. त्वन्मायावादिसिद्धान्ते ब्रह्मणः प्रतिपादितम्।
निर्गुणत्वं प्रमाणानि तद्ब्रह्मणि भवन्ति हि॥

३६. सत्येवं गुणयुक्तानि वेदवाक्यानि सर्वशः।
अविद्ययाभिभूतस्य ब्रह्मणः सगुणात्मनः॥

३७. अतो निर्गुणवाक्यानां न विरोधो गुणश्रुतेः।
इति यत् त्वन्मतं विद्वन्! तन्न युक्तिसहं भवेत्॥

३८. यदि मां तत्कथमिति त्वं पृच्छसि वदामि ते।
ज्ञानरूपं परं ब्रह्म तन्निवर्त्यं मृषात्मकम्॥

---

### மாயாவாத₃மதத்தின் பொருந்தாமை

34*-*41. இதைக்கேட்ட ஸ்ரீராமானுஜர் உகப்படைந்தவராய், பின்வருமாறு கூறலுற்றார், — "பேரறிவாளரே! மாயாவாத₃ம் செய்யும் உமது மதத்தில் ப்₃ரஹ்மம் கு₃ணங்களற்றது என்று கூறப்பட்டது. 'நிர்க்கு₃ணம்' [ப்₃ரஹ்மம் கு₃ணமற்றது] என்று கூறும் வேத₃வாக்யங்கள் அவ்விஷயத்தில் (உங்களுக்கு) ப்ரமாணமாகின்றன. இப்படி ப்₃ரஹ்மம் நிர்க்கு₃ணமென்று தேறியவளவில், 'ப்₃ரஹ்மம் கு₃ணங்களையுடையது' என்று கூறும் வேத₃ வாக்யங்கள், அவித்₃யையினால் அடியோடு மறைக்கப்பட்ட ஸ்வரூபத்தையுடைய ஸகு₃ணப்₃ரஹ்மத்தைப் பற்றியவையே என் விளங்குகிறது என்றும், இக்காரணத்தால் 'ப்₃ரஹ்மம் கு₃ணமுடையது' என்று சொல்லும் ஸகு₃ண வாக்யங்களுக்கு 'ப்₃ரஹ்மம் கு₃ணமற்றது' என்று கூறும் நிர்க்கு₃ணவாக்யங்களோடு விரோத₄மில்லை என்றும் உங்கள் மதம் கூறுகிறது. இந்த மாயாவாத₃மதம் யுக்திகளுக்குப் பொருந்தாது. எப்படி? என்று என்னைக்கேட்பீராகில் கூறுகிறேன். ஜ்ஞாநரூபமான பரம்பொருளை, அந்த ஜ்ஞானத்தால் போக்கடிக்கத்தக்கதாய், பொய்யா

३९. अज्ञानं चेत्तिरस्कुर्यात् कः प्रभुस्तन्निवर्तने।
नाशाभावादविद्यायाः सा नित्या स्यान्महामते! ॥

४०. अविद्याब्रह्मणोस्सत्त्वे ब्रह्माद्वैतं कथं भवेत्।
अतोऽद्वैतगजो ह्यन्धो द्वैतपङ्के निमज्जति॥

४१. इत्यादियुक्तिं स तं चोक्त्वा सन्तुष्टोऽभूत् यतीश्वरः।
यज्ञमूर्तिश्चैकदण्डं दूरतोत्सार्य सत्वरम्॥

४२. प्रणम्य लक्ष्मणाचार्यं बद्धाञ्जलिपुटोऽब्रवीत्।
त्वया जितोऽहं योगीन्द्र! रक्ष मां शरणागतम्॥

४३. उपवीतत्रिदण्डादीन् दत्वाऽन्तेवासिनं कुरु।
यज्ञमूर्तेर्वचः श्रुत्वा यतीन्द्रः करुणाकरः॥

---

யிருப்பதான அஜ்ஞாநம் மறைக்குமாகில், அந்த அஜ்ஞானத்தை எது நீக்கமுடியும்? இவ்வண்ணமாக அஜ்ஞாநம் அழியாததாகிவிடுமாகையால், அது நித்யமான பொருளாகவே ஆகிவிடும். அவித்₃யை, ப்₃ரஹ்மம் என்னும் இருபொருள்கள் நித்யமாக ஸித்₃தி₄த்துவிட்டால் 'ப்₃ரஹ்மம் ஒன்றே உண்மை' என்னும் உங்கள் மதம் எப்படித்தேறும்? ஆகையால், கண்பார்வையிழந்த அத்₃வைத மதயானை த்₃வைதப் புதைசேற்றிலேயே சிக்கி மூழ்கிவிடும்." முதலான நல்ல வாத₃ங்களைக்கூறி யதிராஜர் உகப்படைந்தார்.

## யஜ்ஞமூர்த்தி த்ரித₃ண்டி₃யாதல்

41*-*52. யஜ்ஞமூர்த்தியும் ஏகத₃ண்ட₃த்தைச் சடக்கென தூரத்தில் எறிந்து, ஸ்ரீராமாநுஜரை வணங்கி, கைகூப்பியவராய், "யதிராஜரே! உம்மால் நான் ஜயிக்கப்பட்டேன். ஶரணமடைந்த என்னை ரக்ஷிப்பீர். யஜ்ஞோபவீதம் த்ரித₃ண்ட₃ம் முதலானவற்றை அளித்து என்னை உமது சீடனுக்குவீர்." என்று கூறினர். யஜ்ஞமூர்த்தியின் வாக்யத்தைக்கேட்ட கருணாநிதி₄யான யதிராஜர்

४४. यज्ञमूर्तिं पूर्णदृष्ट्या दृष्ट्वा वाचमभाषत।
विचारं मा कुरुष्वात्र तथैव क्रियते मया॥

४५. उपवीतशिखात्यागः त्वया पूर्वं कृतो द्विज।
प्रायश्चित्तं यदस्यास्ति शास्त्रे वक्ष्यामि तच्छृणु॥

४६. हीनो यज्ञोपवीतेन यदि स्यात् ज्ञानभिक्षुकः।
तस्य क्रिया निष्फलाः स्युः प्रायश्चित्तं विधीयते॥

४७. गायत्रीसहितानेव प्राजापत्यान् षडाचरेत्।
पुनःसंस्कारमाहृत्य धार्यं यज्ञोपवीतकम्॥

४८. एवमुक्त्वा ततस्तस्य त्यागस्य यतिपुङ्गवः।
प्रायश्चित्तं कारयित्वा तथा वै यज्ञमूर्तिना॥

४९. धारयित्वा ततस्तेन ब्रह्मसूत्रं शिखां च सः।
"प्रधार्यं तापसंस्कारं वैष्णवं मुनिभिः स्मृतम्॥

---

யஜ்ஞமூர்த்தியைப் பூர்ணமாகக் கடாக்ஷித்து, "அந்தணரே! நான் அப்படியே செய்கிறேன்; இவ்விஷயத்தில் கவலைப் படவேண்டாம். நீர் மாயாவாதி₃யாயிருந்தபோது யஜ்ஞோப வீதத்தையும், ஶிகை₂யையும் விட்டுவிட்டீர். அந்தப் பாபத்திற்கு ஶாஸ்திரத்தில் விதி₄க்கப்பட்டிருக்கும் ப்ராய ஶ்சித்தத்தைக் கேட்பீர். ஜ்ஞானத்தைத்தேடும் ஸந்யாஸி யஜ்ஞோபவீதத்தை இழந்தானாகில், அவனுடைய கர்மங்கள் பயனற்றவையாகிவிடும். அவனுக்குப் பின்வரும் ப்ராயஶ்சித்தம் விதி₄க்கப்படுகிறது,—'அவன் கா₃யத்ரியோடுகூடிய ஆறு ப்ராஜாபத்யங்களை அநுஷ்டி₂க்கவேண்டும். மறுபடியும் உபநயநஸம்ஸ்காரத்தைச்செய்து யஜ்ஞோபவீதத்தை தா₄ரிக்கவேண்டும்' என்று." என்று அருளினார். இவ் வண்ணம் அருளி, யஜ்ஞமூர்த்தியுடைய யஜ்ஞோபவீத ஶிகா₂த்யாக₃த்திற்கு அவரைக்கொண்டே ப்ராயஶ்சித்தத் தைச் செய்வித்து, யஜ்ஞோபவீதத்தையும், ஶிகை₂யை

५०. सर्वाश्रमेषु वसतां स्त्रीणां च द्विजसत्तम।"
इत्युक्तेन प्रकारेण यज्ञमूर्तेर्यतीश्वरः॥
५१. तापादिपञ्चसंस्कारान् कृत्वा लक्ष्मणदेशिकः।
उपवीतं त्रिदण्डं च पात्रं जलपवित्रकम्॥
५२. कौपीनं कटिसूत्रं च न त्याज्यं यावदायुषम्।
तं यज्ञमूर्तिमित्युक्त्वा हर्षेण महता तदा॥
५३. उपकारस्य मे स्वप्ने कृतस्य वरदेन च।
ज्ञानपुत्रस्य मे चास्य यज्ञमूर्तेरिदं मुदा॥
५४. तन्नामधेयं कर्तव्यमिति मत्वा स्वनाम च।
नामद्वयं समाहृत्य यज्ञमूर्तेर्यतीश्वरः॥

---

யும் த₄ரிக்கச்செய்து, "அந்தணர் தலைவரே! எல்லா ஆஶ்ரமங்களிலிருப்பவர்களுக்கும், ஸ்த்ரீகளுக்கும் முனிவர்களால் த₄ர்மஶாஸ்த்ரங்களில் விதி₄க்கப்பட்ட தாப ஸம்ஸ்காரம் த₄ரிக்கத்தக்கது." என்று த₄ர்மஶாஸ்த்ரங்களில் சொல்லப்பட்ட ரீதியில் யஜ்ஞமூர்த்திக்குத் தாபம், புண்ட்₃ரம், நாம, மந்த்ரம், யாக₃ம் எனும் ஐந்து ஸம்ஸ்காரங்களையும் செய்வித்து, 'உபவீதம், த்ரித₃ண்ட₃ம், கமண்ட₃லம், ஜலபவித்ரம், கௌபீநம், அரைநாண் ஆகியவை ஆயுளுள்ளவரையில் கைவிடத்தகாதவை' எனக் கூறினார்.

## அருளாளப்பெருமாள் எம்பெருமானார்

52*-64. யஜ்ஞமூர்த்தியிடம் இவ்வண்ணம் கூறி, பேரானந்தமுற்றவராய், 'வரத₃ராஜப்பெருமாள் ஸ்வப்னத்தில் எனக்குச்செய்த உபகாரத்திற்குக் கைம்மாருக, எனது ஞானபுத்திரரான (சிஷ்யரான) யஜ்ஞமூர்த்திக்கு அப்பெருமாளுடைய பெயர் உகப்புடன் வைக்கப்படவேண்டும்' என்று எண்ணி, பெருமாளுடைய 'அருளாளப்பெருமாள்'

५५. देवराड्देवमन्नाथ इति नाम चकार सः।
देवराजमुनिश्चेति नामान्तरमथाऽकरोत्॥

५६. ततस्तं शिष्यमादाय समीपं रङ्गभूपतेः।
प्रणामं कारयित्वाऽथ तेन लक्ष्मणदेशिकः॥

५७. तत्तीर्थशठकोपादीन् दापयित्वा तदर्चकैः।
ततस्स्वमठमाविश्य वरदस्य महात्मनः॥

५८. मुनिना देवराजेन कारयित्वा च वन्दनम्।
तमालोक्य प्रसन्नात्मा देवराजमुनेऽधुना॥

५९. भगवान् देवराजोऽयं त्वय्यनुग्रहकारकः।
इत्युक्त्वाथ समाराध्य वरदं भक्तवत्सलम्॥

---

என்னும் திருநாமத்தோடு, தமது 'எம்பெருமானார்' என்னும் நாமத்தையும் சேர்த்து, 'அருளாளப்பெருமாள் எம்பெருமானார்' என்னும் திருநாமத்தை யஜ்ஞமூர்த்திக்குச் சூட்டினார் எம்பெருமானார். 'தே₃வராஜமுனி' என்னும் மற்றொரு நாமத்தையும் அவருக்கு வைத்தார் யதிராஜர். அதற்குப்பின் அச்சீடரை அரங்கநகரப்பனுக்கு அருகில் அழைத்துச்சென்று, அப்பெருமானை வணங்கச் செய்து, அவனுடைய அர்ச்சகர்களைக்கொண்டு அவனுடைய ஸ்ரீ பாத₃தீர்த்த₂ஶட₂கோபங்கள் முதலானவற்றை அளிக்கச்செய்து, அதற்குப்பின் தன் மட₂த்திற்கு அழைத்துச்சென்று, தே₃வராஜமுனியை மஹாபுருஷனை வரத₃னை வணங்கச்செய்து, அம்முனிவரைக் குளிரக் கடாக்ஷித்து, "தே₃வராஜமுனிவரே! இந்த அருளாளப் பெருமாள் இப்போது உமக்கு அருள்புரியவிருக்கின்றார்" என்று அருளி, ப₄க்தவத்ஸலனை வரத₃னுக்குத் திருவாராத₄னம் ஸமர்ப்பித்து, யதிராஜர்தாமும் அமுதுசெய்தருளி, ஶேஷப்ரஸாத₃த்தையும், ஸ்ரீபாத₃தீர்த்த₂த்தையும் சீடரான அவருக்குக் கருணையோடு அளித்தார் எதிகட்

६०. यतिराजः स्वयं भुक्त्वा शिष्टान्नं पादयोर्जलम् ।
शिष्याय प्रददौ तस्मै कृपया यतिभूपतिः ॥

६१. देवराजमुनिर्भक्त्या तत्सर्वं संगृहीतवान् ।
भट्टनाथप्रबन्धादिचतुष्टयसहस्रकम् ॥

६२. सर्वं च द्राविडाम्नायं यावत्तत्त्वार्थसंपदम् ।
देवराजमुनिर्भक्त्या जग्राह यतिपुङ्गवात् ॥

६३. कूरेशदाशरथ्याद्यैः संवृतो यतिपुङ्गवः ।
देवराजेन मुनिना श्रीरङ्गे सुखमास्थितः ॥

६४. श्रीदेवराजस्य कृपावशेन निर्जित्य वादेन स यज्ञमूर्तिम् ।
व्यरोचतादित्य इवाद्वितीयः स्वतेजसाऽऽक्रान्ततमो यतीन्द्रः ॥

इति श्रीप्रपन्नामृते रामानुजचरित्रे यज्ञमूर्तिपराजयो नाम
पञ्चविंशोऽध्यायः ॥

---

கிறைவர். தே₃வராஜமுனிவரும் ப₄க்தியோடு அவை யனைத்தையும் ஏற்றுக்கொண்டார். பெரியாழ்வார் அருளிய திருப்பல்லாண்டு தொடக்கமான நாலாயிரம் தி₃வ்யப்ரப₃ந்த₄ப் பாசுரங்களாகிற தமிழ்வேத₃ம் முழுவதையும், அவற்றின் உண்மைப்பொருள்களாகிற பெருஞ்செல்வமனைத்தையும் தே₃வராஜமுனிவர் ப₄க்தியோடு யதிராஜரிடமிருந்து கற்றுணர்ந்தார். கூரத்தாழ்வான், முதலியாண்டான் முதலானோரோடும், தே₃வராஜமுனிவரோடும் கூடிய யதிராஜர் ஸ்ரீரங்க₃த்தில் ஸுக₂மாக எழுந்தருளியிருந்தார். அருளாளப்பெருமானுடைய கருணையினால் வாத₃த்தில் யஜ்ஞமூர்த்தியை ஜயித்து, தம் தேஜஸ்ஸால் அஞ்ஞான விருளனைத்தையும் வெற்றிகொண்ட ஸ்ரீராமாநுஜதி₃வாகரர் ஒப்பற்ற ஸூர்யன்போலே பிரகாசித்தார்.

ஸ்ரீ ப்ரபந்நாம்ருதத்தில், ராமாநுஜ சரித்திரத்தில்,
எம்பெருமானாரிடம் யஜ்ஞமூர்த்தி தோல்வியடைதலாகிற
இருபத்தைந்தாம் அத்தியாயம் நிறைவுபெற்றது.

## ॥ षड्विंशोऽध्यायः ॥

१. ततो विचिन्तयामास यतीन्द्रः करुणाकरः।
प्रज्ञया विद्यया वापि तेजसा यशसा श्रिया॥

२. मत्तोऽधिको न संदेहो यज्ञमूर्तिरयं महान्।
देवराजकटाक्षेण शिष्योऽभून्मम सांप्रतम्॥

३. वादेन जेतुं कः शक्तः तमिमं विबुधोत्तमम्।
उपर्युपरि वर्धन्ते युक्तयः शतशस्तथा॥

४. पर्वकाले समुद्रस्य यथा शीघ्रं महोर्मयः।
बृहस्पतेः फणीन्द्रस्य वाक्पतेश्चापि नास्ति हि॥

---

## இருபத்தாறும் அத்தியாயம்

## ஞானசார ப்ரமேயசாரமருளல்

### தே₃வராஜமுனிவரின் பெருமை

1-8. கருணைக்கடலான யதிராஜர், அதற்குப்பின் பின் வருமாறு சிந்திக்கலுற்றுர், — "அறிவாலும், கல்வியாலும், தேஜஸ்ஸாலும், புகழாலும், மற்றுமுண்டான அடக்கம் முதலான கு₃ணச்செல்வங்களாலும், மஹாபுருஷரான இந்த யஜ்ஞமூர்த்தி என்னைக்காட்டிலும் சிறந்தவர் என் பதில் ஐயமில்லை. அருளாளப்பெருமாளின் திருக்கண் ணேக்கிஞலேயே இவர் இப்போது எனக்கு சிஷ்யராகி யுள்ளார். பேரறிவாளர்களில் தலைவரான இவரை எவஞல் வாத₃த்தில் ஜயிக்கமுடியும்? பர்வகாலத்தில் (அமாவாஸ்யை அல்லது பௌர்ணமாவாஸ்யையில்) உடனுக்குடன் கடலில் எவ்வண்ணமாகப் பேரலைகள் கிளர்கின்றனவோ, அவ்வண்ணமாக இவரிடமிருந்து நூற்றுக்கணக்கான யுக்திகள் மேன்மேலே கிளர்ந்தெழுகின்றன. (தே₃வகு₃ரு வான) ப்₃ருஹஸ்பதி, ஆயிரம் நாவுபடைத்த) ஆதி₃சேஷன்,

५. वादेन जेतुं सामर्थ्यं यज्ञमूर्तिं महामतिम्।
तस्मादस्य पृथक् स्थानं उपकल्प्याञ्जसा महत्॥
६. महता वैभवेनैव प्रतिष्ठाप्यो महानयम्।
इत्येवं सम्यगालोच्य देवराजमुनेः पृथक्॥
७. मठं प्रकल्प्य सुमहत् बहुकक्ष्यासमावृतम्।
स तं निवेशयामास स्वतुल्यं वैभवेन च॥
८. देवराड्देवमन्नाथ इति नामद्वयं तदा।
रराज तुल्यं महसा यतीन्द्रकृतवैभवात्॥
९. ततस्तमखिलाचार्याः यतिराजं समाश्रिताः।
स भक्तग्रामपूर्णाख्यो यो महान् वैष्णवोत्तमः॥

---

ஸரஸ்வதீ நாயகனுகிற பிரமன் ஆகியவர்களுக்கும் பேரறிவாளரான இந்த யஜ்ஞமூர்த்தியை வாத₃த்தில் ஜயிக்க வல்லமையில்லை. ஆகையால், தனியானதொரு பெரிய மட₂த்தை அழகாகக் கட்டி, அதில் பெரிய வைப₄வத்தோடே வாழச்செய்யத்தக்கவர் இம்மஹாபுருஷர்'' என்று நன்கு ஆலோசித்து, பல அரங்குகளோடு கூடிய மிகப் பெரிய மட₂த்தைக் கட்டுவித்து, பெருமையிலே தன்னை யொத்த அவரை அம்மட₂த்திலே வாழச்செய்தார் யதிராஜர். அப்போதே தமது பெயரையும், வரத₃ராஜப் பெருமாளுடைய திருநாமத்தையும் சேர்த்து, "அருளாளப் பெருமாள் எம்பெருமானர்'' என்னும் திருநாமத்தையும் அவருக்குச் சூட்டினர். இவ்வண்ணமாக யதிராஜர் அளித்த பெருமைகளாலே, அவர் தேஜஸ்ஸாலே எம்பெருமானரை ஒத்தவராக விளங்கினர்.

## நால்வரை ஆஶ்ரயிப்பித்தல்

9-*14. இப்படிப்பட்ட பெருமையோடு எழுந்தருளியிருக்கும் யதிராஜரை நாலு திசைகளிலுமுள்ள எல்லா ஆசார்யர்களும் வந்து ஆஶ்ரயித்தார்கள்.

१०. मरुधुग्रामपूर्णश्च महाभागवतोत्तमः ।
अनन्तार्यश्च यज्ञेशः श्रुत्वा तद्वैभवं परम् ॥

११. समाश्रितुं लक्ष्मणार्यं एते चत्वार आगताः ।
चतुर्णां पञ्चसंस्कारान् वैष्णवानां यतीश्वरः ॥

१२. देवराजेन मुनिना तेषां कारितवांस्तदा ।
देवराजमुनिर्भीतः शिष्यांस्तान्वाक्यमब्रवीत् ॥

१३. इदं कार्यं मयेदानीं लक्ष्मणार्येण कारितम् ।
ग्रामटिट्टिभकण्ठाग्रबद्धतालफलं यथा ॥

१४. जानीध्वं यतिराजस्य पादमेव हि रक्षकम् ।
ततः श्रीरङ्गनगरं वैष्णवाः केचिदागताः ॥

---

அவருடைய இப்பெருமையைக் கேள்விப்பட்டு, வைஷ்ணவோத்தமரும் மஹாபுருஷருமான தொண்டனூர் நம்பியும், மஹாப₄ாக₃வதர்களில் தலைசிறந்தவரான மருதூர் நம்பியும், அநந்தாழ்வானும், யஜ்ஞேஶரும் (எச்சானும்) ஆகிய இந்நால்வரும் ஸ்ரீ ராமாநுஜரை ஆஶ்ரயிப்பதற்கு எழுந்தருளினார்கள். அந்த நாலு ஸ்ரீவைஷ்ணவர்களுக்கும் தே₃வராஜமுனிவரைக்கொண்டு பஞ்சஸம்ஸ்காரங்களைச் செய்வித்தருளினார் யதிராஜர். அப்போது ப₄யமடைந்த தே₃வராஜமுனிவர், “குருவியின் கழுத்திலே பனங்காயைக் கட்டினாற்போலே உடையவர் இக்காரியத்தை என்னைக் கொண்டு செய்வித்திருக்கிறார். நீங்கள் ‘எம்பெருமானார் திருவடிகளே தஞ்சம்’ என்றிருங்கள்” என்று அந்த ஶிஷ்யர்களிடம் வார்த்தை சொன்னார்.

## எம்பெருமானார் இருவரா ?

14*-*24. அக்காலத்தில் ஸ்ரீரங்க₃த்திற்குச் சில ஸ்ரீவைஷ்ணவர்கள் மேல்நாட்டிலிருந்து ஜக₃த்₃கு₃ருவான எம்பெருமானாரை ஸேவிப்பதற்காக எழுந்தருளினார்கள்.

१५. दिशः प्रतीच्याः सेवार्थं मन्नाथस्य जगद्गुरोः।
श्रीरङ्गपुरिवीथिस्थमपृच्छन् वैष्णवा जनाः॥

१६. मन्नाथस्य मठं कुत्र वदास्माकं हि सत्वरम्।
तेषां तद्वचनं श्रुत्वा जनस्तान् वाक्यमब्रवीत्॥

१७. मन्नाथस्य मठं कस्य यूयं पृच्छत वैष्णवाः।
प्रतिगृह्य वचस्तस्य वैष्णवास्ते तमब्रुवन्॥

१८. एक एव हि मन्नाथो लोकेऽप्रतिमवैभवः।
द्वितीयो न श्रुतोऽस्माभिः मन्नाथो हि कदाचन॥

१९. तेषां तद्वचनं श्रुत्वा स जनो वाक्यमब्रवीत्।
देवराड्देवमन्नाथ इति कश्चित्समागतः॥

२०. अत्र श्रीरङ्गनगरे वर्तते यतिपुङ्गवः।
तदाकर्ण्य वचस्तस्य वैष्णवास्तमथाऽब्रुवन्॥

---

அவ்வைஷ்ணவர்கள் திருவரங்கம் திருவீதியிலிருக்கும் ஒருவரைப்பார்த்து, "எம்பெருமானார் மடம் எங்கே உள்ளது? விரைவில் எங்களுக்குச் சொல்லுவீர்" என்று கேட்டனர். அதைக்கேட்ட அவர் "வைஷ்ணவர்களே! எந்த எம்பெருமானுருடைய மடத்தைக் கேட்கிறீர்கள்?" என்று பதில் கேள்விகேட்டார். இதைக்கேட்ட அந்த வைஷ்ணவர்கள், "உலகத்தில் ஒப்பற்ற புகழ்பெற்ற எம்பெருமானார் ஒருவரேயன்றோ இருக்கிறார்; இரண்டாவது எம்பெருமானாரைப் பற்றி நாங்கள் எப்போதும் கேள்விப்பட்டதில்லையே" என்று அவரிடம் கூறினர். அவர்களுடைய அவ்வார்த்தையைக் கேட்ட அவர் "அருளாளப்பெருமாள் எம்பெருமானார் என்னும் யதிஶ்ரேஷ்டர் ஒருவர் இங்கு வந்து இந்தத் திருவரங்கப்பெருநகரிலேயே வாழ்கிறார்" என்று பதில் கூறினர். அவருடைய அவ்வார்த்தையைக்கேட்ட அவ்வைஷ்ணவர்கள் "எவர் நமது வைஷ்ணவஸித்தாந்த ப்ர

२१. योऽस्मद्वैष्णवसिद्धान्तनिर्वोढा करुणाकरः।
रामानुज इति ख्यातो यो मन्नाथो जगद्गुरुः॥
२२. तमेवार्यं महात्मानं पृच्छामो वयमादरात्।
ततस्सन्दर्शयामास वैष्णवेभ्योऽञ्जसा मठम्॥
२३. स जनो लक्ष्मणार्यस्य तेभ्यो यतिपतेस्तदा।
देवराजमुनिः सम्यक् तद्वृत्तान्तं निशम्य सः॥
२४. प्रध्याकुलान्तःकरणो विषसाद महामनाः।
उन्मूल्य तरसा सर्वं दूरादुत्सृज्य तन्मठम्॥
२५. दृढं गृहीत्वा योगीन्द्रपदपङ्कजमञ्जसा।
एवं विज्ञापनं चक्रे देवराजमुनिर्गुरुम्॥

---

வர்த்தகராய், கருணைக்கு ஓர் கொள்கலமாய், ராமானுஜர் என்று பெயர்பெற்றவராய் ஜக₃த₃ாசார்யரான எம்பெருமானரோ, அந்த மஹாபுருஷரைப்பற்றியே நாங்கள் ஆர்வத்துடன் கேட்கிறோம்'' என்று பதில் கூறினர். அதைக்கேட்ட அவர், அவ்வைஷ்ணவர்களுக்கு—யதிராஜரான எம்பெருமானருடைய மட₂த்திற்குச்செல்லும் வழியை அப்போதே தெளிவாகக்காட்டினர். அருளாளப்பெருமாள் எம்பெருமானர் இப்பேச்சுவார்த்தையை (யாத்₃ருச்சி₂கமாக) முழுவதும் கேட்டு, நன்னெஞ்சினராகையாலே, (''எம்பெருமானருக்குப் போட்டியாகிவிட்டோமே'' என்று) மிகவும் கலங்கியவராய் வருத்தமுற்ருர்.

## அருளாளப்பெருமான் எம்பெருமானரின் ஆசார்யநிஷ்டை₂

24*-*35. அந்த தே₃வராஜமுனி அந்தத் தமது மட₂ம் முழுவதையும் அடியோடு உடனே இடித்துவிட்டு, அதை அடியோடு விட்டுவிலகி, (எம்பெருமானர் மட₂த்திற்குச் சென்று), யதிராஜருடைய திருவடித்தாமரைகளை உறுதி

२६. अयमात्मा यतिश्रेष्ठ! भगवन्मायया ऽऽवृतः।
लक्षेषु लक्ष्मणाचार्य! मूढश्चतुरशीतिषु॥

२७. भ्रमन्नानाविचित्रासु कृमिकीटादियोनिषु।
भूत्वा भूत्वा महद्दुःखमनुभूयानुभूय सः॥

२८. मृत्वा मृत्वा महाघोरान् नरकाननुभूय च।
केनचित्पुण्यलेशेन बहुकालादनन्तरम्॥

२९. घुणाक्षरलिपिन्यायात् इमं देहं समागतः।
एतादृशो ह्यहंकारयुक्तः शास्त्रविदुत्तमः॥

३०. सोऽहं ब्रह्मेति विज्ञानात् मूढोऽस्मिन् भवसागरे।
पतितः कृपयैवाद्य त्वया सम्यक् समुद्धृतः॥

---

யுடன் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு, "யதிராஜரான எம்பெருமானாரே! இவ்வாத்மாவானது எம்பெருமானுடைய (மூலப்ரக்ருதியாகிய) மாயையால் அநாதி₃காலமாக மறைக்கப்பட்டு அறிவிழந்ததாய், பலவித₄மாய், விசித்ரமான புழு, பூச்சி முதலான எண்பத்துநாலு லக்ஷம் யோனிகளில் மறுபடியும் மறுபடியும பிறந்து பிறந்து பெருந்துன்பத்தைத் தொடர்ந்து அநுப₄வித்து, இறந்து, இறந்து மிகக்கொடிய நரகங்களையும் அநுப₄வித்து, இப்படி அலைந்து நெடுங்காலங் கழித்துப் புழுக்குறித்து எழுத்தாமாபோலே யாத்₃ருச்சி₂கமாக நேர்ந்த ஏதோ ஒரு சிறு புண்ணியச்செயலாலே இந்த தே₃ஹத்தை அடைந்துள்ளது. இத்தகையவனாய் இந்த ஸம்ஸாரக்கடலில் வீழ்ந்திருந்த நான், இப்பிறவியில் பல ஶாஸ்த்ரங்கள் கற்றவர்களில் தலைவனாய், (அதனாலேயே) அஹங்காரமுள்ளவனாய், 'நானே ப்₃ரஹ்மம்' என்னும விபரீதஜ்ஞானத்தாலே அறிவுகெட்டிருந்தேன். இன்றே தேவரீருடைய கருணையால் (இக்கடலிலிருந்து) நன்கு தூக்கிவிடப்பட்டேன். மறுபடியும் நான் (அஹங்காரத்தால்) மயங்குவதற்காக அடியேனைத் தனி மட₂த்தில் வைத்துவிட்டீர். யதிராஜரே!

२१. योऽस्मद्वैष्णवसिद्धान्तनिर्वोढा करुणाकरः।
रामानुज इति ख्यातो यो मन्नाथो जगद्गुरुः॥
२२. तमेवार्यं महात्मानं पृच्छामो वयमादरात्।
ततस्सन्दर्शयामास वैष्णवेभ्योऽञ्जसा मठम्॥
२३. स जनो लक्ष्मणार्यस्य तेभ्यो यतिपतेस्तदा।
देवराजमुनिः सम्यक् तद्वृत्तान्तं निशम्य सः॥
२४. प्रव्याकुलान्तःकरणो विषसाद महामनाः।
उन्मूल्य तरसा सर्वं दूरादुत्सृज्य तन्मठम्॥
२५. दृढं गृहीत्वा योगीन्द्रपदपङ्कजमञ्जसा।
एवं विज्ञापनं चक्रे देवराजमुनिर्गुरुम्॥

---

வர்த்தகராய், கருணைக்கு ஓர் கொள்கலமாய், ராமானுஜர் என்று பெயர்பெற்றவராய் ஜக₃த்₃ஆசார்யரான எம்பெருமானரோ, அந்த மஹாபுருஷரைப்பற்றியே நாங்கள் ஆர்வத்துடன் கேட்கிறோம்" என்று பதில் கூறினர். அதைக்கேட்ட அவர், அவ்வைஷ்ணவர்களுக்கு—யதிராஜரான எம்பெருமானருடைய மட₂த்திற்குச்செல்லும் வழியை அப்போதே தெளிவாகக்காட்டினர். அருளாளப்பெருமாள் எம்பெருமானர் இப்பேச்சுவார்த்தையை (யாத்₃ருச்சி₂கமாக) முழுவதும் கேட்டு, நன்னெஞ்சினராகையாலே, ("எம்பெருமானருக்குப் போட்டியாகிவிட்டோமே" என்று) மிகவும் கலங்கியவராய் வருத்தமுற்றார்.

## அருளாளப்பெருமாள் எம்பெருமானரின் ஆசார்யநிஷ்டை₂

24*-*35. அந்த தே₃வராஜமுனி அந்தத் தமது மட₂ம் முழுவதையும் அடியோடு உடனே இடித்துவிட்டு, அதை அடியோடு விட்டுவிலகி, (எம்பெருமானர் மட₂த்திற்குச் சென்று), யதிராஜருடைய திருவடித்தாமரைகளை உறுதி

३७. आराधनक्रमेणैव त्वमेतेन दिने दिने।
अस्मद्वरदराजस्य कुरुष्वाराधनं मठे॥

३८. इदमेव हि कैङ्कर्यं आदेहपतनं तव।
इत्यादिश्य यतिश्रेष्ठो देवराजमुनिं तदा॥

३९. महात्मा सुप्रसन्नात्मा श्रीरङ्गे न्यवसत्सुखम्।
देवराजमुनीन्द्रश्च यतिराजाज्ञया तदा॥

४०. चकार लोकरक्षार्थं स्फुटं द्राविडभाषया।
प्रबन्धं ज्ञानसाराख्यं सर्वशास्त्रोपबृंहितम्॥

४१. अन्यं प्रमेयसाराख्यं सम्यगेतद्द्वयं बुधः।
गुरुरेवात्र शिष्यस्य परं दैवमिति ध्रुवम्॥

---

லோகாசார்யராய் கருணைக்கடலான யதிராஜர் "இந்தத் திருவாராத$_4$னமுறைப்படியே நமது மட$_2$த்தில் உள்ள வரத$_3$ராஜப்பெருமாளுக்கு தினந்தோறும் ஆராத$_4$னம் செய்வீர். ஶரீரம் விழும் வரையில் இதுவே உமக்குக் கைங்கர்யமாகும்." என்று தே$_3$வராஜமுனிவருக்கு நியமனம் செய்து, மஹாபுருஷராகவும், தெளிந்த நெஞ்சினராகவும் ஶ்ரீரங்க$_3$த்தில் ஸுக$_2$மாக வாழ்ந்துவந்தார்.

## ஞானசாரப்ரமேயசாரமருளல்

39*-45. அப்போது யதிராஜருடைய ஆஜ்ஞையினாலே பேரறிவாளரான தே$_3$வராஜ முனிவரும், உலகம் உய்வதற்காக எல்லா ஶாஸ்த்ரங்களின் ஸாரார்த்த$_2$ங்கள் நிறைந்த 'ஞானசாரம்' எனும் தெளிவான பிரப$_3$ந்த$_4$மும் 'ப்ரமேயசாரம்' எனும் மற்றொரு பிரப$_3$ந்த$_4$முமாகிய இரு பத்$_3$யக்$_3$ரந்த$_2$ங்களைத் தமிழ் ப$_4$ாஷையில் நன்கு இயற்றினார். "இவ்வுலகில் ஆசார்யனே சிஷ்யனுக்கு மேலான தெய்வமாவான் என்பது உறுதி; ஆசார்யனின் திருவடித்

४२. गुरुपादाब्जकैङ्कर्यं परमप्राप्यमेव हि।
गुरुं भगवतस्साक्षादवतारं विचिन्तयेत्॥

४३. इत्यादिकान्विशेषार्थानुक्तवान् शास्त्रवित्तमः।
देवराजमुनिर्भक्त्या यतीन्द्रपदपद्मयोः॥

४४. नित्यकैङ्कर्यनिरतः सुखं तस्थौ महायशाः।

४५. पृथक्स्थितिं तां स विहाय धीमान्
यतीन्द्रकैङ्कर्यपरोऽमलात्मा।
अशोभताऽऽद्योऽखिलवैष्णवानां
मध्ये तरूणामिव कल्पवृक्षः॥

इति श्रीप्रपन्नामृते रामानुजचरित्रे ज्ञानसारप्रमेयसारग्रन्थद्वयनिर्माणं नाम षड्विंशोऽध्यायः॥

---

தாமரையில் கைங்கர்யமே அவனுக்கு மேலான ப்ராப்ய மாகும். ஆசார்யனை எம்பெருமானுடைய நேர் அவதார மாக நினைக்கவேண்டும்" முதலான விஶேஷார்த்த₂ங்களை ஸகலஶாஸ்த்ரங்களையும் அறிந்தவர்களில் தலைவரான அவர் அந்நூல்களில் அறிவித்திருக்கிறார். அந்த தே₃வ ராஜமுனிவர் யதிராஜருடைய திருவடித்தாமரையில் அன் போடு தினந்தோறும் கைங்கர்யம் செய்வதில் ஈடுபட்ட வராய், பெரும்புகழாளராய் இனிது வாழ்ந்தார். குற்ற மற்றவராய், பேரறிவாளரான அவர் எம்பெருமானாரை விட்டுத் தனித்திருப்பதைக் கைவிட்டு, யதிராஜர்க்குக் கைங்கர்யம் செய்வதில் ஈடுபட்டவராய், மரங்களுக்கு நடுவே கற்பகமரம்போலே எல்லா வைஷ்ணவர்களிலும் தலைமைபெற்றவராய் விளங்கினார்.

ஸ்ரீ ப்ரபந்நாம்ருதத்தில், ராமாநுஜ சரித்திரத்தில், ஞானசாரப்ரமேயசாரங்களாகிற இருநூல்களை இயற்றுதலாகிற இருபத்தாறும் அத்தியாயம் நிறைவுபெற்றது.

सप्तविंशोऽध्यायः

१. सहस्रगीतेर्व्याख्यानं यतिराजस्ततो महान् ।
शिष्येभ्यो बोधयंस्तस्थौ विद्वद्गोष्ठीसमावृतः ॥

२. तत्रैकत्र स्थितः कस्यां गाथायामर्थ ईदृशः ।
वेङ्कटेशाय कैङ्कर्यं कर्तव्यं यावदायुषम् ॥

३. तदा यतीन्द्रस्तान् दृष्ट्वा वैष्णवानिदमब्रवीत् ।
महच्छ्रीवेङ्कटगिरौ वैष्णवाः पुष्पमण्टपे ॥

४. अनुकूलतया तस्य वेङ्कटेशस्य भक्तितः ।
महत् बृन्दावनं तत्र कृत्वा पुष्पवनैः सह ॥

५. नित्यं श्रीवेङ्कटेशाय नित्यं श्रीवत्सधारिणे ।
प्रदाता तुलसीदाम्नः को वास्त्यत्रार्चको महान् ॥

---

## இருபத்தேழாம அத்தியாயம்

# அஷ்டஸஹஸ்ரக்ராமத்தில் ஆராதனம்

### அநந்தாழ்வானுடைய புஷ்பகைங்கர்யம்

1-9. வித்வான்களின் கோஷ்டியால் சூழப்பெற்ற மஹாபுருஷரான யதிராஜர், சிஷ்யர்களுக்குத் திருவாய்மொழியின் அர்த்தத்தை அருளிச்செய்துவந்தார். அப்போது "**ஒழிவில் காலமெல்லாம்**" [திருவாய் 3-3] என்னும் திருவாய்மொழியில் "திருவேங்கடமுடையனுக்குக் காலமுள்ளதனையும் கைங்கர்யம் செய்யவேண்டும்" என்னும் அர்த்தப்ரஸ்தாவம் ஏற்பட்டது. அப்போது யதிராஜர் அந்தஸ்ரீவைஷ்ணவர்களைப்பார்த்து, "வைஷ்ணவர்களே! சிந்துபூமகிழும திருவேங்கடமாகிற புஷ்பமண்டபத்திலே, திருவேங்கடமுடையானுக்கு உகப்பாக அன்போடு பூத்தோட்டங்களோடுகூடிய பெரிய திருநந்தவனம அமைத்து, எப்போதும் ஸ்ரீவத்ஸத்தை தரித்தவனை திருவேங்கடமுடையானுக்கு எப்போதும் துளவமாலை ஸமர்ப்பித்துத் திருவாராதனம் செய்யவல்ல மஹாபுருஷர் இங்காரேனுமுண்டோ?" எனக் கேட்டார்.

६. निशम्य तस्य वचनं अनन्तार्यः समुत्थितः।
दासोऽहमधुनैवेदं करिष्यामि तवेरितम्॥
७. इत्युक्त्वा यतिराजाय वैष्णवः कृतवन्दनः।
वेङ्कटाचलमासाद्य नत्वा श्रीवेङ्कटेश्वरम्॥
८. तत्र वृन्दावनं कृत्वा वेङ्कटाद्रौ महायशाः।
तस्य रामानुज इति नामधेयं विधाय च॥
९. श्रीपुष्पतुलसीमालां वेङ्कटाचलवासिने।
अनन्तार्योऽर्पयंस्तस्थौ लक्ष्मणार्याज्ञया मुदा॥
१०. तच्छ्रुत्वा लक्ष्मणाचार्यः संतोषं परमं गतः।
शठारिसूक्तेर्व्याख्यानं त्रिवारमनुभूय सः॥

---

அவருடைய வார்த்தையைக்கேட்ட அனந்தாழ்வான் உடனே எழுந்து "அடியேன் இப்போதே தேவரீர் நியமனப் படி செய்கிறேன்". என்று கூறி யதிராஜரை வணங்கி நிய மனம் பெற்றுக்கொண்டு திருவேங்கடமலையை அடைந்து, திருவேங்கடமுடையானை வணங்கி, அத்திருமலையிலே பெரிய திருநந்த₃வனம் அமைத்து, அதற்கு 'ராமானுஜன்' என்று திருநாமம் சாத்தி, ஸ்ரீராமாநுஜருடைய ஆஜ்ஞைப் படி உகப்போடு திருமலையப்பனுக்குப் பூமாலைகளையும், துளவமாலைகளையும் ஸமர்ப்பித்துக்கொண்டு பெரும்புகழாள ராய் வாழ்ந்துவந்தார்.

## தி₃வ்யதே₃ஶயாத்திரை

10-*15 இதைக் கேள்விப்பட்ட ஸ்ரீராமாநுஜர் மிகவும் உகப்படைந்தார். திருவாய்மொழிக்கு மூன்று முறை வியாக்கியானம் அருளி அனுப₄வித்து, அரங்கநகரப்பனாலே அனுமதிக்கப்பெற்று, ஶிஷ்யர்களோடு கூடியவராய், அப்போதே திருவேங்கடமலையைக் காணச் சடக்கெனப்

## सप्तविंशोऽध्यायः

१. सहस्रगीतेर्व्याख्यानं यतिराजस्ततो महान् ।
शिष्येभ्यो बोधयंस्तस्थौ विद्वद्गोष्ठीसमावृतः ॥

२. तत्रैकत्र स्थितः कस्यां गाथायामर्थ ईदृशः ।
वेङ्कटेशाय कैङ्कर्यं कर्तव्यं यावदायुषम् ॥

३. तदा यतीन्द्रस्तान् दृष्ट्वा वैष्णवानिदमब्रवीत् ।
महच्छ्रीवेङ्कटगिरौ वैष्णवाः पुष्पमण्टपे ॥

४. अनुकूलतया तस्य वेङ्कटेशस्य भक्तितः ।
महत् बृन्दावनं तत्र कृत्वा पुष्पवनैः सह ॥

५. नित्यं श्रीवेङ्कटेशाय नित्यं श्रीवत्सधारिणे ।
प्रदाता तुलसीदाम्नः को वास्त्यत्रार्चको महान् ॥

---

## இருபத்தேழாம அத்தியாயம்

# அஷ்டஸஹஸ்ரக்$_3$ராமத்தில் ஆராத$_4$னம்

### அநந்தாழ்வானுடைய புஷ்பகைங்கர்யம்

1-9. வித்$_3$வான்களின் கோ$_3$ஷ்டி$_2$யால் சூழப்பெற்ற மஹாபுருஷரான யதிராஜர், சிஷ்யர்களுக்குத் திருவாய் மொழியின் அர்த்த$_2$த்தை அருளிச்செய்துவந்தார். அப்போது "**ஒழிவில் காலமெல்லாம்**"[திருவாய் 3-3] என்னும் திருவாய்மொழியில் "திருவேங்கடமுடையனுக்குக் காலமுள்ளதனையும் கைங்கர்யம் செய்யவேண்டும்" என்னும் அர்த்த$_2$ப்ரஸ்தாவம் ஏற்பட்டது. அப்போது யதிராஜர் அந்தஸ்ரீவைஷ்ணவர்களைப்பார்த்து, "வைஷ்ணவர்களே! சிந்துபூமகிழும திருவேங்கடமாகிற புஷ்பமண்டபத்திலே, திருவேங்கடமுடையானுக்கு உகப்பாக அன்போடு பூத்தோட்டங்களோடுகூடிய பெரிய திருநந்தவனம அமைத்து,எப்போதும் ஸ்ரீவத்ஸத்தை த$_4$ரித்தவனை திருவேங்கடமுடையானுக்கு எப்போதும் துளவமாலை ஸமர்ப்பித்துத் திருவாராத$_4$னம் செய்யவல்ல மஹாபுருஷர் இங்காரேனுமுண்டோ?" எனக் கேட்டார்.

१६. नेदानीं समयोऽस्माकं समीकर्तुमिदं स्थलम्।
इति मत्वाऽष्टसाहस्रग्रामं प्रति ययौ तदा॥

१७. तस्मिन्नष्टसहस्राख्यग्रामे विद्वज्जनावृते।
विद्येते यतिराजस्य शिष्यवर्यौ द्विजोत्तमौ॥

१८. वरदाचार्ययज्ञेशनामानौ लोकविश्रुतौ॥
§ कार्पासारामवरदो दरिद्रः शिष्ययोस्तयोः॥

---

**அஷ்டஸஹஸ்ரக்₃ராமத்தில் இரு சிஷ்யர்கள்**

15*-*19 அப்போது சைவர்களால் சித்ரகூடம் ஆக்ரமிக்கப் பட்டிருப்பதை விசாரித்து அறிந்த அவர், 'இந்த தி₃வ்யதே₃ஶத்தைப் பழையபடி ஆக்குவதற்கு (விஷ்ணுத்₃வேஷியான அரசன் ஆட்சி செலுத்தும்) இக்காலம் தக்கதல்ல' என்று நினைத்து, (அந்த ப்ராந்தத்திலுள்ள) * அஷ்டஸஹஸ்ர வகுப்பினர் வாழும் அஷ்டஸஹஸ்ர க்₃ராமத்தைக் குறித்துப் புறப்பட்டார். வித்₃வான்கள் நிறைந்த அவ்வூரில், 'வரத₃ாசார்யர்' என்றும் 'யஜ்ஞேஶர் (எச்சான்)' என்றும் பெயர் பெற்றவர்களாய், உலகம் நிறைந்த புகழுடையவர்களாய், யதிராஜருடைய சிஷ்யர்களான இரு அந்தணர்தலைவர்கள் வாழ்ந்துவந்தனர். அவ்விருவருள் § 'பருத்திக்கொல்லை அம்மாள்' என்று பெயர்பெற்ற வரத₃ாசார்யர் ஏழையாயிருந்தார். பேரறிவாளராய், கு₃ருப₄க்தியுடைய யஜ்ஞேஶரோ செல்வமுடையவராயிருந்தார்.

---

* வடமர், ப்₃ருஹச்சரணம்போலே, எண்ணாயிரம் குடியினர் கொண்ட 'அஷ்டஸஹஸ்ர வகுப்பு' என்பது அந்தணர்களில் ஒரு தனிப்பிரிவாயிருந்துவந்தது.

§ கார்ப்பாஸம் என்பது பருத்தி; ஆராமம் என்பது கொல்லை. வரத₃ாசார்யர் என்று பெயருள்ளவர்கள் 'அம்மாள்' எனப்படுவர். ஆகையால், எழுபத்துநாலு ஸிம்ஹாஸநாதி₄பதிகளில் ஒருவரான பருத்திக்கொல்லையம்மாளே கார்பாஸாராம வரத₃ாசார்யராவர்.

१९. यज्ञेशस्तु महाप्राज्ञो धनाढ्यो गुरुभक्तिमान् ।
धनाधिकस्य शिष्यस्य तेषामाराधनेच्छया ॥

२०. प्रथमं प्रेषयामास शिष्यौ रामानुजस्तदा ।
स्वस्यागमनवृत्तान्तं तस्मै शंसितुमादरात् ॥

२१. तौ गत्वा चाशु तं ग्रामं तस्मै सर्वं शशंसतुः ।
शिष्यैः समागतं ज्ञात्वा यतिराजं स वैष्णवः ॥

२२. अपूजयित्वा पूजार्हौ स्वगुरोराज्ञयाऽऽगतौ ।
अध्वश्रमपरिक्लिन्नौ तांबूलासनभोजनैः ॥

२३. रामानुजस्य पूजार्थं वस्तु संपादयन् स्थितः ।
शिष्यौ निराशौ प्रत्येत्य तद्वृत्तान्तं तमूचतुः ॥

२४. तमुपाकर्ण्य भगवान् तद्वृत्तान्तं निवृत्तधीः ।
तस्मिन् शिष्ये शिष्यजनैर्दरिद्रस्य सहानुगैः ॥

---

## யஜ்ஞேஶரின் செல்வச்செருக்கு

19*-23. (தம்முடன் கூடவந்த) ஸ்ரீ வைஷ்ணவர்களை ஆராதி₄ப்பதற்காக, செல்வம் நிறைந்த சிஷ்யரான யஜ்ஞேஶரைக்குறித்து இரு ஶிஷ்யர்களை முதலில் அனுப்பினார் ஸ்ரீராமானுஜர். அவர்களும் விரைவில் அவ்வூருக்குச் சென்று, யஜ்ஞேஶரிடம் எல்லாச் செய்தியையும் கூறினர். வைஷ்ணவரான அவரும் யதிராஜர் ஶிஷ்யர்களோடு எழுந்தருளியிருப்பதைக் கேள்விப்பட்டு, தம் ஆசார்யரின் நியமனத்தால் அங்கு வந்தவர்களாய், கௌ₃ரவிக்கத்தகக வர்களாய், வழிநடந்து களைத்தவர்களான அவ்விருவரையும் தாம்பூ₃லம், ஆஸனம், உணவு ஆகியவற்றை அளித்து கௌ₃ரவிக்காமல், ராமானுஜரை ஆராதி₄ப்பதற்காகப் பொருள்களைச் சேகரிப்பதில் ஈடுபட்டிருந்தார். ஆஶாப₄ங்க₃மடைந்த அவ்விரு ஶிஷ்யர்களும் திரும்பி வந்து எம்பெருமானாரிடம் அச்செய்தியைக் கூறினார்கள்.

१६. नेदानीं समयोऽस्माकं समीकर्तुमिदं स्थलम्।
इति मत्वाष्टसाहस्रग्रामं प्रति ययौ तदा॥

१७. तस्मिन्नष्टसहस्राख्यग्रामे विद्वज्जनावृते।
विद्येते यतिराजस्य शिष्यवर्यौ द्विजोत्तमौ॥

१८. वरदाचार्ययज्ञेशनामानौ लोकविश्रुतौ॥
§ कार्पासारामवरदो दरिद्रः शिष्ययोस्तयोः॥

---

### அஷ்டஸஹஸ்ரக்3ராமத்தில் இரு சிஷ்யர்கள்

15½-19 அப்போது சைவர்களால் சித்ரகூடம் ஆக்ர மிக்கப் பட்டிருப்பதை விசாரித்து அறிந்த அவர், 'இந்த தி3வ்யதே3ஶத்தைப் பழையபடி ஆக்குவதற்கு (விஷ்ணு த்3வேஷியான அரசன் ஆட்சி செலுத்தும்) இக்காலம் தக்கதல்ல' என்று நினைத்து, (அந்த ப்ராந்தத்திலுள்ள) * அஷ்டஸஹஸ்ர வகுப்பினர் வாழும் அஷ்டஸஹஸ்ர க்3ராமத்தைக் குறித்துப் புறப்பட்டார். வித்3வான்கள் நிறைந்த அவ்வூரில், 'வரத3ாசார்யர்' என்றும் 'யஜ்ஞேஶர் (எச்சான்)' என்றும் பெயர் பெற்றவர்களாய், உலகம் நிறைந்த புகழுடையவர்களாய், யதிராஜருடைய சிஷ்யர் களான இரு அந்தணர்தலைவர்கள் வாழ்ந்துவந்தனர். அவ்விருவருள் § 'பருத்திக்கொல்லை அம்மாள்' என்று பெயர்பெற்ற வரத3ாசார்யர் ஏழையாயிருந்தார். பேரறி வாளராய், கு3ருப4க்தியுடைய யஜ்ஞேஶரோ செல்வமுடைய வராயிருந்தார்.

---

* வடமர், ப்3ருஹச்சரணம்போலே, எண்ணாயிரம் குடியினர் கொண்ட 'அஷ்டஸஹஸ்ர வகுப்பு' என்பது அந்தணர்களில் ஒரு தனிப்பிரிவாயிருந்துவந்தது.

§ கார்ப்பாஸம் என்பது பருத்தி; ஆராமம் என்பது கொல்லை. வரத3ாசார்யர் என்று பெயருள்ளவர்கள் 'அம்மாள்' எனப்படுவர். ஆகையால், எழுபத்துநாலு ஸிம்ஹாஸநாதி4பதிகளில் ஒருவரான பருத்திக்கொல்லையம்மாளே கார்பாஸாராம வரத3ாசார்யராவர்.

१९. यज्ञेशस्तु महाप्राज्ञो धनाढ्यो गुरुभक्तिमान् ।
धनाधिकस्य शिष्यस्य तेषामाराधनेच्छया ॥

२०. प्रथमं प्रेषयामास शिष्यौ रामानुजस्तदा ।
स्वस्यागमनवृत्तान्तं तस्मै शंसितुमादरात् ॥

२१. तौ गत्वा चाशु तं ग्रामं तस्मै सर्वं शशंसतुः ।
शिष्यैः समागतं ज्ञात्वा यतिराजं स वैष्णवः ॥

२२. अपूजयित्वा पूजार्हौ स्वगुरोराज्ञयाऽऽगतौ ।
अध्वश्रमपरिक्लिन्नौ तांबूलासनभोजनैः ॥

२३. रामानुजस्य पूजार्थं वस्तु संपादयन् स्थितः ।
शिष्यौ निराशौ प्रत्येत्य तद्वृत्तान्तं तमूचतुः ॥

२४. तमुपाकर्ण्य भगवान् तद्वृत्तान्तं निवृत्तधीः ।
तस्मिन् शिष्ये शिष्यजनैर्दरिद्रस्य सहानुगैः ॥

---

## யஜ்ஞேஶரின் செல்வச்செருக்கு

19*-23. (தம்முடன் கூடவந்த) ஸ்ரீ வைஷ்ணவர்களை ஆராதி₄ப்பதற்காக, செல்வம் நிறைந்த சிஷ்யரான யஜ்ஞேஶரைக்குறித்து இரு ஶிஷ்யர்களை முதலில் அனுப்பினார் ஸ்ரீராமானுஜர். அவர்களும் விரைவில் அவ்வூருக்குச் சென்று, யஜ்ஞேஶரிடம் எல்லாச் செய்தியையும் கூறினர். வைஷ்ணவரான அவரும் யதிராஜர் ஶிஷ்யர்களோடு எழுந்தருளியிருப்பதைக் கேள்விப்பட்டு, தம் ஆசார்யரின் நியமனத்தால் அங்கு வந்தவர்களாய், கௌ₃ரவிக்கத்தகக வர்களாய், வழிநடந்து களைத்தவர்களான அவ்விருவரையும் தாம்பூ₃லம், ஆஸனம், உணவு ஆகியவற்றை அளித்து கௌ₃ரவிக்காமல், ராமானுஜரை ஆராதி₄ப்பதற்காகப் பொருள்களைச் சேகரிப்பதில் ஈடுபட்டிருந்தார். ஆஶாப₄ங்க₃மடைந்த அவ்விரு ஶிஷ்யர்களும் திரும்பி வந்து எம்பெருமானாரிடம் அச்செய்தியைக் கூறினார்கள்.

३६. तेषां विधातुमातिथ्यं मनश्चक्रे द्विजाङ्गना।
अस्माभिः किं कृतं पुण्यं किं तप्तं परमं तपः॥

३७. किं दानं चार्हते दत्तं सुमहत्पूर्वजन्मनि।
विष्णोर्भगवतस्साक्षादंशेन यतिशेखरः॥

३८. अवतीर्णोऽभवद्भूम्यां क्षेमाय जगतोऽधुना।
सन्निक्षिप्य कृपां मेऽद्य शिष्यैर्मद्गृहमागतः॥

३९. यतीश्वरो विशेषेण विष्णोरंशधरो महान्।
गुरुर्देवः परं ब्रह्म गुरुरेव परा गतिः॥

४०. शरीरमर्थं प्राणांश्च सद्गुरुभ्यो निवेदयेत्।
शरीरं वसु विज्ञानं वासो धान्यादिकानसून्॥

४१. गुर्वर्थं धारयेद्यस्तु स शिष्यो नेतरः स्मृतः।
इति श्रुतिपुराणेषु बहुशः प्रतिपादितम्॥

---

## பருத்திக்கொல்லை லக்ஷ்மியின் ஆசார்யநிஷ்டை2

35*-54. அவர்கள் அனைவர்க்கும் முறைப்படி அர்க்4யம் முதலானவற்றை அளித்து, அவர்களுக்கு அவ்வந்தணப் பெண்பிள்ளை விருந்துபடைக்க எண்ணங்கொண்டாள். "முற்பிறவியில் நாம் என்ன புண்ணியம் செய்தோம்? என்ன பெருந்தவம் புரிந்தோம்? நல்ல பாத்திரத்திற்கு என்ன பெருந்தா3னம் செய்தோம்? விஷ்ணுவினுடைய நேர் அம்ஶாவதாரமாக இப்புவியில் லோகக்ஷேமத்தின் பொருட்டு அவதரித்த மஹானான யதிராஜர் இப்போது என்னிடத்தில் பெருங்கருணைவைத்து, ஶிஷ்யர்களோடு என் வீட்டிற்கு வந்திருக்கிறார். 'கு3ருவே தே3வனான பரப்3ரஹ்மம்; கு3ருவே மேலான ப்ராப்யமாவார்'. 'உடல், பொருள், ஆவி ஆகியவற்றை நல்ல ஆசார்யனுக்கு ஸமர்ப்பிக்கவேண்டும்.' 'உடல், செல்வம், அறிவு வஸ்திரம், தா4ன்யம் முதலானவை, ப்ராணன் ஆகியவையனைத்தை

१९. यज्ञेशस्तु महाप्राज्ञो धनाढ्यो गुरुभक्तिमान् ।
धनाधिकस्य शिष्यस्य तेषामाराधनेच्छया ॥

२०. प्रथमं प्रेषयामास शिष्यौ रामानुजस्तदा ।
स्वस्यागमनवृत्तान्तं तस्मै शंसितुमादरात् ॥

२१. तौ गत्वा चाशु तं ग्रामं तस्मै सर्वं शशंसतुः ।
शिष्यैः समागतं ज्ञात्वा यतिराजं स वैष्णवः ॥

२२. अपूजयित्वा पूजार्हौ स्वगुरोराज्ञयाऽऽगतौ ।
अध्वश्रमपरिक्लिन्नौ तांबूलासनभोजनैः ॥

२३. रामानुजस्य पूजार्थं वस्तु संपादयन् स्थितः ।
शिष्यौ निराशौ प्रत्येत्य तद्वृत्तान्तं तमूचतुः ॥

२४. तमुपाकर्ण्य भगवान् तद्वृत्तान्तं निवृत्तधीः ।
तस्मिन् शिष्ये शिष्यजनैर्दरिद्रस्य सहानुगैः ॥

---

## யஜ்ஞேஶரின் செல்வச்செருக்கு

19*-23. (தம்முடன் கூடவந்த) ஸ்ரீ வைஷ்ணவர்களை ஆராதி₄ப்பதற்காக, செல்வம் நிறைந்த சிஷ்யரான யஜ்ஞேஶரைக்குறித்து இரு ஶிஷ்யர்களை முதலில் அனுப்பினார் ஸ்ரீராமானுஜர். அவர்களும் விரைவில் அவ்வூருக்குச் சென்று, யஜ்ஞேஶரிடம் எல்லாச் செய்தியையும் கூறினர். வைஷ்ணவரான அவரும் யதிராஜர் ஶிஷ்யர்களோடு எழுந்தருளியிருப்பதைக் கேள்விப்பட்டு, தம் ஆசார்யரின் நியமனத்தால் அங்கு வந்தவர்களாய், கௌ₃ரவிக்கத்தகக வர்களாய், வழிநடந்து களைத்தவர்களான அவ்விருவரையும் தாம்பூ₃லம், ஆஸனம், உணவு ஆகியவற்றை அளித்து கௌ₃ரவிக்காமல், ராமானுஜரை ஆராதி₄ப்பதற்காகப் பொருள்களைச் சேகரிப்பதில் ஈடுபட்டிருந்தார். ஆஶாப₄ங்க₃மடைந்த அவ்விரு ஶிஷ்யர்களும் திரும்பி வந்து எம்பெருமானாரிடம் அச்செய்தியைக் கூறினர்கள்.

४८. तदीयाराधनार्थाय जहार गुरुयत्नतः।
न दोषलेशस्तत्रापि तस्मान्मुक्तिप्रदोऽभवत्॥

४९. जन्तुः संसृतिचक्रस्थो भ्राम्यमाणः स्वकर्मभिः।
गुरुर्ज्ञानोपदेशेन तस्मै मुक्तिं प्रदास्यति॥

५०. तद्गुरोर्निष्क्रयं कर्तुं न शक्यं पुरुषायुषा।
तस्माद्देहं च विक्रीय कर्तव्यं गुरुपूजनम्॥

५१. मन्निमित्तकृतं पापमपि पुण्याय कल्पते।
मामनादृत्य पुण्यं चाप्यतिपापाय विद्यते॥

---

ஸமர்த்த₂ரான அவர், திருட்டுத்தொழிலே மேற்கொண்டவராய், பல திருடர்களைக் கூட்டிக்கொண்டு அடர்ந்த காட்டில் ஒளிந்திருந்து வழியை அடைத்து, அவ்வழியில் செல்லும் ஜனங்களுடைய பெருந்த₄னத்தை வழிப்பறி செய்து, ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு எப்போதும் ததீ₃யாராத₄னம் செய்தாரன்றே. முன்னொருநாள் பெருமுயற்சி செய்து ரங்க₃நாத₂னுடைய செல்வத்தையும் அவனடியாரை ஆராதி₄ப்பதற்காக வழிப்பறிக்கொள்ளையடித்தாரன்றே. அதனால் சிறிது குற்றமும் உண்டாகவில்லையே; அதைக்கண்டு அரங்கன் அவருக்கு முக்தியையேயன்றே அளித்தான். இந்த ஸம்ஸாரமாகிற சக்கரத்தில் தன் கர்மங்களால் சுழற்றுவிக்கப்படுகிறான் ஜீவன். நல்லறிவை உபதே₃ஶித்து அவனுக்கு ஆசார்யன் மோக்ஷத்தை அளிக்கிறான். ஒரு மனிதனுடைய ஆயுள் முழுவதும் முயன்றாலும் அவ்வாசார்யனுக்குக் கைம்மாறு செய்ய முடியாது. ஆகையால், உடலை விற்றுவது ஆசார்ய பூஜை செய்யப்படவேண்டும். "என்பொருட்டுச் செய்யப்பட்ட பாபமும் புண்யமாகும். என்னை அலட்சியம்செய்து புரிந்த புண்யமும் பெரும்பாபமாகும்." என்று எம்பெருமானே

५२. एवं भगवतैवोक्तं तत्तस्मादधिको गुरुः।
ग्रामेऽस्मिन् वैश्यजः कश्चित् धनाढ्यो मदनातुरः॥

५३. स मामाकाङ्क्षते नित्यं रूपयौवनशालिनीम्।
तस्याधीनमिदं कृत्वा शरीरं मलपूरितम्॥

५४. तस्माद्वित्तं समादाय देशिकाय महात्मने।
करोम्याराधनं तेषां वैष्णवानां च सत्वरम्॥

५५. मनस्येवं समालोच्य यतीश्वरमभाषत।
भवतः कृपयैवाद्य त्वदीयाराधनाय च॥

५६. स्वयमेवागमिष्यन्ति पदार्थाः सकला ध्रुवम्।
क्षणं विश्रम्यतां स्वामिन्नत्रैव सुसमाहितैः॥

---

அருளியிருக்கிருன். ஆகையால், ஆசார்யன் எம்பெருமானைக் காட்டிலும் சிறந்தவன். இந்த கிராமத்தில் வைஶ்யஜாதியில் பிறந்த ஒருவன் பணக்காரனுகவும் காமவசப்பட்டவனுகவும் வாழ்கிருன். அழகும், யௌவனமும் நிறைந்த என்னை அடைய எப்போதும் விரும்புகிருன் அவன். மலம் மூத்ரம் முதலானவை நிறைந்த இவ்வழுக் குடம்பை அவனுக்கு வசப்படுத்தி, அவனிடமிருந்து பணத்தைப்பெற்று, மஹாபுருஷரான ஆசார்யருக்கும், அவருடன் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கும் விரைவில் ஆராத₄னம் செய்யக்கடவேன் நான்" (என்று உறுதிபூண்டாள் பருத்திக்கொல்லை லக்ஷ்மி).

## லக்ஷ்மியும் வைஶ்யனும்

55-*65. இவ்வண்ணமாக உறுதிபூண்ட லக்ஷ்மி, யதிராஜரைப் பார்த்து, "ஐயா! தேவரீருடைய அருளாலே, உமது அடியார்களை ஆராதி₄ப்பதற்குரிய எல்லாப்பொருள்களும் தாமே இப்போதே நிஶ்சயமாக வந்துசேரும். கவலையில்லாமல் அடியார்களோடு இங்கேயே சிறிது

५७. ततो गुणवती साध्वी गता तद्गृहमञ्जसा।
संप्राप्य तमुवाचेदं मन्दस्मितमुखी सती॥

५८. श्रूयतामभिधास्यामि वचनं हितमात्मनः।
मनोरथो हि भवतः सफलोऽद्य भविष्यति॥

५९. अस्मद्गुरुः शिष्यसंघसमेतो मद्गृहागतः।
तदीयाराधनार्थाय सर्वद्रव्याणि सत्वरम्॥

६०. संप्रेषयाधुना शीघ्रं पात्राणि निखिलानि च।
दृष्ट्वा तामूरुजः साध्वीं वराङ्गीं मदनातुरः॥

६१. सन्तुष्टहृदयः श्रीमान् मनस्येवमचिन्तयत्।
आहूता या मया पूर्वं नागता नाभिभाषती॥

६२. प्रियाभरणवस्त्रादीन् प्रेषितांश्चाप्यगृह्णती।
सप्तकक्षानतिक्रम्य ममान्तः पुरमञ்जसा॥

---

நேரம் இளைப்பாறுவீர்" என்று விண்ணப்பித்தாள். நற்குணமுடையவளும், நல்லொழுக்கமுடையவளுமான அம்மங்கைநல்லாள் அப்போதே அந்த வைஶ்யனுடைய வீட்டிற்கு விரைவில் சென்றடைந்து, புன்முறுவல் கொண்டவளாய் அவனைக்குறித்துப் பின்வருமாறு பேசினாள், – "உமக்கு நல்வார்த்தை சொல்லுகிறேன் கேட்பீர். உமது நீண்டநாள் மநோரத₂ம் இன்று நிறைவேறப் போகிறது. ஶிஷ்யஸமூஹத்தோடு கூடியவராய் எமது ஆசார்யர் எம் வீட்டிற்கு வந்திருக்கிறார். அவர்களுடைய ஆராத₄னத்திற்காக எல்லா திரவியங்களையும், எல்லா சமையல் பாத்திரங்களையும் இப்போதே விரைவில் அனுப்புவீர்" என்று. அழகிய அம்மங்கையர்திலகத்தைப்பார்த்த அந்தப் பணக்கார வைஶ்யன் காமவஶப்பட்டவனாய்ப் பேரானந்த₃ங்கொண்டு, "ஏற்கனவே என்னால் அழைக்கப் பட்ட இவள் வந்ததுமில்லை; பேசியதுமில்லை. இனிய

६३. आगता सुस्मितमुखी सुन्दरी सा स्वयंवरा।
बहुकालाच्च बहुशः प्रार्थितो मे मनोरथः॥

६४. ध्रुवमस्मिन् दिने सम्यक् सफलः संभविष्यति।
एवं सञ्चिन्त्य बहुधा स्वपार्श्वस्थां मनोहराम्॥

६५. दृष्ट्वा गुणवतीं साध्वीमत्यन्तं मुदमाप सः।
ततस्संप्रेषयामास वरदार्यगृहं प्रति॥

६६. सूपतण्डुलशाकानि सर्वाणि विविधानि च।
पयोदधिघृताद्यानि तानि वेगेन सादरम्॥

६७. सा साध्वी यतिराजस्य सन्निधौ भक्तिसंयुता।
निधाय सर्ववस्तूनि तदा सा प्राञ्जलिः स्थिता॥

---

ஆப$_4$ரணங்கள், வஸ்த்ரம் முதலானவற்றை நான் அனுப்பிய போதும் அவற்றை ஏற்றதில்லை. அத்தகைய இவ்வழகி ஏழு கட்டுகளைத் தாண்டி,-என்னுடைய அந்த:புரத்திற்கே புன்முறுவலோடு தன்னிச்சையாக வந்துவிட்டாள். நெடுங் காலம் பலமுறை என்னால் (இவளிடம்) வெளிப்படுத்தப் பட்ட மநோரத$_2$ம் இன்று பரிபூர்ணமாக நிறைவேறப் போகிறது என்பது நிஶ்சயம்" என்று பலவாறு எண்ணி, தன் அருகிலிருப்பவளும், நெஞ்சையீர்ப்பவளும், நற்குண வதியும், நல்லவளுமான அவளைப்பார்த்துப் பேரானந்தங் கொண்டான் அந்த வைஶ்யன்.

## லக்ஷ்மியின் ததீ$_3$யாராத$_4$னம்

65*-71. அதற்குப்பின் அந்த வைஶ்யன் வரத$_3$ாசார்ய ரின் வீட்டிற்கு, அரிசி, பருப்பு, காய்கறிகள் முதலான பலவகைப் பொருள்களையும், பால், தயிர், நெய் முதலான வற்றையும் ஆர்வத்தோடு விரைவில் அனுப்பினன். அப் போது அந்தப் பதிவ்ரதாஶிரோமணியும், ப$_4$க்தியோடு கூடியவளாய் யதிராஜரின் திருமுன்பே எல்லாப்பொருள்

६८. रामानुजस्तदा दृष्ट्वा तानि वस्तूनि तां सतीम्।
प्रज्ञां शीलं च भक्तिं च ज्ञानं तस्या यतीश्वरः॥

६९. विस्मयाविष्टहृदयो बभाषे विनयोज्ज्वलाम्।

७०. स्नात्वा त्वमेवाशु कुरुष्व पाकं
आराधनार्थं वरदस्य विष्णोः।
इत्येवमुक्त्वा यतिराट् स्वशिष्यान्
नियोज्य तत्कर्मणि कांश्चिदार्यान्॥

७१. स्वयं विगाह्याशु धृतोर्ध्वपुण्ड्रः
विष्णुं समाराध्य स लक्ष्मणार्यः।
श्रीवैष्णवैर्वेदविदां वरिष्ठैः
साकं तदन्नं बुभुजे महात्मा॥

---

களையும் வைத்து, கைகூப்பியவளாய் நின்ருள். யதிராஜ ரான ராமாநுஜர் அந்த வஸ்துக்களையும் அந்தப் பதி வ்ரதையையும் கடாக்ஷித்து, அவளுடைய ஆசாரஜ்ஞானம், ஒழுக்கம், ப₄க்தி, ஶாஸ்த்ரஸாரஜ்ஞானம் ஆகியவற்றைக் கண்டு வியப்புற்ற நெஞ்சினராய், வினயத்தால் விளங்கா நிற்கும் அவளைக்குறித்து, "பேரருளாளனை எம்பெருமா னுடைய திருவாராத₄னத்தின்பொருட்டு, நீயே விரைவில் குளித்துச் சமையலைச் செய்வாய்" என்று நியமித்தார். இவ்வண்ணம் உரைத்தபின்பு, தமது சிஷ்யர்களான சில பெரியவர்களை சமையல் செய்யத் துணையாயிருக்கும்படி நியமித்தார். தாமும் விரைவில் நீராடி, ஊர்த்₄வபுண்ட்₃ரம் த₄ரித்தவராய், மஹாத்மாவான ஸ்ரீராமானுஜர் வரத₃னுக்கு (அவ்வன்னத்தைப்படைத்துத்) திருவாராத₄னம்செய்து, வேத₃ப்பொருளறிந்தவர்களில் சிறந்தவர்களான ஸ்ரீவைஷ்ணவர்களோடுகூட அவ்வன்னத்தை அமுது செய்தார். ப₄க்தியோடு அளிக்கப்பெற்றதாய், (அதனாலேயே) பரமபவித்ரமானதான அவ்வன்னத்தை அமுது

७२. भुक्त्वा तदन्नं परमं पवित्रं
भक्त्यार्पितं लक्ष्मणदेशिकेन्द्रः।
सुखोपविष्टोऽखिलभक्तसंघैः
मुमोद तत्रैव तयार्चितो हि॥

इति श्रीप्रपन्नामृते रामानुजचरित्रे अष्टसहस्राख्यग्रामे कार्पासारामवरदाचार्यगृहे रामानुजाराधनं नाम सप्तविंशोऽध्यायः॥

अष्टाविंशोऽध्यायः

१. ततः स तस्मिन् यतिराजचन्द्रे
सुखोपविष्टे परितुष्टचित्ते।
व्याख्यायमाने स्वजने महार्थान्
कृतोञ्छवृत्तिर्गृहमाजगाम॥

---

செய்த ஸ்ரீராமானுஜரான ஆசார்யஶ்ரேஷ்டர், அடியார்கள் அனைவரோடும் அங்கேயே இனிது எழுந்தருளியிருந்து, அம்மங்கைநல்லாளாலே உபசரிக்கப்பட்டு மிகவுகந்தார்.

ஸ்ரீ ப்ரபந்நாம்ருதத்தில், ராமானுஜ சரித்திரத்தில், அஷ்டஸஹஸ்ரக்ராமத்தில் பருத்திக் கொல்லையம்மாளின் வீட்டில் ராமானுஜாசார்யருக்கு நடந்த ஆராதனத்தை விளக்கும் இருபத்தேழாம் அத்தியாயம் நிறைவுபெற்றது.

## இருபத்தெட்டாம் அத்தியாயம்

# வைச்யன் ஸ்ரீ வைஷ்ணவனுதல்

### வரதாசார்யரின் ஆனந்தம்

1-5. சந்திரன்போன்ற யதிராஜர் திருப்தியடைந்த நெஞ்சுடையவராய் அவ்வீட்டில் இனிது எழுந்தருளியிருந்து, தம் ஶிஷ்யர்களுக்கு அரும்பொருள்களை உபதேஶித்து வருகையில், உஞ்சவ்ருத்திசெய்துமுடித்த வரதாசார்யர் வீட்டிற்கு எழுந்தருளினார். மனைவியிடமிருந்து நடந்த

२. निशम्य वृत्तान्तमतीवसंभ्रमः
पत्न्यास्ततस्तत्सकलं स वैष्णवः ।
उवाच वाक्यं वरदार्यनामको
विलोक्य तृप्तं स्वगुरुं यतीश्वरम् ॥

३. बालाऽपि बुद्धिर्महती तवाबले
यया त्वयेदं महदद्भुतं कृतम् ।
भार्या न मे सुन्दरि देवता परा
मद्भाग्यलेशेन समागताधुना ॥

४. येन प्रकारेण शरीरमर्थं
प्राणान् परित्यज्य गुरोर्निमित्तात् ।
यो वै मुदा ह्यर्चति देशिकेन्द्रं
स एव शिष्यो गुरुवञ्चकोऽन्यथा ॥

५. येन केन प्रकारेण देशिकाय महात्मने ।
स्वशरीरार्थप्राणानामर्पणं सम्यगेव हि ॥

---

செய்தி முழுவதையும் அறிந்து மிகவும் பரபரப்படைந்தவராய், வைஷ்ணவரான அவ்வரத₃ாசார்யர், தமது ஆசார்யரான யதிராஜர் திருப்தியடைந்திருப்பதைக்கண்டு மனைவியிடம் பின்வருமாறு கூறினார்,—"அப₃லைப்பெண்ணே! நீ ப₃ாலையாயிருந்தபோதிலும் உன் அறிவு மிகப்பெரிதாயிருந்தது. உன்னால் பெரிய அற்புதம் நிகழ்த்தப்பெற்றுவிட்டது. அழகியவளே! நீ எனக்கு மனைவியல்லள்; நான் செய்த சிறிது ப₄ாக்₃யத்தால் என்னை இப்பிறவியில் அடைந்த பரதே₃வதையே நீ. எவனொருவன் ஆசார்யனுக்காக ஏதாவதொரு வழியில் உடலையும், செல்வத்தையும், உயிரையும் விட்டு அவ்வுத்தமரை ஆராதி₄க்கிறானோ, அவனே ஶிஷ்யன்; மற்றவன் ஆசார்யனை வஞ்சிப்பவனே. ஏதாவதொரு வழியில் தன் உடலையும், பொருளையும், உயிரையும்

௬. मानयित्वा बहुविधं तां साध्वीं वैष्णवोत्तमः।
जग्राह चरणौ तस्य लीलामानुषरूपिणः॥

௭. बद्धाञ्जलिः स्तुतिं चक्रे संहृष्टो यतिशेखरम्।
नमस्ते पुरुषश्रेष्ठ! यतीश्वर! नमो नमः॥

௮. हिताय लोकस्य चराचरस्य
तवावतारः किल लक्ष्मणार्य!।
यथावतारो जगतां हिताय
हरेश्च विष्णोर्जगदाश्रयस्य॥

௯. त्वं सर्ववित् सर्वविदां वरिष्ठः
साक्षात् हरेः संप्रतिपन्नरूपः।
तस्माच्च ते लक्ष्मणदेशिकेन्द्र!
कर्माणि चित्राणि विलक्षणानि॥

---

மஹாபுருஷரான ஆசார்யனின் பொருட்டு ஸமர்ப்பிப்பது நல்லதேயாகும்” என்று.

## யதிராஜ ஸ்துதி

6-16. நல்லொழுக்கமுடைய தமது மனைவியை, (இவ்வண்ணமாகப்) பலவாறு கொண்டாடி, அவ்வைஷ்ணவோத்தமர், விரும்பியே மனிதவுருவை ஏற்றுக்கொண்டிருக்கும் அந்த யதிராஜருடைய திருவடிகளைப் பிடித்துக்கொண்டார். கைகூப்பிநின்று மிகவுகந்தவராய், யதிராஜரைப் பின்வருமாறு துதித்தார் :— “புருஷர்களில் சிறந்தவரே! உமக்கு நமஸ்காரம்; யதீஶ்வரரே! உமக்குப் பலகால் நமஸ்காரம். ஸ்ரீ ராமாநுஜரே! ஸ்த₂ாவரஜங்க₃மங்களடங்கிய இவ்வுலகின் நன்மையின் பொருட்டே உமது அவதாரம் ஏற்பட்டுள்ளது. உலகிற்கு ஆத₄ாரமானவனாய், பாபங்களைப் போக்கடிப்பவனாய், ஸர்வவ்யாபியான எம்பெருமானுடைய அவதாரம் உலகின் நன்மைக்காகவே ஆவதுபோல், உம் அவதாரமும் ஆகிறது.

१०. विष्णोश्च मायारचितेषु पुत्रजायाप्तबन्धुष्वधिरूढचित्तः ।
अमत्यर्यं संप्रति जीवलोके यथान्धकूपे पतितो हि जन्तुः ॥

११. पातुं त्वदन्यो भुवि विद्यते कः
तं जीवलोकं यतिराज शक्त्या ।
यथा विना नान्यजनस्समर्थः
दृष्टक्षतं जीवयितुं नरेन्द्रात् ॥

१२. ध्वान्तं यथा नाशयितुं रविं विना
निदाघतप्तस्य यथा हिमांशुम् ।
अन्यत्समर्थं न हि विद्यते तथा
संसारतप्तस्य तवाङ्घ्रिपूजनात् ॥

---

நீர் எல்லாம் அறிந்தவர்; எல்லாமறிந்தவர்களில் தலைவர்; எம்பெருமானுடைய வடிவாகவேயிருப்பவரென்று அனைவராலும் இசையப்பெற்றவர். ஸ்ரீராமாநுஜாசார்யரே! இக்காரணத்திலேயே உமது செயல்கள் ஆம்சர்யமானவையாய், சிறப்புற்று விளங்குகின்றன. விஷ்ணுவின் மாயையாகிற ஶரீரஸம்ப₃ந்த₄த்தால் உண்டான பிள்ளை, மனைவி, உற்றார், உறவினர் ஆகியவர்களிடம் ஈடுபட்ட நெஞ்சையுடையவனாய், பாழுங்கிணற்றில் விழுந்த பிராணிபோல் இவ்வுலகில் ஸம்ஸாரி ஜீவன் மயங்கிநிற்கிறான். பார்வையிலேயே விஷத்தைக் கக்கும் பாம்பினால் கடிக்கப்பட்ட மனிதனை உயிர்ப்பிக்க வைத்₃யராஜனைத் தவிர வேறெவராலும் ஆகாததுபோல், மயங்கும் அந்த ஜீவஸமூஹத்தைத் தன் ஶக்தியால் ரக்ஷிக்கவல்லவர் உம்மையொழிய வேறு யார் உளர்? இருளை அழிப்பதற்கு ஸூர்யனைத் தவிர வேறு எவராலும் ஆகாததுபோலும், கோடையில் வெயிலால் வருந்துமவனின் தாபத்தைப் போக்குவதற்குச் சந்திரனைத் தவிர வேறு எவராலும் ஆகாததுபோலும், ஸம்

६. मानयित्वा बहुविधं तां साध्वीं वैष्णवोत्तमः।
जग्राह चरणौ तस्य लीलामानुषरूपिणः॥

७. बद्धाञ्जलिः स्तुतिं चक्रे संहृष्टो यतिशेखरम्।
नमस्ते पुरुषश्रेष्ठ! यतीश्वर! नमो नमः॥

८. हिताय लोकस्य चराचरस्य
तवावतारः किल लक्ष्मणार्य!।
यथावतारो जगतां हिताय
हरेश्च विष्णोर्जगदाश्रयस्य॥

९. त्वं सर्ववित् सर्वविदां वरिष्ठः
साक्षात् हरेः संप्रतिपन्नरूपः।
तस्माच्च ते लक्ष्मणदेशिकेन्द्र!
कर्माणि चित्राणि विलक्षणानि॥

---

மஹாபுருஷரான ஆசார்யனின் பொருட்டு ஸமர்ப்பிப்பது நல்லதேயாகும்” என்று.

## யதிராஜ ஸ்துதி

6-16. நல்லொழுக்கமுடைய தமது மனைவியை, (இவ்வண்ணமாகப்) பலவாறு கொண்டாடி, அவ்வைஷ்ணவோத்தமர், விரும்பியே மனிதவுருவை ஏற்றுக்கொண்டிருக்கும் அந்த யதிராஜருடைய திருவடிகளைப் பிடித்துக் கொண்டார். கைகூப்பிநின்று மிகவுகந்தவராய், யதிராஜரைப் பின்வருமாறு துதித்தார் :— “புருஷர்களில் சிறந்தவரே! உமக்கு நமஸ்காரம்; யதீஶ்வரரே! உமக்குப் பலகால் நமஸ்காரம். ஸ்ரீ ராமாநுஜரே! ஸ்த₂ாவரஜங்க₃மங்களடங்கிய இவ்வுலகின் நன்மையின் பொருட்டே உமது அவதாரம் ஏற்பட்டுள்ளது. உலகிற்கு ஆத₄ாரமானவனுய், பாபங்களைப் போக்கடிப்பவனுய், ஸர்வவ்யாபியான எம்பெருமானுடைய அவதாரம் உலகின் நன்மைக்காகவே ஆவதுபோல், உம் அவதாரமும் ஆகிறது.

१६. संदर्शनाच्च भवतामधुना यतीन्द्र !
पूर्वार्जितानि दुरितानि विनाशमापुः ।
धन्योऽहमस्मि कृतकृत्यतमोऽहमस्मि
सर्वे च मत्पितृगणाः सुरलोकमापुः ॥

१७. ततस्तथानेन यतीश्वरेणाप्याज्ञापितोऽसौ वरदार्यनामा ।
तत्पादतोयं परमं च पीत्वा भुक्त्वा तदन्नं मुमुदे सभार्यः ॥

१८. दम्पत्योस्तु तयोर्विलोक्य स तदा चित्तैक्यतां शिष्ययोः
संहृष्टः सकलार्थतत्त्वनिपुणः शिष्यैर्यतीनां वरः ।
विख्यातः सकलावनौ जनमहापापेध्मवैश्वानरः
तस्मिन्नेव गृहे निवासमकरोत्ताभ्यां सदा पूजितः ॥

---

ராஜரே! உம்மைக் கண்டதால் அடியேனது முந்தைவல் வினைகளெல்லாம் அழிந்துவிட்டன. அடியேன் த₄ன்ய ஞனேன். செய்யவேண்டியதையெல்லாம் செய்தவர்களில் தலைவனுனேன். எனது பித்ருக₃ணங்கள் அனைவரும் வானவர் நாட்டை அடைந்துவிட்டனர்” என்று.

## ஶேஷப்ரஸாத₃ ஸ்ரீபாத₃தீர்த்த₂ங்களால் வைஶ்யன் திருந்தியது

17-*25. அதற்குப்பின் யதிராஜரால் நியமிக்கப்பெற்ற வரத₃ாசார்யர், மனைவியோடு கூடியவராய், அவருடைய பரமபவித்ரமான ஸ்ரீ பாத₃தீர்த்த₂த்தைப் பருகி, ஶேஷ ப்ரஸாத₃த்தையும் உண்டு உகந்தார். த₃ம்பதியான அவ் விரு சிஷ்யர்களும் கருத்தொருமித்து வாழ்வதைக்கண்டு உகந்தவராய், அனைத்தையும் அறிவதில் வல்லவராய், மனிதர்களின் பாபங்களாகிற ஸமித்துக்களை எரிக்கும் அக்₃னியென்று உலகெங்கும் புகழ்பெற்றவரான யதிராஜர், அவர்களால் எப்போதும் ஆராதி₄க்கப்பட்டு, சிஷ்யர்க ளோடுகூட அவ்வீட்டிலேயே தங்கினுர். யதிராஜருடைய

१९. तत्पादतोयं च तदन्नमादरात्
तौ दम्पती वैश्यगृहं प्रजग्मतुः।
वैश्याय तस्मै व्यदिशत्तदोदनं
संप्राप्य सिद्धान्तमचञ्चला सती॥

२०. तत्पादोदकपानेन तदन्नस्य निषेवणात्।
महान् विवेकः संजज्ञे तस्य वैश्यस्य दुर्मतेः॥

२१. प्रदक्षिणनमस्कारं तस्याः कृत्वा स तूरुजः।
बद्धाञ्जलिपुटो भूत्वा वचनं चेदमब्रवीत्॥

२२. माता त्वं मम वै भर्ता पिता साध्वी न संशयः।
अज्ञानतिमिरान्धोऽहं दुष्प्रज्ञो मदनातुरः॥

२३. अजानानः स्वरूपं ते पापचिन्तापरोऽभवम्।
त्वयि तत् क्षम्यतां मातस्तस्माद्रक्षस्व मां सुतम्॥

---

ஸ்ரீபாத$_3$தீர்த்த$_2$த்தையும், ஶேஷப்ரஸாத$_3$த்தையும் அன்போடு எடுத்துக்கொண்டு, த$_3$ம்பதிகளிருவரும் அந்த வைஶ்யனின் வீட்டிற்குச் சென்றனர். வைஶ்யனைத் திருத்துவதில் உறுதிகொண்டவளான லக்ஷ்மி, அந்தத் தீர்த்த$_2$ப்ரஸாத$_3$ங்களை அவனுக்கு அளித்தாள். அறிவு கெட்டுக்கிடந்த அந்த வைஶ்யனுக்கு, அந்த ஸ்ரீபாத$_3$ தீர்த்த$_2$த்தைப் பருகியதாலும், அந்த ஶேஷப்ரஸாத$_3$த்தை உண்டதாலும் பெருநல்லறிவு ஏற்பட்டது. அவன்—லக்ஷ்மியைக் குறித்து ப்ரத$_3$க்ஷிணமும், நமஸ்காரமும் செய்து, கைகூப்பிநின்று, "தாயே! எனக்கு நற்குணவதியான நீயே தாயும், தந்தையும், ரக்ஷகமுமாயிருக்கிறாய். இதில் ஐயமில்லை. அஜ்ஞாநமாகிற இருட்டினால் குருடாகி அறிவு கெட்ட நான் காமவசப்பட்டு, உனது தன்மையை அறியாமல் உன்னிடம் கெட்ட எண்ணம் கொண்டேன். அதைப் பொறுத்தருள்வாய். உன் பிள்ளையான என்னை ரக்ஷிப்பாய்.

२४. तव देशिकपादाब्जे मां निधाय महामते ! ।
मया कृतापराधानां प्रायश्चित्तं विधाय च ॥

२५. येन केन प्रकारेण सा त्वं दीनं नयस्व माम् ।
सा साध्वी तद्वचः श्रुत्वा वैश्यस्यात्यन्तविस्मया ॥

२६. भर्त्रे निवेदयामास तद्वृत्तान्तं महात्मने ।
तयोदीरितमाकर्ण्य तत्सर्वं विस्मयान्वितः ॥

२७. कार्पासारामवरददेशिकः करुणाकरः ।
वैश्योत्तमं तमादाय यतीन्द्रपदपद्मयोः ॥

२८. शिष्यं समर्पयामास सहसा देशिकप्रियः ।
निर्व्याजरक्षकः श्रीमान् तस्य वैश्यस्य सत्वरम् ॥

---

பேரறிவுடையவளே! உனது ஆசார்யரின் திருவடித் தாமரையில் என்னைச் சேர்ப்பித்து, நான் செய்த பாபங்களுக்கு ப்ராயஶ்சித்தம் செய்வித்து, வருந்தத்தக்க நிலையிலுள்ள அடியேனை எப்படியாவது நல்வழிப்படுத்துவாய்" என்று வார்த்தை சொன்னான்.

## வைஶ்யன் வைஷ்ணவனாதல்

25*-32. அந்த மங்கைநல்லாள் வைஶ்யனுடைய அவ்வார்த்தையைக் கேட்டுப் பெருவியப்புற்று, மஹாத்மாவான தன் கணவருக்கு அச்செய்தியைச் சொன்னாள். அவள் சொன்னது அனைத்தையும் கேட்டு வியப்புற்ற கருணைக்கடலான பருத்திக்கொல்லை அம்மாளும், எம்பெருமானார்க்கு ப்ரியஶிஷ்யராகையாலே, வைஶ்யர்களிற் சிறந்த அவனை உடனே அழைத்துச்சென்று யதிராஜரின் திருவடித்தாமரைகளில் சீடனாக ஸமர்ப்பித்தார். நிர்ஹேதுகமாகச் சேதனரை ரக்ஷிக்கும் சிறப்புமிக்க யதிராஜரும் அந்த வைஶ்யனுக்கு உடனே பஞ்சஸம்ஸ்காரங்களைச் செய்து கருணையோடு அவனை ரக்ஷித்தார்.

२९. विधाय पञ्चसंस्कारान् ररक्ष कृपया स तम्।
वैश्यः श्रीवैष्णवो भूत्वा जितकामो महातपाः॥

३०. रराज कृपया तस्य शरच्चन्द्र इवामलः।
धनं बहुविधं सर्वं निधाय गुरुसन्निधौ॥

३१. बहुशः प्रार्थयामास तदङ्गीकरणाय तम्।
अङ्गीकृत्याथ कृपया यतीन्द्रस्तन्महद्धनम्॥

३२. सन्तोषं जनयामास वैश्यस्य करुणानिधिः।

३३. तदा यतीन्द्रोऽखिलशिष्यसंघैः संसेव्यमानो वरदार्यगेहे।
दिगन्तकीर्तिः कृतलोकरक्षः तस्थौ सुखं लक्ष्मणदेशिकेन्द्रः॥

इति श्रीप्रपन्नामृते रामानुजचरिते वैश्यस्य श्रीवैष्णवत्वसिद्धिर्नाम
अष्टाविंशोऽध्यायः॥

---

வைஶ்யனும் அவரது கருணையால் ஸ்ரீ வைஷ்ணவனாகி, காமத்தைவென்று, ஆசார்ய கைங்கர்யமாகிற பெரிய தவத்தைச் செய்பவனாய், குற்றமற்ற ஶரத்கால சந்திரன் போலே பிரகாஶித்தான். பலவகைப்பட்ட தனது செல்வங்கள் அனைத்தையும் ஆசார்யன் திருமுன்பே ஸமர்ப்பித்து, அவற்றை அங்கீகரிக்கவேண்டுமென்று அவரைப் பலவாறு பிரார்த்தித்தான். கருணைக்கடலான யதிராஜரும் அப்பெரும்பொருளைக் கருணையோடு ஏற்றுக்கொண்டு அந்த வைஶ்யனுக்கு த்ருப்தியை விளைத்தார். திக்கெட்டும் பரவிநின்ற புகழுடையவராய், அனைத்துலகையும் ரக்ஷிப்பவராய், ஶிஷ்யர்கள் அனைவராலும் நன்கு ஸேவிக்கப்படுமவரான யதிராஜர் அப்போது வரதாசார்யர் திருமாளிகையில் இனிது வாழ்ந்தார்.

ஸ்ரீ ப்ரபந்நாம்ருதத்தில், ராமானுஜ சரித்திரத்தில்,
வைஶ்யன் ஸ்ரீ வைஷ்ணவனுதலாகிற
இருபத்தெட்டாம் அத்தியாயம் நிறைவுபெற்றது.

## एकोनत्रिंशोऽध्यायः

१. यज्ञेशो यतिपुङ्गवस्य सहसा श्रुत्वागमं संभ्रमात्
तस्याराधनसिद्धये बहुविधं द्रव्यं समस्तं क्षणात्।
संपाद्यागमनं स्वबन्धुसहितो वाञ्छन् गुरोस्सादरं
तस्थौ तत्र यथा प्रभातसमये सूर्योदये पङ्कजम्॥

२. शीघ्रं पुष्कलमेव वस्तु सकलं निक्षिप्य सम्यक् गृहे
चिन्ताव्याकुलमानसो यतिपतेः सन्दर्शनाभावतः।
तस्यान्वेषणवाञ्छया निजगृहान्निर्गत्य तूर्णं जनान्
अन्वेष्टुं पथि तत्र देशिकपदं प्रस्थापयामास सः॥

---

## இருபத்தொன்பதாம் அத்தியாயம்

# விட்டலதேவராஜன் ஆச்ரயித்தல்

### யஜ்ஞேஶரின் வருத்தம்

1-5. (அஷ்டஸஹஸ்ரக்₃ராமத்திலிருந்த த₄னிகஶிஷ்யரான) யஜ்ஞேஶரோவெனில் யதிராஜரின் வரவை திடீரென்று கேள்விப்பட்டவுடன் பரபரப்படைந்தவராய், அவருக்கு ஆராத₄னம் செய்வதற்காகப் பலவித₄மான பொருள்களைச் சிறிதுநேரத்தில் ஸம்பாதி₃த்து, தனது உறவினர்களோடு கூடிநின்று, விடியற்காலே வேளையில் ஸூர்யனின் வரவை எதிர்பார்த்து நிற்கும் தாமரைபோலே, யதிராஜரின் வரவை அன்புடன் எதிர்நோக்கிக்கொண்டு வீட்டிலிருந்தார். வீட்டில் விரைவிலேயே குறைவற எல்லாப் பொருள்களேயும் நன்கு ஸித்₃த₄ப்படுத்தி, யதிராஜரைக் காணுமையால் கவலையுற்ற நெஞ்சினராய், தம் வீட்டிலிருந்து வெளிவந்து யதிராஜரைத் தேடுவதில் விருப்பத்தாலே, வழியிலேயே அவரைத்தேடி அழைத்துவரத் தன் மனிதர்களை விரைவில் அனுப்பினர். யதிராஜர் பருத்திக்கொல்லை

३. तद्यतीन्द्रस्य वृत्तान्तं श्रुत्वा शिष्यजनात्तदा ।
सहसा ते जनास्सर्वे यज्ञेशाय न्यवेदयन् ॥

४. सर्वं निशम्य वृत्तान्तं यज्ञेशो देशिकस्य तत् ।
अव्याकुलान्तःकरणो विषादमगमत्तदा ॥

५. संप्राप्य तस्य निकटे यतीन्द्रपदपद्मयोः ।
यज्ञेशस्सहसा धीमान् निपपात रुरोद ह ॥

६. उद्धृत्य पाणिना शीघ्रं यज्ञेशं कृपया गुरुः ।
व्याजहार शुभं वाक्यं लोकशिक्षार्थमादरात् ॥

७. श्रूयतामभिधास्यामि यज्ञेश ! हितमात्मनः ।
पञ्चसंस्कारसंपत्तिः श्रीमद्भगवदर्चनम् ॥

---

யம்மாள் வீட்டில் ஆராதி₄க்கப்படும் செய்தியை யதிராஜ சிஷ்யர்களிடமிருந்து கேள்வியுற்ற அவர்கள், அச்செய்தியைச் சடக்கென யஜ்ஞேஶரிடம் தெரிவித்தார்கள். அப்போது ஆசார்யரைப்பற்றிய எல்லாச் செய்தியையும் கேள்விப்பட்ட யஜ்ஞேஶர் நெஞ்சு மிகக்கலங்கி வருத்தமுற்ருர். அறிவாளியான அவர் யதிராஜர் இருந்தவிடம் சென்று, அவரது திருவடித் தாமரைகளில் சடக்கென விழுந்து அழத்தொடங்கிஞரந்தோ !

## யதிராஜரின் நல்வார்த்தைகள்

6-18. ஆசார்யரான யதிராஜர் கருணையோடு திருக்கைகளால் உடனே யஜ்ஞேஶரை வாரி எடுத்து, உலகினர் (ஸ்ரீவைஷ்ணவ லக்ஷணத்தை) உணர்ந்துகொள்வதற்காக, அன்போடு அழகிய வார்த்தையைப் பின்வருமாறு சொல்லலுற்ருர், — “ யஜ்ஞேஶரே ! உமக்கு நல்ல வார்த்தைகள் சிலவற்றைச் சொல்லுகிறேன், கேட்பீராக.

௮. अर्थपञ्चकविज्ञानमाचार्याधीनवृत्तिता ।
विना भवन्ति पञ्चैते न तदीयानुवर्तनम् ॥

௯. पूर्वोक्तार्थवतस्तस्य प्रपन्नस्य महात्मनः ।
यदात्मोज्जीवनं लोके वैष्णवातिथिपूजनम् ॥

௧௦. अतिथिं वैष्णवं दृष्ट्वा श्रमयुक्तं समागतम् ।
हर्षेण व्यजनेनाशु भक्त्या संवीज्य सादरम् ॥

௧௧. अध्वग्लानिनिवृत्त्यर्थं वैष्णवस्यातिथेः पुरः ।
पाद्यार्घ्याचमनीयाद्यैरुपचारैः प्रपूजयेत् ॥

௧௨. प्रियवाक्यैर्महाभक्त्या तं मत्वा विष्णुरूपिणम् ।
अन्तर्गृहे सुखासीनं विधाय परमासने ॥

---

ஒரு வைஷ்ணவனுக்கு அவஶ்யாபேக்ஷிதமான (1) பஞ்ச ஸம்ஸ்காரபூர்த்தி (2) ஸ்ரீமந் நாராயணனை ஆராதி$_4$ப்பது (3) அர்த்த$_2$பஞ்சகத்தை அறிவது (4) ஆசார்யனுக்கு வஶப்பட்டவனாய் வாழ்வது என்னும் நாலு பெருமைகளும், இவற்றால் ஏற்படும் ஆத்மஹிதமான ஐந்தாவது பெருமையும் பா$_4$க$_3$வதர்களுக்குப் பணிபுரிந்தாலொழிய ஸித்$_3$தி$_4$க்கமாட்டா; முன் சொன்ன நாலு பெருமைகளையும் உடைய மஹாத்மாவான ப்ரபன்னனுக்கு வைஷ்ணவர்களான விருந்தினரை ஆராதி$_4$ப்பதொன்றே இவ்வுலகில் ஆத்மாவை உய்விக்க வல்ல ஹிதமாகும். களைப்போடு வீடு தேடிவந்த விருந்தினனை வைஷ்ணவனைக் கண்டவுடன் பேரானந்த$_3$மடைந்து, உடனே ப$_4$க்தியினால் தூண்டப்பட்டு ஆலவட்டம் (விசிறி) கொண்டு அன்போடு விசிறி, அவனுடைய வழிநடந்த களைப்பு நீங்குவதற்காக அந்த வைஷ்ணவ விருந்தாளிக்கு முன் பாத்$_3$யம் (திருவடிவிளக்கும் நீர்) அர்க்$_4$யம் (திருக்கைவிளக்கும் நீர்), ஆசமநீயம் (ஆசமனம் செய்வதற்குரிய தீர்த்த$_2$ம்) முதலான உபசாரங்களை

१३. यथाशक्त्यन्नपानाद्यैर्भोजनं कारयेत्तदा ।
स्ववेश्मनि यथा भुङ्क्ते निर्भयः सुसमाहितः ॥

१४. पुष्पचन्दनताम्बूलैः यथाशक्त्याप्रतोषयेत् ।
तद्भुक्तशेषं सहसा स्वयं भुञ्जीत भक्तितः ॥

१५. यद्यस्यैतदनुष्ठानं यज्ञेश! हि मयोदितम् ।
न्यूनता वैष्णवत्वस्य कदाचिदपि नास्ति हि ॥

१६. एतत्तत्त्वार्थयुक्तस्य प्रपन्नस्यैतदेव हि ।
हितं मयोदितं सत्यं वैष्णवातिथिपूजनम् ॥

१७. त्वयि यज्ञेश! तन्नास्ति वैष्णवातिथिपूजनम् ।
धर्मं करोति दंभार्थं ख्यातिलाभपरो भवान् ॥

---

அளித்து ஆராதி$_4$க்கவேண்டும். அதற்குப்பின் பெருங் காதலோடு அவனை விஷ்ணுஸ்வரூபமாகவே நினைத்து, வீட்டினுள் சிறந்த ஆஸனத்தில் அவனை ஸுக$_2$மாக வீற்றிருக்கச்செய்து, தன் ஶக்திக்குத் தக்கவாறு அன்னம், பானம் முதலானவற்றை அளித்து, தன் வீட்டில் ஸங்கோசமின்றி ப$_4$யமற்று உணவருந்துவதுபோலே அவனை ப்ரஸாத$_3$ப்படச்செய்யவேணும். தன்னால் இயன்ற வரை புஷ்பம், சந்த$_3$னம், தாம்பூ$_3$லம் ஆகியவற்றை அளித்து அவனை எல்லாவித$_4$த்திலும் ஸந்தோஷப்படுத்த வேண்டும். அவன் உண்டு மிகுந்ததை உடனே ப$_4$க்தி யோடு தானும் உண்ணவேண்டும். யஜ்ஞேஶரே! என்னால் இப்போது சொல்லப்பட்ட விஷயம் ஒருவனுக்குக் கைவந்ததாகில், அவனுக்கு வைஷ்ணவத்வத்தில் குறை ஒருபோதும் ஏற்படாது. இந்தத் தத்வார்த்த$_2$த்தை அறிந்த வனே ப்ரபந்நனுவான். அத்தகைய ப்ரபந்நனுக்கு வைஷ்ணவ விருந்தோம்பலாகிற இதுவே என்னால் (என்னை ஆஶ்ரயிக்கும்போதே) மெய்யான ஆத்மோஜ்ஜீவனமாகச் சொல்லப்பட்டது. யஜ்ஞேஶரே! இந்த வைஷ்ணவ

१८. अस्माकं दांभिकगृहाः यज्ञेश न कृतालयाः ।
लोके यत्साच्चिकं चान्नं तत्तदेवेश्वरार्पणम् ॥

१९. यज्ञेशो यतिराजस्य वाक्यं श्रुत्वाऽतिलज्जितः ।
बद्धाञ्जलिपुटो भूत्वा चक्रे विज्ञापनं तदा ॥

२०. मया कृतापराधानां अपराधक्षमापणम् ।
कारयित्वा दयासिन्धो ! मामङ्गीकुरु सर्वथा ॥

२१. त्वदागमनहर्षेण विस्मृत्यागतवैष्णवान् ।
श्रीवैष्णवमहासङ्घसमेतस्य महात्मनः ॥

२२. तवैवाराधनार्थाय यतमानः स्थितोऽभवम् ।
मयोदितमिदं वाक्यं न मिथ्या यतिभूपते ! ॥

---

விருந்தோம்பல் உம்மிடமில்லை. புகழுக்கு ஆசைப்பட்டு நீர் ஆட₃ம்ப₃ரத்துக்காகவே த₄ர்மத்தைச் செய்கிறீர். யஜ்ஞேஶரே ! ட₃ம்ப₄த்திற்காக த₄ர்மம் செய்பவர்களின் வீட்டில் நாம் நுழையமாட்டோம். இவ்வுலகில் ஸாத்விகர்களாயிருப்பவர்களுடைய அன்னம் முதலானவற்றையே நாம் நம்முடைய பெருமாளுக்கு ஸமர்ப்பிப்போம்." என்று.

### யஜ்ஞேஶரின் க்ஷமா ப்ரார்த்த₂னை

19-23 யதிராஜரின் இவ்வார்த்தையைக் கேட்டு மிகவும் லஜ்ஜைகொண்ட யஜ்ஞேஶர், கைகூப்பிநின்று பின்வருமாறு விண்ணப்பித்தார்,—"கருணைக்கடலே ! என்னால் செய்யப்பட்ட அபராத₄ங்களை மன்னித்தருளி என்னை எல்லாப்படியாலும் கைக்கொண்டருளவேணும். தேவரீர் எழுந்தருளியதால் உண்டான ஆநந்த₃த்தினால், வந்திருந்த வைஷ்ணவர்களை மறந்து, ஸ்ரீ வைஷ்ணவப் பெருங்குழாத்தோடுகூடிய மஹாபுருஷரான தேவரீருடைய ஆராத₄னத்தின்பொருட்டு முயற்சி செய்துகொண்டிருந்து விட்டேன். யதிகட்கிறைவரே ! அடியேன் உரைப்பது

२३. निर्गतेन कृतं कार्यं सम्यगेतद्विचार्यताम् ।
तद्रक्ष कृपया दीनं शिष्यं मां करुणाकर ! ॥
२४. यतिराजस्तदाकर्ण्य तं जगाद स वैष्णवम् ।
शृणु वत्स प्रवक्ष्यामि वृत्तिं तव महामते ॥
२५. त्वयि सर्वगुणास्सन्ति विना ह्यतिथिपूजनम् ।
तदर्थमेतदारभ्य वैष्णवानां महात्मनाम् ॥
२६. क्रमेणात्रास्थितानां च कुरु शुश्रूषणं मुदा ।
प्रदेह्यनुदिनं तेभ्यो रोचते मानसे यदि ॥
२७. एतत्कार्यं प्रयत्नेन त्वं कुरु श्रद्धयान्वितः ।
एवमाज्ञाप्य यज्ञेशं परिवारेण संयुतः ॥

---

பொய்யல்ல; கூர்வமற்றவனுகவே இதைச் செய்தேன். நன்கு விசாரித்தருளவேண்டும். கருணைக்கடலே! வருந்தத் தக்க நிலையிலிருக்கும் சிஷ்யனை என்னைக் கருணையோடு ரக்ஷித்தருளவேணும்.” என்று

### யஜ்ஞேஶருக்கு நல்லுபதேஶம்

24-27. இதைக்கேட்ட யதிராஜர் வைஷ்ணவரான அவரைக் குறித்துப் பின்வருமாறு அருளினர், — “அறிவாளியான குழந்தாய்! நீ செய்யவேண்டியதைச் சொல்லுகிறேன் கேள். உன்னிடம் வைஷ்ணவவிருந்தோம்பலைத் தவிர மற்ற எல்லா நற்குணங்களும் இருக்கின்றன. அதனல் இன்று தொடங்கிப் படிப்படியாக, இங்கு எழுந்தருளும் வைஷ்ணவர்களுக்கும், இங்கேயே நிலையாக எழுந்தருளியிருக்கும் (பருத்திக்கொல்லையம்மாள்போன்ற ஏழை) வைஷ்ணவர்களுக்கும் உகப்போடு நீ பணிபுரிய வேண்டும். உன் மனத்திற்கு இசைந்திருந்தால், அவர்களுக்கு தினந்தோறும் (வேண்டியவற்றை) அளிக்க வேண்டும். இக்காரியத்தை ஶ்ரத்3தை4யுடன் முயன்று நீ செய்யவேண்டும்,” என்று.

२८. ग्रामादष्टसहस्राख्यान्निश्चक्राम यतीश्वरः ।
गत्वा सत्यव्रतं क्षेत्रं काञ्चीपूर्णेन संगतः ॥
२९. देवेशं वरदं नत्वा स्थित्वा तत्र दिनत्रयम् ।
काञ्चीपूर्णादिभिः सम्यक् यतीन्द्रः प्रेषितो महान् ॥
३०. श्रीवैष्णवमहासङ्घैः प्रतस्थे वेङ्कटाचलम् ।
वृषाद्रियाम्यदिग्भागे सर्वपापहरं वरम् ॥
३१. वर्तते कापिलं तीर्थं श्रीशैलारोहवर्त्मनि ।
तत्तीर्थतीरे योगीन्द्राः शठकोपादयो दश ॥
३२. अनिशं सेवमानास्ते वर्तन्ते वृषभूधरम् ।
तस्य कापिलतीर्थस्य नामान्तरमतोऽभवत् ॥

---

### காஞ்சிக்கு எழுந்தருளல்

27*-*30. இவ்வாறு யஜ்ஞேஶருக்கு ஆணையிட்டு விட்டு, பரிவாரத்தோடு கூடியவராய் அஷ்டஸஹஸ்ர க்ராமத்திலிருந்து யதிராஜர் வெளிக்கிளம்பினார். ஸத்ய வ்ரதக்ஷேத்ரம் எனப்படும் காஞ்சிமாநகருக்குச்சென்று, திருக்கச்சிநம்பியோடு கூடியவராய், தேவப்பெருமாளான வரதராஜனை வணங்கி, அங்கு மூன்று திநங்கள் எழுந் தருளியிருந்து, திருக்கச்சிநம்பி முதலானவரால் நல்லமுறை யில் விடைகொடுக்கப்பெற்ற மஹாபுருஷரான யதிராஜர் ஸ்ரீ வைஷ்ணவப் பெருங்குழுவோடு திருவேங்கடமலைக்குப் புறப்பட்டார்.

### ஆழ்வார்தீர்த்தக்கரையில் எழுந்தருளியிருத்தல்

30*-*36. திருவேங்கடமலையின் தெற்கு திக்கில், திருமலைக்கு ஏறும் வழியில் எல்லாப்பாபங்களையும் போக்கு வதாய், சிறந்ததான கபில தீர்த்தம் உள்ளது, அந்தத் தீர்த்தக்கரையில் நம்மாழ்வார் முதலான முனிவர்தலைவர் கள் பதின்மரும் திருமலையை எப்போதும் ஸேவித்துக் கொண்டு (அர்ச்சாரூபத்துடன்) வாழ்கிறார்கள். அத

३३. यद्दिव्यसूरितीर्थाख्यं विश्रुतं तज्जगत्त्रये ।
योगिराजो लक्ष्मणार्यस्तं देशमुपगम्य सः ॥

३४. तत्रैव वासमकरोत् शठकोपादिसन्निधौ ।
तस्मिंस्तीर्थे विगाह्याशु कृतपूजो यतीश्वरः ॥

३५. शठकोपादियोगीन्द्रान् नत्वा भक्त्या दशामलान् ।
विलोक्य विस्मयं गत्वा गिरिराजं वृषाचलम् ॥

३६. तत्रैव वासमकरोत् कञ्चित्कालं यतीश्वरः ।
ततो विट्ठलदेवाख्यो राजा तद्देशपालकः ॥

३७. यतीन्द्रवैभवं श्रुत्वा तस्य सेवार्थमागतः ।
संसेव्य लक्ष्मणाचार्यमतिमानुषवैभवम् ॥

३८. विस्मयं परमं गत्वा तस्य शिष्योऽभवत्तदा ।
तस्य विट्ठलदेवस्य यतीन्द्रः करुणाकरः ॥

---

ணாலேயே அந்தக் காபில தீர்த்த2த்திற்கு 'ஆழ்வார் தீர்த்த2ம்' என்னும் வேறு பெயரும் மூவுலகிலும் பிரஸித்3தி4பெற்று விளங்குகிறது. யோகி3யர்தலைவரான ஸ்ரீராமாநுஜரும் அந்த ஆழ்வார்தீர்த்த2க்கரைக்கு எழுந்தருளி, நம்மாழ்வார் முதலிய ஆழ்வார்கள் (அர்ச்சாரூபிகளாக) எழுந்தருளியிருக்கும் ஸந்நிதி4யில் வாழ்ந்திருந்தார். அந்தத் தீர்த்த2த்தில் நீராடி, உடனே திருவாராத4னம் செய்த யதிராஜர், நம்மாழ்வார் முதலான குற்றமற்ற முனிவர்தலைவர்கள் பதின்மரையும் வணங்கி, மலைகளுக்கு அரசனான திருமலையைப் பார்த்து வியப்புற்று, அவ்வாழ்வார்தீர்த்த2க்கரையிலேயே சிலகாலம் வாழ்ந்தார்.

## விட்டலதே3வன் ஆஶ்ரயித்தல்

36*-41. அதற்குப்பின்—அந்த நாட்டை ஆளும் விட்டலதே3வன் என்னும் அரசன் யதிராஜரின் பெருமையைக் கேள்விப்பட்டு அவரை ஸேவிப்பதற்காக வந்தான். அதிமானுஷப் பெருமைகளையுடைய ஸ்ரீராமாநுஜரை ஸேவித்து மிகவும் வியப்புற்று, அவருக்கு அப்போதே சிஷ்யனானான்.

३९. विधाय पञ्चसंस्कारान् ररक्ष कृपया स तम् ।
राजा विट्ठलदेवोऽथ यतीन्द्राय महात्मने ॥
४०. भक्त्या समर्पयामास धनं च बहुलं तदा ।
तोण्डीरमण्डले ग्रामं विलमण्डीयनामकम् ॥
४१. त्रिंशत्क्षेत्रसमायुक्तं तं ग्रामं यतिपुङ्गवः ।
आश्रितेभ्यो द्विजेभ्योऽपि त्रिंशद्भ्यस्सादरं ददौ ॥
४२. अभिप्रायं ततो ज्ञात्वा यतीन्द्रस्य जगद्गुरोः ।
अनन्तार्यादयस्सर्वे मिलित्वा वैष्णवोत्तमाः ॥
४३. यतिराजान्तिकं गत्वा यतीन्द्रपदपङ्कजम् ।
भक्त्या प्रणम्य योगीशं चक्रुर्विज्ञापनं तदा ॥
४४. मङ्गलाशासनं कर्तुं शेषशैलेश्वरं हरिम् ।
पर्वतारोहणं स्वामिन् ! कुरुष्व जगतां गुरो ! ॥

---

கருணைக்கடலான அந்த யதிராஜரும் அந்த விட்டல தே3வனுக்குப் பஞ்சஸம்ஸ்காரங்களையும் செய்து, அவனைக் கருணையாலே ரக்ஷித்தார். அரசனான விட்டலதே3வனும் மஹாத்மாவான யதிராஜர்க்கு அன்புடன் பெரும் த4னத்தையும், தொண்டைமண்ட3லத்திலுள்ள 'விலமண்டீ3யம்' என்னும் முப்பது வயல்கள் கொண்ட கிராமத்தையும் காணிக்கையாக ஸமர்ப்பித்தான். யதீந்த்3ரரும் அந்த க்3ராமத்தைத் தன் சிஷ்யர்களான முப்பது அந்தணர்களுக்கு அன்புடன் அளித்தார்.

## ஸ்ரீ வைஷ்ணவர்களின் பிரார்த்த2னை

42-45. 'ஆழ்வார்தீர்த்த3க்கரையிலேயே எழுந்தருளியிருக்கவேணும்' என்னும் ஜக3த்3கு3ருவான யதிராஜரின் திருவுள்ளத்தை அறிந்து, அநந்தாழ்வான முதலான வைஷ்ணவஶ்ரேஷ்ட2ர்கள் அனைவரும் கூடி யதிராஜரிடம் வந்து, அவரது திருவடித்தாமரைகளை அன்புடன் வணங்கி, பின்வருமாறு அவரிடம் விண்ணப்பித்தனர், — "ஜக3தா3சார்யரான எம்பெருமானரே! ஶேஷஶைலாதி4பதியான

४५. मङ्गलाशासनेनैव भवतो वेङ्कटेश्वरः।
जगत्यव्याहतैश्वर्यः शेषशैले जगत्प्रभुः॥
४६. तेषां तद्वचनं श्रुत्वा यतीन्द्रो देशिकप्रियः।
सरोयोग्यनुपन्थाननुध्यायाब्रवीत्तदा॥
४७. सरोयोग्यादियोगीन्द्रास्तं मत्वा शेषरूपिणम्।
अकृत्वाऽऽरोहणं तस्य नम्राश्चात्रैव ते स्थिताः॥
४८. मङ्गलाशासनं चक्रुः श्रीनिवासाय चाद्रये।
पूर्वैर्यदनुष्ठानं कृतं वै दिव्यसूरिभिः॥
४९. तदन्तेवासिना तेन तदेव क्रियते मया।
वत्स्याम्यत्रैव संसेव्य शठकोपादिदेशिकान्॥

---

திருவேங்கடமுடையானை மங்க$_3$ளாஶாஸநம் செய்வதற்குத் திருமலையின்மேல் ஏறியருளவேணும். ஜக$_3$த்ப்ரபு$_4$வான திருவேங்கடமுடையானை தே$_3$வரீர் மங்க$_3$ளாஶாஸநம் செய்தால்தான் அவன் உலகில் தடையற்ற ஐஶ்வர்யமுடையவனாவான்" என்று.

## திருமலையேற மறுத்தல்

46-49. ஆழ்வார்கள் முதலான பூர்வாசார்யர்களிடம் பரமப$_4$க்தியுடைய யதிராஜர் அவர்களுடைய அவ்வார்த்தையைக்கேட்டு, பொய்கையாழ்வாருடைய அநுஷ்டா$_2$நத்தை அநுஸந்தி$_4$த்து அப்போது பின்வருமாறு வார்த்தை சொன்னார்,—"பொய்கையாழ்வார் முதலான ஆழ்வார்கள் திருமலையை ஆதி$_3$ஶேஷனின் உருவாகவே எண்ணி அதன்மேல் ஏறாமல், அதை வணங்கி, இங்கேயே எழுந்தருளியிருந்து திருவேங்கடமுடையானையும் திருமலையையும் மங்க$_3$ளாஶாஸநம் செய்தனர். நமது பூர்வாசார்யர்களான ஆழ்வார்களாலே எங்ஙெந்த அநுஷ்டா$_2$னங்கள் கைக்கொள்ளப்பட்டனவோ அவையே சிஷ்யனான என்னால் பின்பற்றப்படுகின்றன. ஆகையால், நம்மாழ்வார் முதலான ஆழ்வார்களை ஸேவித்துக்கொண்டு இங்கேயே வாழ்கிறேன்" என்று.

३९. विधाय पञ्चसंस्कारान् ररक्ष कृपया स तम्।
राजा विट्ठलदेवोऽथ यतीन्द्राय महात्मने ॥
४०. भक्त्या समर्पयामास धनं च बहुलं तदा।
तौण्डीरमण्डले ग्रामं विलमण्डीयनामकम् ॥
४१. त्रिंशत्क्षेत्रसमायुक्तं तं ग्रामं यतिपुङ्गवः।
आश्रितेभ्यो द्विजेभ्योऽपि त्रिंशद्भयस्सादरं ददौ ॥
४२. अभिप्रायं ततो ज्ञात्वा यतीन्द्रस्य जगद्गुरोः।
अनन्तार्यादयस्सर्वे मिलित्वा वैष्णवोत्तमाः ॥
४३. यतिराजान्तिकं गत्वा यतीन्द्रपदपङ्कजम्।
भक्त्या प्रणम्य योगीशं चक्रुर्विज्ञापनं तदा ॥
४४. मङ्गलाशासनं कर्तुं शेषशैलेश्वरं हरिम्।
पर्वतारोहणं स्वामिन्! कुरुष्व जगतां गुरो! ॥

---

கருணைக்கடலான அந்த யதிராஜரும் அந்த விட்டல தேவனுக்குப் பஞ்சஸம்ஸ்காரங்களையும் செய்து, அவனைக் கருணையாலே ரக்ஷித்தார். அரசனான விட்டலதேவனும் மஹாத்மாவான யதிராஜர்க்கு அன்புடன் பெரும் தனத்தையும், தொண்டைமண்டலத்திலுள்ள 'விலமண்டீயம்' என்னும் முப்பது வயல்கள் கொண்ட கிராமத்தையும் காணிக்கையாக ஸமர்ப்பித்தான். யதீந்த்ரரும் அந்த க்ராமத்தைத் தன் சிஷ்யர்களான முப்பது அந்தணர்களுக்கு அன்புடன் அளித்தார்.

## ஸ்ரீ வைஷ்ணவர்களின் பிரார்த்தனை

42-45. 'ஆழ்வார்தீர்த்தக்கரையிலேயே எழுந்தருளியிருக்கவேணும்' என்னும் ஜகத்குருவான யதிராஜரின் திருவுள்ளத்தை அறிந்து, அநந்தாழ்வான முதலான வைஷ்ணவஶ்ரேஷ்டர்கள் அனைவரும் கூடி யதிராஜரிடம் வந்து, அவரது திருவடித்தாமரைகளை அன்புடன் வணங்கி, பின்வருமாறு அவரிடம் விண்ணப்பித்தனர், — "ஜகதாசார்யரான எம்பெருமானாரே! ஶேஷஶைலாதிபதியான

त्रिंशोऽध्यायः

१. ततो यतीन्द्रः सञ्चिन्त्य कृतदेहादिशोधनः।
नत्वा प्रथमसोपाने महान्तं वेङ्कटाचलम्॥

२. चकारारोहणं श्रीमान् वेङ्कटाद्रौ यतीश्वरः।
श्रीशैलपूर्णः कृपया तत्प्रसादं सुपावनम्॥

३. आदायाभिमुखं प्राप्य सच्छात्रं च यतीश्वरम्।
यतीन्द्रायादिशत्तस्मै प்रसादं तीर्थमुत्तमम्॥

४. भक्त्या श्रीशैलपूर्णस्य प्रणम्य पदपङ्कजम्।
प्रसादं प्रतिगृह्याशु यतीन्द्रः पूर्णमब्रवीत्॥

---

களின் அந்த நியமனத்தையே பின்பற்றி, திருமலையில் ஏறுவதற்குத் திருவுள்ளங்கொண்டார்.

ஸ்ரீப்ரபந்நாம்ருதத்தில், ராமானுஜ சரித்திரத்தில், விட்டலதே₃வராஜன் ராமானுஜரை ஆஶ்ரயித்தலாகிற இருபத்தொன்பதாம் அத்தியாயம் நிறைவுபெற்றது.

## முப்பதாம் அத்தியாயம்

# பெரியதிருமலைநம்பியிடம் ஸ்ரீராமாயணார்த்த₂ம் கேட்டல்

### பெரியதிருமலைநம்பி எதிர்கொண்டழைத்தல்

1-7. அதற்குப்பின் ப₄க்திச்செல்வமுடைய யதிராஜர்(திருமலையிலிருக்கும்போது அதை அஶுத்₃த₄ப் படுத்தலாகாது என்று) ஆலோசித்து, தே₃ஹத்தைப் பரிஶுத்₃த₄மாக்கிக் கொண்டு, முதல் படியில் ஏறும்போதே சிறப்புற்ற திருவேங்கடமலையை வணங்கித் திருமலையில் ஏறலுற்றார். பெரிய திருமலைநம்பியும், திருவேங்கடமுடையானுடைய மிகப்பாவனமான தீர்த்த₂ப்ரஸாத₃ங்களை எடுத்துவந்து,தமது நல்ல சிஷ்யரான ஸ்ரீராமாநுஜரை எதிர்கொண்டழைத்து, அவருக்குத்

५. मह्यं प्रसादमानेतुं किं युक्तं भवतो गुरो! ।
केनचित् बालकेनेदं प्रेषितुं नहि शक्यते? ॥

६. स पूर्णः तद्वचः श्रुत्वा यतिराजमभाषत ।
वेङ्कटाद्रौ च सततं वीथीष्वालोकितं मया ॥

७. मद्भिना बालको नास्ति कुत्रापि यतिपुङ्गव! ।
तच्छ्रुत्वा लक्ष्मणाचार्यो विस्मयं परमं ययौ ॥

८. सर्वैः श्रीवैष्णवैः स्तुत्वा यतीन्द्रो * वायुगोपुरम् ।
सोपानरहिते मार्गे ह्यागच्छति यतीश्वरे ॥

---

தலைசிறந்த தீர்த்த₂ப்ரஸாத₃ங்களை அளித்தார். யதீந்த்₃ரரும் ப₄க்தியோடு பெரியதிருமலைநம்பியின் திருவடிகளை வணங்கி, தீர்த்த₂ப்ரஸாத₃ங்களை உடனே ஏற்றுக்கொண்டு, "ஆசார்யரே! அடியேனுக்கு ப்ரஸாத₃ம் கொண்டுவருவதற்கு தேவரீரே எழுந்தருளவேண்டுமோ? சிறியார் எவரையாவது அனுப்பியிருக்கக்கூடாதோ?" என்று நம்பியிடம் கேட்டார். அவ்வார்த்தையைக்கேட்ட நம்பி "திருவேங்கடமலையில் எல்லா வீதிகளிலும் நீண்டநேரம் நன்கு தேடிப் பார்த்தபோதிலும், எங்கும் என்னைவிடச் சிறியாரைக் காணவில்லை" என்று யதிராஜரிடம் கூறினர். இதைக்கேட்ட யதிராஜர் மிகவும் வியப்புற்றார்.

## ஸ்ரீவைஷ்ணவர்கள் எதிர்கொள்ளல்

8-*10. யதிராஜர் எல்லா ஸ்ரீவைஷ்ணவர்களோடு கூடிநின்று, *வாயுகோ₃புரத்தைத் துதித்து, (கல்வேலியருகில்) படியில்லாத வழியில் எழுந்தருளும்போது, திரு

---

* இப்போது காலி கோபுரம் என அழைக்கப்படுகிறது. தமிழில் 'கால்' (காற்று) என்னும் பத₃த்திலிருந்து வந்த 'காலி' என்னும் தெலுங்குப்பத₃ம் காற்று என்னும் பொருளையுடையது. 'காளி கோ₃புரம்' என்பது தவறு.

९. एकान्तिनो वैष्णवाश्च यतयश्चार्चकास्तदा।
तस्याभिमुखमायाताः सर्वे तच्छैलवासिनः॥

१०. तं विलोक्य यतीन्द्रायं चक्रुस्सत्कारमादरात्।
ततो यतीन्द्रः संप्राप्य वृषाद्रिं वैष्णवैस्सह॥

११. स्नात्वा भक्तियुतो धीमान् ऊर्ध्वपुण्ड्रधरो महान्।
वीथीचतुष्टये तत्र कृतसम्यक्प्रदक्षिणः॥

१२. अनर्घमणिमुक्तानि गोपुराणि महान्ति च।
विमानं मण्डपादीनि कूटानि विविधानि च॥

१३. विलोक्य विस्मयं प्राप तत्रानन्तकृतं महत्।
बृन्दावनमनन्तार्ये कृतवान् महतीं दयाम्॥

---

மலையில் வாழும் (எம்பெருமானையே பற்றிநிற்கும்) ஏகாந்திகளும், (அவனையே உபாயோபேயங்களாகக்கொண்ட பரமைகாந்திகளான) வைஷ்ணவர்களும், ஸந்யாஸிகளும், அர்ச்சகர்களுமாகிற அனைவரும் யதீந்த்₃ரரை எதிர்கொண்டு வந்து, அவரைக்கண்டு, அன்போடு உபசரித்தனர்.

## திருமலையப்பனை ஸேவித்தல்

10*-25. அறிவாளியாய், பெரியவரான யதிராஜர் அதற்குப்பின்பு வைஷ்ணவர்களோடு திருமலையை அடைந்து, ப₄க்தியோடு (ஸ்வாமி புஷ்கரிணியில்) நீராடி ஊர்த்₄வபுண்ட்₃ரங்களை த₄ரித்து, திருமலையின் நாலு வீதிகளிலும் நன்கு ப்ரத₃க்ஷிணம் செய்து, விலைமதிப்பற்ற ரத்தினங்களும், முத்துக்களும் பதிக்கப்பெற்ற பெரிய கோ₃புரங்களையும், விமானத்தையும், மண்டபம் முதலானவற்றையும், பலவித₄மான கூடங்களையும், அநந்தாழ்வானால் அமைக்கப்பெற்ற (இராமாநுசன் எனும் திருநாமமுடைய) பெரிய நந்த₃வனத்தையும் கண்டு வியப்படைந்தார். அநந்தாழ்வானிடம் பேரருளைப் பொழிந்தார் அழகிய

१४. महावनानि रम्याणि वृक्षशाखासमाश्रितान् ।
विलोक्य वानरान् सर्वान् पक्षिसङ्घान् मृगानपि ॥

१५. अन्यानपि विशेषांश्च तान् मत्वा नित्यसूरिणः ।
महावराहं देवेशं प्रणम्य यतिपुङ्गवः ॥

१६. * कुलशेखरसोपानप्रभृतीनतिलङ्घ्य च ।
सोपानानि यतिश्रेष्ठो बलिपीठं प्रणम्य च ॥

१७. यामुनार्याभिधानं च पुष्पमण्डपमादरात् ।
प्रदक्षिणेन चागत्य यतीन्द्रः शिष्यसंवृतः ॥

१८. धनुर्मासे सिते पक्षे द्वादश्यामरुणोदये ।
आयान्ति सर्वतीर्थानि स्वामिपुष्करिणीजले ॥

---

மஹாரண்யங்களையும், அவற்றின் மரக்கிளைகளில் வாழும் வானரங்கள், பறவைக் கூட்டங்கள், விலங்குகள், மற்ற பொருள்கள் ஆகிய அனைத்தையும் கண்டு, அவற்றை நித்யஸூரிகளாகவே எண்ணி, தேவர்தலைவனான மஹா வராஹப்பெருமாளை ஸேவித்து, * குலசேகரன்படி முதலான படிகளைத் தாண்டி, ப3லிபீட2த்தை வணங்கி, ‘யாமுனாசார்யர்’ என்னும் திருநாமமுடைய புஷ்பமண்டபத்தை சிஷ்யர்களோடுகூட அன்போடு ப்ரத3க்ஷிணம் செய்து, “மார்கழி மாதத்தில் ஶுக்லபக்ஷத்தில் துவாத3ஶியில் அருணோத3யவேளையில், ஸ்வாமிபுஷ்கரிணியின் நீரில் எல்லாத் தீர்த்த2ங்களும் வந்து சேர்கின்றன” என்று (புராணங்களில்) பெருமைபெற்றிருக்கும் ஸ்வாமிபுஷ்கரிணியில் தீர்த்த2ஸ்வீகாரம் செய்து, திருவேங்கடமுடையானுடைய திருக்கோயிலினுள் பிரவேஶித்தார். திருமடைப்

---

* ஆருயிரப்படி கு3ருபரம்பராப்ரபா4வத்தில் இவ்விடத்தில் அவாவறச் சூழ்ந்தான் திருவாசல் என்று உள்ளது. இதற்குமுன் 'வைகுந்தன் திருவாசல்' என்று உள்ளது. குலசேகரன்படி எம்பெருமான் திரு முன்பேயுள்ளதாகையால், இங்கு பாட2ம் மாறியிருக்கலாம்.

१९. एवं माहात्म्ययुक्तायां पुष्करिण्यां यतीश्वरः ।
विधाय तीर्थस्वीकारं वेङ्कटालयमाविशत् ॥

२०. महानसं * पानशालां नत्वा श्रीमणिमण्डपम् ।
सेनेशादीन् प्रणम्याथ यतीन्द्रः शिष्यसंवृतः ॥

२१. आनन्दनिलयं दिव्यं विमानं वीक्ष्य हर्षितः ।
आनन्दबाष्पनयनः प्रणम्य यतिपुङ्गवः ॥

२२. तत्रान्तः संप्रविश्याशु देवदेवं रमासखम् ।
नत्वा हरिं वेङ्कटेशं तस्थौ प्राञ्जलिरग्रतः ॥

२३. तत्तीर्थशठकोपादीन् गृहीत्वा भक्तिसंयुतः ।
अत्याश्चर्ययुतो मत्वा भूवैकुण्ठमिदं त्विति ॥

२४. तस्य मज्जनकालं च संसेव्य यतिपुङ्गवः ।
तत्रास्थितान् सर्वजनान् पशुपक्षिमृगानपि ॥

---

பள்ளி, * பானஶாலை, திருமாமணிமண்டபம் ஆகியவற்றை வணங்கி, ஸேனைமுதலியார் (வேங்கடத்தரியாகிற நரசிங்கன்) முதலானோரையும் தொழுது, ஶிஷ்யர்களோடு கூடியவராய் ஆநந்த₃நிலயமெனும் தி₃வ்யவிமானத்தையும் ஸேவித்துப் பேரானந்த₃முற்றவராய், ஆநந்த₃க்கண்ணீர்விடும் திருக்கண்களை உடையவராய் அவ்விமானத்தை வணங்கி, (அடியாரும் வானவரும் அரம்பையரும் கிடந்தியங்கும் குலசேகரன் படியைக்கடந்து) சடக்கென உள்ளே புகுந்து, அமரர்தலைவனை, அலர்மேல்மங்கையுறைமார்பனை திருவேங்கடமுடையானை வணங்கி, அப்பெருமான் திருமுன்பே கைகூப்பி நின்றார். அப்பெருமானுடைய தீர்த்த₂ம் ஶட₂கோபம் முதலானவற்றை ப₄க்தியோடு ஸ்வீகரித்து, 'இதுவே பூ₄லோக வைகுண்ட₂ம்' என்று

---

* ஆறுயிரப்படி கு₃ருபரம்பரையில் இங்கு 'யாக₃ஶாலை' என்று உள்ளது.

२५. नित्यसूरीन् समालोच्य स्थातुं मम न सांप्रतम्।
इति मत्वा गिरेरासीदवरोहणतत्परः ॥

२६. ततः श्रीशैलपूर्णार्यः समागत्येदमब्रवीत्।
दिनत्रयं हि वस्तव्यं दिव्यदेशे यतीश्वर! ॥

२७. प्रतिगृह्य वचस्तस्य यतीन्द्रस्त्यक्तभोजनः।
देवदेवं सेवमानो दिनत्रयमवस्थितः ॥

२८. आवर्तत यतिश्रेष्ठस्ततो निर्गमनोदये।
पूर्णाचार्यं पुरस्कृत्य गाथां द्वादशसंहताम् ॥

---

பேராச்சரியங்கொண்டவராய், திருமலையப்பன் திருமஞ்சனங்கண்டருள்வதையும் ஸேவித்து, "§ விண்ணோர் வெற்பாகையாலே இங்கு எழுந்தருளியிருக்கும் அனைவரும் ‡ நிகரில் அமரரான நித்யஸூரிகளன்றோ; (ப்ராக்ருதரான) நாம் இங்கு இருக்கலாகாது" என்று எண்ணி, திருமலையிலிருந்து இறங்கத் திருவுள்ளங்கொண்டார்.

### ஸ்ரீராமாயணார்த்த₂ம் கேட்டல்

26-34. அதற்குப்பின் பெரியதிருமலைநம்பி யதிராஜரிடம் வந்து, "யதிராஜரே! தி₃வ்யதே₃ஶத்தில் மூன்று தி₃னங்களாவது வஸிக்கவேணுமன்றோ" என்று கூறினார். அவருடைய வார்த்தையை ஏற்று, ஆஹாரமில்லாதவராய், தே₃வதே₃வனை அடிக்கடி ஸேவித்துக்கொண்டு திருமலையில் மூன்று நாள் எழுந்தருளியிருந்தார் யதிராஜர். புறப்பட வேண்டிய (மூன்றாவது) நாளின் உத₃யத்தில், திருமலை நம்பியை முன்னிட்டுக்கொண்டு பெரியாழ்வார் அருளிய பன்னிரண்டு பாசுரங்கள்கொண்ட திருப்பல்லாண்டையும் பலகால் அநுஸந்தி₄த்தார். திருப்பல்லாண்டை ஸேவித்து,

---

§ திருவாய் 1-8-3. ‡ திருவாய் 6-10-10.

२९. भट्टनाथकृतिं चोक्त्वा बद्धाञ्जलिपुटस्तदा ।
वेङ्कटेशस्ततः स्वीयं प्रसादं तीर्थमादरात् ॥

३०. ततः स श्रीश्वरो देवः शठारिं तीर्थमुत्तमम् ।
दापयित्वार्चकैस्तस्मै संतुष्टो वाक्यमब्रवीत् ॥

३१. भवतो भवदीयानां विभूतिद्वयमेव च ।
मया दत्तं यतिश्रेष्ठ ! त्रिवारं नात्र संशयः ॥

३२. इत्युवाच प्रवालोष्ठस्फुरद्दशनसुप्रभः ।
धन्योऽस्मीति यतिश्रेष्ठः प्रतिगृह्य स तद्वचः ॥

३३. तेनानुज्ञापितो धीमान् पूर्णाचार्यपुरस्सरः ।
तद्गिरेरवरुह्याथ तत्समीपस्थपत्तने ॥

३४. श्रीशैलपूर्णसदने भुक्त्वा लक्ष्मणदेशिकः ।
शृण्वन् रामायणं तस्य सन्निधौ वत्सरं स्थितः ॥

---

திருவேங்கடமுடையான் திருமுன்பே கைகூப்பிநின்றார் யதிராஜர். அப்பெருமானும் அன்போடு தனது தீர்த்த₂ ப்ரஸாத₃ங்களை அளித்தான். ஸ்ரீய:பதியான அப்பெருமான் "உமக்கும், உமது ஸம்ப₃ந்த₄ம் பெற்றவர்களுக்கும் உப₄யவிபூ₄திச் செல்வத்தையும் (நம் தெற்குவீடான திருவரங்கத்திலே) தந்தோமே நாம். அதில் ஐயமில்லை என்பதை மூன்றுமுறை கூறுகிறோம்" என்று திருப்பவளச் சோதிவாய்திறந்து அருளிச்செய்து, அர்சகர்களைக்கொண்டு சிறந்த தீர்த்த₂ப்ரஸாத₃ங்களை அளிக்கச்செய்து விடை கொடுத்தான். "த₄ந்யனானேன்" என்று அவ்வார்த்தையை ஏற்றுக்கொண்டு, அப்பெருமானால் விடைகொடுக்கப்பெற்று, திருமலைநம்பியை முன்னிட்டுக்கொண்டு திருமலையிலிருந்து இறங்கி, கீழத்திருப்பதிநகரில், திருமலைநம்பியின் திருமாளிகையில் அமுதுசெய்து, அவரிடம் ஸ்ரீராமாயணார்த்த₂த்தைக் கேட்டுக்கொண்டு ஒருவருஷம் வாழ்ந்தார் யதிராஜர்.

३५. कुर्वन्तमनिशं तस्य गृहे कैङ्कर्यमादरात् ।
गोविन्दार्यं तदा दृष्ट्वा यतीन्द्रः प्रीतिमानभूत् ॥

३६. शय्यां श्रीशैलपूर्णाय रचयित्वाऽत्र संस्थितः ।
कस्मिंश्चिद्दिवसे दृष्ट्वा गोविन्दं यतिपुङ्गवः ॥

३७. ज्ञात्वेमं दुर्गुणं तस्य गुरवे तत् न्यवेदयत् ।
ततः श्रीशैलपूर्णार्यः गोविन्दमिदमब्रवीत् ॥

३८. मदर्थे रचिते तल्पे त्वया शेतमिति श्रुतम् ।
किमेवमुचितं कर्तुं तस्मात् किं फलमाप्स्यसि ? ॥

३९. तन्निशम्य स गोविन्दस्तं गुरुं प्रत्यभाषत ।
गुरोस्तल्पे शयानस्य फलं नरकमेव हि ॥

---

### கோ₃விந்த₃ரின் ஆசார்ய ப₄க்தி

35-42. திருமலைநம்பியின் திருமாளிகையில் அன்போடு தினந்தோறும் கைங்கர்யம் செய்துவரும் கோ₃விந்த₃ரை அப்போது கண்ட யதிராஜர் மிகவும் உகப்படைந்தார். திருமலைநம்பிக்குப் படுக்கை விரித்தபிறகு கோ₃விந்த₃ர் அதில் படுத்துவிட்டு எழுந்திருப்பதை யதிராஜர் ஒருநாள் பார்த்து, இதை து₃ர்க்கு₃ணமாக எண்ணி, (கோ₃விந்த₃ரைத் திருத்துவதற்காக) அதை ஆசார்யரான திருமலைநம்பியிடம் விண்ணப்பித்தார். அதைக்கேட்டவுடன் திருமலைநம்பி கோ₃விந்த₃ரைப் பார்த்து, "எனக்காக விரிக்கப்பட்ட படுக்கையில் நீ படுத்தாய் என்று கேள்விப்பட்டேன். இப்படிச் செய்வது தக்கதா? இதனால் என்ன ப₂லனை அடைவாய் தெரியுமா?" என்று கேட்டார். அதைக்கேட்ட கோ₃விந்த₃ர் "ஆசார்யரின் படுக்கையில் படுத்தவனுக்கு நரகமே ப₂லனாகுமன்றோ" என்று ஆசார்யரைப் பார்த்து விண்ணப்பித்தார். கோ₃விந்த₃ரின் இவ்

४०. गोविन्दवचनं श्रुत्वा स पूर्णः पुनरब्रवीत् ।
एवं ज्ञात्वा किमर्थं त्वं तदिदं कृतवानसि ॥

४१. स गुरोर्वचनं श्रुत्वा भूयो विज्ञापनं व्यधात् ।
निर्बाधं भवतो निद्रा स्याच्चेन्मे नरकं हितम् ॥

४२. एतच्छ्रुत्वा यतिश्रेष्ठो भक्त्येदं कृतवानयम् ।
इति सन्तुष्टचित्तोऽभूत्तदा लक्ष्मणदेशिकः ॥

४३. कदाचिल्लक्ष्मणाचार्ये पूर्णाचार्यवनं प्रति ।
गते तत्र स गोविन्दो द्विजिह्वस्याऽऽनने करम् ॥

४४. निक्षिप्याथ कृतस्नानः कैङ्कर्यार्थं तदोद्यतः ।
दृष्ट्वा तल्लक्ष्मणाचार्यस्तं गोविन्दमथाब्रवीत् ॥

४५. भो गोविन्दाधुना कार्यं कृतवानसि किं वद ।
इत्युक्तो यतिराजेन गोविन्दः प्राह तं तदा ॥

---

வார்த்தையைக் கேட்ட நம்பி, "இப்படி அறிந்தும் ஏன் நீ இதைச் செய்தாய்?" என்று மறுபடியும் கேட்டார். ஆசார்யரின் இவ்வார்த்தையைக்கேட்ட கோ₃விந்த₃ர், "தேவரீருக்குத் தடங்கலில்லாமல் தூக்கம் விளையுமாகில், எனக்கு நரகமும் நன்மையே" என்று பதில் அளித்தார். இதைக்கேட்ட யதிராஜர்—கோ₃விந்த₃ர் ஆசார்யருடைய படுக்கையில் படுத்தது ஆசார்ய ப₄க்தியினாலேயே என்று அப்போதே உணர்ந்து மிகவும் உகந்த நெஞ்சினரானார்.

### கோ₃விந்த₃ரின் ப்ராணி த₃யை

43-47. ஒருநாள் ஸ்ரீராமாநுஜர் திருமலைநம்பியின் திருநந்த₃வனத்திற்குச் சென்றபோது, அங்கு ஒரு பாம்பின் வாயிலே கோ₃விந்த₃ர் கையைவிட்டு எடுப்பதையும், உடனே குளித்துக் கைங்கர்யத்துக்காக முயல்வதையும் கண்டு, கோ₃விந்த₃ரைப் பார்த்து, "கோ₃விந்த₃ரே! இப்

४६. जिह्वायां कण्टकस्यूतं द्विजिह्वं परमापदम्।
प्राप्तं दृष्ट्वाऽथ तद्वक्त्रे हस्तं निक्षिप्य कण्टकम्॥

४७. आकृष्य सरसि स्नात्वा समायातो यतीश्वर!।
यतीन्द्रो भूतकरुणा कियत्यस्येति विस्मितः॥

४८. ततो रामायणं सार्थं अधीत्य यतिपुङ्गवः।
नत्वा गुरुं पूजयित्वा तं वाक्यमिदमब्रवीत्॥

४९. श्रीरङ्गस्य प्रयाणाय ममाज्ञां देहि देशिक!।
श्रीशैलपूर्णस्तं प्राह यतिराजं दयापरः॥

५०. सुदूरादागतस्यार्थे तव किं दीयते मया।
मन्नाथस्तद्वचः श्रुत्वा पूर्णमाह गुरूत्तमम्॥

---

போது நீர் செய்த காரியம் என்னவென்று உரைப்பீர்" என்று கேட்க, கோ₃விந்த₃ரும் "எதிராஜரே! நாவிலே முள் தைத்து மிகவும் வருந்தி நிற்கும் ஒரு பாம்பைக் கண்டு, அதன் வாயில் கையைவிட்டு முள்ளை எடுத்து விட்டுக் குளத்தில் குளித்துவந்தேன்" என்று பதிலுரைத் தார். யதிராஜரும் 'இவருடைய ப்ராணி த₃யை எத்தகை யது!' என்று வியப்புற்றார்.

### யதிராஜர் கோ₃விந்த₃ரை தா₃னமாகப் பெறுதல்

48-*52. அதற்குப்பின் அர்த்த₂த்தோடு கூடிய ஸ்ரீராமாயணத்தைத் திருமலைநம்பியிடமிருந்து முழுவதையும் கேட்டறிந்த யதிராஜர், ஆசார்யரான அவரை வணங்கிப் பூசித்து, "ஆசார்யரே! திருவரங்கத்திற்குச் செல்ல அடி யேனுக்கு விடை கொடுத்தருளவேணும்" என்று நம்பியிடம் விண்ணப்பித்தார். கருணைக்கடலான நம்பியும் யதிராஜரைக் கடாக்ஷித்து, "வெகு தூரத்திலிருந்து எழுந்தருளியிருக்கும் தேவரீருக்கு அடியேன் என்ன ஸமர்ப்பிப்பேன்?" என்று கூறினார். எம்பெருமானார் அவ்வார்த்தையைக்கேட்டு,

५१. यदि स्थितं मनस्येवं गोविन्दं देहि मे गुरो!।
ततः श्रीशैलपूर्णार्यः सन्तुष्टो गुरुपुङ्गवः॥

५२. गोविन्दं यतिराजाय ददौ तोयपुरस्सरम्।
अनुज्ञातस्तेन गुरुणा ततो लक्ष्मणदेशिकः॥

५३. गोविन्दसहितः प्राप्य घटिकाचलमादरात्।
नत्वा नृसिंहं देवेशं रमन्तं घटिकाचले॥

५४. श्रीगृध्रसरसस्तीरे भान्तं विजयराघवम्।
प्रणम्य काञ्चीं गत्वाऽथ काञ्चीपूर्णमुपागतः॥

५५. गुरुसेवाविहीनस्य गोविन्दस्य महात्मनः।
मुखादिषु च स्वाङ्गेषु वैवर्ण्यं समजायत॥

---

ஆசார்யோத்தமரான நம்பியைக் குறித்து, "ஆசார்யரே! தேவரீர் இவ்வண்ணம் திருவுள்ளம் பற்றினுல், கோ₃விந்த₃ரை எனக்கு அளிக்கவேணும்" என்று விண்ணப்பித்தார். அதற்குப்பின் ஆசார்யோத்தமரான பெரிய திருமலைநம்பி மிகவுகந்தவராய் கோ₃விந்த₃ரை யதிராஜருக்கு (நீர்) தா₄ரை வார்த்து தா₃னம் செய்து கொடுத்தார்.

### கச்சியை அடைதல்

52*-54. ஆசார்யரான நம்பியினுல் விடைகொடுக்கப் பெற்ற ஸ்ரீராமாநுஜர் கோ₃விந்த₃ரோடு கூடியவராய் 'க₄டிகாசலம்' எனப்படும் சோளஸிம்ஹபுரத்தை அடைந்து, அங்கு எழுந்தருளியிருக்கும் தே₃வர் தலைவனுன நரசிங்கனை வணங்கி, திருப்புட்குழியில் க்₃ருத்₄ரபுஷ்கரிணிக்கரையிலே எழுந்தருளியிருக்கும் விஜயராக₄வப் பெருமாளை ஸேவித்து, காஞ்சிக்குச் சென்று திருக்கச்சி நம்பியோடு சேர்ந்தார்.

### கோ₃விந்த₃ரும் திருமலைநம்பியும்

55-*64. ஆசார்யரான திருமலைநம்பிக்குக் கைங்கர்யம் செய்யப்பெருமையால் மஹாத்மாவான கோ₃விந்த₃ருக்கு

௫௬. दृष्ट्वा मुखादिवैवर्ण्यं गोविन्दस्य महात्मनः।
गोविन्द! वेङ्कटगिरिं गत्वा पूर्णं प्रणम्य च॥

௫௭. तस्मात्त्वं पुनरागच्छ तमित्युक्त्वा यतीश्वरः।
गोविन्दं प्रेषयित्वाथ वृषाद्रिं वैष्णवैस्सह॥

௫௮. काञ्चीपूर्णेन वरदं सेवयन् सुखमास्थितः।
गोविन्दो वेङ्कटगिरिं संप्राप्य सहसा तदा॥

௫௯. श्रीशैलपूर्णसदनद्वारदेशमुपागतः।
तत्रत्याः वैष्णवास्तस्मै तं पूर्णाय न्यवेदयन्॥

௬௦. श्रीशैलपूर्णस्तच्छ्रुत्वा कुपितो वाक्यमब्रवीत्।
गोविन्दं प्रति वक्ष्यध्वं भ्रान्त! याहीति वैष्णवाः!।

௬௧. तस्य देवी तु तच्छ्रुत्वा भर्तारमिदमब्रवीत्।
बहुदूरादागताय गोविन्दायाऽऽश्रिताय च॥

---

முகம் முதலான அவயவங்கள் வெளுத்துவிட்டன. இப்படி மஹாபுருஷரான கோ₃விந்த₃ருக்கு உடம்பு வெளுத்து விட்டதைக்கண்ட யதிராஜர், "கோ₃விந்த₃ரே! திருமலைக்குச் சென்று திருமலைநம்பியை வணங்கித் திரும்பி வருவீர்" என்று உரைத்தார். உடனே (இரண்டு) ஸ்ரீவைஷ்ணவர் களோடுகூட கோ₃விந்த₃ரைத் திருமலைக்கு அனுப்பிவிட்டுத் திருக்கச்சிநம்பியோடு தே₃வப்பெருமாளை ஸேவித்துக் கொண்டு உகந்து எழுந்தருளியிருந்தார் யதிராஜர். கோ₃விந்த₃ரும் சடக்கெனத் திருமலைக்குச்சென்று திருமலை நம்பியின் திருமாளிகை வாயிலை அடைந்தார். அங்குள்ள ஸ்ரீவைஷ்ணவர்கள் அவர் வந்திருப்பதை நம்பிக்கு விண் ணப்பித்தார்கள். அதைக்கேட்ட நம்பி மிகக் கோபம் கொண்டவராய், "வைஷ்ணவர்களே! 'பித்தனே! திரும்பிப் போ' என்று கோ₃விந்த₃ரிடம் சொல்லுவீர்களாக" என்று உரைத்தார். அதைக்கேட்ட நம்பியின் தே₃விகள்—ப₄ர்த்தா

६२. तीर्थप्रसादमपि च प्रदातुं नहि शक्यते?।
भार्यया भाषितं वाक्यं श्रुत्वा पूर्णोऽब्रवीदिदम्॥

६३. विक्रीतस्य पशोर्लोके को वा घासं प्रदास्यति?।
ततो निराशो गोविन्दः प्रणम्य गुरुमन्दिरम्॥

६४. सहसा वेङ्कटगिरेः काञ्चीं प्रति समागतः।
तद्वृत्तान्तं वैष्णवेभ्यो गोविन्दस्य निशम्य सः॥

६५. संश्लाघ्य तस्य पूर्णस्य सर्वज्ञत्वं सविस्मयः।
स्ववात्सल्यगुणैस्तस्य व्यपोह्यार्तिं यतीश्वरः॥

६६. कारयित्वाऽथ पूर्णाय गोविन्देनाभिवादनम्।
काञ्चीपूर्णेन सहसा प्रेषितो यतिपुङ्गवः॥

---

வான நம்பியைப் பார்த்து, "வெகு தூரத்திலிருந்து வந்திருப்பவனாய், நம் அடியானான கோ₃விந்த₃னுக்குத் தீர்த்த₂ ப்ரஸாத₃ங்களாவது கொடுக்கக்கூடாதா ?" என்று விண்ணப்பித்தாள். மனைவியின் இவ்வார்த்தையைக்கேட்ட நம்பி, 'விற்ற பசுவுக்குப் புல்லிடுவாருண்டோ ?' என்று கூறிவிட்டார். கோ₃விந்த₃ரும் ஆசையற்றுப் போனவராய், ஆசார்யரின் திருமாளிகையை வணங்கி, உடனே திருமலையிலிருந்து புறப்பட்டுக் காஞ்சீபுரத்தைச் சென்றடைந்தார்.

## யதிராஜர் திருவரங்கம் சேர்தல்

64*-69. கோ₃விந்த₃ர் திருமலைக்குப் போய்வந்த செய்தியை வைஷ்ணவர்களிடமிருந்து கேட்ட யதிராஜர், வியப்புற்றவராய், திருமலைநம்பியின் ஸர்வஜ்ஞத்வத்தைக் கொண்டாடி, தமது வாத்ஸல்யம் முதலிய கு₃ணங்களைக் காட்டி, கோ₃விந்த₃ருடைய வருத்தத்தைத் தீர்த்து, கோ₃விந்த₃ரைத் திருக்கச்சிநம்பிக்கு ப்ரணாமம் செய்யும்படிசெய்து,

६७. प्रतस्थे रङ्गनगरं गोविन्दसहितस्तदा ।
ग्राममष्टसहस्राख्यं भूयः संप्राप्य सत्वरम् ॥

६८. यज्ञेशेन कृतां पूजामङ्गीकृत्य यतीश्वरः ।
गोविन्दसहितो धीमान् श्रीरङ्गं प्रतिपेदिवान् ॥

६९. श्रीरङ्गवासिनस्सर्वे प्रत्युद्गम्याभिवाद्य च ।
वैष्णवा यतिराजाय संतोषं परमं ययुः ॥

७०. ततो यतीन्द्रो रङ्गेशं प्रणम्य प्राञ्जलिः स्थितः ।
प्रेम्णा रङ्गेश्वरो वीक्ष्य यतिराजं प्रहर्षितः ॥

७१. इत्युवाच प्रवालोष्ठस्फुरद्दशनसुप्रभः ।
यतीन्द्र ! वेङ्कटगिरिं गत्वा नत्वा रमासखम् ॥

---

திருக்கச்சிநம்பியால் விரைவில் விடைகொடுக்கப்பெற்ற வராய், கோ₃விந்த₃ரோடு கூட அப்போதே ஸ்ரீரங்க₃த்திற்குப் புறப்பட்டார். அப்போதும் 'அஷ்டஸஹஸ்ரம்' எனும் க்₃ராமத்தை அடைந்து, யஜ்ஞேஶரால் அளிக்கப்பட்ட ஆராத₄னத்தை ஏற்றுக்கொண்டு, விரைவில் கோ₃விந்த₃ ரோடுகூட ஸ்ரீரங்க₃த்தை அடைந்தார். ஸ்ரீரங்க₃த்தில் வாழும் அனைவரும் எதிராஜரை எதிர்கொண்டழைத்து வணங்கிப் பேரானந்தமடைந்தனர்.

## ஸ்ரீரங்க₃நாத₂னின் வரவேற்பு

70-75 அதற்குப்பின் எதிகட்கிறைவர் ஸ்ரீரங்க₃நாத₂னை வணங்கிக் கைகூப்பி நின்றார். அரங்கநகரப்பனும் தன் சோதிப் பவளச்செவ்வாயைத் திறந்து யதிராஜரை அன்புடன் கடாக்ஷித்து, மிகவுகப்புடன், "யதிராஜரே! எம்பெருமானாரே! திருவேங்கடமலைக்குச் சென்று, அலர்மேல்மங்கையுறை மார்பனை வணங்கி, ஶிஷ்ய வர்க்க₃ங்களோடு க்ஷேமமாக எழுந்தருளினீரோ?"

७२. किमागतोऽसि मन्नाथ क्षेमेण स्वजनैस्सह ।
शिष्यसङ्घसमेताय मन्नाथाय महात्मने ॥

७३. शठकोपं च तीर्थं च प्रसादं प्रददौ हरिः ।
यतीन्द्रः प्रतिगृह्याशु तत्सर्वं निर्गतस्ततः ॥

७४. मठं प्रविश्य सन्तुष्टः स्वशिष्यैस्सुखमास्थितः ।

७५. रामायणार्थमधिकृत्य बहुप्रकारं
श्रीशैलपूर्णनिकटे मतिमान् कृतार्थः ।
प्राप्ताखिलार्थनिचयः परमं प्रहर्षं
संप्राप्य रङ्गनगरं सुखमध्युवास ॥

इति श्रीप्रपन्नामृते रामानुजचरित्रे भूरिश्रीशैलपूर्णाचार्यात्
चतुर्विंशतिप्रकारेण रामायणार्थश्रवणं नाम त्रिंशोऽध्यायः ॥

---

என்று க்ஷேமம் வினவினன். ஶிஷ்யவர்க்கங்களோடு கூடின மஹாத்மாவான எம்பெருமானருக்கு ஸ்ரீஶடகோபனையும், தீர்த்த ப்ரஸாதங்களையும் அளித்தருளினன் எம்பெருமான். யதிராஜரும் அவ்வனைத்தையும் ஏற்றுக் கொண்டு, அங்கிருந்து புறப்பட்டு, விரைவில் தம் மடத்தை அடைந்து, தம் ஶிஷ்யர்களோடு கூட உகப்போடும், ஸுகமாகவும் எழுந்தருளியிருந்தார். பேரறிவாளரான யதிராஜர் திருமலைநம்பியிடம் ஸ்ரீராமாயணார்த்தத்தைப் பல (24) ப்ரகாரமாகக் கற்றறிந்து பேறுபெற்றவராய், அறியவேண்டிய அர்த்தங்கள் அனைத்தையும் அறியப் பெற்றவராய், பேரானந்தத்துடன் ஸ்ரீரங்க திவ்யநகரத்திலே ஸுகமாக எழுந்தருளியிருந்தார்.

ஸ்ரீப்ரபந்நாம்ருதத்தில், ராமானுஜ சரித்திரத்தில்
பெரியதிருமலைநம்பியிடமிருந்து இருபத்துநான்குவிதமாக
ஸ்ரீராமாயணார்த்தத்தைக் கேட்டதாகிற
முப்பதாம் அத்தியாயம் நிறைவுபெற்றது.

एकत्रिंशोऽध्यायः

१. अथ गोष्ठ्यां यतीन्द्रस्य गोविन्दो गुरुदैवतः।
विहारं सुमहत्तस्य विग्रहानुभवं तथा॥

२. तत्पादकैङ्कर्यमपि तत्संल्लापादिकं च यत्।
जितनिद्रो जितालस्यः प्रत्यहं गुरुसेवया॥

३. तदेवानुभवंस्तस्थौ लक्ष्मणार्यस्य सन्निधौ।
ततः कदाचित्सदसि वैष्णवाश्च यतीश्वरः॥

४. गोविन्दज्ञानवैराग्यगुरुभक्त्यादिसद्गुणान्।
विलोक्य विस्मयं गत्वा गोविन्दं तुष्टुवुस्तदा॥

---

*முப்பத்தோராவது அத்தியாயம்*

# கோ3விந்த3ரின் துரீயாச்ரம ஸ்வீகாரம்

### கோ3விந்த3ரின் நிஷ்டை2

1-*3. யதிராஜருடைய கோ3ஷ்டி2யில் ஆசார்யரையே தெய்வமாகக்கொண்ட கோ3விந்த3ருக்கு அங்வயம் ஏற்பட்டது. அந்த யதீந்த்3ரருடைய திருமேனியின் அநுப4வமும், அவருடைய திருவடிகளில் கைங்கர்யமும், அவரோடு உசாவுவது முதலானவையுமாகப் பெருத்த அநுப4வமாக ஏற்பட்டுவந்தன. தூக்கத்தையும், சோம்பலையும் வென்றவராய், எப்போதும் ஆசார்ய கைங்கர்யம் செய்துகொண்டு எம்பெருமானார் கோ3ஷ்டி2யை அநுப4வித்துக்கொண்டு அவர் ஸந்நிதி4யிலேயே வாழ்ந்து வந்தார் கோ3விந்த3ர்.

### கோ3விந்த3ரின் தற்புகழ்ச்சி

3*-*18. அப்போது ஒருசமயம் கோ3ஷ்டி2யிலே யதிராஜரும், வைஷ்ணவர்களும், கோ3விந்த3ரின் வைராக்3யம், ஆசார்யப4க்தி முதலான நற்குணங்களைக்

५. गोविन्दस्तु स तं श्रुत्वा ममायं चार्हति स्तवः।
इत्यात्मश्लाघनं चक्रे सुतरां गुरुसन्निधौ॥

६. यतिराजस्तु तं दृष्ट्वा गोविन्दं प्रत्यभाषत।
भवन्तं हि जनाः स्तोत्रं कुर्वन्ति कृपया यदि॥

७. कार्यं नैच्यानुसन्धानं हित्वात्मश्लाघनं कृतम्।
तवानुरूपं किमिदं गोविन्दार्य! विपश्चितः॥

८. तच्छ्रुत्वा लक्ष्मणार्यस्य वचनं विनयान्वितः।
बद्धाञ्जलिरुवाचेदं सर्वेषां शृण्वतां तदा॥

९. अयमात्मा कृपासिन्धो! भगवन्माययाऽऽवृतः।
मूढश्चतुरशीत्यां तु लक्षेषु यतिपुङ्गव!॥

---

கண்டு வியப்புற்று, அவரைத் துதித்தனர். கோ₃விந்த₃ர் அப்புகழுரையைக்கேட்டு, "இந்தத் துதிகள் எனக்குப் பொருந்தியவையே" என்று ஆசார்யன் திருமுன்பே மிகவும் தற்புகழ்ச்சி செய்துகொண்டார். அதைக்கண்ட யதிராஜர், "உம்மை மற்றவர்கள் க்ருபையோடு புகழ்ந்துரைத்தால், நீர் நைச்யாநுஸந்த₄ானம் செய்யவேண்டியிருக்க, தற்புகழ்ச்சி செய்துகொண்டீரே; கோ₃விந்த₃ரே! அறிவாளியான உமது ஸ்வரூபத்துக்கு இது தகுமா?" என்று கோ₃விந்த₃ரைக் கேட்டார். எம்பெருமானருடைய அந்த வசனத்தைக்கேட்டு அடக்கமுடைய கோ₃விந்த₃ர், கோ₃ஷ்டி₂யில் அனைவரும் கேளாநிற்க, கைகூப்பியவராய், பின்வருமாறு விண்ணப்பித்தார்—"கருணைக்கடலான யதிராஜரே! எம்பெருமானுடைய மாயையாலே சூழப்பட்ட இந்த ஜந்துவாகிற அடியேன் அறிவற்றவனாய், எண்பத்து நான்கு லட்சம் வகைப்பட்டதாய், (ஒவ்வொன்றும்) பலவித₄மாய், விசித்ரமான க்ருமி, புழு முதலான யோனிகளிலே மறுபடியும் மறுபடியும் பிறந்து, பெருந்துன்பத்தைப் பலகால் அநுப₄வித்து, மறுபடியும் மறுபடியும் மரண

१०. सोऽहं नानाविचित्रासु कृमिकीटादियोनिषु ।
भूत्वा भूत्वा महद्दुःखमनुभूयानुभूय च ॥

११. मृत्वा मृत्वा महाघोरान् नरकाननुभूय च ।
केनचित्पुण्यलेशेन बहुकालादनन्तरम् ॥

१२. घुणाक्षरलिपिन्यायादयं देहस्समागतः ।
देहेऽस्मिन् मूढभावेन मार्गभ्रष्टोऽभवं किल ॥

१३. कालहस्त्यां जटां धृत्वा भस्मोद्धूलितदेहवान् ।
शैवनामधरश्चैव समयाचारतत्परः ॥

१४. नीरवत्क्षीरसंक्षिप्तवर्णाभेदेन हीदृशः ।
एतादृशो दुरात्मापि स्वामिन्नारायणात्मनः ॥

१५. भवत्परमहंसस्य नैपुण्यात् यतिभूपते! ।
यदहं प्राप्तवान् मेदं यस्मादास्समुपागतः ॥

---

மடைந்து, மிகக்கொடிய நரகங்களை அநுப₄வித்து, நெடுங் காலத்திற்குப் பிறகு, 'புழுக்குறித்து எழுத்தாமா போலே'ஏற் பட்ட ஏதோ ஒரு புண்யலேஶத்தாலே, இந்த தே₃ஹத்தை அடைந்துவிட்டேன். இந்த தே₃ஹத்தை அடைந்த பின்பும் அறிவிலியாய் வழிதவறி நின்றேனன்றோ! காளஹஸ்தியிலே சடையை த₄ரித்துக்கொண்டு, உடம்பெங்கும் சாம்பலைப் பூசிக்கொண்டு, 'உள்ளங்கைகொணர்ந்த நாயனார்' எனும் சைவப்பெயரை வைத்துக்கொண்டு, அவர்களுடைய மத ஒழுக்கத்தில் ஈடுபட்டிருந்தேன். பாலில் கலந்த நீர் அதன் வர்ணத்தையே பெறுவதுபோலே அவர்களை ஒத்தவனாய் இருந்தேன். ஸ்வாமிந்! யதிராஜரே! இத்தகைய து₃ராத்மா வாயிருந்தபோதிலும், நாராயண ஸ்வரூபியாய் பரமஹம் ஸரான தே₃வரீருடைய திறமையாலே(ஹம்ஸம் பாலையுண்டு நீரைப் பிரிப்பதுபோலே) அவர்களிடமிருந்து பிரித்தெடுக் கப்பட்டு, தே₃வரீருக்கு அடிமையானேன். தே₃வர்களுக்கும்

१६. यस्मादियं कृपा जाता भवतो दुर्लभाऽमरैः ।
आत्मानमप्यहं तस्मात् स्तौमि सा भवतः स्तुतिः ॥

१७. तच्छ्रुत्वा लक्ष्मणाचार्यः साधु साध्विति हृष्टवान् ।
निर्मलेन हृदा नित्यं भवता नः स्मरादरात् ॥

१८. तदेवालं ममेत्युक्त्वा गोविन्दं परिषस्वजे ।
कदाचित्तु गृहद्वारे वेश्यायाश्चारुणोदये ॥

१९. नित्यकर्मादिरहितं दृष्ट्वा गोविन्दमास्थितम् ।
सभायां वैष्णवः कश्चित् यतीन्द्राय न्यवेदयत् ॥

२०. यतिराजः स तच्छ्रुत्वा गोविन्दमिदमब्रवीत् ।
वाराङ्गनागृहद्वारे किमर्थं स्थीयते त्वया ॥

२१. प्रतिगृह्य वचस्तस्य यतीन्द्रस्य जगद्गुरोः ।
एवं विज्ञापनं चक्रे गोविन्दः स कृताञ्जलिः ॥

---

கிட்டாத இந்தக் கருணை அடியேனுக்குக் கிட்டியதாலே அடியேன் என்னையே துதித்துக்கொள்கிறேன். இது உம்முடைய துதியேயன்றோ!" என்று. இதைக் கேட்ட ஸ்ரீராமாநுஜர் 'நல்லீர், நல்லீர்' என்று உகந்தவராய், "உம்முடைய கு₃ணங்கள் நமக்கும் உண்டாமபடி உமது குற்றமற்ற நெஞ்சாலே எம்மை எப்போதும் அன்புடன் நினைப்பீராக; அதுவே எனக்குப்போதும்" என்று கூறி கோ₃விந்த₃ரை வாரி எடுத்து அணைத்துக்கொண்டருளினார்.

### கோ₃விந்த₃ரின் ரஸிக்யமும், கு₃ருப₄க்தியும்

18*-24. ஒருசமயம் விடியற்காலை வேளையிலே, காலையில் செய்யவேண்டிய நித்யகர்மங்களைச் செய்யாமல் ஒரு வேசியின் வீட்டுவாசலில் கோ₃விந்த₃ர் நிற்பதைக்கண்டு, ஒரு வைஷ்ணவர், கோ₃ஷ்டி₂யிலே எம்பெருமானாரிடம் விண்ணப்பித்தார். யதிராஜர் அதைக்கேட்டு, 'தா₃ஸியின்

२२. गायन्तो मधुरं गाथा भवदीयाश्च गायकाः।
तत्र स्थितो यतिश्रेष्ठ! ताः शृण्वन्नास्थितोऽभवम्॥
२३. गाथापारायणं तस्मात् विदित्वा वैष्णवात् गुरोः।
श्रावण्यातिशयस्तस्य कियानिति यतीश्वरः॥
२४. गोविन्दस्य वचः श्रुत्वा भक्तिपूतमकल्मषम्।
यतीन्द्रस्तु प्रहृष्टात्मा विस्मयं परमं ययौ॥
२५. कालत्रये यतीन्द्रस्य कैङ्कर्यं करणत्रयैः।
कुर्वन्ननन्यहृदयः स गोविन्दः सुखं स्थितः॥

---

வீட்டு முன்னல் நீ எதற்காக நின்ருய்?' என்று கோ₃விந்த₃ரைக் கேட்டார். ஜக₃த்₃கு₃ருவான யதிராஜரின் அந்த வார்த்தையைச் செவியுற்ற கோ₃விந்த₃ர் கைகூப்பியவராய் பின்வருமாறு விண்ணப்பித்தார்—"யதிராஜரே! தேவரீரைப் பற்றிய செவிக்கினிய தாலாட்டுப் பாடல்களே, பாடவல்லார் பாடுவதை அங்கு கேட்டேன். தேவரீருடைய கு₃ணநுப₄வத்தால் கட்டுண்டு மேலே செல்லமாட்டாமல் அங்கேயே நின்றேன்"என்று. இச்செய்தியைச் சொன்ன வைஷ்ணவரிடமிருந்து அங்கு தாலாட்டுப்பாடல் பாடப்பட்டது உண்மையே என்று அறிந்து 'இவருடைய கு₃ருப₄க்தி எத்தகையது!' என்று நினைத்து, கோ₃விந்த₃ருடைய வார்த்தையானது ப₄க்தியினுல் பரிஶுத்₃தி₄பெற்றதாகவும், குற்றமற்றதாகவும் உள்ளது என்று நினைத்து மிகவுகந்த எதிராஜர் மேலான வியப்பை அடைந்தார்.

### கோ₃விந்த₃ரின் விஷய வைராக்₃யம்

25-40. இறந்தகாலம், நிகழ்காலம், வருங்காலம் என்னும் முக்காலங்களிலும், 'மனோவாக்காயங்கள்' என்கிற முக்கரணங்களாலும் எதிகட்கிறைவர்க்குக் கைங்கர்யம் செய்துகொண்டு, வேறெதிலும் நெஞ்சு செலுத்தாதவராய் கோ₃விந்த₃ர் ஸுக₂மாய் வாழ்ந்துவந்தார். திருமலை நம்பி

२६. श्रीशैलपूर्णभगिनी गोविन्दजननी तदा।
साध्वी द्युतिमती नाम गोविन्दमिदमब्रवीत् ॥

२७. जाता ऋतुमती भार्या तव गोविन्द! संप्रति।
तच्छ्रुत्वा तामुवाचेदं गोविन्दो मातरं प्रति॥

२८. यतिराजं विसृज्याहं यदैकान्ते समास्थितः।
तदा मे दर्शयस्वार्ये भार्यामादाय सत्वरम् ॥

२९. बहुकालं समाश्रित्य तेनोक्तसमयं सती।
अनवाप्य यतीन्द्राय शशंस निखिलं हि तत् ॥

३०. मन्नाथः स तदाकर्ण्य द्युतिमत्याः शुभं वचः।
गोविन्दार्यं समाहूय व्याजहार यतीश्वरः॥

३१. तां कुरुष्वार्तिविश्रान्ति ऋतुकाले यथाविधि।
तमो विमृज्य शय्यायां शयनं कुरु सुव्रत!॥

---

யின் ஸஹோதரியாய், 'த்3யுதிமதி' என்னும் திருநாமம் உடையவளாய், ஆத்மகு3ணங்கள் நிறைந்தவளாய் கோ3விந்த3ரின் தாயாரான ஸ்ரீதே3வி அப்போது கோ3விந்த3ரை அடைந்து "கோ3விந்த3ரே! உமது மனைவி இப்போதே ருதுமதியாக (புஷ்பவதியாக - பூப்படைந்தவளாக) ஆனாள்" என்று கூறினாள். அதைக்கேட்டு கோ3விந்த3ர் தம் தாயைக் குறித்து, "அம்மா! யதிராஜரைவிட்டு நான் எப்போது தனியாய் ஏகாந்தத்தில் இருக்கிறேனே அப்போது சடக்கென என்மனைவியை எனக்குக் காட்டு வாய்" என்று கூறினார். நீண்டநாள் அவர்சொன்ன சமயத்திற்குக் காத்திருந்தும். அக்காலம் கிடைக்கப் பெறுமல், அந்தத் தாயார் யதிராஜரிடம் வந்து அனைத்தையும் சொன்னாள். த்3யுதிமதியினுடைய அந்த மங்க3ளமான வார்த்தையைக்கேட்ட யதிராஜர் கோ3விந்த3ரைக் கூப்பிட்டு "நல்ல வ்ரதமுடையவரே! ஶாஸ்த்ர விதி4ப்படி

३२. प्रतिगृह्य गुरोर्वाक्यं गोविन्दो गृहमागतः ।
शय्यायां सुखमासीनो भार्यायै जितमन्मथः ॥

३३. ज्ञानं भक्तिं च वैराग्यं बुबोध निखिलं निशि ।
स्नुषायाः सर्ववृत्तान्तं विदित्वा विशदं तदा ॥

३४. चिन्ताशोकसमाविष्टा माता सुतमथाब्रवीत् ।
कर्तुं तवेदं गोविन्द! शास्त्रज्ञस्योचितं किमु ॥

३५. मातुर्वचनमाकर्ण्य गोविन्दः प्रत्यभाषत ।
अन्तर्यामिप्रकाशे तु संपूर्णप्रभया प्रभु! ॥

३६. न तमो लक्ष्यते चित्ते कामलोभादिकारकम् ।
आचार्यकृपया मेऽद्य को दण्डश्चात्र विद्यते ॥

---

உமது மனைவிக்கு ருதுகாலத்தில் ருதுஶாந்தியைச் செய்வீராக, இருள் இருக்குமிடம் தேடி அவளோடு ஒரே படுக்கையில் சயனிப்பீராக.” என்று கூறினர். ஆசார்யருடைய அந்த வார்த்தையை ஏற்றுக்கொண்ட கோ₃விந்த₃ர் வீட்டிற்கு வந்து மனைவியோடு படுக்கையில் ஸுக₂மாக வீற்றிருந்து, காமத்தை வென்றவராகையாலே அவ்விரவு முழுவதும் அவளுக்கு ஜ்ஞாநம், ப₄க்தி, வைராக்₃யம் ஆகிய அனைத்தையும் உபதே₃ஶித்தார். மணூட்டுப் பெண்ணிடமிருந்து இவையனைத்தையும் தெளிவாகக் கேட்டறிந்து கவலையும், வருத்தமும்கொண்ட தாயார் தம் பிள்ளையைப் பார்த்து, “கோ₃விந்த₃ா! ஶாஸ்த்ரமறிந்த நீ இப்படிச் செய்யலாமா?” என்று கேட்டாள். தாய் வார்த்தையைக் கேட்ட கோ₃விந்த₃ர், “தாயே! ஆசார்யருடைய கருணையால் நிறைந்த ஒளியோடு அந்தர்யாமியான எம்பெருமான் ப்ரகாஶித்துக்கொண்டிருக்கும்போது, காமம், ஆசை முதலானவற்றை விளைக்கும் இருள் என் நெஞ்சில் தென்படவில்லையே! இதற்கு எனக்கு இப்போது என்ன த₃ண்ட₃னை உள்ளது?” என்று பதிலுரைத்தார்.

३७. वृत्तान्तमात्मजस्यास्य तन्निशम्याञ्जसा तदा।
न्यवेदयद्यतीन्द्राय सा विषण्णा भृशं सती॥

३८. तन्निशम्याथ तद्वाक्यं यतीन्द्रः करुणाकरः।
आनयित्वा स गोविन्दं सस्मितं वाक्यमब्रवीत्॥

३९. भवता किं कृतं कार्यं निशायां साधु वैष्णव!।
प्रतिगृह्य गुरोर्वाक्यं चक्रे विज्ञापनं सुधीः॥

४०. तमो विमृग्य भार्यां त्वं भजस्वेति त्वयेरितम्।
अन्तर्यामिप्रकाशे तु न तमो लक्ष्यते क्वचित्॥

४१. निशम्य तद्वचो हृष्टः सन्तुष्टो विस्मयं गतः।
व्याजहार शुभं वाक्यं गोविन्दं शास्त्रवित्तमः॥

---

தன் பிள்ளையின் இந்த நடத்தையை நன்கு கேள்விப் பட்ட அந்தத் தாய் மிக வருந்தியவளாய், யதிராஜருக்கும் அதை விண்ணப்பித்தாள். கருணைக்கடலான எதிராஜரும் அதைக் கேட்டு கோ₃விந்த₃ரை அழைத்துக்கொண்டு வரச்சொல்லி, "ஸாது₄வைஷ்ணவரே! இரவிலே நீர் என்ன (நல்ல) காரியத்தைச் செய்தீர்?" என்று புன்சிரிப்போடு கேட்டார். ஆசார்யரின் அவ்வார்த்தையைக்கேட்ட அறிவாளியான கோ₃விந்த₃ர் பின்வருமாறு விண்ணப்பித்தார்:—" 'இருளைத் தேடி நீ உன் மனைவியை அடைவாய்' என்று தேவரீரால் நியமிக்கப்பெற்றது. அந்தர்யாமியான எம்பெருமான் எப்போதும் ப்ரகாஶித்துக்கொண்டிருக்கையில் நான் எங்குமே இருளைக் காணவில்லையே" என்று

### க்₃ருஹஸ்த₂த₄ர்மோபதே₃ஶம்

41-*46. கோ₃விந்த₃ரின் அவ்வார்த்தையைக்கேட்டு, ஶாஸ்த்ரமறிந்தவர்களில் தலைவரான யதிராஜர் மிகவும் த்ருப்தியுடன் உகப்படைந்து வியப்புற்றவராய், கோ₃விந்த₃ரைக் குறித்து மங்க₃ளமான வாக்யத்தைப்பின்வருமாறு கூறினார்—

४२. यत्राश्रमे स्थितो धर्मः तत्र तं हि समाचरेत्।
पातित्यमन्यथैवेति सर्वशास्त्रेषु निर्णयः॥

४३. अनाश्रमी न संतिष्ठेत् इत्येषा शास्त्रपद्धतिः।
आश्रमस्थेन विदुषा तेषु धर्मोपयोगिषु॥

४४. भोगेषु भोग्यताबुद्धिः कर्तव्या न कदाचन।
कैङ्कर्यबुद्धिः कर्तव्या तेषु भोगेषु संततम्॥

४५. शास्त्रदृष्टेषु महतां गृहस्थाश्रमधर्मिणाम्।
विषयादिषु सञ्जाता विरक्तिर्भवतो यदि॥

४६. गोविन्दार्याधुना शीघ्रं संन्यासः संभविष्यति।
तद्वचः प्रतिगृह्याशु यतीन्द्रं प्रणिपत्य सः॥

---

"எந்த மனிதன் எந்த ஆஶ்ரமத்தில் இருக்கிறானோ, அவனுக்கு அந்த ஆஶ்ரமத்துக்குரிய த₄ர்மமே த₄ர்மமாகும். அதையே அவன் அநுஷ்டி₂க்கவேண்டும். இல்லாவிடில் பதிதன் (அறத்திலிருந்து வழுவியவன்) ஆகிறான். 'நாலு ஆஶ்ரமங்களுள் ஏதாவதொன்றில் நில்லாதவனாக இருக்கக் கூடாது' என்று ஶாஸ்த்ரம் வழி வகுத்தது. அறிவாளியாயிருப்பவன் ஓர் ஆஶ்ரமத்தில் இருக்கும்போது அந்த ஆஶ்ரம த₄ர்மங்களுக்குரிய போ₄க₃ங்களை ஒருபோதும் தனக்கு இனியவையாக நினைக்கலாகாது. ப₄க₃வத்₃ ப₄াக₃வத கைங்கர்யம் என்னும் நினைவையே அந்த போ₄க₃ங்கள் விஷயத்தில் எப்போதும் கொள்ளவேண்டும். கோ₃விந்த₃ரே! க்₃ருஹஸ்தா₂ஶ்ரம த₄ர்மத்தைக் கடைப்பிடிக்கும் பெரியவர்களுக்கு ஶாஸ்த்ரங்களில் அநுமதிக்கப்பட்டுள்ள பத்நீபோ₄க₃ம் முதலானவற்றில் உமக்கு வைராக்₃யம் ஏற்பட்டு விட்டதாகில் நீர் உடனே ஸந்யாஸத்தைக் கைக்கொள்ளவேண்டும்" என்று.

४७. संन्यासं देहि देहीति प्रार्थयामास भूरिशः।
प्रार्थितस्तेन बहुधा गोविन्देन यतीश्वरः॥

४८. संन्यासं प्रददौ तस्मै शिष्याय कृपया तदा।
वैराग्यज्ञानभक्त्यादिसद्गुणैः संप्रहर्षितः॥

४९. मन्नाथ इति तन्नाम स्वीयं तस्य चकार सः।
भीतस्तेन स गोविन्दः प्रणिपत्य यतीश्वरम्॥

५०. एवं विज्ञापनं चक्रे बद्धाञ्जलिपुटस्तदा।
मन्नाथ इति लोकेषु त्वां तु लोकास्त्रयो विदुः॥

५१. जगद्गुरुर्भवान् साक्षात् फणिराजो न संशयः।
लोकेश्वरेश्वरगुरुर्विभूतिद्वयनायकः॥

---

## கோ3விந்த3ருக்கு ஸந்யாஸம் அளித்தல்

46*-48. எம்பெருமானாருடைய அவ்வார்த்தையைக் கேட்டு, எதிராஜரை வணங்கி, 'ஸந்யாஸத்தை அருள வேண்டும்; அருளவேண்டும்' என்று பலகால் ப்ரார்த்தித்தார் கோ3விந்த3ர். கோ3விந்த3ரால் பலகால் ப்ரார்த்திக்கப்பட்ட எதிராஜரும் ஶிஷ்யரான அவருக்கு அவருடைய ஜ்ஞாநம், வைராக்3யம், ப4க்தி முதலான நற்குணங்களைக் கண்டு உகந்தவராய் பேரருளுடன் ஸந்யாஸத்தை அளித்தார்.

## எம்பார் என்னும் திருநாமம் அளித்தல்

49-59. (கோ3விந்த3ருடைய ஜ்ஞாநப4க்திவைராக்3யங்களைக் கண்டு உகந்த) எதிராஜர் கோ3விந்த3ருக்கு எம்பெருமானார் என்னும் தம் திருநாமத்தையே இட்டருளினார். அதைக் கண்டு பயந்த கோ3விந்த3ர் கைகூப்பியவராய் எதிராஜரைக் குறித்து அப்போது இவ்வண்ணம் விண்ணப்பித்தார். "ஆசார்யரே! தேவரீரை மூவுலகினரும் எம்பெருமானார் என்றே அறிந்திருக்கின்றனர். லோகாசார்யரான தேவரீர்

५२. अहं कृतघ्नो दुर्मानी पापिष्ठः परवञ्चकः।
मिथ्याचाररतो मूढो नृशंसो दांभिकः शठः॥

५३. कथमर्हति तन्नाम ममैतस्य दुरात्मनः।
जगद्गुरोर्भगवतो भवतः सर्वपूजितम्॥

५४. यन्नाम जप्यं सर्वेषां पापिनामपि मुक्तिदम्।
लोके न पूज्यते स्वामिन् नामैकं गुरुशिष्ययोः॥

५५. यज्ञमूर्तेर्यथा हानिर्भविष्यति तथा मम।
तव नाम ततो भर्तुं सामर्थ्यं नास्ति मे गुरो!॥

५६. लक्ष्मणार्यः संप्रहृष्टः तद्वाक्येन यतीश्वरः।
मन्नाथनामपर्यायद्राविडाख्यार्पितं परम्॥

---

ஆதி₃ஶேஷனின் அம்ஶமாகவே இருப்பவர் என்பதில் ஐயமில்லை. உலகிலுள்ள ஈஶவரர்களுக்கெல்லாம் ஈஶ்வர ஞன எம்பெருமானுக்கே ஆசார்யராய், உப₄யவிபூ₄திக்கும் தலைவராய் இருப்பவர். நீசனேனுன அடியேனே செய்ந் நன்றி மறந்தவன்; அஹங்காரமுடையவன்; பெரும்பாவி; பிறரை வஞ்சிப்பவன்; பொய் ஒழுக்கத்தில் ஈடுபட்டவன்; அறிவிலி; கொடியசெயல் புரிபவன்; வெளிவேஷம் உடையவன்; தீயநெஞ்சை உடையவன். இப்படி து₃ராத் மாவாயிருக்கும் எனக்கு லோகாசார்யராய், ஜ்ஞாநாதி₃ கு₃ணங்கள் நிறைந்தவரான தேவரீருடையதாய், அனைவ ராலும் கொண்டாடப்படுவதாய், அனைவர்க்கும் ஜபிக்கத் தகுந்ததாய், பாபிகளுக்கும் முக்தியளிப்பதான எம் பெருமானுர் என்னும் திருநாமம் எப்படிப் பொருந்தும்? ஆசார்யனுக்கும், ஶிஷ்யனுக்கும் ஒரே பெயரை வைப்பது இவ்வுலகில் கொண்டாடப்படுவதில்லை. யஜ்ஞமூர்த்திக்கு ஏற்பட்டதுபோல் எனக்கும் ஸ்வரூப ஹாநியே ஏற்படும். ஆகையால் தேவரீருடைய திருநாமத்தைத் தாங்குவதற்கு

५७. आद्यन्तवर्णमाहृत्य एंबाराख्यं विधाय च।
गोविन्दाय ददौ तस्मै कृपया शिष्यवत्सलः ॥

५८. तदाप्रभृति तस्यासीत् गोविन्दस्य महात्मनः।
एम्बाराख्यं ततो नाम त्रैलोक्यविदितं महत् ॥

५९. निवृत्ततर्षो यतिसार्वभौमात्
संप्राप्य संन्यासमचञ्चलात्मा।
एम्बारनाम्ना सुतरां विरेजे
गोविन्ददेवो यतिराजवत् सः ॥

इति श्रीप्रपन्नामृते रामानुजचरिते गोविन्दार्यस्य चतुर्थाश्रमस्वीकरणं नाम एकत्रिंशोऽध्यायः ॥

---

எனக்கு ஶக்தியில்லை" என்று. இவ்வாக்யத்தைக் கேட்டு, ஶிஷ்யரிடம் வாத்ஸல்யம் உடையவராகையாலே எதிராஜரான ஸ்ரீராமாநுஜர் மிகவுகந்தவராய், 'பெருமானார்' என்னும் பத₃த்தின் முதலிலும், முடிவிலும் இருக்கும் 'ப்' 'ஆர்' என்னும் அக்ஷரங்களைச் சேர்த்து எம்பெருமானார் என்பதற்குப் பதிலாக 'எம்பார்' என்னும் தமிழ் நாமமாக ஆக்கி கோ₃விந்த₃ருக்கு அருளுடன் அளித்தார். அது தொடங்கி மஹாத்மாவான அந்த கோ₃விந்த₃ருக்கு 'எம்பார்' என்னும் திருநாமம் மூவுலகிலும் வழங்குவதாயிற்று. பாசங்கள் அற்றவரான கோ₃விந்த₃ப்பெருமாள் ஸந்யாஸத்தைப் பெறுவதில் உறுதியுடன் இருந்தமையால், எதிராஜரிடமிருந்து ஸந்யாஸத்தை அடைந்து, எம்பார் என்னும் திருநாமத்தைப்பெற்று, எதிராஜரைப்போலே மிகவும் விளங்கினார்.

ஸ்ரீப்ரபந்நாம்ருதத்தில், ராமாநுஜ சரித்திரத்தில்
கோ₃விந்த₃ப்பெருமாள் ஸந்யாஸத்தை ஏற்றலாகிய
முப்பத்தோராம் அத்தியாயம் நிறைவுற்றது.

## द्वात्रिंशोऽध्याय:

१. ततो यतीन्द्रो मतिमान् मनस्येवं व्यचिन्तयत् ।
पुरात्र रङ्गनगरे यामुनान्त्यदशागमे ॥

२. प्रतिज्ञातं नदीतीरे श्रीवैष्णवसभास्थले ।
श्रीभाष्यं लोकरक्षार्थं करिष्यामि न संशयः ॥

३. तस्मादवश्यं कर्तव्यं श्रीभाष्यमधुनैव हि ।
ततो यतीन्द्रः श्रीभाष्यं कर्तुकामो महायशाः ॥

४. विलोकनं विनाऽशक्यं वृत्तेर्बोधायनस्य वै ।
वेदान्तभाष्यकरणमिति निश्चित्य योगिराट् ॥

५. कूरेशसहितो धीमान् शारदापीठमभ्यगात् ।
यतीन्द्रो विबुधान् सर्वान् शारदापीठमाश्रितान् ॥

---

### முப்பத்திரண்டாம் அத்தியாயம்

## ஸ்ரீப₄ாஷ்ய நிர்மாணம்

### ஶாரதா₃ பீட₂ யாத்ரை

1-*5. பேரறிவாளரான எதிராஜர் பின்வருமாறு சிந்திக்கலுற்றார்—“யாமுநாசார்யர் பரமபத₃ம் எழுந்தருளிய போது இந்தத் திருவரங்கத்தில் ஸ்ரீ வைஷ்ணவர்கள் குழுவிலே ‘உலகை ரக்ஷிப்பதற்காக ஸ்ரீ ப₄ாஷ்யத்தைச் செய்வேன் என்பதில் ஐயமில்லை’ என்று காவேரிக்கரையில் நம்மால் ஆணையிடப்பட்டது. ஆகையால் ஸ்ரீப₄ாஷ்யத்தை இப்போதே நாம் அவஶ்யம் இயற்றவேண்டும்” என்று. ஜ்ஞாநியான எதிராஜர் ‘போ₃தா₄யநருடைய ப்₃ரஹ்ம ஸூத்ரவ்ருத்தி க்₃ரந்த₂த்தை ஸேவிக்காமல் உபநிஷத்துக்களுக்குப் பொருளுரைப்பது இயலாது’ என்று நிச்சயித்து, கூரத்தாழ்வானோடுகூட (காஷ்மீரத்திலுள்ள) ஶாரதா₃ பீட₂த்துக்குச் சென்றார்.

६. शास्त्रवादेन निर्जित्य तोषयामास शारदाम्।
सन्तुष्टया तया दत्तां वृत्तिं बोधायनस्य ताम्॥

७. संगृह्य सहसा धीमान् रङ्गं प्रति समाययौ।
शारदापीठविबुधा राहित्यात्पुस्तकस्य च॥

८. तस्य तत्र हि कोशानां विशोधनदिने तदा।
तत्पन्थानं ययुर्वेगाज्ज्ञातशङ्का यतीश्वरे॥

९. मासादनन्तरं मार्गे तत्कोशं यतिपुङ्गवात्।
बलात्संगृह्य ते दुष्टाः शारदापीठमाययुः॥

१०. ततो विषण्णं योगीशं कूरेशो वाक्यमब्रवीत्।
मा विषादं कुरुष्वात्र योगिराज! जगद्गुरो!॥

---

### வ்ருத்தி க்₃ரந்த₂த்தைப் பெறுதல்

5*-*7. ஶாரதா₃ பீட₂த்தில் உள்ள வித்₃வான்கள் அனைவரையும் ஶாஸ்த்ர வாத₃த்தினால் ஜயித்து, ஶாரதா₃ தே₃வியை யதிராஜர் உகப்பித்தார். உகந்தவளான அவளால் கொடுக்கப்பட்ட போ₃தா₄யந வ்ருத்தியைக் கைக்கொண்டு ஜ்ஞாநியான அவர் சடக்கெனத் திருவரங்கத்தை நோக்கிப் புறப்பட்டார்.

### வ்ருத்தியை இழத்தலும், ஆழ்வானின் மேதையும்

7*-12. ஶாரதா₃பீட₂த்தில் உள்ள வித்₃வான்கள் அங்குள்ள ஸ்ரீ கோஶங்களைப் பரிசோதிக்கும் தினத்தில், வ்ருத்தி க்₃ரந்த₂ம் அங்கு இல்லாமல் இருப்பதைக்கண்டு, எதிராஜரே அதைக் கொண்டுபோயிருக்கவேண்டும் என்று ஐயமுற்று, அவர் சென்றவழியில் வேகமாகப் பின் தொடர்ந்தனர். ஒருமாதம் கழித்து, வழியில் எதிராஜரிடமிருந்து, து₃ஷ்டர்களான அவர்கள் ப₃லாத்காரமாக வ்ருத்தி க்₃ரந்த₂த்தைப் பிடுங்கிக்கொண்டு ஶாரதா₃பீட₂த்துக்குத் திரும்பிவிட்டனர். அப்போது மிக வருந்திய யோகீ₃ந்த்₃ர

११. रात्रिकालेषु तत्सर्वं मयैवालोकितं दृढम्।
तत्सर्वं हृदये मेऽद्य वर्तते त्वत्कटाक्षतः॥

१२. सन्तुष्टस्तेन वाक्येन लक्ष्मणार्यो महायशाः।
कूरेशसहितः श्रीमान् श्रीरङ्गं प्राप सत्वरम्॥

१३. ततो यतीन्द्रः कूरेशदाशरथ्यादिदेशिकान्।
इत्थं जगाद वचनं लोकानुग्रहतत्परः॥

१४. तत्त्वमस्यादिवाक्यार्थज्ञानमेव हि साधकम्।
निःश्रेयसस्य वदतां कुदृष्टीनां दुरात्मनाम्॥

१५. मोक्षसाधनमित्येषां ज्ञानकर्मसमुच्चयम्।
वदतां च कुदृष्टीनां निराकृत्याहमद्य तत्॥

---

ரைக் கண்டு கூரத்தாழ்வான், "லோகாசார்யரான எதிராஜரே! இப்போது வருந்தவேண்டாம். இரவு நேரங்களில் அடியேனல் அந்த க்₃ரந்த₂ம் முழுவதும் நன்ருக ஸேவிக்கப்பட்டுவிட்டதாகையால் தேவரீருடைய கடாக்ஷத்தால் இப்போதும என் நெஞ்சில் உள்ளது" என்று வார்த்தை சொன்ஞர். பெரும்புகழாளரான ஸ்ரீராமாநுஜர் அந்த வாக்யத்தால் மிகவுகந்தவராய், ஆழ்வாஞேடுகூட விரைவில் ஸ்ரீரங்கத்தை அடைந்தார்.

## ஸ்ரீப₄ாஷ்யம் எழுதுதல்

13-*20. அதற்குப்பின் எதிராஜர் உலகத்தின் நன்மையில் உறுதிகொண்டவராகையாலே (தன் ஶிஷ்யர்களான) கூரத்தாழ்வான், முதலியாண்டான் முதலான ஆசார்யர்களைப் பார்த்து, பின்வருமாறு அருளிஞர்—" 'தத்த்வமஸி' [அந்தப் பரம்பொருள் நீயாகிருய்] முதலான ஜீவ ப்₃ரஹ்ம ஐக்யத்தைச் சொல்லும் உபநிஷத்₃ வாக்யங்களின் பொருளை அறிவதே மோக்ஷஸாத₄னம் என்று மதி கெட்ட சில குத்₃ருஷ்டிகள் (அத்₃வைதிகள்) கூறுகிருர்கள்.

१६. ध्यानोपासनशब्दादिवेदैश्च प्रतिपादितम् ।
यत् ज्ञानमेव कर्माङ्गं भक्तिरूपं तथैव च ॥

१७. उपासनात्मकं चैव वेदान्तप्रतिपादितम् ।
मोक्षहेतुतयाऽऽलोक्य कर्तुं वेदान्तमुद्यतः ॥

१८. तेन प्रहृष्टास्ते सर्वे तथा कुर्विति चाब्रुवन् ।
ततो यतीन्द्रः कूरेशं विलोक्येदं वचोऽब्रवीत् ॥

१९. मयोक्तं भाष्यवाक्यं ते मानसे रोचते यदि ।
लेखनं कुरु कूरेश नोचेत् तूष्णीं स्थितो भव ॥

२०. तथेति प्रतिगृह्याशु लिखन् कूरेश आस्थितः ।
तत्रैवं वाक्यमवदत् जीवस्य यतिभूपतिः ॥

---

'ஜ்ஞாநமும் கர்மமும் சேர்ந்து மோக்ஷஸாத₄னமாகிறது' என்று மற்றும் சில குத்₃ருஷ்டிகள் (யாத₃வப்ரகாஶ மதத்தைச் சேர்ந்தவர்கள்) கூறுகிறார்கள். இவ்விரு குத்₃ருஷ்டிகளுடைய மதங்களையும் நிராகரித்து, த்₄யானம், உபாஸனம் முதலான ஶப்₃த₃ங்களால் வேத₃த்தில் சொல்லப்படுவதாய், கர்மத்தை அங்க₃மாகக் கொண்டதாய், ப₄க்திரூபமானதாய், உபாஸனாத்மகமாக வேதா₃ந்தங்களில் சொல்லப்படும் ஜ்ஞாநமே மோக்ஷஸாத₄னம் என்று விசாரித்து வேதா₃ந்த வாக்யங்களுக்குப் பொருள்சொல்லத் தொடங்குகிறேன்'' என்று. அவ்வார்த்தையைக்கேட்டு உகந்த அவர்களனைவரும் அப்படியே செய்யலாம் என்று உரைத்தார்கள். அப்போது எதிராஜர் கூரத்தாழ்வானைப் பார்த்து, 'கூரேஶரே! நான் பா₄ஷ்ய வாக்யத்தைச் சொல்லும்போது உம்முடைய திருவுள்ளத்திற்கு அது ஸரி எனப்பட்டால் எழுதும். இல்லையேல் மௌனமாயிரும்' என அருளினார். கூரத்தாழ்வானும் 'அப்படியே' என்று இசைந்து ஸ்ரீபா₄ஷ்யத்தை எம்பெருமானார் சொல்லச் சொல்ல விரைவாக எழுதிக்கொண்டிருந்தார்.

२१. विष्णुशेषत्वरहितज्ञातृत्वप्रतिपादकम् ।
विष्णुशेषत्वरहितज्ञातृत्वेप्यविशेषतः ॥

२२. देहाभिमानजीवस्य को विशेषस्तदेति च ।
मत्वा श्रीवत्सचिह्नस्तु न लिलेख स तद्वचः ॥

२३. व्याजहार यतीन्द्रस्तं लिखस्वेति पुनःपुनः ।
न लिखित्वा स कूरेशस्तदा तूष्णीं समास्थितः ॥

२४. यतीन्द्रः कुपितो भूत्वा कूरेशमिदमब्रवीत् ।
एवं चेत्कुरु कूरेश! श्रीभाष्यं तु त्वमेव हि ॥

२५. तदा विसर्जयामास चेति कूराधिपं गुरुः ।
तदा श्रीवैष्णवाः केचित् कूरेशमिदमब्रुवन् ॥

---

**கூரத்தாழ்வானின் மேதை₄யும், அடக்கமும்**

20*-*28. அப்போது ஒருநாள் எதிராஜர் ஜீவனுக்கு ப₄க₃வச்சே₂ஷத்வமில்லாத ஜ்ஞாத்ருத்வத்தை மாத்திரம் சொல்லும் வாக்யம் ஒன்றைக் கூறினார். தே₃ஹாபி₄மானமுடைய ஜீவனுக்கும், தன்னை ஜ்ஞாதாவாக அறிந்தும் ப₄க₃வச்சே₂ஷபூ₄தனெக அறியாத ஜீவனுக்கும் வாசி இல்லாமையால், இந்த வாசியில்லாமையை எண்ணி, எதிராஜர் கூறிய அவ்வாக்யத்தைக் கூரத்தாழ்வான் எழுதாமல் இருந்தார். யதிபதியோ, அவரை 'எழுதும்; எழுதும்' என்று மறுபடியும் மறுபடியும் நிர்ப்ப₃ந்தி₄த்தார். கூரத்தாழ்வான் அப்போதும் மௌனமாய் எழுதாமலிருந்தார். அதைக் கண்டு கோபங்கொண்ட யதிராஜர் கூரத்தாழ்வானைப் பார்த்து, "ஆழ்வான்! அப்படியானல் நீரே ஸ்ரீப₄ாஷ்யம் எழுதும்" என்று உரைத்துவிட்டு, ஆசார்யரான அவர் ஶிஷ்யரைவிட்டுச் சென்றார். அப்போது அங்கிருந்த சில ஸ்ரீவைஷ்ணவர்கள் கூரத்தாழ்வானைப் பார்த்து, "ஆசார்யநிஷ்டை₂யாகிற தபஸ்ஸில் தலைசிறந்த

२६. आचार्यस्त्यक्तवानद्य कुपितस्त्वां तपोधन ! ।
तद्वदास्माकमधुना किं विचार्याद्य वर्तसे ॥

२७. तेषां तद्वचनं श्रुत्वा कूरेशस्तानथाऽब्रवीत् ।
गुरुणोक्तप्रकारेण शिष्यो वस्तव्य एव हि ॥

२८. तत्कृते कोपकार्ये तु मम नास्त्यन्वयः क्वचित् ।
ततो यतीन्द्रः सञ्चिन्त्य तद्वाक्यार्थं पुनः पुनः ॥

२९. आनयित्वाशु कूरेशं अनुतापं गतोऽत्र सः ।
विष्णुशेषत्वसंयुक्तज्ञातृत्वप्रतिपादकम् ॥

३०. लक्ष्मणार्योदितं वाक्यं लिलेखाशु तदा सुधीः ।
श्रीभाष्यमित्थं कृपया लोकानुग्रहकारणात् ॥

---

வரே! இன்று உம்மிடம் கோபங்கொண்டு உமது ஆசார்யர் உம்மைக் கைவிட்டுச் சென்றுவிட்டாரே. இப்போது எதை ஆராய்ந்துகொண்டிருக்கிறீர் என்பதை எங்களிடமாவது சொல்லும்" என்று உரைத்தனர். அவர்களுடைய அவ்வார்த்தையைக் கேட்ட ஆழ்வான், "ஆசார்யன் நியமித்த வழியிலே ஶிஷ்யன் இருக்கவேண்டியதே; அப்படியிருக்கும்போது அவர் கோபத்தால் செய்யும் கார்யத்தில் அடியேனுக்குச் சிறிதும் அந்வயமில்லை" என்று அவர்களுக்கு பதிலுரைத்தார்.

## ஸ்ரீப₄ாஷ்யாதி₃ க்₃ரந்த₂ நிர்மாணம்

28*-33. அதற்குப்பின் யதிராஜர் அந்த வாக்யார்த்த₂த்தை மறுபடியும் மறுபடியும் ஆராய்ந்து, (கூரத்தாழ்வான் மௌனமாயிருந்ததின் காரணத்தை உணர்ந்து) அநுதபித்து கூரத்தாழ்வானை விரைவில் வரவழைத்து ஸ்ரீப₄ாஷ்ய நிர்மாணத்தை மறுபடியும் தொடங்கினார். ப₄க₃வச்சே₂ஷத்வத்தோடு கூடிய ஜ்ஞாத்ருவத்தை ஜீவனுக்குச் சொல்லும் வாக்யத்தை யதிராஜர் அருள, அறிவாளியான கூரத்தாழ்வான் அதை விரைவில் எழுதினார். உலகத்

३१. वेदान्तदीपं वेदान्तसारं वेदार्थसंग्रहम् ।
गीताभाष्यं च योगीन्द्रः सुस्पष्टं शास्त्रसंमतम् ॥

३२. विधाय लक्ष्मणाचार्यः सर्वलोकैकपूजितः ।
प्रथमं यामुनार्यस्य दुःखं महदपोहयत् ॥

३३. श्रीभाष्यं विरचय्य लोकविदितं श्रीरङ्गिणः शासनात्
आचन्द्रार्कमखण्डितं महदिदं संस्थाप्य भूमण्डले ।
दुःखं प्राथमिकं व्यपोह्य महतो यद्यामुनार्यस्य तत्
विख्यातामलदिव्यकीर्तिरतुलं भेजे प्रमोदं परम् ॥

इति श्रीप्रपन्नामृते रामानुजचरित्रे बोधायनवृत्तिमतानुसारेण
श्रीभाष्यनिर्माणकथनं नाम द्वात्रिंशोऽध्यायः ॥

---

துக்கு அருள்புரிவதற்காக இவ்வண்ணமாக எதிராஜரான ராமாநுஜர் பேரருளோடு ஸ்ரீப₄ாஷ்யத்தையும், வேத₃ாந்த தீ₃பத்தையும், வேத₃ாந்த ஸாரத்தையும், வேத₃ார்த்த₂ ஸங்க்₃ரஹத்தையும், கீ₃தாப₄ாஷ்யத்தையும் ஶாஸ்த்ரங்களை யொட்டிய மிகத்தெளிவான முறையில் இயற்றி, எல்லா உலகினராலும் கொண்டாடப்பட்டவராய், ஸ்ரீயாமுநாசார்ய ரின் முதல் மனக்குறையைப் போக்கினார். ஸ்ரீரங்க₃ நாத₂னுடைய நியமனத்தால் லோகப்ரஸித்₃த₄மான ஸ்ரீப₄ாஷ்யத்தை இயற்றி, மிகப்பெரிய இந்த க்₃ரந்த₂த்தை ஸூர்ய சந்த்₃ரர்கள் உள்ள வரையில் மறுக்கவொண்ணாத படி இந்நிலவுலகில் நிலைநிறுத்தி, ஸ்ரீயாமுநாசார்யருடைய முதல் மனக்குறையை நீக்கி, குற்றமற்ற தி₃வ்யகீர்த்தியை உடையவராய் ஒப்பற்ற பேரானந்த₃த்தை அடைந்தார் எதிராஜர்.

ஸ்ரீப்ரபந்நாம்ருதத்தில், ஸ்ரீராமாநுஜ சரித்திரத்தில்
போ₃த₄ாயந வ்ருத்தியில் சொல்லப்பட்ட விஶிஷ்டாத்₃வைத மதத்தை
ஒட்டி, ஸ்ரீப₄ாஷ்யத்தை இயற்றுதலாகிற
முப்பத்திரண்டாம் அத்தியாயம் நிறைவுற்றது.

त्रयस्त्रिंशोऽध्यायः

१. ततो यतीन्द्रं नत्वा ते वैष्णवाश्चेदमब्रुवन् ।
भवतेतरसिद्धान्तनिराकरणपूर्वकम् ॥

२. भगवन्! गुरुवर्यार्य! दर्शनस्थापनं कृतम् ।
इतः परं दश दिशो गत्वा कृत्वा च दिग्जयम् ॥

३. तत्र स्थितान् दिव्यदेशान् प्रणम्यागन्तुमर्हसि ।
लक्ष्मणार्यो वैष्णवानां प्रतिगृह्य वचः शुभम् ॥

४. अनुज्ञातो रङ्गभर्त्रा शिष्यैः श्रीवैष्णवैर्वृतः ।
प्रतस्थे सहसा तस्मात् श्रीरङ्गाच्चोलमण्डलम् ॥

---

## முப்பத்துமூன்றாம் அத்தியாயம்

# திருக்குறுங்குடி நம்பிக்கு மந்த்ரோபதே3சம்

### தி3க்3விஜயத்துக்குப் புறப்படுதல்

1-4. அதற்குப்பின் ஸ்ரீவைஷ்ணவர்கள் யதிபதியை வணங்கிப் பின்வருமாறு கூறினார்கள் — "ஆசார்யர்களுக்குள் தலைவரான ப4க3வத்3ராமானுஜரே! தேவரீரால் இதர ஸித்3தா4ந்தங்களும் நிரஸனம் செய்யப்பட்டு, விஶிஷ்டாத்3வைத ஸ்ரீவைஷ்ணவ த3ர்ஶநம் நிலைநிறுத்தப்பட்டது. இனி, எல்லா தி3க்குகளிலும் சென்று தி3க்3விஜயம்செய்து, ஆங்காங்குள்ள தி3வ்யதே3ஶங்களையும் மங்க3ளாஶாஸநம் செய்து திரும்பி எழுந்தருள்வது உசிதம்"—என்று. ஸ்ரீராமானுஜரும் ஸ்ரீவைஷ்ணவர்களின் அந்த மங்க3ள வார்த்தையை ஏற்று, அரங்கநகரப்பனாலும் அநுமதி கொடுக்கப்பெற்று, ஸ்ரீவைஷ்ணவர்களான ஶிஷ்யர்கள் புடைசூழ, திருவரங்கத்திலிருந்து உடனே சோழமண்ட3ல யாத்திரைக்குப் புறப்பட்டார்.

५. तत्र स्थितान् दिव्यदेशान् कुंभकोणादिकानपि ।
नत्वा तत्रत्यविबुधान् जित्वा तान् शास्त्रवादतः ॥

६. स्वशिष्यभूतांस्तान् कृत्वा तत्रत्यानखिलान् जनान् ।
यतीन्द्रः सहसा धीमान् पाण्ड्यमण्डलमाविशत् ॥

७. पाण्ड्यमण्डलमागत्य दिव्यदेशान् प्रणम्य च ।
जित्वा तत्रत्यविबुधान् कुरुकानगरं ययौ ॥

८. शठकोपं तत्र नत्वा शठारिप्रतिपादितम् ।
तं प्रबन्धं पपाठार्यो दशगाथासमन्वितम् ॥

---

## சோழதே₃ஶ தி₃க்₃விஜயம்

5-6. அந்தச் சோழமண்ட₃லத்திலுள்ள திருக்குடந்தை முதலான தி₃வ்யதே₃ஶங்களை மங்க₃ளாஶாஸனம்செய்து, அங்குள்ள பண்டி₃தர்களை ஶாஸ்த்ர வாத₃ம் செய்து ஜயித்து, அவர்களை ஶிஷ்யராக்கிக்கொண்டு, அறிவாளியான யதிகட்கிறைவர் உடனே பாண்டியமண்ட₃லத்தினுள் நுழைந்தார்.

## பாண்டிய மண்ட₃ல தி₃க்₃விஜயம்

7. பாண்டிய நாட்டையடைந்து, அங்குள்ள தி₃வ்ய தே₃ஶங்களை ஒவ்வொன்றாக மங்க₃ளாஶாஸனம்செய்து, அங்குள்ள பண்டி₃தர்களை ஜயித்து, திருக்குருகூர் என்னும் ஆழ்வார் திருநகரியை அடைந்தார் எதிராஜர்.

## நம்மாழ்வார் அருள்பெற்றுத் துதித்தல்

8-11. அவ்வூரில் (அர்ச்சாரூபியாக) எழுந்தருளியிருக்கும் நம்மாழ்வாரை மங்க₃ளாஶாஸனம்செய்து, அவ்வூர்ப் பெருமாள் விஷயமாக நம்மாழ்வார் அருளிய பத்துப் பாசுரங்களான 'ஒன்றுந்தேவும்' என்னும் திருவாய்மொழிப் பதிகத்தை அங்கு ஸேவித்தார் ஸ்ரீராமானுஜர். நம்மாழ

९. शठारिरपि योगीन्द्रे विधाय महतीं दयाम्।
तीर्थं प्रसादं मालां च दापयामास चार्चकैः॥

१०. तीर्थं प्रसादं संगृह्य सन्तुष्टो यतिपुङ्गवः।
जगाद परमं श्लोकं एकं शठरिपुं प्रति॥

११. वकुलधवलमालावक्षसं वेदबाह्य-
प्रबलसमयवादच्छेदनं पूजनीयम्।
विपुलकुरुकनाथं कारिसूनुं कवीशं
शरणमुपगतोऽहं चक्रहस्तेभवक्त्रम्॥

१२. ततस्संप्रेषितस्तेन यतिराजः शठारिणा।
कुरङ्गनगरं प्राप्य बहुशिष्यसमावृतः॥

---

வாரும் எதிராஜரிடம் பேரருள்செய்து தீர்த்த₂ப்ரஸாத₃ங்களையும், தாம் சூடிக்களைந்த மாலையையும் அர்ச்சகரைக் கொண்டு அளிக்கச்செய்தார். தீர்த்த₂ப்ரஸாத₃ங்களை ஏற்று மிகவுகந்த யதிபதி, நம்மாழ்வாரைக் குறித்துப் பின்வரும் (பொருளுள்ள) தலைசிறந்த ஶ்லோகத்தை விண்ணப்பித்தார் — "ஒளிமிகுந்த வகுளமாலையைத் திருமார்பில் த₄ரித்தவராய், வேத₃த்துக்குப் புறம்பான பெரிய பல ஸமயவாத₃ங்களைத் தம் ப்ரப₃ந்த₄ங்களாலே நிரஸித்தவராய், (அதனாலேயே வைதி₃கர் அனைவராலும்) பூஜிக்கத் தக்கவராய், பெரிய திருக்குருகூருக்குத் தலைவராய், கவிகளுக்கு நாயகராய், சக்கரத்தைக் கையில் த₄ரித்த யானை போன்ற எம்பெருமானுடைய திருமுக₂மண்ட₃லம்போல் இருப்பவராய், காரியின் குமாரரான நம்மாழ்வாரை அடியேன் ஶரணமடைந்தேன்" என்று.

## திருக்குறுங்குடி நம்பியின் கேள்வி

12-20 அதற்குப்பின் நம்மாழ்வாரால் விடைகொடுக்கப் பெற்ற யதிராஜர் ஆயிரக்கணக்கான ஶிஷ்யர்களால்

१३. कुरङ्गनगरीपूर्णं तं महोत्तुङ्गविग्रहम् ।
प्रणम्य बहुधा भक्त्या मुमोद यतिशेखरः ॥

१४. एकान्तिमिर्द्वादशभिस्सहस्रैः
पीठैश्चतुस्सप्ततिभिः समेतः ।
अन्यैरनन्तैरपि विष्णुभक्तैः
श्रीरङ्ग आस्ते यतिसार्वभौमः ॥

१५. इत्युक्तेन प्रकारेण बहुसंवसमावृतम् ।
विलोक्य विस्मयं गत्वा यतिराजं महोजसम् ॥

१६. कुरङ्गनगरीपूर्णो व्याजहार वचः शुभम् ।
श्रीसहायेन योगीश ! जनरक्षणहेतुना ॥

१७. अवताराः कृताः पूर्वं रामकृष्णादयो मया ।
अवतारेषु मां सर्वे मन्यन्ते प्राकृता जनाः ॥

---

சூழப்பெற்றவராய், திருக்குறுங்குடியை அடைந்து, மிகப் பெரிய திருமேனியை உடையவனாய் அங்கு எழுந்தருளி யிருக்கும் திருக்குறுங்குடி நம்பியை அன்பின் மிகுதியால் பலகால் வணங்கி, யதிகட்கிறைவர் பேரானந்தமுற்றார். "எம்பெருமானையல்லது தொழாத பன்னீராயிரம் ஏகாந்தி களோடும், (அவர்களுக்குத் தலைவர்களான) எழுபத்துநாலு ஸிம்ஹாஸனாதிபதிகளோடும், மற்றும் அளவற்ற விஷ்ணு பக்தர்களான ஶிஷ்யர்களோடும் யதிகட்கிறைவர் ஸ்ரீரங்கத்தில் இருக்கிறார்" என்று வடுகநம்பியால் புகழப் பட்ட ரீதியில் பல்லாயிரக்கணக்கான ஶிஷ்யர்களால் சூழப்பெற்றுப் பேரொளியோடு விளங்கும் யதிராஜரைக் கண்ட திருக்குறுங்குடி நம்பி பின்வரும் மங்களமான வார்த்தையைக் கூறினார்—"யதிராஜரான எம்பெருமானாரே! இந்த ஜனங்களை ரக்ஷிப்பதற்காக ஸ்ரீதேவியோடு கூடி நின்று நம்மால் ராமன், க்ருஷ்ணன் முதலான பல அவ

१८. राजानं चापि गोपालं प्राकृतं पुरुषं यथा।
अस्माकं रक्षणार्थाय वैकुण्ठादागतो हरिः॥

१९. एवं न मेनिरे दुष्टाः मां जगत्कारणं परम्।
आसुरप्रकृतित्वेन तेषां कोऽपि न मां गतः॥

२०. केनोपायेन ते सर्वे त्वयैते स्ववशीकृताः।
मन्नाथ! मह्यं तेनाशु तमुपायं वदाधुना॥

२१. कुरङ्गनगरीशस्य तद्वचः प्रतिगृह्य सः।
तं दृष्ट्वा लक्ष्मणाचार्यश्चक्रे विज्ञापनं तदा॥

२२. तद्वक्ष्याम्यधुनैवाशु क्रमेण यदि पृच्छसि।
निशम्य तद्वचस्तस्य सत्यं मत्वा जगत्पतिः॥

---

தாரங்கள் எடுக்கப்பட்டன. அந்த அவதாரங்களில் ப்ராக்ருதர்களாய்ப் பாபம் நிறைந்த எல்லா ஜனங்களும் என்னை (ராமாவதாரத்தில்) ஓர் அரசனாகவும்,(க்ருஷ்ணாவதாரத்தில்) ஓர் இடையனாகவும் ப்ராக்ருத மனிதனாக எண்ணினார்களேயொழிய, 'நம்மை ரக்ஷிப்பதற்கு எம்பெருமானே வைகுண்டத்திலிருந்து எழுந்தருளியிருக்கிறான்' என்று எவரும் எண்ணவில்லை. அஸுரஸ்வபாவத்தை உடையவராய் இருந்தபடியாலே அவர்களில் எவனும் ஜகத்காரணனாய், பரமாத்மாவான என்னை அடையவில்லை. அப்படிப்பட்ட அவர்களனைவரும் எந்த உபாயத்தினால் இப்படி உம்மால் வசப்படுத்தப்பட்டிருக்கிறார்கள். அவ்வுபாயத்தை எனக்கு இப்போது விரைவில் கூறுவீர்" என்று.

## எம்பெருமானாரின் பதில்

21-*22. திருக்குறுங்குடி நம்பியின் அவ்வார்த்தையைக் கேட்ட ஸ்ரீராமாநுஜர் அவரைப்பார்த்து "கேட்கவேண்டிய முறையில் கேட்டால் அதை இப்போதே விரைவில் கூறுகிறேன்" என்று விண்ணப்பித்தார்.

२३. कुरङ्गनगरीपूर्णो यतीन्द्राय महात्मने।
दिव्यसिंहासनं दिव्यकौशास्तरणशोभितम् ॥

२४. तुङ्गात्सिंहासनाद्दिव्यादवतीर्णोऽथ भूतले।
हरिर्जगत्पतिः श्रीमान् तस्थौ भक्तिसमन्वितः ॥

२५. तत्र स्वाचार्यमासीनं मत्वा पूर्णार्यमादरात्।
स तस्य दक्षिणे कर्णे भूमिस्थस्य यतीश्वरः ॥

२६. सर्वेषामेव मन्त्राणां मन्त्ररत्नं शुभावहम्।
सकृत्स्मरणमात्रेण ददाति परमं पदम् ॥

२७. मन्त्ररत्नं द्वयं न्यासः प्रपत्तिः शरणागतिः।
लक्ष्मीनारायणश्चेति हितं सर्वफलप्रदम् ॥

---

## நம்பிக்கு மந்த்ரோபதே₃ஶம்

22*-*29. அவ்வார்த்தையைக் கேட்டு, அதை உண்மை என்று எண்ணிய லோகநாத₂னை திருக்குறுங்குடிநம்பி மஹாத்மாவான எதிராஜருக்கு தி₃வ்யமான பட்டு விரிப்பினால் அலங்கரிக்கப்பட்ட தி₃வ்ய ஸிம்ஹாஸனத்தை அளித்து, உயர்ந்ததான தம்முடைய தி₃வ்ய ஸிம்ஹாஸனத்திலிருந்து பூ₄மியில் இறங்கினார். ஜக₃த்பதியாய், லக்ஷ்மீநாத₂னை அந்த நம்பி ப₄க்தியோடு கூடியவராய் நின்றார். (நிலத்தில் நின்று கொண்டிருந்த) ஸ்ரீராமாநுஜரும் தம்முடைய ஆசார்யரான பெரிய நம்பியே அந்த தி₃வ்யஸிம்ஹாஸனத்தில் எழுந்தருளியிருப்பதாக ப₄ாவித்து, பூ₄மியில் நிற்கும் திருக்குறுங்குடி நம்பியின் செவியில் "எல்லா மந்திரங்களைக் காட்டிலும் சிறந்ததாகையாலே மந்த்ர ரத்னம் எனப்படுவதாய், மங்க₃ளங்களை அளிப்பதாய், ஒரு முறை நினைத்த மாத்திரத்தில் பரமபத₃ம் அளிக்க வல்லதாய், மந்த்ர ரத்னம், த்₃வயம், ந்யாஸம், ப்ரபத்தி, ஶரணாக₃தி,

२८. नामानि मन्त्ररत्नस्य पर्यायेण निबोध मे।
प्रशस्यैवं मन्त्ररत्नं उपदेशं विधाय च॥
२९. ततो वैष्णवनम्बीति दास्यनामाकरोद्धरेः।
स हरिः पूर्णनामा च तथा ब्रह्मरथे गुरुम्॥
३०. स्थापयित्वा लक्ष्मणार्यं श्लाघयामास चेश्वरः।
यतीन्द्रः श्रीहरिं पूर्णं तं प्रणम्य कृताञ्जलिः॥
३१. अपचारानिमान् सर्वान् क्षमस्व पुरुषोत्तम!।
इति विज्ञाप्य योगीन्द्रः स तेन प्रेषितो गुरुः॥
३२. हरिणा लोकगुरुणा कुरङ्गनगराद्वरात्।
प्रतस्थे केरलं देशं शिष्यसंघैर्यतीश्वरः॥

---

லக்ஷ்மீநாராயணன், ஹிதம், ஸர்வ ப₂லப்ரத₃ம் ஆகிய மந்த்ர ரத்னத்தின் பல பெயர்களை என்னிடத்தில் கேட்பாய்'' என்று ஶாஸ்த்ரங்களில் சொல்லப்பட்ட ரீதி யில் மந்த்ர ரத்னத்தைப் புகழ்ந்து, அம்மந்திரத்தின் சொற் பொருள்களை உபதே₃ஶித்து, வைஷ்ணவநம்பி என்று எம்பெருமானுக்கு தா₃ஸ்ய நாமத்தையும் அளித்தார்.

### எம்பெருமானுக்கு ப்₃ரஹ்மரத₂ம்

29*-33. அப்போது திருக்குறுங்குடி நம்பி என்று பெயர் பெற்றவனாய், ஸர்வேஶ்வரனை அவ்வெம்பெருமான் தனது ஆசார்யரான ஸ்ரீராமாநுஜரை (ஆசார்யர்களுக் குரிய ப்₃ரஹ்ம ரத₂த்திலே ஏற்றி நகர்வலம் வரச்செய்து) பெருமைப்படுத்தினன். ஆசார்யரான எதிராஜரும் நம்பி யெம்பெருமானைக் கைகூப்பி வணங்கி, "புருஷோத்தமனே! எல்லா அபசாரங்களையும் பொறுத்தருளவேண்டும்' என்று விண்ணப்பித்து, உலகத்திற்கே ஆசார்யனான அந்த நம்பியெம்பெருமானால் விடைகொடுக்கப்பெற்று, ஶிஷ்ய ஸமூஹங்களால் சூழப்பெற்றவராய், திருக்குறுங்குடிப் பெருநகரிலிருந்து கேரள தே₃ஶத்திற்குப் புறப்பட்டார்.

३३. पूर्णाय तस्मै स हि मन्त्ररत्नं
दत्वा क्रमेणैव कुरङ्गपूर्णात् ।
संप्राप्य तद्ब्रह्मरथं यतीन्द्रो
लोकेऽद्वितीयां स जगाम कीर्तिम् ॥

इति श्रीप्रपन्नामृते रामानुजचरित्रे कुरंगनगरीपूर्णाय
मन्त्ररत्नोपदेशो नाम त्रयस्त्रिंशोऽध्यायः ॥

चतुस्त्रिंशोऽध्यायः

१. ततः कुरङ्गनगरात् परिवारैर्यतीश्वरः ।
चतुस्सप्ततिपीठैश्च निर्ययौ केरलं प्रति ॥

२. तत्र तत्र स्थितं विष्णुस्थलं नत्वा यतीश्वरः।
अनन्तशयनं गत्वा त्रिभिर्द्वारैः प्रणम्य च ॥

---

திருக்குறுங்குடி நம்பிக்கு மந்த்ரரத்னமான த்₃வயத்தை முறைப்படி உபதே₃ஶித்து, அந்த நம்பியிடமிருந்து ப்₃ரஹ்ம ரத₂த்தைப் பெற்ற அந்த எதிகட்கிறைவர் உல கத்தில் ஒப்பற்ற புகழை அடைந்தார்.

ஸ்ரீப்ரபந்நாம்ருதத்தில், ஸ்ரீராமாநுஜ சரித்திரத்தில்
திருக்குறுங்குடி நம்பிக்கு த்₃வயோபதே₃ஶமாகிற
முப்பத்து மூன்ருவது அத்தியாயம் நிறைவுற்றது.

## முப்பத்து நான்காம் அத்தியாயம்

# சாரத₃ா பீட₂த்தில் வெற்றி

## கேரள தே₃ஶத்தில் வெற்றி

1-5. திருக்குறுங்குடி நகரிலிருந்து எழுபத்துநான்கு ஸிம்ஹாஸனாதி₄பதிகளோடும், மற்ற பரிவாரங்களோடுங் கூடக் கேரளராஜ்யத்திற்குப் புறப்பட்டார் யதிராஜர். அந்த மலைநாட்டில் ஆங்காங்குள்ள (திருவண்பரிசாரம், திருவாட்

३. पादादिकेशपर्यन्तं पद्मनाभमनन्तकम् ।
तत्र स्थितांश्च विबुधान् जित्वा कृत्वा मठं च तम् ॥

४. रामानुजमिति ख्यातं ततः केरलमागतः ।
नत्वा केरलदेशस्थस्थलानि परमात्मनः ॥

५. लक्ष्मणार्यः स्थितांस्तत्र जित्वा बाह्यकुदृष्टिकान् ।
पश्चिमाम्भोधिरोधेन ततोदीचीं दिशं ययौ ॥

६. ततो द्वारवतीं गत्वा मथुरां च यतीश्वरः ।
सालग्रामं च साकेतं तथा बदरिकाश्रमम् ॥

---

டாறுஎனும்) தி3வ்ய தே3ஶங்களை வணங்கியபின், திருவனந்தபுரத்திற்குச் சென்று மூன்று வாயில்களாலே திருவடி முதல் திருமுடி ஈருக அனந்தபத்3மநாப4னை ஸேவித்து வணங்கி, அங்கேயிருக்கும்படியான வித்3வான்களையும் ஜயித்து, 'ராமாநுஜம்' எனும் பெயருடைய மட2த்தையும் அங்கு நிலைநிறுத்தி, அதற்குப்பின் கேரளத்தின் உட்பகுதியை அடைந்தார் யதிராஜர். அதற்குப்பின் அப்பகுதிகளிலுள்ள (திருச்செங்குன்றூர், திருவண்வண்டூர், திருவல்லவாழ், திருநாவாய், திருவித்துவக்கோடு, திருவாறன்விளை முதலான) தி3வ்யதே3ஶங்களை மங்க3ளாஶாஸநம் செய்து, ஆங்காங்கிருக்கும் வேத3த்திற்குப் புறம்பான பௌ3த்3த4ர் முதலானோரையும், வேத3த்திற்கு அவப்பொருள் கூறும் அத்3வைதிகள், ஶைவர் முதலானோரையும் ஜயித்து, மேற்குக் கடற்கரையோரமாகவே வடதிசை நோக்கிச் சென்றார்.

## வடநாட்டில் வெற்றி

6-8. அதற்குப்பின், த்3வாரகை, மதுரை, சாளக்கிராமம், அயோத்தி, ப3த3ரிகாஶ்ரமம், நைமிஶாரண்யம், புஷ்கரம், ப்3ருந்தா3வநமாகிற காடு ஆகிய தி3வ்யதே3ஶங்களையும், எம்பெருமானுடைய ஸம்ப3ந்த4முள்ள திருவாய்ப்

७. नैमिशं पुष्करं चैव वनं वृन्दावनं च यत्।
एतान्यन्यानि यानि स्युः स्थलानि प्रणिपत्य सः॥

८. तेषु स्थितान् विजित्याशु कुदृष्टिविबुधान् स तान्।
भद्रमण्डपमासाद्य शारदापीठमागतः॥

९. वाग्देवी स्वयमेवाशु श्रुत्वाचार्यस्य पावनम् (चागमम् ?)।
तन्मन्दिराद्विनिर्गत्य विलोक्य यतिभूपतिम्॥

१०. कप्यासश्रुतितात्पर्यं वदेति व्याजहार सा।
तामुवाच ततो विद्वान् शारदां यतिपुङ्गवः॥

११. श्रूयतां तच्छ्रुतेरर्थं वक्ष्यामि तव शारदे !।
कं जलं पिबतीत्यस्मात्कपिरित्युच्यते रविः॥

---

பாடி, கோ₃வர்த்த₄னம் முதலான மற்ற இடங்களையும் மங்க₃ளாஶாஸனம் செய்து, ஆங்காங்குள்ள புறமத வித்₃வான்களை வெற்றிகொண்டு, (காஶ்மீர தே₃ஶத்தில்) ப₄த்₃ரமண்டபத்தை அடைந்து, ஸரஸ்வதீதே₃வி கோயில் கொண்டிருக்கும் ஶாரதா₃ பீட₂த்திற்குச் சென்றார் ஸ்ரீராமாநுஜர்.

**கப்யாஸ ஶ்ருதிக்குப் பொருளுரைத்தல்**

9-12. ஆசார்யரான எம்பெருமானாரின் பரமபாவன மான வருகையைக் கேள்விப்பட்ட ஸரஸ்வதீதேவி உடனே தானே அக்கோவிலிலிருந்து வெளிப்பட்டு எதிகட்கிறை வரைக்கண்டு, 'கப்யாஸ ஶ்ருதியின் பொருளைச் சொல்லு வீர்' என்று கேட்டாள். பேரறிவாளரான யதிராஜர் அவளைப் பார்த்து "ஸரஸ்வதியே! அந்த வேத₃வாக்யத் தின் பொருளைச் சொல்லுகிறேன்; கேட்பாயாக. 'கம்' எனப்படும் ஜலத்தைப் பானம் பண்ணுவதால் 'கபி:' என்று ஸூர்யன் கூறப்படுகிறான். அவனாலே மலர் விக்கப்படும் தாமரை 'கப்யாஸம்' என்று ஓதப்படுகிறது.

१२. तेन संस्फुरितं पद्मं कप्यासमिति गीयते।
तत्तुल्ये लोचने विष्णोरित्यर्थोऽस्याः श्रुतेर्मतः॥

१३. तच्छ्रुत्वा शारदा हृष्टा श्रीभाष्यं तत्कृतं महत्।
शिरस्यारोप्य संभाव्य ततो बाहू प्रसार्य च॥

१४. यतीन्द्रपाणिं संगृह्य न प्रक्षिप्तमिदं निजम्।
इत्यङ्गीकृत्य वाग्देवी श्रुत्यर्थं तेन भाषितम्॥

१५. तस्याकरोद्भाष्यकार इति नाम मुदा तदा।
हयग्रीवं कारयित्वा तस्मै दत्वा महौजसे॥

---

'அந்தத் தாமரையையொத்த இரு கண்கள் விஷ்ணுவுக்கு உள' என்பது 'தஸ்ய யதா₂ கப்யாஸம் புண்ட₃ரீகம் ஏவ மக்ஷிணீ' [சா₂ந் 1-6-6] என்னும் வேத₃வாக்யத்தின் பொருளாகும்'' என்று கூறினர்.

## ஶாரதா₃தே₃வி 'ஸ்ரீப₄ாஷ்யம் ஸ்ரீப₄ாஷ்யகாரர்' என்று திருநாமமிடல்

13-16. இதைக்கேட்டு மிகவும் உகந்த ஶாரதா₃ தே₃வி அவர் செய்த ப்₃ரஹ்மஸூத்ர ப₄ாஷ்யத்திற்கு 'ஸ்ரீப₄ாஷ்யம்' என்று திருநாமமிட்டு, அதைத் தலையிலே த₄ரித்துக்கொண்டாடித் தன் இரு கைகளையும் நீட்டி யதிராஜரின் கையைப் பிடித்துக்கொண்டு, ''நீர் மனம் போனபடி பொருள்செய்த உரையன்று இது; உண்மையான உரை இது'' என்று அவருடைய ப₄ாஷ்யத்தை வேத₃ப்பொருளாக அங்கீ₃கரித்து, அப்போதே அவருக்கு 'ஸ்ரீப₄ாஷ்யகாரர்' எனும் திருநாமத்தை உகப்புடன் சாற்றினள். தன் தெய்வமான ஹயக்₃ரீவமூர்த்தியையும் நிருமித்து, மஹா ஶக்தியுடையவரான ஸ்ரீராமாநுஜருக்குக்கொடுத்து, மிகவுகந்த திருமுகத்தையுடையவளான ஶாரதா₃ தே₃வி யதிராஜரைக் கொண்டாடினள்.

१६. यतीन्द्रं श्लाघयामास शारदा मुदितानना ।
भाष्यकारोऽपि वाग्देवीं विस्मितो वाक्यमब्रवीत् ॥

१७. त्वं मह्यं शारदे! कर्तुं दयां को हेतुरुच्यताम् ।
तेनैवमुक्ता वाग्देवी भाष्यकारं वचोऽब्रवीत् ॥

१८. पुरात्र शङ्कराचार्यः प्राप्तः पृष्टो मया हि सः ।
कप्यासश्रुतितात्पर्यमेवमाह यतीश्वर! ॥

१९. मर्कटासनसङ्काशमिति हास्यकरं वचः ।
स्वाभाविकतयाऽर्थस्य त्वयोक्तस्याधुना श्रुतेः ॥

२०. सन्तुष्टया मया तेन पूजितस्त्वं बुधर्षभ! ।
विपश्चितोऽथ चागत्य सर्वे तद्देशवासिनः ॥

---

### ஶங்கரர் சொன்ன அவப்பொருள்

16*-*20. மிகவும் வியப்புற்ற ஸ்ரீப₄ாஷ்யகாரரும் ஸரஸ்வதீதே₃வியைப் பார்த்து, "ஸரஸ்வதியே! என்னிடம் நீ இவ்வளவு கருணைகாட்டுவதற்கு என்ன காரணம்? என்பதைச் சொல்லவேண்டும்" என்று கேட்டார். அவ ரால் இப்படி கேட்கப்பட்ட ஸரஸ்வதீதே₃வி ஸ்ரீப₄ாஷ்ய காரரைப் பார்த்து "யதிராஜரே! முன்பொரு ஸமயம் இங்கு வந்த ஶங்கராசார்யரை நான் இதே வேத₃வாக்யத் தின் அர்த்த₂த்தைக் கேட்டபோது, 'குரங்கின் ஆஸன வாய்போன்று சிவந்த தாமரைபோன்ற கண்களையுடையவன் நாராயணன்' என்னும் சிரிக்கத்தக்க பொருளை அவர் சொன்னார். அறிவாளிகளில் தலைவரே! அவ்வேத₃வாக்யத் திற்கு உண்மையான பொருளை நீர் கூறியமையால் உம்மை நான் கொண்டாடினேன்" என்று பதில் உரைத்தாள்.

### அரசனின் ஆத₃ரவும், புறமதத்தவர்களின் பீடை₃யும்

20*-*27. அந்தக் காஷ்மீர தே₃ஶத்திலுள்ள வித்₃வான் கள் அனைவரும், மற்றும் பலரும் யதிராஜருக்கு ஏற்பட்ட இப்பெருமையைக் கேள்விப்பட்டு, அவரோடு வாத₃ம்

२१. तच्छ्रुत्वान्ये यतीन्द्रेण वादं कृत्वा पलायिताः।
श्रुत्वा तद्देशभूपालो विबुधानां पराजयम्॥
२२. सर्वेषां महतां चैव विस्मयं परमं गतः।
अवतारं हरेर्ज्ञात्वा लक्ष्मणार्यं स भूपतिः॥
२३. अवाप सहसा धीमान् शिष्यत्वं यतिभूपतेः।
दृष्ट्वाऽसहिष्णवस्सर्वे महान्तं तस्य वैभवम्॥
२४. अभिचारं यतीन्द्राय प्रचक्रुस्ते पराजिताः।
स निशम्य यतिश्रेष्ठो मनस्वी स्वान्तरङ्गिभिः॥
२५. अजानान इवातिष्ठत् परिहृत्याभिचारकम्।
तं पीडितुमशक्तः सन् सोऽभिचारो यतीश्वरम्॥
२६. प्रयोक्तॄन् पीडयामास तानेव विबुधांस्तदा।
अवाच्यानि प्रभाषन्तो वचांसि विबुधाश्च ते॥

---

செய்து தோல்வியுற்று ஓடினார்கள். அந்த தே$_3$ஶத்து அரசன், மிகப் பெரிய வித்$_3$வான்கள் அனைவரும் ஸ்ரீராமாநுஜரிடம் தோல்வியுற்றதைக் கேள்விப்பட்டுப் பெருவியப் புற்றான். ஸ்ரீராமாநுஜரை ஹரியின் அவதாரமாகவே அறுதியிட்ட அவ்வரசன் யதிராஜருக்கு உடனே ஶிஷ்யனானான். தோல்வியுற்ற அந்த வித்$_3$வான்கள் அனைவரும், யதிராஜருக்கு ஏற்பட்ட இப்பெரிய சிறப்பைப் பொறுக்க மாட்டாதவர்களாய், அவரைக் குறித்து அபி$_4$சார யாக$_3$ம் செய்தார்கள். தம்முடைய அந்தரங்க$_3$ஶிஷ்யர்கள் மூலம் அதைக் கேள்விப்பட்டு, அவர்களிடமும் கருணைகொண்ட நெஞ்சினராயிருந்த யதிராஜர், அந்த அபி$_4$சாரம் தன்னை நலியாதவாறு தடுத்துக்கொண்டு, ஒன்றுமறியாதவர் போல் எழுந்தருளியிருந்தார். யதீஶ்வரரைத் துன்புறுத்து வதற்கு இயலாத அந்த அபி$_4$சாரம், அப்போதே தன்னை ஏவிவிட்ட அந்த வித்$_3$வான்களையே பீடி$_3$க்கத் தொடங்கிற்று. அந்த வித்$_3$வான்கள் சொல்லத்தகாத வார்த்தைகளைச் சொல்லிக்கொண்டு பிஶாசம் பிடித்தவர்கள்போல் தெரு வுக்குத்தெரு அலைந்து திரியத் தொடங்கினர்.

१६. यतीन्द्रं श्लाघयामास शारदा मुदितानना।
भाष्यकारोऽपि वाग्देवीं विस्मितो वाक्यमब्रवीत्॥
१७. त्वं मह्यं शारदे! कर्तुं दयां को हेतुरुच्यताम्।
तेनैवमुक्ता वाग्देवी भाष्यकारं वचोऽब्रवीत्॥
१८. पुरात्र शङ्कराचार्यः प्राप्तः पृष्टो मया हि सः।
कप्यासश्रुतितात्पर्यमेवमाह यतीश्वर!॥
१९. मर्कटासनसङ्काशमिति हास्यकरं वचः।
स्वाभाविकतयाऽर्थस्य त्वयोक्तस्याधुना श्रुतेः॥
२०. सन्तुष्टया मया तेन पूजितस्त्वं बुधर्षभ!।
विपश्चितोऽथ चागत्य सर्वे तद्देशवासिनः॥

---

### ஶங்கரர் சொன்ன அவப்பொருள்

16*-*20. மிகவும் வியப்புற்ற ஸ்ரீப₄ாஷ்யகாரரும் ஸரஸ்வதீதே₃வியைப் பார்த்து, “ஸரஸ்வதியே! என்னிடம் நீ இவ்வளவு கருணைகாட்டுவதற்கு என்ன காரணம்? என்பதைச் சொல்லவேண்டும்” என்று கேட்டார். அவரால் இப்படி கேட்கப்பட்ட ஸரஸ்வதீதே₃வி ஸ்ரீப₄ாஷ்யகாரரைப் பார்த்து “யதிராஜரே! முன்பொரு ஸமயம் இங்கு வந்த ஶங்கராசார்யரை நான் இதே வேத₃வாக்யத்தின் அர்த்த₂த்தைக் கேட்டபோது, ‘குரங்கின் ஆஸனவாய்போன்று சிவந்த தாமரைபோன்ற கண்களையுடையவன் நாராயணன்’ என்னும் சிரிக்கத்தக்க பொருளை அவர் சொன்னார். அறிவாளிகளில் தலைவரே! அவ்வேத₃வாக்யத்திற்கு உண்மையான பொருளை நீர் கூறியமையால் உம்மை நான் கொண்டாடினேன்” என்று பதில் உரைத்தாள்.

### அரசனின் ஆத₃ரவும், புறமதத்தவர்களின் பீடை₃யும்

20*-*27. அந்தக் காஷ்மீர தே₃ஶத்திலுள்ள வித்₃வான்கள் அனைவரும், மற்றும் பலரும் யதிராஜருக்கு ஏற்பட்ட இப்பெருமையைக் கேள்விப்பட்டு, அவரோடு வாத₃ம்

३२. गत्वा तु पीठं स हि शारदायाः
श्रीभाष्यकारेत्यभिधानमाप्य ।
तद्देशभूपार्चितपादपद्मः
गङ्गामगान्निर्जितसर्वदुर्वादिः ॥

इति श्रीप्रपन्नामृते रामानुजचरित्रे
दिग्विजयकथने शारदापीठविबुधपराजयो नाम चतुस्त्रिंशोऽध्यायः ॥

पञ्चत्रिंशोऽध्याय :

१. तया संप्रेषितो धीमान् सरस्वत्या यतीश्वरः ।
प्रतस्थे शारदापीठात् काशीं कलिमलापहाम् ॥

२. गङ्गावगाहनं सम्यक् कृत्वा लक्ष्मणदेशिकः ।
काश्यां तु भोगिशयनं प्रणम्य हरिमव्ययम् ॥

---

டாக யதிராஜர் ஶாரத$_3$ா பீட$_2$த்திற்குச் சென்று 'ஸ்ரீப$_4$ாஷ்யகாரர்' என்னும் விருதை ஸரஸ்வதியிடமிருந்து பெற்று, அந்த தே$_3$ஶத்து அரசனால் தம் திருவடித் தாமரைகளில் அர்ச்சிக்கப் பெற்றவராய், வைதி$_3$க த$_3$ர்ஶனத்தின் விரோதி$_4$களை வெற்றி கொண்டவராய், க$_3$ங்கா$_3$ தீரத்திலுள்ள காசிக்குச் சென்றார்.

ஸ்ரீப்ரபந்நாம்ருதத்தில், ஸ்ரீராமாநுஜ சரித்திரத்தில்
'ஶாரதா$_3$ பீட$_2$ வித்$_3$வான்களின் தோல்வி'யாகிற
முப்பத்து நான்காவது அத்தியாயம் நிறைவுற்றது.

## முப்பத்தைந்தாம் அத்தியாயம்

## ஜக$_3$ந்நாத$_2$ ராமாநுஜ ஸம்வாத$_3$ம்

### காசியில் வெற்றி

1-3. ஸரஸ்வதீதே$_3$வியால் விடை கொடுக்கப்பெற்ற பேரறிவாளரான யதிராஜர், ஶாரதா$_3$ பீட$_2$த்திலிருந்து, கலிகாலத்தின் தோ$_3$ஷங்களைப் போக்கடிககக் கூடிய

१६. यतीन्द्रं श्लाघयामास शारदा मुदितानना ।
भाष्यकारोऽपि वाग्देवीं विस्मितो वाक्यमब्रवीत् ॥

१७. त्वं मह्यं शारदे! कर्तुं दयां को हेतुरुच्यताम् ।
तेनैवमुक्ता वाग्देवी भाष्यकारं वचोऽब्रवीत् ॥

१८. पुरात्र शङ्कराचार्यः प्राप्तः पृष्टो मया हि सः ।
कप्यासश्रुतितात्पर्यमेवमाह यतीश्वर! ॥

१९. मर्कटासनसङ्काशमिति हास्यकरं वचः ।
स्वाभाविकतयाऽर्थस्य त्वयोक्तस्याधुना श्रुतेः ॥

२०. सन्तुष्टया मया तेन पूजितस्त्वं बुधर्षभ! ।
विपश्चितोऽथ चागत्य सर्वे तद्देशवासिनः ॥

---

### ஶங்கரர் சொன்ன அவப்பொருள்

16*-*20. மிகவும் வியப்புற்ற ஸ்ரீப₄ாஷ்யகாரரும் ஸரஸ்வதீதே₃வியைப் பார்த்து, "ஸரஸ்வதியே! என்னிடம் நீ இவ்வளவு கருணைகாட்டுவதற்கு என்ன காரணம்? என்பதைச் சொல்லவேண்டும்" என்று கேட்டார். அவரால் இப்படி கேட்கப்பட்ட ஸரஸ்வதீதே₃வி ஸ்ரீப₄ாஷ்யகாரரைப் பார்த்து "யதிராஜரே! முன்பொரு ஸமயம் இங்கு வந்த ஶங்கராசார்யரை நான் இதே வேத₃வாக்யத்தின் அர்த்த₂த்தைக் கேட்டபோது, 'குரங்கின் ஆஸனவாய்போன்று சிவந்த தாமரைபோன்ற கண்களையுடையவன் நாராயணன்' என்னும் சிரிக்கத்தக்க பொருளை அவர் சொன்னார். அறிவாளிகளில் தலைவரே! அவ்வேத₃வாக்யத்திற்கு உண்மையான பொருளை நீர் கூறியமையால் உம்மை நான் கொண்டாடினேன்" என்று பதில் உரைத்தாள்.

### அரசனின் ஆத₃ரவும், புறமதத்தவர்களின் பீடை₃யும்

20*-*27. அந்தக் காஷ்மீர தே₃ஶத்திலுள்ள வித்₃வான்கள் அனைவரும், மற்றும் பலரும் யதிராஜருக்கு ஏற்பட்ட இப்பெருமையைக் கேள்விப்பட்டு, அவரோடு வாத₃ம்

௭. पूजोत्सवादिकार्याणि श्रीहरेरखिलानि च।
प्रकुर्वन्त्यधुना सर्वे श्रीरङ्गादिस्थलेषु च॥

௮. पञ्चरात्रागमेनैव कृतं पूजादिकं हरेः।
तदक्षयफलं मोक्षसाधनं चैतदेव हि॥

௯. अनेनैव हि कर्तव्यं मुख्यमाहुर्मनीषिणः।
यूयं तेन प्रकारेण जगन्नाथस्य चार्चकाः॥

௧௦. पूजोत्सवादिकार्याणि भक्त्या प्रकुरुतादरात्।
न्यूनता नास्ति चैतेन परं श्रेयो भविष्यति॥

௧௧. तस्य तद्वचनं श्रुत्वा यतीन्द्रस्य तदर्चकाः।
अनङ्गीकृत्य चोत्थाय तूष्णीं ते सत्वरं गताः॥

---

லான பல தி3வ்யதே3ஶங்களில் — பஞ்சராத்ராக3மத்தில் சொல்லிய முறையிலே எம்பெருமானுக்குப் பூஜை உத்ஸவம் முதலான எல்லாக் கார்யங்களையும் இப்போது அனைவரும் செய்கிறார்கள். பாஞ்சராத்ராக3ம முறையில் எம்பெருமானுக்குச் செய்யப்பட்ட பூஜை முதலானவையே இவ்வுலகிலும் அழிவற்ற ப2லனை அளிப்பதாய், மோக்ஷ ஸாத4னமாகவும் ஆகிறது. இவ்வாக3மத்தின்படி ஆராதி4ப்பதே முக்2யமானது என்று பெரியோர்கள் சொல்லுகிறார்கள். ஜக3ந்நாத2னுடைய அர்ச்சகர்களாகிற நீங்களும் அந்த முறையிலேயே பூஜை உத்ஸவம் முதலான கார்யங்களை அன்போடும், ஆத3ரவோடும் செய்ய வேண்டும். இப்படிச் செய்வதால் குறையேதுமில்லை; மிகுந்த நிறைவே உண்டாகும்" என்று கூறினார். யதிராஜருடைய இவ்வார்த்தையைக் கேட்ட அந்த அர்ச்சகர்கள் அதையேற்காமல் சடக்கென எழுந்திருந்து மௌனமாகவே சென்றுவிட்டனர்.

१२. ततो यतीन्द्रः कुपितस्तेषां विज्ञाय तन्मतम्।
तानर्चकान् तृणीकृत्य सहसोद्धृत्य संमतान्॥

१३. बलात्कारेण तत्रत्यान् स्थापयित्वा दृढव्रतान्।
तैर्जनैः पाञ्चरात्रेण श्रीरङ्गस्थलवत्तदा॥

१४. जगन्नाथस्थलं कर्तुं उद्युक्तो यतिभूपतिः।
स्ववशीकृत्य भूपालं स बभूव जगद्गुरुः॥

१५. तस्यां रात्र्यां तदा सर्वे जगन्नाथार्चकास्तदा।
ज्ञात्वा ते तदभिप्रायं मिलित्वाऽऽमन्त्र्य सत्वरम्॥

१६. जगन्नाथालयं प्राप्य देवस्याग्रे जगत्पतेः।
बद्धाञ्जलिपुटास्सर्वे चक्रुर्विज्ञापनं तदा॥

---

### யதிராஜரின் முயற்சி

12-14. அவர்களுடைய அக்கருத்தையறிந்து கோபங்கொண்ட லோகாசார்யரான யதிராஜர், அவ்வர்ச்சகர்களைப் பொருட்படுத்தாமல், உறுதியுள்ள அந்த தே₃ஶத்து ஜனங்கள் சிலரை அர்ச்சகர்களாக ஸ்த₂ாபித்து, ஸ்ரீரங்க₃மாகிற தி₃வ்ய தே₃ஶம் போலே ஜக₃ந்நாத₂ க்ஷேத்ரத்தையும் பாஞ்சராத்ர முறையில் திருவாராத₄னம் உடையதாம்படி ப₃லாத்காரமாகச் செய்வதற்கு உறுதிகொண்டு, அந்த தே₃ஶத்து அரசனையும் தம் வசப்படுத்திக் கொண்டிருந்தார்.

### அர்ச்சகர்களின் பிரார்த்த₂னையும், ஜக₃ந்நாத₂னின் அப₄ய ப்ரத₃ானமும்

15-*24. அன்றிரவு ஜக₃ந்நாத₂னுடைய அர்ச்சகர்களனைவரும் யதிராஜரின் கருத்தை அப்போதே உணர்ந்து, சடக்கென ஒன்றுகூடி ஆலோசனை செய்து, ஜக₃ந்நாத₂னின் ஆலயத்தையடைந்து, லோகநாயகனுகிற அவன் திருமுன்பே அனைவரும் கைகூப்பிநின்று, "தே₃வதே₃வனே!

१७. देवदेव ! जगन्नाथ ! भक्ताभीष्टप्रदायक ! ।
त्वद्दासभूतान् लक्ष्मीश ! पाह्यस्मान् करुणाकर ! ॥

१८. रामानुजाभिधानोऽद्य यतीन्द्रः कश्चिदागतः ।
मार्गान्तरं समाश्रित्य भवतः स यतीश्वरः ॥

१९. पूजाकार्याणि सर्वाणि कर्तुकामः समास्थितः ।
पूर्वस्थितेन मार्गेण त्वमस्माभिर्दयानिधे ! ॥

२०. पूजितस्सर्वपूजाभिः सर्वाभीष्टप्रदो भव ।
भवताऽस्मत्कृता पूजा न चाङ्गीक्रियते यदि ॥

२१. वयमद्यैव ते सर्वे मरिष्यामो न संशयः ।
इत्युक्त्वा तेऽर्चकास्सर्वे गुर्वीश्च दृषदस्तथा ॥

२२. गृहीत्वा स्वशिरांस्याशु हन्तुमारेभिरे परम् ।
ततः प्रसन्नो भगवान् जगन்नाथः कृपानिधिः ॥

---

ஜக₃ந்நாத₂னே! ப₄க்தர்களின் விருப்பத்தையளிப்பவனே! லக்ஷ்மீநாத₂னே! கருணைக்கடலே! உன் அடியார்களான எங்களை நீ காப்பாற்றவேணும். 'ராமாநுஜர்' என்னும் பெயருடைய யதிஶ்ரேஷ்ட₂ர் ஒருவர் இங்கு இப்போது வந்திருக்கிறார். அந்த யதிராஜர் வேறொரு முறையிலே உன்னுடைய பூஜாகார்யங்கள் அனைத்தையும் செய்விப்ப தற்கென்றே இங்கு வந்திருக்கிறார். கருணாநிதி₄யே! ஏற் கனவே உள்ள முறையிலேயே எங்களால் பூஜிக்கப்பட்டு, அனைவர்க்கும் எல்லா விருப்பங்களையும் அளிப்பவனாகவே நீ ஆகவேணும். நாங்கள் செய்யும் பூஜையை நீ ஏற்றுக் கொள்ளாதவனாகிவிட்டால் நாங்களனைவரும் உன் திரு முன்பே இறந்துவிடுவோம். இதில் ஐயமில்லை" என்று விண்ணப்பித்தனர். இப்படிக்கூறி, அந்த அர்ச்சகர்களனை வரும் பெரிய கற்களைக் கையில் கொண்டு அவற்றால் தங்கள் தலைகளில் அடித்துக்கொள்ள ஆரம்பித்தனர்.

२३. स तेभ्यो ह्यभयं दत्वा कृपया तानपालयत्।
अर्चकास्ते ततस्सर्वे संप्रहृष्टाः कृपादरात्॥

२४. प्रपेदिरे स्ववेश्मानि शासनाज्जगतीपतेः।
जगन्नाथं समासाद्य मतिमान् सत्वरं ततः॥

२५. प्रणम्य लक्ष्मणाचार्यः कृताञ्जलिरभाषत।
जगन्नाथ! जगद्वन्द्य! जगदीश! जगन्मय!॥

२६. विज्ञापनं ममेदानीं भगवन्! अवधार्यताम्।
श्रीरङ्गादिस्थलान्यानि वर्तन्ते जगतीतले॥

२७. पञ्चरात्रागमेनैव तानि सर्वाणि सांप्रतम्।
तथैव चाङ्गीक्रियतां स्थलस्यास्य जगत्पते!॥

---

அதைக்கண்டு அவர்களிடம் தயைகொண்ட கருணைக் கடலான ஜகந்நாதனுகிற எம்பெருமான் அவர்களுக்கு அபயமளித்துத் தன் க்ருபையாலே அவர்களை ரக்ஷித்தான். அவன் காட்டிய கருணையோடு கூடிய ஆதரவைக்கண்டு உகந்த அந்த அர்ச்சகர்களனைவரும் லோகநாயகனுகிற அவனுடைய நியமனப்படி தங்கள் வீடுகளுக்குச் சென்றனர்.

### யதிராஜரின் ப்ரார்த்தனை

24*-27. அதற்குப்பின் அறிவாளியான ஸ்ரீராமாநுஜர் விரைவில் ஜகந்நாதனையடைந்து வணங்கி "ஜகந்நாதனே! உலகனைத்தாலும் வணங்கப்படுபவனே! உலகனைத்தையும் நியமிப்பவனே! அனைத்துலகமாகவும் இருப்பவனே! குணங்கள் நிறைந்தவனே! தோஷமற்றவனே! இப்போது இந்த என்னுடைய விண்ணப்பத்தைத் திருவுள்ளம்பற்றியருளவேணும். இவ்வுலகிலுள்ள ஸ்ரீரங்கம் முதலான மற்ற திவ்யதேசங்களில் பாஞ்சராத்ராகமமுறையிலேயே திருவாராதனம் நடைபெறுகிறது. ஜகத்பதியே! இந்த

२८. नाङ्गीकृत्य वचस्तस्य तमाह पुरुषोत्तमः ।
यतीन्द्र ! शृणु मे वाक्यं मन्नाथ ! जगतां गुरो ! ॥

२९. श्रीरङ्गादिस्थलान्यानि वर्तन्ते जगतीतले ।
कृतानि किल तेनाशु मया तत्र जगद्गुरो ! ॥

३०. मदधीनमिदं क्षेत्रं देहि मे पुरुषोत्तमम् ।
स्वैरमत्र जनैरेतैर्विहरामि सुखं यथा ॥

३१. तदाकर्ण्य वचस्तस्य जगन्नाथस्य योगिराट् ।
पुनः पुनस्तथैवेदं क्रियतामित्युवाच सः ॥

---

ஸ்த₂லத்திலும் அப்படியே திருவாராத₄னம் நடைபெறும் படி திருவுள்ளம்பற்றியருளவேணும்.” என்று கைகூப்பி நின்று விண்ணப்பித்தார்.

## ஜக₃ந்நாத₂னின் இசைவின்மை

28-*32. யதிராஜரின் அவ்வேண்டுகோளை ஏற்காமல் புருஷோத்தமனான எம்பெருமான் “ஜக₃த்₃ஆசார்யராய் எம்பெருமானரான யதிராஜரே! என்னுடைய இந்த வாக்யத்தைக் கேட்பீராக. ஸ்ரீரங்க₃ம் முதலான மற்ற ஸ்த₂லங்களும் இவ்வுலகில் உள்ளன. ஜக₃த்₃ஆசார்யரே! அந்த க்ஷேத்ரங்களில் பாஞ்சராத்ரமுறையும் என்னாலே ஏற்படுத்தப்பட்டதேயாகும். ஆயினும், புருஷோத்தமமாகிற இந்த க்ஷேத்ரத்தை என் அதீ₄னமாக்கி, எனக்குக் கொடுத்துவிடும். இந்த ஜனங்களோடுகூட என் இஷ்டப்படி ஸுக₂மாக லீலாரஸத்தை அநுப₄விக்கிறேன்” என்று யதிராஜரிடம் கூறினான். ஜக₃ந்நாத₂னின் அந்த வார்த்தையைக்கேட்ட எதிகட்கிறைவர் ‘பாஞ்சராத்ராக₃மமுறையை ஏற்றுக்கொள்ளவேண்டும்’ என்று மறுபடியும் மறுபடியும் கேட்டுக்கொண்டார். ஜக₃ந்நாத₂னும் ‘அங்குபோல் இங்கு ஆகாது’ என்று அவரிடம் கூறிவிட்டான்.

२३. स तेभ्यो ह्यभयं दत्वा कृपया तानपालयत्।
अर्चकास्ते ततस्सर्वे संप्रहृष्टाः कृपादरात्॥

२४. प्रपेदिरे स्ववेश्मानि शासनाज्जगतीपतेः।
जगन्नाथं समासाद्य मतिमान् सत्वरं ततः॥

२५. प्रणम्य लक्ष्मणाचार्यः कृताञ्जलिरभाषत।
जगन्नाथ! जगद्वन्द्य! जगदीश! जगन्मय!॥

२६. विज्ञापनं ममेदानीं भगवन्! अवधारयताम्।
श्रीरङ्गादिस्थलान्यानि वर्तन्ते जगतीतले॥

२७. पञ्चरात्रागमेनैव तानि सर्वाणि सांप्रतम्।
तथैव चाङ्गीक्रियतां स्थलस्यास्य जगत्पते!॥

---

அதைக்கண்டு அவர்களிடம் தயைகொண்ட கருணைக் கடலான ஜகந்நாதனாகிற எம்பெருமான் அவர்களுக்கு அபயமளித்துத் தன் க்ருபையாலே அவர்களை ரக்ஷித்தான். அவன் காட்டிய கருணையோடு கூடிய ஆதரவைக்கண்டு உகந்த அந்த அர்ச்சகர்களனைவரும் லோகநாயகனாகிற அவனுடைய நியமனப்படி தங்கள் வீடுகளுக்குச் சென்றனர்.

### யதிராஜரின் ப்ரார்த்தனை

24*-27. அதற்குப்பின் அறிவாளியான ஸ்ரீராமாநுஜர் விரைவில் ஜகந்நாதனையடைந்து வணங்கி "ஜகந்நாதனே! உலகனைத்தாலும் வணங்கப்படுபவனே! உலகனைத்தையும் நியமிப்பவனே! அனைத்துலகமாகவும் இருப்பவனே! குணங்கள் நிறைந்தவனே! தோஷமற்றவனே! இப்போது இந்த என்னுடைய விண்ணப்பத்தைத் திருவுள்ளம்பற்றியருளவேணும். இவ்வுலகிலுள்ள ஸ்ரீரங்கம் முதலான மற்ற திவ்யதேசங்களில் பாஞ்சராத்ராகமமுறையிலேயே திருவாராதனம் நடைபெறுகிறது. ஜகத்பதியே! இந்த

षट्त्रिंशोऽध्यायः

१. ततो भक्तपराधीनो जगन्नाथोऽप्यचिन्तयत् ।
अयं रामानुजः श्रीमान् सुमहात्मा दृढव्रतः ॥

२. उल्लङ्घ्य मद्वचः सत्यं तत्तथैव करिष्यति ।
पञ्चरात्रागमेनैव स्थलस्यास्यापवर्तनम् ॥

३. अर्चकास्तेन मे शीघ्रं मरिष्यन्ति न संशयः ।
अतोऽधुनैव योगीन्द्रः प्रापितव्यः सुदूरतः ॥

४. तद्रात्रावेव योगीन्द्रं प्रापयामास सत्वरम् ।
श्रीकूर्मं लक्ष्मणाचार्यं श्रीहरिर्योगमायया ॥

---

## முப்பத்தாறும் அத்தியாயம்

# ஸ்ரீகூர்ம வேங்கட நிர்வாஹம்

### ஜக$_3$ந்நாத$_2$னின் மாயை

1-4. ப$_4$க்தபரதந்த்ரனை ஜக$_3$ந்நாத$_2$ன் பின்வருமாறு சிந்திக்கலுற்றான் — "கைங்கர்யச்செல்வம் நிறைந்தவரும், பெரிய மஹாத்மாவும், உறுதியான ஸங்கல்பத்தையுடையவருமான இந்த ராமாநுஜர் என் வார்த்தையை மீறி, இந்த ஸ்த$_2$லத்தைப் பாஞ்சராத்ரமுறையில் மாற்றவேணும் என்கிற தம் விருப்பத்தை உள்ளபடியே நிறைவேற்றிவிடுவார். அதனால் என்னுடைய அர்ச்சகர்களும் விரைவில் இறந்துவிடுவார்கள் என்பதில் ஐயமில்லை. ஆகையால் யதிராஜரை நாம் வெகுதூரத்திற்கப்பால் இப்போதே அனுப்பிவிடவேண்டும்" என்று எண்ணிய ஜக$_3$ந்நாத$_2$ன் — தன்னுடைய 'மாயை' எனப்படும் ஆஶ்சர்யமான ஸங்கல்பத்தால், அன்றிரவே (உறங்கும்போது) விரைவில் யதிராஜரான ராமாநுஜரை ஸ்ரீகூர்மத்தையடையும்படி செய்துவிட்டான்.

५. प्रभातायां तु शर्वर्यां तस्यां लक्ष्मणदेशिकः ।
उत्थाय सहसा धीमान् हरिर्हरिरितीरयन् ॥
६. दृष्ट्वा दश दिशः सम्यक् चिन्ताव्याकुलमानसः ।
श्रीकूर्ममिति तत्क्षेत्रं ज्ञात्वा विस्मयमागतः ॥
७. श्रीकूर्मनायकं मत्वा शिवलिङ्गमितीरितम् ।
उपवासेन तत्रैकं वासरं स्थितवान् गुरुः ॥
८. राहित्यात् श्वेतमृत्स्नायाः विष्ण्वर्चायाश्च सत्तमः ।
स्वप्ने प्रसन्नो भगवान् तस्य श्रीकूर्मनायकः ॥
९. व्याजहार शुभं वाक्यं कृपया यतिभूपतिम् ।
यतीन्द्राज्ञानदोषेण शिवलिङ्गं जना इति ॥

---

## ஸ்ரீகூர்மத்தில் உபவாஸம்

5-*8 அன்றிரவு விடிந்தபோது அறிவாளியான ஸ்ரீராமாநுஜர் 'ஹரிர்ஹரி:' என்று உச்சரித்துக்கொண்டே எழுந்திருந்து, பத்து தி₃க்குகளையும் நன்கு பார்த்து (புதிய இடமாய் இருக்கிறதே என்று) கவலைகொண்ட நெஞ்சை உடையவராய், அந்த இடத்தை ஸ்ரீகூர்மம் என்ற க்ஷேத்ரமாக அறிந்து மிகவும் வியப்புற்றார். ஸ்ரீகூர்மம் கோயிலில் உள்ள தெய்வத்தை ஶிவலிங்க₃ம் என்று அங்குள்ளார் சொல்லுவதை உண்மை என்று எண்ணி, எம்பெருமானுடைய அர்ச்சைத் திருமேனி இல்லாமை யாலும், திருமண் கிடைக்காமையாலும் அவ்வூரில் ஸதா₃சாரநிஷ்ட₂ரான யதிராஜர் ஒருநாள் உபவாஸத்தோடு எழுந்தருளியிருந்தார்.

## ஸ்ரீகூர்ம நாயகனின் நியமனம்

8*-15. ஸ்ரீகூர்ம நாயகனை எம்பெருமான் ராமாநுஜரின் கனவில்தோன்றி, யதிராஜரான அவரைக் குறித்துப் பின்வரும் மங்க₃ளமான வாக்யத்தையருளினன் — "யதி

१०. मां वदन्ति मृषा सर्वे मायान्धीकृतलोचनाः।
वत्स्याम्यत्र स्वरूपेण शंखचक्रगदाधरः॥

११. लक्ष्मणार्याधुना शीघ्रं त्वं मां सम्यक् विलोकय।
शुद्धा मदालयस्याग्रे वर्तते श्वेतमृत्तिका॥

१२. सम्यक् तयोर्ध्वपुण्ड्राणि धृत्वा वैष्णवसत्तम!।
मामाराध्याशु नैवेद्यं भक्त्या सम्यक् समर्प्य च॥

१३. भोजनं कुरु योगीन्द्र! मत्प्रसादं सुपावनम्।
अत्रैव पूजयन् मां त्वं दिनानि कतिचिद्वस॥

१४. अत्रैव चागमिष्यन्ति जगन्नाथेन चोदिताः।
त्वदीयास्सत्वरं सर्वे लक्ष्मणार्य! न संशयः॥

१५. विचारं मा कुरुष्वात्र तवाधीनमिदं कृतम्।
पूर्वमेव मया तात! विभूतिद्वयमादरात्॥

---

ராஜரே! அறியாமையாலே இங்குள்ள ஜனங்கள், அஜ்ஞானத்தாலே அறிவிழந்தவர்களாய் என்னை ஶிவ லிங்க₃ம் என்று பொய்கூறுகிருர்கள். நான் இங்கு ஶங்க₂சக்ரக₃தை₃களை த₄ரிப்பவனுய் என் ரூபத்தோடேயே வாழ்கிறேன். ராமாநுஜரே! இப்போதே விரைவில் நீர் என்னைக் காண்பீராக! என் ஆலயத்திற்கு முன்புறத்தில் திருமண்ணும் இருக்கிறது. வைஷ்ணவோத்தமரே! அதைக்கொண்டு ஊர்த்₄வபுண்ட்₃ரங்களை நன்கு சாத்திக்கொண்டு, விரைவில் என்னை ஆராதி₄த்து, ப₄க்தியோடு எனக்குத் தளிகை நன்கு ஸமர்ப்பித்து, பரம பரிஶுத்₃த₄மான என் ப்ரஸாத₃த்தை ஸ்வீகரிப்பீராக. இங்கேயே ஆராதி₄த்துக்கொண்டு சில தினங்கள் வஸிப்பீராக. ஜக₃ந்நாத₂னல் நியமிக்கப்பட்டு, உம்மைச் சேர்ந்தவர்கள் அனைவரும் இங்கு விரைவில் வந்துசேருவார்கள். இதில் ஐயமில்லை. ராமாநுஜரான எம் ஐயரே! நீர் இவ்

१६. ततः स्वप्नात्समुत्थाय संतुष्टो विस्मयान्वितः।
तथा विधाय योगीन्द्रस्तेनोक्तेनैव वर्त्मना॥
१७. कूर्मनाथं समाराध्य तन्निवेदितभोजनम्।
विधाय तस्य पादाग्रे सुखं तत्रावसत्तदा॥
१८. तदाप्रभृति सर्वत्र यतीन्द्रागमवैभवात्।
विष्णुस्थलमिति ह्यासीत् श्रीकूर्मं विदितं महत्॥
१९. श्रीकूर्मवासिनस्सर्वे यतिराजं तमाश्रितम्।
पुत्रदारादिसहिता यतिराजं समाश्रिताः॥
२०. श्रीकूर्मे च जगन्नाथे वृत्तान्तं यतिभूपतेः।
तच्छ्रुत्वात्यद्भुतं सर्वे तत्र तत्र जनाः स्थिताः॥
२१. श्रीकूर्मं तरसाऽऽगत्य नानादेशस्थिता जनाः।
तं च दृष्ट्वा यतिश्रेष्ठं कूर्मेशं विष्णुरूपिणम्॥

---

விஷயத்தில் கவலைகொள்ளவேண்டாம். இந்த உப₄ய விபூ₄தியும் அன்போடு என்னால் முன்னமே உமக்கு அதீ₄னமாக ஆக்கப்பட்டதன்றோ!" என்று.

ஸ்ரீகூர்மத்தில் யதிராஜ வைப₄வம்

16-*22. அதற்குப்பின் கனவிலிருந்து விழித்தெழுந்த யதிராஜர் மிகவும் வியப்புற்றவராய் ஆனந்த₃மடைந்தார். கூர்மநாத₂னால் சொல்லப்பட்ட முறையிலேயே அவனை ஆராதி₄த்து, அவனுடைய ப்ரஸாத₃த்தை ஏற்றுக்கொண்டு, அவனுடைய திருவடிவாரத்திலேயே சில நாட்கள் ஸுக₂மாக வாழ்ந்தார். அதுமுதற்கொண்டு யதீந்த்₃ரர் அங்கு சேர்ந்த வைப₄வத்தாலே ஸ்ரீகூர்மம் பெரிய விஷ்ணு க்ஷேத்ரமாக மிகவும் ப்ரஸித்₃தி₄பெற்றது. கூர்மநாத₂னை ஆஶ்ரயித்திருந்த யதிராஜரை ஸ்ரீகூர்மத்தில் வாழ்ந்த அனைவரும் பெண்டுபிள்ளைகளுடன் ஆஶ்ரயித்தனர். ஸ்ரீகூர்மத்திலும், ஜக₃ந்நாத₂புரியிலும் யதிராஜர் விஷயத்தில் நடந்த அத்யாஶ்சர்யமான செய்திகளைக்கேட்டு பற்பல

२२. विस्मयं परमं गत्वा यतिराजं समाश्रिताः।
जगन्नाथे स्थिताः शिष्याः जगन्नाथेन चोदिताः॥

२३. श्रीकूर्मक्षेत्रमासाद्य प्रणेमुर्यतिभूपतिम्।
ततो यतीन्द्रस्तैः शिष्यैः सहितः संप्रहर्षितः॥

२४. संप्रेषितस्तदा तेन कूर्मेशेन दयालुना।
मन्नाथः सहसा धीमान् सिंहाचलमथाऽविशत्॥

२५. सिंहाचले महासिंहं प्रणम्य हरिमव्ययम्।
तस्मान्निर्गत्य सहसा सिंहाद्रेः शिष्यसंवृतः॥

२६. अहोबिलं गारुडाद्रौ प्रविवेश महायशाः।
नारसिंहं परं नत्वा वेङ்कटाचलमागतः॥

---

தே₃ஶங்களில் ஆங்காங்குள்ள ஜனங்கள் ஸ்ரீகூர்மத்தை விரைவில் அடைந்து, யதிராஜரையும், விஷ்ணு ரூபியான கூர்மநாத₂னையும் ஸேவித்து, மிகவியப்புற்று யதிராஜரை ஆஶ்ரயித்தனர்.

## ஸிம்ஹாசலத்தையடைதல்

22*-24 ஜக₃ந்நாத₂புரியில் இருந்த ஸ்ரீராமானுஜ ஶிஷ்யர்கள் ஜக₃ந்நாத₂னால் நியமிக்கப்பெற்று ஸ்ரீகூர்மத்தையடைந்து எதிகட்கிறைவரை வணங்கினர். அதற்குப்பின் அந்த ஶிஷ்யர்களோடுகூடி மிகவுகந்த யதிராஜரான எம்பெருமானார் கருணைமிகுந்த கூர்மநாத₂னால் விடைகொடுக்கப்பெற்றவராய் ஸிம்ஹாசலத்தை அடைந்தார்.

## அஹோபி₃லமார்க்க₃மாகத் திருவேங்கடம் அடைதல்

25-26. ஸிம்ஹாசலத்தில் வராஹநரஸிம்ஹனாய் இருக்கும் அழிவற்ற எம்பெருமானை வணங்கி, ஶிஷ்யர்களோடு கூடியவராய் அந்த ஸிம்ஹாசலத்திலிருந்து புறப்பட்டு விரைவில் க₃ருட₃ாத்₃ரியிலுள்ள அஹோபி₃லத்தைப்

२७. तदा शैवास्समागत्य वेङ्कटाद्रिं कृतत्वराः।
शङ्खचक्रादिरहितं दृष्ट्वा तं वेङ्कटेश्वरम्॥
२८. स्वामिपुष्करिणीतीरे स्कन्दं मत्वा तदाक्रमन्।
स्कन्दमित्येव शैवास्ते वैष्णवा वेङ्कटेश्वरम्॥
२९. शैवानां वैष्णवानां च कलहः सुमहानभूत्।
भाष्यकारोऽथ तान् सर्वान् वचनं चेदमब्रवीत्॥
३०. देवस्य भवतां शैवाः! यान्यसाधारणानि च।
ननु शूलादिचिह्नानि स्कन्दस्य किल भूसुराः!।

---

பெரும்புகழாளரான ராமாநுஜர் அடைந்தார். அங்கு பரமாத்மாவான நரஸிம்ஹனை வணங்கிப் பின் அங்கிருந்து திருவேங்கடமலையை அடைந்தார்.

### ஶைவர்களின் கலகம்

27-*29. அப்போது ஶைவர்கள் திருவேங்கடமலையைச் சடக்கென வந்தடைந்து, திருவேங்கடத்தப்பன் ஶங்க₂சக்ராதி₃ தி₃வ்யாயுத₄ங்கள் இல்லாதிருப்பதைப் பார்த்து, ஸ்வாமிபுஷ்கரிணிக் கரையிலிருக்கும் கந்தனை எண்ணி அக்கோயிலை ஆக்ரமித்துக்கொண்டனர். ஶைவர்கள் அவனைக் கந்தன் என்றும், வைஷ்ணவர்கள் திருவேங்கடமுடையானை (இதிஹாஸ புராணங்களிலும், சிலப்பதிகாரம் முதலான தமிழ் இலக்கியங்களிலும், தி₃வ்ய ப்ரப₃ந்த₄ங்களிலும் ப்ரஸித்₃தி₄பெற்ற) திருமால் என்றும் வாத₃ம் செய்தமையாலே, அங்கு ஒரு பெரிய ஶைவ வைஷ்ணவச் சண்டை ஏற்பட்டது.

### யதிராஜருடைய ஸமாதா₄ன வாக்யம்

29*-32. அப்போது ப₄ாஷ்யகாரர் அவர்களனைவரையும் பார்த்துப் பின்வருமாறு கூறினார்—“ஶைவ அந்தணர்களே! உங்களுடைய தே₃வனை கந்தனுக்கே உரிய சூலம் முதலான ஆயுத₄ங்களாகிற அடையாளங்களையும்,

३१. शङ्खचक्रादिचिह्नानि मम देवस्य यानि च ।
आयुधानि च सर्वाणि कारयित्वाऽधुना तयोः ॥

३२. निक्षिपामोऽद्य तान् सर्वान् वेङ्कटेश्वरसन्निधौ ।
स धत्ते यानि पश्यामः किं वृथाकलहेन वः ॥

३३. तथेति प्रतिगृह्याशु शैवास्सत्संमतिं गताः ।
अथायुधानि सर्वाणि तान्यादाय यतीश्वरः ॥

३४. स्वकीयः परकीयो वा पुरुषो नास्ति वै यथा ।
तथा संशोध्य मतिमान् तत्र गर्भगृहे हरेः ॥

३५. सन्निधौ वेङ्कटेशस्य निधाय यतिपुङ्गवः ।
बद्ध्वा कपाटं सुदृढं शैवैस्सह विनिर्गतः ॥

---

எங்களது தே$_3$வனுக்கே உரிய ஶங்க$_3$ம், சக்ரம் முதலான ஆயுத$_4$ங்களான அடையாளங்களையும் இப்போதே செய்வித்து, திருவேங்கடமுடையானுடைய திருமுன்பே அந்த இருவகை ஆயுத$_4$ங்கள் அனைத்தையும் வைத்துவிடுவோம்; அவன் எந்த ஆயுத$_4$ங்களை த$_4$ரித்துக்கொள்ளுகிறான் என்று பார்ப்போம். வீண் கலகம் எதற்கு?" என்று.

## திருமலையப்பன் ஶங்க$_2$சக்ரங்களை த$_4$ரித்தல்

33-37. ஶைவர்களும் யதிராஜர் சொன்னதை ஏற்றுக்கொண்டு நன்கு ஸமாத$_4$ானமடைந்தனர். அறிவாளியான யதிராஜரும்—அந்த எல்லா ஆயுத$_4$ங்களையும் எடுத்துக்கொண்டு, தம்மைச் சேர்ந்தவர்களோ, பிறரைச் சேர்ந்தவர்களோ எவரும் க$_3$ர்ப்ப$_4$க்$_3$ருஹத்தில் இல்லாமல் இருக்கும்படி நன்கு சோதித்து, அந்த க$_3$ர்ப்ப$_4$க்$_3$ருஹத்தில் திருவேங்கடமுடையான் திருமுன்பே அவ்வாயுத$_4$ங்களனைத்தையும் வைத்து, திருவாசலை உறுதியாகத் தாளிட்டுப்பூட்டி ஶைவர்களோடு வெளியேறினர்.

३६. उभावपि समागत्य प्रातस्तौ शैववैष्णवौ।
दद‍र्शतुर्वेङ्कटेशं शङ्खचक्रधरं तदा॥

३७. चरणेऽथ स्थितं शूलं दृष्ट्वा डमरुकं हरेः।
पलायिता गिरेस्तस्माच्छैवास्ते लज्जितास्तदा॥

३८. भाष्यकारोऽथ संहृष्टो नत्वा श्रीवेङ्कटेश्वरम्।
शङ्खचक्रधरं देवं भक्तवत्सलमव्ययम्॥

३९. मङ्गलाशासनं चक्रे यावदाचन्द्रतारकम्।
वक्षःस्थले स्वर्णलक्ष्मीं स दत्वा तस्य सादरम्॥

४०. वेङ்கटेशस्य योगीन्द्रः सन्तुष्टोऽभून्महायशाः।
श्वशुरो देशिकश्चासीत् तेन योगीश्वरो हरेः॥

---

அந்த ஶைவவைஷ்ணவர்களிருவரும் காலையில் கோயிலுக்கு வந்து (க₃ர்ப்ப₄க்₃ருஹத்தைத் திறந்துபார்க்கையில்)திருவேங்கடமுடையான் ஶங்க₂சக்ரம் த₄ரித்திருப்பதையும்,சூலம்,ட₃மருகம் (உடுக்கை) முதலான ஆயுத₄ங்கள் அவன்காலின் கீழ் இருப்பதையும் கண்ட ஶைவர்களிருவரும் வெட்கமடைந்து அப்போதே திருவேங்கடமலையிலிருந்து ஓடிவிட்டார்கள்.

### திருவேங்கடவனின் மாமனாராதல்

38-40. அதற்குப்பின் மிகவுகந்த ஸ்ரீப₄ாஷ்யகாரர் ஶங்க₂சக்ரங்களை த₄ரித்தவனாய், அடியார்களிடம் வாத்ஸல்யம் உடையவனாய், அழிவற்றவனாய், பரமாத்மாவான திருவேங்கடமுடையானை வணங்கி, 'நீடூழி வாழ்க' என மங்க₃ளாஶாஸனம் செய்தார். அப்பெருமானுடைய திருமார்பில் பொன்னாலான லக்ஷ்மீதே₃வியை அன்போடு எழுந்தருளச்செய்து, பெரும்புகழாளரான யதிராஜர் மிகவுகந்தார். அதனால் எம்பெருமானுக்கு யதிராஜர் (லக்ஷ்மியை அளித்ததினாலே) மாமனாராகவும், (ஶங்க₂சக்ரங்களை அளித்ததினாலே) ஆசார்யராகவும் ஆனார்.

४१. स्थलसंरक्षणार्थाय संन्यासिद्वयमादरात् ।
निक्षिप्य निपुणं तत्र वेङ्कटेश्वरसन्निधौ ॥

४२. तस्मात्सत्यव्रतक्षेत्रमाजगामाञ्जसा गिरेः ।
देवराजं प्रणम्याथ मधुरान्तकमागमत् ॥

४३. वीरनारायणपुरं गत्वा नाथमुनेर्महत् ।
योगाभ्यासस्थलं नत्वा ततः श्रीरङ्गमागतः ॥

४४. एवं प्रदक्षिणं कृत्वा भुवः श्रीरङ्गनायकम् ।
प्रणिपत्य यतिश्रेष्ठः स्वमठं प्रविवेश ह ॥

४५. इदं महत्पुण्यफलं पुरातनं
कृतं यतीन्द्रेण भुवः प्रदक्षिणम् ।
शृण्वन्ति गायन्ति सदा नरोत्तमाः
ते यान्ति लोकं मधुवैरिणो हरेः ॥

इति प्रपन्नामृते रामानुजचरित्रे
श्रीकूर्मवेङ्कटनिर्वहणं नाम षट्त्रिंशोऽध्यायः ॥

---

### பூ₄ப்ரத₃க்ஷிண ஸமாப்தி

41-45. அந்த ஸ்த₂லத்தை ரக்ஷிப்பதற்காகத் திருவேங்கடமுடையான் தி₃வ்யாலயத்திலே ஸமர்த்த₂ர்களான இரு ஸந்யாஸிகளை யதிராஜர் அன்புடன் ஏற்படுத்திவிட்டு, அத்திருமலையிலிருந்து, ஸத்யவ்ரதக்ஷேத்ரமாகிற கச்சி மாநகரை ஸுக₂மாக வந்தடைந்தார் யதிராஜர். அங்கு தே₃வப்பெருமாளை வணங்கிவிட்டு, மது₄ராந்தகத்தை அடைந்தார் யதிராஜர். (அங்கு ராமனை மங்க₃ளாஶாஸனம் செய்துவிட்டு) வீரநாராயணபுரம் சென்று, நாத₂முனியின் மிகச்சிறந்த யோகா₃ப்₄யாஸ ஸ்த₂லத்தை வணங்கிவிட்டு, அதற்குப்பின் ஶ்ரீரங்க₃த்தை வந்தடைந்தார் இவ்வண்ணமாக பூ₄மியை (பா₄ரததே₃ஶத்தை) ப்ரத₃க்ஷிணம்செய்து,

सप्तत्रिंशोऽध्याय :

१. काञ्च्यां पश्चिमदिग्भागे क्रोशमात्रादनन्तरम्।
अग्रहारो महानासीत् कूर इत्यभिविश्रुतः॥

२. यो हि तस्याधिपत्येन कूराधिप इति श्रुतः।
स श्रीमान् कूरनाथार्यस्तस्मिन् श्रीकूरनामके॥

३. अन्नदानपरो नित्यमुवास कतिचित्समाः।
कुबेरधनसंपत्तिः सकुटुम्बो महायशाः॥

---

அரங்கநகரப்பனை வணங்கி யதிராஜர் தம் மட₂த்தை யடைந்தார். பெரிய புண்ணியத்தின் ப₂லமாயிருப்பதாய், பழமையானதான இந்த யதிராஜரின் பூ₄ப்ரத₃க்ஷிண சரித்திரத்தை எந்த நரோத்தமர்கள் கேட்கவும், பாடவும் செய்கிறார்களோ அவர்கள் மது₄ஸூத₃னனை எம்பெருமானின் உலகை அடைவார்கள்.

ஸ்ரீப்ரபந்நாம்ருதத்தில், ஸ்ரீராமாநுஜ சரித்திரத்தில்
ஸ்ரீகூர்மவேங்கட நிர்வாஹம் எனப்படும்
முப்பத்தாறும் அத்தியாயம் நிறைவுற்றது.

## முப்பத்தேழாம் அத்தியாயம்

# கூரத்தாழ்வான் ஸ்ரீரங்கமடைதல்

### கூரத்தாழ்வானின் அன்னதா₃னம்

1-5. காஞ்சியின் மேற்கு தி₃க்கில் ஒரு க்ரோஶ தூ₃ரத்தில் கூரம் என்று புகழ்பெற்ற ஒரு பெரிய அக்₃ரஹாரம் இருந்தது. அதற்குத் தலைவராயிருந்தமையாலே 'கூராதி₄பர்' என்று பெயர்பெற்ற ஓரந்தணர் இருந்தார். மிகவும் செல்வமுடைய அந்தக் கூரேஶர் அந்தக்கூரம் என்னும் ஊரில் தினந்தோறும் அன்னதா₃னம் செய்வதில் ஈடுபாடுடையவராய் சில வருஷங்கள் வாழ்ந்துவந்தார். குபே₃ரன்போல் அளவற்ற செல்வமுடையவராய், நல்ல

४. धर्मैकनिरतो धीमान् सर्वशास्त्रविशारदः।
आदित्योदयमारभ्य निशि यामद्वयावधि॥

५. पङ्ग्वन्धकृपणादिभ्यः सर्वेभ्यो ह्यन्नमादरात्।
प्रददौ भक्तिभावेन निरन्तरमतन्द्रितः॥

६. कदाचिदन्नशालायां तं महान्तं रवं निशि।
तस्य काञ्च्यां कपाटानां निमीलनसमुद्भवम्॥

७. मेघनादनिभं श्रुत्वा लक्ष्मीर्वरदवल्लभा।
विस्मिता वरदं प्राह प्रभो! कोऽयं महान् रवः॥

८. निशीथे सांप्रतं देव श्रुतः कश्चिन्महान् रवः।
तस्याहं ज्ञातुमिच्छामि ब्रूहि कौतूहलं हि तत्॥

---

குடும்ப₃த்தை உடையவராய், பெரும்புகழை உடையவராய், த₄ர்மத்திலேயே ஈடுபட்டவராய், பேரறிவாளராய் எல்லா ஶாஸ்த்ரங்களிலும் வல்லவரான அவர் ஸூர்யோத₃யம் தொடங்கி இரவில் இரண்டு யாமங்கள் வரையில்-நொண்டி, குருடு, ஏழை முதலானோர் அனைவர்க்கும் அன்போடு இடைவிடாமலும், சோம்பாமலும் அன்னம் அளித்து வந்தார்.

## பெருந்தேவித் தாயாரின் வியப்பு

6-8. ஒருசமயம் அன்னசாலையின் கதவுகளைச் சாத்துவதால் ஒலித்த மேக₄முழக்கம்போன்ற பேரரவத்தைக் காஞ்சியில் கேட்டு, வரத₃னுக்கு இனியவளான பெருந்தேவித் தாயார் மிகவும் வியப்புற்றவளாய், "நாத₂னே ! இந்தப் பேரரவம் யாது? இவ்விரவில் இப்போது என்னால் கேட்கப்பட்ட இப்பேரரவத்தின் காரணத்தை யான் அறிய விரும்புகிறேன். அதை அறிவதில் எனக்கு மிகவும் விருப்பம் உள்ளது. நீர் அதைச்சொல்லவேண்டும்" என்று வரத₃ராஜனைப் பார்த்துக் கூறினாள்.

९. तस्यास्तद्वचनं श्रुत्वा तत्सर्वं वरदस्तदा ।
न्यवेदयन्महादेव्यां सम्यक् कूरेशवैभवम् ॥

१०. तच्छ्रुत्वा विस्मिता देवी वरदं पुनरब्रवीत् ।
तमहं द्रष्टुमिच्छामि त्वमिहानय सत्वरम् ॥

११. तदङ्गीकृत्य वचनं महादेव्याः श्रियःपतिः ।
दिदेशानयने तस्य काञ्चीपूर्णं हरिर्जवात् ॥

१२. तदङ्गीकृत्य शिरसा भगवच्छासनं परम् ।
काञ्चीपूर्णो ययौ धीमान् कूरेशान्तिकमादरात् ॥

१३. काञ्चीपूर्णं महात्मानं कूरेशो भगवत्परः ।
यथार्हं पूजयामास प्रत्युत्थानाभिवादनैः ॥

---

### திருக்கச்சிநம்பியைத் தூதனுப்புதல்

9-11. அந்த தே₃வியின் அவ்வார்த்தை முழுவதையும் கேட்ட வரத₃ராஜன் அப்போதே கூரேஶரின் பெருமையைப் பெருந்தேவிக்கு நன்கு எடுத்துரைத்தான். அதைக் கேட்ட தே₃வி மிக வியப்புற்று, "அந்தக் கூரேஶரை நான் காணவிரும்புகிறேன். நீர் அவரை விரைவில் வர வழைப்பீராக" என்று வரத₃னிடம் மறுபடி கூறினாள். பெருந்தேவியின் அவ்வார்த்தையை ஏற்று, ஶ்ரிய:பதியான எம்பெருமான் கூரேஶரை விரைவில் அழைத்துவரத் திருக்கச்சிநம்பியை அனுப்பினான்.

### கூரத்தாழ்வானின் வைராக்₃யம்

12-*20. எம்பெருமானுடைய அந்த நியமனத்தைச் சிரமேற்கொண்டு அறிவாளியான திருக்கச்சிநம்பி அன் போடு கூரேஶர் இருக்குமிடம் சென்றார். எம்பெருமா னிடம் ஈடுபட்ட கூரேஶரும், மஹாத்மாவான திருக்கச்சி நம்பியை எதிர்கொண்டழைத்தல், வணங்குதல் முதலான செயல்களாலே முறைப்படி ஆராதி₄த்தார். இவ்வண்ணம்

१४. एवं संपूजितस्तेन कृतासनपरिग्रहः ।
अवोचदखिलं तस्मै यत्तदाह्वानकारणम् ॥

१५. काञ्चीपूर्णस्य वचनं कूरेशस्तन्निशम्य सः ।
विचार्य सुचिरं तत्र काञ्चीपूर्णमभाषत ॥

१६. क्वाहं कृतघ्नो दुर्मानी पापिष्ठः परवञ्चकः ।
क्वासौ लक्ष्मीर्जगन्माता ब्रह्मरुद्रादिवन्दिता ॥

१७. नारायणप्रिया देवी विष्णुवक्षःस्थलालया ।
जगज्जन्मलयौ स्यातां पालनं च भवेत्किल ॥

१८. यदुन्मेषनिमेषाभ्यां श्रियै तस्यै नमो नमः ।
मदत्रयविहीनस्य मुक्तिस्तस्य करे स्थिता ॥

---

ஆராதி₄க்கப்பட்டவராய், கூரேஶர் அளித்த ஆஸனத்தில் எழுந்தருளியிருந்த திருக்கச்சிநம்பி—வரத₃ராஜப்பெருமாள் கூரேஶரை அழைத்தது, அதற்குக்காரணம் முதலான அனைத்தையும் அவரிடம கூறினர். திருக்கச்சிநம்பியின் அவ்வார்த்தையைக்கேட்ட கூரேஶர் நீண்டநேரம் ஆலோசித்து, அவ்விடத்திலேயே திருக்கச்சிநம்பியைப் பார்த்துப் பின்வருமாறு கூறினர் — "செய்ந்நன்றி கொன்றவனாய், து₃ரபி₄மானம் உடையவனாய், பாவிகளில் முன்நிற்பவனாய், பிறரை வஞ்சிப்பவனாயுள்ள நான் எங்கே? பிரமன், உருத்திரன் முதலானோராலும் வணங்கப்படுபவளாய், உலகிற்கே தாயாய், நாராயணனுக்கு இனியவளாய், அவனது திருமார்பில் வாழ்பவளாய், தன்னுடைய கண் இமைப்புக்களாலே, உலகின் ஸ்ருஷ்டி ஸ்தி₂தி லயங்களை நடத்துபவளான பெருந்தேவித் தாயாரெங்கே? அந்த ஸ்ரீதே₃வியைக் குறித்து என் வணக்கம் உரித்தாகுக. எவனுக்குக் கல்வி, செல்வம், குலம் என்னும் மூன்றினால் ஏற்படும் மதம் இல்லையோ, அவனுக்கு மோக்ஷம் கைப்பட்டதாகிறது. இம்மூன்று மத₃ங்களிலும் ஊன்றியிருக்கும் எவனுக்கும் ஒருபோதும் மோக்ஷம் கிட்டாது" என்று இவ்

१९. मदत्रयैकनिष्ठस्य नैव मोक्षः कदाचन।
इत्युक्त्वा कूरराट् शीघ्रं सर्वं सन्त्यज्य तत्क्षणम्॥

२०. श्रीरङ्गाभिमुखो धीमान् प्रतस्थे विगतस्पृहः।
काञ्चीपूर्णः स तत्सर्वं विलोक्यात्यन्तविस्मयः॥

२१. श्रीहस्तिशैलमासाद्य वरदाय न्यवेदयत्।
देवराजः श्रिया सार्धं श्रुत्वा तस्य विचेष्टितम्॥

२२. मदहीनं च वैराग्यं प्रमुमोद जगत्पतिः।
आण्डालाख्याथ तत्पत्नी सा भर्तारं विलोक्य तम्॥

२३. सर्वं विसृज्य गन्तारं श्रीरङ्गं प्रति सत्वरम्।
सुवर्णचषकं चैकं कृत्वा वस्त्रेण वेष्टितम्॥

---

வண்ணமாகக்கூறிய அறிவாளியான கூரேசர். (செல்வத்தால் ஏற்படும் மதத்திற்குக் காரணமான) அந்தச் செல்வம அனைத்தையும் அகக்கணத்திலேயே கைவிட்டு, எதிலும் ஆசையற்றவராய், (ஆசார்யரான எம்பெருமானுர் எழுந்தருளியிருக்கும்) ஸ்ரீரங்கத்தைக் குறித்துப் புறப்பட்டார்.

### வரதராஜனின் ஆனந்தம்

20*-*22 இவையனைத்தையும் கண்டு திருக்கச்சிநம்பி மிகவும் வியபபுற்றவராய், ஹஸ்திகிரியையடைந்து, அனைத்தையும் வரதராஜப்பெருமாளிடம் விண்ணப்பித்தார். பெருந்தேவித்தாயாருடன் கூடிய லோகநாதனை தேவப் பெருமாளும் கூரத்தாழ்வானின் அந்தச் செயலையும், செல்வச் செருக்கற்ற வைராக்யத்தையும் கேட்டு (நம கருத்தறிந்து நடந்தாரே என்று) மிகவும் உகந்தார்.

### கூரத்தாழ்வானும் ஆண்டாளும்

22*-34. எல்லாச் செல்வத்தையும் தானம் செய்து விட்டு ஸ்ரீரங்கத்தை நோக்கி விரையும் கூரத்தாழ்வானுகிற தன் கணவனின் ஸௌகர்யத்தை ஆலோசித்து அவருடைய பத்னியான ஆண்டாள் ஒரு பொன் வட்டிலை வஸ்த்ரத்தால் மறைத்து எடுத்துக்கொண்டு அவருக்கு முன்னுல் செல்ல

२४. आदाय सहसा तस्य सा साध्वी पुरतो ययौ।
आयान्तीं पुरतो वीक्ष्य तां स्वधर्मानुरोधिनीम् ॥

२५. अपाङ्गवीक्षणैरीषत्स पश्यन् सत्वरं ययौ।
आरण्यमार्गे कस्मिंश्चित् साऽज्ञातगमना तदा ॥

२६. सुभीता पुरतो यान्तं भर्तारमिदमब्रवीत्।
ब्रह्मन्! भो नाथ! मार्गेऽस्मिन् भयं किं नास्ति वै किल॥

२७. भार्यावचनमाकर्ण्य कूरेशस्तामथाब्रवीत्।
भयं वित्तवतस्तस्य मार्गे सर्वत्र चास्ति हि॥

२८. यथामिषं जले मत्स्यैर्भक्ष्यते श्वापदैर्भुवि।
आकाशे पक्षिभिश्चैव तथा सर्वत्र वित्तवान्॥

२९. भयमर्थवतां नित्यं मृत्योः प्राणभृतामिव।
यदि त्वदन्तिके द्रव्यं अस्ति तद्देहि मेऽधुना॥

---

ஓற்றுள். தனக்கு முன் செல்லும் பதிவ்ரதாத₄ர்மநிஷ்டை₂யான அவளைக் கடைக்கண் பார்வைகளாலே சிறிது பார்த்துக்கொண்டு கூரத்தாழ்வானும சிறிது வேகமாகச் சென்று கொண்டிருந்தார். காட்டுவழியில் செல்லும்போது ஓரிடத்தில் வழியறியாமல்திகைத்த ஆண்டாள் மிகவும் பயந்து, தனக்கு முன்செல்லும் கணவனைப் பார்த்து, "ஸ்வாமியான நாத₂னே! இந்த வழியில் ஒன்றும் ப₄யமில்லையே?" என்று கேட்டாள். மனைவியின் இவ்வார்த்தையைக் கேட்டு, கூரத்தாழ்வான் "பணமுள்ளவனுக்கு எந்த வழியிலும் ப₄யம் இருந்தேதீரும். ஜலத்தில் மீன்களும், பூ₄மியில் வேட்டை மிருகங்களும், ஆகாஶத்தில் பக்ஷிகளும் தங்களது இரையைப் பிடுங்கித் தின்பதுபோலே பணமுடையவன் (அனைவராலும்) பிடுங்கித் தின்னப்படுகிறுன். மரணத்தைக்கண்டு உயிருடைய ஜீவ ராஶிகள் எப்போதும் ப₄யப்படுவதுபோல், பணமுடையவனுக்கும் எப்போதும் ப₄யமுள்ளது. ஏதாவது உன்னிடம் பொருள் இருந்தால் அதை இப்போதே என்னிடம் கொடுத்துவிடு" என்று பதில் கூறினர்.

३०. भर्तुर्वचनमाकर्ण्य मुग्धैवं वाक्यमब्रवीत् ।
पयःपानाय भवतः हिरण्यचषको मया ॥

३१. सर्वस्वदाने तत्सर्वं विसृज्यैकस्समाहृतः ।
तमिमं वस्त्रसंच्छन्नमिति भर्त्रे ददौ भयात् ॥

३२. तमनर्घमणिप्रोतं हैरण्यं चषकं तदा ।
दूरे विसर्जयामास कानने विगतस्पृहः ॥

३३. ततो भार्यामुखं वीक्ष्य व्याजहार वचश्शुभम् ।
भयं कुत्रापि ते नास्ति समागच्छ यथासुखम् ॥

३४. तूष्णींभूता विलोक्येदं साध्वी भर्तृविचेष्टितम् ।
निशम्य तद्वचः सत्यं गतभीरन्वगात्तदा ॥

३५. सधर्मचारिणीं भार्यां समादायाथ कूरराट् ।
श्रीरङ्गं सत्वरं प्राप रङ्गराजदिदृक्षया ॥

---

கணவனின் இவ்வார்த்தையைக் கேட்டுத் திகைத்த ஆண்டாள், "நீர் எல்லாப் பொருளேயும் தூானமளிக்கும் போது, மற்ற எல்லாப் பொருள்களேயும் போகவிட்டு, தேவரீர் தீர்த்தபானம் செய்வதற்காக இந்தப் பொன் வட்டில் ஒன்றையே நான் வஸ்த்ரத்தால் மறைத்துக் கொண்டுவந்திருக்கிறேன்" என்று கூறி, பயந்து கொண்டே அதைக் கணவனிடம் கொடுத்தாள். விலே மதிப்பற்ற ரத்னங்களால் இழைக்கப்பட்ட அந்தப் பொன் வட்டிலே, எதிலுமே பற்றற்ற கூரத்தாழ்வான் அக்காட்டில் அப்போதே தூரத்தில் எறிந்தார். அதற்குப்பின் மனேவியின் முகத்தைப்பார்த்து "இப்போது எதிலும் உனக்கு பயமில்லேயல்லவா? ஸுகமாகக் கூடவருவாயாக" என்னும் மங்களமான வார்த்தையைச் சொன்னார். பரமபதிவ்ரதையான ஆண்டாள் கணவனின் அச்செயலே மௌனமாகக் கண்டு, அவருடைய உண்மையான வார்த்தையையும் கேட்டு, பயமற்றவளாய்ப் பின்தொடர்ந்தாள்.

३६. कूरेशागमनं श्रुत्वा भाष्यकारः प्रहर्षितः।
शिष्यैस्तमानयामास कूरेशं स्वमठे तदा॥

३७. स तेन सम्यक् योगीन्द्रः कूरेशेनाभिवन्दितः।
तं परिष्वज्य बाहुभ्यां प्रहर्षमतुलं ययौ॥

३८. कृताधिवासः श्रीरङ्गे कूरेशो देशिकप्रियः।
उञ्छवृत्तिपरो नित्यं उवास स महायशाः॥

३९. विसृज्य कूरे महतीं श्रियं च तेनाशुभत्यक्तमदत्रयः सन्।
श्रीरङ्गमासाद्य तदोञ्छवृत्त्या भार्यासमेतः सुखमध्युवास॥

इति श्रीप्रपन्नामृते रामानुजचरित्रे
कूरेशस्य सर्वसंपत्परित्यागपूर्वकं श्रीरङ्गनित्यवासो नाम सप्तत्रिंशोऽध्यायः॥

---

**கூரேஶ யதிராஜ ஸமாக₃மம்**

35-39. தன்னுடைய ஸஹத₄ர்மிணியான மனைவியுடன் கூரத்தாழ்வான் ரங்க₃ராஜனை ஸேவிப்பதற்காக விரைவில் ஸ்ரீரங்க₃த்தையடைந்தார். கூரத்தாழ்வானின் வரவைக் கேள்விப்பட்ட ஸ்ரீபா₄ஷ்யகாரர் மிகவுகந்தவராய், ஶிஷ்யர் களைக்கொண்டு அவரைத் தம் மட₂த்திற்கு அப்போதே வரவழைத்தார். கூரத்தாழ்வானல் நன்கு வணங்கப்பட்ட யதிராஜர் அவரை இரு கைகளாலும் வாரியெடுத்து அணைத்து, ஒப்பற்ற ஆனந்த₃த்தையடைந்தார். ஸ்ரீரங்க₃த்தில் வாழ்ந்த கூரத்தாழ்வான் ஆசார்யருக்கு இனியவராய், தினந்தோறும் உஞ்ச₂வ்ருத்தி செய்து வாழ்க்கை நடத்துபவராய், பெரும்புகழாளராய் விளங்கிவந்தார். கூரத்தில் பெரியதான செல்வத்தைக் கைவிட்டு, அதனல் அமங்க₃ளமான முக்குறும்புகளும் நீங்கப்பெற்ற கூரத்தாழ்வான் மனைவியோடு கூடியவராய் ஸ்ரீரங்க₃த்தையடைந்து, அக்காலத்தில் உஞ்ச₂வ்ருத்தியாலே இனிதாக வாழ்ந்துவந்தார்.

**ஸ்ரீப்ரபந்நாம்ருதத்தில், ஸ்ரீராமாநுஜ சரித்திரத்தில்
கூரத்தாழ்வான் எல்லாச் செல்வங்களையும் விட்டு ஸ்ரீரங்க₃த்தில்
வாழ்தலாகிற முப்பத்தேழாம் அத்தியாயம் நிறைவுற்றது.**

## अष्टत्रिंशोऽध्यायः

१. अथ कूरेश्वरः श्रीमान् सर्वशास्त्रविशारदः।
आचार्यार्चैकनिरतः पञ्चकालपरायणः॥

२. विषयेष्वपि सर्वेषु विशेषेण पराङ्मुखः।
उञ्छवृत्त्यैव दिवसान् क्षिपन् रङ्गे सुसंस्थितः॥

३. वृष्टिः कदाचिद्वर्षन्ती चाऽऽमध्यंदिनमप्यभूत्।
कालातिक्रमणेनास्य नोञ्छवृत्तिस्तदाऽभवत्॥

४. द्रव्यस्य सञ्चितस्यास्य तत्राभावाद्गृहे तदा।
स्नात्वा हरिं समाराध्य फलं किञ्चिन्निवेद्य च॥

---

## முப்பத்ரெட்டாம் அத்தியாயம்

## யாமுந மநோரத₂ பூரணம்

### கூரத்தாழ்வானின் வைராக்₃யம்

1-6. எல்லா ஶாஸ்த்ரங்களிலும் வல்லவராய், ஆசார்யரான எம்பெருமானை ஆராத₄னம் செய்வதிலேயே ஈடுபட்டவராய், பஞ்சகாலபராயணராய், ஶப்₃த₃ாதி₃ விஷயங்களனைத்திலும் மிகுந்த வைராக்₃யமுடையவராய், கைங்கர்யச் செல்வம் மிக்கவரான கூரத்தாழ்வான் ஸ்ரீரங்க₃த்தில் உஞ்ச₂வ்ருத்தியாலேயே காலத்தைக் கழித்துக்கொண்டு ஸுக₂மாக வாழ்ந்துவந்தார். ஒருநாள் நடுப்பகல் வரையில் பெருமழை பொழிந்தது. காலம் கடந்துவிட்டதால் கூரத்தாழ்வானல் அன்று உஞ்ச₂வ்ருத்தி செய்யமுடியவில்லை. ஏற்கனவே சேமித்துவைத்திருந்த பொருளும் அப்போது அவரது திருமாளிகையில் இல்லையாகையால் தீர்த்த₂மாடி, எம்பெருமானுக்குத் திருவாராத₄னம் ஸமர்ப்பித்து, (கைவஶம் இருந்த) ஒரு பழத்தை அமுதுசெய்வித்து, ஸாளக்₃ராமப்பெருமாளைத் திருமஞ்சனம் செய்த தீர்த்த₂த்தைப் பருகித் தம் திருமாளிகையிலேயே

५. सालग्रामशिलातीर्थं स्वीकृत्य स्वगृहे स्थितः।
ततस्सायन्तनीयं तत्कर्म कृत्वा महातपाः॥

६. रङ्गेशं संप्रणम्याथ स्वगृहं प्राप्य कूरराट्।
शठारिसूक्तिमजपत् शेते गुरुपरायणः॥

७. तदा महद्रङ्गनाथनैवेद्यसमयोऽभवत्।
काहलीनादमाकर्ण्य भार्या कूरेश्वरस्य सा॥

८. व्याजहार शुभं वाक्यं रङ्गेशं भर्तृतत्परा।
त्वद्भक्तः क्षुधया शेते करोषि त्वं तु भोजनम्॥

९. तन्निशम्याथ रङ्गेशो भगवान् भक्तवत्सलः।
स तस्योत्तमपूर्णस्य स्वश्रीरङ्गाधिकारिणः॥

---

இருந்துவிட்டார். அதற்குப்பின் மாலைவேளையில் செய்ய வேண்டிய ஸந்த்₄யாவந்த₃னம் முதலிய கர்மங்களைச்செய்து, அருந்தவத்தரான கூரத்தாழ்வான் பெரியபெருமாளைத் திருவடிதொழுது, தம் திருமாளிகையை அடைந்து, திரு வாய்மொழியை அநுஸந்தி₄த்தார். அதற்குப்பின் கு₃ரு பரம்பரானுஸந்த₄ானத்தையே த₄ாரகமாகக்கொண்டு ஶய னித்தருளினார்.

### அரவணைப் பிரஸாத₃ம்

7-12. அப்போது பெரியபெருமாளுக்கு ராத்ரிவேளை யில் பெரிய அவஸரம் அமுதுசெய்யப்பண்ணும் ஸமயமா யிருந்தமையால், அதில் திருச்சின்னம் ஒலிப்பதைக் கேட்டுக் கூரத்தாழ்வானின் பத்தினியான ஆண்டாள் தன் கணவனிடம் பரிவாலே பெரியபெருமாளை நெஞ்சிற் கொண்டு "உமது ப₄க்தர் பட்டினியாய்ப் படுத்திருக்கிறார். நீர் குலாவிக் குலாவி அமுது செய்தருளுகிறீர்" என்னும் மங்க₃ளமான வார்த்தையைச் சொன்னாள். அதைக் கேட்ட ப₄க்தவத்ஸலரான பெரியபெருமாள் தமது ஸ்ரீரங்க₃ம்

## अष्टत्रिंशोऽध्यायः

१. अथ कूरेश्वरः श्रीमान् सर्वशास्त्रविशारदः।
आचार्याचैकनिरतः पञ्चकालपरायणः॥

२. विषयेष्वपि सर्वेषु विशेषेण पराङ्मुखः।
उञ्छवृत्त्यैव दिवसान् क्षिपन् रङ्गे सुसंस्थितः॥

३. वृष्टिः कदाचिद्वर्षन्ती चाऽऽमध्यंदिनमप्यभूत्।
कालातिक्रमणेनास्य नोञ्छवृत्तिस्तदाऽभवत्॥

४. द्रव्यस्य सञ्चितस्यास्य तत्राभावाद्गृहे तदा।
स्नात्वा हरिं समाराध्य फलं किञ्चिन्निवेद्य च॥

---

## முப்பத்தெட்டாம் அத்தியாயம்

## யாமுந மநோரத₂ பூரணம்

### கூரத்தாழ்வானின் வைராக்₃யம்

1-6. எல்லா ஶாஸ்த்ரங்களிலும் வல்லவராய், ஆசார்யரான எம்பெருமானாரை ஆராத₄னம் செய்வதிலேயே ஈடுபட்டவராய், பஞ்சகாலபராயணராய், ஶப்₃த₃ாதி₃ விஷயங்களனைத்திலும் மிகுந்த வைராக்₃யமுடையவராய், கைங்கர்யச் செல்வம் மிக்கவரான கூரத்தாழ்வான் ஸ்ரீரங்க₃த்தில் உஞ்ச₂வ்ருத்தியாலேயே காலத்தைக் கழித்துக்கொண்டு ஸுக₂மாக வாழ்ந்துவந்தார். ஒருநாள் நடுப்பகல் வரையில் பெருமழை பொழிந்தது. காலம் கடந்துவிட்டதால் கூரத்தாழ்வானால் அன்று உஞ்ச₂வ்ருத்தி செய்யமுடியவில்லை. ஏற்கனவே சேமித்துவைத்திருந்த பொருளும் அப்போது அவரது திருமாளிகையில் இல்லையாகையால் தீர்த்த₂மாடி, எம்பெருமானுக்குத் திருவாராத₄னம் ஸமர்ப்பித்து, (கைவஶம் இருந்த) ஒரு பழத்தை அமுதுசெய்வித்து, ஸாளக்₃ராமப்பெருமாளைத் திருமஞ்சனம் செய்த தீர்த்த₂த்தைப் பருகித் தம் திருமாளிகையிலேயே

१५. किमिदं चैतदाश्चर्यं इति सञ्चिन्त्य भूयशः ।
भार्यां ततोऽब्रवीद्देवीं किं त्वया हृदि चिन्तितम् ॥

१६. तेनैवमुक्ता भर्तारं प्राञ्जलिर्वाक्यमब्रवीत् ।
न प्रार्थितं मया स्वामिन्! किमप्येतं जगत्पतिम् ॥

१७. रङ्गेशभुक्तिसमये श्रुतः काहलिकारवः ।
त्वं तु भोक्ष्यसि रङ्गेश! भक्तस्ते क्षुधयान्वितः ॥

१८. इत्येतन्मात्रमेवाद्य चिन्तितं हृदि नापरम् ।
तयैवमुक्तः कूरेशः तां भार्यामिदमब्रवीत् ॥

१९. किमेवं गदितुं युक्तमिति निर्भर्त्स्य चिन्तितम् ।
तत्प्रसादं समादाय भार्यायै प्रददौ मुदा ॥

---

எல்லா விருப்பங்களையும் ஏற்கனவே அருளியிருக்கிறார். அப்படியிருக்க, இப்போது எதற்காக இப்பிரஸாத3ம் பெரிய பெருமாளால் அளிக்கப்பட்டது? இது ஓர் ஆஶ்சர்யமாய் இருக்கிறதே!" என்று பலகால் ஆலோசித்து, தன் மனைவியான ஆண்டாளைப் பார்த்து 'நீ நெஞ்சில் என்ன நினைத்தாய்?' என்று கேட்டார். இப்படிக் கேட்கப்பட்ட அவளும் கைகூப்பி நின்றவளாய், ப4ர்த்தாவான கூரத் தாழ்வானைப் பார்த்து "ஸ்வாமிந்! லோகநாத2னை இப் பெருமாளிடம் நான் எதையும் பிரார்த்தி2க்கவில்லை. பெரிய பெருமாள் அமுதுசெய்தருளும்போது திருச்சின்ன ஒலி கேட்டது. 'அரங்கனே! நீர் அமுதுசெய்தருளுகிறீர்; உமது ப4க்தரோ பட்டினிகிடக்கிறார்' என்னுமிவ்வளவே நெஞ்சால் நினைத்தேனேயொழிய வேறொன்றும் செய்ய வில்லை" என்று கூறினாள். இப்படி ஆண்டாளால் சொல்லப்பட்ட கூரத்தாழ்வான் தமது மனைவியைப்பார்த்து 'நீ இப்படி நினைக்கலாமா?' என்று அவள் நினைத்ததைக் க3ண்டி3த்து, அந்த அரவணைப் பிரஸாத3த்தை (த்தாமும் ஸ்வீகரித்து) அவளுக்கும் உகப்புடன் அளித்தருளினார்.

२०. तेनैव हेतुना साध्वी तत्पत्नी गर्भमादधौ ।
पराशरस्य व्यासस्य भागेन विबुधोत्तमौ ॥

२१. रङ्गेशानुग्रहाज्जातौ पुत्रौ तस्यां महौजसौ ।
कूरेशात् शुभकृद्वर्षे वैशाखे पूर्णिमातिथौ ॥

२२. अनूराधाख्यनक्षत्रे पुरा कुशलवाविव ।
शिश्वोर्यतीश्वरः कर्ता जातनामादिकर्मणि ॥

२३. स्वातन्त्र्यं मम नास्तीति कूरेशो निर्भरः स्थितः ।
जाताशौचावसाने तु कृपया यतिपुङ्गवः ॥

२४. कूरेशगृहमागत्य गोविन्दमिदमब्रवीत् ।
कूरेशपुत्रावादाय समागच्छ सुसत्वरम् ॥

---

## கூரேஶ புத்ரர்களின் அவதாரம்

20-*22 அவ்விருவரும் அமுதுசெய்த இரு அரவணைத் திரளைகளே காரணமாகப் பரமபதிவ்ரதையான ஆண்டாள் க3ர்ப்ப4ம் த4ரித்தாள். பராஶரமஹரிஷி, வ்யாஸமஹரிஷி ஆகிய இருவரின் அம்ஶமாகப் பேரறிவாளர் தலைவர்களாய்; மஹாதேஜஸ்விகளான இரு பிள்ளைகள் பெரியபெருமாளின் அனுக்3ரஹத்தால், சுபக்ருத் வருஷத்தில் வைகாசிப் பூர்ணிமையில் அனுஷநக்ஷத்திரத்தில் ஸீதா ராமர்களுக்குக் குஶலவர்கள் முன் பிறந்ததுபோலே கூரத்தாழ்வானின் குமாரர்களாக அவளிடம் அவதரித்தனர்.

## எம்பெருமானாரும், கூரேஶ புத்ரர்களும்

22*-27. கூரத்தாழ்வான் 'குழந்தைகளுக்கு ஜாதகர்மம், நாமகரணம் முதலானவற்றை யதிராஜர் செய்விப்பார்; அவற்றில் எனக்கு ஸ்வாதந்த்ர்யமில்லை' என்று கையொழிந்து நின்றமையாலே, பத்துநாளும் கடந்த இரண்டாம் நாள் யதிராஜர் கருணையோடு கூரத்தாழ்வான் திருமாளிகைக்கு

२५. प्रतिगृह्य गुरोर्वाक्यं गृहान्तः संप्रविश्य च।
कूरेशपत्न्यै तत्सर्वं निवेद्यागमनं गुरोः॥

२६. दृष्टिदोषनिवृत्त्यर्थं रक्षायै च विचक्षणः।
मन्त्ररत्नजपेनैव शिशुभ्यां कृतमङ्गलः॥

२७. कूरेशपुत्रावादाय यतीन्द्राश्रमभ्यगात्।
गोविन्दो दर्शयामास लक्ष्मणार्याय तौ शिशू॥

२८. दृष्ट्वा यतीन्द्रस्सन्तुष्टः तयोस्सर्वाङ्गसौष्ठवम्।
बालयोर्मुखलावण्यं गोविन्दं चाब्रवीदिदम्॥

२९. द्वयगन्धस्समायाति भवता किं कृतं वद।
एवं वदति योगीन्द्रे गोविन्दो वाक्यमब्रवीत्॥

---

எழுந்தருளி, எம்பாரைப்பார்த்து "ஆழ்வானுடைய பிள்ளைகளை விரைவில் எடுத்து வருவீர்" என்று கூறினார். ஆசார்யருடைய அவ்வார்த்தையை ஏற்றுக்கொண்டு, திருமாளிகையினுள் சென்று ஆண்டாளிடம் ஆசார்யரின் வரவையும், நியமனத்தையும் கூறி, கூரத்தாழ்வானுடைய குழந்தைகளை எடுத்துக்கொண்டு, ஸமர்த்தராகையாலே த்ருஷ்டி தோஷம் நீங்குவதற்காக ரக்ஷையின்பொருட்டு, குழந்தைகளுக்கு மந்த்ரரத்ந(த்வய) ஜபத்தாலே மங்களாஶாஸனம் பண்ணிக்கொண்டு வந்து எதிராஜரிடம் அக்குழந்தைகளைக் காட்டினார் எம்பார்.

## நாமகரணமும், யாமுநரின் இரண்டாவது மநோரத பூர்த்தியும்

28-*38. யதிராஜர் அக்குழந்தைகளுடைய ஸர்வாங்க ஸௌந்தர்யத்தையும், முகத்தின் அழகையும் கண்டு உகந்து, எம்பாரைப்பார்த்து, "த்வயம் பரிமளியாநின்றது. நீர் என் செய்தீர்? சொல்லும்" என்று கேட்டார்.

३०. कुर्वन् द्वयानुसन्धानं तावादायागतोऽभवम्।
तच्छ्रुत्वा लक्ष्मणाचार्यो गोविन्दमिदमब्रवीत्॥

३१. कर्तव्यांशस्य गोविन्द ! भवानेव हि कारणम्।
एतयोर्बालयोस्सर्वानर्थान् ब्रूहि यथार्हतः॥

३२. पञ्चायुधयुते चैव तयोराभरणे शुभे।
धारयित्वा तयोः कण्ठे स्वहस्तेन यतीश्वरः॥

३३. कूरेशपुत्रयोस्तेन गोविन्देन महात्मना।
कारयामास विधिना शङ्खचक्रादिलाञ्छनम्॥

३४. श्रीपराशरनाम्ना च तयोर्ज्येष्ठस्य बालयोः।
श्रीपराशरभट्टार्य इति नामाकरोत्तदा॥

---

இப்படி யதிராஜர் சொன்னவளவில் கோ₃விந்த₃ர் "ஆசார்யரே! த்₃வயத்தை அநுஸந்தி₄த்துக்கொண்டே வந்தேன்" என்று கூறினர். அதைக்கேட்டு ஸ்ரீராமாநுஜர் எம்பாரைப்பார்த்து "கோ₃விந்த₃ரே! இக்குழந்தைகளுக்குச் செய்யவேண்டிய த்₃வயோபதே₃ஶம் முதலான ஆசார்ய க்ருத்யங்களுக்கு முற்பட்டீர். ஆகையால், நீரே இவ்விரு குழந்தைகளுக்கும் முறைப்படி எல்லா அர்த்த₂ங்களையும் சொல்லக்கடவீர்" என்று கூறினர். அவ்விரு குழந்தைகளின் கழுத்திலும் 'ஐம்படைத்தாலி' எனப்படும் பஞ்சாயுத₄த் திருவாப₄ரணங்களை யதிராஜர் தம் திருக்கையாலேயே சாத்தியருளி, நாமகரணத்தின்போது மஹாத்மாவான எம்பார் திருக்கையாலே திருவிலச்சினையும் முறைப்படி அக்குழந்தைகளுக்குச் செய்வித்து, அக்குழந்தைகளில் பெரியவருக்கு ஸ்ரீபராஶர மஹரிஷியின் திருநாமமாக 'ஸ்ரீபராஶரப₄ட்டார்யர்' என்னும் திருநாமத்தை இட்டார். அப்போதே வேத₃வ்யாஸரின் திருநாமமாக 'வேத₃வ்யாஸ

३५. वेदव्यासाभिधानेन कृत्वा नामापरस्य च।
अभिरामतया तस्य ज्येष्ठपुत्राद्विशेषतः॥

३६. श्रीरामदेशिक इति नाम कृत्वा द्वयं गुरुः।
द्वितीयं यामुनार्यस्य तद्दुःखं प्रममार्ज सः॥

३७. पुत्रीकृतो रङ्गधुरन्धरेण पराशरः कूरकुलप्रदीपः।
गोविन्दशिष्यः स तु यामुनार्यमनोरथं पूरितवान् द्वितीयम्॥

३८. एवमुत्तमपूर्णेन लक्ष्मीकाव्ये च भाषितम्।
गोविन्दस्यानुजः कश्चित् बालगोविन्द इत्यभूत्॥

३९. तस्य गोविन्दभट्टस्य तदा पुत्रो व्यजायत।
भाष्यकारोऽथ तच्छ्रुत्वा परं हर्षमवाप सः॥

---

ப₄ட்டர்' என்று மற்ற குழந்தைக்குத் திருநாமமிட்டு, மூத்த பிள்ளையைக்காட்டிலும் அக்குழந்தை (ராமபிரானைப்போலே) மிக ரமணீயமாயிருந்தமையால் 'ஶ்ரீராமப்பிள்ளை' என்னும் இரண்டாவது திருநாமத்தையும் யதிராஜர் இட்டருளினார். இவ்வண்ணமாக ஆளவந்தாரின் இரண்டாவது குறையையும் நீக்கியருளினார். "கூரகுலத்துக்கு அணிவிளக்காயிருந்த கோ₃விந்த₃ ஶிஷ்யரான பராஶரப₄ட்டர் ரங்க₃நாத₂னாலே (பிள்ளையாக) வளர்க்கப்பட்டு, யாமுநாசார்யருடைய இரண்டாவது மனோரத₂த்தை (ஶ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம பா₄ஷ்யம் முதலான க்₃ரந்த₂ங்களைச் செய்வதன்மூலம்) நிறைவேற்றினார்—" என்று உத்தமநம்பியால், தமது லக்ஷ்மீகாவ்யத்தில் இவ்விஷயம் சொல்லப்பட்டது.

## மூன்றாவது மநோரத₂ பூரணம்

38*-44. கோ₃விந்த₃ப் பெருமாளாகிற எம்பாருக்கு சிறிய கோ₃விந்த₃ப்பெருமாள் என்று ஒரு தம்பியிருந்தார். அந்த கோ₃விந்த₃ப₄ட்டருக்கு அப்போது ஒரு பிள்ளை பிறந்தது. அதைக்கேட்ட ஶ்ரீபா₄ஷ்யகாரர் (ஆளவந்தா

४०. गोविन्दगृहमागत्य सुतं तस्य विलोक्य च।
श्रीपराङ्कुशपूर्णार्य इति नाम विधाय च॥

४१. बालगोविन्दपुत्रस्य सन्तुष्टो यतिभूपतिः।
तृतीयं यामुनार्यस्य तद्दुःखमुदवासयत्॥

४२. गोविन्दराजान्वयजो मनीषी पराङ्कुशो यामुनवैमनस्यम्।
अपाचकार प्रसभं तृतीयं विराजते वृत्तमणिप्रदीपः॥

४३. एवमुत्तमपूर्णेन लक्ष्मीकाव्ये च भाषितम्।
यतिराजकटाक्षेण ते च संवर्धितास्त्रयः॥
सम्यक् ववृधिरे भूम्यामुदितार्कसमप्रभाः॥

---

ருடைய மூன்ருவது குறைதீரும் காலமும் நெருங்கிற்று என்று) மிகவும் ஆனந்த₃த்தையடைந்தார். சிறிய கோ₃விந்த₃ப் பெருமாளுடைய திருமாளிகைக்கு எழுந்தருளி, அவருடைய குமாரரைக் கடாக்ஷித்து 'ஸ்ரீபராங்குஶநம்பி' என்று அப்பிள்ளைக்குத் திருநாமமிட்டு யதிராஜர் மிகவுகந்தார். இவ்வண்ணமாக ஆளவந்தாருடைய மூன்ருவது குறையைத் தீர்த்தார். "கோ₃விந்த₃ப்பெருமாளின் வம்ஶத்தில் பிறந்தவராய், நல்லறிவுடைய பராங்குஶநம்பி ஆளவந்தாருடைய மூன்ருவது குறையை அடியோடு போக்கினுர். ஆகையால் வட்டமணி குலத்துக்கு அணி விளக்காய் விளங்கினுர்" என்று இவ்விஷயம் உத்தமநம்பியால் தமது லக்ஷ்மீகாவ்யத்தில் சொல்லப்பட்டது. யதிராஜருடைய கடாக்ஷத்தாலே ஸ்ரீபராஶரப₄ட்டர், வேத₃வ்யாஸப₄ட்டர், பராங்குஶநம்பி என்னும் மூன்று குழந்தைகளும் வளர்ச்சிபெற்றவர்களாய், இந்நிலவுலகிலே உத₃ய ஸூர்யர்கள்போலே ஒளிவீசுகின்றவர்களாய் நன்கு வளர்ச்சியடைந்தார்கள். லோக க்ஷேமத்தின் பொருட்டு ஆளவந்தார் ஆசைப்பட்ட மூன்று மனேரத₂ங்களை இவ்வண்ணமாக யதிராஜர் நிறைவடைவித்தார். இப்படி திரு

४४. श्रीयामुनार्यस्य जगद्धितार्थं अपूरयत् त्रीणि मनोरथानि।
अवाप्तकामः स जगाम हर्षं रङ्गेशतो लक्ष्मणदेशिकेन्द्रः॥

इति श्रीप्रपन्नामृते रामानुजचरित्रे श्रीपराशरभट्टार्याद्यवतारकथायां
श्रीयामुनार्यमनोरथत्रयपूरणं नाम अष्टत्रिंशोऽध्यायः॥

## एकोनचत्वारिंशोऽध्यायः

१. श्रीपराशरभट्टार्यं रङ्गेशो भक्तवत्सलः।
पुत्रस्वीकारमकरोत् पीतहारिद्रशम्बरः॥

२. श्रीरङ्गनायकी तं च पुत्रं पोषितवत्यभूत्।
तया संवर्धितो नित्यं लालितः पोषितस्तदा॥

३. स बालो ववृधे श्रीमान् बालसूर्य इवोदितः।
स्वनिवेदनतः पश्चात्प्रसादं षड्गुणैर्युतम्॥

---

வரங்களாலே விருப்பம் நிறைவேறப்பெற்ற ஸ்ரீராமானுஜ முனிவர் மிகவும் உகப்படைந்தார்.

ஸ்ரீப்ரபந்நாம்ருதத்தில் ஸ்ரீராமாநுஜ சரித்திரத்தில்
ஸ்ரீபராசரப₄ட்டர் முதலானோரின் அவதாரங்களைச் சொல்லும் கதையில்
ஸ்ரீயாமுனாசார்யரின் மநோரத₂பூர்த்தியாகிற
முப்பத்தெட்டாம் அத்தியாயம் நிறைவுற்றது.

## முப்பத்தொன்பதாம் அத்தியாயம்

# ஸ்ரீ பராசர ப₄ட்டர் விவாஹம்

### நம்பெருமாள் புத்ரஸ்வீகாரம்

1-*5. ஸ்ரீபராசரப₄ட்டரை ப₄க்தவத்ஸலரான பெரிய பெருமாள் மஞ்சள்நீர் குடிக்கச்செய்து புத்ரராக ஏற்றுக் கொண்டார். ஸ்ரீரங்க₃நாயகியும் அவரைப் புத்ரனாக வளர்த்தாள். அவளாலே தினந்தோறும் கொண்டாடப் பட்டு, உணவூட்டப்பட்டு, வளர்க்கப்பட்ட ப₄ட்டர் உதி₃க்கும்

४. दापयामास सततं पुत्राय भगवान् हरिः ।
एवं विवर्धितो बालो रङ्गेशेन दयालुना ॥

५. श्रीपराशरभट्टार्यो ववृधे पूजितो जनैः ।
ततः कदाचित्संप्राप्ते स्वजन्मर्क्षमहोत्सवे ॥

६. पठन्तं शठजित्सूक्ति बालः कूरेशमब्रवीत् ।
भो तात पठिते ग्रन्थे वकुलाभरणेरिते ॥

७. महत्त्वाणुत्वयोरेकवस्तुवासित्वमुच्यते ।
तयोर्विरुद्धयोः कस्मात् तत्संभवति ते(मे?) वद ॥

---

இளஞ்சூரியன்போலே சிறப்புமிக்கவராய் வளர்ந்தார். அறுசுவையோடு கூடிய தமது பிரஸாத₃த்தைத் தாம் அமுதுசெய்த பிறகு பெரியபெருமாள் தமது புத்ரருக்கு அளித்துவந்தார். இவ்வண்ணம் காருணிகனான அரங்கனால் வளர்க்கப்பட்ட சிறுவரான பராஶரப₄ட்டர் ஜனங்களால் கொண்டாடப்பட்டவராய் வளர்ந்தார்.

### 'சிறுமாமனிசர்' விளக்கம்.

5*-9. அப்போது ஒருநாள் தம்முடைய பிறந்தநாள் கொண்டாட்டத்தின்போது சிறுவரான ப₄ட்டர் நம்மாழ்வாருடைய 'நெடுமாற்கடிமை' ஸேவித்துக்கொண்டிருக்கும் கூரத்தாழ்வானைப் பார்த்து, "அப்பா! நீர் படிக்கும நம்மாழ்வார் அருளிய பாசுரத்தில் 'சிறுமாமனிசர்' [திருவாய் 8-10-3] என்று வருகிறது. இதில் மனிசர்களாகிய ஒரே வஸ்துவில் சிறுமை, பெருமை ஆகிய இரண்டு தன்மைகளும் இருப்பதாகச் சொல்லப்படுகிறது. இருளும், ஒளியும்போலே ஒன்றுக்கொன்று முரண்பட்ட தன்மைகள் ஒரு பொருளில் இருக்கமுடியாதே. இங்கு மனிசரிடத்தில் முரண்பட்ட சிறுமையும், பெருமையும் எப்படி ஒன்றுகூடி இருக்கமுடியும்?" என்று கேட்டார். யுக்தியோடு கூடியதான பிள்ளையின் இவ்வாக்யத்தைக் கேட்டுக் கூரத்தாழ்

८. सामानाधिकरण्यं तु न तेजस्तमसोर्यथा।
श्रीवत्सचिह्नस्तद्वाक्यं पुत्रोक्तं युक्तिसंमतम्॥

९. श्रुत्वा सम्यक् सम्यगिति प्रहृष्टः प्रत्युवाच तम्।
हे पुत्र नोपनीतस्त्वं श्रुतिं न श्रोतुमर्हसि॥

१०. अथ वीथ्यां रङ्गपुत्रे क्रीडासक्तेऽर्भकैर्जनैः।
सर्वज्ञभट्टागमनसूचके काहलीरवे॥

११. श्रुते लक्ष्मणयोग्याद्याः सङ्गतास्तद्दिदृक्षया।
तत्रान्तरे रङ्गसुतो गृहीत्वा वालुकां तदा॥

१२. सम्यगञ्जलिना वेगात् राजमार्गे निरङ्कुशः।
सर्वज्ञभट्टं संप्राप்ய तमेवं वाक्यमब्रवीत्॥

---

வான் 'நன்று நன்று' என்று உகந்தவராய், "பிள்ளாய்! உனக்கு உபநயனம் ஆகாமையாலே வேத₃வாக்யத்தைக் கொண்டு ஸமாத₄ானம் சொல்லுவது தகாது. (ஆனாலும், அருளாளப்பெருமாள் எம்பெருமானார்போலே வடிவு சிறுத்துப் புகழால் பெருத்திருப்பவர்களையே இங்கு ஆழ்வார் 'சிறுமாமனிசர்' என்கிறார்)" என்று பதில் கூறினார்.

## ப₄ட்டரும், ஸர்வஜ்ஞப₄ட்டனும்

10-22. அதற்குப்பின் ரங்க₃நாத₂னுடைய புத்ரரான ப₄ட்டர் ஒருநாள் சிறு குழந்தைகளோடு விளையாடிக் கொண்டிருக்கும்போது 'ஸர்வஜ்ஞப₄ட்டர் வந்தார்' என்று திருச்சின்னம் ஒலிப்பதைக்கேட்டு. ஸ்ரீராமானுஜர் முதலிய வர்களும் அவரைக் காணவேண்டும் என்று கூடினார்கள். அதற்கிடையில் ரங்க₃நாத₂ரின் குமாரரான ப₄ட்டர் தமது கைப்பிடி நிறைய மணலை அள்ளிக்கொண்டு ராஜவீதி₂யில் தடையறச் சென்று ஸர்வஜ்ஞப₄ட்டனை அடைந்து, "நீ ஸர்வஜ்ஞனாக இருந்தால் இதில் எத்தனை மணல் உள்ளது என்று இப்போதே சொல்லுவாய்" என்று அவனிடம்

१३. सर्वज्ञश्चेद्वदेमां त्वं कियती सिकताऽधुना।
स किञ्चिदपि तं वक्तुं अशक्तो लज्जितोऽभवत्॥

१४. सोऽर्भकः प्रहसन् वाक्यं तं सर्वज्ञमथाब्रवीत्।
किं वा न शक्यते वक्तुं इत्येषाऽञ्जलिवालुका॥

१५. इत्येतन्मात्रवचनमप्यशक्तोऽसि भाषितुम्।
सर्वज्ञभट्टनामेदं भवतो युज्यते कथम्?॥

१६. तस्मात्त्वमज्ञतां प्राप्तः संप्रत्युत्सृज्य नाम तत्।
आडम्बराणि सर्वाणि तूर्णं याह्यत्र मा वस॥

१७. कूरेशसुतमित्येवं ज्ञात्वा तत्र स्थितैर्जनैः।
सर्वज्ञभट्टः सहसा तं बालं सुमहौजसम्॥

१८. कूरेशपुत्रं शिरसि निधायात्यन्तविस्मयः।
कूरेशस्य गृहद्वारसमीपं सहसा ययौ॥

---

கேட்டார். அவன் பதில் ஏதும் சொல்ல இயலாதவனுய் வெள்கி நின்றுன. சிறுவரான பட்டரோவெனில் சிரித்துக் கொண்டே ஸர்வஜ்ஞபட்டனைப் பார்த்து " 'இது ஒரு பிடி மண்' என்று சொல்லவும் உனக்குத் தெரியவில்லையே. இதுகூடச் சொல்ல இயலாத உனக்கு ஸர்வஜ்ஞபட்டன் என்னும் விருது எப்படிப்பொருந்தும்? ஆகையால அறிவிலியாய்விட்ட நீ அந்தப் பெயரையும், உனது எல்லா ஆடம்பரங்களையும் விட்டு இங்கு தங்காமல் இப்போதே கிளம்புவாய்" என்று கூறினார். அவனும் அங்குள்ள ஜனங்களிடமிருந்து, இதைக்கூறியவர் கூரத்தாழ்வான் குமாரர் என்று அறிந்து, மஹாதேஜஸ்வியான கூரேஶபுத்ரரான அக்குழந்தையைத் தலையிலே தாங்கி, மிகவும் ஆஶ்சர்யம் கொண்டவனுய் கூரத்தாழ்வான் திருமாளிகை வாசலுக்கு உடனே சென்றுன். அங்கிருந்தவளான (உறங்காவில்லியின் பத்னியான) பொன்னுச்சியார் என்னும் மங்கை நல்லாள் சடக்கென வெளியில் வந்து அக்குழந்தையை

१९. हेमाम्बाख्या नाम काचित् योषिदागत्य संभ्रमात् ।
तं पुत्रं सहसाऽऽदाय दोर्भ्यामालिङ्ग्य सत्वरम् ॥

२०. ब्रह्मरन्ध्रं समाघ्राय चुचुम्ब बहुधाऽर्भकम् ।
रक्षां कृत्वा द्वयेनाथ तस्मै श्रीरङ्गसूनवे ॥

२१. उत्तरीयेण संच्छाद्य विवेशान्तःपुरं सती ।
जनन्यै साऽदिशत्पुत्रं भट्टार्यं मुदितानना ॥

२२. श्रीपादतीर्थं सा माता पुत्रप्रेमवती तदा ।
कृत्वाशिषो बहुविधाः पुत्राय प्रददौ मुदा ॥

२३. अथोपनीतं तं पुत्रं कूरेशो गुरुसन्निधौ ।
वेदाध्ययनसिद्ध्यर्थं स्थापयामास बालकम् ॥

२४. आरम्भदिनमात्रं तु स्थित्वा तत्र स बालकः ।
क्रीडासक्तोऽभवद्भूयो राजमार्गे निरङ्कुशः ॥

---

விரைவில் எடுத்து, உடனே கைகளால் அணைத்து, உச்சி மோந்து, பலகால் முத்தங்கொடுத்து, ரங்க₃நாத₂ன் குமாரரான அவருக்கு த்₃வயத்தால் ரக்ஷையிட்டுத் தனது முந்தானையால் அவரை மூடிக்கொண்டு வீட்டினுள் நுழைந்தாள். தாயாரான ஆண்டாளிடம் மிகவுகப்போடு ப₄ட்டராகிய குழந்தையைக் கொடுத்தாள். புத்ரரிடம் பரிவுடைய அத்தாயும் அவருக்குப் பலவித₄மாக ரக்ஷைகளையிட்டு, ஸ்ரீபாத₃தீர்த்த₂த்தை உகப்போடு அளித்தாள்.

## ப₄ட்டரின் மேதா₄ விலாஸம்

23-*31. கூரத்தாழ்வான் பிள்ளையான ப₄ட்டருக்கு உபநயனம் செய்வித்து, ஆசார்யனுடைய திருமாளிகையில் சிறுவரான அவருக்கு வேத₃ாத்₄யயனம் செய்விக்க ஏற்பாடு செய்தார். சிறுவரான அவர் தொடக்கத்தன்றுமாத்திரம் அந்தப் பாட₂சாலையில் அங்வயித்துவிட்டு, மறுநாளே ஸ்ரீரங்க₃ராஜ வீதி₂யிலே தடையில்லாமல் விளையாடத் தொடங்கினர்.

२५. क्रीडन्तं पुत्रमालोक्य कूरेशस्तमथाब्रवीत्।
बालकेष्वद्य सर्वेषु वेदाध्ययनमादरात्॥

२६. कुर्वन्सु पुत्र! कस्मात्त्वमागतः क्रीडितुं जवात्।
एवं वदति कूरेशे भट्टार्यो वाक्यमब्रवीत्॥

२७. अधीतं पूर्वदिवसे वेदमस्मिन् दिनेऽपि च।
पठन्ति बालकास्तात! तस्माद्यागतोऽभवम्॥

२८. तत् पुत्रवचनं श्रुत्वा कूरेशो वाक्यमब्रवीत्।
त्वं ब्रूहि पुत्र! पूर्वेद्युः पठितं पूर्वमद्य मे॥

२९. तथास्त्विति स भट्टार्यस्तत्सर्वं व्याजहार ह।
तच्छ्रुत्वा पितरौ तस्य भिया संक्रान्तचेतसौ॥

३०. इदानीं प्रेषितुं बालं विद्याभ्यासाय नोचितम्।
इत्यालोच्य सुतं स्थाप्य कृतरक्षं कुमारकम्॥

---

கூரத்தாழ்வான் விளையாடும் அப்பிள்ளையை நோக்கி "பிள்ளாய்! எல்லாச் சிறுவர்களும் வேத₃ாத்₄யயனத்தை ஆர்வத்தோடு செய்து வரும்போது, நீ எதனல் வேகமாக விளையாட வந்துவிட்டாய்?" என்று கேட்டார். இப்படி ஆழ்வான் கேட்டவுடன் "தந்தையே! நேற்று ஓதிய பாட₂த்தையே சிறுவர்கள் இன்றும் ஓதுகிருர்கள். அதனல் நான் விளையாட வந்துவிட்டேன்" என்று ப₄ட்டர் பதில் சொன்னுர். பிள்ளையின் அவ்வார்த்தையைக் கேட்ட ஆழ்வான், "குழந்தாய்! நேற்று ஓதிய பாட₂த்தை இன்று என் முன்னே சொல்லுவாயாக" என்று கேட்டார். 'அப் படியே ஆகட்டும்' என்று கூறி ப₄ட்டர் முதல்நாள் ஓதிய வாக்யத்தை ஸ்வரம் தப்பாமல் ஓதினுர். அதைக் கேட்ட கூரத்தாழ்வானும், ஆண்டாளும் 'கண்ணெச்சில் படுமோ' என்னும் ப₄யத்தாலே மனம் நடுங்கினவர்களாய், 'இந்தச்

३१. निन्युस्तुस्सदनं वेगात् दम्पती तौ महौजसम् ।
अथ कूरेशगोविन्दौ चक्रतुः शास्त्रवित्तमौ ॥

३२. तत्त्वशिक्षामर्थशिक्षां सर्वशिक्षां च सादरम् ।
श्रीपराशरभट्टाय महते रङ्गसूनवे ॥

३३. श्रीपराशरभट्टार्यं ततस्सञ्जातयौवनम् ।
दृष्ट्वा कूरेश्वरः प्राह प्रणिपत्य यतीश्वरम् ॥

३४. स्वामिन्! यतीश! भट्टार्यस्त्वद्दासः प्राप्तयौवनः ।
तस्य भाव्यं विवाहेन कुत्र कार्यं द्विजातिषु ॥

---

சிறுவயதில், இக்குழந்தையை வேத$_3$ம் ஓதுவதற்கு அனுப்புவது உசிதமன்று' என்று ஆலோசித்து, அங்கேயே அக்குழந்தைக்கு த்$_3$வயம் முதலானவற்றாலே ரக்ஷையிட்டு மஹாதேஜஸ்வியான அக்குழந்தையை ஆழ்வானும், ஆண்டாளும் விரைவில் அழைத்துச் சென்றனர்.

## ப$_4$ட்டரின் வித்$_3$யாப்$_4$யாஸம்

31*-32. அதற்குப் பிறகு ஶாஸ்த்ரமறிந்தவர்களில் சிறந்தவர்களான கூரத்தாழ்வானும், எம்பாரும் மஹா மேத$_4$ாவியாய், பெரியபெருமாளின் பிள்ளையான ஸ்ரீபராஶர ப$_4$ட்டருக்கு ஶாஸ்த்ரங்களையும், அவற்றின் அர்த்த$_2$ங்களையும், அருளிச்செயல் ரஹஸ்யார்த்த$_2$ங்களனைத்தையும் அன்போடு கற்றுக்கொடுத்தனர்.

## ப$_4$ட்டரின் விவாஹம்

33-49. யௌவன வயஸ்ஸையடைந்த ப$_4$ட்டரைப் பார்த்த கூரத்தாழ்வான் யதிராஜரை அடிபணிந்து "ஸ்வாமியான யதிராஜரே! உமது அடிமையான பராஶரப$_4$ட்டன் யௌவனமடைந்துவிட்டான். அவனுக்கு விவாஹம் செய்விக்கவேண்டும். அந்தணர்களுக்குள் ப்$_3$ராஹ்மண்யம் வைஷ்ணவத்வம் முதலானவற்றால் நமக்குத் தகுந்த உற

३५. ब्राह्मण्यवैष्णवत्वाद्यैरस्मत्सदृशबन्धुषु ।
विवाहो भवता कार्यः सम्यगालोच्य धीमता ॥

३६. इत्युक्तः कूरनाथेन यतीशः प्रत्युवाच तम् ।
पूर्णार्यवंशे महति बृहच्चरणनामके ॥

३७. कन्यका वर्तते रम्या त्वत्पुत्रस्योचितैव सा ।
स्वसूत्रशाखाब्राह्मण्यवैष्णवत्वादिलक्षणैः ॥

३८. बृहच्चरणसंतानो ह्यस्मद्वंशसमीकृतः ।
तत्तत्र कार्यं भट्टस्य पाणिग्रहणमङ्गलम् ॥

३९. तच्छ्रुत्वा वचनं तस्य कूरेशो यतिभूपतेः ।
अङ्गीकृत्याशु सन्तुष्टः पत्न्या संमन्त्र्य सादरम् ॥

४०. गुरुणा वैष्णवैस्सर्वैः यतीन्द्रेण च संवृतः ।
तत्र गत्वा कूरनाथः कन्यकां तामयाचत ॥

---

வினர்களிடம், பேரறிவாளரான தேவரீரே நன்ருக ஆலோசித்து விவாஹத்தை நடத்தவேண்டும்" என்று கூறினர். ஆழ்வாஞல் இப்படிப் பிரார்த்திக்கப்பட்ட யதிராஜர் "பெரிய நம்பிகளுடைய மிகப்பெரியதான 'ப்3ருஹச்சரணம்' எனும் குடியில் அழகிய கன்னி இருக்கிருள். ஸூத்ரம், ஶாகை3, கோ3த்ரம், ப்3ராஹ்மண்யம், வைஷ்ணவத்வம் முதலான லக்ஷணங்களைக்கொண்டு பார்க்கும்போது அவள் உமது பிள்ளைக்குத் தகுந்தவளே. ப்3ருஹச்சரணக் குடியும் நமது வடமக்குடியோடு ஒத்தது என்று பெரியோர்களால் நிர்ணயிக்கப் பட்டிருக்கிறது. ஆகையால், ப4ட்டருக்கு விவாஹ மங்க3ளத்தை அந்தக் குடும்பத்தோடேயே செய்யவேண்டும்" என்று பதிலுரைத்தார். யதிராஜரின் அவ்வார்த்தையைக் கேட்ட ஆழ்வான் அதை உடனே மிக உகப்போடு ஏற்றுக் கொண்டு, பத்னியோடும் ஆர்வத்தோடு ஆலோசித்து, ஆசார்யரான யதிராஜரோடும் எல்லா வைஷ்ணவர்க

४१. स चाऽऽभिजात्यं भट्टस्य बृहच्चरणवंशजः ।
निशम्य तस्मै तां कन्यां प्रदातुं संमतिं गतः ॥

४२. ततो नवीनसम्बन्ध इति तत्संशयं गतः ।
ततः कूरपतेर्भार्या भर्तारमिदमब्रवीत् ॥

४३. अधीतसर्ववेदस्य प्राप्तयौवनसम्पदः ।
सूनोर्विवाहः कर्तव्यः सांप्रतं धीमता त्वया ॥

४४. तयैवमुक्तस्तां भार्यां प्राह कूराधिपो महान् ।
अस्येश्वरकुटुम्बस्य न्यूनता किमतोऽधुना ॥

४५. ततो रङ्गेश्वरं प्राह कूरेशो भक्तवत्सलम् ।
स्वामिन् ! रङ्गेश ! भट्टार्यस्त्वत्पुत्रः प्राप्तयौवनः ॥

---

ளோடும் கூடியவராய் ஆழ்வான் பெண்வீட்டிற்குச் சென்று அப்பெண்ணைக் கன்யகாதா3னம் செய்து கொடுக்கும்படி கேட்டுக்கொண்டார். ப்3ருஹச்சரணக்குடியில் பிறந்த அந்தப் பெண்ணின் தந்தையும், ப4ட்டருடைய நற்குடிப் பிறப்பை ஆப்தர்கள்மூலம் கேள்விப்பட்டு, அவருக்குப் பெண்ணைக் கொடுப்பதற்கு இசைந்தார். ஆனாலும், அதற்குப்பின் 'வடமருக்கும், ப்3ருஹச்சரணக் குடியினருக்கும் சம்பந்தம் நவீனமாயிற்றே' என்று சந்தேகப் படவும் தொடங்கினார். அப்போது ஆழ்வான் பத்னியான ஆண்டாள் கணவரைப் பார்த்து "வேத3மனைத்தையும் ஓதியவனும், யௌவனச் செல்வத்தைப் பூர்ணமாகப் பெற்றவனுமான நமது பிள்ளைக்கு அறிவாளியான உம்மால் இப்போது விவாஹம் செய்விக்கப்படவேண்டுமன்றோ" என்று கூறினார். இப்படி அவளால் உரைக்கப்பட்ட பெரியவரான ஆழ்வான் "ஈஶ்வரனுடையதான இந்தக் குடும்ப3த்திற்கு இப்போது அப்படியொரு குறை வந்து விடுமோ?" என்று பதிலுரைத்தார். பிறகு ப4க்தவத்ஸலனை ரங்க3நாத2னிடம் ஆழ்வான் "ஸ்வாமியான பெரிய

४६. तस्य वैवाहिकं कार्यं कर्तव्यं किं न चाऽधुना।
इत्युक्तो रङ्गनाथस्तं कूरेशमिदमब्रवीत्॥

४७. तस्योद्वाहं च भट्टस्य कर्ता तु न भवान् भवेत्।
अहमेव हि तत्कर्ता निर्भरस्त्वं सुखं वस॥

४८. ततो रङ्गेश्वरः स्वप्ने तस्येदं वाक्यमब्रवीत्।
मत्पुत्राय प्रदेहीति भट्टार्यायाशु कन्यकाम्॥

४९. ततः पूर्णार्यदायादः रङ्गेशेन प्रचोदितः।
अकरोत्कन्यकादानं रङ्गपुत्राय धीमते॥

---

பெருமாளே! உமது பிள்ளையான ப₄ட்டர் யௌவன வயஸ்ஸை அடைந்துவிட்டார். அவருக்கு இப்போது விவாஹ மங்க₃ளத்தைச் செய்துவைக்கவேண்டாமா" என்று விண்ணப்பித்தார். இதைக்கேட்ட பெரியபெருமாள் ஆழ்வானைப் பார்த்து "என் பிள்ளையான ப₄ட்டருக்கு விவாஹத்தை நீர் செய்யவேண்டாம்; நானே செய்து வைக்கிறேன். நீர் கவலையில்லாமல் ஸுக₂மாக இரும்" என்று பதிலுரைத்தார். அதற்குப்பின் பெரியபெருமாள் பெரியநம்பி வம்ஶஸ்த₂ரின் கனவில்தோன்றி "என் பிள்ளையான ப₄ட்டருக்கு உடனே உமது பெண்ணைக் கன்யகா த₃ானம் செய்துகொடும்" என்று நியமித்தார். அதற்குப் பின் பெரியநம்பியின் தா₃யாதி₃யான அவர் இப்படிப் பெரிய பெருமாளால் நியமிக்கப்பெற்று, அப்பெரிய பெருமாளின் பிள்ளையாய், பேரறிவாளரான ப₄ட்டருக்குத் தம் பெண்ணைக் கன்யகாத₃ானம் செய்துகொடுத்தார்.

## முதலியாண்டான் வைபவம்

50-57. ஒரு சமயம் பெரும்புகழாளரான எதிராஜர் ஸ்ரீவைஷ்ணவர்கள்திரளிலே பல விஷயங்களைப் பேசி வரும்போது, அத்திரளில் உள்ள ஸ்ரீவைஷ்ணவர்களைக்

५०. ततः कदाचित् श्रीरङ्गे सभायां यतिपुङ्गवः।
कथायां तु प्रवृत्तायां विविधायां महायशाः॥

५१. लक्ष्मणार्योऽब्रवीद्वाक्यं वैष्णवांश्च सभासदः।
चतुर्थाश्रममापन्ने तस्मिन्काले पुरा मयि॥

५२. विना दाशरथिं देहसंबन्धो वर्जितो मया।
ततस्ते वैष्णवास्सर्वे यतिराजमथाब्रुवन्॥

५३. स्वामिन्! तवेदं गदितुं किं युक्तं यतिपुङ्गव!।
तानाह यतिराजोऽथ शिष्यानेवं वचस्तदा॥

५४. यथा त्रिदण्डः संग्राह्यो तथा दाशरथिर्मम।
ततः पठति योगीन्द्रे शठजित्सूक्तिमालिकाम्॥

५५. तदा दाशरथिः श्रुत्वा मोहितस्तद्वशंगतः।
लक्ष्मणार्यः स तं दृष्ट्वा प्रोवाचेदं विमोहितम्॥

---

குறித்து "அக்காலத்தில் நான் ஸந்யாஸாஶ்ரமத்தை ஏற்றுக்கொள்ளும்போது என் மருமகனை 'தா$_3$ஶரதி$_2$' எனும் முதலியாண்டானைத் தவிர மற்ற தே$_3$ஹஸம்ப$_3$ந்த$_4$ங்களையே கைவிட்டேன்" என்று அருளினார். அதைக் கேட்ட எல்லா ஸ்ரீவைஷ்ணவர்களும் "ஸ்வாமியான யதிராஜரே! தேவரீர் இப்படி அருளுவது தகுமா?" என்று யதீந்த்$_3$ரரைக் கேட்டனர். அதைக்கேட்ட யதிகட்கிறைவர் தம் ஶிஷ்யர்களைக் குறித்து "எப்படி என் த்ரித$_3$ண்ட$_3$மானது என்னைவிட்டு அகலாததோ அதுபோல் முதலியாண்டானும் என்னைவிட்டு அகலாதவர்" என்று பதிலுரைத்தார். அதற்குப்பின் ஒருசமயம் யதீஶ்வரர் நம்மாழ்வாரது திருவாய்மொழியை ஸேவித்து வரும்போது அதைக்கேட்டுவந்த முதலியாண்டான் அதிலே ஈடுபட்டு மயக்கமடைந்தார். அப்படி மயங்கிய அந்த முதலியாண்டானைக் கண்டு ஸ்ரீராமாநுஜர் "வேத$_3$த்திலுல் அறியத்தக்க பரமபுருஷனாகிற ஸ்ரீமந்நாராயணன் த$_3$ஶரத$_2$ சக்ர

५६. वेदवेद्ये परे पुंसि जाते दशरथात्मजे ।
वेदः प्राचेतसादासीत्साक्षाद्रामायणात्मना ॥
तद्वत्पराङ्कुशादासीद्वेदो द्राविडरूपतः ॥

५७. एतादृशैः शिष्यवरैर्यतीन्द्रः पीठैश्चतुस्सप्ततिभिस्समेतः ।
दिगन्तकीर्तिः सुखमेव तस्थौ रङ्गे पुरे लक्ष्मणदेशिकेन्द्रः ॥

इति श्रीप्रपन्नामृते रामानुजचरित्रे श्रीपराशरभट्टार्य
विवाहादिकथनं नाम एकोनचत्वारिंशोऽध्यायः ।

चत्वारिंशोऽध्यायः

१. तस्यामानुषवैभवस्य महतः श्रीरङ्गपृथ्वीपतेः
कैङ्कर्याणि यथा तथा प्रतिदिनं चाव्याहतं कुर्वतः ।

---

வர்த்திக்குத் திருக்குமாரனாய் அவதரித்தபோது, அவனைச் சொல்லும் வேத₃மும் வால்மீகியிடமிருந்து ஸாக்ஷாத் ராமாயணமாக அவதரித்தது. அதுபோலே (எம்பெருமான் அர்ச்சாவதாரங்களாக அவதரித்தபோது) வேத₃மும் நம்மாழ்வாரிடமிருந்து தமிழ்வேத₃மாகிற திருவாய்மொழியாக அவதரித்தது" என அருளினார். இத்தகைய தலைசிறந்த ஶிஷ்யர்களோடும் எழுபத்து நான்கு ஸிம்ஹாஸனாதி₄பதிகளோடும் கூடியவராய், திக்குநிறை புகழாளராய், யதிராஜராகிற ஆசார்யஶ்ரேஷ்டர் ஸ்ரீரங்க₃நக₃ரத்தில் இனிது வாழ்ந்துவந்தார்.

ஸ்ரீ ப்ரபந்நாம்ருதத்தில் ஸ்ரீராமாநுஜ சரித்திரத்தில்
ஸ்ரீபராஶரப₄ட்டரின் விவாஹம் முதலானவற்றை விவரிக்கும்
முப்பத்தொன்பதாம் அத்தியாயம் நிறைவுற்றது.

## நாற்பதாவது அத்தியாயம்

# உறங்காவில்லியும், பொன்னாச்சியாரும்

### உறங்காவில்லியின் காதல்

1-9. அதிமானுஷச் செயல்களையுடைய பரம்பொருளான அரங்கநகரப்பனுக்கு இப்படி தினந்தோறும் தடையற்ற கைங்கர்யங்களைக் குறையறச் செய்துவரும்போது,

लोके सज्जनसंमता गुरुजना येऽन्ये च वै दुर्जनाः
ते सर्वे करुणार्द्रदृष्टिविषयाः शिष्या बभूवुः क्षणात् ॥

२. निचुलानगरे कश्चित् मल्लवर्यो महाबलः ।
चाणूर इव दुर्धर्षो धनुर्दासो बभूव ह ॥

३. ते तस्य मल्लवर्यस्य मल्ला ये चाखिला भुवि ।
बिभ्यन्ति सर्वभूतानि मृत्योरिव समागमे ॥

४. धनुर्दासस्य तस्यासीत्प्रिया काचिद्वराङ्गना ।
पोन्नाच्च्याख्या विशालाक्षी पूर्णचन्द्रनिभानना ॥

५. तया संमोहितो नित्यं स मल्लो मदनातुरः ।
मुखावलोकनं कुर्वन् तस्या एव समास्थितः ॥

६. ततः कदाचिच्छ्रीरङ्गे रङ्गेशस्य जगत्पतेः ।
चैत्रोत्सवो महानासीत्सर्वेषां नयनोत्सवः ॥

---

உலகில் நல்லோர்களால் போற்றப்படும் ஆசார்யர்களும், தீய ஒழுக்கமுள்ளவர்களுமாகிற அனைவரும் காரேய்கருணை யிராமாநுசரின் கடாக்ஷவிஷயமாகிச் சடக்கெனச் சீடர்க ளானார்கள். (உறங்காவில்லி சீடனானது இதற்கு ஒரு சான்று). உறையூரில் மிக்க வலிமையுடையவராய், சாணூரன்போலே கலக்கவொண்ணாதவரான த₄நுர்தா₃ஸர் (உறங்காவில்லி) என்று ஓர் மல்லர்தலைவர் இருந்தார். உலகிலுள்ள மல்லர்களனைவரும், எல்லா ஜீவராசிகளுமே, யமனைக் கண்டதுபோல் அவரைக்கண்டால் நடுங்குவார்கள். அந்த உறங்காவில்லிக்கு, தடங்கண்ணியாய், பூர்ண சந்திரன்போன்ற முகமுடையவளான பொன்னாச்சி என் னும் ஓர் தா₃ஸி இனிய காதலியாயிருந்தாள். காமவசப்பட்ட அம்மல்லர் எப்போதும் அவளால் மயக்கப்பெற்றவராய், அவளுடைய முகத்தைப் பார்த்துக்கொண்டே பொழுது போக்கிவந்தார். அப்போது ஒரு சமயம் ஸ்ரீரங்க₃த்தில் லோக நாத₂னை திருவரங்கனுக்கு, மக்களனைவரது கண்ணுக்கும் பெருவிருந்தான சித்திரைப்பெருவிழா நடைபெற்றது.

७. रङ्गराजोत्सवं श्रुत्वा पोन्नाच्चयाख्या वराङ्गना।
द्रष्टुकामा ययौ शीघ्रं श्रीरङ्गं प्रति सादरम्॥
८. स तामनुययौ तूर्णं तन्मुखालोकनातुरः।
द्विपदाग्रे मुखस्यास्याः छत्रं कृत्वा प्रयत्नतः॥
९. मुखावलोकनं कुर्वन् स्खलद्गतिरसौ ययौ।
एतद्विचित्रं संदृष्टं यतीन्द्रेण महात्मना॥
१०. कृतस्नानेन कावेर्यां शिष्यसंघावृतात्मना।
तच्चित्रं स विलोक्याथ शिष्यान् प्रोवाच योगिराट्॥
११. संपश्यताऽधुना चित्रमेतद्वैष्णवपुङ्गवाः!।
भगवन्मायया ग्रस्तं स्त्रीदासं पुरुषाधमम्॥

---

அரங்கனுக்குச் சித்திரையுத்ஸவம் நடப்பதைக் கேள்விப் பட்ட பொன்னாச்சி என்னும் அந்த தூாஸி அதை ஸேவிப்பதற்காக விரைவில் ஆர்வத்தோடு வந்தாள். அவள் முகத்தைக் காண்பதிலேயே ஈடுபட்ட அந்த மல்லரும் நடையிட்டுவரும் அவளுக்கு முன்னால் தடுமாறிய நடையையுடையவராய், மிகமுயன்று அவளது முகத்துக்குக் குடைபிடித்துக்கொண்டு அவளது முகத்தைப் பார்த்துக் கொண்டு வந்துகொண்டிருந்தார்.

## எம்பெருமானார் கடாக்ஷம்

9*-*15. உறங்காவில்லியின் விசித்திரமான இச் செயல், சிஷ்ய ஸமூஹத்தால் சூழப்பெற்று, காவேரி யில் நீராடி எழுந்தருளிய மஹாத்மாவான யதிராஜரால் காணப்பெற்றது. அந்த விசித்திரத்தைக் கண்ட யோகீந் த்ரர் சிஷ்யர்களைப் பார்த்து, "வைஷ்ணவ ஶ்ரேஷ்டர் களே! எம்பெருமானுடைய மாயையால் பீடிக்கப்பட்டு, மனிதரில் கடையனாய், பெண்ணுக்கு அடியனாய், இவன்

१२. अयमेव हि लोकेऽस्मिन् दृढं मूढतमो जनः।
लज्जाविरहितो मार्गे वेश्यादास्यं करोत्यलम् ॥

१३. लोके कामातुराः स्त्रीणां रहः कुर्वन्ति केचन।
दासादिव्यवहाराणि न बहिः केऽपि वैष्णवाः! ॥

१४. मदनाम्बुधिनिर्मग्नं मत्तं स्त्रीदासमातुरम्।
निर्लज्जं कामिनीभूतमोहितं मूढचेतसम् ॥

१५. रङ्गेशाभिमुखं शीघ्रं करिष्याम्यधुनैव तम्।
इत्युक्त्वा वैष्णवान् सर्वान् स्वपार्श्वस्थान् यतीश्वरः ॥

१६. आप्तान् कांश्चित्तदा शीघ्रं धनुर्दासस्य पृष्ठतः।
प्रेषयामास तत्स्थानं ज्ञातुकामो महामतिः ॥

---

விளங்கும் விசித்திரத்தைப் பாருங்கள். இவ்வுலகில் இவனே மிகவும் அறிவற்றவன் என்பது உறுதி. லஜ்ஜை யற்றவனாய், நடுவழியில் வேசிக்குப் பூர்ணமாக அடிமைத் தொழில் புரிகிறானன்றோ இவன். வைஷ்ணவர்களே! இவ்வுலகில் காமவசப்பட்ட சிலர் ரஹஸ்யத்தில் ஸ்த்ரீ களுக்கு அடிமைத்தொழில் முதலானவற்றைச் செய்கிறார் கள். (இவனைப்போல்) எவரும் வெளிப்படையாகச் செய்வ தில்லை. காமக்கடலிலே மூழ்கி மயங்கியவனாய், பெண்ணுக்கு அடிமையாயிருப்பவனாய், காமவசப்பட்டவனாய், வெட்க மற்றவனாய், பெண்ணாகிற பேயால் மயக்கப்பட்டவனாய், அறிவிழந்தவனான இவனை இப்போதே விரைவில் அரங்க நகரப்பனிடம் ஈடுபட்டவனாகச் செய்யக்கடவேன்" என்று அருளினார்.

### உறங்காவில்லியை அழைத்து விசாரித்தல்

15*-20 தம் அருகிலிருந்த வைஷ்ணவர்களிடம் இவ் வண்ணமாகக் கூறி, தமக்கு ஆப்தர்களான சிலரை அழைத்து உறங்காவில்லியின் இருப்பிடத்தைத் தெரிந்து

१७. ततः स्वमठमाविश्य यतीन्द्रः करुणार्णवः।
आनयामास सहसा धनुर्दासं तथाविधम्॥

१८. तत्कटाक्षेक्षितैः सम्यक् तादृशोऽपि स महाराट्।
आनीतो यतिराजेन तदन्तिकमुपागमत्॥

१९. सम्यक् स पूर्णं दृष्ट्वाऽथ यतीन्द्रो वीक्ष्य सस्मितम्।
कृत्वा संमानमत्यन्तं धनुर्दासं वचोऽब्रवीत्॥

२०. को भवान् वत्स! कुत्रत्यः किन्निमित्तमिहागतः।
किं कार्यं वद तत्त्वेन तव श्रेयो भविष्यति॥

२१. इत्युक्तस्तेन गुरुणा धनुर्दासः कृताञ्जलिः।
स्ववृत्तान्तमशेषेण यतीन्द्राय न्यवेदयत्॥

---

கொள்வதற்காக விரைவில் அவர்பின்னாலேயே அனுப்பினார் பேரறிவாளரான எம்பெருமானார். அதற்குப்பின் கருணைக்கடலான ராமானுஜர் தம் மட$_2$த்துக்குச் சென்று முற்கூறிய நிலையிலிருக்கும் உறங்காவில்லியை விரைவில் மட$_2$த்துக்கு அழைத்துவரச் செய்தார். அத்தகையவரா யிருந்தபோதிலும், எம்பெருமானார் நன்கு கடாக்ஷித்தரு ளியதாலே, யதிராஜரால் அழைக்கப்பட்ட உறங்கா வில்லியும் அவரிடம் வந்தார். யதீந்த்$_3$ரர் அவரைப் பரிபூர்ணமாகவும், நன்றாகவும் புன்முறுவலோடு கடாக்ஷித்து, மேலான ப$_3$ஹுமானத்தைச்செய்து, உறங்காவில்லியைக் குறித்து "அப்பா! நீ யார்? எங்கிருக்கிறாய்? எதற்காக ஸ்ரீரங்க$_3$த்திற்கு வந்திருக்கிறாய்? இங்கு உனக்கு என்ன காரியம்? இதையெல்லாம் என்னிடம் உள்ளபடிசொல். உனக்கு நன்மை உண்டாகும்" என்று அருளினார்.

## உறங்காவில்லியின் விருத்தாந்தம்

21-23. எம்பெருமானாரால் இவ்வண்ணம் உரைக்கப் பெற்ற உறங்காவில்லி, கைகூப்பிநின்று தம் விருத்தாந்தம்

२२. निचुलापट्टणस्थोऽहं धनुर्दास इति श्रुतः।
नियुद्धशास्त्रनिरतः सर्वमल्लमहीपतिः॥

२३. अयं चैत्रोत्सवः स्वामिन्! रङ्गेशस्याधुना किल।
श्रीहरेरस्य सेवार्थमागतोऽहं यतीश्वर!॥

२४. तच्छ्रुत्वा तमुवाचेदं यतीन्द्रः सस्मितं तदा।
श्रूयतामभिधास्यामि मा कोपं कुरु मां प्रति॥

२५. रहः कुर्वन्ति दास्यानि स्त्रीणां कामातुरा जनाः।
त्वादृशः कोऽपि न मया दृष्टः कामातुरो भुवि॥

२६. जुगुप्सितमिदं कार्यं शूरेण भवता कथम्।
कृतं सर्वेषु पश्यत्सु राजमार्गे निरङ्कुशम्॥

---

முழுவதையும் யதிராஜருக்குப் பின்வருமாறு விண்ணப்பித்தார்—“அடியேன் உறையூரில் இருப்பவன். ‘உறங்காவில்லி’ என்று என்னை அழைப்பார்கள். மற்போரில் வல்லவனாய், எல்லா மல்லர்களுக்கும் தலைவனாயிருக்கின்றேன். ஐயா யதிராஜரே! அரங்கநகரப்பனுக்கு இப்போது சித்திரைத் திருவிழா நடக்கிறதன்றோ. அவ்வெம்பெருமானை இவ்வுத்ஸவத்தில் ஸேவிப்பதற்காக இங்கு வந்திருக்கிறேன்” என்று.

### எம்பெருமானாரின் சாதுர்யம்

24-35. அதைக்கேட்டு யதிராஜர் அப்போதே புன்முறுவலோடு பின்வருமாறு கூறலுற்றார்,—“அப்பா! ஒரு விஷயம் சொல்லுகிறேன் என்னிடம் கோபங்கொள்ளாமல் அதைக்கேட்பாய்; காமவசப்பட்ட பல ஜனங்கள் ஸ்த்ரீகளுக்கு ரஹஸ்யத்தில் அடிமைத்தொழில் புரிகின்றனர். உன்னைப்போல் (வெளிப்படையாக அதைச் செய்யும்) காமாதுரன் எவனையும் நான் உலகிலேயே கண்டதில்லை. ராஜவீதியில் எல்லோரும் பார்த்துக்கொண்டி

२७. तच्छ्रुत्वा यतिराजस्य वचनं लज्जितो भृशम् ।
स नम्रवदनो भीतः प्राञ्जलिर्वाक्यमब्रवीत् ॥

२८. नाहं कामातुरः स्वामिन् ! न वेश्याजनलोलुपः ।
हेमाम्बाख्या विशालाक्षी काचिदस्ति वराङ्गना ॥

२९. महाविशाले तस्यास्ते नेत्रे पद्मदलायते ।
विशालयोस्तयोः स्वामिन् ! निमग्नं मानसं मम ॥

३०. संतप्तं सूर्यकिरणैर्यदि तन्मुखपङ्कजम् ।
भवेत्संग्लानिते नेत्रे तथैव न भविष्यतः ॥

३१. अतो मे हृदयं शीघ्रं वैकल्यं याति निश्चितम् ।
एतावन्मात्रमेवार्य ! व्यापारो मम देशिक ! ॥

३२. तदेव शाधि शिष्याय मह्यमद्यैव यत् स्थितम् ।
तच्छ्रुत்वा प्रहसन् वाक्यं यतीन्द्रः पूर्णवत्सलः ॥

---

ருக்கும்போது வீரனை உன்னல் இந்த அருவருக்கத்தக்க காரியம் எப்படிக் கூசாமல் செய்யப்பட்டது?” என்று. யதீந்த்ரருடைய அவ்வார்த்தையைக் கேட்டு, உறங்கா வில்லி மிகவும் வெட்கமடைந்தவராய், தலைகுனிந்தவராய், பயங்கொண்டு கைகூப்பிநின்று “ஐயா! நான் காமவசப் பட்டவனல்லேன்; வேசிலோலனல்லேன்: பொன்னய்ச்சி என்னும் விரிந்த கண்களையுடைய பெண்ணின் நல்லாள் ஒருத்தி இருக்கிருள். அவளுடைய கண்கள் தாமரையிதழ் போல் நீண்டு மிகப்பரந்து உள்ளன. ஸ்வாமிந்! அவளுடைய அப்பரந்த கண்களில் என் நெஞ்சு ஈடுபட்டு விட்டது. அவளுடைய முகத்தாமரை ஸூர்யகிரணங்களால் கொளுத்தப்பட்டால், அவளது கண்கள் வாடிவிடும்; முன்புபோல் இருக்கமாட்டா; ஆகையால் என்னெஞ்சமும உறுதியாகக் கலங்கிவிடும். ஆசார்யரே! எனது செயல் இவ்வண்ணமாக எனது ரஸிகத்தன்மையால் ஏற்பட்டதே

३३. स्वपादपद्माश्रयणं कर्तुकामस्तमब्रवीत् ।
संदृष्टाभ्यां त्वया वत्स ! नेत्राभ्यामतिविस्तृते ॥

३४. नेत्रे लोकोत्तरे दिव्ये विद्येतेऽस्याधुनैव ते ।
सुन्दरे दर्शयाम्यत्र मा ते भूदत्र संशयः ॥

३५. प्रतिगृह्य वचस्तस्य धनुर्दासोऽभ्यभाषत ।
तल्लोचनादप्यधिकाक्षिलाभः भवेदिदानीं यदि मे यतीन्द्र ! ।
तदा भवेन्मे महदर्थलाभः प्राप्तो महात्मन् ! भवतः कटाक्षात् ॥

३६. यतीश्वरस्तत्क्षणमेव शीघ्रं स तं समादाय जगाम तत्र ।
रङ्गेश्वरो यत्र फणीन्द्रतल्पे शेते महात्मा जगतां हिताय ॥

---

யாகும். தேவரீரது ஶிஷ்யனுகிவிட்ட எனக்கு தேவரீர் திருவுள்ளத்தில் உள்ளது எதுவோ அதை ஆணையிடும்" என்று கூறினர். அதைக்கேட்டு, நிறைந்த அன்புடைய வரான யதிகட்கிறைவர், அவ்வுறங்காவில்லியைத் தம் திருவடிகளில் ஈடுபட்டவராம்படி செய்வதற்காகச் சிரித்துக் கொண்டே பின்வருமாறு கூறினர்,—"அப்பா! நீ கண்ட கண்களைவிட மிகப் பரந்தவையாய், உலகில் உள்ள எல்லாக் கண்களையும்விடச் சிறந்தவையாய், அப்ராக்ருத மான கண்கள் இரண்டு ஒருவனுக்கு உள்ளன; அவ்வழகிய கண்களை இன்றே நான் உனக்குக் காட்டுகிறேன்; நீ இதில் ஐயமுறவேண்டா" என்று; அவரது வார்த்தையை ஏற்றுக் கொண்ட உறங்காவில்லி "மஹாபுருஷரான யதிராஜரே! அக்கண்களைவிடச் சிறந்த கண்களை இப்போதே எனக்குக் காட்டினீராகில் எனக்கு தேவரீர் அருளாலே பெரும் பொருள் கிடைத்ததாக ஆகும்" என்று கூறினர்.

### உறங்காவில்லியைத் திருத்தியது

36-42. உலகின் நன்மையின் பொருட்டு அரவரசப் பெருஞ்சோதியான அனந்தன்மேல் பரமபுருஷனை

३७. रङ्गं समासाद्य फणीन्द्रतल्पे शयानमाद्यं रघुवंशभाग्यम् ।
रङ्गेश्वरं मल्लवराय तस्मै प्रदर्शयामास यतीन्द्रनाथः ॥

३८. आजानुबाहुमरविन्ददलायताक्षं
मन्दस्मितं मधुरकोमलगण्डभागम् ।
माणिक्यरञ्जितविभूषणभूषिताङ्गं
रङ्गेश्वरं वरतनुं स हरिं ददर्श ॥

३९. सम्यक् प्रदर्श्याशु विशालनेत्रं रङ्गेश्वरं मल्लवराय तस्मै ।
हस्तं प्रगृह्यार्हवरस्स तस्य जगाद वाक्यं कृपयार्थसारम् ॥

४०. अयं धनुर्दास ! रमाधिनाथः श्रीरङ्गनाथो जगतामधीशः ।
अस्याक्षिवैपुल्यमिदं त्वयाद्य दृष्टं किलैवाप्रतिमं हि सम्यक् ॥

---

ஸ்ரீரங்க₃நாத₂ன் பள்ளிகொண்டிருக்குமிடத்திற்கு, அவ்வுறங்காவில்லியை அழைத்துக்கொண்டு யதிராஜர் அக்கணமே விரைவில் சென்றார். ஸ்ரீரங்க₃ம் கோயிலை அடைந்து, ரகு₄குலம் செய்த தவத்தாலே பாம்பணையில் பள்ளிகொண்டிருக்கும் ஆதி₃புருஷனை ஸ்ரீரங்க₃ராஜாவை யதிராஜர் அந்த மல்லராஜாவுக்குக் காட்டியருளினார். முழந்தாள்வரை நீண்ட திருக்கைகளை உடையவனாய், தாமரையிதழ்போல் நீண்டு பரந்த திருக்கண்களை உடையவனாய், புன்முறுவல் செய்பவனாய், மிக இனிய மிருதுவான கன்னங்களை உடையவனாய், மாணிக்கங்கள் அழுத்தப்பெற்ற திருவாப₄ரணங்களால் அலங்கரிக்கப்பெற்றவனாய், அழகிய திருமேனியை உடையவனான ரங்க₃நாத₂னை விஷ்ணுவை அந்த மல்லர் கண்டார். பரந்த கண்களை உடைய ஸ்ரீரங்க₃ராஜனை மல்லர்தலைவரான அவ்வுறங்காவில்லிக்கு நன்கு காட்டி, பரமபூஜ்யரான யதிராஜர் அவருடைய கையைப்பிடித்துக்கொண்டு, கருணையோடு பொருள்பொதிந்த பின்வரும் வாக்கியத்தை அருளினார், — “த₄நுர்தா₃ஸரே ! இவரே உலகுக்குத்

४१. निशम्य तद्वाक्यमतीव सत्यं विलोक्य रङ्गेशविशालनेत्रे।
प्रहृष्टचित्तः स तयोर्निमग्नः तस्थौ सदृक्षणः कृपयैव तस्य ॥

४२. नीत्वोपायबलेन तस्य पुरतः श्रीरङ्गपृथ्वीपतेः
कृत्वा लोचनलोलनेत्रयुगलं तं मल्लमत्यादरात्।
निर्व्याजेन यतीश्वरः करुणया निर्व्याजसंरक्षकः
संतोषेण मठं जगाम महता कारुण्यपाथोनिधिः ॥

४३. अयं जनो लक्ष்மणदेशिकेन्द्रसम्बन्धिभूतो मम रक्षणीयः।
इत्येव मत्वा भगवांश्चकार दयां स तस्मिन्नथ चापदासे ॥

---

தலைவனாய், லக்ஷ்மீநாதனான ஸ்ரீரங்கநாதன்; இவரது ஒப்பற்ற கண்களின் பரப்பை இன்று நீர் நன்றாக நேரிலே கண்டீரல்லவா ?” என்று; யதிராஜரின் மிக உண்மையான அவ்வார்த்தையைக்கேட்டு, அவரது கருணையாலே, திருவரங்கனின் கரியவாகிப் புடைபரந்து மிளிர்ந்து செவ்வரியோடி நீண்ட அப்பெரியவாய கண்களைப் பார்த்து மிகவுகந்து அவற்றிலே ஆழ்ந்து, கண்கொட்டாமல் நின்றார் உறங்காவில்லி. இவ்வண்ணமாக ஓர் உபாயம்செய்து அரங்கநகரப்பனுக்கு முன்னால் அவ்வுறங்காவில்லியை அழைத்துச் சென்று,தமது நிர்ஹேதுக கிருபையாலே அந்த மல்லர் பேரார்வத்தோடு அவ்வரங்கனின் கண்களிலேயே ஈடுபட்ட கண்களை உடையவராம்படி செய்து, அனைவரையும் நிர்ஹேதுகமாக ரக்ஷிக்கின்றவராய், கருணைக்கடலான அந்த யதிராஜர் பேரானந்தத்தோடு தமது மடத்திற்கு எழுந்தருளினார்.

## உறங்காவில்லியை அரங்கன் கடாக்ஷித்தல்

43-45. “இந்தச் சேதனர் ஆசார்யஶ்ரேஷ்டரான ஸ்ரீராமாநுஜரோடு ஸம்பந்தமுடையவர்; ஆகையால் நம்மால் ரக்ஷிக்கத்தக்கவர்” என்று எண்ணி, அவ்வுறங்காவில்லியிடம் பெரியபெருமாள் கருணைபுரிந்தார்.

४४. यतीशसम्बन्धमहाबलेन श्रीरङ्गराजस्य कृपाबलेन।
निरस्तकामादिमहारिवर्गो बभूव मल्लाधिपतिर्महात्मा॥

४५. जितनिद्रो जिताहारः प्रत्यहं हरिसेवया।
अचञ्चलेक्षणस्तत्र तस्थावनिमिषो यथा॥

४६. ततो यतीन्द्रः सहसा धनुर्दासं तमादरात्।
मठमानीय भक्ताय स तस्मै करुणानिधिः॥

४७. तीर्थं प्रसादं प्रददौ कृपया शिष्यवत्सलः।
ततः संप्रार्थितस्तेन धनुर्दासेन योगिराट्॥

४८. चकार पञ्चसंस्कारान् मल्लस्य विदितात्मनः।
धनुर्दासो यतीन्द्रस्य शिष्यो भूत्वा महामतिः॥

---

யதிராஜருடைய ஸம்ப₃ந்த₄மாகிற பெரிய ப₃லத்தாலும், ஸ்ரீரங்க₃ராஜனுடைய கருணையின் ப₃லத்தாலும், காமம் முதலான பெரிய உட்பகைகள் நீங்கப்பெற்றவரான அம்மல்லர் தலைவர் எம்பெருமானையே எல்லாமாகக்கொண்ட மஹாத்மாவானார். தினந்தோறும் எம்பெருமானை ஸேவிப்பதாலே தூக்கமும், ஆஹாரமும் தேவையில்லாதவராய், அசையாத கண்களோடு கண்கொட்டாத அமரர்போலே (அரங்கனை ஸேவித்துக்கொண்டு) ஸந்நிதி₄யிலேயே நின்றார் அவர்.

## உறங்காவில்லியும் பொன்னாய்ச்சியாரும் எம்பெருமானாரை ஆஸ்ரயித்தல்

46-53. கருணைக்கடலாய், ஶிஷ்யவத்ஸலரான யதிராஜர் உறங்காவில்லியை அன்போடு விரைவிலேயே மடத்திற்கு அழைத்து, ப₄க்தரான அவருக்குக் கருணையோடு தீர்த்த₂ப்ரஸாத₃ங்களை அருளினார். அதற்குப்பின் உறங்காவில்லியால் பிரார்த்தி₂க்கப்பட்ட யதிராஜர் ஆத்மஸ்வருபத்தை உணர்ந்த அந்த மல்லருக்குப் பஞ்சஸம்

४९. नित्यकैङ्कर्यनिरतः संतस्थौ गुरुसन्निधौ।
धनुर्दासस्य वृत्तान्तं श्रुत्वा हेमाम्बा तदा॥

५०. विस्मयाविष्टहृदया जितकामा बभूव सा।
सञ्जातज्ञानवैराग्या सा च लक्ष्मणदेशिकम्॥

५१. प्रणम्य प्रार्थयामास पञ्चसंस्कारकर्मणि।
अपारकरुणासिन्धुः हेमाम्बां तां दृढव्रताम्॥

५२. धनुर्दासेन तेनाशु पूर्ववत् समयोजयत्।
हेमाम्बायास्तदा तस्याः धनुर्दासात् शताधिकाः॥
अवर्धत प्रतिदिनं ज्ञानभक्त्यादिसद्गुणाः॥

५३. तौ दम्पती लक्ष्मणदेशिकेन्द्रपादारविन्दामृतपानमत्तौ।
तन्नित्यकैङ्कर्यरतौ महान्तौ बभूवतुः सन्ततमादरेण॥

इति श्रीप्रपन्नामृते रामानुजचरिते धनुर्दासकनकाङ्गनयोः
यतिराजकृपालब्धश्रीवैष्णवत्वसिद्धिर्नाम चत्वारिंशोऽध्यायः॥

---

ஸகாரங்களைச் செய்தார். பேரறிவாளரான அவ்வுறங்கா வில்லியும் யதிராஜருககுச் சீடராகி, எப்பொழுதும கைங் கர்யம செய்பவராய் அவருக்கு அருகிலேயே வாழ்ந்து வந்தார். உறங்காவில்லியைப் பற்றிய அச்செய்தியை அப்போது கேள்வியுற்ற பொன்னுய்ச்சியார் மிகவும் வியப் புற்ற நெஞ்சினளாய், காமத்தை வென்றவளானுள். ஜ்ஞான வைராக்3யங்கள் விளையப்பெற்ற அவளும் ஸ்ரீராமாநுஜரை வணங்கித் தனக்குப் பஞ்சஸம்ஸ்காரம் செய்யும்படி வேண்டினுள். எல்லையற்ற கருணைக்கடலான அவரும் அப்படியே பஞ்சஸம்ஸ்காரம்செய்து உறுதியுள்ள அப்பொன்னுய்ச்சியாரை முனபோலே உறங்காவில்லி யோடு சடக்கெனச் சேர்ந்து வாழச்செய்தார். உறங்கா வில்லியின் உபதே3ஶத்தாலே ஜ்ஞானம், ப4க்தி முதலான நூற்றுக்கணக்கான நற்குணங்கள் அந்தப் பொன்னுய்ச்சி

## एकचत्वारिंशोऽध्यायः

१. श्रीमल्लक्ष्मणयोगीन्द्रः श्रीरङ्गे शिष्यसंवृतः।
व्यरोचत महातेजाः द्वितीय इव रङ्गराट्॥

२. रामस्य नित्यकैङ्कर्ये यथासीन्मारुतात्मजः।
तथैव लक्ष्मणार्यस्य धनुर्दासो दृढव्रतः॥

३. कदाचिदुत्सवो जातः सुमहान् रङ्गभूपतेः।
तीर्थदातरि रङ्गेशे तीर्थवारिदिने तदा॥

---

யாருக்கும் தினந்தோறும் வளர்ந்துவந்தன. தம்பதிகளான அவ்விருவரும் ஸ்ரீராமாநுஜருடைய திருவடித்தாமரைகளாகிற அமுதத்தைப் பருகுவதிலேயே ஈடுபட்டவர்களாய், அவருக்கு எப்போதும் அன்போடு கைங்கர்யம் செய்வதில் ஆர்வமுள்ளவர்களான மஹாத்மாக்களாக ஆனார்கள்.

ஸ்ரீ ப்ரபந்நாம்ருதத்தில் ஸ்ரீராமாநுஜ சரித்திரத்தில்,
உறங்காவில்லியும், பொன்னாய்ச்சியாரும் யதிராஜரின் கருணையாலே
ஸ்ரீவைஷ்ணவர்களானதை விளக்கும்
நாற்பதாம் அத்தியாயம் நிறைவுற்றது.

### நாற்பத்தொன்றாம் அத்தியாயம்

## உறங்காவில்லி தம்பதிகளின் சிறப்பு

### உறங்காவில்லியிடம் எம்பெருமானாரின் பரிமாற்றம்

1-5. ஶிஷ்யர்களோடு கூடிய எதிகட்கிறைவர் இரண்டாவது ரங்கநாதன் போலே ஸ்ரீரங்கத்தில் மஹா தேஜஸ்வியாய் விளங்கினார். வாயுபுத்ரனான அநுமன் எப்படி ராமபிரானுக்கு எப்போதும் கைங்கர்யம் செய்து வந்தானோ, அப்படியே உறுதியுடைய உறங்காவில்லியும் ஸ்ரீராமாநுஜருக்குக் கைங்கர்யம் செய்துவந்தார். ஒரு சமயம் அரங்கநகரப்பனுக்குப் பெரியதொரு உத்ஸவம் நடந்தது. அவ்வுத்ஸவத்தில் (கடைசிநாளான) தீர்த்தவாரி

४. धनुर्दासस्य पाणिं तु समालम्ब्य यतीश्वरः ।
तत्र गत्वा ततः स्नात्वा पुनरागमने तदा ॥

५. धनुर्दासस्य सहसा पाणिमालम्ब्य पाणिना ।
शिष्यैः सह यतिश्रेष्ठः स्वमठं प्रविवेश सः ॥

६. तं दृष्ट्वा विस्मयाविष्टाः प्रोचुर्ब्राह्मणपुङ्गवाः ।
धर्मात्मन्! तस्य को हेतुरुच्यतां यतिपुङ्गव! ॥

७. तच्छ्रुत्वा तानुवाचेदं वैष्णवान् भगवान् गुरुः ।
विद्यामदो धनमदस्तृतीयोऽभिजनो मदः ॥

---

தி₃னத்தில் உறங்காவில்லியின் கையைப் பிடித்துக் கொண்டு அங்கு சென்றிருந்த யதிராஜர் நம்பெருமாள் தீர்த்த₂ம் ப்ரஸாதி₃த்தபின்பு நீராடி, மறுபடி திரும்பி வரும் போது உறங்காவில்லியின் கையைச் சடக்கெனத் தம் கையால் பிடித்துக்கொண்டு ஶிஷ்யர்களோடு தம் மட₂த் திற்குத் திரும்பினர்.

## ஸ்ரீவைஷ்ணவர்களின் கேள்வியும், எம்பெருமானரின் பதிலும்

6-9. அப்படி எழுந்தருளும் அவ்வெம்பெருமானரைக் கண்டு வியப்புற்ற அந்தணர் தலைவர்கள் எம்பெருமானரைக் குறித்து "த₄ர்மாத்மாவான யதிராஜரே! நீர் இப்படி நடந்துகொள்வதற்குக் காரணம் என்ன? என்று கூறவேண்டும்" என்று கேட்டனர். அதைக கேட்டு ஜ்ஞாநாதி₃கு₃ணபூர்ணரான அவ்வாசார்யர் அவர்களைக் குறித்து "(1) கல்வியாகிற மத₃காரணம், (2) செல்வமாகிற மத₃காரணம், (3) நற்குடிப் பிறப்பாகிற மத₃காரணம் என்னும் இம்மூன்றும் மத₃ங்கொண்டவர்களுக்கு மேன்மேலும் மத₃த்திற்குக் காரணமாகின்றன. மத₃மற்ற நல்லோர் களுக்கோவெனில் இம்மூன்றுமே மத₃த்திற்கு நேர்மாருன த₃மத்திற்கு(அடக்கத்திற்கு)க் காரணமாகின்றன. அறி

८. एते मदावलिप्तानामेत एव सतां दमाः।
एतैर्मदत्रयैर्मल्लो रहितोऽयं विपश्चितः!॥

९. अतः पाणिगृहीतोऽद्य मया स्नातेन वैष्णवाः!।
तेनैवमुक्तास्ते सर्वे बभूवुर्लज्जिता भृशम्॥

१०. मल्लोऽयं मदनातुरोऽयमशुचिः शूद्रोऽयमत्यल्पकः
विद्वद्भिः श्रुतिपारगैः द्विजवरैस्साम्यं कथं यास्यति।
इत्येवं प्रवदन्ति सात्त्विकनिधिं तं चापदासं मुधा
केचिद्वैष्णवपुङ्गवा यतिपतेः कैङ्कर्यधुर्यं सदा॥

११. असूयया तेऽखिलवैष्णवा भृशं
वेदान्तयुग्मार्थविशारदा अपि।
तद्भावविज्ञानविहीनमानसाः
चक्रुर्हि तस्मिन् महतीं तिरस्क्रियाम्॥

---

வாளிகளே! இந்த மல்லர் இந்த மூன்று மதங்களும் அற்றவர். வைஷ்ணவர்களே! இக்காரணத்தாலேயே நீராடிய பின்பும் நான் இவருடைய கையைப் பிடித்துக் கொண்டு வந்தேன்'' என்று பதிலுரைத்தார். இப்படி பதிலுரைக்கப்பட்ட அவ்வைஷ்ணவர்களனைவரும் மிகவும் வெட்கமடைந்தனர்.

### வைஷ்ணவர்களின் பொறாமை

10-11. அந்த வைஷ்ணவர்களில் சிலர் ''இந்த மல்லன் காமவஶப்பட்டவன். அஶுத்₃த₄மானவன். மிகத்தாழ்ந்த ஶூத்₃ரன். வேத₃ம் கரைகண்ட வித்₃வான்களான அந்தணர் தலைவர்களோடு இவன் எப்படி ஒப்பாவான்?'' என்றுகூறிப் பரமஸாத்விகராய், யதிராஜருக்குக் கைங்கர்யம் செய்பவர்களில் தலைவராயிருக்கும் உறங்காவில்லியை எப்போதும் அவமதிக்கத் தொடங்கினார்கள். உப₄ய வேதா₃ந்தங்களின் பொருளை உணர்ந்தவர்களாயிருந்த

१२. वैष्णवानाममिप्रायं तेषां ज्ञात्वा यतीश्वरः ।
धनुर्दासगुणांश्चैव दोषांस्तेषां च सादरम् ॥

१३. स्फुटं दर्शयितुं लोके यत्कार्यं समचिन्तयत् ।
शिष्यं कञ्चित्समाहूय स्वान्तरङ्गं रहोऽब्रवीत् ॥

१४. अस्यां निशायां शालायां मठे वेदान्तवेदिनाम् ।
शोष्यमाणेषु वस्त्रेषु वैष्णवानां च रज्जुषु ॥

१५. कौपीनमानमात्रेण खण्डयित्वा गृहाण भोः ।
केनाप्यलक्षितगतिः सर्ववस्त्रेषु सत्वरम् ॥

१६. प्रतिगृह्य गुरोर्वाक्यं स च शिष्यो महानिशि ।
कौपीनानि जहाराशु तेषु वस्त्रेषु तत्तथा ॥

---

போதிலும் அந்த வைஷ்ணவர்களனைவரும் மிகுந்த பொருமையாலே உறங்காவில்லியின் சிறப்பை அறியாத நெஞ்சினராய், அவரை மிகவும் அவமதித்தார்கள்.

### ஸ்ரீவைஷ்ணவர்களின் மும்மதங்களை வெளிப்படுத்தல்

*12-19.* அந்த வைஷ்ணவர்களின் கருத்தை உணர்ந்த யதிராஜர் உறங்காவில்லியின் குணங்களையும், அவர்களுடைய தோஷங்களையும் உலகிற்கு நன்கு உணர்த்துவதற்காகச் செய்யவேண்டிய காரியத்தை ஆர்வத்தோடு ஆலோசித்துப் பின்வருமாறு செய்தார் — தமக்கு மிகவும் அந்தரங்கரான ஒரு ஶிஷ்யரைக் கூப்பிட்டு ரஹஸ்யமாக அவரிடம் “வேதாந்த ஜ்ஞானமுடைய இந்த வைஷ்ணவர்களுடைய வஸ்த்ரங்கள் மடத்தில் கயிறுகளில் உலர்த்தப்பட்டிருக்கின்றன. இன்று நள்ளிரவில் அந்த வஸ்த்ரங்களில் ஒவ்வொன்றிலும் ஒரு கௌபீனத்திற்கு வேண்டிய பகுதியை ஒருவரும் அறியாதபடி விரைவில் கிழித்துவிடும்” என்று கூறினர். அந்த ஶிஷ்யரும் அவ்வண்ணமே அந்த வஸ்த்ரங்களில் கௌபீனங்களைக் கிழித்துவிட்டார்.

१७. प्रभातायां तु शर्वर्यां तस्यां वैष्णवपुङ्गवाः।
उत्थायालोक्य वस्त्राणि तानि सर्वाणि सत्वरम् ॥
१८. अवाच्यानि मिथस्सर्वे परुषाणि वचांसि ते।
वदन्तः सुमहाघोरं संग्रामं चक्रुरद्भुतम् ॥
१९. यतिराजोऽपि तच्छ्रुत्वा मन्दस्मितमुखस्तदा।
स तानाश्वासयामास वैष्णवान् प्रियभाषणैः ॥
२०. ततः कदाचिद्योगीन्द्रः तं धनुर्दासमादरात्।
रात्रावानीय तेनैव संभाषणपरोऽभवत् ॥
२१. याममात्रे गते तस्मिन् तत्र लक्ष्मणदेशिकः।
नष्टाम्बरान् समाहूय तान् रहो वाक्यमब्रवीत् ॥
२२. मदन्तिके धनुर्दासः सांप्रतं वर्तते किल।
तस्य भार्या गृहे सुप्ता निद्रयाऽपहृता स्थिता ॥

---

அன்று இரவு கழிந்து விடிந்தவுடன் அந்த வைஷ்ணவ ஶ்ரேஷ்டர்கள் எழுந்திருந்து, அந்த வஸ்த்ரங்கள் அனைத்தையும் பரபரப்போடு பார்த்து, ஒருவரோடொருவர் வாயால் சொல்லத்தகாத கடுமையான வார்த்தைகளைச் சொல்லிக்கொண்டு மிகவும் கோ₄ரமாகவும், ஆஶ்சர்யமாகவும் சண்டை போட்டுக்கொண்டனர். யதிராஜரும் அதைக் கேட்டுப் புன்முறுவல்கொண்ட திருமுகமண்ட₃லத்தை உடையவராய், அப்போதே இனிய வார்த்தைகளைச் சொல்லி அந்த வைஷ்ணவர்களை ஆஶ்வாஸப் படுத்தினார்.

### பொன்னாச்சியாரின் ப₄ாக₃வதநிஷ்டை₂

20-33. அதற்குப்பின் ஒருநாள் இரவு யதிராஜர் உறங்காவில்லியை அன்போடு அழைத்து, அவரோடு பேசிக்கொண்டிருந்தார். அன்றிரவில் ஒரு யாமப்பொழுது கழிந்தபின், எதிகட்கிறைவர் வஸ்த்ரம் கிழியப்பெற்ற வைஷ்ணவர்களை ரஹஸ்யமாக (உறங்காவில்லிக்குத் தெரியாமல்) அழைத்து, "நல்லோர்களே! உறங்காவில்லி இப்போது என்னிடம் பேசிக்கொண்டிருக்கிறாரல்லவா? அவருடைய மனைவி வீட்டில் தன்னை மறந்த ஆழ்ந்த

२३. यूयं गूढचराः शीघ्रं धनुर्दासगृहं प्रति ।
गत्वा तस्याः प्रसुप्तायाः भूषणानि महान्ति च ॥

२४. येन केनाप्युपायेन तान्यादायाशु सांप्रतम् ।
आगच्छन्तु महाभागाः ! ह्यज्ञातगमनागमाः ॥

२५. ततो निशीथे सहसा वैष्णवा गुरुचोदिताः ।
धनुर्दासगृहं प्राप्य तत्र शय्यागृहस्थिताम् ॥

२६. शयानां मृदुशय्यायां हेमाभ्यां तां दृढव्रताम् ।
धनुर्दाससतीं सुप्तां दृष्ट्वा हर्षं प्रपेदिरे ॥

२७. ततस्ते वामशायिन्याः तस्याः श्रीवैष्णवोत्तमाः ।
सर्वाभरणभूषिण्याः भूषणान्यखिलानि च ॥

२८. एकपार्श्वस्थितान्याशु कङ्कणादीनि यानि च ।
तूर्णं ग्रहीतुमुद्युक्ता बभूवुर्निपुणास्तदा ॥

---

தூக்கத்தில் இருக்கிருள். நீங்கள் விரைவில் உறங்காவில்லி யின் வீட்டுக்கு ரஹஸ்யமாகச் சென்று, தூங்கிக்கொண்டி ருக்கும் பொன்னுய்ச்சி அணிந்திருக்கும் விலையுயர்ந்த பூ₄ஷணங்களை ஏதாவது உபாயத்தாலே விரைவில் எடுத் துக்கொண்டு, போவதும் வருவதும் தெரியாமல் உடனே வந்துவிடுங்கள்"என்று நியமித்தார். ஆசார்யரால் நியமிக்கப் பெற்ற அவர்களும் அவ்வாறே நள்ளிரவில் சடக்கெனப் புறப்பட்டு உறங்காவில்லியின் வீட்டை அடைந்து, அங்கு படுக்கையறையில் மெத்தென்ற பஞ்சசயனத்தில் படுத்துக் கொண்டு தூங்கும் ப₄ாக₃வதநிஷ்டை₂யுடைய த₄நுர்தா₃ஸ பத்னியான பொன்னுய்ச்சியைக் கண்டு ஆனந்த₃மடைந் தனர். அதற்குப்பின் நிபுணர்களான அந்த ஸ்ரீவைஷ்ண வோத்தமர்கள், எல்லா ஆப₄ரணங்களாலும் தன்னை அலங் கரித்துக்கொண்டு இடதுபுறமாக ஒருக்கடித்துப் படுத்துக் கொண்டிருக்கும் அவளுடைய வலதுபக்கத்திலிருந்த வளை யல் முதலான நகைகளையெல்லாம் விரைவில் கழற்றி எடுத்துக்கொள்வதில் அப்போதே ஈடுபட்டவராயினர்.

२९. हेमाम्बा किञ्चिदुन्मील्य नेत्रे श्रीवैष्णवप्रिया।
दृष्ट्वा श्रीवैष्णवान् सर्वान् हरतो भूषणानि तान्॥

३०. निमील्य लोचने भूयस्तूष्णीं तस्थौ पतिव्रता।
एकपार्श्वस्थितान्याशु भूषणानि प्रदाय सा॥

३१. वैष्णवेभ्यो महाभागा भक्त्या श्रीवैष्णवप्रिया।
वामपार्श्वे स्थितान्याशु भूषणान्यपि सर्वशः॥

३२. प्रदातुकामा सा भक्त्या वैष्णवेभ्योऽखिलानि च।
पार्श्वेन दक्षिणेनैव लुठन्ती शयने त्वभूत्॥

३३. तां प्रबुद्धां ततो ज्ञात्वा तूर्णं निर्गत्य वैष्णवाः।
भूषणानि तदा तानि यतीन्द्रायादिशन् रहः॥

३४. ततस्तं प्रेषयामास धनुर्दासं यतीश्वरः।
प्रेषितो यतिराजेन धनुर्दासो महात्मना॥

---

அப்போது பதிவ்ரதையாய், ஸ்ரீவைஷ்ணவர்களிடம் அன்புடைய அப்பொன்னுய்ச்சி சிறிது கண்விழித்து அந்த ஸ்ரீவைஷ்ணவர்கள் அனைவரும் ஆப₄ரணங்களைக் கழற்றுவதில் ஈடுபட்டிருப்பதைப் பார்த்து, மறுபடியும் உடனே கண்ணை மூடிக்கொண்டு பேசாமலிருந்தாள். வலது பக்கத்திலிருக்கும் ஆப₄ரணங்களை ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு ப₄க்தியுடன் அளித்தபின், ஸ்ரீவைஷ்ணவர்களிடம் அன்புடைய பெரியாளாகையாலே, இடதுபுறத்திலுள்ள நகைகளனைத்தையும் ப₄க்தியுடன் அளிக்க எண்ணி, வலது புறமாகப் புரண்டு படுத்தாள். அவள் விழித்துக்கொண்டு விட்டதாக நினைத்த வைஷ்ணவர்கள் விரைவில் வெளியே ஓடி, யதிராஜரிடம் அந்த ஆப₄ரணங்களை ரஹஸ்யமாக அளித்தனர்.

३५. निशीथे सहसा धीमान् जगाम स्वगृहं प्रति।
ततो यतीन्द्रः सञ्चिन्त्य तानेव पुनरब्रवीत्॥

३६. अज्ञातगतयस्तस्य पृष्ठतोऽद्यैव सत्वरम्।
गत्वा तद्गृहपर्यन्तं स्थित्वा गूढेन तद्बहिः॥

३७. तयोस्संजातवृत्तान्तं दम्पत्योर्निखिलं तदा।
ज्ञातव्यमवधानेन युष्माभिर्निपुणं यथा॥

३८. अङ्गीकृत्याथ तद्वाक्यं वैष्णवा गुरुचोदिताः।
तथैव चक्रुस्सहसा यतिराजाज्ञया तदा॥

३९. हेमाम्बाशु ततो ज्ञात्वा भर्तुरागमनं सती।
घटेनोदकमादाय तस्याभिमुखमभ्यगात्॥

---

## உறங்காவில்லியின் ப₄ாக₃வதநிஷ்டை₂

34-*53. அதற்குப்பின் யதிராஜர் உறங்காவில்லிக்கு விடைகொடுத்தார். மஹாபுருஷரான யதிராஜரால் விடை கொடுக்கப்பெற்ற அறிவாளியான உறங்காவில்லியும் அந்த நள்ளிரவில் சடக்கெனத் தம் வீட்டிற்குச் சென்றார். அதற்குப்பின் எதிகட்கிறைவர் சிறிது ஆலோசித்து, அந்த வைஷ்ணவர்களைப் பார்த்து "நீங்கள் போவது தெரியாமல் உறங்காவில்லிக்குப் பின்னால் வேகமாக அவர் வீடுவரை சென்று, அந்த வீட்டின் வெளியே மறைந்து நின்று, அந்த த₃ம்பதிகளுக்கிடையே நடக்கும் செய்திகளனைத்தையும் திறமையோடும், கவனத்தோடும் அறிந்துவாருங்கள்" என்று மறுபடியும் நியமித்தார். ஆசார்யரால் நியமிக்கப்பெற்ற அந்த ஸ்ரீவைஷ்ணவர்கள் அவருடைய நியமனத்தை ஏற்றுக்கொண்டு அப்போதே அவருடைய ஆணையை நிறைவேற்றினர். பதிவ்ரதையான பொன்னாய்ச்சி தன் கணவர் வீட்டுக்கு வந்திருப்பதை அறிந்து, (அவருடைய திருவடிகளை விளக்குவதற்காக) நீர்

४०. अर्धाङ्गभूषितां भार्यां तां विलोक्य सुविस्मितः।
उवाच प्रहसन्वाक्यं धनुर्दासो महामनाः॥

४१. किमर्थमेकपार्श्वं तु भूषणैर्भूषितं त्वया।
एतत्पार्श्वं विहायाद्य वद तत्कारणं मम॥

४२. निशम्य भर्तुर्वचनं सा सती वाक्यमब्रवीत्।
अधुनैतत्क्षणात्पूर्वं समागत्यात्र वैष्णवाः॥

४३. निद्रिताया ममाङ्गेषु भूषणाहरणोद्यताः।
प्रबुद्धा किञ्चिदुन्मील्य तदा नेत्रे विलोक्य तान्॥

४४. मत्वा धन्याहमस्मीति सुप्ता इव समास्थिता।
हृतं दक्षिणपार्श्वस्थं तदा तैः सर्वभूषणम्॥

---

நிறைந்த குடத்தை எடுத்துக்கொண்டு அவரை எதிர் கொண்டு அழைத்தாள். பாதி உடம்பில் ஆப₄ரணங்களை அணிந்துகொண்டிருக்கும் அவளைக்கண்டு வியப்புற்ற நன்னெஞ்சினரான உறங்காவில்லி சிரித்துக்கொண்டே "நீ எதனால் ஒரு பக்கத்தைவிட்டு மறுபக்கமே ஆப₄ரணங்களை அணிந்துகொண்டிருக்கிறாய்? அதன் காரணத்தை எனக்குச் சொல்லு" என்று கேட்டார். கணவனுடைய இந்த வார்த்தையைக் கேட்ட பதிவ்ரதையான அவள் "இப்போதுதான் சற்றுநேரத்துக்கு முன்பு இங்கு வந்த ஸ்ரீவைஷ்ணவர்கள் தூங்குகின்ற என் அவயவங்களிலுள்ள ஆப₄ரணங்களை எடுத்துக்கொள்ள முயன்றார்கள். விழிப்புற்ற நான் கண்களைச் சிறிது திறந்து பார்த்து, அவர்களைக்கண்டு 'நான் பெரிய பா₄க்₃யஶாலியே' என்று எண்ணித் தூங்குகிறவள்போல் இருந்தேன். எனது வலதுபக்கத்தில் இருந்த ஆப₄ரணங்களனைத்தையும் அவர்கள் கழற்றிக்கொண்டார்கள். இடது பக்கத்திலுள்ள எல்லா ஆப₄ரணங்களையும் அவர்களுக்கு அன்போடு அளிக்க எண்ணிய அடியேன் தூக்கத்திற்கு வசப்பட்ட

४५. तदिदं वामभागस्थं भक्त्या निखिलभूषणम् ।
प्रदातुकामा तेभ्योऽहं निद्रापरवशेव च ॥

४६. भागेन दक्षिणेनाशु लुठन्ती ह्यभवं तदा ।
मां प्रबुद्धेति वै ज्ञात्वा कारणेनैव तेन ते ॥

४७. पलायिता ययुर्भीताः मा ते भूदत्र संशयः ।
तच्छ्रुत्वा वचनं तस्याः कुपितः कृष्णसर्पवत् ॥

४८. व्याजहार शुभं वाक्यं भार्यां हेमाङ्गनां तदा ।
स्वामिनः स्वं हरिष्यन्ति स्वातन्त्र्यं किं तवास्ति हि ॥

४९. स्वातन्त्र्येण हतं सर्वं स्वातन्त्र्यात् नरकं ध्रुवम् ।
स्वातन्त्र्यात् देहचलनं कृतं मूढे! त्वया तदा ॥

---

வள்போலே நடித்துக்கொண்டு வலதுபுறமாகச் சடக்கெனத் திரும்பிப் படுத்தேன். அக்காரணத்தாலேயே நான் விழித்துக்கொண்டதாக நினைத்து பயந்து அவர்கள் ஓடிவிட்டார்கள். ஆகையால் தேவரீர் இதை வேறுவிதமாக ஐயமுறலாகாது" என்று கூறினாள். அவளுடைய இந்த வார்த்தையைக் கேட்ட உறங்காவில்லி கருநாகம் போலே கோபங்கொண்டு மனைவியான பொன்னுய்ச்சியைப் பார்த்துப் பின்வரும் மங்களமான வார்த்தையை அப்போதே கூறினார்—"ஸ்வாமிகளான ஸ்ரீ வைஷ்ணவர்கள் தங்கள் உடைமையான இந்த ஆபரணங்களைத் தாங்களே (உன்னைப்புரட்டி) எடுத்துக்கொண்டிருப்பார்களே. உனக்கு அதில் ஸ்வாதந்த்ரியம் ஏது? நீ ஸ்வாதந்த்ரியம் காட்டினதாலேயே அவர்களுடைய விருப்பமும், நமது பாக்யமும் அழிந்துவிட்டதே. ஸ்வாதந்த்ரியத்தாலே நரகமன்றோ திண்ணமாகக் கிடைக்கும் அறிவிலியே! நீ அப்போது ஸ்வாதந்த்ரியத்தாலேயன்றோ உடம்பைப் புரட்டினாய். அதனால்தானே அவர்கள் இடதுபுறமுள்ள ஆபரணங்க

५०. हित्वा समस्ताभरणं तेन ते वैष्णवा गताः।
यत्तदाभरणं व्यर्थं तवाङ्गे भूषितं ध्रुवम्॥

५१. वैष्णवाङ्गीकृतं सर्वं भूषणं सफलं भवेत्।
इत्येवमनुशास्यार्यस्तां तत्त्ववचनैस्तदा॥

५२. गुरुपादाम्बुजं ध्यायन् निद्रां लेभे महायशाः।
वैष्णवाः सर्ववृत्तान्तं तच्छ्रुत्वा तत्रसंभवम्॥

५३. गुरुपादाम्बुजं प्राप्य यतीन्द्राय न्यवेदयन्।
तन्निशम्य यतिश्रेष्ठः तैरेवोदीरितं वचः॥

५४. संप्रहृष्टस्ततस्सर्वान् वैष्णवानिदमब्रवीत्।
वस्त्रखण्डापहरणं केनचित्कुटिलात्मना॥

---

ளனைத்தையும் விட்டு ஓடிவிட்டார்கள். அந்த ஆபரணங்கள் உன் உடம்பில் வீணுகக் கிடக்கின்றன. வைஷ்ணவர்கள் ஏற்றுக்கொண்ட ஆபரணங்களே பயனுடையவை என்பது திண்ணம்.” என்று இவ்வண்ணமாக நல்வார்த்தைகளை அவளுக்கு உபதேஶித்துவிட்டு, பெருங்கீர்த்தியுடைய உறங்காவில்லி ஆசார்யரான எம்பெருமானரின் திருவடித் தாமரையைத் தியானித்துக்கொண்டு தூங்கத்தொடங்கினார். அந்த வைஷ்ணவர்களும் அங்கு நடந்த செய்தியனைத்தையும் கேட்டு, எம்பெருமானருடைய திருவடித் தாமரையை அணுகி அவரிடம் அதை விண்ணப்பித்தனர்.

## வைஷ்ணவ ஶிக்ஷணம்

53*-*59. அந்த வைஷ்ணவர்கள் கூறிய அவ்வார்த்தையைக்கேட்டு உகந்த யதிராஜர் அந்த வைஷ்ணவர்களனைவரையும் பார்த்து “வைஷ்ணவஶ்ரேஷ்டர்களே! எவனோவொரு வஞ்சகனுலே உங்கள் துணியில் ஒரு சிறு பகுதி அறியாமல் கிழிக்கப்பட்டபோது கலங்கிய நெஞ்சை

५५. कृतं तदपि चाज्ञानात् यूयं वैष्णवपुङ्गवाः ! ।
अवाच्यानि प्रभाषन्तो वचांसि कुटिलाशयाः ॥

५६. सुमहद्धोरसंकाशं कृतवन्तो युधं स्फुटम् ।
एतत्कार्येण तस्यासीन्न किञ्चिच्चित्तवैकृतिः ॥

५७. तस्या अपि विशेषेण तस्याश्चित्तं सुनिर्मलम् ।
युष्माभिरेव संदृष्टं ज्ञानमप्रतिमं तयोः ॥

५८. न जातिः कारणं लोके गुणाः कल्याणहेतवः ।
एवं बहुविधं तेभ्यः शास्त्रार्थमुपदिष्टवान् ॥

५९. तन्निशम्याथ ते सर्वे बभूवुर्लज्जिता भृशम् ।
प्रभातायां तु शर्वर्यां तस्यां लक्ष्मणदेशिकः ॥

---

யுடையவர்களாய், சொல்லத் தகாத வார்த்தைகளைச் சொல்லிக்கொண்டு மஹாகே₄ாரமான யுத்₃த₄த்தையே செய்தீர்கள் நீங்கள். நகைகளையே நீங்கள் திருடியபோதும் உறங்காவில்லிக்கோ, பெண்பிள்ளையான பொன்னுய்ச் சிக்கோ சிறிதுகூட மனக்கலக்கம் ஏற்படவில்லை. ஆகை யால் அவர்களுடைய நெஞ்சம் பரிஶுத்₃த₄மானது என்றும், ஜ்ஞாநம் ஒப்பற்றது என்றும் நீங்களே கண்டீர்கள். உலகில் கு₃ணங்களே மங்க₃ளத்தையளிப்பவை. ஜாதி மங்க₃ளகாரணமன்று." என்று அருளினர். இவ்வண்ண மாகப் பல ஶாஸ்த்ரார்த்த₂ங்களை அவர்களுக்கு உபதே₃ஶித் தருளினர். அதைக்கேட்டு, அவர்களனைவரும் மிகவும் வெட்கமடைந்தனர்.

### உறங்காவில்லியின் வைபவம்

59*-63. அன்று இரவு கழிந்து விடிந்தவுடன் பெருங் கீர்த்தியுடைய எம்பெருமானர் உறங்காவில்லியை அழைத்து, நடந்தது அனைத்தையும் அவரிடம் கூறி, ஆப₄ரணங்களை அவரிடம் உகப்போடு கொடுத்தார்.

६०. आनयित्वा धनुर्दासं वृत्तान्तं तं निवेद्य सः।
भूषणानि ददौ तस्मै मुदा तानि महायशाः॥

६१. परतन्त्रः स तत्सर्वं प्रतिगृह्याज्ञया गुरोः।
नित्यकैङ्कर्यनिरतस्तस्थौ तत्रैव सर्वदा॥

६२. एवं बहुविधं तस्य धनुर्दासस्य विद्यते।
विचित्रं तच्चरित्रं तु केन वर्णयितुं क्षमम्॥

६३. यतिक्षोणीनाथः कनकतटिनीमज्जनमुखा-
द्यहःकृत्यं कृत्वा करधृतधनुर्दास(?) असकृत्।
असूयाग्रस्तानामपि विशदयन् तच्छुभगुणान्
धनुर्दासं व्यासाद्यधिकृतमतिं स व्यतनुत॥

इति प्रपन्नामृते रामानुजचरित्रे
धनुर्दासहेमाङ्गनयोर्गुणकृतोत्कर्षप्रकटनं नाम एकचत्वारिंशोऽध्यायः॥

---

ஆசார்யபரதந்த்ரரான உறங்காவில்லியும் ஆசார்ய நியமனத்தாலே அவ்வாப₄ரணங்களைப் பெற்றுக்கொண்டு, தினந்தோறும் அவருக்குக் கைங்கர்யம் செய்வதில் ஈடுபட்டவராய், ஸ்ரீரங்க₃த்திலேயே எப்போதும் வாழ்ந்துவந்தார். இவ்வண்ணமாக உறங்காவில்லியின் ஆஶ்சர்யமான சரித்திரங்கள் பலவித₄மாக உள்ளன. அவருடைய சரித்திரத்தை எவரால் வர்ணிக்கமுடியும்? அந்த எதிகட்கிறைவர் காவேரியில் தீர்த்த₂மாடுவது முதலான கர்மாநுஷ்ட₂ானங்களைச் செய்தபின் பலமுறை தம் திருக்கையாலே உறங்காவில்லியைப்பற்றிக் கொண்டும், அதைப் பார்த்துப் பொருமைப்படுபவர்களுக்கு அவருடைய நற்குணங்களைத் தெளிவுபடுத்திக்கொண்டும், உறங்காவில்லியை வியாஸர் முதலான அதி₄காரிபுருஷர்களை ஒத்த அறிவுடையவர் என்று உலகிற்குக் காட்டினர்.

ஸ்ரீ ப்ரபந்நாம்ருதத்தில் ஸ்ரீராமாநுஜ சரித்திரத்தில்,
உறங்காவில்லி பொன்னுய்ச்சி தம்பதிகளின் நற்குணச்சிறப்பை
வெளியிடுதலாகிற நாற்பத்தொன்றும் அத்தியாயம் நிறைவுற்றது.

द्विचत्वारिंशोऽध्यायः ॥

१. मारनेराख्यपूर्णस्य महापूर्णो महायशाः ।
ब्रह्ममेधेन संस्कारं चकार गुरुशासनात् ॥

२. तच्छ्रुत्वा वैष्णवास्सर्वे निनिन्दुः पूर्णदेशिकम् ।
शूद्रसंस्कारकारीति तच्छुश्रूषणकृत् सदा ॥

३. ब्राह्मणेषु कथं योग्यो वर्णधर्मव्यतिक्रमः ।
अतुलायी ततः श्रुत्वा संप्राप्तं दुर्यशः पितुः ॥

४. ततोऽधिकतमं सम्यक् राङ्गिण्यापाद्य दुर्यशः ।
सम्यक् श्रीपाणियोगीन्द्रभक्षणात् ब्रह्मणीश्वरे ॥

५. तीर्थप्रसादग्रहणं वन्दनं च ततो हरेः ।
नैव कर्तव्यमित्येवं वैष्णवानाह निर्भया ॥

---

## நாற்பத்திரண்டாம் அத்தியாயம்

# ஆசார்யரே மோக்ஷோபாயம்

### பெரியநம்பிக்கு அபவாதமும், அத்துழாயின் உறுதியும்

1-6. ஆளவந்தாருடைய ஶிஷ்யரான மாறனேர் நம்பிக்கு ஆசார்யநியமனத்தாலே பெரும்புகழாளரான பெரியநம்பி ப்₃ரஹ்மமேத₄ விதி₄யினாலே ஸம்ஸ்காரம் செய்தார். அதைக் கேட்ட வைஷ்ணவர்களனைவரும் 'ஶூத்₃ர ஸம்ஸ்காரம் செய்தவர்' 'ஶூத்₃ரருக்கு எப்போதும் கைங்கர்யம்செய்தவர்' 'வர்ணத₄ர்மங்களை மீறியது ப்₃ராஹ்மணர்களுக்கு எப்படித் தகும்?' என்று பெரியநம்பியை நிந்தி₃த்தனர். தன் தந்தைக்கு அபகீர்த்தி ஏற்பட்டதைக் கேள்வியுற்ற நம்பி குமாரத்தியான அத்துழாய் ப₄யமில்லாதவளாய், அந்த வைஷ்ணவர்களைப் பார்த்து, "பரப்₃ரஹ்மமும் ஈஶ்வரனுமான பெரியபெருமாள் (பஞ்சமகுலத்தில் பிறந்த) வீணையைக் கையிற்கொண்ட திருப்பாணாழ்வாரையே உடம்போடு விழுங்கிவிட்டதினாலே என் தந்தையைக் காட்டிலும் அவருக்கே அதி₄கமான அபகீர்த்தி உள்ளதன்றோ" என்று எடுத்துக்காட்டி "அந்தப் பெருமாளுடைய தீர்த்த₃ப்ரஸாத₃ங்களை எடுத்துக்கொள்ளாதீர்கள். அவரை ஒருபோதும் வணங்காதீர்கள்" என்று கூறினாள்.

६. श्रीपराङ्कुशपादाभ्यां शप्ता हरिपरायणा।
गुरुशुश्रूषणरता सा तस्थौ पितुरन्तिके॥

७. तच्छ्रुत्वा लक्ष्मणाचार्यो देशिकं प्राप्य सत्वरम्।
पूर्णार्यं प्रणिपत्याह वचस्सानुनयं तदा॥

८. मयि कुर्वति संस्कारविनियुक्तानिमान् जनान्।
कथं च तेन मार्गेण वर्णधर्मविरोधिना॥

९. भवानपोह्य तन्मार्गं मार्गान्तरमुपाश्रितः।
तच्छ्रुत्वा तमुवाचेदं पूर्णार्यो यतिपुङ्गवम्॥

१०. सामान्यधर्मं लोकेषु प्रवर्तयितुमादरात्।
इक्ष्वाकुवंशसंभूताद्राघवात्किमहं महान्॥

---

(இதைக் கேட்ட தந்தையாரால்) நம்மாழ்வாருடைய திருவடிகளின்மேல் ஆணையிட்டு இப்படிப் பேசாமலிருக்கும்படி நியமிக்கப்பெற்றவளாய், பரமவிஷ்ணுப₄க்தையான அவ்வத்துழாய் தன் தந்தையான பெரியநம்பிக்குக் கைங்கர்யம் செய்துகொண்டு அவருக்கு அருகிலேயே வாழ்ந்துவந்தாள்.

## பெரியநம்பி உடையவருக்கு த₄ர்ம ஸூக்ஷ்மத்தை உணர்த்துதல்

7-*14. இவ்விஷயத்தைக் கேள்விப்பட்ட ஸ்ரீராமாநுஜர் தம் ஆசார்யரான பெரியநம்பியை விரைவில் அடைந்து வணங்கி, அப்போதே பணிவோடு பின்வருமாறு கூறினர்— "அடியேன் உலகத்திலுள்ள ஜனங்களை வர்ணாஶ்ரமத₄ர்மங்களோடு கூடியவராகச் செய்து வருகையில், வர்ணத₄ர்மத்துக்கு முரண்பட்ட வேறுவழியைப் பின்பற்றி, வர்ணத₄ர்மங்களை நீர் அழிப்பது பொருந்துமோ?"; இவ்வண்ணம் கேட்கப்பட்ட பெரியநம்பி யதிராஜரைப் பார்த்துப் பின்வருமாறு கூறினர்—"உலகில் ஸாமாந்ய த₄ர்மங்களை ஆர்வத்தோடு

११. अयं पूर्णो निकृष्टः किं गृध्रराजात् जटायुषः।
सामान्यधर्मनिरताद्धर्मपुत्रादहं महान्॥
१२. किमयं विदुरात्पूर्णो निकृष्टः किं यतीश्वर!।
न शूद्रा भगवद्भक्ता ते वै भागवता इति॥
१३. न कर्मबन्धनं जन्म वैष्णवानां च विद्यते।
स शूद्रो नैव शूद्रः स्यादिति श्रुत्यर्थमेव च॥
१४. प्रतिगृह्य गुरोर्वाक्यं सन्तुष्टोऽभूत् यतीश्वरः।
ततः कदाचिद्योगीन्द्रः कश्चिन्मूकं प्रगृह्य च॥

---

பரவச்செய்வதற்காக இக்ஷ்வாகுவம்ஶத்தில் அவதரித்த ராமபிரானைக் காட்டிலும் நான் பெரியவனோ? (அவரால் ஸம்ஸ்காரம் செய்விக்கப்பெற்ற பறவை இனத்தவரான) கழுகரசரான ஜடாயுவைக் காட்டிலும் இந்த மாறனேர் நம்பி தாழ்ந்தவரோ? ஸாமாந்ய த₄ர்மங்களில் ஈடுபட்ட த₄ர்மபுத்திரரைக் காட்டிலும் நான் பெரியவனோ? (அவரால் ஸம்ஸ்காரம் செய்விக்கப்பெற்ற ஶூத்₃ர ஜாதியைச் சேர்ந்த) விது₃ரரைக் காட்டிலும் இந்த நம்பி தாழ்ந்தவரோ? யதிராஜரே! ப₄க₃வத்₃ ப₄க்தியுடையவர்கள் (ஶூத்₃ர ஜாதியில் பிறந்த போதிலும்) ஶூத்₃ரராகமாட்டார்கள்; அவர்கள் பா₄க₃வதர்கள் என்றே வழங்கத்தக்கவர்கள்; வைஷ்ணவர்களுக்குக் கர்மம் காரணமாக ஏற்பட்ட ஜாதி கிடையாது; ப₄க்தன் ஶூத்₃ர ஜாதியில் பிறந்த போதிலும் ஶூத்₃ரனாக மாட்டான் — என்பது வேத₃ப் பொருளேயாகும்". இவ்வண்ணமாக ஆசார்யரான பெரியநம்பி உரைத்த வார்த்தையைக் கேட்டு, அதை ஏற்று, யதிராஜர் மிகவும் உகந்தார்.

## ஊமைக்குச் செய்த உபதே₃ஶம்

14*-*19. அதற்குப் பின் ஒரு நாள் எதிகட்கிறைவர் ஓர் ஊமையைப் பார்த்து, அவனை மட₂த்தினுள் அழைத்

१५. बद्ध्वा कपाटं सुदृढं गृहान्ते संप्रवेश्य तम्।
स्पृष्ट्वा स्वदेहं मूकाय प्रदर्श्योवाच संज्ञया॥

१६. इममेव हि जानीहि शरणं गुरुविग्रहम्।
तदेव रक्षकमिति मूकः सम्यगमन्यत॥

१७. कपाटरन्ध्रमार्गेण कूरनाथो विलोक्य तत्।
अत्याश्चर्ययुतो धीमान् दुःखितो वाक्यमब्रवीत्॥

१८. कुले महति संजातः षट्शास्त्राण्यप्यधीतवान्।
अहं स्वां यदि मूको वै मह्यं दास्यति योगिराट्॥

१९. इदं रहस्यमित्युक्त्वा मोहितोऽभून्महामतिः।
यतीन्द्रः संशयं तेषां हृदिस्थमपि नोदयन्॥

---

துச் சென்று, கதவையடைத்துக்கொண்டு, தம் திரு மேனியை ஊமைக்குச் சுட்டிக்காட்டி "இந்த ஆசார்ய விக்₃ரஹத்தையே நீ உபாயமாக அறிவாய். அதுவே உனக்கு ரக்ஷகம்" என்று சைகையாலே அவனுக்கு விளக்கினார். ஊமையும் இதை நன்கு உணர்ந்தான். கதவிலுள்ள இடுக்கின் வழியாக இதைக் கண்ட பேரறிவாளரான கூரத்தாழ்வான் மிகவும் வியப்புற்றவராய் "பெரிய குலத்திலே பிறந்து, வேதா₃ங்க₃ங்கள் ஆறையும் கற்றுக்கெட்டேனே! ஊமையாய்ப் பிறந்திருந்தால் இந்த ரஹஸ்யத்தை யதிராஜர் எனக்கும் உபதே₃ஶித்திருப்பாரே" என்று துன்பத்தோடு வார்த்தை சொல்லி மயங்கிவிழுந்தார்.

## திருக்கோஷ்டியூர் நம்பி மூலம் சரமோபாயத்தை உணர்த்துதல்

19*-26 'ஆசார்யருடைய திருமேனியே மோக்ஷோபாயமாகமுடியுமோ?' என்று ஶிஷ்யர்களுடைய நெஞ்சில் எழக்கூடிய ஐயத்தைப் போக்கடிப்பதற்காகக் கூரத்

२०. कूरेशादिकशिष्यैस्तु गत्वा श्रीरङ्गधामतः ।
गोष्ठीपुरेऽन्तस्सदने दृढबद्धकपाटके ॥

२१. ध्यायन्तं स्वगुरुं धीरं गोष्ठीपूर्णं विलोक्य तम् ।
यतीन्द्रः प्रणिपत्याह बद्धाञ्जलिपुटस्तदा ॥

२२. को मन्त्रः किं च ते ध्यानं ब्रूहि मे गुरुपुङ्गव ! ।
एवं ब्रुवति योगीन्द्रे गोष्ठीपूर्णोऽब्रवीदिदम् ॥

२३. जपतो यामुनार्यस्य कावेर्यामघमर्षणम् ।
कूर्मपृष्ठमिवाभाति पृष्ठं तस्य यतीश्वर ! ॥

२४. तदेव हि मम ध्यानं मन्त्रो यामुननाम च ।
तस्मात् गुरुशरीरं च ध्येयं जप्यं च नाम तत् ॥

---

தாழ்வான் முதலிய ஶிஷ்யர்களை அழைத்துக்கொண்டு திருவரங்கப் பெரு நகரிலிருந்து திருக்கோஷ்டியூரை அடைந்து, அங்கு தம் திருமாளிகைக்குள் கதவை உறுதியாகத் தாளிட்டுக்கொண்டு த்₄யானம் செய்து கொண்டிருந்த பேரறிவாளரான தம் ஆசார்யராம் திருக் கோட்டியூர் நம்பியைக் கண்டு அவரை அப்போதே கை கூப்பி வணங்கிய யதிராஜர் "ஆசார்ய ஶ்ரேஷ்ட₂ரே ! நீர் ஜபிக்கும் மந்த்ரம் என்ன? நீர் த்₄யானிக்கும் விஷயம் எது? அடியேனுக்குக் கூறுவீராக" என்று கேட்டார். இப்படி யதிராஜர் கேட்டவுடன் "யதிராஜரே ! எனது ஆசார்யரான யாமுநாசார்யர் காவேரியில் (கவிழ்ந்து மூழ்கி நின்று) அக₄மர்ஷண ஜபம் செய்யும்போது அவருடைய முதுகு ஆமையின் முதுகு போலே விளங்குகிறது. அதுவே என்னுடைய த்₄யானத்திற்கு விஷயமாய் உள்ளது. நான் ஜபிக்கும் மந்த்ரமும் யாமுநருடைய திருநாமமே. ஆகை யால் ஆசார்யருடைய திருமேனியே த்₄யானிக்கத்தக்கது. அவருடைய திருநாமமே ஜபிக்கத்தக்கது. சிறுவர், ஊமைகள், அறிவிலிகள், குருடர்கள், நொண்டிகள், செவிடர்கள் ஆகிய

२५. बालमूकजडान्धाश्च पङ्गवो बधिरास्तथा ।
सदाचार्येण संदृष्टा गमिष्यन्ति परां गतिम् ॥

२६. ध्यानमूलं गुरोर्मूर्तिः पूजामूलं गुरोः पदम् ।
मन्त्रमूलं गुरोर्नाम मोक्षमूलं गुरोः कृपा ॥

२७. इत्युक्तेन प्रकारेण बालमूकजडादिकान् ।
सर्वान् संशयनिर्मुक्तान् कुर्वन् लक्ष्मणदेशिकः ॥

२८. कूरेशदाशरथ्यादिशिष्येभ्यः प्रतिपादयन् ।
श्रीभाष्यार्थं रङ्गधाम्नि न्यवसत् स महायशाः ॥

---

அனைவரும் ஒரு நல்ல ஆசார்யனால் கடாக்ஷிக்கப் பெற்றே பரமபத₃ம் அடைகிறார்கள். த்₄யானத்திற்கு விஷயமா யிருப்பது ஆசார்யரின் திருமேனியே. ஆராத₄னத்திற்கு விஷயமாயிருப்பது ஆசார்யரின் திருவடியே. ஜபிப்பதற்கு விஷயமாயிருப்பது ஆசார்யரின் திருநாமமே. மோக்ஷத் திற்கு ஆதி₃காரணமாயிருப்பது ஆசார்யரின் கருணையே'' என்று திருக்கோட்டியூர் நம்பி அருளினார்.

### சரமோபாய உபதே₃ஶம்

27-29. இவ்வத்தியாயத்தில் சொன்ன முறையில் சிறுவர்கள், ஊமைகள், அறிவிலிகள் முதலான அனைவர்க்கும் ஐயங்களை அறுத்துக்கொண்டு, ஸ்ரீராமாநுஜர் கூரத்தாழ் வான், முதலியாண்டான் முதலிய ஶிஷ்யர்களுக்கு ஸ்ரீப₄ாஷ் யார்த்த₂ங்களை அறிவித்துக்கொண்டு திருவரங்கப் பெருநக ரில் பெரும்புகழாளராய் வாழ்ந்து வந்தார். "ஆசார்யரின் திருநாமமே ஜபிக்கத்தக்கது; வேறெதுவுமில்லை. த்₄யா னிக்கத்தக்கது அவருடைய திருமேனியே. அதுபோலவே உபாஸிக்கத்தக்க விஷ்ணுவின் கலங்காப் பெருநகரான பரமபத₃த்திற்கும் அவ்வாசார்யரே எல்லாப்படியாலும் உபாயமாவார்'' முதலான திருக்கோட்டியூர்நம்பி அருளிய

२९. जप्यं नाम गुरोर्न चान्यदनिशं स्मर्यं च तद्वै वपुः
तद्वृत्तोऽयमुपास्यनित्यवसतेर्हेतुर्गुरुस्सर्वथा।
इत्याद्यर्थचयं यतिक्षितिपतिः स्वस्याश्रितानां मुदा
गोष्ठीपूर्णसमीरितं प्रवितरन् रङ्गे विभात्यन्वहम् ॥

इति श्रीप्रपन्नामृते रामानुजचरित्रे गुरोर्मोक्षोपायत्वप्रकाशनं नाम द्विचत्वारिंशोऽध्यायः ॥

॥ त्रिचत्वारिंशोऽध्यायः ॥

१. ततो रङ्गेश्वरः श्रीमान् यतीन्द्रे लोकरक्षके।
निवृत्तलक्ष्मीकलहो जगन्मात्रा जगत्पतिः ॥

२. निवृत्तलोकव्यापारः रममाणोऽनिशं तया।
सुखं सुष्वाप भगवान् कञ्चित्कालं जगत्प्रभुः ॥

---

அரும்பொருள்களைத் தம்மையடைந்த சீடர்களுக்கு தி₃னந்தோறும் உபதே₃ஶித்துக்கொண்டு திருவரங்கத்திலே வாழ்ந்து வந்தார் எதிகட்கிறைவர்.

ஸ்ரீப்ரபந்நாம்ருதத்தில் ஸ்ரீராமாநுஜ சரித்திரத்தில் 'ஆசார்யரே மோக்ஷோபாயம்' என்பதை வெளியிடுதலாகிற நாற்பத்திரண்டாம் அத்தியாயம் நிறைவுற்றது.

## நாற்பத்துமூன்றும் அத்தியாயம்

## க்ருமிகண்டன் உண்டான காரணம்

### எம்பெருமானார் கலியைக் கெடுத்தல்

1-20. அதற்குப்பின் யதிராஜர் லோகங்களுக்கெல்லாம் ரக்ஷகரானவளவில், சேதனரக்ஷணவிஷயமாகப் பெரியபிராட்டியாரோடு எப்போதும் ஏற்படும் பிணக்கம் நீங்கப்பெற்ற லோகநாத₂ராய், ஸ்ரீய:பதியான பெரிய பெருமாள் லோகரக்ஷண வ்யாபாரத்தினின்றும் நீங்கிய

३. तस्मादवाप्तसकलकामः श्रीवल्लभस्तदा।
आत्मभारं विनिक्षिप्य दक्षे पुत्रे पिता यथा ॥
४. तं पूर्णकामं विदधे यतीन्द्रः श्रीसखं तथा।
लोकसंरक्षणे नाथः सुपुत्रः पितरं यथा॥
५. तदन्तरं समालभ्य यतीन्द्रो लोकरक्षकः।
मन्त्ररत्नधनं सम्यगतिगोप्यं च मुक्तिदम् ॥
६. कृपया सर्वलोकानां भूरिदानं तदाऽकरोत्।
चतुस्सप्ततिपीठस्था देशिकाः सुमहौजसः ॥
७. तेषां शिष्याश्च तच्छिष्याः प्रशिष्याश्चापरे तथा।
यतीन्द्रशासनात्सर्वे गत्वा दश दिशोऽञ्जसा ॥

---

வராய், எல்லா விருப்பங்களும் நிறைவேறப் பெற்றவ ராய், எப்போதும் பெரியபிராட்டியாரோடு இன்புறுகின்ற வராய், தந்தையானவன் தன்னுடைய பொறுப்பை ஸமர்த்தனான பிள்ளையிடம் ஒப்படைத்து ஓய்வுகொள்ளு வதுபோலே சிலகாலம் ஸுகமாக உறங்கினார். ஸ்ரீய:பதி யான பெரியபெருமாளை நல்ல புத்ரன் தந்தையைப்போலே, லோகரக்ஷண விஷயத்தில் விருப்பம் நிறைவேறினவராக ஆக்கிக்கொண்டு உபயவிபூதி ஸாம்ராஜ்யம் பெற்ற யதி ராஜர் விளங்கிநின்றார். அதற்குப்பின் லோகரக்ஷகரான யதிராஜர் பரமரஹஸ்யமாய் மோக்ஷமளிப்பதான மந்த்ர ரத்னமாகிற (த்வயம் எனும்) பெருஞ்செல்வத்தை ஆசார் யரிடமிருந்து பெற்றவராய், அதை எல்லா உலகுக்கும் நிர்ஹேதுக கருணையாலே பெருங்கொடையாக வழங்கினார். பெரியதேஜஸ்ஸையுடைய ஸ்ரீராமாநுஜ ஶிஷ்யர்களான எழுபத்துநான்கு ஸிம்ஹாஸனாதிபதிகளான ஆசார்யர்க ளும், அவர்களுடைய ஶிஷ்யர்களும், அவர்களுடைய ஶிஷ்யர்களும், ப்ரஶிஷ்யர்களுமான மற்றும் பலர் யதிராஜ ரின் நியமனத்தாலே பத்து திக்குகளிலும் நன்கு ஸஞ்சாரம்

८. बालमूकजडान्धेभ्यो जनेभ्यो मन्त्रमुत्तमम् ।
रामानुजाख्यमनघं अतिगोप्यं सुखप्रदम् ॥

९. सर्वेभ्यश्चोपदिश्याशु मुक्तिदं सुलभं महत् ॥
श्रीवैष्णवमयं चक्रुः जगत्सर्वं तदाऽञ्जसा ॥

१०. दर्शनस्यापकेऽत्यन्तं विष्णोः परमवैदिके ।
विद्यमाने यतिश्रेष्ठे सर्वं विष्णुमयं जगत् ॥

११. इति यन्नैगमं वाक्यं तत्सत्यमभवत्तदा ।
तैरेवं शिक्षितास्सर्वे ब्राह्मणा वेदपारगाः ॥

१२. सर्वधर्मरताः शान्ताः वेदान्तद्वयपारगाः ।
कृत्वा सर्वाणि कर्माणि कैङ्कर्यविधिना तथा ॥

---

செய்து, மிக ரஹஸ்யமானதாய், இம்மையிலும் மேலான ஸுகத்தையளிப்பதாய், மறுமையில் முக்தியையே அளிப்ப தாய், மிக எளியதாய், மிகச் சிறந்ததான ராமாநுஜர் என்னும் குற்றமற்ற உத்தமமான மந்திரத்தைச் சிறுவர், ஊமைகள், அறிவிலிகள், குருடர்கள் முதலான ஜனங்களுக்கும் விரை வில் உபதேசித்து, உலகனைத்தையும் ஸ்ரீவைஷ்ணவர்கள் நிறைந்ததாக அக்காலத்தில் விளங்கச்செய்தனர். பரம வைதிகரான யதிராஜர் விஷ்ணுவின் தர்ஶனத்தை மிகவும் நிலைநிறுத்துபவராக ஆன அக்காலத்தில் 'இவ்வுலகம் விஷ்ணுமயமாய் (விஷ்ணுவால் வியாபிக்கப்பட்டதாய்) இருப்பது' என்னும் வேதவாக்யமானது உண்மையான தாக ஆயிற்று. வேதத்தைக் கரைகண்ட அந்தணர்கள் அனைவரும் இவ்வண்ணம் த்வயோபதேசம் பெற்றவர்க ளாய், எல்லா வைஷ்ணவ தர்மங்களிலும் ஈடுபட்டவர்க ளாய், புலனடக்கம் உள்ளவர்களாய், உபயவேதாந்தமும் கரைகண்டவர்களாய், எல்லா வைதிக கர்மங்களையும் பல ஸங்கத்தைக் கைவிட்டு, கைங்கர்ய புத்தியோடு செய்வ தன்மூலம் விஷ்ணுவின் பரமபதத்தையடைந்தார்கள்.

१३. फलसंगपरित्यागात् ययुर्विष्णोः परं पदम्।
एवं हि क्षत्रिया वैश्याः स्त्रियः शूद्रास्तथेतरे॥

१४. स्वधर्मनिष्ठास्ते सर्वे द्राविडाम्नायपारगाः।
श्रीरामानुजसंबन्धात् ययुर्विष्णोः परं पदम्॥

१५. उद्धृत्य नरकात् सर्वान् सहसा स्वकुलोद्भवान्।
'नृत्यन्ति पितरस्सर्वे प्रनृत्यन्ति पितामहाः॥

१६. वैष्णवो नः कुले जातः स नः सन्तारयिष्यति।'
इत्युक्तेन प्रकारेण पितृलोकनिवासिनः॥

१७. तेनैव हेतुना सर्वे ह्यगमन् वैष्णवं पदम्।
संप्रशासति धर्मेण राज्यं रुक्माङ्गदे पुरा॥

१८. एकादशीव्रतेनैव निरस्ताखिलकल्मषाः।
वैकुण्ठमगमन् सर्वे श्वेतद्वीपं यथा जनाः॥

---

இவ்வண்ணமே க்ஷத்ரியர்களும், வைஶ்யர்களும், ஸ்த்ரீகளும், ஶூத்₃ரர்களும், சண்டா₃ளர்களுங்கூட தத்தம் த₄ர்மங்களில் ஈடுபட்டவர்களாய், அனைவருமே தமிழ் வேத₃ங்களைக் கரைகண்டவர்களாய், எம்பெருமானர் ஸம்ப₃ந்த₄த்தாலே, தங்கள் குலத்தில் உதித்த பித்ருக்களையும் சடக்கென ஸம்ஸார நரகத்திலிருந்து கரையேற்றிக் கொண்டு விஷ்ணுவின் பரமபத₃த்தை அடைந்தார்கள். "'வைஷ்ணவன் நம் குலத்தில் பிறந்துவிட்டான். அவன் நம்மைக் கரையேற்றிவிடுவான்' என்னும் ஆனந்த₃த்தாலே எல்லாப் பித்ருக்களும் நடனமாடுகிறார்கள்; பிதாமஹர்கள் பெருங்கூத்தாடுகிறார்கள்" என்று த₄ர்மஶாஸ்த்ரங்களில் சொன்ன முறையில் பித்ருலோகத்திலிருக்கும் அனைவரும் இக்காரணத்தாலேயே பரமபத₃ம் அடைந்தார்கள். ருக்மாங்க₃த₃ ராஜா முற்காலத்தில் அறம் வழுவாது அரசாட்சி புரிந்தபோது அவனது ராஜ்யத்திலிருந்த அனைவரும்

१९. तथैव लक्ष्मणार्यस्य संबन्धेनैव मानवाः ।
प्रपत्तिधर्मनिरताः सर्वे श्रीवैष्णवोत्तमाः ॥

२०. विरजोत्तरतीरस्थं तद्विष्णोः परमं पदम् ।
अवापुरञ्जसा धीराः कुलकोटिसमावृताः ॥

२१. भूम्यां रामानुजेऽत्यन्तवैभवे लोकदेशिके ।
विद्यमाने यतिश्रेष्ठे सर्वलोकैकरक्षके ॥

२२. कलिर्नष्टोऽभवच्छीघ्रं निर्व्यापारो यमस्तदा ।
अतो हि पोलिकेत्यस्य पद्यस्य महतस्तदा ॥

---

ஏகாத$_3$ஶீவ்ரதத்தை அநுஷ்டி$_2$த்து, எப்படி ஶ்வேத த்$_3$வீபமாகிற கார்யவைகுண்ட$_2$த்தையடைந்தனரோ, அது போலவே எல்லா மனிதர்களும் ஸ்ரீராமாநுஜ ஸம்ப$_3$ந்த$_4$த் தாலே ப்ரபத்தி த$_4$ர்மத்தில் ஈடுபட்டு, அனைவரும ஸ்ரீவைஷ்ணவோத்தமர்களாகி, பெரிய ஜ்ஞானிகளாய், கோடிக்கணக்கான பித்ருக்களோடு கூடினவர்களாய், விரஜைக்கு அக்கரையிலுள்ள விஷ்ணுவின் பரமபத$_2$த் தையே அடைந்துவிட்டார்கள்.

## தேவர்களின் பிரார்த்தனை

21-27. மஹா வைப$_4$வமுடையவராய், ஜக$_2$த$_3$ாசார்ய ராய், எல்லாவுலகங்களையும் ரக்ஷிப்பவராக யதிராஜரான ராமாநுஜர் இங்கிலவுலகில் எழுந்தருளியிருக்கும்போது விரைவிலேயே கலி அழிந்து போயிற்று. யமனும அப்போது செயலிழந்தவனுனன். ஆகையினுலே,

"பொலிக பொலிக பொலிக போயிற்று வல்லுயிர்ச்சாபம்
நலியும் நரகமும் நைந்த நமனுக்கிங்கு யாதொன்றுமில்லை
கலியும் கெடும் கண்டுகொண்மின் கடல்வண்ணன் பூதங்கள்
மலியப்புகுந்து இசைபாடி ஆடி உழிதரக்கண்டோம்"[மண்மேல்
[திருவாய் 5-2-1]

२३. अर्थो बभूव सुस्पष्टः सर्वेषामपि भूतले।
तं दृष्ट्वा भारतं वर्षं श्वेतद्वीपमिव स्थितम्॥

२४. महाश्चर्यसमायुक्तः चिन्ताशोकपरायणः।
यमोऽभ्येत्याञ्जसा ब्रह्मलोकमिन्द्रादिभिस्सह॥

२५. सर्वं विज्ञापयामास ब्रह्मणे तद्विचेष्टितम्।
यमेन प्रार्थितस्सम्यक् ब्रह्मा त्रिभुवनेश्वरः॥

२६. ईशानादियुतो धीमान् रङ्गक्षेत्रं ययौ जवात्।
निवृत्तलोकव्यापारं लक्ष्मीपरवशं हरिम्॥

२७. सम्यक् प्रबोधयामासुः ब्रह्मेशानादयः सुराः।
ते सर्वे वन्दिनो भूत्वा यमेन प्रार्थितास्तदा॥

---

என்று நம்மாழ்வார் அருளியது எம்பெருமானார் எழுந்தருளியிருக்கும் நல்லடிக்காலத்தைப் பற்றியே என்பது இவ்வுலகில் உள்ளாரனைவருக்கும் மிகத் தெளிவாயிற்று. இந்த ப₄ாரதவர்ஷமானது ஶ்வேத த்₃வீபத்தைப் போலானதைப் பார்த்துப் பேராச்சர்யமடைந்தவனாய், கவலையும் வருத்தமும் நிறைந்தவனான யமன், இந்திரன் முதலான மற்ற தே₃வர்களோடுகூட ப்₃ரஹ்மலோகத்தையடைந்து எம்பெருமானாரால் செய்யப்பட்ட காரியத்தை ப்₃ரஹ்மாவிடம் விண்ணப்பித்தான். மூவுலகுக்கும் அதி₄பதியாய் அறிவாளியான பிரமனும் அவ்வண்ணம் யமனால் நன்கு பிரார்த்தி₂க்கப்பட்டவராய், சிவன் முதலான தே₃வர்களோடு கூடியவராய், விரைவில் ஸ்ரீரங்க₃ க்ஷேத்ரத்தையடைந்தார். லோகரக்ஷணத்தினின்றும் மீண்டு பெரிய பிராட்டியாரிடம் ஈடுபட்டு பே₄ாக₃த்தில் அழுந்தியிருக்கும் பெரியபெருமாளை—யமனால் பிரார்த்தி₂க்கப்பட்ட பிரமன், சிவன் முதலான தே₃வர்கள் அனைவரும் வணங்கியவர்களாய் நன்கு திருப்பள்ளியுணர்த்தினார்கள்.

२८. ततः प्रबोधितो देवैर्भगवान् भक्तवत्सलः ।
तदङ्गीकृत्य देवानां वचनं सम्मतं परम् ॥

२९. यतीन्द्राद्भुतसामर्थ्यदर्शनौत्सुक्यहेतुना ।
सविस्मयो जगत्सर्वमपश्यत्पद्मलोचनः ॥

३०. लक्ष्मणार्यस्य नैपुण्यादेकरूपमिव स्थितम् ।
शुद्धसत्त्वमयं शुद्धं विभूतिद्वयमीश्वरः ॥

३१. विलोक्य विस्मयाविष्टो मनस्येवमचिन्तयत् ।
लीलाभोगोपकरणं यद्विभूतिद्वयं हि मे ॥

३२. अनादिसिद्धमेतस्य नैकरूप्यं कदाचन ।
लीलाविभूतिरेषा मे ह्यनित्या त्रिगुणात्मिका ॥

---

## பெரியபெருமாளின் சிந்தனை

28-*53. ப$_4$க்தவாத்ஸல்யமுடைய பெரியபெருமாள் தே$_3$வர்களால் திருப்பள்ளியுணர்த்தப்பெற்றவராய், தமக்கு மிகவும் இனியதாய், சிறந்ததான தே$_3$வர்களின் வார்த்தையை ஏற்றுக்கொண்டு யதீந்த்$_3$ரருடைய ஆச்சர்யமான திறமையைக் காண்பதில் விருப்பங்கொண்டு உலகனைத்தையும் வியப்போடு தம் தாமரைத்தடங்கண்களாலே நோக்கினர். ஸ்ரீராமாநுஜருடைய திறமையாலே இந்த உப$_4$யவிபூ$_4$தியும் ஶுத்$_3$த$_4$ஸத்வமயமானதாய், பரிஶுத்$_3$த$_4$மானதாய், ஒருபடிப்பட்டதுபோலே இருப்பதைப் பார்த்து, ஸர்வேஶ்வரரான அவர் வியப்புற்றவராய், தம் திருவுள்ளத்தில் பின்வருமாறு சிந்திக்கலுற்றர் — எனது லீலைக்குக் கருவியாயிருக்கும் லீலாவிபூ$_4$தியும், போ$_4$க$_3$த்துக்குக் கருவியாயிருக்கும் நித்யவிபூ$_4$தியும் அநாதி$_3$காலமாயிருந்தபோதிலும் இவையிரண்டும் ஒருபடியாயாவது எப்போதும் கூடாது. இந்த எனது லீலாவிபூ$_4$தியானது அநித்யமாய் ஸத்வ ரஜஸ் தமோகு$_3$ணங்கள் நிறைந்ததாயிருப்பது. எனது போ$_4$க$_3$த்துக்குறுப்பான நித்யவிபூ$_4$தியோவெனில்

३३. नित्या भोगविभूतिस्तु शुद्धसत्त्वमयी सदा।
इदानीं लक्ष्मणार्यस्य नैपुण्यात् यतिभूपतेः॥

३४. तदेकमेव भात्यद्य विभूतिद्वयमद्भुतम्।
शुद्धसत्त्वमयं ह्येतत् जगदद्य विभात्यहो॥

३५. शास्त्रं गुरूत्तमं सत्यं अर्थं गूढतमं परम्।
उपदिश्याशु सर्वत्र भूरिदानं यतीश्वरः॥

३६. अपालयत् जगत्पूर्वं यन्मया चाप्यरक्षितम्।
मूकान्धबधिरादीनां सर्वेषां चापि पापिनाम्॥

३७. स्वसंबन्धबलेनैव प्रयच्छति परं पदम्॥
स्वाधीनसर्वलोकोऽद्य लक्ष्मणार्यो जगद्गुरुः॥

३८. तदीया एव ते सर्वे भूम्यां सर्वत्र जन्तवः।
दृश्यन्तेऽद्य परे व्योम्नि नित्यमुक्ता यथामलाः॥

---

எப்போதும் ஶுத்₃த₄ஸத்வமாயிருக்கும். இப்போது யதிராஜரான ராமாநுஜருடைய திறமையாலே இந்த இரண்டு விபூ₄திகளும் ஒன்றுபோலே காட்சியளிப்பது ஆச்சர்யம். இந்த லீலாவிபூ₄தியும் இப்போது ஶுத்₃த₄ஸத்வமயம்போல் விளங்குகிறதன்றோ. மிகச்சிறந்ததாய் உண்மையான ரஹஸ்யத்ரய ஶாஸ்த்ரத்தையும், மிக ரஹஸ்யமாய் மேலான அதன் அர்த்த₂த்தையும் யதிராஜர் விரைவில் எங்கும் உபதே₃ஶித்து என்னால் முன்னம் ரக்ஷிக்கப்படாத உலகனைத்தையும் இப்போது ரக்ஷித்துவிட்டார். ஊமை, குருடர், செவிடர் முதலான பாபிகள் அனைவருக்குங்கூடத் தம்முடைய ஸம்ப₃ந்த₄ ப₃லத்தினால் பரமபத₃த்தையும் கொடுக்கிறார். ஜக₃த்₃தா₃சார்யரான ஸ்ரீராமாநுஜர் இன்று உலகனைத்தையும் தம் வசப்படுத்தி நிற்கிறார். பரமபத₃த்தில் குற்றமற்ற நித்யமுக்தர்கள்போலே எம்பெருமானருக்கு ஆட்பட்ட இவ்வுலகெங்குமுள்ள எல்லா ஜந்துக்களும் காணப்படு

३९. महान् प्रमादो मे जातो विभूतिद्वयदानतः।
लक्ष्मीपरवशेनैव मद्विभूतिद्वयं मया ॥

४०. तत्सन्निधौ च निर्बन्धादनन्ताय महात्मने।
लोकसंरक्षणार्थाय सहसा दत्तमादरात् ॥

४१. योषित्परवशः सत्यं कार्याकार्ये न वेत्त्यहो।
न तु देवो मनुष्यो वा विपश्चिदपि चेश्वरः ॥

४२. सर्वेषामपि देवानामतो योषित् सुदुर्जया।
मानवानां तु किमुत कामक्रोधरतात्मनाम् ॥

---

கின்றன. இவ்விரண்டு விபூ₄திகளையும் எம்பெருமானுருக்கு அளித்ததினால் மிகவும் கவனக்குறைவான காரியம் என்னால் செய்யப்பட்டுவிட்டது. ஸ்ரீரங்க₃நாச்சியாரின் ஸந்நிதி₄யில் அவளுக்கு வஶப்பட்ட என்னால் மஹாபுருஷராய், திருவனந்தாழ்வானின் அவதாரமான உடையவருக்கு இவ்வுலகங்களை ரக்ஷிப்பதின் பொருட்டுப் புருஷகாரபூ₄தையான அவளுடைய நிர்ப்ப₃ந்த₄த்தாலே 'என்னுடைய இரண்டு விபூ₄திகளையும் இஷ்டப்படி எவர்க்கு வேண்டுமானாலும் விநியோகி₃க்கலாம்' என்னும் வரம் அன்போடு அளிக்கப்பட்டது. தே₃வனாயினும், மனிதனாயினும், அறிவாளியாயினும், ஈஶ்வரனேயாயினும் மனைவிக்கு வஶப்பட்டுவிட்டானாகில், செய்யத்தக்கது இன்னது, செய்யத்தகாதது இன்னது என்பதை உண்மையில் அறிவதில்லையந்தோ! ஆகையால் எல்லா தே₃வர்களுக்குமே அவரவர் மனைவி வெல்லுவதற்கு மிகவும் அரியவளாகவேயிருக்கிருள். காமக்ரோத₄ங்களில் ஈடுபட்ட நெஞ்சையுடைய மனிதர்கள் விஷயத்தில் இதைச் சொல்லவும் வேண்டுமோ? அப்படியிருந்தபோதிலும் இவ்வுலகிலுள்ள எம்பெருமானார் ஶிஷ்யர்கள் இத்தகையவர்களாயிருப்பதில்லை. அதனாலேயே ஆசார்யனையே எல்லாமாகக்கொண்ட இந்த யதிராஜ ஶிஷ்யர்களால் யோகி₃களுக்கும் செல்ல அரியதாய், நித்ய

४३. तथाप्येते हि मन्नाथशिष्या नैतादृशो भुवि।
अतस्तैरेव योगीन्द्रशिष्यैर्गुरुपरायणैः॥

४४. निर्जितं मत्पदं नित्यं योगिनामपि दुर्गमम्।
अत्यन्तदूरं यद्ध्यातुं ब्रह्मेशसनकादिभिः॥

४५. तत्पदं मनुजास्सर्वे सुकरोपायतोऽञ्जसा।
गच्छन्ति सांप्रतं शिष्या भूत्वा लक्ष्मणयोगिनः॥

४६. ममाप्येतन्महाश्चर्यं जनयत्यद्य मायिनः।
अहो हि तस्य माहात्म्यं केन वर्णयितुं क्षमम्॥

४७. एष श्रीमान् जितारातिर्महान् लोकैकदेशिकः।
निर्व्यापारं हि मां सत्यं करिष्यत्याशु निश्चितम्॥

४८. सर्वे सम्बन्धिनस्तस्य मन्नाथस्य महात्मनः।
आचार्यसेवैकरताः कामक्रोधादिवर्जिताः॥

---

மானதான என்னுடைய பரமபத₃ம் ஜயிக்கப்பட்டதாயுள்ளது. பிரமன், சிவன், ஸநகர், ஸநந்த₃னர், ஸநாதனர் முதலானோராலும் தியானிப்பதற்கும் மிகவும் அரியதான அந்தப் பரமபத₃த்தை, ஸ்ரீராமாநுஜ முனிவருக்கு ஶிஷ்யர்களாகி அவருடைய அபி₄மானமாகிற மிக எளிய உபாயத்தாலே எல்லா மனிதர்களும் இப்போது நன்கு பெற்றுவிடுகின்றனர். மாயையாகிற ப்ரக்ருதியைக்கொண்டு இவ்வுலகிலுள்ள ஜீவர்களை மயக்கும் மாயோனான எனக்கும் இவ்விஷயம் பேராச்சரியத்தை விளைக்கிறது. அடடா! அவ்வெம்பெருமானாரின் பெருமையை எவரால் வர்ணிக்க முடியும்? ஜ்ஞாந ப₄க்தி வைராக்₃யச்செல்வம் நிறைந்தவராய், விரோதி₄களை வென்றவராய், மஹாபுருஷராய், இவ்வுலகனைத்துக்கும் ஏகாசார்யரான இவ்விராமாநுஜர் விரைவிலேயே எனக்கு இவ்வுலகில் செய்யவேண்டிய காரியம் எதுவுமில்லாமல் செய்துவிடுவார் என்பது உண்மை. மஹாத்மாவான எம்பெருமானாராகிற அவருடைய ஸம்ப₃ந்த₄ம் பெற்ற அனைவரும் ஆசார்ய கைங்கர்யத்திலேயே ஈடுபட்டவர்களாய், காமம், க்ரோத₄ம், லோப₄ம் (பேராசை),

४९. द्राविडाम्नायनिरतास्तत्त्वज्ञास्समदर्शिनः ।
अर्थपञ्चकतत्त्वज्ञाः पञ्चसंस्कारसंस्कृताः ॥

५०. आकारत्रयसंपन्नाः महाभागवताः स्मृताः ।
अतस्तैरेव सहसा निर्जितं मत्पदं परम् ॥

५१. इदानीं लक्ष्मणाचार्यसम्बन्धरहितो जनः ।
न कश्चित् दृश्यते लोके सेतुशीताचलान्तरे ॥

५२. दिनैः कतिपयैः शीघ्रं यतीन्द्रेण महात्मना ।
लीलाविभूतिरास्माकी तदा नष्टा भविष्यति ॥

५३. निर्व्यापारो भविष्यामि तेनाहं नात्र संशयः ।
एवं संचिन्त्य भगवान् लीलैकरतिरीश्वरः ॥

---

மோஹம் (மயக்கம்), மத3ம், மாத்ஸர்யம் (பொறாமை) ஆகிய து3ர்க்கு3ணங்களற்றவர்களாய், தமிழ்வேத3மாகிற அருளிச்செயலில் ஈடுபட்டவர்களாய், ஸ்வரூபஜ்ஞானம் உடையவர்களாய், எல்லா ஆத்மாக்கள் விஷயத்திலும் ஸமநோக்கு உடையவர்களாய், அறியவேண்டிய ஐந்து அர்த்த2ங்களையும் (அர்த்த2பஞ்சகங்களையும்) உள்ளபடி அறிந்தவர்களாய், ஐந்து ஸம்ஸ்காரங்களால் ஸம்ஸ்கரிக்கப் பெற்றவர்களாய், அநந்யார்ஹஶேஷத்வம், அநந்யஶரணத்வம், அநந்யபோ4க்3யத்வம் என்னும் மூன்று ஆகாரங்களோடு கூடியவர்களாய், மஹாபா4க3வதர்களாய் அனைவராலும் அறியப்படுகின்றனர். ஆகையால் என்னுடைய பரமபத3ம் அவர்களாலேயே சடக்கென வெல்லப்பட்டுவிட்டது. ஸேதுவுக்கும், ஹிமாசலத்துக்கும் இடையிலுள்ள இந்தக் கர்மபூ4மியில் ஸ்ரீராமாநுஜருடைய ஸம்ப3ந்த4மில்லாத ஜீவன் எவனுமே இப்போது காணப்படவில்லை. இன்னும் சில நாட்களில் மஹாபுருஷரான யதிராஜரால் நம்முடைய லீலாவிபூ4தி விரைவிலேயே அழிந்துவிடப்போகிறது. அதனால் நான் இவ்வுலகில் செய்யவேண்டிய காரியம் எதுவும் இல்லாதவனாகிவிடப்போகிறேன் என்பதில் ஐயமில்லை — (என்று சிந்திக்கலுற்றார்.)

५४. भगवद्द्वेषिणं कञ्चित् चोलराजं महाबलम् ।
स्वलीलाहेतुभूतं च जनयामास रङ्गराट् ॥

५५. हिरण्यकहिरण्याक्षरावणादीन् यथाऽसुरान् ।
धर्मविध्वंसनार्थाय कृमिकण्ठाभिधं नृपम् ॥

५६. एवं भूम्यां समुत्पाद्य मायी विश्वसृगीश्वरः ।
अजानान इवातिष्ठत् किञ्चिदप्यखिलेश्वरः ॥

५७. रममाणः श्रिया सार्धं रङ्गेशः प्रियया तदा ।
अनुज्ञातास्ततस्तेन सन्तुष्टास्सकलास्तदा ॥

---

## க்ருமிகண்டோ₂த்பத்தி ஸங்கல்பம்

53*-60 உலகைப் படைத்தளித்தழிப்பதையே விளையாட்டாகக் கொண்ட ரங்கராஜனுகிற எம்பெருமான் இவ்வண்ணமாக நினைத்து, மஹாப₃லமுடையவனுய், தனது லீலைக்குக் காரணமாயிருப்பவனுய், ப₄க₃வானுன தன்னை த்₃வேஷிப்பவனுய் 'க்ருமிகண்ட₂ன்' என்னும் பெயர் பெறப்போகின்றவனுமான சோழராஜாவை, த₄ர்மங்கள் அழிவதற்காக முற்காலங்களில் ஹிரண்யன், ஹிரண்யாக்ஷன், ராவணன் முதலான அஸுர ராக்ஷஸர்களைப் படைத்தது போலே படைத்தான். மாயாவியாய், உலகனைத்தையும் படைக்கும் ஈஶ்வரனுன ரங்க₃நாத₂ன் இவ்வண்ணமாக இவ்வுலகில் க்ருமிகண்ட₂னைப் படைத்து, ஸர்வேஶ்வரனுயிருந்தபோதிலும் ஒன்றுமறியாதவன்போலே தனக்கினியவளான ஶ்ரீரங்க₃ நாச்சியாரோடு கூட இன்புற்று நின்ருன். பிரமன், சிவன் முதலான எல்லா தே₃வர்களும் அப்போது அவனுல் விடை கொடுக்கப் பெற்று உகந்தவர்களாய், தத்தம் உலகங்களை அடைந்தனர். பரமரஹஸ்யமான இந்த விஷயத்தை எவர்கள் கேட்கிருர்களோ, எவர்கள் படிக்கிருர்களோ அவர்களை

५८. ब्रह्मेशानादयो देवाः स्वान् स्वान् लोकान् प्रपेदिरे।
अतिगुह्यतमं चार्थं ये शृण्वन्ति पठन्ति च ।।
ते सर्वे पापनिर्मुक्ता भविष्यन्त्याशु वैष्णवाः ।।

५९. क्षोणीमण्डलमीक्ष्य संयमिवरैः श्रीवैष्णवत्वाश्रयं
घोषव्रातवशीकृतस्वनगरं चालोक्य कालो विधिम् ।
प्राप्योक्त्वा स्ववृत्तिं समेत्य विधिना साकं रमेशं ययौ
स्वान्यापारमुदीर्य तत्करुणया मित्रं स चोलाधिपम् ।।

६०. प्राप्ते संयमिपुङ्गवेन जगति प्राणिप्रवाहे तदा
याते वैष्णवतां परं निबिडतां मार्गेऽर्चिरादौ गते ।
प्रीतो दण्डधरार्थिताब्जभवनाद्याकाङ्क्षितार्थप्रदो
भूत्वा तं कृमिकन्धरं यमसखं श्रीशः तदा सृष्टवान् ।।

इति श्रीप्रपन्नामृते रामानुजचरित्रे कृमिकण्ठचोलराज-
निर्माणहेतुकथनं नाम त्रिचत्वारिंशोऽध्यायः ।।

---

வரும் பாபங்களினின்றும் நீங்கப்பெற்று விரைவிலேயே வைஷ்ணவர்களாகிவிடுவார்கள். எம்பெருமானருடைய சிஷ்யர்களான பல சிறந்த ஸந்யாஸிகளால் இவ்வுலகம் ஸ்ரீவைஷ்ணவர்கள் நிறைந்ததாகச் செய்யப்பட்டதைக் கண்டு, வைஷ்ணவ ஸமூஹத்தின் பேரொலியினால் தன்னுடைய நரகலோகமும் வசப்படுத்தப்பட்டிருப்பதைப் பார்த்து, யமன் பிரமனையடைந்து தான் இருக்கும் நிலையை அறிவித்து, பிரமனோடு கூட, தான் செயலற்றிருக்கும் நிலையைச் சொல்லிக்கொண்டு ஸ்ரிய:பதியான பெரியபெருமாளை அடைந்தான். அவருடைய கருணையாலே சோழராஜாவான க்ருமிகண்ட₂னை நண்பனாகவும் அடைந்தான். யதிராஜர் உப₄யவிபூ₄தியையும் தனக்கு வசப்பட்டதாக அடைந்து, அதனால் ஜீவஸமூஹம் வைஷ்ணவத்தன்மையைப் பெற்றபோதிலும் அர்ச்சிராதி₃ மார்க்க₃ம் மிகவும்

चतुश्चत्वारिंशोऽध्यायः ॥

१. अथाभूच्चोलभूपालः चित्रकूटे महाबलः ।
कृमिकण्ठ इति ख्यातो दक्षिणाशामहीपतिः ॥
२. दुश्शीलो नैगमान् धर्मान् शैवधर्मपरा हि ते ।
इति मत्वा शैवधर्मनिरतो विष्णुदूषकः ॥
३. पुरोधसं पुरस्कृत्य वादयामास वैदिकान् ।
तस्य बुद्धिः समुत्पन्ना कृमिकण्ठस्य दुर्मतेः ॥

---

நெருக்கமடைந்து விட்டதைப் பார்த்து, யமனாலே வேண்டப்பட்ட பிரமன் முதலான தே₃வர்களிடம் உகந்து அவர்கள் விருப்பத்தை நிறைவேற்றும் ஸ்ரீமந்நாராயணன், அப்போது க்ருமிகண்ட₂னை யமனுக்குத் துணைவனாகப் படைத்தான்.

ஸ்ரீப்ரபந்நாம்ருதத்தில் ஸ்ரீராமாநுஜ சரித்திரத்தில், க்ருமிகண்ட₂னாகிற சோழராஜாவைப் படைத்தற்குக் காரணத்தைக் கூறும் நாற்பத்து மூன்றாம் அத்தியாயம் நிறைவுபெற்றது.

## நாற்பத்து நான்காம் அத்தியாயம்

# மேல்நாட்டு யாத்திரைத் தொடக்கம்

### க்ருமிகண்ட₂னின் உபத்₃ரவம்

1-*6. தில்லைத் திருச்சித்திர கூடத்தில்(சிதம்பரத்தில்) பெருவலிமையுடைய சோழ அரசன்—தென்னாட்டுக்குப் பேரரசனாய் (பிற்காலத்தில்) க்ருமிகண்ட₂ன் என்று புகழ் பெறப் போகிறவன் ஆட்சி புரிந்து வந்தான். சைவ மதத்தில் மிகவும் ஈடுபட்டவனாய், விஷ்ணுவை நிந்தி₃ப்பவனான அந்த து₃ஷ்டன் 'வேத₃நெறியானது சைவ த₄ர்மத்தையே கூறுகிறது' என்று எண்ணி, தனது புரோஹிதர்களை முன்னிட்டுக்கொண்டு வைதி₃கர்களோடு வாத₃ம் புரிந்து வந்தான். தீய அறிவையுடைய அந்த

४. स्वदेशस्थैः विपश्चिद्भिः कर्तव्यं लेखनं बलात् ।
शिवात्परतरं नास्तीत्येवमात्मविनाशिका ॥

५. केचित्तस्याज्ञया चक्रुर्लेखनं विबुधा जनाः ।
अपेक्षितगृहक्षेत्रलोभेनान्ये विपश्चितः ॥

६. केचित्पलायितास्त्यक्त्वा गृहक्षेत्रादिकान् पशून् ।
तत्रैको वैष्णवः कश्चित् न लिलेखेदमब्रवीत् ॥

७. रामानुजयतिः ख्यातः इति रङ्गे समास्थितः ।
तस्य शिष्यः स कूरेशः विप्रो वेदविदां वरः ॥

८. तस्य कूरेश्वरस्यासीत् शिष्यः कश्चित् द्विजोत्तमः ।
प्रसिद्धः सर्वलोकेषु चतुर्ग्रामाधिपो महान् ॥

---

க்ருமிகண்ட2னுக்கு "நம் தே3ஶத்திலுள்ள பண்டி3தர்கள் அனைவரிடமும் 'சிவனைக் காட்டிலும் மேலான தெய்வமில்லை' என்று ப3லாத்காரமாகக் கையெழுத்து வாங்க வேண்டும்" என்னும் ஆத்ம விநாஶகமான எண்ணம் ஏற்பட்டது. சில பண்டி3தர்கள் அவனுடைய ஆணைக்கு ப4யந்து கையெழுத்திட்டார்கள். மற்றும் சில பண்டி3தர்கள் அவனிடமிருந்து தாங்கள் விரும்பும் வீடு, வயல் முதலியவற்றைப் பெறவேண்டும் என்னும் ஆசையினாலே கையெழுத்திட்டார்கள். சில பண்டி3தர்கள் வீடு, வயல் முதலானவற்றையும், பசுக்களையும் கைவிட்டுவிட்டு அவன் நாட்டையும் விட்டு ஓடிவிட்டார்கள்.

## நாலூரான் வார்த்தை

6*-11. அந்தப் பண்டி3தர்களில் வைஷ்ணவனாயிருக்கும் ஒருவன் கையெழுத்துப்போடாமல் "புகழ் பெற்றவரான ராமானுஜ முனிவர் ஸ்ரீரங்க3த்தில் எழுந்தருளியிருக்கிறார். வேத3மறிந்தவர்களில் தலைவரான கூரத்தாழ்வான் அவருடைய சிஷ்யர்" என்று உரைத்தான். அந்தக்

९. मन्त्रे श्रेष्ठोऽभवत्तस्य नृपतेः स द्विजो महान् ।
तं विलोक्य स राजानमिदं वचनमब्रवीत् ॥

१०. लिखितेन किमेतेन प्राकृतैर्विविधैर्नृप! ।
यौ यतीश्वरकूरेशौ विपश्चिद्वैष्णवोत्तमौ ॥

११. तौ लिखेतां यदि तदा सफलस्ते मनोरथः ।
तथा चेल्लिखितं ताभ्यां त्रैलोक्यलिखितं भवेत् ॥

१२. प्रतिगृह्य वचस्तस्य चतुर्ग्रामाधिपस्य सः ।
तयोरानयनार्थाय रङ्गक्षेत्रं महाबलः ॥

१३. स राजा सत्वरं दूतान् प्रेषयामास संमतान् ।
दूतास्ते रङ्गिणः क्षेत्रं संप्राप्य त्वरयान्विताः ॥

---

கூரத்தாழ்வானுக்கு ஓர் அந்தணர்தலைவன் சிஷ்யனாயிருந்தான். அவன் எல்லாவுலகங்களிலும் நாலூரான் என்று பிரஸித்₃தி₄ பெற்றிருந்தான். சிறந்தவனான அந்த அந்தணன் அந்த அரசனுடைய மந்திரிகளில் தலைசிறந்தவனாக இருந்தான். அவன் அந்தச் சோழ ராஜாவைப் பார்த்து "அரசனே! இந்த ப்ராக்ருதர்களான பலவித₄மான மனிதர்களிடம் கையெழுத்து வாங்குவதால் என்ன பயன்? யதிராஜரும், கூரத்தாழ்வானும் தலைசிறந்த வித்₃வான்களாகவும் வைஷ்ணவர்களாகவும் இருப்பவர்கள். அவர்களிருவரும் கைய்யெழுத்திட்டுவிட்டால் மூவுலகமும் கையெழுத்திட்டதாகும். அப்போது உங்களுடைய மனோரத₂மும் நிறைவேறும்" என்று சொன்னான்.

## கூரத்தாழ்வான் காஷாயம் த₄ரித்து எழுந்தருளல்

12-*17 நாலூரானுடைய அந்த வார்த்தையை ஏற்றுக்கொண்டு மஹாப₃லமுடைய அந்த அரசன் யதிராஜரையும் கூரத்தாழ்வானையும் அழைத்துவருவதற்காகத் தனக்கு நம்பிக்கைக்குரியவர்களான தூ₃தர்களை விரைவில்

१४. क्व मन्नाथः क्व मन्नाथ इति तन्मठमागताः ।
यतीन्द्रमज्जनार्थाय जलकुम्भधरस्य च ॥

१५. श्रीवत्सचिह्नमिश्रस्य कर्णे कश्चित् द्विजर्षभः ।
सर्वं निवेदयामास तद्वृत्तान्तं रहस्तदा ॥

१६. मन्नाथस्याशु कूरेशः त्रिदण्डं च कमण्डलुम् ।
काषायमम्बरं धृत्वा तस्मै नोक्त्वा विनिर्गतः ॥

१७. पूर्णाचार्यः स कूरेशमनुयातो जवात्तदा ।
आचख्यौ गुरवे वृत्तं सर्वं दाशरथिस्तदा ॥

१८. एवं चेत्कूरनाथस्य श्वेतवस्त्रं समानय ।
इत्युक्त्वा परिधायाशु श्वेतवस्त्रं यतीश्वरः ॥

---

ஸ்ரீரங்கம் செல்வதற்கு அனுப்பினன். அந்த தூ₃தர்களும் வேகமாக ஸ்ரீரங்க₃த்தை அடைந்து "எம்பெருமானர் எங்கே? எம்பெருமானர் எங்கே?" என்று கூவிக்கொண்டு அவருடைய மட₂த்தையடைந்தனர். யதிராஜர் நீராட்டம் கண்டருள்வதற்காக நீர்க்குடத்தை ஏந்திவந்த கூரத்தாழ் வானுடைய செவியில் அந்தச் செய்தி அனைத்தையும் ஓர் அந்தணர்தலைவர் ரஹஸ்யமாக விண்ணப்பித்தார். கூரத்தாழ்வானும் அப்போதே சடக்கென எம்பெருமானரின் த்ரித₃ண்ட₃த்தையும் கமண்ட₃லுவையும் காஷாய வஸ்திரத்தையும் த₄ரித்துக்கொண்டு அவரிடம் சொல்லாமலே தூ₃தர்களோடு சென்றுவிட்டார். பெரியநம்பியும் வேக₃மாகக் கூரத்தாழ்வானைப் பின்தொடர்ந்தார்.

## எம்பெருமானர் வெள்ளை சாற்றிக்கொண்டு மேல்நாட்டுக்குப் புறப்படுதல்

17*-*20. இந்தச் செய்தி அனைத்தையும் முதலியாண்டான் தன் ஆசார்யருக்கு அப்போதே விண்ணப்

१९. पूर्णार्यकूरनाथाभ्यां कुर्वन्नाशीर्वचः स्थितः।
अत्र स्थातुमयुक्तं ते शिष्यैरेवं प्रभाषितः॥

२०. प्रतीचीं लक्ष्मणाचार्यः प्रतस्थे रङ्गशासनात्।
अनुगच्छन्ति दूतास्ते यतिराजं समुद्यताः॥

२१. इति शिष्यैरुच्यमानः पाणिभ्यां वालुकां मुदा।
आदाय गाथामेकां च पठित्वा नियतः शुचिः॥

२२. अवाकिरध्वं तन्मार्गे इत्यदाच्छिष्यपाणिषु।
मन्त्रिता गुरुणा दत्तास्तास्समादाय वालुकाः॥

---

பித்தார். யதிராஜரும் "அப்படியானல் கூரத்தாழ்வா னுடைய வெள்ளை வஸ்திரத்தைக் கொண்டுவா" என்று நியமித்து அந்த வெள்ளைவஸ்திரத்தைச் சாத்திக்கொண்டு பெரியநம்பிக்கும் கூரத்தாழ்வானுக்கும் மங்க₃ளாஶாஸனம் செய்துகொண்டு எழுந்தருளியிருந்தார். "தேவரீர் இங்கு எழுந்தருளியிருப்பது ஆபத்துக்கிடமாகையால் தகாது" என்று சிஷ்யர்களால் பிரார்த்தி₂க்கப்பெற்ற எம்பெருமானுர் திருவரங்கனின் நியமனத்தையும் பெற்று மேற்கு நோக்கிப் புறப்பட்டார்.

## ராஜதூ₃தர்களைத் தடுத்தல்

20*-24. "ராஜதூ₃தர்கள் பெரு முயற்சியுடன் தம் மைப் பின் தொடர்கிருர்கள் என்று சிஷ்யர்களால் உணர்த் தப்பெற்ற யதிராஜர் வழியிலுள்ள மணலைக் கைகளால் அள்ளி "கொடுமை செய்யும் கூற்றமும் என் கோலாடி குறுகப் பெரு தடவரைத்தோள் சக்கரபாணீ! சார்ங்கவிற் சேவகனே" [ பெரியாழ் திரு 5-4-4 ] என்னும் திரு மொழியை உகப்புடன் நியமத்தோடு ஶுத்₃த₄ராய் அநு ஸந்தி₄த்து "இதை இந்த ராஜதூ₃தர்கள் வரும் வழியில் தெளித்து விடுங்கள்" என்று கூறி, சிஷ்யர்கள் கையிலே மணலைக் கொடுத்தார். இப்படி ஆழ்வார் திருவாக்காலே

२३. अवाकिरन् ततः शिष्यास्तस्मिन् वर्त्मनि सत्वरम् ।
ते राजदूतास्तत्प्रान्तं प्राप्य गन्तुं ततः परम् ॥

२४. अशक्ता वैष्णवैस्तैस्तु मन्त्रवादाः कृता इति ।
वदन्तः स्वपुरं याताः प्रत्यावृत्य तदन्तिकम् ॥

२५. तन्मार्गे षडहोरात्रं निराहारो यतीश्वरः ।
पीडितो वातवर्षाभ्यां षष्ठेऽह्नि निशि कानने ॥

२६. अभ्याशे पर्वतस्याग्निं ज्वलन्तं वीक्ष्य विस्मितः ।
तेनानुमीय पुरुषान् तत्र शिष्यैः समागतः ॥

२७. तत्रत्यान् पुरुषान् सर्वे यतिराजादयस्तदा ।
क्व मार्ग इति पप्रच्छुः शीतार्ता महतो रवात् ॥

---

மந்திரிக்கப்பெற்று ஆசார்யரால் அளிக்கப்பட்ட அம்மணலை சிஷ்யர்கள் ராஜதூ₃தர்கள் வரும் வழியில் தூவினர். அந்த ராஜதூ₃தர்களும் அது வரையில் வந்து அதற்கு மேல் செல்லமுடியாதவர்களாகி "வைஷ்ணவர்கள் நம்மை மேலே செல்ல முடியாதபடி மந்த்ரவாத₃ம் செய்துவிட்டார்கள்" என்று கூறிக்கொண்டு அங்கிருந்து திரும்பித் தங்கள் ஊருக்குச் சென்றுவிட்டார்கள்.

## எம்பெருமானர் வேடமுதலிகளைச் சந்தித்தல்

25-33. அந்தப் பிரயாணத்தில் ஆறு நாள் பகலும் இரவும் உணவு கொள்ளாமல், யதிராஜர் காற்றிலும், மழையிலும் வாடி வருந்தி, ஆறுவது நாள் இரவு காட்டில் ஓர் மலையின் அருகில் எரியும் நெருப்பைக்கண்டு வியப்புற்று, அதனல் அங்கு மனிதர்கள் இருக்கிறார்கள் என்று ஊகித்து, சிஷ்யர்களோடு கூட அங்கு சென்றார். யதிராஜர் முதலான அனைவரும் குளிரில் வருந்தி அப்போதே அங்குள்ள மனிதர்களை 'வழி எது ?' என்று பெரிய குரலில் கேட்டனர்.

२८. मञ्चस्थाः पुरुषाः श्रुत्वा रवं तेषां महात्मनाम् ।
ब्राह्मणार्तरवं मत्वा तत्रैवागत्य सत्वरम् ॥

२९. आनीय वैष्णवान् सर्वान् मञ्चाभ्याशे कृतादराः ।
अग्निं प्रज्वाल्य सहसा तेषां शीतापनोदने ॥

३०. दत्वा शुभ्राणि वस्त्राणि यथाशक्त्यभ्यपूजयन् ।
पप्रच्छुरथ ते सर्वे शीतार्तान् वैष्णवानिदम् ॥

३१. कस्माद्देशात् द्विजा यूयं किमर्थं वनमागताः ।
तच्छ्रुत्वा तानुवाचेदं वैष्णवा वनचारिणः ॥

३२. केनचित्कारणेनाद्य श्रीरङ्गात् वनमागताः ।
तदाकर्ण्याब्रुवन् वाक्यं वैष्णवान् वनवासिनः ॥

---

மலையடியில் இருந்த மனிதர்கள் மஹாத்மாக்களான அவர்களுடைய பேரொலியைக் கேட்டு, ப்₃ராஹ்மணர்களுடைய விடாயோடு கூடிய ஒலி என்று உணர்ந்து,அங்கு வேக₃மாக வந்து, ஆத₃ரவோடு ஸ்ரீவைஷ்ணவர்களனைவரையும் மலையடிவாரத்துக்கு அழைத்துச் சென்று, அவர்கள் குளிர்காய்வதற்கு நெருப்பை உடனே மூட்டி, நல்ல வஸ்த்ரங்களையும் அளித்து, இயன்றவரையில் உபசரித்தனர். அதற்குப் பின் குளிரால் வருந்திய அந்த வைஷ்ணவர்களை "அந்தணர்களாகிய நீங்கள் எந்த நாட்டிலிருந்து வருகிறீர்கள்? எதற்காகக் காட்டுக்கு வந்தீர்கள்?" என்று அவர்களனைவரும் கேட்டார்கள். அதைக் கேட்ட காட்டுக்கு வந்த வைஷ்ணவர்கள் அவர்களைப் பார்த்து "ஒரு காரணத்தினால் ஸ்ரீரங்க₃த்திலிருந்து நாங்கள் காட்டுக்கு வந்துவிட்டோம்" என்று பதிலுரைத்தனர். அதைக் கேட்ட வேடமுதலிகள் வைஷ்ணவர்களைப் பார்த்து "ஸ்ரீரங்க₃த்தில் எம்பெருமானார் பாங்காக எழுந்தருளியிருக்கிறாரா?" என்று கேட்டார்கள்.

३३. रङ्गस्थले लक्ष्मणार्यः किं सुखेनाद्य वर्तते ।
वैष्णवा ऊचुः—
लक्ष्मणार्यः कथं ज्ञातो भवद्भिर्वनचारिभिः ॥

३४. इति तद्वाक्यमाकर्ण्य तानूचुर्वनचारिणः ।
नन्दीपुरे समायातः शङ्खचक्रादिचिह्नितः ॥

३५. दृष्टः संस्कारमकरोद्यः पुरा कृपया महान् ।
हस्त्यद्रिनायको विष्णुः यमाह वरदः पुरा ॥

३६. देशस्य त्वं समीचीनः समीचीनो भवान् मम ।
समीचीनगतस्यास्य शिष्यास्सर्वे वयं द्विजाः ! ॥

३७. हितोपदेशसमये गुरुरेवं जगाद नः ।
युष्माकं परमाचार्यो मन्नाथस्तत्पदाम्बुजम् ॥

---

### திருமலை நல்லான் சிஷ்யர்கள் உபசரித்தல்

33*-*43. அதற்கு வைஷ்ணவர்கள் "காட்டில் வசிக்கும் நீங்கள் எம்பெருமானாரை எப்படி அறிந்தீர்கள் ?" என்று கேட்டனர். அதைக் கேட்ட வேடமுதலிகள் "ஶங்க₂ சக்ர சின்னங்களையுடைய ஒரு மஹான் நந்தீ₃ புரத்திற்கு முன்பொருகால் வந்திருந்தார். அவரை ஸேவித்த எங்களுக்குக் கருணையோடு பஞ்ச ஸம்ஸ்காரங்களை அருளினார். அத்திகிரி அருளாளனான வரதன், முன்பொருகால் அவரைக் கடாக்ஷித்து 'நீ நாட்டுக்கு நல்லானாகையாலே நமக்கும் நல்லான்' என்று அருளினான். அந்தணர்களே! இப்படி நல்லானான அப்பெரியவருடைய ஶிஷ்யர்கள் நாங்களனைவரும். எங்களுக்கு நல்வார்த்தை சொல்லும்போது 'உங்களுக்கு எம்பெருமானார் பரமாசார்யர்; அவரது திருவடித் தாமரைகளே உங்களுக்குத் தஞ்சம் என்று அறிவீர்களாக. அதைக் காட்டிலும் ப்ராப்யமும், ப்ராபகமும் வேறில்லை' என்று அருளினார்" என்று

३८. जानीध्वं रक्षकमिति तस्मादन्यन्न विद्यते।
ततस्तद्दर्शयाश्चक्रुर्व्याधेभ्यो वैष्णवास्तदा॥

३९. अयमेव हि मन्नाथ इति योगीन्द्रमादरात्।
पतित्वा पादयोस्तस्य यतीन्द्रस्य महात्मनः॥

४०. प्रणम्य बहुधा भक्त्या तेन व्याकुलतां गताः।
कोरदूषादिधान्यानि क्षौद्राणि च यथार्हतः॥

४१. अर्पयामासुरार्याय भूरीणि च महात्मने।
नल्लानाख्यः कालमेघो वनमध्येऽप्यवर्षत॥

४२. इति लक्ष्मणयोगीन्द्रः सन्तोषं परमं ययौ।
भक्त्यार्पितानि तान्याशु सम्यक् भुक्त्वा यथार्हतः॥

---

உரைத்தனர். அதற்குப் பின் அந்த வைஷ்ணவர்கள் அந்த வேடமுதலிகளுக்கு அப்போதே அத்திருவடித் தாமரைகளைக் காட்டினார்கள். 'இவரே அவ்வெம்பெருமானார்' என்று எம்பெருமானாரையும் அன்போடு காட்டித் தந்தார்கள். உடனே அவ்வேடமுதலிகள் மஹாத்மாவான யதிராஜருடைய திருவடிகளில் விழுந்து ப₄க்தியினாலே பலமுறை வணங்கி, எம்பெருமானாருடைய நிலையைப் பார்த்துக் கலங்கினார்கள். தேனையும், கேழ்வரகு, தினை முதலான மிக எளிய தானியங்களையும், அன்போடு அளித்தமையாலே, எம்பெருமானாருக்கு நெஞ்சுக்கு இனியவையாய், சிறந்தவையாய் இருக்கும்படி ஸமர்ப்பித்தார்கள். 'நல்லான் என்னும் காளமேக₄ம் இந்தக் காட்டின் நடுவிலும் மழை பொழிந்திருக்கிறதே' என்று ஸ்ரீராமாநுஜமுனிவர் மிகவும் உகப்படைந்தார். அன்போடு அவர்களால் அளிக்கப்பட்ட அவ்வுணவுகளை முறைப்படி அமுதுசெய்து, தம் ஶிஷ்யர்களோடு கூட அவ்விரவில் அங்கு ஸுக₂மாகத் திருக்கண் வளர்ந்தருளினார் யதிராஜர்.

४३. तत्रैव सानुगो रात्रौ सुखं सुष्वाप योगिराट् ।
तत: प्रभाते चोत्थाय कृतकर्मा यतीश्वरः ॥

४४. एकं स्वशिष्यं संघे च व्याधेष्वेकं जनं तदा ।
प्राहिणोन्मेलयित्वाशु श्रीरङ्गं प्रति सादरम् ॥

४५. जिज्ञासया तयोस्तस्य वृत्तस्य गुरुशिष्ययोः ।
चत्वारिंशच्छिष्यजनास्तत्र पञ्चाधिकास्तथा ॥

४६. यतिराजं महात्मानं अन्वयुर्देशिकप्रियाः ।
गिरेः पश्चिमदिग्भागे तस्य गव्यूतिदूरतः ॥

४७. तत्रत्याः शबराः केचित्स्वकीयं शबरालयम् ।
कंचित् निन्युर्लक्ष्मणार्यं सानुगं वैष्णवप्रियाः ॥

---

## ஸ்ரீரங்க₃த்திற்கு முதலிகளை அனுப்புதல்

43*-*46. அதற்குப்பின் மறுநாள் விடியற்காலையில் எழுந்திருந்து, காலை அநுஷ்டா₂னங்களை முடித்த யதிரா ஜர் தம் ஶிஷ்யர்களில் ஒருவரையும், வேடமுதலிகளில் ஒருவரையும் சேர்த்து, தம் ஆசார்யராகிற பெரியநம்பி, ஶிஷ்யராகிற கூரத்தாழ்வான் ஆகியவர்களைப் பற்றிய செய்தியை அறிவதற்காக ஸ்ரீரங்க₃த்தைக் குறித்து அன் போடு உடனே அனுப்பியருளினார். ஆசார்ய ப₄க்தி யுடைய நாற்பத்தைந்து ஶிஷ்யர்கள் மஹாத்மாவான யதிராஜரைப் பின்தொடர்ந்தனர்.

## சைலாசலாம்ப₃ரக்₃ருஹப்ரவேஶம்

46*-54. அந்த வேடமுதலிகள் வாழ்ந்த மலையின் மேற்குப்புறத்தில் ஆறுகாதம் தூரத்திலுள்ள வேடர்களின் ஊருக்கு அங்குள்ள வைஷ்ணவ ப்ரியர்களான சில வேடமுதலிகள் ஶிஷ்யர்களோடு கூடிய ஸ்ரீராமாநுஜரை அழைத்துச்சென்றனர். அங்கு வைஷ்ணவனான வேட னுடைய வீட்டில் யதிராஜர் ஸ்ரீவைஷ்ணவர்களோடுகூட

४८. तत्र लक्ष्मणयोगीन्द्रो गृहे व्याधस्य कस्यचित् ।
तस्थौ श्रीवैष्णवैस्साकं मुहूर्तं वैष्णवस्य सः ॥

४९. कृत्वा ते मृगयां सर्वे ग्रामं व्याधाः समागताः ।
निराहाराश्च वर्तन्ते वैष्णवाः सदनेऽधुना ॥

५०. अतोऽस्माकं कथं भोक्तुं युक्तमित्येवमादरात् ।
आलोच्य तेऽखिला व्याधाः प्रणिपत्य यतीश्वरम् ॥

५१. तस्योपकण्ठे कस्मिंश्चिद्ग्रामे विप्रगृहे तदा ।
सव्यञ्जनांश्च संप्रेष्य तण्डुलांस्तान् द्विजोत्तमान् ॥

५२. निनाय तद्गृहं सर्वान् सुखं भुञ्जन्तु वैष्णवाः ! ।
इत्युक्त्वा वैष्णवैर्व्याधाः कृतानुज्ञा गृहं गताः ॥

५३. चैलाचलाम्बासदनं समासाद्य स योगिराट् ।
सप्तमे दिवसे सायं सुखं तस्थौ व्यपेतभीः ॥

---

ஒரு முஹூர்த்த நேரம் தங்கியிருந்தார். அந்த ஊரைச் சேர்ந்த வேடர்கள் பகலில் வேட்டையாடிவிட்டு (மாலையில்) ஊர்வந்து சேர்ந்தார்கள். "நம் வீட்டில் இப்போது வைஷ்ணவர்கள் உண்ணுமல் எழுந்தருளியிருக்கிறார்கள். அப்படியிருக்க நாம் உண்பது எப்படித்தகும்?" என்று அன்போடு ஆலோசித்து, அவ்வேடர்களனைவரும் எதிராஜரை வணங்கி, அந்த மலைத்தாழ்வரையில் இருந்த கிராமத்திலுள்ள ஓர் அந்தணனின் வீட்டுக்கு உபகரணங்களோடு கூடிய அரிசியை அனுப்பி, அந்தணர்தலைவர்களனைவரையும் அவ்வீட்டுக்கு அழைத்துச்சென்று "வைஷ்ணவர்களே! நீங்கள் ஸுக₂மாக உண்ணவேண்டும்" என்று கூறி, அவ்வைஷ்ணவர்களால் விடை கொடுக்கப் பெற்று அவ்வேடர்கள் வீடு திரும்பினர். சைலாசலாம்ப₃ாக்₃ருஹத்தை ஏழாவது நாள் மாலையில் வந்தடைந்த யதிராஜர் க்ருமிகண்ட₂ ப₄யமற்றவராய் அங்கு வாழ்ந்தார்.

५४. व्याजेन कृमिकन्धरस्य सहसा रङ्गं विहायोत्तमं
देशं पश्चिममाससाद भगवान् लोकावनायान्तरम् ।
अङ्गीकृत्य तदर्चनं यतिपतिर्व्याधैः कृतं भक्तितो
भेजे सप्तमवासरे विधिवशाच्चैलाचलाम्बागृहम् ॥

इति श्रीप्रपन्नामृते रामानुजचरित्रे कृमिकण्ठव्याजेन
पश्चिमदेशगमने समीचीनदेशिकशिष्यकृत्यचैलाचलाम्बानगरप्रवेशो नाम
चतुश्चत्वारिंशोऽध्यायः ॥

पञ्चचत्वारिंशोऽध्यायः ॥

१. ततः श्रीवैष्णवी साध्वी सन्तुष्टा वैष्णवागमात् ।
तान् सर्वान् पूजयामास पाद्यार्घ्यासनवन्दनैः ॥

---

க்ருமிகண்டனுன் வியாஜத்தினுல் மிகச்சிறந்த திருவரங்கப் பெருநகரைச் சடக்கென விட்டு, உலகங்களை ரக்ஷிப்பதற்காக மேல்நாட்டு யாத்திரை செய்த யதிராஜர் இடையில் வேடமுதலிகளால் அன்போடு அளிக்கப்பெற்ற உபசாரத்தை ஏற்றுக்கொண்டு ஏழாவது நாளன்று விதிவஶத்தாலே சைலாசலாம்பாவின் வீட்டையடைந்தார்.

ஸ்ரீப்ரபந்நாம்ருதத்தில் ராமாநுஜசரித்திரத்தில் க்ருமிகண்டவியாஜத்தினுல் மேல்நாட்டு யாத்திரை செய்யும்போது, திருமலை நல்லான் ஶிஷ்யர்கள் உபசரித்ததையும், சைலாசலாம்பா நகரை அடைந்ததையும் விவரிக்கும் நாற்பத்து நான்காவது அத்தியாயம் நிறைவுபெற்றது.

## நாற்பத்தைந்தாவது அத்தியாயம்

## சைலாசலாம்பாவின் பர்த்தாவை அங்கீகரித்தல்

### சைலாசலாம்பா சரித்திரம்

1-23. அவ்வீட்டிற்கு வைஷ்ணவர்கள் வந்ததால் மிக உகந்த ஸ்ரீவைஷ்ணவ ஶ்ரேஷ்டையான சைலாசலாம்பா

२. सुखोपविष्टान् तान् सर्वान् वैष्णवी प्राह वैष्णवान्।
भोजनं वः प्रदास्यामि सर्वेषां षड्रसैर्युतम्॥

३. भुज्यतां मद्गृहे सम्यक् स्ववेश्मनि यथा सुखम्।
तथैवमुक्तास्ते सर्वे वैष्णवीं तां वचोऽब्रुवन्॥

४. परितृप्ता वयं सर्वे तव सूनृतया गिरा।
मास्तु भोजनमस्माकं संप्रत्यम्ब! दयापरे!॥

५. चैलाचलाम्बा तच्छ्रुत्वा तानुवाच कृताञ्जलिः।
संदेहो भवतां मास्तु शिष्याहं यतिभूपतेः॥

६. लक्ष्मणार्याङ्घ्रिसंबन्धः प्राप्तः पूर्वं यथा मया।
श्रूयतामवधानेन तद्वक्ष्यामि पुरातनम्॥

---

அவ்வைஷ்ணவர்களனைவரையும் பாத்₃யம், அர்க்₄யம், ஆஸனம் ஆகியவற்றையளித்து வணங்கி, இனிது எழுந்தருளியிருந்த அவ்வைஷ்ணவர்களைக் குறித்து, "அறுசுவை உண்டியை தேவரீர்களனைவர்க்கும் அளிக்கிறேன், உங்கள் திருமாளிகைகளிற்போலே அடியேனது குடிசையிலும் இனிதாக அமுதுசெய்யவேணும்" என்று கூறினாள். அவளால் இப்படி உரைக்கப்பெற்ற அவ்வைஷ்ணவர்கள் அனைவரும் வைஷ்ணவியைப் பார்த்து "கருணை நிறைந்த தாயே! உனது இனிய வார்த்தையாலேயே நாங்கள் திருப்தியடைந்தோம்; எங்களுக்கு உணவு வேண்டாம்" என்று அருளினர். சைலாசலாம்பா₃ அதைக் கேட்டுக் கைகூப்பி நின்று அவர்களைக் குறித்துப் பின்வருமாறு (தன் சரிதத்தைக்) கூறினாள்—"தேவரீர்கள் சந்தேகப்பட வேண்டாம். அடியேன் யதிராஜருடைய சிஷ்யை; ஸ்ரீராமாநுஜருடைய ஸம்ப₃ந்த₄ம் அடியேனுக்கு முன்னொருகால் ஏற்பட்ட பழஞ்செய்தியைக் கூறுகிறேன்; கவன

७. अस्मिन् देशे द्वादशाब्दान् अनावृष्टिरभूत् पुरा ।
तेनोद्विग्नाः प्रजास्सर्वाः संप्राप्ताः सकला दिशः ॥

८. अहं तु पत्या सहिता रङ्गं प्रति गताऽभवम् ।
तदा यतीश्वरो दृष्टो मया सौधान्तरस्थया ॥

९. भिक्षाशनरतो नित्यं स सप्तसु च सद्मसु ।
पुनश्च वैष्णवैस्सर्वैर्वेदवेदान्तपारगैः ॥

१०. अन्यैश्च पृथिवीपालैः सेव्यमानो महात्मभिः ।
ततः कदाचित्सहसा तस्मात्सौधाद्विनिर्गता ॥

११. भिक्षां संगृह्य गच्छन्तं संरुध्याहं समास्थिता ।
निवारयसि मां बाले ! किमर्थमिति सोऽब्रवीत् ॥

---

மாகக் கேளுங்கள். முன்னொரு சமயம் இத்தேஶத்தில் பன்னிரண்டு வருடம் மழையில்லாமல் பஞ்சம் ஏற்பட்டது. அதனால் வருந்திய எல்லாக் குடிமக்களும் பல திசைகளை நோக்கிப் புறபட்டுவிட்டார்கள். அடியேன் என் கணவரோடுகூட ஸ்ரீரங்கம் சென்றிருந்தேன். அப்போது வீட்டின் மாடியிலிருந்து நான், யதிராஜர் தினமும் ஏழு வீடுகளில பிக்ஷை எடுப்பதைப் பார்த்துக்கொண்டிருந்தேன். அப்போது அவர் — வேதவேதாந்தங்களைக் கரைகண்ட வித்வான்களான வைஷ்ணவர்களாலும், மற்றுமுள்ள அரசர்களாலும், பெரியவர்களாலும் ஸேவிக்கப்படுவதைக் கண்டேன். அப்போது ஒருநாள் சடக்கென அந்த மாடியிலிருந்து இறங்கிவந்து, பிக்ஷை எடுத்துக்கொண்டு செல்லும் யதிராஜரின் வழியை மறித்துநின்றேன். 'பெண்ணே! என்னை ஏன் தடுக்கிறாய்?' என்று அந்த எதிகட்கிறைவர் கேட்டார்.

१२. तेनैवमुक्त्वा योगीन्द्रं तमपृच्छमहं तदा ।
त्वं तु भिक्षाशनरतो भगवन्! वर्तसे सदा ॥

१३. राजाधिराजैर्विबुधैः वेदवेदान्तपारगैः ।
भवांस्तु पूज्यते नित्यं सर्वैः श्रीरङ्गराडिव ॥

१४. को हेतुरस्य भगवन्! ब्रूहि मे भक्तवत्सल! ।
मयैवमुक्तो मामाह लक्ष्मणार्यः स वैष्णवः ॥

१५. भगवद्विषयो मन्त्रः समीचीनो मयोदितः ।
तेभ्यस्तस्मात्सदा वत्से! ते सर्वे मां भजन्ति हि ॥

१६. तन्निशम्य वचस्साहं लक्ष्मणार्यं तमब्रुवम् ।
स मन्त्रो यतिराजार्य! दास्यै मह्यं त्वयोच्यताम् ॥

---

இப்படி அவரால் கேட்கப்பெற்ற நான் 'பெரியவரே! தேவரீர் பி₄க்ஷையெடுத்து தினமும் காலக்ஷேபம் செய்கிறீர். ஆனாலும் அரசர்க்கரசர்களாலும், படித்தவர்களாலும், வேத₃வேதா₃ந்தம் கரைகண்ட அனைவராலும் ஸ்ரீரங்க₃ ராஜனைப்போலே ஆராதி₄க்கப்படுகிறீர். மஹாபுருஷரே! ப₄க்தவத்ஸலரே! இதன் காரணத்தை அடியேனறியச் சொல்லவேணும்' என்று யதிராஜரை அப்போதே கேட்டேன். விஷ்ணு ப₄க்தரான ஸ்ரீராமாநுஜர் என்னால் இப்படிக் கேட்கப்பட்டவராய் 'ப₄க₃வத்₃விஷயமான ஸாரமான மந்த்ரம் ஒன்றை நான் அவர்களுக்கு உபதே₃ஶித்திருக்கிறேன். குழந்தாய்! அதனாலேயே அவர்களனைவரும் என்னை ஸேவிக்கிறார்கள்' என்று கூறினார். இவ்வார்த்தையைக் கேட்ட அடியேன் ஸ்ரீராமாநுஜரைப் பார்த்து, 'யதிராஜரே! அடிச்சியான எனக்கு தேவரீர் அந்த மந்த்ரத்தை உபதே₃ஶிக்கவேண்டும்' என்று கேட்டேன். வைஷ்ணவ ஶ்ரேஷ்ட₂ர்களே! இப்படிக் கேட்கப்பட்ட ஆசார்யஶ்ரேஷ்ட₂ரான ஸ்ரீராமாநுஜர் அம்மந்திரத்தை எனக்கு உபதே₃

१७. एवमुक्तो लक्ष्मणार्यो मया वैष्णवपुङ्गवाः!।
मह्यं प्रोवाच तं मन्त्रं कृपया देशिकोत्तमः॥

१८. ततोऽयं वर्तते देशः सर्वसस्यसमृद्धिमान्।
इति वृत्तान्तमाकर्ण्य स्वदेशगमनोत्सुका॥

१९. विस्मृतत्वेन मन्त्रस्य तदा तस्य यतीश्वरम्।
प्रणिपत्याब्रुवं वाक्यं तमहं गुरुपुङ्गवम्॥

२०. उक्तो मन्त्रस्त्वया पूर्वं स मया विस्मृतोऽधुना।
स्वदेशं प्रति गच्छामि भर्त्रा साकं यतीश्वर!॥

२१. तं मन्त्रमधुना दास्यै कृपयैवोपदिश्य मे।
भवतः पादुके दत्वा सम्यक् योगीश! रक्ष माम्॥

२२. तदा यतीश्वरो मह्यं पूर्वं गुरुपरम्पराम्।
द्वयं सम्यक् चोपदिश्य पादुके प्रददौ शुभे॥

---

ஶித்தார். சில வருஷங்கள் கழித்து எங்களுடைய இந்தப் பிறந்த நாடு எல்லாப் பயிர்களாலும் செழிப்புற்றிருக்கிறது என்னும் செய்தியைக் கேள்விப்பட்டு எங்கள் நாட்டுக்குச் செல்ல விருப்பங்கொண்டேன். யதிராஜர் உபதே₃ஶித்த மந்த்ரம் மறந்து போய்விட்டதால் (புறப்படுவதற்கு முன்) எதிகட்கிறைவரை வணங்கி, ஆசார்ய ஶ்ரேஷ்ட₂ரான அவரைப் பார்த்து 'யோகி₃யர் தலைவரான யதீஶ்வரரே! தேவரீர் முன் உபதே₃ஶித்த மந்திரம் இப்போது எனக்கு மறந்து போய்விட்டது. கணவனோடு எங்கள் நாட்டுக்குச் செல்கின்றேன். அடிச்சியான எனக்கு அம்மந்திரத்தை (மறுபடியும்) உபதே₃ஶித்து தேவரீருடைய திருவடிநிலைகளை அளித்து என்னை நன்கு ரக்ஷிக்கவேண்டும்' என்று கூறினேன். அப்போதே யதிராஜர் முதலில் கு₃ருபரம்பரையை உபதே₃ஶித்து, அதற்குப்பின் த்₃வயத்தை நன்கு (அர்த்த₂த்தோடு) உபதே₃ஶித்து, மங்க₃ளமான பாது₃கைகளையும்

२३. दृष्टं तदा यतिश्रेष्ठं कदा द्रक्ष्यामि तं गुरुम् ।
इत्युक्त्वा साश्रुनयना बभूव गुरुतत्परा ॥

२४. ततो यतीन्द्रः संचिन्त्य तद्वृत्तं हृदि हर्षितः ।
पचेति साध्वीमादिश्य वैष्णवानिदमब्रवीत् ॥

२५. कथं करोति सा पाकं द्रष्टव्यमवधानतः ।
तद्भवद्भिः ततश्चक्रुस्तथा वैष्णवपुङ्गवाः! ॥

२६. स्नात्वा वस्त्रान्तरं साध्वी धृत्वा नत्वा शुचिव्रता ।
मन्नाथपादौ शरणमित्युच्चार्यैव सादरम् ॥

२७. पादुकाग्रे यतीन्द्रस्य धृत्वा देवगृहे तदा ।
द्वयानुसन्धानपरा जप्त्वा गुरुपरम्पराम् ॥

---

அருளினர். அப்போது கண்ட யதிராஜரான ஆசார்யரை நான் இனி எப்போது காணப்போகிறேன்?" என்று கூறி ஆசார்யரிடம் ஈடுபட்டவளாய், கண்ணீர்சோர நின்றுள்.

### யதிராஜரின் பரீக்ஷை

24-43. அதற்குப்பின் அவளுடைய நடத்தையை நெஞ்சில் நினைத்து உகந்த யதிராஜர் அப்பெண்மணியை சமைக்கச் சொல்லிவிட்டு, தம் சீடர்களான வைஷ்ண வர்களைப் பார்த்து, "அவள் எப்படிச் சமைக்கிருள் என் பதை நீங்கள் கவனத்தோடு பார்க்க வேண்டும்" என்று நியமித்தார். அந்த வைஷ்ணவஶ்ரேஷ்ட₂ர்களும் அவ் வண்ணமே செய்தனர். அப்பெண்மணி ஸ்நானம் செய்து, வேறு வஸ்த்ரத்தை உடுத்து, பரிஶுத்₃த₄மான விரதத்தை உடையவளாய், அன்போடு 'எம்பெருமானர் திருவடி களே ஶரணம்' என்று உரைத்து, யதிராஜருடைய பாது₃கைகளைக் கோவிலாழ்வாரில் எழுந்தருளப் பண்ணி, வணங்கி, கு₃ருபரம்பரையை அநுஸந்தி₄த்து, த்₃வயாநு ஸந்த₄ானம் செய்பவளாய், பாது₃கைகளுக்குத் திருமஞ்சனம்

२८. प्रक्षाल्य पादुके भक्त्या कृत्वा पूजां विधानतः।
गन्धपुष्पादिभिर्द्रव्यैर्दृढं बद्धाञ्जलिस्तदा॥

२९. गुरुध्यानपरा साध्वी नैवेद्यं सम्यगार्पयत्।
ततस्सा वैष्णवान् सर्वान् प्रणम्य मुदितानना॥

३०. प्रक्षाल्य पादपद्मानि तेषां भक्तिसमन्विता।
प्रार्थयामास तान् सर्वान् भुज्यतामिति सादरम्॥

३१. श्रुत्वा तत्सर्ववृत्तान्तं शिष्येभ्यो यतिपुङ्गवः।
तस्याश्शैलाचलाम्बायाः संप्रहृष्टो दयानिधिः॥

३२. आनीयेतामिति प्राह पादुके ते त्वयाधुना।
आनीते पादुके दृष्टा तया भक्त्या प्रपूजिते॥

---

செய்து, சந்த3னம், புஷ்பம் முதலான திரவியங்களைக் கொண்டு முறைப்படி அன்போடு திருவாராத4னம் செய்து, உறுதியோடு கைகூப்பி, ஆசார்ய த்4யானத்தில் ஈடுபட்டவளாய், அப்போதே தளிகைகளை அமுது செய் வித்தாள். அதற்குப்பின் மலர்ந்த திருமுகமண்ட3லத்தை யுடையவளாய், ஸ்ரீவைஷ்ணவர்கள் அனைவரையும் வணங்கி, அவர்களுடைய திருவடித் தாமரைகளை விளக்கி, ப4க்தி யோடு கூடியவளாய், அமுதுசெய்ய வேண்டுமென்று அவர்களனைவரையும் அன்போடு பிரார்த்தி2த்தாள். ஶிஷ்யர்களிடமிருந்து இந்தச் செய்தி அனைத்தையும் கேட்ட கருணைக்கடலான யதிராஜர் சைலாசலாம்பா3 என் னும் அப்பெண்மணியிடம் மிகவும் உகப்படைந்தவராய், ‘ அந்தப் பாது3கைகளை இப்போதே கொண்டுவா ’ என்று நியமித்தார். ப4க்தியோடு திருவாராத4னம் செய்யப்படும வையாய், அவளால் கொண்டுவரப்பட்ட அப்பாது3கைகளைக் கண்டு ராமாநுஜர் உகந்து, ஶிஷ்யையான அவளைக்குறித்து “பெண்ணே! ராமாநுஜரால் உனக்கு ஸ்ரீரங்க3த்தில் ஏகாந்த மாய், ரஹஸ்யமாக எந்த மந்திரம் உபதே3ஶிக்கப்பட்டதோ,

३३. हृष्टस्तामेवमाहाथ शिष्यां लक्ष्मणदेशिकः ।
लक्ष्मणार्येण यो मन्त्रः श्रीरङ्गे गदितस्तव ॥

३४. एकान्ते सांप्रतं मह्यं स मन्त्रो नोच्यते यदि ।
त्वया त्वत्सदने साध्वि ! भोक्तुं नेच्छन्ति वैष्णवाः ॥

३५. कर्णे ब्रूहि ततोऽस्माकं तं मन्त्रं भगवत्प्रिये ! ।
ततो यतीन्द्रकर्णे सा वैष्णवी देशिकाज्ञया ॥

३६. तं मन्त्रमब्रवीत्साध्वी तेषामाराधनेच्छया ।
ततो यतीन्द्रस्सन्तुष्टस्तामाह भगवत्प्रियाम् ॥

३७. तर्हि वैष्णवसंघेऽस्मिन् तव मन्त्रप्रदो गुरुः ।
वर्तते वा न वा शीघ्रं इत्येवं दृश्यतां त्वया ॥

३८. तथेति प्रतिगृह्याशु तद्वचो यतिभूपतेः ।
वैष्णवी शिरसाऽऽदाय दृष्ट्वा सर्वान् दृढव्रता ॥

---

அந்த மந்திரத்தை நீ எனக்குச் சொல்லவில்லையானால், உன் வீட்டில் இந்த வைஷ்ணவர்கள் அமுதுசெய்ய விரும்பவில்லை. எம்பெருமானிடம் அன்புடையவளே! ஆகையால் அந்த மந்திரத்தை என் காதில் சொல்லுவாயாக" என்று உரைத்தார். அதற்குப்பின் வைஷ்ணவியான அப்பெண்மணி அந்த வைஷ்ணவர்களுக்கு அமுது செய்விக்க வேண்டும் என்னும் விருப்பத்தாலே, அவ்வாசார்யரின் ஆணைப்படி யதிராஜரின் காதில் அம்மந்திரத்தை உரைத்தாள். அதற்குப்பின், எம்பெருமானுக்கு இனிய அவளைப் பார்த்து உகந்த யதிராஜர் "அப்படியானால் இந்த வைஷ்ணவர்கள் திரளிலே உனக்கு மந்த்ரோபதே₃ஶம் செய்த ஆசார்யர் இருக்கிறாரா, இல்லையா என்பதை விரைவில் கண்டு சொல்" என்று நியமித்தார். எதிகட்கிறைவரின் அவ்வார்த்தையை உடனே சிரமேற்கொண்டு அங்கீ₃கரித்து, உறுதியான விரதமுடைய அந்த வைஷ்ணவி எல்லோரை

३९. यतिराजान्तिकं गत्वा दृष्ट्वा तत्पादपङ्कजम् ।
सन्तुष्टा सत्वरं प्राह वैष्णवान् प्रति सादरम् ॥

४०. एतौ पादौ प्रकाशेते तदीयाविव सुन्दरौ ।
दण्डकाषायराहित्यादेतस्य महतोऽधुना ॥

४१. यतीन्द्र इति निर्णेतुं तमिमं शक्यते कथम् ।
ततोऽथ भगवान् प्राह सन्तुष्टस्तां दृढव्रताम् ॥

४२. अहमेव हि मन्नाथः श्रीरङ्गादधुनाऽऽगतः ।
केनचित्कारणेनैव श्वेतवस्त्रधरोऽभवम् ॥

४३. सा तस्य ज्ञातवृत्तान्ता पतित्वा पादयोस्तदा ।
गुरुपादाब्जनिरता सन्तापमगमत्तराम् ॥

---

யும் பார்த்து, யதிராஜரின் அருகில் வந்து, அவருடைய திருவடித் தாமரையைக் கண்டு உகந்து, உடனே அன்போடு அவ்வைஷ்ணவர்களைக் குறித்து, "இந்தத் திருவடிகள் அவருடையவைபோல அழகாகக் காட்சியளிக்கின்றன. அந்தப் பெரியவருக்கு இருந்த த்ரித$_3$ண்ட$_3$ காஷாயங்கள் இப்போது காணப்படாமையாலே, இவரே யதிராஜர் என்று எப்படி நிர்ணயிப்பது?" என்று உரைத்தாள். அதைக் கேட்ட ப$_4$க$_3$வத்$_3$ராமாநுஜர் மிகவுகந்தவராய், உறுதியான ஆசார்ய நிஷ்டை$_2$யுடைய அவளைப் பார்த்து "நானே அவ்வெம்பெருமானார்; ஸ்ரீரங்க$_3$த்திலிருந்து இப்போது வந்திருக்கிறேன். ஒரு காரணத்தினால் (த்ரித$_3$ண்ட$_3$மில்லாமல்) வெள்ளை வஸ்த்ரம் உடுத்திருக்கிறேன்" என்று கூறினார். அவருடைய செய்தியனைத்தையும் அறிந்த அப்பெண்மணி அவருடைய திருவடிகளில் விழுந்து, அத்திருவடித்தாமரைகளில் ஈடுபட்டவளாகையாலே பெருந்துன்பத்தையடைந்தாள்.

४४. स तां दृष्ट्वा प्रहृष्टात्मा यतीन्द्रः सर्वसद्गुणान्।
तस्याः प्रमार्ज्य चाश्रूणि वैष्णवानिदमब्रवीत्॥

४५. दुर्योधनादिनृपतीन् हित्वा कृष्णो जगत्पतिः।
विदुरान्नानि बुभुजे शुचीनि गुणवन्ति च॥

४६. तस्मादत्यन्तभोग्यत्वात् पावनत्वादिसद्गुणैः।
भोक्तुं श्रीवैष्णवानां तु न्यूनता नास्ति निश्चितम्॥

४७. ततः श्रीवैष्णवास्सर्वे तद्गृहे देशिकाज्ञया।
भुक्त्वा भक्त्यार्पितान्नादि निद्रां प्रापुर्यथासुखम्॥

४८. तेषामुच्छिष्टपात्रान्नं भक्त्या संगृह्य वैष्णवी।
स्वभर्तृज्ञानसिद्ध्यर्थं तदेकीकृत्य चौदनम्॥

---

### யதிராஜரின் பாராட்டு

44-47. யதிராஜர் அவளையும், அவளுடைய எல்லா நற்குணங்களையும் கண்டுகந்து, அவளுடைய கண்ணீரைத் துடைத்து, வைஷ்ணவர்களைப் பார்த்து "லோகநாத₂னை கண்ணன் து₃ர்யோத₄னாதி₃யர்களான அரசர்களை விட்டு, பரிஶுத்₃த₄மானவையாய், கு₃ணமுடையவையான விது₃ரரின் அன்னங்களை அமுதுசெய்தான்; ஆகையால் பாவனத்வம் முதலான நற்குணங்கள் நிரம்பியிருக்கையால் மிகவும் போ₄க்₃யமான இவளுடைய அன்னம் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு உண்ணத்தக்கதே; எக்குறையுமில்லை; இது உறுதி" என்று அருளினர். அதற்குப்பின் ஆசார்யருடைய ஆணையாலே ஸ்ரீவைஷ்ணவர்களனைவரும் அவளுடைய வீட்டில் அன்போடு அவள் அளித்த அன்னம் முதலியவற்றை அமுதுசெய்து ஸுக₂மாக உறங்கினர்.

### சைலாசலாம்ப₃ாப₄ர்த்தா ஆஶ்ரயித்தல்

48-62. அந்த ஸ்ரீவைஷ்ணவர்கள் உண்டு மிகுந்த இலையிலிருந்த உணவை அந்த வைஷ்ணவி ப₄க்தியோடு

४९. तमानीय च भर्तारं सौधोपरि समास्थितम् ।
ब्राह्मणं भोजयामास भक्ष्यभोज्यपुरस्सरम् ॥

५०. सा शेते भर्तृसान्निध्ये पृथक् चाकृतभोजना ।
तामाह ब्राह्मणो भार्यां निराहारामिदं वचः ॥

५१. भूमौ शेषे किमर्थं त्वं निराहाराऽधुनाऽबले ! ।
कारणं वद कल्याणि ! संशयो जायते महान् ॥

५२. इत्यब्रवीत्ततः साध्वी भर्तारं भगवत्प्रिया ।
श्रीरङ्गात् शिष्यसंघेन यतीशः संवृतो गुरुः ॥

५३. केनचित्कारणेनाद्य सद्मास्माकमुपागतः ।
मया संप्रार्थ्यमानोऽपि भोजनार्थं दृढव्रतः ॥

---

ஒன்ருகத்திரட்டி, தன் கணவனுக்கு ஜ்ஞானம் உண்டாவதற்காக, மாடியிலிருந்த தன்னுடைய கணவனை அந்தணனை வரவழைத்து, பணியாரங்கள் அறுசுவை உண்டியோடு அந்த உச்சி₂ஷ்டத்தையும் அவனை உண்ணச் செய்தாள். உண்டபிறகு தான் உண்ணுமல், ப₄ர்த்தாவோடு படுக்கையறையில் தனியாக (தரையில்)படுத்தாள். உண்ணுமலிருக்கும் மனைவியைப் பார்த்த அந்த ப்₃ராஹ்மணன் 'மங்க₃ளமான பெண்ணே! உண்ணுமல் தரையில் படுத்திருக்கிருயே. இதன் காரணத்தைப் பற்றி எனக்குப் பெரிய ஐயம் விளைகின்றதே; காரணத்தைக் கூறுவாய்' என்று கூறினுன். விஷ்ணுப₄க்தையான அந்த மங்கை நல்லாள் கணவனைப் பார்த்து "ஸ்ரீரங்க₃த்திலிருந்து ஶிஷ்யர்களோடு கூட ஆசார்யரான யதிராஜர் ஒரு காரணத்திஞலே நமது வீட்டிற்கு எழுந்தருளியிருக்கிருர். அமுது செய்யவேண்டும் என்று அடியேன் பிரார்த்தி₂த்த பின்பும் உறுதியான விரதமுடைய எனது ஆசார்யரான அவர் நீர் அவைஷ்ணவராயிருப்பதால் பட்டினி கிடக்கிருர்.

४४. स तां दृष्ट्वा प्रहृष्टात्मा यतीन्द्रः सर्वसद्गुणान्।
तस्याः प्रमार्ज्य चाश्रूणि वैष्णवानिदमब्रवीत्॥

४५. दुर्योधनादिनृपतीन् हित्वा कृष्णो जगत्पतिः।
विदुरान्नानि बुभुजे शुचीनि गुणवन्ति च॥

४६. तस्मादत्यन्तभोग्यत्वात् पावनत्वादिसद्गुणैः।
भोक्तुं श्रीवैष्णवानां तु न्यूनता नास्ति निश्चितम्॥

४७. ततः श्रीवैष्णवास्सर्वे तद्गृहे देशिकाज्ञया।
भुक्त्वा भक्त्यार्पितान्नादि निद्रां प्रापुर्यथासुखम्॥

४८. तेषामुच्छिष्टपात्रान्नं भक्त्या संगृह्य वैष्णवी।
स्वभर्तृज्ञानसिद्ध्यर्थं तदेकीकृत्य चौदनम्॥

---

## யதிராஜரின் பாராட்டு

44-47. யதிராஜர் அவளேயும், அவளுடைய எல்லா நற்குணங்களேயும் கண்டுகந்து, அவளுடைய கண்ணீரைத் துடைத்து, வைஷ்ணவர்களேப் பார்த்து "லோகநாத₂னை கண்ணன் து₃ர்யோத₄னாதி₃யர்களான அரசர்களே விட்டு, பரிஶுத்₃த₄மானவையாய், கு₃ணமுடையவையான விது₃ரரின் அன்னங்களே அமுதுசெய்தான்; ஆகையால் பாவனத்வம் முதலான நற்குணங்கள் நிரம்பியிருக்கையால் மிகவும் போ₄க்₃யமான இவளுடைய அன்னம் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு உண்ணத்தக்கதே; எக்குறையுமில்லே; இது உறுதி" என்று அருளினர். அதற்குப்பின் ஆசார்யருடைய ஆணேயாலே ஸ்ரீவைஷ்ணவர்களனேவரும் அவளுடைய வீட்டில் அன்போடு அவள் அளித்த அன்னம் முதலியவற்றை அமுதுசெய்து ஸுக₂மாக உறங்கினர்.

## சைலாசலாம்பா₃பர்₄த்தா ஆஶ்ரயித்தல்

48-62. அந்த ஸ்ரீவைஷ்ணவர்கள் உண்டு மிகுந்த இலேயிலிருந்த உணவை அந்த வைஷ்ணவி ப₄க்தியோடு

३९. ततः कदाचिद्भगवान् श्रीजगन्नायको हरिः।
कपीरुमोक्षदानाय मतिं चक्रे दयानिधिः॥

४०. सारमेयवपुर्भूत्वा भगवान् कृपया तदा।
तस्यान्तिकमवाप्याथ यवनस्य शनैः शनैः॥

४१. जग्राह पैठरं भक्ष्यं तस्य किञ्चिज्जगत्पतिः।
तद्गृहीत्वा प्रदुद्राव स तस्मिन् पश्यतीश्वरः॥

४२. सर्वभूतसुहृद्धीमान् कपीरुर्वीक्ष्य तं शुनम्।
आदाय सहसैवाज्यं प्रोवाच कृपया तदा॥

४३. रूक्षं भक्ष्यं भक्षितं चेत् कुक्षिबाधा भविष्यति।
गृहाणाज्यमिदं स्वामिन्! किमर्थं परिधावसि॥

४४. इत्येवं व्याहरन् भक्त्या धावन्तं स तमन्वगात्।
सिन्धुतीरं तदा नीत्वा तं कपीरुं जगत्पतिः॥

---

ருக்கு மோக்ஷம் கொடுப்பதற்கு எண்ணங்கொண்டார். ப₄க₃வானுன ஜக₃ந்நாத₂னும் அப்போதே கருணையாலே ஓர் நாயின் உருவத்தை எடுத்துக்கொண்டு, யவனரான அக்கபீருதா₃ஸரின் அருகில் மெள்ள மெள்ள வந்து அவருடைய சட்டியிலிருந்த பணியாரமொன்றைக் கவ்விக் கொண்டான். அக்கபீருதா₃ஸர் பார்த்துக் கொண்டிருக்கும்போதே அதைக் கவ்விக்கொண்டு ஓடலானுன். எல்லா ஜீவராஶிகளுக்கும் நண்பராய், பேரறிவாளரான அக் கபீருதா₃ஸர் அந்த நாயைப் பார்த்து, அப்போதே உடனே நெய்யை எடுத்துக்கொண்டு, கருணையோடு "ஸ்வாமிந்! ஏன் ஓடுகிறீர்? காய்ந்த பணியாரத்தைத் தின்ருல் வயிற்று வலி வரும்; இந்த நெய்யையும் எடுத்துக்கொள்ளும்" என்று அன்போடு கூறிக்கொண்டு, ஓடுகின்ற எம்பெருமானைப் பின் தொடர்ந்தார். ஜக₃ந்நாத₂ன் அந்தக்கபீரு

९७. यतीनां सार्वभौमाय दत्त्वा मोदमवाप सः।
तथा दिल्लीश्वरः श्रीमान् प्रेम्णा दुहितृवत्सलः॥

९८. पुत्रं कश्चित्समाहूय चतुरङ्गबलान्वितम्।
तस्याः संरक्षणार्थाय प्राहिणोत् दुहितुस्तदा॥

९९. सम्पत्पुत्रेण संयुक्ता देवी दिल्लीश्वरात्मजा।
आरुह्य शिबिकां शीघ्रं प्रययौ यादवाचलम्॥

१००. चतुरङ्गबलोपेतः स महात्मा महायशाः।
शिबिकायाश्चतुर्भागं भगिनीं परिपालयन्॥
यतीन्द्रसहितः श्रीमान् प्रतस्थे यादवाचलम्॥

१०१. सदारमादाय हरिं कृतार्थं सम्पत्सुतं साधुनृपार्चिताङ्घ्रिः।
स यादवाद्रिं सहसा प्रतस्थे रामस्त्वयोध्यां हि यथा कृतार्थः॥

इति श्रीप्रपन्नामृते रामानुजचरित्रे
दिल्लीनगरात् दिल्लीशपुत्र्या सह संपत्सुतस्य यादवाद्रिप्रत्यागमनं नाम
सप्तचत्वारिंशोऽध्यायः॥

---

கூட அந்த ராமப்ரியரை அன்போடு எதிகட்கிறைவர்க்கு அளித்து ஆனந்தமடைந்தான். அவ்வண்ணமே பெண்ணிடம் பேரன்புகொண்ட அந்த டில்லியரசன் அன்போடு தன் பிள்ளை ஒருவனை அழைத்து, நால்வகைச் சேனைகளோடு கூடிய அவனைத் தன் பெண்ணுக்கு ரக்ஷையாக அப்போதே அனுப்பினான். செல்வப்பிள்ளையோடு கூடிய டில்லிராஜகுமாரியாகிற தேவி பல்லக்கில் விரைவில் ஏறி அமர்ந்து, யாதவகிரிக்குப் புறப்பட்டாள். பெருங்கீர்த்தியும், பெருஞ்செல்வமும், பெருங்குணமுமுடைய டில்லிராஜகுமாரனும், நால்வகைச் சேனையோடு கூடினவனாய், தன் சகோதரியோடு கூடிய பல்லக்கை நாற்புறமும் ரக்ஷித்துக்கொண்டு யதிராஜரோடுகூட யாதவகிரிக்குப் புறப்பட்டான். தனக்குரியவளான நாச்சியா

५०. ततो दिल्लीश्वरः श्रीमान् पुत्रस्य दुहितुश्च सः।
तमद्भुततमं श्रुत्वा वृत्तान्तं सादरं मुहुः॥

५१. विस्मयं परमं प्राप दुःखं च स दयानिधिः।
विबुधैर्बोधितः सम्यक् दिल्लीशो भक्तिमान् हरौ॥

५२. श्रीमान् दुहितृवात्सल्यात् यतीन्द्रं जगतां गुरुम्।
पूजयित्वा महाभक्त्या संपत्पुत्राय सादरम्॥

५३. वराय बहुशः सम्यक् दिल्लीशः प्रददौ धनम्।
दिल्लीश्वरेण योगीन्द्रः पूजितो बहुधा तदा॥

५४. नारायणपुरे तत्र कञ्चित्कालमुवास सः।
संपत्सुतस्यानयने सहायार्थं समागताः॥

---

### டில்லியரசனின் காணிக்கை

50-*54. அதற்குப்பின் பெருஞ்செல்வமுடைய டில்லி அரசன் தன் பிள்ளை, பெண் ஆகிய இருவரைப்பற்றிய அற்புதமான செய்தியைக் கேள்விப்பட்டு, அன்போடு மிகவும் வியப்புற்று, கருணையுடையவனுகையாலே துன்பத்தையுமடைந்தான். அறிவாளிகளால் நன்கு உணர்த்தப்பட்ட பெருஞ்செல்வமுடைய டில்லியரசன் நாராயணனிடம் ப₄க்தி உடையவனுகி, பெண்ணிடம் வாத்ஸல்யத்தினுலே ஜக₃த்₃ாசார்யரான யதிராஜரைப் பேரன்போடு ஆராதி₄த்து, தன்னுடைய மாப்பிள்ளையான செல்வப்பிள்ளைக்கு அன்போடு பெருஞ்செல்வத்தை ஸமர்ப்பித்தான். டில்லிராஜாவால் அப்போது பலவாறு ஆராதி₄க்கப்பெற்ற யதிராஜர் திருநாராயணபுரத்திலேயே சிறிதுகாலம் வாழ்ந்திருந்தார்.

### திருக்குலத்தாருக்கு அருள்புரிதல்

54*-62. செல்வப்பிள்ளையை அழைத்துவருவதற்காக எம்பெருமானுருக்குத் துணையாகப் பேரன்போடு வந்திருந்த

५५. ये वर्णबाह्याः सद्भक्त्या सदेह कृपया तदा।
मर्यादां विदधे नित्यां वैष्णवानां जगद्गुरुः॥

५६. कल्याणसरसि स्नानं प्रवेशो विष्णुमन्दिरे।
महोत्सवे च त्रिदिनं प्रत्यब्दमिति निर्णयः॥

५७. तदाप्रभृति तत्रैव यादवाद्रौ जगद्गुरोः।
शासनादन्त्यजास्सर्वे हरिभक्तिपरायणाः॥

५८. प्रत्यब्दं त्रिदिनं तत्र सम्पत्सूनुमहोत्सवे।
कल्याणसरसि स्नात्वा चोर्ध्वपुण्ड्रधराः शुभाः॥

५९. विष्ण्वालये प्रविश्यान्तः बलिपीठान्तिकं गताः।
विमानं तत्परिक्रम्य प्रणम्याशु जगत्पतेः॥

---

வர்களாய், நாலுவர்ணங்களிலும் கீழிழிந்தவர்களான வைஷ்ணவர்கள் விஷயமாக ஜக₃த்₃ஆசார்யரான எம்பெருமானர் தம் கருணையாலே இந்த தி₃வ்யதே₃ஶத்தில் எப்போதும் நடைமுறையில் இருக்கும்படி ஒரு நித்யமான கட்டுப்பாட்டை ஏற்படுத்தினர். அவர்கள் கல்யாண ஸரஸ்ஸில் நீராடி, ப்₃ரஹ்மோத்ஸவத்தில் அந்த நாராயணன் ஸந்நிதி₄யில் ஒவ்வொரு வருஷமும் மூன்றுநாள் ப்ரவேஶிக்கலாம் என்று நிர்ணயித்தார். அன்றுமுதல் அந்தத் திருநாராயணபுரத்திலேயே ஜக₃த்₃ஆசார்யரான யதிராஜரின் ஆணையால் கீழிழிந்த ஜாதியைச் சேர்ந்த அனைவரும் ப₄க₃வத்₃ப₄க்தியை உடையவர்களாய், அங்கு நடக்கும் திருநாரணன் ப்₃ரஹ்மோத்ஸவத்தில் ஒவ்வொரு வருஷமும் மூன்று தினங்கள் கல்யாணஸரஸ்ஸில் நீராடி, ஊர்த்₄வ புண்ட்₃ரம் த₄ரித்து, மங்க₃ளமானவர்களாய், ப₄க₃வத் ஸந்நிதி₄யில் நுழைந்து, ப₃லிபீட₂ம்வரையில் சென்று, பெருமாளுடைய விமானத்தைப் பிரத₃க்ஷிணம் செய்து, லோகநாத₂னை அவனைச் சடக்கென வணங்கி, அப்போதே அவ்வெம்பெருமானுக்கு எண்ணெயும், அரிசியும் ஸமர்ப்

६०. तैलं च तण्डुलं तस्मै समर्प्य हरये तदा।
कृतार्था निर्ययुस्तस्मात्ते सर्वे हरिमन्दिरात्॥

६१. ततः संप्रोक्षणं सम्यक् कृत्वा तस्य यथाविधि।
अवशिष्टोत्सवं चक्रुः सम्पत्पुत्रस्य चार्चकाः॥

६२. यतीन्द्रशासनात्तत्र मर्यादैषा ह्यखण्डिता।
नारायणपुरे सेयमद्यापि परिदृश्यते॥

६३. स्वनाम्ना कारयित्वाथ मठं तत्र महत्तरम्।
सुखेन लक्ष्मणाचार्यस्तस्थौ श्रीमान् महायशाः॥

६४. अस्यैव महतो ह्यद्रेरभून्नामचतुष्टयम्।
सनत्कुमारो भगवान् पुरा कृतयुगे महान्॥

---

பித்துப் பேறுபேற்றவர்களாய் அந்தக் கோயிலிலிருந்து வெளிவருகிறார்கள்; அதற்குப்பின் அர்ச்சகர்கள் அந்த ஸந்நிதிக்கு ஆகமங்களில் சொன்னபடி ஸம்ப்ரோக்ஷணம் செய்து, செல்வப்பிள்ளையின் எஞ்சிய உத்ஸவத்தை நடத்து கிறார்கள். யதிராஜருடைய ஆணையால் தடையில்லாத இந்தக் கட்டுப்பாடு அந்தத் திருநாராயணபுரத்தில் இன்றும் காணப்படுகிறது.

## நாலு யுகங்களில் யதுகிரி நாமங்கள்

63-*70 தம் திருநாமத்தைக்கொண்டு யதிராஜஜீயர் மடம் என்னும் பெரியமடத்தை அவ்வூரில் ஸ்தாபித்து, பெரும்புகழாளராய், கைங்கர்யச்செல்வம் நிறைந்தவரான ராமாநுஜர் திருநாராயணபுரத்தில் இனிது வாழ்ந்துவந்தார். இந்தப் பெரிய மலைக்கு (நாலு யுகங்களில்) நான்கு திரு நாமங்கள் உண்டு. முதலாவதான கிருதயுகத்தில் மஹா புருஷராய், ஜ்ஞாநாதிபரிபூர்ணரான ஸனத்குமாரர்

६५. दिव्यं विमानमारुह्य ब्रह्मलोकाद्भुवं गतः ।
नारायणं प्रतिष्ठाप्य यत्तदेवमपूजयत् ॥

६६. नारायणाद्रिरित्यासीत् नाम तस्य ततस्तदा ।
त्रेतायुगे महायोगी दत्तात्रेय इति श्रुतः ॥

६७. विधाय वेदपुरुषान् शिष्यान्नारायणाचले ।
वेदपुष्करिणीतीरे तपः कुर्वन्समास्थितः ॥

६८. वेदाद्रिरिति तस्यासीन्नाम तस्य गिरेस्ततः ।
द्वापरे यदुनाथेन कृष्णोनाराधितस्तदा ॥

६९. यादवाद्रिरिति ख्यातं नामधेयान्तरं गिरेः ।
कलौ युगे तु संप्राप्ते यतिराजेन पूजितात् ॥

७०. यतिशैलमिति ख्यातं नामाभूत्तस्य तद्गिरेः ।
ततः कदाचिद्योगीन्द्रः स्वशिष्यैर्देशिकैर्वृतः ॥

---

ப்3ரஹ்மலோகத்திலிருந்து தி3வ்யவிமானத்திலேறி பூ4மிக்கு வந்து, இங்கு நாராயணனைப் பிரதிஷ்டை2 செய்து அப்பெருமானை முறைப்படி திருவாராத4னம் செய்ததால் அப்போது இந்த மலைக்கு 'நாராயணாத்3ரி' என்று திருநாமமாயிற்று. திரேதாயுக3த்தில் 'த3த்தாத்ரேயர்' என்று பிரஸித்3தி4பெற்ற மஹாயோகி3யானவர் நாலு வேத3புருஷர்களையும் நாலு சிஷ்யர்களாகக்கொண்டு வேத3புஷ்கரிணிக் கரையில் தவம்புரிந்துகொண்டிருந்தார். அதனால் அந்த யுக3த்தில் இந்த மலைக்கு 'வேதா3த்3ரி' என்று திருநாமமாயிற்று. த்3வாபரயுக3த்தில் யது3க்களின் தலைவனான கண்ணனாலே இப்பெருமான் ஆராதி4க்கப்பட்டானாகையாலே இந்த மலை 'யாத3வாத்3ரி' என்று புகழ் பெற்றது. கலியுக3ம் வந்தவளவில் யதிராஜர் இப்பெருமானை ஆராதி4க்கையாலே இம்மலைக்கு 'யதிஶைலம்' என்னும் பிரஸித்3த4மான திருநாமம் உண்டாயிற்று.

७१. त्रैवर्णिकैर्महाभागैरन्यैश्च कुलशेखरैः।
विशेषशूद्रैरपरैः शूद्रैः विष्णुपरायणैः॥

७२. अन्यैरनन्तैस्संरेजे नारायणमुनिर्यथा।
शिष्यान् यतीन्द्रः प्रोवाच सभायां कृपया ततः॥

७३. नारायणपुरे येषां वसतिस्त्वसतामपि।
सदैव तेषां निःश्रेयो भविष्यति न संशयः॥

७४. भक्त्या कथामिमां नित्यं ये शृण्वन्ति पठन्ति च।
सर्वपापविनिर्मुक्तास्ते स्युर्वैकुण्ठवासिनः॥

७५. निर्जित्य सर्वसमयान् यतिराजो महायशाः।
आरोप्याखिलदेशेषु जयस्तम्भान् समन्ततः॥

---

## யதிராஜரின் பேரருள்

70*-74. அதற்குப்பின் ஒருநாள் தமது ஶிஷ்யர்களான ஸிம்ஹாஸநாதி₄பதிகளாலும், குலந்தாங்கு சாதிகளான முதல் மூன்று வர்ணத்திலும் உதித்த மஹாபா₄க்₃ய ஶாலிகளான மற்றவர்களாலும், ப₄க₃வத்கைங்கர்யத்துக்கு இட்டுப்பிறந்த விஶேஷ ஶூத்₃ரர்களாலும், விஷ்ணுப₄க்தியுடைய மற்ற ஶூத்₃ரர்களாலும், கணக்கற்ற மற்ற ப₄க்தர்களாலும் சூழப்பெற்றவராய் யதிராஜர் நாராயணமுனியைப்போலே பிரகாஶித்தார். அந்தப் பெரிய ஸபை₄யிலே யதிராஜர் பரமகருணையோடு தமது ஶிஷ்யர்களைக் குறித்து "திருநாராயணபுரத்தில் எப்போதும் வசிக்கும் தீயவர்களுக்கும் மோக்ஷம் ஏற்படும் என்பதில் ஐயமில்லை. திருநாராயணனைப் பற்றிய இக்கதையை அன்போடு கேட்பவர்களும், பாராயணம் செய்பவர்களும் எப்போதும் எல்லாப் பாபங்களிலிருந்தும் விடுபட்டவர்களாய் வைகுண்ட₂வாஸத்தைப் பெறுவர்கள்" என்று அருளிச்செய்தார்.

७६. रूढमूलं प्रतिष्ठाप्य स्वीयं दर्शनमुत्तमम् ।
कमलापतिपादाब्जषट्पदान् सकलान् जनान् ॥

७७. निधाय तैर्जनैस्सम्यक् पूजितो लोकदेशिकः ।
नित्यं महोत्सवान् कुर्वन् सम्पत्पुत्रस्य सादरम् ॥

७८. सामानाधिकरण्यार्थान् सर्वाश्चर्यकरान् परान् ।
अनिशं सन्निधौ श्रीमान् भक्त्या देवस्य तस्य सः ॥

७९. भाष्यार्थान् शिष्यसंघेभ्यः कृपयोपदिशन् सदा ।
सुखमव्याहतोपायः स तस्थौ यादवाचले ॥

---

### *காடு நகரமானது, நகரம் காடானது*

75-88 பெரும் புகழாளரான அந்த யதிராஜர் புறச் சமயங்கள் அனைத்தையும் வென்று, சுற்றிலுமுள்ள எல்லா தே3ஶங்களிலும் ஜயஸ்தம்ப4ங்களை நாட்டி, தம் பெயரால் வழங்கும் தலைசிறந்த வைதி3கதரிசனத்தை வேரூன்றச்செய்து, எல்லா ஜனங்களையும் ஸ்ரீமந்நாராயணனின் திருவடித்தாமரைகளில் ஈடுபடும் வண்டுகளாக்கி, அவர்களனைவராலும் நன்கு ஆராதி4க்கப்படும் ஜக3த்3ஆசார்யராய், செல்வப்பிள்ளைக்கு அன்போடு மஹோத்ஸவங்களைச் செய்துகொண்டு, அப்பெருமானின் கோயிலில் ப4க்தியோடு தினமும் அனைவர்க்கும் வியப்பளிப்பவையாய், மேலானவையான ஸாமாநாதி4கரண்யப் பொருள்களையும் (ஒரே வேற்றுமையில் ப்3ரஹ்மத்தையும், உலகத்தையும் படித்திருக்கும் ஶாஸ்த்ரவசனங்களின் கருத்தையும்) ஸ்ரீப4ாஷ்யத்தில் நிலைநாட்டப்பட்டுள்ள மற்ற அர்த்த2ங்களையும் ஶிஷ்ய சமூகங்களுக்கு எப்போதும் கருணையோடு உபதே3ஶிப்பவராய், கைங்கர்யச் செல்வம் நிறைந்தவராய், ப4க3வத்கைங்கர்யத்துக்குத் தடையற்ற உபாயங்களைக் கைக்கொள்பவராய், யாத3வாசலத்தில் இனிது வாழ்ந்தார். ரங்கே3ஶனுடைய நிறைந்த பேரருளைப்பெற்று, ஸ்ரீரங்க3த்

८०. रङ्गेशपूर्णकृपया बहिरङ्गवासात्
रामानुजस्य महतो यदभून्महत्त्वम्।
वेदाचलेप्यधिकमेव ततो महत्त्वं
संपूज्यते बुधजनैः सकलासु दिक्षु॥

८१. रङ्गेशसेवाविरहादवाप्तं दुःखं च सम्पत्सुतरत्नलाभात्।
विसृज्य सन्तोषमवाप धीरः नैवापदस्सन्ति सतां हि नित्याः॥

८२. सम्पत्सुतस्य जनदृष्टिमनोहरस्य
लावण्यसम्पदि निमग्नमना यतीन्द्रः।
विस्मृत्य रङ्गपतिमागमभूधरेन्द्रे
तस्थौ सुखं विविधदास्यपरम्पराभिः॥

८३. यत्प्रेम रङ्गाधिपतौ सुजातं सम्पत्सुतेऽभूदधिकं ततोऽस्य।
योषाभिलाषादधिकाभिलाषः पुत्रे प्रसिद्धस्स हि लोकवृत्तः॥

---

தில் உலகமறிய வாழ்ந்தபோது ராமாநுஜருக்கு எத்தகைய பெருமை ஏற்பட்டிருந்ததோ, அதைக் காட்டிலும் அதி₄க மான பெருமையே வேத₃ாசலமான திருநாராயணபுரத்தி லிருந்தபோது அவருக்கு ஏற்பட்டது. எல்லாத் திசை களிலுமிருந்த அறிவாளிகள் அனைவராலும் அவர் ஆரா தி₄க்கப்பட்டார். ரங்கே₃ஶனின் ஸேவையில்லாமையால் உண்டாயிருந்த துன்பத்தை, செல்வப்பிள்ளையாகிற புத்ரரத்னத்தைப் பெற்றதால் கைவிட்டுப் பேரானந்த₃த் தையும் அடைந்தார் தீ₄ரரான ராமாநுஜர். நல்லோர் களுக்கு ஆபத்துக்கள் நிரந்தரமாயிருக்கமாட்டாவன்றோ. எல்லா ஜனங்களின் கண்ணையும் நெஞ்சையும் ஈர்க்கும் செல்வப்பிள்ளையின் அழகுச் செல்வத்திலே ஆழ்ந்து போன நெஞ்சையுடைய யதிராஜர் ரங்க₃நாத₂னை மறந்து, வேத₃ஶைலத்தில் பலவித₄மான கைங்கர்ய பரம்பரை களைச் செய்துகொண்டு இனிது வாழ்ந்தார். அரங்க நகரப்பனிடம் எத்தனை அன்பு உறுதியாக ஏற்பட்டிருந்

௮௪. यतीन्द्रसेवाविरहाच्च भीताः सर्वे जनाः ये कृमिकन्धरस्य ।
ते तीक्ष्णदण्डात्प्रविहाय रङ्गं वेदाद्रिमेवाभिययुः सदाराः ॥

௮௫. नारायणाचलवनं नगरी बभूव
रामानुजार्यकृपया जनसंप्रकीर्णा ।
शार्दूलचोररहिता तदभावदोषात्
रङ्गेशरङ्गनगरी ह्यटवी बभूव ॥

௮௬. विलोक्य रङ्गं निजभक्तहीनं निवृत्तसर्वोत्सवमप्रकाशम् ।
प्रवृद्धसर्वोत्सवमद्वितीयं व्यचिन्तयच्चागमशैलमीशः ॥

௮௭. दुर्गं वनं नगरमेव तदागमाद्रिः
क्लृप्तं ममाथ नगरं विपिनं च दुर्गम् ।
राहित्यदोषवशतः यतिपुङ्गवस्य
व्यत्यस्तमद्य तदभून्मम चैव दोषात् ॥

---

ததோ அதைக் காட்டிலும் அதி4கமான அன்பு அவருக்குச் செல்வப்பிள்ளையிடம் ஏற்பட்டது. மனைவியிடமுள்ள அன்பைக் காட்டிலும் பிள்ளையிடமுள்ள அன்பு அதி4கமானது என்பது பிரஸித்3த4மான உலக நடைமுறையன்றோ. யதிராஜரின் ஸேவையில்லாமையாலும், க்ருமிகண்ட2னுடைய கொடிய த3ண்ட3னைக்கு ப4யந்தும் எல்லா ஜனங்களும் ஸ்ரீரங்க3த்தைக் கைவிட்டுப் பெண்டு பிள்ளைகளோடு கூட வேதா3சலமாகிற திருநாராயணபுரத்திற்கே வந்தனர். நாராயணாசலமாகிற அக்காடு ராமானுஜாசார்யரின் கருணையால் ஜனங்கள் நிறைந்த மஹாநகரமாயிற்று. புலிகளும் திருடர்களும் அற்றதாகவும் ஆயிற்று. எம்பெருமானார் இல்லாமையால் அரங்க நகரப்பன் நடனமிடும் ஸ்ரீரங்க3ம் காடாயிற்று. ரங்க3நாத2ன் தனது 'அரங்கநகர் தன் அடியார்களற்றதாய், எந்த உத்ஸவமுமில்லாததாய், ஒளியிழந்ததாக ஆகிவிட்ட

८८. निरस्य चोलं कृमिकन्धराख्यं मोदं विधातुं यतिपुङ्गवस्य।
इयेष रङ्गाधिपतिः समीक्ष्य लोकं च पाषण्डमयं हि शून्यम्॥
इति श्रीप्रपन्नामृते रामानुजचरित्रे यादवाद्रौ
दिल्लीशपुत्र्यर्थसम्पत्पुत्रस्य प्रतिष्ठापनं नामाष्टचत्वारिंशोऽध्यायः॥

## एकोनपञ्चाशोऽध्यायः

१. ततः श्रीरङ्गनगरात् कश्चिद्वैष्णवपुङ्गवः।
रामानुजपुरं प्राप्तः रामानुजदिदृक्षया॥

---

தையும், வேதசைலமானது எல்லா உத்ஸவங்களும் வளரப்பெற்றதாய், ஒப்பற்றதாக ஆகிவிட்டதையுங் கண்டு பின்வருமாறு நினைக்கலுற்றான் — "யாராலும் புக அரியதான காடாயிருந்த அந்த வேதசைலமும் நகரமே யாயிற்று. என்னுடைய இந்த நகரம் எவரும் புகாத காடாயிற்று. யதிராஜர் இல்லாமையாலும் (க்ருமிகண்டனை வளரவிட்ட) என்னுடைய குற்றத்தாலுமே இப்படி ஏறு மாறாக ஆயிற்று" என்று அரங்கநகரப்பன் உலகம் பாஷண்டிகள் நிறைந்ததாய், சூன்யமாகிக் கிடப்பதைப் பார்த்து, கருமிகண்டனென்கிற சோழனை அழித்து, யதி ராஜருக்கு ஆனந்தத்தை விளைப்பதற்கு விரும்பினான்.

ஸ்ரீப்ரபன்னாம்ருதத்தில் ராமாநுஜ சரித்திரத்தில் 'யாதவாசலத்தில் டில்லி ராஜகுமாரியின் பேருயிருந்த செல்வப்பிள்ளையை ப்ரதிஷ்டை செய்தல்' எனும் நாற்பத்தெட்டாம் அத்தியாயம் நிறைவுற்றது.

## நாற்பத்தொன்பதாம் அத்தியாயம்

## கூரேச க்ருமிகண்ட விவாதம்

### யதுகிரிக்கு வைஷ்ணவர் வருகை

1-3. அதற்குப்பின் ஓர் வைஷ்ணவஶ்ரேஷ்டர் ஸ்ரீரங்கநகரிலிருந்து ராமாநுஜரை ஸேவிப்பதற்காக ராமா நுஜர் வாழ்ந்த திருநாராயணபுரத்தையடைந்தார். ராஜ

२. तं पप्रच्छ यतिश्रेष्ठः तयोर्वृत्तान्तमादरात् ।
चोलान्तिकं प्रापितयोः पूर्णकूरेशयोर्भटैः ॥

३. इत्युक्तो यतिराजेन प्रत्युवाच स वैष्णवः ।
श्रूयतामभिधास्यामि तद्वृत्तान्तं यतीश्वर! ॥

४. श्रीरङ्गात्तावुभौ दूतैः चोलराजान्तिकं गतौ ।
दृष्ट्वा तौ पूर्णकूरेशौ चोलराजोऽब्रवीदिदम् ॥

५. शिवात्परतरं नास्ति लिख्यतामिति दुर्मतिः ।
एवमुक्तस्स कूरेशः चोलेन विदुषां वरः ॥

---

தூதர்களால் சோழ ராஜாவினிடம் அழைத்துச் செல்லப் பட்ட பெரியநம்பி, கூரத்தாழ்வான் ஆகிய இருவரைப் பற்றிய செய்தியையும் அவரிடம் யதிராஜர் ஆர்வத்தோடு கேட்டார். இப்படி யதிராஜரால் கேட்கப்பட்ட அவ் வைஷ்ணவர் "எதிகட்கிறைவரே! அவர்களைப் பற்றிய செய்தியைக் கூறுகிறேன் கேட்பீராக" என்று பதிலு ரைத்தார்.

### க்ருமிகண்ட₂னின் பிடிவாதம்

4-*5. தூ₃தர்களால் சோழராஜாவின் அருகில் அழைத் துச்செல்லப்பட்ட பெரியநம்பி, கூரத்தாழ்வானுகிற அவ் விருவரையும் பார்த்து, தீய அறிவுடைய சோழராஜன் "'சிவனைக்காட்டிலும் மேலானதில்லை' என்று எழுதுங் கள்" என்று கட்டளையிட்டான்.

### கூரத்தாழ்வானின் ஸத்₃வாத₃மும், க்ருமிகண்ட₂னின் கோபமும்

5*-13. யதிராஜரே! இவ்வண்ணம் க்ருமிகண்ட₂னல் சொல் லப்பட்ட பேரறிவாளரான கூரத்தாழ்வான் (அந்த ராஜஸபை யிலுள்ளார்) அனைவரும் கேட்டுக்கொண்டிருக்கும்போதே பின்வருமாறு பேசலுற்ருர்—"அரசனே! ஶ்ருதி ஸ்ம்ருதீதி ஹாஸ புராணங்கள் முதலானவைகளாலே ஸ்ரீதே₃வியோடு

६. सर्वेषां शृण्वतां भूपमेवमाह यतीश्वर!।
श्रुतिस्मृतिपुराणेतिहासाद्यैर्बहुधा नृप!॥

७. श्रीमान्नारायणो देवः सर्वस्मात्पर उच्यते।
जगत्कारणभूतश्च ध्येयो मोक्षप्रदो हि सः॥

८. तस्य प्रशासने राजन्! चन्द्रसूर्यादयो ग्रहाः।
इन्द्रादयश्च तिष्ठन्ति दिक्पालास्समहार्णवाः॥

९. ब्रह्मरुद्रादयो देवाः पुत्रपौत्रादयो हरेः।
एकेन चोलभूपाल! पादपद्मं प्रसारितम्॥

१०. एकेन क्षालितं भक्त्या तत्पादं पयसा मुदा।
एकेन मूर्ध्नि तत्तोयं धृतं भक्त्या महामते!॥

११. तेषां त्रयाणां राजेन्द्र! को महान् प्रविचार्यताम्।
तच्छ्रुत्वा चोलभूपालस्तूष्णीं भूतोऽभवत्तदा॥

---

கூடிய நாராயணனுகிற தே₃வனே அனைவரிலும் மேலானவனாகவும், ஜக₃த்காரணபூ₄தனாகவும், தியானிக்கத்தக்கவனாகவும், மோக்ஷத்தையளிப்பவனாகவும், பலகால் முழங்கப்படுகிறான்றோ. அரசனே! அவனுடைய ஆணையாலேயே சந்த்₃ரன், ஸூர்யன் முதலான கிரகங்களும், இந்திரன் முதலான தி₃க்பாலகர்களும், கடல்களும் வரம்புமீறாமலிருக்கின்றன. பிரமன், உருத்திரன் முதலான தே₃வர்கள் அப்பெருமானுக்குப் பிள்ளை, பேரன் முதலானவர்களாக ஆகின்றார்களன்றோ. சோழநாட்டுவேந்தே! (மும்மூர்த்திகளில்) ஒருவனாலே ஒரு திருவடித்தாமரை உலகெங்கும் நீட்டப்பட்டது. மற்றொருவனாலே அத்திருவடி ஆனந்த₃த்தோடும், அன்போடும் (கங்கை)நீராலே விளக்கப்பெற்றது. மற்றொருவனாலே அந்த நீர் ப₄க்தியோடு தலையிலே த₄ரிக்கப்பெற்றது. பேரறிவாளனான ராஜேந்த்₃ரனே! இம்மூவருக்குள் எவன் பெரியவன் என்று நீயே ஆராய்வாயாக''

१२. कूरेशश्चोलभूपालं भूयो वचनमब्रवीत्।
त्रिविक्रमपदोत्सृष्टतोयसङ्गेन शङ्करः॥

१३. कपालित्वाशिवत्वादिरहितः शिवतां गतः।
तच्छ्रुत्वा कुपितः प्राह सुतरां चोलभूपतिः॥

१४. विबुधत्वाद्भवानेवं गतोऽसि बहुभाषिताम्।
तत्तिष्ठतु कुरुष्वाद्य मयोक्तं कार्यमाशु वै॥

१५. शिवात्परतरं नास्तीत्येवं विलिख सत्वरम्।
निबन्धयामास तदा सुजनं दुर्जनो नृपः॥

१६. कूरनाथो लिलेखेति द्रोणमस्ति ततः परम्।
लेखनं पारिहास्यं तत् दृष्ट्वा क्रुद्धः स भूपतिः॥

---

என்று கூரத்தாழ்வானால் சொல்லப்பட்ட சோழராஜா அப்போது மௌனமாயிருந்தான். கூரத்தாழ்வான் மேலும் அவனைப் பார்த்து "திரிவிக்கிரமனின் திருவடியிலிருந்து விழுந்த கங்கைநீரின் தொடர்பாலே சங்கரன் கபாலித் தன்மையும், அமங்கலத்தன்மையும் நீங்கப்பெற்றவனாய் மங்க₃ளமானவனானனன்றோ" என்று வார்த்தை சொன்னார். அதைக்கேட்டு மிகவும் கோபங்கொண்ட சோழஅரசன் பின்வருமாறு சொன்னான்.

## க்ருமிகண்ட₂னின் நிர்ப்ப₃ந்த₄மும், கூரத்தாழ்வானின் பரிஹாஸமும்

14-*16. "நீர் படித்தவராகையால் இப்படி அதி₄கப்ரஸங்கி₃யாகிவிட்டீர். அது நிற்க. நான் சொன்னதை விரைவில் செய்யும். 'சிவனைக்காட்டிலும் மேலானதில்லை' என்று விரைவில் எழுதும்" என்று தீயவனான அரசன் நல்லவரான கூரத்தாழ்வானை அப்போது நிர்ப்ப₃ந்த₄ப்படுத்தினான். கூரத்தாழ்வானும் 'த்₃ரோணம் (பதக்கு) ஶிவத்தை (குறுணியை)க் காட்டிலும் மேலானதாயுள்ளது' என்று எழுதினார்.

६. सर्वेषां शृण्वतां भूपमेवमाह यतीश्वर!।
श्रुतिस्मृतिपुराणेतिहासाद्यैर्बहुधा नृप! ॥
७. श्रीमान्नारायणो देवः सर्वस्मात्पर उच्यते।
जगत्कारणभूतश्च ध्येयो मोक्षप्रदो हि सः॥
८. तस्य प्रशासने राजन्! चन्द्रसूर्यादयो ग्रहाः।
इन्द्रादयश्च तिष्ठन्ति दिक्पालास्समहार्णवाः॥
९. ब्रह्मरुद्रादयो देवाः पुत्रपौत्रादयो हरेः।
एकेन चोलभूपाल! पादपद्मं प्रसारितम्॥
१०. एकेन क्षालितं भक्त्या तत्पादं पयसा मुदा।
एकेन मूर्ध्नि तत्तोयं धृतं भक्त्या महामते!॥
११. तेषां त्रयाणां राजेन्द्र! को महान् प्रविचार्यताम्।
तच्छ्रुत्वा चोलभूपालस्तूष्णीं भूतोऽभवत्तदा॥

---

கூடிய நாராயணனுகிற தே₃வனே அனைவரிலும் மேலானவனுகவும், ஜக₃த்காரணபூ₄தனுகவும், தியானிக்கத்தக்கவனுகவும், மோக்ஷத்தையளிப்பவனுகவும், பலகால் முழங்கப்படுகிருனன்றே. அரசனே! அவனுடைய ஆணையாலேயே சந்த்₃ரன், ஸூர்யன் முதலான கிரகங்களும், இந்திரன் முதலான தி₃க்பாலகர்களும், கடல்களும் வரம்புமீருமலிருக்கின்றன. பிரமன், உருத்திரன் முதலான தே₃வர்கள் அப்பெருமானுக்குப் பிள்ளை, பேரன் முதலானவர்களாக ஆகின்றுர்களன்றே. சோழநாட்டுவேந்தே! (மும்மூர்த்திகளில்) ஒருவனுலே ஒரு திருவடித்தாமரை உலகெங்கும் நீட்டப்பட்டது. மற்றொருவனுலே அத்திருவடி ஆனந்த₃த்தோடும், அன்போடும் (கங்கை)நீராலே விளக்கப்பெற்றது. மற்றொருவனுலே அந்த நீர் ப₄க்தியோடு தலையிலே த₄ரிக்கப்பெற்றது. பேரறிவாளனுன ராஜேந்த்₃ரனே! இம்மூவருக்குள் எவன் பெரியவன் என்று நீயே ஆராய்வாயாக"

२१. आपद्दशा च संप्राप्ता रङ्गं गच्छाम सत्वरम्।
एवमुक्तस्स तं प्राह महापूर्णो यतीश्वर! ॥

२२. हातुं शरीरमधुना यदि रङ्गं गतो ह्यहम्।
पूर्णस्य देहविगमे रङ्गक्षेत्रे स्थिता मतिः॥

२३. अतोऽत्र सहसायातो देहत्यागेच्छयाऽधुना।
शङ्कितोऽहं भविष्यामि तैरेवं वैष्णवैर्ध्रुवम्॥

२४. इत्युदीर्य महापूर्णः कूरनाथं यतीश्वर!।
यामुनाचार्यपादाब्जं ध्यायन् तूर्णं जहौ तनुम्॥

२५. वत्सराणां तदा तस्य पञ्चोत्तरशतं गतम्।
अन्तकाले प्रपन्नस्य न देशनियमस्ततः॥

---

வைத்துக்கொண்டு சயனித்திருந்தார். அப்போது பத்னியோடு கூடிய கூரத்தாழ்வான் பெரியநம்பியைப் பார்த்து 'இப்போது தேவரீருக்குச் சரமத₃ஶை நேர்ந்துள்ளது. விரைவில் நாம் ஸ்ரீரங்க₃ம் சென்றுவிடுவோம்' என்று விண்ணப்பித்தார். யதிராஜரே! இப்படி விண்ணப்பிக்கப் பெற்ற பெரியநம்பி கூரத்தாழ்வானைப் பார்த்து "ஶரீரத்தை விடுவதற்கு இப்போது நான் ஸ்ரீரங்க₃ம் சென்றேனாகில் 'தே₃ஹத்தை விடும்போது பெரியநம்பிக்குக்கூட ஸ்ரீரங்க₃ க்ஷேத்ரத்தின் நினைவே வந்தது. அதனால்தான் இப்போது ஶரீரத்தை விடுவதற்காக விரைவில் ஸ்ரீரங்க₃த்துக்கு வந்துவிட்டார்' என்று வைஷ்ணவர்களெல்லாம் (தி₃வ்ய தே₃ஶத்தில் ஶரீரத்தை விடுவதையே மோக்ஷகாரணமாக நினைத்து) ஶங்கிக்கத்தொடங்கிவிடுவார்கள்" என்று கூறி, ஆளவந்தார் திருவடித் தாமரைகளைத் தியானித்துக் கொண்டே தம் திருமேனியை விரைவில் கைவிட்டார். அப்போது அவருக்கு நூற்றைந்து திருநக்ஷத்திரங்கள் ஆகியிருந்தன. இந்தச் சரித்திரத்திலிருந்து ஸ்ரீவைஷ்ணவனுக்கு ஶரீரம் விடும் காலத்தில் தே₃ஶநியமம் கிடையாது

२६. केचित् श्रीवैष्णवास्तस्य पूर्णार्यस्य महात्मनः।
विधाय विधिवत्तूर्णं संस्कारं तत्सुतादयः॥
२७. कूरनाथं समादाय श्रीरङ्गं सहसा गताः।
पूर्णार्यस्यैव रङ्गेशः प्रददौ परमं पदम्॥
२८. तथैवाद्यैव सर्वज्ञो मोक्षं मम न दत्तवान्।
इति कूरपतिस्तत्र वर्तते दुःखितोऽधुना॥
२९. यतीन्द्रः सर्ववृत्तान्तं पूर्णकूरेशयोस्तदा।
निशम्य दुःखितोऽत्यन्तं बुधैराश्वासितस्तदा॥

---

என்று விளங்குகிறது. அங்கிருந்த பெரியநம்பியின் பிள்ளை முதலான சில ஸ்ரீவைஷ்ணவர்கள் மஹாத்மாவான அவருக்கு விரைவில் முறைப்படி ஸம்ஸ்காரத்தைச்செய்து, கூரத்தாழ்வானையும் அழைத்துக்கொண்டு சடக்கென ஸ்ரீரங்க₃த்திற்குச் சென்றார்கள். "அரங்கநகரப்பன் பெரிய நம்பிக்கே பரமபத₃த்தை அளித்தான். ஸர்வஜ்ஞனை அவன் அவ்வண்ணமே மோக்ஷத்தை எனக்கு இப்போதே கொடுக்கவில்லையே" என்று வருந்தியவராய் ஸ்ரீரங்க₃த்தில் இப்போது வாழ்கிறார் கூரத்தாழ்வான். (4-வது ஶ்லோகத்திலிருந்து இதுவரையில் ஸ்ரீவைஷ்ணவர் திருநாராயணபுரத்திலிருந்த எம்பெருமானாருக்கு விண்ணப்பித்த செய்திகள்.)

## பெரியநம்பிக்குத் திருவத்₄யயனம் நடத்துதல்

29-37. பெரியநம்பி கூரத்தாழ்வான் ஆகிய இருவரைப் பற்றிய எல்லாச் செய்திகளையும் யதிராஜர் அப்போது கேள்விப்பட்டு மிகவும் வருந்தியவராய் அருகிலிருக்கும் அறிவாளிகளாலே அப்போதே ஆறுதல் அடைவிக்கப் பட்டார். அதற்குப்பின் பெரும்புகழாளரான யதிராஜர் தமது ஆசார்யரான அப்பெரியநம்பிக்கு அப்போதே யாத₃வகி₃ரியில் திருநாராயணனுடைய கோயிலிலேயே

३०. विधाय देशिकस्याथ श्रीचूर्णपरिपालनम् ।
यादवाद्रौ हरेस्तस्य मन्दिरे सहसा तदा ॥

३१. चतुष्टयसहस्रस्य प्रबन्धस्य महायशाः ।
साङ्गस्य सर्ववेदस्य तथा रामायणस्य च ॥

३२. वैष्णवस्य पुराणस्य श्रीभाष्यस्य तथैव च ।
पारायणं कारयित्वा वैष्णवैर्वेदपारगैः ॥

३३. अन्यैश्च षड्रसोपेतैः बहुभक्ष्यसमन्वितैः ।
प्रपन्नान् भोजयामास वैष्णवान् वेदपारगान् ॥

३४. पूजयामास वस्त्राद्यैर्गुरुमुद्दिश्य भक्तितः ।
ततो यतीश्वरः प्राप्य महद्दुःखं कृपार्णवः ॥

३५. कूरेशो नेत्रहीनोऽभूदिति चिन्तापरायणः ।
तमेवान्तिकमाहूय वैष्णवं कृपयाऽब्रवीत् ॥

---

விரைவில் ஸ்ரீ சூர்ண பரிபாலனத்தை நடத்திவைத்து, நாலாயிரதிவ்யப்பிரபந்தங்கள், அங்கங்களோடுகூடிய எல்லா வேதங்கள், ஸ்ரீராமாயணம், ஸ்ரீவிஷ்ணுபுராணம், ஸ்ரீபாஷ்யம் ஆகியவற்றின் பாராயணத்தை வேதம்வல்ல ஸ்ரீவைஷ்ணவர்களைக்கொண்டு நடத்தச்செய்து, மற்ற ஸ்ரீவைஷ்ணவர்களைக்கொண்டு, பல திருப்பணியாரங்களோடு கூடியதான அறுசுவை உண்டியை வேதம் கரைகண்ட ப்ரபன்ன ஸ்ரீ வைஷ்ணவர்களனைவர்க்கும் அமுதுசெய்வித்தார். தம் ஆசார்யரை உத்தேஶித்து யதிராஜர் அன்போடு அனைவர்க்கும் வஸ்த்ரம் முதலானவற்றை அளித்து ஆராதித்தார். அதற்குப்பின் கருணைக்கடலான எதிகட்கிறைவர் (இச்செய்தியைக் கேட்டதினால்) பெருத்த துன்பத்தையடைந்து, கூரத்தாழ்வான் கண்ணற்றவராகிவிட்டாரே என்று கவலைகொண்டவராய், அந்த வைஷ்ணவரை அருகில் அழைத்து, கருணையோடு

३६. रङ्गं गत्वाऽधुना तूर्णं त्वं हि मद्वचनादितः।
समाश्वासय कूरेशं इति तं प्राहिणोत्तदा॥

३७. कूरेशदुःखोपशमाय कंचित् संप्रेषयित्वाऽऽप्ततमं यतीन्द्रः।
तत्रैव वेदाद्रिपतेर्मुरारेः कैङ्कर्यलाभेन सुखेन तस्थौ॥

इति श्रीप्रपन्नामृते रामानुजचरित्रे कूरनाथकृमिकण्ठ(विवाद)कथनं नाम एकोनपञ्चाशोऽध्यायः॥

पञ्चाशोऽध्यायः

१. ततः कूराधिपो धीमान् श्रीरङ्गमगमत्तदा।
ततो निवारयामासुः द्वारस्थाः केचिदुत्तमम्॥

அவரைப் பார்த்து "நீர் என் வார்த்தையைக் கைக்கொண்டு இங்கிருந்து விரைவில் ஸ்ரீரங்கம் சென்று கூரத்தாழ்வானுக்கு ஆறுதல் சொல்லும்" என்று கூறி அவரை அப்போதே அனுப்பினார். கூரத்தாழ்வானுடைய துன்பம் தணிவதற்காக (சிறியாண்டான் என்னும்) மிகவும் ஆப்தரான சிஷ்யரை அனுப்பிவிட்டு, வேதாத்ரி நாதனை திருநாரணனின் கைங்கர்யத்தைப்பெற்று, அந்தத் திருநாராயணபுரத்திலேயே இனிது வாழ்ந்துவந்தார் யதிராஜர்.

ஸ்ரீ ப்ரபந்நாம்ருதத்தில் ராமாநுஜ சரித்திரத்தில், கூரத்தாழ்வானுக்கும் க்ருமிகண்டனுக்குமிடையே நடந்த விவாதத்தைக் கூறும் நாற்பத்தொன்பதாம் அத்தியாயம் நிறைவுற்றது.

## ஐம்பதாம் அத்தியாயம்

## ஆழ்வானின் மாலிருஞ்சோலை வாஸம்

### / ஆழ்வானின் ஆசார்யநிஷ்டை,

1-11. க்ருமிகண்டனால் கண்ணிழந்தபின் அறிவாளியான கூரத்தாழ்வான் ரங்கநாதனை ஸேவிப்பதற்காகத்

/ திருப்பாவை 15-ம் பாட்டு மூவாயிரப்படி வ்யாக்யானத்தில் "'நீ ஒருவர்க்கும் விரோதியல்லை; நீ புக்குத் திருவடி தொழு' என்ன, ஆழ்வான் வார்த்தையை நினைப்பது" என்று இந்தச் செய்தி சுருங்கக் கூறப்பட்டது.

२. केचिदूचुश्च तत्रान्ये कूरेशस्साधुरित्ययम् ।
तन्निशम्य वचस्तेषां कूरेशस्तानथाब्रवीत् ॥

३. किमर्थं क्रियते ह्यद्य युष्माभिर्मन्निरोधनम् ।
तत्कारणं वदध्वं मे तत्त्वतो द्वारपालकाः! ॥

४. श्रीवत्सचिह्नमिश्रस्य वचः श्रुत्वाथ तेऽब्रुवन् ।
विरोधं विदधे राज्ञि कृमिकण्ठे यतीश्वरः ॥

५. अतः संत्यज्य सहसा श्रीरङ्गं यतिभूपतिः ।
अविज्ञातगतिस्त्वद्य कुत्रापि गतवान् किल ॥

६. एतत्संमन्त्रितं कार्यं रङ्गाध्यक्षैस्तदर्चकैः ।
अस्माकं चोलराजेन विरोधो नहि दृश्यते ॥

---

திருவரங்கம் பெரியகோவிலுக்கு எழுந்தருளினார். அப்போது கோயில் வாசலில் இருந்த சிலர் உத்தமரான அவரை உள்ளே நுழையக்கூடாது என்று தடுத்தனர். மற்றும் சிலர் "இக்கூரத்தாழ்வான் நல்லவர். (ஆகையால் அவரை உள்ளே விடலாம்)" என்று கூறினர். இவர்களுடைய இந்த வார்த்தையைக் கேட்ட கூரத்தாழ்வான் அவர்களைப் பார்த்து 'த்$_3$வாரபாலகர்களே! உங்களில் சிலர் ஏன் என்னைத்தடுத்தீர்கள்? தடுத்த காரணத்தை உள்ளபடி எனக்குச் சொல்லவேணும்' என்று கேட்டார். கூரத்தாழ்வானுடைய இந்த வார்த்தையைக் கேட்ட அவர்கள் "(க்ருமிகண்ட$_2$) சோழராஜாவுக்கு யதிராஜர் விரோத$_4$ம் செய்துவிட்டார். அதனால் ஸ்ரீரங்க$_3$த்தை விட்டு எதிகட்கிறைவர் எங்கு சென்றார் என்று அறியவொண்ணாமல் எங்கேயோ சென்றுவிட்டாரன்றோ. ஸ்ரீரங்க$_3$ம் கோவிலை நிர்வஹிக்கும் ரங்க$_3$நாத$_2$னின் அர்ச்சகர்கள் இதுவிஷயமாக என்ன செய்வது என்று ஆலோசித்தார்கள். 'நமக்கும் சோழராஜாவுக்கும் எந்த விரோத$_4$முமில்லை. ஸ்ரீராமாநுஜ

७. श्रीरामानुजसंबन्धाद्विरोधोऽद्य समागतः।
न रामानुजसम्बन्धी प्रवेष्टव्यः कथञ्चन ॥

८. सर्वैर्निर्णीतमित्थेवं कूरेशाद्यैव चार्चकैः।
तथापि सुजनः साधुः स्वामिन्नेतादृशो भवान् ॥

९. अतो रङ्गेशसेवार्थं तत्प्रवेष्टुं त्वमर्हसि।
स तन्निशम्य कूरेशः दुःखितस्तान् वचोऽब्रवीत् ॥

१०. अहं तु लक्ष्मणाचार्यसंबन्धी नात्र संशयः।
तस्माद्रङ्गेशसेवा मे मास्तु मास्तु कदाचन ॥

११. इत्युक्त्वा तत्क्षणात् शीघ्रं कूरेशो वृषभाचलम्।
सपुत्रः सस्नुषः श्रीमान् प्रतस्थे सह भार्यया ॥

---

ருடைய தொடர்பால் இப்போது நமக்கு ராஜாவோடு விரோத₄ம் வந்துவிட்டது. (அந்த விரோத₄த்தைப் போக்கு வதற்கு) ராமாநுஜருடைய ஸம்ப₃ந்த₄முள்ள எவரும் கோயிலுக்குள் நுழையக்கூடாது என்று உத்தரவுபோடுவோம்' என்று எல்லாஅர்ச்சகர்களும் சேர்ந்து இன்றே முடிவுகட்டினார்கள். ஆழ்வானே! இருந்தபோதிலும் தேவரீர் நல்லவர்; ஸாத்விகர். ஆகையால் இத்தகைய தேவரீர் அரங்கனை ஸேவிக்கக்கோயிலுக்குள்ளே போகலாம்" என்று கூறினார்கள். இந்த வார்த்தையைக் கேட்ட கூரத்தாழ்வான் மிகவும் துன்புற்றவராய் அவர்களைப் பார்த்துப் பின்வருமாறு கூறினார்—"நான் ஸ்ரீராமாநுஜரோடு ஸம்ப₃ந்த₄ம் உடையவனே என்பதில் ஐயமில்லை. ஆகையால் ரங்க₃நாத₂னுடைய ஸேவை எனக்கு வேண்டாம்; ஒருபோதும் வேண்டாம்." என்றுகூறி, அக்கணத்திலேயே (ஆசார்யநிஷ்டை₂யாகிற) செல்வம் நிறைந்த கூரத்தாழ்வான் பிள்ளைகளோடும், மணாட்டுப் பெண்ணோடும், மனைவியோடுங்கூட திருமாலிருஞ்சோலைக்கு விரைவில் புறப்பட்டார்.

१२. स तत्र सुन्दरभुजं नत्वा भक्त्या वनाचले।
नित्यवासपरो धीमान् कञ्चित्कालमवर्तत ॥

१३. तदा कूरेश्वरो विद्वान् चक्रे स्तोत्रचतुष्टयम्।
श्रीस्तवं सुन्दरभुजस्तवं चैवातिमानुषम् ॥

१४. श्रीवैकुण्ठस्तवमिति ख्यातमेतच्चतुष्टयम्।
तं चैवं प्रार्थयामास श्रीसुन्दरभुजस्तवे ॥
आचार्यभक्तः कूरेशः श्रीसुन्दरभुजं प्रति ॥

१५. विज्ञापनां वनगिरीश्वर! सत्यरूपा-
मङ्गीकुरुष्व करुणार्णव! मामकीनाम्।
श्रीरङ्गधाम्नि च यथापुरमेव सोऽहं
रामानुजार्यवशगः परिवर्तिषीय ॥

---

### மாலிருஞ்சோலையில் ஸ்தவங்கள் அருளிச்செய்தல்

12-*16. அறிவாளியான அக்கூரத்தாழ்வான் அந்த அழகர்மலையில் சுந்தரத்தோளுடையானை ப$_4$க்தியோடு வணங்கி நித்யவாஸம் செய்பவராய் சிலகாலம் வாழ்ந்தார். பெரும்புலமைபெற்றவரான அக்கூரத்தாழ்வான் அக்காலத்தில் (1) ஸ்ரீஸ்தவம், (2) ஸுந்த$_3$ரபா$_3$ஹுஸ்தவம், (3) அதிமாநுஷஸ்தவம், (4) ஸ்ரீவைகுண்ட$_2$ஸ்தவம் என்று பெயர் பெற்ற நான்கு துதிகளை அருளிச்செய்தார். திருமாலிருஞ்சோலை அழகரிடம் ஸுந்த$_3$ரபா$_3$ஹுஸ்தவத்திலே ஆசார்ய ப$_4$க்தரான கூரத்தாழ்வான் பின்வருமாறு பிரார்த்தி$_2$த்தார்— "திருமாலிருஞ்சோலை அழகரே! கருணைக்கடலே! ஸத்யமான அடியேனுடைய இவ்விண்ணப்பத்தை ஏற்றுக்கொள்ள வேணும். திருவரங்கம் பெரியகோயிலிலே முன்போலவே ஸ்ரீராமாநுஜாசார்யருக்கு வஶப்பட்டவனாய் வாழக்கடவேன்" [ஸுந்த$_3$ரபா$_3$ஹுஸ்தவம் 129] என்று பிரார்த்தி$_2$த்துக் கொண்டு கூரத்தாழ்வான் அங்கே இனிது வாழ்ந்தார்.

१६. इत्येवं प्रार्थयंस्तत्र कूरेशः सुखमास्थितः।
तदा गोष्ठीपुरे तस्य गोष्ठीपूर्णस्य तिष्ठतः॥

१७. वत्सराणां सुखेनैव पञ्चोत्तरशतं गतम्।
गोष्ठीपूर्णस्य चरमदशायां वैष्णवोत्तमाः!॥

१८. शिष्याः प्रोचुरिदं वाक्यं गोष्ठीपूर्णं दृढव्रतम्।
किं मन्यसे गुरुश्रेष्ठ! त्वमद्य वद तच्च नः॥

१९. तेषां तद्वचनं श्रुत्वा गोष्ठीपूर्णोऽब्रवीत्स तान्।
चक्रवर्तितनूजस्य पुरा वै कश्चिदण्डजः॥

२०. व्रणमुत्पादयामास हृदि भागवतोत्तमाः!।
प्रपत्तिरपि मास्त्वेवमिति मे वदतोऽनिशम्॥

---

### திருக்கோட்டியூர் நம்பியின் சரமதசை

16*-*24. அப்போது திருக்கோட்டியூரில் திருக்கோட்டியூர்நம்பி நூற்றைந்து பிராயம் உள்ளவராய் இனிது வாழ்ந்து வந்தார். திருக்கோட்டியூர் நம்பியின் சரமத₃ஶையிலே உறுதியான உபாயாத்₄யவஸாயமுடைய அவரைப்பார்த்து வைஷ்ணவோத்தமர்களான ஶிஷ்யர்கள் "ஆசார்யஶ்ரேஷ்ட₂ரே! தேவரீர் திருவுள்ளத்திலே நினைத்திருக்கிற நினைவு என்ன என்பதை எங்களுக்குச் சொல்லவேணும்" என்னும் வார்த்தையைக் கூறினார்கள். அவர்களுடைய அந்த வார்த்தையைக் கேட்ட திருக்கோஷ்டியூர் நம்பி அவர்களைப்பார்த்து "மஹாத்மாக்களான பா₄க₃வதோத்தமர்களே! சக்ரவர்த்தித்திருமகன் திருவுள்ளத்தை முன்' பொரு சமயம் (விபீ₄ஷணஶரணாக₃தி ப்ரகரணத்தில்) ஓர் பக்ஷி (புரு) புண்படுத்திற்று. 'ஶரணாக₃தி செய்யாவிடினும் (நம் இருப்பிடத்திற்கு வந்தவனையும் புருவைப்போல்) எப்போதும் ரக்ஷிக்கவேண்டியதே' என்று எம்பெருமான் கூறும்போது, அவனுடைய அந்த வார்த்தையை நினைத்து

२१. का चिन्तावर्ततेदानीं निर्भरस्य महात्मकाः! ।
इत्युक्त्वा निर्भरो ध्यायन् यामुनार्यपदाम्बुजम् ॥
२२. जगाम स हरेर्लोकं यत्र मोहो न विद्यते ।
प्रायेण दुःखितास्सर्वे तद्वियोगे गुरुप्रियाः ॥
२३. अभवन् वैष्णवास्तस्य शिष्याः पुत्रादयस्तदा ।
नारायणार्यस्सहसा गोष्ठीपूर्णस्य पुत्रकः ॥
२४. ब्रह्ममेधेन संस्कारं स चकार पितुस्तदा ।
ततः श्रीलक्ष्मणार्येण प्रेषितः स च वैष्णवः ॥
२५. श्रीरङ्गनगरं प्राप्य वृत्तं कूरेश्वरस्य तत् ।
सर्वं विदित्वा विशदमभ्यगात्सुन्दराचलम् ॥

---

நிர்ப்ப₄ரனாய் இருக்கும் எனக்கு இப்போது வேறொரு நினைவுண்டோ ?" என்று கூறி, கவலையற்றவராய், ஆள வந்தாரின் திருவடித்தாமரைகளைத் தியானித்துக்கொண்டு மயக்கமற்ற ஸ்ரீவைகுண்ட₂லோகத்திற்குச் சென்றார். ஆசார்யப₄க்தியுடையவர்களான அவருடைய ஶிஷ்யர் கள், புத்ரபுத்ரிகள் முதலான ஸ்ரீவைஷ்ணவர்களனைவரும் அவருடைய பிரிவினாலே மிகவும் துன்புற்றனர். திருக் கோட்டியூர்நம்பியின் திருக்குமாரரான (தெற்காழ்வார் என்று பெயர்பெற்ற) நாராயணாசார்யர் தம் தந்தையான நம்பிக்கு ப்₃ரஹ்மமேத₄விதி₄ப்படி ஸம்ஸ்காரங்களைச்செய்தார்.

## கூரத்தாழ்வானின் உகப்பு

24*-30. அதற்குப்பின் ஸ்ரீராமாநுஜரால் அனுப்பப் பெற்ற சிறியாண்டான் ஸ்ரீரங்கநகரத்திற்கு வந்து, கூரத் தாழ்வானைப் பற்றிய செய்தியனைத்தையும் தெளிவாக அறிந்து, திருமாலிருஞ்சோலைக்குச் சென்றார். அங்கு அவர் கருணைக்கடலான கூரத்தாழ்வானைக் கண்டு வணங்கி, யதி ராஜரைப் பற்றிய எல்லாச் செய்திகளையும் மஹாத்மா வான கூரத்தாழ்வானிடம் ராமாநுஜாசார்யரின் ஆணைப்படி

२६. तत्र कूराधिपं दृष्ट्वा प्रणम्य स दयानिधिम्।
सर्वं यतीशवृत्तान्तं कूरेशाय महात्मने॥

२७. न्यवेदयत्सान्त्वपूर्वं विशदं चाज्ञया गुरोः।
ततः पुनरुवाचेदं कूरेशं स च वैष्णवः॥

२८. पूर्णाचार्यवियोगेन तव नेत्रवियोगतः।
दुःखितो वर्तते चाद्य यादवाद्रौ यतीश्वरः॥

२९. तच्छ्रुत्वा तमुवाचेदं कूरेशो वैष्णवं प्रति।
जगद्गुरुर्लक्ष्मणार्यः सुखं यदि हि वर्तते॥
तदेवालं ममेत्युक्त्वा सन्तुष्टः कूरशाऽभूत्॥

३०. अनूपमं लक्ष्मणदेशिकस्य निशम्य माहात्म्यमतिप्रहृष्टः।
अपूजयत्तं यतिराजबुद्ध्या श्रीवैष्णवं कूरपतिर्महात्मा॥

इति श्रीप्रपन्नामृते रामानुजचरित्रे कूरेशस्य सुन्दराचलनित्यवासो नाम पञ्चाशोऽध्यायः॥

---

தெளிவாகவும், ஆறுதல் வார்த்தைகளோடுகூடவும் விண்ணப்பித்தார். அதற்குப்பின் அவ்வைவஷ்ணவர் மறுபடியும் கூரத்தாழ்வானைக் குறித்து "பெரியநம்பியின் பிரிவினலும் தேவரீர் கண்ணிழந்ததினலும் யதிராஜர் மிகவும் துன்புற்றவராய் யாத₃வாத்₃ரியில் வாழ்கிருர்" என்று உரைத்தார். அதைக்கேட்ட கூரத்தாழ்வான் அவ்வைவஷ்ணவரைப் பார்த்து "ஜக₃த்₃கு₃ருவான ஸ்ரீராமாநுஜர் ஸுக₂மாக வாழ்கிருராகில் அதுவே அடியேற்குப் போதுமானது" என்று கூறி மிகவுகந்தார். ஸ்ரீராமாநுஜாசார்யருடைய ஒப்பற்ற பெருமைகளையெல்லாம் கேட்டு மஹாத்மாவான கூரத்தாழ்வான் அந்த ஸ்ரீவைஷ்ணவரையே யதிராஜராக நினைத்து ஆராதி₄த்தார்.

ஸ்ரீப்ரபந்நாம்ருதத்தில் ராமாநுஜசரித்திரத்தில்,
ஆழ்வான் திருமாலிருஞ்சோலையில் நித்யவாஸம் செய்தலாகிற
ஐம்பதாம் அத்தியாயம் நிறைவுற்றது.

एकपञ्चाशोऽध्यायः

१. ततश्चोलमहीपालः पापी लोकस्य कण्टकः।
परिहासेन लिखितं द्रोणमस्ति ततः परम्॥

२. वाक्यं श्रुत्वाऽतिसंक्रुद्धो भूपो भूतोऽरुणेक्षणः।
उत्पाटयित्वा नेत्राणि पूर्णकूरेशयोस्तदा॥

३. विष्णुस्थानानि सर्वाणि चोलदेशस्थितानि च।
नाशयामास दुष्टात्मा रङ्गस्थानं विना ततः॥

४. रङ्गं क्षेत्रं तथा कर्तुमुद्युक्तो दुर्मतिस्तदा।
प्रतस्थे सैनिकैस्सर्वैः सहसा विष्णुकण्टकः॥

---

## ஐம்பத்தோராம் அத்தியாயம்

## கோவிந்தராஜர் ப்ரதிஷ்டை

### க்ருமிகண்ட₂னின் அதிக்ரமம்

1-3. அதற்குப்பின் (க்ருமிகண்ட₂ன் என்று பெயர் பெறப்போகும்) சோழவரசன் உலகத்திற்கே தீங்கிழைக்கும் பாபியாகையாலே, 'ஶிவத்துக்கு (குறுணிக்கு) மேல் த்₃ரோணம் (பதக்கு) உண்டு' என்று கூரத்தாழ்வானால் ப்ரிஹாஸமாக எழுதப்பட்ட வாக்யத்தைக் கேட்டபின் மிகவும் கோபம்கொண்டு, கண்கள் சிவக்கப்பெற்றவனாய், கூரத்தாழ்வான் பெரியநம்பிகளின் கண்களைப் பறித்த பின்பும், தீயநெஞ்சினனாகையாலே சோழதே₃ஶத்திலுள்ள விஷ்ணு ஆலயங்களில் ஸ்ரீரங்கம் தவிர்ந்த மற்றவை யனைத்திலும் மதில் முதலியவற்றை இடித்து அழித்தான்.

### க்ருமிகண்ட₂ன் கழுத்தில் புழு உண்டாகி இறந்தது

4-6. து₃ஷ்டபு₃த்₃தி₄யாய் விஷ்ணுத்₃வேஷியான அவன் அப்போதே ஸ்ரீரங்கத்தையும் அழிக்க நினைத்து, தன் சேனாவீரர்கள் அனைவரோடும் சடக்கெனப் புறப்பட்டான்.

५. मार्गे तत्र च सायाह्ने कञ्चिद्ग्रामं समाश्रितः।
तद्रात्रौ तस्य कण्ठे तु महद्व्रणमजायत॥

६. क्रिमयो बहवस्तस्मात् अजायन्त व्रणात्तदा।
औदर्यरोगस्तस्यासीत्ताभ्यां स च मृतिं गतः॥

७. ततः श्रीरङ्गनगरात् यादवाद्रिं समागताः।
वरदार्यादयस्सर्वे शिष्यास्ते देशिकप्रियाः॥

८. प्रियाख्यानं यतीन्द्राय शंसितुं तेन सङ्गताः।
कल्याणसरसस्तीरे वसन्तं वैष्णवास्तदा॥

९. ददृशुर्लक्ष्मणाचार्यं कृतजप्यं जगद्गुरुम्।
प्रणम्य यतिराजाय वचनं चेदमब्रुवन्॥

---

அப்போது வழியில் ஒருநாள் மாலையில் ஒரு கிராமத்தில் தங்கினன். அன்றிரவு அவனது கழுத்தில் பெரிய புண் உண்டாயிற்று. அப்போதே அந்தப் புண்ணிலிருந்து ஏராளமான க்ரிமிகள் (புழுக்கள்) உண்டாயின. வயிற்று வலியும் ஏற்பட்டது. அந்த வயிற்றுவலியாலும், கழுத்துப் புண்ணாலும் (ஸ்ரீரங்கத்தை அடைவதற்கு முன்பே) அவன் இறந்தொழிந்தான்.

## யதிராஜரின் ஆநந்தம்

7-18. அதற்குப் பின் ஸ்ரீரங்கநகரிலிருந்து ஆசார்ய பக்தர்களான வரதவிஷ்ணு எனப்படும் நடாதூராழ்வான் முதலான வைஷ்ணவர்களான சிஷ்யர்கள் அனைவரும் திருநாராயணபுரம் வந்து, கல்யாண ஸரஸ்ஸின் கரையில் எழுந்தருளியிருந்த எம்பெருமானாரிடம் இந்த நற்செய்தி யைச் சொல்லுவதற்காக அவரோடு கூடினார்கள். ஜகதாசார்யரான ஸ்ரீராமாநுஜர் ஜபம் செய்து முடித்த சமயத்தில் அவரைக் கண்டார்கள். அவரை வணங்கி, அவரிடம் "ஸ்வாமிந்! பெரியநம்பிக்கும், கூரத்தாழ்வானுக்கும்

१०. पूर्णकूरेशयोस्स्वामिन्! अपकर्ता स भूपतिः।
कण्ठव्रणादिरोगेण नीतो वैवस्वतक्षयम्॥

११. तेषां तद्वचनं श्रुत्वा महत्कर्णामृतं तदा।
आनन्दार्णवनिर्मग्नश्चतुर्भुज इवापरः॥

१२. परिरभ्याशु बाहुभ्यां प्रेम्णा तान् वैष्णवोत्तमान्।
आनन्दाश्रुपरीतात्मा लक्ष्मणार्यो जगाद सः॥

१३. बहुदूरादिहागत्य प्रियवृत्तान्तमद्य मे।
वक्तृभ्य इदमार्येभ्यः किं करिष्यामि वः प्रियम्॥

१४. रजतं वा सुवर्णं वा रत्नानि विविधानि वा।
राज्यं वा त्रिषु लोकेषु नैतदर्हति भाषितम्॥

---

தீங்கு புரிந்த அந்தச் சோழராஜா கழுத்துப்புண் முதலான நோய்களாலே யமனது உலகையடைந்தான்." என்று வார்த்தை சொன்னார்கள். பெரிய கர்ணாம்ருதம்போன்ற அவர்களுடைய அவ்வார்த்தையைக் கேட்டவுடன் ஆனந்தக் கடலில் மூழ்கியவராய், 'நால் தடந்தோளனாகிற மற்றொரு எம்பெருமானோ இவர்?' என்னலாம்படி தோள்கள் பூரிக்கப்பெற்று, அத்தோள்களாலே உடனே அந்த வைஷ்ணவோத்தமர்களை அன்புடன் அணைத்துக்கொண்டு, ஆனந்தக்கண்ணீர் நிறைந்தவராய் அந்த ஸ்ரீராமாநுஜர் பின்வருமாறு கூறினார்—"வெகு தூரத்திலிருந்து இங்கு வந்து, இனிய செய்தியை இன்று எனக்குச் சொன்ன நல்லோர்களான உங்களுக்கு என்ன பரிசு கொடுப்பேன்? வெள்ளியோ, தங்கமோ, பலவகைப்பட்ட ரத்தினங்களோ, மூவுலகங்களிலுமுள்ள ராஜ்யமோ இந்தச் செய்திக்கு இணையாகாதே; அவற்றை இச்செய்திக்குச் சமமாக நான் நினைக்கவில்லையே. வைஷ்ணவோத்தமர்களே! இந்த நற்செய்தியைச் சொன்ன உங்களுக்குக் கொடுக்கத் தகுந்ததான எப்பொருளையும் யான் காணவில்லையே" என்று விதேஹராஜகுமாரியான

१५. नहि पश्यामि तत्साम्यं पृथिव्यां वा नरोत्तमाः।
सदृशं मत्प्रियाख्याने वः प्रदातुं भवेत् क्षमम्॥
१६. तद्रावणवधं श्रुत्वा वैदेही पवनात्मजात्।
हर्षेण महता युक्ता सौहार्दादब्रवीत् यथा॥
१७. तथैवोक्त्वा पुनस्तेभ्यो मन्त्ररत्नं ददौ शुभम्।
ततस्तानाह योगीन्द्रः तत्रत्यान् वैष्णवांस्तदा॥
१८. बभूवान्वर्थनामास्य कल्याणसरसोऽधुना।
ते तथेत्यब्रुवन् सर्वे मुदिता वैष्णवास्तदा॥
१९. ततो गत्वाथ नृहरेः सन्निधौ यमिनां वरः।
बद्धाञ्जलिरुवाचेदं हरये कृतवन्दनः॥
२०. हिरण्यकशिपुं पूर्वं प्रह्लादद्रोहकारिणम्।
तं हत्वा त्वं जगत्सर्वं यथा रक्षितवान् पुरा॥

---

ஸீதை ராவணன் இறந்தான் என்று அநுமனிடமிருந்து கேட்டவுடன் பேரானந்த₃ம் அடைந்து, அன்பினுலே என்ன வார்த்தைகளைச் சொன்னுளோ அந்த வார்த்தைகளையெல் லாம் யதிராஜர் அவர்களுக்குக் கூறி (அவர்களுக்குக் கைம்மாருக) மங்க₃ளமான த்₃வயத்தை (அர்த்த₂த்துடன்) மறுபடியும் உபதே₃ஶித்தார். அதற்குப்பின் அப்போது அங்குள்ள ஸ்ரீவைஷ்ணவர்களிடம் யதிராஜர் "இந்தக் கல்யாணஸரஸ்ஸின் பெயர் இப்போதே பொருத்தமுள்ள தாயிற்று" என்று கூறினுர். பேரானந்த₃ம்கொண்ட அவ் வைஷ்ணவர்களும் அதை 'அவ்வண்ணமே' என்று ஆமோதி₃த்தனர்.

### நரசிங்கனின் பேரருள்

19-23. அதற்குப்பின் யதிராஜர் நரசிங்கனின் ஸந்நி தி₄க்குச் சென்று கைகூப்பி நரசிங்கனை வணங்கி, "எம் பெருமானே! ப்ரஹ்லாத₃னுக்கு த்₃ரோஹம்செய்த ஹிரண்ய கசிபுவை முன்னெருகால் கொன்று உலகனைத்தையும்

२१. तथाऽधुना च चोलेन्द्रं भगवन्! विष्णुकण्टकम्।
क्रिमिकण्ठं विधायाशु तं हत्वा चोलमण्डले॥
२२. रङ्गादिदिव्यदेशेषु धर्मं स्थापितवानसि।
एवं विज्ञापितस्तेन नृसिंहो भगवान् हरिः॥
२३. शिष्यसंघसमेताय यतीन्द्राय महात्मने।
सन्तुष्टः प्रददौ तीर्थं शठकोपं च मालिकाम्॥
२४. संप्रेषितस्ततस्तेन हरिणा यतिभूपतिः।
नारायणं नमस्कृत्य संपत्पुत्रं च सादरम्॥
२५. अनुज्ञातस्तदा ताभ्यां श्रीरङ्गगमनोत्सुकः।
तत्र तत्र स्थितान् सर्वान् समानीय यतीश्वरः॥

---

எப்படி ரக்ஷித்தீரோ அப்படியே விஷ்ணுத்₃வேஷியான சோழராஜாவையும் க்ருமிகண்ட₂னாக ஆக்கி, விரைவில் அவனைக்கொன்று, சோழமண்ட₃லத்திலுள்ள ஸ்ரீரங்க₃ம் முதலான தி₃வ்யதே₃ஶங்களில் அறத்தை நிலைநிறுத்தினீர்" என்று அருளினார். இப்படி யதிராஜரால் விண்ணப்பிக்கப்பெற்ற நரசிங்கப்பெருமான் ஶிஷ்யர்களோடு கூடிய மஹாபுருஷரான எதிகட்கிறைவரிடம் மிகவுகப்புடையவனாய், தீர்த்த₂ம், ஶட₂கோபம், மாலை ஆகியவற்றை அருளினான்.

## திருநாரணனிடமும், ஸ்ரீவைஷ்ணவர்களிடமும் விடைபெறுதல்

24-*30. அந்த நரசிங்கனால் விடைகொடுக்கப்பெற்ற யதிராஜர் திருநாரணனையும், செல்வப்பிள்ளையையும் அன்போடு வணங்கி, அவர்களாலும் அப்போதே விடைகொடுக்கப்பெற்று,ஸ்ரீரங்க₃ம் செல்ல விரும்பியவராய்,அவ்வூரில்ஆங்காங்கு இருந்தவர்களாய், ஜ்ஞானப₄க்திகளை உடைய எல்லா ஸ்ரீவைஷ்ணவ ஶிஷ்யர்களையும் அழைத்து, அவர்களைக் குறித்துப் பின்வரும் மங்க₃ளமான வார்த்தையை அருளினார்-

२६. ज्ञानभक्तिपरान् शिष्यान् व्याजहार वचः शुभम्।
श्रीरङ्गनगरादेत्य यादवाद्रिगतस्य मे ॥

२७. अधुना वत्सरादस्मात् गता द्वादश वत्सराः।
अधुना वर्तते देशः स चायं निरुपद्रवः॥

२८. श्रीरङ्गं प्रति गच्छामि सेवार्थं रङ्गिणो हरेः।
ते यूयमवधानेन यादवाद्रिपतेर्हरेः॥

२९. नारायणस्य देवस्य संपत्पुत्रस्य वैष्णवाः!।
नित्योत्सवान् प्रकुर्वन्तो माससंवत्सरोत्सवान्॥

३०. सुखमत्रैव सततं ध्रुवं मे वसताज्ञया।
तन्निशम्य यतीन्द्रस्य वचनं वैष्णवोत्तमाः॥

---

"வைஷ்ணவர்களே! ஸ்ரீரங்க₃த்திலிருந்து இந்த யாத₃வாத்₃ரிக்கு வந்து இப்போது பன்னிரண்டு வருடங்கள் கடந்து விட்டன. இப்போது அந்த ஸ்ரீரங்க₃தி₃வ்யதே₃ஶம் உபத்₃ரவமற்றதாய் விளங்குகிறது. ஆகையால் அரங்கநகரப்பனே ஸேவிப்பதற்காக ஸ்ரீரங்க₃த்தைக் குறித்து விடை கொள்கின்றேன். நீங்களனைவரும் எனது ஆணையாலே யாத₃வாத்₃ரிநாயகனுன திருநாராயணப் பெருமாளுக்கும், செல்வப்பிள்ளைக்கும் நித்யோத்ஸவம், மாஸோத்ஸவம, ஸம்வத்ஸரோத்ஸவம் ஆகியவற்றைக் குறையறச் செய்து கொண்டு இங்கேயே நிலையாக இனிது வாழ்வீர்களாக" என்று.

## ஸ்ரீவைஷ்ணவர்களின் பிரிவாற்றுமை

30*-33. யதிராஜரின் அந்த வார்த்தையைக் கேட்ட வைஷ்ணவோத்தமர்கள் அனைவரும் அவரது பிரிவைச் சிறிதும் பொறுக்கமாட்டாதவர்களாய், அவருடைய திருவடிகளில் விழுந்து கண்ணீர் விட்டுக்கொண்டு "கரு

३१. पतित्वा पादयोस्सर्वे तद्वियोगासहिष्णवः ।
अश्रूणि ते प्रमुञ्चन्तो वचनं चेदमब्रुवन् ॥

३२. भवतोऽद्य वियोगेन मुहूर्तमपि देशिक! ।
न जीवामो वयं स्वामिन्! जलान्मत्स्या इवोद्धृताः ॥

३३. यत्र यत्र भवान् लोकरक्षार्थं गन्तुमुद्यतः ।
तत्र तत्र नयस्वास्मान् दासभूतान् दयानिधे! ॥

३४. तदा यतीश्वरो धीमान् मनस्येवमचिन्तयत् ।
अत्रत्यानां हि सर्वेषां मत्सेवाप्रेमशालिनाम् ॥

३५. आराधनार्थमधुना स्वावतारार्थसूचकः ।
विग्रहः कारितव्यो हि प्रतिबिम्ब इवापरः ॥

---

ணைக்கடலான ஆசார்யரே! நீரைப் பிரிந்த மீன்போலே தேவரீரைப் பிரிந்த நாங்கள் உயிர் வாழமாட்டோம். ஆகையால் தேவரீர் உலகை ரக்ஷிப்பதற்கு எங்கெல்லாம் எழுந்தருள்கின்றீரோ அங்கெல்லாம் அடிமைகளான எங்களையும் அழைத்துச் செல்லும்'' என்னும் வார்த்தையைக் கூறினர்.

## தமருகந்த திருமேனியை அளித்தல்

34-42. அப்போது பேரறிவாளரான யதிராஜர் ''எனது ஸேவையில் ஈடுபாடுடைய இங்குள்ள அனைவரும் திருவாராதநம் செய்வதற்காக—எனது அவதார ப்ரயோஜனத்தை உணர்த்துவதாய், எனது ப்ரதிபிம்பம் போல் உள்ளதான எனது விக்ரஹம் இப்போது செய்விக்கப்படவேண்டும்'' என்று திருவுள்ளங்கொண்டார். அதற்குப் பின் வல்லவர்களான சிற்பிகளைக்கொண்டு தாம் ஓர் அவதாரபுருஷர் என்பதை உணர்த்தும்படியான மிகச் சிறந்த விக்ரஹத்தை அப்போதே நிருமிக்கச் செய்து, அதில் தம் ஶக்தியை ப்ரவேஶிக்கச் செய்து,

३६. ततो यतीश्वरः श्रीमान् शिल्पिभिर्निपुणैस्तदा।
कारयित्वा स्वावतारसूचकं विग्रहं वरम्॥

३७. तस्मिन् स्वशक्तिमावाह्य परिरभ्य च सादरम्।
विधिज्ञैर्वैष्णवैस्साकं प्रतिष्ठाप्य यथाविधि॥

३८. सर्वान् शिष्यान् समाहूय व्याजहार वचः शुभम्।
हितार्थं भवतामद्य विग्रहः कारितो मया॥

३९. विग्रहे परिपूर्णेऽस्मिन् नित्यं कुरुत पूजनम्।
या प्रीतिर्मयि वोऽस्त्वत्र तामर्चायां ममादरात्॥

४०. मुक्ताहङ्कारिणस्सर्वे यूयमन्योन्यसौहृदाः।
इत्येवमनुशास्यैतान् वैष्णवेभ्यश्च विग्रहम्॥

४१. स्वीयं दत्वा ततस्तैश्च प्रेषितो यतिपुङ्गवः।
संपत्पुत्रस्य विश्लेषमसहिष्णुः कथञ्चन॥

---

அன்போடு அதைத் தழுவிக்கொண்டு, ஶாஸ்த்ரமறிந்த ஸ்ரீவைஷ்ணவர்களைக் கொண்டு முறைப்படி அதைப் பிரதிஷ்டை செய்வித்து, எல்லா ஶிஷ்யர்களையும் அழைத்து "உங்களுடைய நன்மையின் பொருட்டு இந்த விக்ரஹம் என்னால் செய்விக்கப்பட்டது. எனது பரிபூர்ண ஶக்தியை யுடைய இந்த விக்ரஹத்தை தினந்தோறும் ஆராதிப்பீர்களாக. என்னிடமுள்ள ப்ரீதியை இந்த விக்ரஹத்திடமும் செய்வீர்களாக. என்னுடைய இந்த அர்ச்சாவிக்ரஹத்தில் அன்பாலே, நீங்களனைவரும் அஹங்காரம் அற்றவர்களாய், ஒருவருக்கொருவர் நட்புடையவர்களாய் வாழ்வீர்களாக" என்னும் மங்களமான வார்த்தையைக் கூறினர். இவ்வண்ணமாக அவ்வைஷ்ணவர்களை நியமித்து, அவர்களுக்குத் தம்முடைய விக்ரஹத்தையளித்து, அவர்களால் விடைகொடுக்கப்பெற்ற யதிராஜர் செல்வப் பிள்ளையின் பிரிவை ஆற்றமாட்டாதவராய், ஒருவாறு

४२ अनुज्ञातस्ततस्तेन यादवाद्रेर्यतीश्वरः ।
आजगामाञ्जसा यत्र भगवान् रङ्गभूपतिः ॥

४३. उषित्वा दण्डकारण्ये चतुर्दश हि वत्सरान् ।
वर्षे पञ्चदशे राममयोध्यां पुनरागतम् ॥

४४. तं दृष्ट्वा संप्रहृष्टास्ते अयोध्यापुरवासिनः ।
तथा रामानुजं दृष्ट्वा श्रीरङ्गपुरवासिनः ॥

४५. तदा दाशरथिः छत्रं जग्राह यतिभूपतेः ।
गोविन्दो व्यजने तस्य सानुजः पर्यवीजयत् ॥

४६. शङ्खभेरीनिनादैश्च दुन्दुभीनां च निःस्वनैः ।
वन्दिनां जयशब्दैश्च वेदपाठैर्द्विजन्मनाम् ॥

४७. वाचामगोचरेणैव वैभवेन यतीश्वरः ।
रङ्गक्षेत्रं विवेशाशु संप्रहृष्टः सुहृज्जनैः ॥

---

அவராலும் விடைகொடுக்கப்பெற்று, யாதவாத்3ரியிலிருந்து ஸ்ரீரங்க3நாத2ன் வாழும் நகரத்திற்கு விரைவில் வந்தார்.

## ஸ்ரீரங்க3த்தில் வரவேற்பு

43-47. த3ண்ட3கவனத்தில் 14 வருடங்கள் வாழ்ந்து, பதினைந்தாவது வருஷத்தில் அயோத்திக்குத் திரும்பிவந்த ராமனைக்கண்டு அயோத்திநகரவாஸிகள் எப்படிப் பேரானந்த3ம் அடைந்தார்களோ அப்படியே ஸ்ரீரங்கநகரவாஸிகளும் ஸ்ரீராமாநுஜரைக்கண்டு பேரானந்த3மடைந்தார்கள். அப்போது எதிகட்கிறைவர்க்கு முதலியாண்டான் குடைபிடித்தார். தம்பியோடுகூடிய எம்பார் சாமரம் வீசினார். ஶங்க2ம், பே4ரி, து3ந்து3பி4 ஆகிய வாத்3யங்களின் முழக்கங்களோடும், வந்தி3களின் ஜயஶப்3த3ங்களோடும், அந்தணர்களின் வேத3மந்திரங்களோடும், வாக்குக்கு நிலமல்லாத வைப4வத்தோடு, ப4க்தஜனங்களோடு கூடிய யதிராஜர் மிக வுகந்தவராய் ஸ்ரீரங்க3நக3ரத்தில் விரைவில் பிரவேஶித்தார்.

४८. दृष्ट्वा रङ्गेश्वरं हृष्टो धनं प्राप्य त्विवाधनः।
महते रङ्गराजाय प्रणम्य प्राञ्जलिः स्थितः॥

४९. स च रङ्गेश्वरः श्रीमान् प्रणतं यतिभूपतिम्।
इत्युवाच प्रवालोष्ठस्फुरद्दशनसुप्रभः॥

५०. अस्य हेतोर्यतिश्रेष्ठ! क्रिमिकण्ठस्य दुर्मतेः।
मां विहाय त्वया देशाः चरिताः शैलकाननाः॥

५१. क्लेशश्च सुमहान् प्राप्तः शिष्यैः साकं यतीश्वर!।
इत्युक्तो रङ्गराजेन यतिराजोऽब्रवीदिदम्॥

५२. त्वयि तिष्ठति रंगेश! प्रणतार्तिहरे हरौ।
किं दुःखं वर्ततेऽस्माकं त्वद्दासानां सुरेश्वर!॥

---

## அரங்கன் அருள்

48-*55. ஸ்ரீரங்கராஜனை ஸேவித்து, பணமிழந்தவன் பணத்தைப் பெற்றதுபோலே உகந்தவராய்ப் பெரியபெருமாளை வணங்கி, கைகூப்பிநின்றார் யதிராஜர். வணங்கிய யதிராஜரைப் பார்த்த ஸ்ரிய:பதியான ரங்கநாதன் பவளச் செவ்வாயிலுள்ள திருமுத்துக்கள் ஒளிவீசும்படியாக "யதிராஜரே! தீயவனான இந்த க்ருமிகண்டன் காரணமாக என்னைக் கைவிட்டு, நீர் பல தேசங்களையும், மலைகளையும், காடுகளையும் கடந்து சென்றீர். ஶிஷ்யர்களோடுகூட பெருந்துன்பத்தை அநுபவித்தீர்" என்று கூறினான். ரங்கராஜனால் இப்படி அருளிச்செய்யப்பட்ட யதிராஜர் "திருவரங்கப்பெருமானே! தேவதேவனே! அடியார்களது துன்பத்தை நீக்கும் தேவரீர் இருக்கும்போது உம் அடிமைகளான எங்களுக்கு என்ன துன்பம் இருக்கிறது?" என்று வார்த்தை சொன்னார். அதற்குப்பின் ஸ்ரீரங்கநாதனும் மஹாத்மாவான யதிராஜருக்கு க்ருபையாலே தீர்த்தம், பிரஸாதம், ஸ்ரீஶடகோபம் ஆகியவற்றை

५३. ततः श्रीरङ्गनाथश्च यतीन्द्राय महात्मने।
तीर्थं प्रसादं प्रददौ कृपया श्रीपराङ्कुशम्॥

५४. स्वीकृत्य सर्वं योगीन्द्रः कृतकृत्यः प्रहृष्टधीः।
अनुज्ञातो रङ्गभर्त्रा मठं याहीति विष्णुना॥

५५. रङ्गं सर्वं समालोक्य कूरेशगृहमाविशत्।
ततः कूरपतिः श्रुत्वा यतीन्द्रागमनं शुभम्॥

५६. सहसा यतिराजस्य पादयोः प्रणनाम सः।
उत्थाप्य सहसा दोर्भ्यां तं कूरेशं यतीश्वरः॥

५७. परिरभ्याश्रुधाराभिः प्रेम्णा सिञ्चन् मुहुर्मुहुः।
दुःखार्णवनिमग्नस्सन्नित्युवाच दयानिधिः॥

५८. कथं दुःखं त्वया प्राप्तं महदेतद्दयापर!।
एवमुक्तः स कूरेशो यतिराजमथाब्रवीत्॥

---

அளித்தான். யதிராஜரும் அவையனைத்தையும் ஏற்றுக் கொண்டு பெருப்பேறுபெற்றவராய் மிகவுகந்து 'உமது மடத்திற்குச் செல்வீராக' என்று திருமாலான அரங்கனால் விடைகொடுக்கப் பெற்று, ஸ்ரீரங்கம் முழுவதையும் கடாக்ஷித்துக்கொண்டு கூரத்தாழ்வானது திருமாளிகைக்குள் நுழைந்தார்.

## யதிராஜரும், ஆழ்வானும்

55*-62. அதற்குப்பின் கூரத்தாழ்வான் யதிராஜருடைய மங்களமான வரவைக் கேள்விப்பட்டுச் சடக்கென அவருடைய திருவடிகளிலே வணங்கினார். கருணைக் கடலான யதிராஜரும் விரைவில் அக்கூரத்தாழ்வானை எழுப்பி, இருகைகளாலும் ஆரத்தழுவி, அன்பாலே அடிக்கடி கண்ணீர் மழையைப் பொழியவிட்டுக்கொண்டு துன்பக் கடலுள் மூழ்கியவராய் "கருணைவடிவானவரே! உமக்கு எப்படி இந்தப் பெருந்துன்பம் நேரிட்டது?" என்று வினவினார்.

५९. वैष्णवानामूर्ध्वपुण्ड्रं दृष्ट्वा वक्रेण संस्थितम्।
इति किंनु मया पूर्वं हसितं यतिपुङ्गव! ॥

६०. तेनान्धत्वमनुप्राप्तं दुर्जरं पातकं हि तत्।
एवं वदन्तं कूरेशं यतीन्द्रः प्रत्युवाच तम् ॥

६१. ममैव दोषस्तेनेदं संप्राप्तं भवताऽधुना।
कूरेश! सर्वसुहृदः किं वास्ति तव दुष्कृतम् ॥

६२. एवं सुदुःखितो धीमान् विद्वानपि दयानिधिः।
कूरेशसहितो धीमान् विवेश मठमञ्जसा ॥

६३. पौरा जानपदास्सर्वे ये च भागवतोत्तमाः।
रङ्गक्षेत्रे भाष्यकारः क्षेमेण पुनरागतः ॥

---

இப்படி வினவப்பெற்ற ஆழ்வானும் யதிராஜரைப் பார்த்து "எதிகட்கிறைவரே! வைஷ்ணவர்களின் திருமண்காப்பு கோணலாயிருப்பதைப் பார்த்து முன்னொருகால் சிரித்திருப்பேன்போலும். அதனாலே இப்படிக் குருடனானேன். ப₄ாக₃வதாபசாரம் மிகக்கொடிய பாபமன்றோ" என்று கூறினார். இப்படிச் சொன்ன கூரத்தாழ்வானைப் பார்த்து யதிராஜர் "ஆழ்வான்! எல்லோர்க்கும் நல்லவரான உமக்கும் பாபமிருக்கமுடியுமோ ? என்னுடைய தோ₃ஷத்தாலேயே இப்போது இந்தக் கஷ்டம் நேரிட்டுள்ளது" என்று பதிலுரைத்தார். அறிவாளியாகவும், ஜ்ஞானியாகவும் இருந்த போதிலும் கருணைக்கடலான யதிராஜர் மிகவும் துன்புற்றவராய், கூரத்தாழ்வானோடு கூட தம் மட₂த்திற்கு விரைவில் எழுந்தருளினர்.

## ஸ்ரீரங்க₃வாஸிகளின் ஆனந்த₃ம்

63-67. (சோழதே₃ஶத்திலுள்ள) நகரஜனங்களும், கிராமஜனங்களும், ப₄ாக₃வதோத்தமர்களுமாகிய அனைவரும் ஸ்ரீரங்க₃க்ஷேத்ரத்தில் ப₄ாஷ்யகாரர் மறுபடியும் க்ஷேமமாக

६४. इत्याकर्ण्य प्रहृष्टास्ते लक्ष्मणार्यदिदृक्षया।
रङ्गं प्राप्याथ सहसा यतिराजपदाब्जयोः॥

६५. प्रणम्यैवं महाप्रीत्या चक्रुर्विज्ञापनं तदा।
महापूर्णो जगामार्यो वैकुण्ठं यतिपुङ्गव!॥

६६. कूरेशो नेत्रहीनोऽभूदिति शोकं च मा कृथाः।
निरामयो भवानद्य क्षेमेण पुनरागतः॥

६७. दृष्टोऽस्माभिस्तदेवालमिति सर्वे मुदं ययुः।
यथार्हं पूजयामास तान् सर्वान् यतिभूपतिः॥

६८. ततः श्रीरङ्गनगरं वैष्णवाः केचिदागताः।
एवं विज्ञापनं चक्रु र्यतीन्द्राय महात्मने॥

६९. क्रिमिकण्ठाख्यचोलेन पाषण्डेन सुपापिना।
श्रीचित्रकूटमधुना शैवभूतं विनाशितम्॥

---

எழுந்தருளிவிட்டார்' என்று கேள்விப்பட்டு உகந்தவர்களாய், ஸ்ரீராமாநுஜரைக் காண்பதற்காக ஸ்ரீரங்கத்திற்கு விரைவில் வந்து, யதிராஜரின் திருவடித்தாமரைகளில் பேரன்போடு வணங்கி, அப்போதே பின்வருமாறு (பேரன்போடு) விண்ணப்பித்தனர்—"'யதிராஜரே! ஆசார்யரான பெரியநம்பி வைகுண்டமும் அடைந்துவிட்டார். கூரத்தாழ்வான் கண்ணிழந்தார்' என்று வருத்தப்படவேண்டாம். எக்குறைவுமற்றவராய் இன்று தேவரீர் க்ஷேமத்தோடு எழுந்தருளியிருப்பதை நாங்கள் கண்டோம். இதுவே போதுமானது" என்று கூறி உகந்தார்கள். எதிகட்கிறைவரும் அவர்களனைவரையும் முறைப்படி கௌரவித்தார்.

## தில்லைகோவிந்தராஜன் ப்ரதிஷ்டை

68-80. அதற்குப்பின் திருவரங்கப் பெருநகருக்கு எழுந்தருளிய சில ஸ்ரீவைஷ்ணவர்கள் மஹாத்மாவான யதிராஜரைப்பார்த்துப் பின்வருமாறு விண்ணப்பித்தனர் :—

७०. औत्सवैर्विग्रहैस्साकं उत्क्षेप्तुं लवणांभसि।
गोविन्दराजमुद्युक्तः स दुरात्मा यतीश्वर!॥

७१. तदौत्सवीः समादाय प्रतिमास्तूर्णमर्चकाः।
केनाप्यज्ञातवृत्तान्ता निन्युस्ते वेङ्कटाचलम्॥

७२. गोविन्दराजमुद्धृत्य निक्षेप्तुं लवणांभसि।
उद्यन्तं चोलभूपालं दृष्ट्वा व्याकुलमानसाः॥

७३. तिल्येति काचित्त शीघ्रं तत्रस्था सा वराङ्गना।
मायया मोहयित्वाथ गोविन्दचरणप्रिया॥

७४. गोविन्दराजं सहसा तं निन्ये वेङ्कटाचलम्।
रङ्गक्षेत्रं तथा कर्तुमुद्युक्तः स च दुर्मतिः॥

---

"யதிராஜரே! பாஷண்டியாய், பெரும்பாவியான க்ருமி கண்ட₂ன் என்று பெயர் பெற்ற சோழராஜாவால் தில்லைத் திருச்சித்திர கூடம் இப்போது சிவன் கோவிலாக்கப் பட்டு அழிக்கப்பட்டது. உத்ஸவ விக்₃ரஹங்களோடு கோவிந்தராஜர் மூலவரை அந்த து₃ஷ்டன் உவர்நீர்க்கடலில் எறிவதற்கு முயல்கின்றான். அதனால் அப்பெருமாளின் அர்ச்சகர்கள் உத்ஸவ விக்₃ரஹங்களை எவருக்கும் தெரி யாமல் விரைவில் திருவேங்கடமலைக்கு எழுந்தருளப் பண்ணிக்கொண்டு சென்றுவிட்டனர். கோவிந்தராஜனை எடுத்து உப்புக்கடலில் எறியமுயலும் அச்சோழ அரச னைக் கண்டு கலங்கிய நெஞ்சையுடையவளான தில்லை யம்மாள் என்னும் அங்குள்ள ஒரு த₃ாஸி கோவிந்தனின் திருவடிகளில் அன்புடையவளாகையாலே அவ்வரசனைத் தன் ஆச்சர்யமான அழகாலே மயக்கி, கோவிந்தராஜனைச் சடக்கெனத் திருவேங்கடமலைக்கு (அர்ச்சகர்களோடு) அழைத்துச் சென்றுவிட்டாள். தீய அறிவையுடைய அவ்வரசன் ஸ்ரீரங்கக்ஷேத்ரத்தையும் அப்படியே இடிப்ப

௭௫. प्रतस्थे सैनिकैस्सर्वैः श्रीरङ्गं प्रति सत्वरम् ।
मार्गे तत्र च सायाह्ने कश्चित् ग्रामं समाश्रितः ॥

௭௬. तद्रात्रौ तस्य कण्ठे तु महद्व्रणमजायत ।
क्रिमयो बहवस्तस्मादजायन्त व्रणात्तदा ॥

௭௭. औदर्यरोगस्तस्यासीत्ताभ्यां स च मृतिं गतः ।
गोविन्दराजवृत्तान्तं श्रुत्वाऽसौ दुःखितोऽभवत् ॥

௭௮. तद्दुःखपरिहाराय शिष्यैस्सह वृषाचलम् ।
गत्वा तत्राशु तं देवं प्रतिष्ठाप्य यथाविधि ॥

௭௯. तस्य गोविन्दराजस्य तिल्यगोविन्दनाम च ।
विधाय वेङ्कटगिरावारुह्य सहसा मुदा ॥

௮௦. प्रणम्य भक्त्या तं देवं वेङ्कटेशं यतीश्वरः ।
तस्मान्निर्गत्य सहसा क्षेत्रं सत्यव्रतं गतः ॥

---

தற்கு எண்ணம் கொண்டவனாய், தன் சேனைவீரர்கள் அனைவரோடும் ஸ்ரீரங்கத்தைக் குறித்து வேகமாகப் புறப் பட்டான். அப்போது ஒரு நாள் மாலை ஒரு கிராமத்தில் தங்கினான். அன்றிரவு அவனது கழுத்தில் பெரிய புண் உண்டாயிற்று. அந்தப் புண்ணிலிருந்து பல க்ருமிகள் (புழுக்கள்) தோன்றின. வயிற்றில் நோயும் உண்டா யிற்று. அவ்விரண்டினாலும் அவன் மரணமடைந்தான்'' என்று (யதிராஜரைப் பார்த்து விண்ணப்பித்தனர்.) கோவிந்தராஜரைப் பற்றி இந்தச் செய்தியைக் கேட்டு யதிராஜர் மிகவும் துன்புற்றார். அந்தத் துன்பம் நீங்கு வதற்காக *ஶி*ஷ்யர்களோடு கூட திருவேங்கடமலைக்குச் சென்று, அங்கு கோவிந்தராஜனை முறைப்படி விரைவி லேயே ப்ரதிஷ்டை செய்வித்து, அப்பெருமானுக்கு 'தில்லை கோவிந்தராஜன்' என்னும் திருநாமத்தையும் சாத்தி, திருவேங்கடமலையின் மேல் விரைவில் உகப்பு

८१. भूयः श्रीरङ्गनगरं संप्राप्य यतिभूपतिः ।
विशेषार्थान् स्वशिष्येभ्यः सुखं संबोधयन् स्थितः ॥

८२. आगत्यागमभूधराद्यतिपती रङ्गं च रङ्गेश्वरं
नत्वाऽऽश्वास्य स कूरनाथमसकृत् दत्वा जनेभ्यो मुदम् ।
गोविन्दं वृषभूधरस्य निकटे स्थाने प्रतिष्ठाप्य तं
भूयो रङ्गमवाप्य शिष्यसहितस्तस्थौ सुखं शाश्वतम् ॥

इति श्रीप्रपन्नामृते रामानुजचरित्रे वेङ्कटाचलदक्षिणभागस्थे चित्रकूटतिल्लैगोविन्दराजप्रतिष्ठापनकथनं नाम एकपञ्चाशोऽध्यायः ॥

---

டன் ஏறி, திருவேங்கடமுடையானை அன்புடன் வணங்கி, அங்கிருந்து விரைவில் புறப்பட்டுக் காஞ்சிக்குச் சென்றார் யதிராஜர்.

## ஸ்ரீரங்க₃த்தை அடைதல்.

81-82. அங்கிருந்து மறுபடியும் ஸ்ரீரங்க₃நக₃ரத்திற்கு விரைவில் எழுந்தருளிய எதிகட்கிறைவர் தம் ஶிஷ்யர்களுக்கு விஶேஷார்த்த₂ங்களை இனிதாக உபதே₃ஶித்துக் கொண்டிருந்தார். இவ்வண்ணமாக, வேத₃கி₃ரியாகிற திருநாராயணபுரத்திலிருந்து யதிராஜர் ஸ்ரீரங்க₃த்தை யடைந்து, ஸ்ரீரங்க₃நாத₂னை வணங்கி, கூரத்தாழ்வானைப் பலவாறு தேற்றி, ஜனங்களுக்கு உகப்பை விளைத்து, கோ₃விந்த₃ராஜனைத் திருவேங்கடமலைத் தாழ்வரையில் ப்ரதிஷ்டை₂ செய்வித்து, மறுபடியும் ஸ்ரீரங்க₃த்தையடைந்து, ஶிஷ்யர்களோடு கூட அங்கு நீண்ட நாள் இனிது வாழ்ந்தார்.

ஸ்ரீப்ரபந்நாம்ருதத்தில் ராமாநுஜசரித்திரத்தில், வேங்கடாசலத்தின் தென்புறத் தாழ்வரையில் தில்லை கோ₃விந்த₃ராஜனை ப்ரதிஷ்டை₂ செய்வித்ததைக் கூறுதலாகிற ஐம்பத்தோராம் அத்தியாயம் நிறைவுற்றது.

### द्विपञ्चाशोऽध्यायः

१. ततः कूरेश्वरं प्राह समानीय यतीश्वरः।
अर्थितार्थप्रदाने तु देवराजः प्रदीक्षितः॥

२. स्तोत्रं तद्विषयं विद्वन्! कुरु कूरेश! सांप्रतम्।
अञ्जसा भवतो नेत्रे भगवान् दास्यति ध्रुवम्॥

३. मास्तु नेत्रे ममेत्येवं कूरेशो गुरुमब्रवीत्।
निर्बन्धयामास तदा कुरुष्वेति पुनः स तम्॥

४. ततः कूरेश्वरः श्रीमान् वरदं स्तोतुमुद्यतः।
"स्वस्ति हस्तिगिरिमस्तशेखरः शं तनोतु मयि सन्ततं हरिः।
निस्समाभ्यधिकमभ्यधत्त यं देवमौपनिषदी सरस्वती॥"

---

## ஐம்பத்திரண்டாம் அத்தியாயம்
# கூரத்தாழ்வான் திருக்கண் பெறுதல்
### எம்பெருமானாரின் நியமனம்

1-3. அதற்குப்பின் யதிராஜர் கூரத்தாழ்வானை அழைத்து "வேண்டுவார் வேண்டின வரங்களையெல்லாம் கொடுப்பதையே விரதமாகக் கொண்டவன் வரதராஜன். மஹாவித்₃வானான கூரத்தாழ்வானே! அவர் விஷயமாக ஒரு ஸ்தோத்ரத்தைச் செய்வீராக. அவ்வெம்பெருமான் உமக்குக் கண்களையளிப்பான் என்பது நிச்சயம்" என்று கூறினர். கூரத்தாழ்வான் "எனக்குக் கண்கள் வேண்டாம்" என்றே ஆசார்யனிடம் கூறினர். அப்போது மறுபடியும் எம்பெருமானார் கூரத்தாழ்வானை "ஸ்தோத்ரம் செய்வீர்" என்றே நிர்ப₃ந்தி₄த்தார்.

### வரதராஜஸ்தவம் அருளல்

4-9. அதற்குப்பின் எல்லாச் செல்வங்களும் நிரம்பப் பெற்ற கூரத்தாழ்வான் வரதராஜனைத் துதிக்கத் தொடங்

५. इत्येवं स्तुतिमारभ्य स श्लोकान् कतिचित् व्यधात्।
"नीलमेघनिभमञ्जनपुञ्ज-श्यामकुन्तलमनन्तशयं त्वाम्।
अब्जपाणिपदमम्बुजनेत्रं नेत्रसात्कुरु करीश! सदा मे॥"

६. इति श्लोकार्थसदृशदिव्यरूपप्रदर्शने।
योग्यमप्राकृतं चक्षुर्देहि मे कमलेक्षण!॥

७. इत्येवं वरदं देवं प्रार्थयामास कूरराट्।
ततः प्रसन्नो वरदः कूरेशाय महात्मने॥

८. दिव्यं चक्षुर्ददामीति स्वप्ने प्राह हरिस्तदा।
तस्यां रात्र्यां व्यतीतायां कृतकर्मा महाकविः॥

---

கிறார். "அத்திகிரியின் சிகரத்திற்கு அணிகலனாய்த் திகழும் எம்பெருமான் எனக்கு எப்போதும் நன்மையை அளிப்பானாக. அவ்வெம்பெருமானை உபநிஷத்₃வாக்கானது ஒத்தாரும் மிக்காரும் இல்லாதவனாக ஓதிற்றன்றோ" என்று ஸ்தோத்ரத்தைத் தொடங்கி, சில ம்லோகங்களை இயற்றினார். 'அத்திகிரி அருளாளனே! நீலமேகத்தையொத்தவனாய், திரட்டிய மைபோல் கறுத்த திருக்குழற்கற்றையையுடையவனாய், திருவநந்தாழ்வான்மேல் சயனித்திருப்பவனாய், தாமரைபோன்ற திருக்கைகளையும் திருவடிகளையும் உடையவனாய், தாமரைக்கண்ணனான உன்னை என் கண்களுக்கு எப்பொழுதும் இலக்காக்குவாயாக" என்னும் ம்லோகத்தில் சொல்லப்பட்டது போன்ற தி₃வ்யமங்க₃ள விக்₃ரஹத்தைக் காணவல்ல கண்களை எனக்கு அளித்தருள்வாய் கமலக்கண்ணா!—என்று வரத₃ராஜப்பெருமாளைக் கூரத்தாழ்வான் பிரார்த்தி₂த்தார். அதற்குப்பின் வரதராஜன் அன்றே அவர் கனவில்தோன்றி, மஹாத்மாவான கூரத்தாழ்வானுக்கு 'தி₃வ்யமான (அப்ராக்ருதமான) கண்ணைத் தருகிறேன்' என்று அருளினான். அன்று இரவு கழிந்த பின்பு காலைக் கடன்களை முடித்து, மஹாகவியான ஆழ்வான் மிகவுகந்தவராய்,

९. अतिप्रहृष्टो वेगेन देवराजस्तवं हि तम् ।
स तं निर्वर्त्य कूरेशो यतीन्द्राश्याशमभ्यगात् ॥

१०. यतीन्द्रं प्रणिपत्याह सन्तुष्टः कूरराट् तदा ।
अधुना लक्ष्मणाचार्य! भवतः शासनान्मया ॥

११. वरदं प्रति योगीश! देवराजस्तवः कृतः ।
इति तं यतिराजाय स्तवं तस्मै न्यवेदयत् ॥

१२. श्रुत्वा तं लक्ष्मणाचार्यः प्रमुमोद महायशाः ।
भूयः प्रोवाच धर्मात्मा कूरेशो यतिपुङ्गवम् ॥

१३. मया वरो यथेदानीं वरदं प्रति याचितः ।
तत्तेऽहं संप्रवक्ष्यामि श्रूयतां गुरुपुङ्गव ! ॥

---

விரைவிலேயே வரதராஜஸ்தவத்தை நிறைவுசெய்து யதி ராஜர் இருக்குமிடத்தையடைந்தார்.

## ஆழ்வான் எம்பெருமானாரோடு வரதனை அடைதல்

10-*18. அப்போது யதிராஜரை வணங்கி மிகவுகந்தவராய், கூரத்தாழ்வான் "எம்பெருமானாரே! தேவரீருடைய நியமனத்தினால் அடியேனால் இப்போது வரதராஜஸ்தவம் இயற்றப்பட்டது" என்று கூறினார். இப்படிக் கூறி அந்த ஸ்தோத்ரத்தை அவரிடம் விண்ணப்பித்தார். அதைக் கேட்டுப் பெருமபுகழாளரான ஸ்ரீராமாநுஜரும் மிகவுகந்தார். தர்மாத்மாவான ஆழ்வான் எதிகட்கிறைவரைப் பார்த்து "ஆசார்யஶ்ரேஷ்டரே! நான் இப்போது வரதராஜனிடம் யாசித்த வரத்தைக் கூறுகிறேன் கேட்பீராக. 'லோகநாதனே! வைகுண்டமாகிற மேலான உலகில் தேவர் தலைவரான தேவரீரை நித்யஸூரிகள் எந்த (ஜ்ஞானக்) கண்ணால் எப்போதும் காண்கிறார்களோ, திவ்யமாய் அப்ராக்ருதமான அந்த (ஜ்ஞானக்) கண்ணை எனக்குக் கொடுப்பீராக' என்பது அவ்வரம். விரும்பிய வரத்தைக்

१४. वैकुण्ठे तु परे लोके भवन्तं नित्यसूरयः ।
सदा पश्यन्ति देवेश येन दिव्येन चक्षुषा ॥

१५. दिव्यमप्राकृतं चक्षुस्तन्मे देहि जगत्पते ! ।
सन्तुष्टोऽभीष्टवरदस्ततो मे कमलेक्षणः ॥

१६. तस्य वैकुण्ठनाथस्य सदादर्शनकारणम् ।
अप्राकृतं दिव्यचक्षुः प्रददौ मे यतीश्वर ! ॥

१७. यतिराजः संप्रहृष्टः तच्छ्रुत्वा शिष्यवत्सलः ।
कूरेशाद्यैव गच्छावः काञ्चीमित्यभिधाय च ॥

१८. कूरेशसहितः श्रीमान् तूर्णं काञ्चीपुरं ययौ ।
कृतप्रणामस्तत् स्तोत्रं वरदाय कृताञ्जलिः ॥

१९. विज्ञापयामास तदा कूरेशो देशिकाज्ञया ।
ततः प्रसन्नो वरदः कूरेशमिदमब्रवीत् ॥

---

கொடுக்கும் அந்தத் தாமரைக் கண்ணரான வரதராஜர் மிகவுகந்தவராய், ஸ்ரீவைகுண்ட₂நாத₂னை நித்யஸூரிகள் எப்போதும் காண்பதற்கு உறுப்பான அப்ராக்ருத தி₂வ்ய நேத்ரத்தை எனக்கு வாக்களித்தார்" என்று மறுபடியும் கூறினார். ஶிஷ்யரிடம் அன்புடைய யதிராஜர் அதைக் கேட்டு மிகவுகந்தவராய், "கூரத்தாழ்வானே! இப்போதே நாம் காஞ்சீபுரம் செல்வோம்" என்று கூறி, கூரத்தாழ்வானோடு கூடியவராய், விரைவில் காஞ்சீபுரத்திற்குச் சென்றார்.

## ஆழ்வானின் வரப்ரார்த்த₂னையும், வரத₃னின் வரப்ரத₃ானமும்.

18*-*23. அப்போது கூரத்தாழ்வான் ஆசார்யரின் ஆஜ்ஞையாலே வரத₂னைக் கைகூப்பி வணங்கி, அந்தத் துதி நூலை விண்ணப்பித்தார். அதனால் உகந்த வரத₂ன்

२०. वरं वरय भद्रं ते वरं दास्यामि कांक्षितम् ।
तदा कूरपतिः श्रुत्वा वरदोक्तं वचः शुभम् ॥

२१. संप्रार्थ्य वरदं देवं यतिराजमनःप्रियम् ।
इति वव्रे वरं तूर्णं वरदं भक्तवत्सलम् ॥

२२. यो लोकः प्राप्यते स्वामिन्! भवतः कृपया मया ।
तं लोकं प्राप्नुयात्सम्यक् चतुर्ग्रामाधिपः स च ॥

२३. वरदो बाढमित्याह तदा कूरपतिं हरिः ।
स तदाकर्ण्य वृत्तान्तं तूर्णं लक्ष्मणदेशिकः ॥

२४. विषण्णवदनः प्राप्य जगाद वरदं वचः ।
देवदेवारविन्दाक्ष! सर्वज्ञ! जगदीश्वर! ॥

---

ஆழ்வானைப் பார்த்து "உமக்கு மங்க₃ளம் உண்டாகட்டும். நீர் விரும்பும் வரத்தைக் கொடுக்கிறேன். வரம் கேட்பீராக" என்று கூறினன். அப்போது வரத₃னால் சொல்லப்பட்ட மங்க₃ளமான அவ்வார்த்தையைக் கேட்ட கூரத்தாழ்வான் ப₄க்தவத்ஸலனாய், யதிராஜரின் நெஞ்சுக்கினியவனான வரந்தரும் பெருமானிடம் "ஐயனே! தேவரீருடைய க்ருபையினாலே எனக்கு எந்த லோகம் கிடைக்குமோ, அந்த லோகத்தை நாலூரானும் பெறவேண்டும்" என்று விரைவிலே வரம் கேட்டார். வரத₃னும் 'அப்படியே' என்று கூரத்தாழ்வானுக்கு அப்போதே வரமளித்தான்.

## எம்பெருமானாரின் கோபம்

23*-*28. அந்தச் செய்தியைக் கேட்ட ஸ்ரீராமாநுஜர் வாடிய முகத்தை உடையவராய், விரைவில் வரத₃னிடம் வந்து, "தாமரைக் கண்ணனான தே₃வதே₃வனே! எல்லாமறிந்தவனே! லோகநாத₂னே! எல்லாமறிந்தவரான தேவரீர் ஆழ்வானுக்கு இப்படிவரங்கொடுக்கலாமா?" எனக்கேட்டார்.

२५. सर्वज्ञश्च भवान् देव! वरमेवंविधं हरे!।
एतस्मै कूरनाथाय प्रदातुं कथमर्हति ॥

२६. ततोऽब्रवीत्स कूरेशं रुष्टो योगीश्वरस्तदा।
स्वच्छन्दतो भवानद्य मम चोल्लङ्घ्य शासनम् ॥

२७. ममापि गमनात्पूर्वं सहसैवं कृतो ह्यभूत्।
एवं निर्भर्त्स्य कूरेशं विषण्णो यतिभूपतिः ॥

२८. किं करोमीति संभ्रान्तस्तस्थौ नष्टधनो यथा।
ततः प्रसन्नो वरदो यतिराजमथाब्रवीत् ॥

२९. मा शोकं कुरु योगीश! तवाभीष्टं ददाम्यहम्।
संद्रष्टुं चक्षुषा सर्वं अथाभीष्टवरप्रदः ॥

---

அப்போது அந்த எதிகட்கிறைவர் கோபங்கொண்டவராய் கூரத்தாழ்வானைப் பார்த்து "தேவரீர் என் ஆணையை மீறி நான் புறப்படுவதற்கு முன்பே இங்கு வந்து உம்மிஷ்டப்படி இப்படி சடக்கென வரம் கேட்டுவிட்டீரே!" என்று கூறி பயமுறுத்தி வருந்தியவராய், சொத்துமுழுவதுமிழந்தவன்போலே செய்வதறியாமல் திகைத்து நின்றார்.

## வரதனின் கருணை

28*-*30. அதைக்கேட்டு உகந்த வரந்தரும் பெருமாளான வரதுன் யதிராஜரைக் குறித்து "யதிராஜரே! வருந்தாதீர். தேவரீர் விரும்பியதைக் கொடுக்கிறேன்" என்று கூறி, கூரத்தாழ்வான் ஜ்ஞானக்கண்ணாலே ‡ எல்லாவற்றையும் காண்பதற்குறுப்பான வரத்தையளித்தான்.

---

‡ "பேரருளாளப் பெருமாளும், 'நம்மையும் உம்மையும் காணுமிடத்துக் கட்கண்ணாலே காணக்கடவர்' என்று வரப்ரதாநம் பண்ணியருள" என்று ஆறுயிரப்படி குருபரம்பராப்ரபாவத்தில் உள்ளது.

३०. वरप्रदानं वरदः कूरेशायाकरोत्तथा।
लब्धचक्षुः स कूरेशः संसेव्यापादमस्तकम्॥

३१. अभीष्टवरदं देवं आनन्दाश्रुपरिप्लुतः।
मुमोद बहुधा तत्र विलसन्मुखपङ्कजः॥

३२. धृतोर्ध्वपुण्ड्रं शशिशुभ्रवर्णं काषायिनं कञ्जदलायताक्षम्।
त्रिदण्डहस्तं धृतयज्ञसूत्रं दृष्ट्वा यतीन्द्रं मुमुदे महात्मा॥

३३. अनुज्ञातस्तदा तेन साधयित्वा स्ववाञ्छितम्।
ततः सत्यव्रतक्षेत्रात् सकूरेशो यतीश्वरः॥
कृतार्थो रङ्गनगरमाससाद महायशाः॥

---

## கூரத்தாழ்வான் பார்வைபெறுதல்

30*-34. கண்கள் கிடைக்கப்பெற்ற அக்கூரத்தாழ்வான் வரந்தரும் பெருமாளான அவ்வெம்பெருமானை ஆனந்த3க்கண்ணீர் நிரம்பப்பெற்றவராய், திருவடி முதல் திருமுடி வரை நன்கு பலகால் ஸேவித்து, திருமுகத்தாமரை விளங்கப் பெற்றவராய், பேரானந்த3மடைந்தார். மஹாத்மாவான அவர்—ஊர்த்4வபுண்ட்3ரம் த4ரித்தவராய், சந்த்3ரன்போல் வெளுத்த நிறத்தையுடையவராய், காஷாயத்தை உடுத்தவராய், தாமரையிதழ்போன்றுநீண்டு பரந்த திருக்கண்கள் உடையவராய், த்ரித3ண்ட3த்தைக் கையிலேந்தியவராய், பூணூல் அணிந்தவரான யதிராஜரைக் கண்டு பேரானந்த3மடைந்தார். இவ்வண்ணமாகத் தம் விருப்பத்தை நிறைவேற்றிக்கொண்டபின் வரத3ராஜப் பெருமாளால் விடைகொடுக்கப்பெற்றவராய், பெரும்புகழாளராய், பெரும்பேறு பெற்றவராய், கூரத்தாழ்வானோடு கூடியவரான யதிராஜர் ஸ்ரீரங்கநகரையடைந்தார். உலகம் நிறைந்த புகழாளராய், பேறு பெற்றவராய், விருப்பம் நிறைவேறப்பெற்றவரான ஸ்ரீராமாநுஜர் கூரத்தாழ்வா

३४. कूराधिपायाथ स दापयित्वा श्रीलक्ष्मणार्यो वरदेन नेत्रे।
अवाप्तकामः पुनरेव रङ्गं विवेश विख्यातयशाः कृतार्थः॥

इति श्रीप्रपन्नामृते रामानुजचरित्रे कूरेशस्य नेत्रप्राप्तिर्नाम
द्विपञ्चाशोऽध्यायः॥

त्रिपञ्चाशोऽध्यायः

१. पुरा गोदा स्तवं चक्रे हरिमुद्दिश्य भक्तितः।
चत्वारिंशत्समधिकशतगाथाविराजितम्॥

२. तत्रैकस्यां तु गाथायां महावनगिरीश्वरः।
भगवान् सुन्दरभुजस्तयैवं प्रार्थितो हरिः॥

---

னுக்கு வரதனைக்கொண்டு கண்களைப் பெறுவித்தபின்பு ஸ்ரீரங்கத்தில் மறுபடியும் பிரவேஶித்தார்.

ஸ்ரீப்ரபந்நாம்ருதத்தில் ராமானுஜ சரித்திரத்தில்
கூரத்தாழ்வான் திருக்கண் பெறுதலாகிற ஐம்பத்திரண்டாம் அத்தியாயம்
நிறைவுற்றது.

## ஐம்பத்துமூன்றும் அத்தியாயம்

## (கோதையின் விருப்பத்தை நிறைவேற்றுதல் முதலான) யதிராஜரின் ப்ரபாவங்கள்

### கோதையின் விருப்பம்

1-*4. பல நூறு வருஷங்களுக்கு முன் கோதை என்று பெயர்பெற்ற ஆண்டாள் நூற்று நாற்பத்துமூன்று பாசுரங்களைக் கொண்ட 'நாச்சியார் திருமொழி' என்னும் தமிழ்த் துதி நூலை எம்பெருமானைக்குறித்து பக்தியோடு அருளிச்செய்தாள். அதில் "**நாறுநறும்பொழில் மாலிருஞ்சோலை நம்பிக்கு, நான் நூறு தடாவில் வெண்ணெய் வாய் நேர்ந்து பராவி வைத்தேன், நூறு தடா நிறைந்த அக்காரவடிசில் சொன்னேன், ஏறு திருவுடையான் இன்று**

३. कुरुषे यदि मे देव पाणिग्रहणमङ्गलम्।
क्षीराद्यनेकसंयुक्तगुडान्नस्य घटीशतम्॥

४. समर्पये हरे! तुभ्यं नवनीतघटीशतम्।
इति तत्र स्थितं दृष्ट्वा गोदाभीष्टमभीष्टदः॥

५. तयैवमकृतत्वेन यतीन्द्रः कर्तुमुद्यतः।
ततो वनाद्रिं संप्राप्य तस्मै सुन्दरबाहवे॥

६. अर्पयामास तत्सर्वं नार्पयत्सा यदेव हि।
ततो यतीश्वरस्तस्माद्धन्वीनाथपुरं ययौ॥

---

வந்திவை கொள்ளுங்கொலோ” [நாச்-திரு 9-6] என்னும் பாசுரத்தில் திருமாலிருஞ்சோலை எம்பெருமானை சுந்தரத் தோளுடையான் அவளால் “எம்பெருமானே! என்னைக் கைப்பிடித்து அருள்புரிவாயாகில் பால், வெல்லம், நெய் முதலானவற்றால் செய்யப்பெற்ற அக்காரவடிசில் நூறு தடாவும், வெண்ணெய் நூறு தடாவும் உனக்கு ஸமர்ப் பிப்பேன்” என்று பிரார்த்திக்கப்பட்டான்.

## கோதையின் விருப்பத்தை நிறைவேற்றுதல்

4*-*6. இவ்வண்ணமாக, அத்திருமொழியில் கோதை யின் விருப்பம் இருப்பதைக் கண்டு (முன்னோர்களான மஹாத்மாக்களின்) விருப்பங்களை நிறைவேற்ற வந்த யதி ராஜர்—ஆண்டாள் இவ்விருப்பத்தை நிறைவேற்றாமை யாலே தாமே இவ்விருப்பத்தை நிறைவேற்ற முயற்சி கொண்டார். அதற்குப்பின் அவர் திருமாலிருஞ்சோலைக் குச் சென்று, ஆண்டாள் ஆசைப்பட்டு ஸமர்ப்பியாம லிருந்த அந்த நூறு தடாநிறைந்த அக்காரவடிசிலையும், நூறு தடாநிறைந்த வெண்ணெயையும் அந்த சுந்தரராஜப் பெருமானுக்குப் பரிபூர்ணமாக ஸமர்ப்பித்தார்.

७. वटपत्रशयं नत्वा गोदाभ्याशमुपागतः ।
गोदां प्रणम्य सहसा विष्णुचित्तसुतां तदा ॥

८. सहशिष्यैर्यतिश्रेष्ठो बद्धाञ्जलिपुटस्तदा ।
ममाभीष्टमनेनाद्य सम्यङ्निर्वर्तितं त्विति ॥

९. तदा देवी प्रहृष्टात्मा सुतरां विष्णुवल्लभा ।
तस्य गोदाग्रजश्चेति नाम चक्रे कृपावशात् ॥

१०. तीर्थं प्रसादं स्वीकृत्य तया सन्तोषितो मुदा ।
निर्ययौ सहसा तस्मात्कुरुकानगरं प्रति ॥

११. स गत्वा दूरमध्वानं चिञ्चाकुटिमगात्तदा ।
वीथ्यां विलोक्य तत्रैकां स काञ्चिद्दशवार्षिकीम् ॥

---

## கோயிலண்ணர்

6*-10. அதற்குப்பின் யதிராஜர் அத்திருமாலிருஞ் சோலையிலிருந்து ஸ்ரீவில்லிபுத்தூரை அடைந்தார். அங்கு வடபத்ரஶாயியான எம்பெருமானை வணங்கி, ஆண்டாளுக் கருகில் எழுந்தருளி, பெரியாழ்வார் திருமகளாரான ஆண்டாளைச் சடக்கென வணங்கி, ஶிஷ்யர்களோடு கைகூப்பியவராய், யதிராஜர் ஆண்டாள் திருமுன்பே நின்றார். எம்பெருமானுக்கு இனியவளான அந்த கோதா தேவி 'எனது விருப்பம் இவரால் (தங்கையின் விருப்பத் தைத் தமையன் நிறைவேற்றுவதுபோலே) நன்கு நிறை வேற்றப்பட்டது' என்று மிகவும் உகந்த நெஞ்சினளாய் '(கோயில்) அண்ணர்' என்று அவருக்குப் பேரருளாலே திருநாமம் சாத்தினள். அவளால் இப்படி உகப்பிக்கப் பட்ட யதிராஜர் பேரானந்தத்துடன் ஆண்டாளின் தீர்த்த ப்ரஸாதங்களை ஏற்றுக்கொண்டு, அவ்வூரிலிருந்து திருக் குருகூரை நோக்கி விரைவில் புறப்பட்டார்.

१२. अवोचदसितापाङ्गीं वैष्णवीं प्रति बालिकाम्।
किंयद्दूरेऽसितापाङ्गि! वर्तते कुरुकापुरी॥

१३. मह्यमाख्याहि तत्त्वेन बालेऽस्य नगरस्य च।
तत् यतीन्द्रवचः श्रुत्वा बालिका वाक्यमब्रवीत्॥

१४. सहस्रगीतिर्भवता न च किं पठिता द्विज!।
स तद्वचः प्रगृह्याशु विस्मितो वाक्यमब्रवीत्॥

१५. सहस्रगीतिपठनात्कथं ज्ञातुं हि शक्यते।
एतावन्मात्रदूरस्था पुरीयं कुरुकाऽबले॥

१६. तद्यतीन्द्रवचः श्रुत्वा तमवोचत् शुचिस्मिता।
चिञ्चाकुटीरं कुरुकानगर्याः क्रोशमात्रकम्॥

---

## திருப்புளிங்குடிப் பெண்ணின் திருவாய்மொழி ஈடுபாடு

11-*27. அவ்வெம்பெருமானார் நெடுந்தூரம்சென்று திருப்புளிங்குடியை அடைந்தார். அப்போது பத்து வயது நிரம்பியவளாய் கறுத்த கண்களை உடையவளான ஓர் வைஷ்ணவப் பெண்பிள்ளையை வீதியிலே பார்த்து எம் பெருமானார் "பெண்ணே! திருக்குருகூர் இவ்வூரிலிருந்து எவ்வளவு தூரத்தில் உள்ளது என்பதை எனக்கு உள்ள படி கூறுவாய்" என்று கேட்டார். யதிராஜரது அவ் வார்த்தையைக் கேட்டு அந்தப் பெண் "அந்தணரே! தேவரீர் திருவாய்மொழி ஓதியதில்லையோ?" என வினவி னாள். அதைக்கேட்ட எம்பெருமானார் வியப்புற்றவராய் "பெண்ணே! திருவாய்மொழியை ஓதியதால் திருக்குருகூர் எவ்வளவு தூரத்தில் இருக்கிறது என்று எப்படி அறிய முடியும்?" என்று கேட்டார் யதிராஜரது அவ்வார்த்தை யைக் கேட்ட அப்பெண் புன்முறுவலோடு கூடியவளாய் "திருப்புளிங்குடி திருக்குருகூரிலிருந்து ஒரு க்ரோஶ (கூப்பிடு) தூரமேயிருக்கிறது என்று நம்மாழ்வார் அருளிய

१७. दूरमित्यत्र शठजिद्ग्रन्थे सुस्पष्टमीरितम् ।
इत्येवमुक्त्वा तां गाथां हठाद्बाला पपाठ सा ॥

१८. तच्छ्रुत्वा समवाप्याथ यतीन्द्रो हर्षविस्मयौ ।
पुत्रिकामिव संवीक्ष्य तां साक्षात्परदेवताम् ॥

१९. कृपया चाह धर्मात्मा वैष्णवीं वैष्णवप्रियः ।
कुत्र युष्मद्गृहं बाले! तद्दर्शय ममाधुना ॥

२०. अथाङ्गीकृत्य योगीन्द्रवचनं वैष्णवी तदा ।
दर्शयित्वा स्ववेश्माशु यतीन्द्राय महात्मने ॥

२१. सम्यक् पितृभ्यां वृत्तान्तं तत्सर्वं प्राह सत्वरम् ।
पाकार्थमाहृतान्येव नवभाण्डानि सत्वरम् ॥

---

திருவாய்மொழியில் மிகத் தெளிவாகக் கூறப்பட்டுள்ளதே" என்று கூறி "கடுவினை நஞ்சே! என்னுடையமுதே! கலி வயல் திருப்புளிங்குடியாய்! வடிவிணையில்லா மலர்மகள் மற்றை நிலமகள் பிடிக்கும் மெல்லடியை, கொடுவினை யேனும் பிடிக்க நீயொருநாள் கூவுதல் வருதல் செய்யாயே" [9-2-10] என்னும் அத்திருவாய்மொழிப்பாசுரத்தை உரக்கப் பாடினாள். அதைக்கேட்டு தூர்மாத்மாவாய், வைஷ்ணவ ப்ரியரான யதிராஜர் பேரானந்தத்தையும் வியப்பையும் அடைந்து, நேரே பரதேவதையைப்போலேயிருக்கும் அப் பெண்ணைக் கருணையோடு குளிர நோக்கி "பெண்ணே! உனது வீடு எங்கே உள்ளது? அதை எனக்கு இப் போதே காட்டுவாயாக" என்று அவளிடம் வார்த்தை சொன்னார். அதற்குப்பின் யதிராஜரின் அவ்வார்த்தையை ஏற்றுக்கொண்டு வைஷ்ணவியான அப்பெண் மஹாத்மா வான அவருக்குத் தன் வீட்டை விரைவில் காட்டி, தனது பெற்றோர்களுக்கு நடந்த செய்தி அனைத்தையும் சடக்கென நன்கு சொன்னாள். யதிராஜரும் மிகவும் ஆனந்தமுடையவராய், பெருமாளுக்குத் தளிகை ஸமர்ப்

२२. तानि सर्वाणि संत्यज्य यतीन्द्रोऽतीव हर्षितः।
प्रविश्यावसथं तस्याः कन्यकायाः कृतादरः॥

२३. सशिष्यसङ्घो भक्त्यासीत्तत्पितृभ्यां समर्चितः।
तावन्मात्रेण सन्तुष्टः तदन्नमतिपावनम्॥

२४. याचितं कन्यकामात्रा वरदाय समर्प्य च।
निर्मलेन हृदा सम्यक् बुभुजे तद्गृहे तदा॥

२५. कूरेशदाशरथ्यादिशिष्यैर्वेदान्तवेदिभिः।
अथ तस्यै कन्यकायै तत्पितृभ्यां च सादरम्॥

२६. तद्बन्धुभ्योऽखिलेभ्यश्च तत्रान्येभ्यो जगद्गुरुः।
उपदिश्य विशेषार्थान् कृपयाऽमरदुर्लभान्॥

२७. स तैः संपूजितस्सर्वैः प्रतस्थे कुरुकापुरीम्।
कुरुकायां शठारातिमादिनाथं प्रणम्य च॥

---

பிப்பதற்காகக் கொண்டுவரப்பட்ட புதுப்பானைகளனைத்தை யும் சடக்கெனக் கைவிட்டு, பேரார்வத்துடன் அப் பெண்ணின் வீட்டினுள் ஶிஷ்யஸமூஹங்களுடன் நுழைந்து, அப்பெண்ணின் பெற்றோர்களால் ப₄க்தியுடன் ஆராதி₄க் கப் பெற்றவராய், அவ்வளவாலேயே மிகவுகந்தவராய், அப்பெண்ணின் தாயாலே பிரார்த்தி₂க்கப்பெற்று, அவர்க ளிட்ட அதிபரிஶுத்₃த₄மான அன்னத்தை வரத₃ராஜப் பெருமாளுக்கு ஸமர்ப்பித்து, அப்போதே அவர்கள் வீட்டில் குற்றமற்ற நெஞ்சோடு, கூரத்தாழ்வான், முதலியாண்டான் முதலான வேத₃விழுப்பொருள் உணர்ந்த ஶிஷ்யர்களுடன் நன்கு அமுதுசெய்தருளினர். அதற்குப் பின் ஜக₃த்₃ஆசார்ய ரான எம்பெருமானர் அப்பெண்ணுக்கும், அவளுடைய பெற் றோர்களுக்கும், அவர்களது உறவினர் அனைவர்க்கும், அங்குள்ள மற்றவர்களுக்கும் தேவர்க்கும் கிடைத்தற்கரிய விஶேஷார்த்த₂ங்களை அருளோடும், அன்போடும் உப தே₃ஶித்து, அவர்களால் நன்கு ஆராதி₄க்கப்பட்டவராய் திருக்குருகூருக்குப் புறப்பட்டார்.

२८. तीर्थं प्रसादं स्वीकृत्य विश्रम्य यतिपुङ्गवः।
भूयः शठारिं संसेव्य तिन्त्रिणीमूलमाश्रितम्॥

२९. तिन्त्रिणीभूरुहं वीक्ष्य दिव्यं च चिरजीविनम्।
श्रीमज्जनोत्सवं दृष्ट्वा शठारातेर्महाद्भुतम्॥

३०. अद्वितीयं महान्तं च प्रभावमतिमानुषम्।
अत्याश्चर्ययुतो धीमान् सन्तुष्टस्तस्य सन्निधौ॥

३१. सर्वेषां शृण्वतां तत्र वचनं चेदमब्रवीत्।
प्रपन्नजनकूटस्थः शठारातिरयं महान्॥

३२. अनादिसिद्धं निस्तुल्यमेतद्वैष्णवदर्शनम्।
संलीनमुद्धृतं सम्यगनेनैव प्रकाशितम्॥

३३. अतिगोप्यांश्च वेदार्थानुद्धृत्यामरदुर्लभान्।
कृत्वा द्राविडरूपेण प्रबन्धान् चतुरः क्रमात्॥

---

## நம்மாழ்வாரை ஸேவித்தலும், எம்பெருமானாரது மனக்குறையும்

27*-36. திருக்குருகூரை அடைந்தபின் நம்மாழ்வாரையும் ஆதிப்பிரானையும் வணங்கி, தீர்த்த₂ப்ரஸாத₃ங்களை ஏற்றுக்கொண்டு களைப்பாறி, மறுபடியும் திருப்புளியாழ்வாரடியிலே எழுந்தருளியிருக்கும் நம்மாழ்வாரை ஸேவித்து, நீண்டநாள் வாழும் தி₃வ்யமான திருப்புளியாழ்வாரையும் ஸேவித்து, நம்மாழ்வாரின் அத்யாஶ்சர்யமான திருமஞ்சன உத்ஸவத்தையும் ஸேவித்து, ஒப்பற்றதும், பெருமையுடையதும், அதிமாநுஷமானதுமான நம்மாழ்வாருடைய ப்ரப₄ாவத்தைக் கண்டு களித்து, பேராச்சர்யமுடையவராய், பேரறிவாளரான யதிராஜர் பேரானந்தமுற்றவராய், ஆழ்வாரின் திருமுன்பே அனைவரும் கேட்குமாறு பின்வரும் வார்த்தையை அருளிச்செய்தார் — "ப்ரபந்நஜனகூடஸ்த₂ராய், பெரியவராயிருப்பவர் இந்த நம்மாழ்வார். அநாதி₃ஸித்₃த₄மாய், ஒப்பற்றதான இந்த வைஷ்ணவத₃ர்ஶனம் ஒடுங்கிக்கிடந்த காலத்தில் இவராலேயே உத்₃த₄ரிக்கப்

३४. सर्वाधिकारान् शठजित् जगत्सर्वमपालयत् ।
लोकसंरक्षकस्यास्य महतः शठवैरिणः ॥
३५. किं वाद्य निष्क्रियां तस्य करिष्यामि कथं ह्यहम् ।
वर्तते यदि मे पुत्रो नाममात्रं विधाय च ॥
३६. शठाराते ऋणं किञ्चित्तत्प्रमार्ष्टुं हि शक्यते ।
कथं वा विद्यते पुत्रः स मे संन्यासिनो भुवि ॥
३७. इति व्याकुलचित्तं तं वीक्ष्य लोकैकदेशिकम् ।
पुत्रश्रीशैलपूर्णाख्यः भूरिश्रीशैलपूर्णजः ॥
३८. महाप्राज्ञो महातेजाः कश्चिदभ्येत्य सादरम् ।
प्रणम्य लक्ष्मणाचार्यं बद्धाञ्जलिपुटोऽब्रवीत् ॥
३९. मामङ्गीकृत्य योगीन्द्र! दासभूतं त्वदात्मजम् ।
मनोरथं हि भवतः सफलं कर्तुमर्हसि ॥

---

பெற்று, நன்கு வெளிப்படுத்தப்பட்டது. பரமரஹஸ்யங்களாய், தே₃வர்க்கும் அறியவொண்ணுத வேதா₃ர்த்த₂ங்களைத் திரட்டி எடுத்து, ஸர்வாதி₄காரமாயுள்ள நான்கு தமிழ்ப் பிரபந்தங்களாலே நான்கு வேத₃ங்களின் அர்த்த₂ங்களையும் முறைப்படி வெளியிட்டு இந்த நம்மாழ்வாரே உலகனைத்தையும் ரக்ஷித்தருளினர். லோகரக்ஷகரான ஶட₂கோபராகிற இந்தப்பெரியவருக்கு அடியேன் என்ன கைம்மாறு செய்யமுடியும்? எனக்கொரு பிள்ளையிருந்தால் இவரது பெயரை அவனுக்கு வைத்து, இவரிடம் பட்டுள்ள நன்றிக்கடனைச் சிறிதளவாவது தீர்க்கமுடியும். இவ்வுலகில் ஸந்யாஸியான எனக்குப் பிள்ளை எப்படி ஏற்படமுடியும்?'' என்று.

## பிள்ளாலல் மனக்குறை தீர்தல்

37-40. அப்போது—பெரியதிருமலை நம்பியின் குமாரராய், பிள்ளை திருமலைநம்பி என்று பெயர்பெற்றவராய், பேரறிவாளராய், பேரொளி படைத்தவரான ஓர் ஶிஷ்யர் அன்போடுவந்து, ஸ்ரீராமாநுஜரை வணங்கி, கைகூப்பிநின்றவராய் "யதிராஜரே! தா₃ஸனுன அடியேனை தேவரீரது குமாரனுக

४०. संतुष्टस्तेन वाक्येन तमङ्गीकृत्य चात्मजम् ।
कुरुकेश्वर इत्यस्य नामधेयं चकार सः ॥
४१. शठारातिस्ततस्तेन यतिराजाय हर्षितः ।
स्वपादाब्जपदं चक्रे यतीशं लोकविश्रुतम् ॥
४२. शठजित्पादनामाभूत्तद्यतीन्द्रस्य विश्रुतम् ।
शठारिर्भगवत्पादो यथाभूद्विदितो भुवि ॥
४३. तथैव शठजित्पादो लोके रामानुजोऽभवत् ।
रामानुजाङ्घ्रिस्थानत्वे तथा दाशरथिर्ह्यभूत् ॥
४४. शठकोपं प्रदेहीति भगवत्सन्निधौ वदेत् ।
रामानुजं प्रदेहीति शठजित्सन्निधौ वदेत् ॥

---

ஏற்றுக்கொண்டு மனோரத₂த்தை நிறைவேற்றிக்கொள்வீராக" என்று விண்ணப்பித்தார். அந்த வார்த்தையாலே மிகவும் உகந்த யதிராஜர் அவரைத் தம் பிள்ளையாக ஏற்றுக்கொண்டு 'திருக்குருகைப்பிரான் பிள்ளான்' என்னும் திருநாமத்தையும் அவருக்கு அளித்தார்.

### சடகோபன் பொன்னடி

41-*43. நம்மாழ்வாரும் அந்த எம்பெருமானுரைப் பார்த்துப் பேரானந்த₃மடைந்து யதிராஜரை உலகமறியத் தமது திருவடித்தாமரையின் ஸ்த₂ானமாக உகந்தருளினர். அதனுல் "சடகோபன் பொன்னடி" என்னும் உலகறிந்த திருநாமம் யதிராஜருக்கு ஏற்பட்டது. ஶட₂கோபராகிற நம்மாழ்வார் எம்பெருமானின் திருவடியாக உலகில் எப்படி பிரஸித்₃த₄ராயிருக்கிறுரோ அப்படியே ஶட₂கோபனின் திருவடியாக ராமாநுஜர் உலகில் பிரஸித்₃தி₄ அடைந்தார்.

### முதலியாண்டானும் வைஷ்ணவபரிப₄ாஷையும்

43*-*46. அவ்வண்ணமே உலகில் ராமாநுஜருடைய திருவடிஸ்த₂ானமாக முதலியாண்டான் அங்கீ₂கரிக்கப் பட்டார். எம்பெருமானது திருக்கோயிலில் 'ஸ்ரீஶட₂கோபன் ஸாதிக்கவேணும்' என்று சொல்லவேண்டும். நம்மாழ்வார் ஸந்நிதி₄யில் 'ஸ்ரீராமாநுசன் ஸாதிக்கவேணும்' என்று

४५. तथा दाशरथिं देहि श्रीरामानुजसन्निधौ।
इमं गुह्यतमं ह्यर्थं यो वेत्ति मनुजो महान्॥
४६. स च श्रीवैष्णवः श्रीमान् मुमुक्षुर्नात्र संशयः।
ततो यतीन्द्रः सन्तुष्टः कृतार्थो जगतां गुरुः॥
४७. तीर्थं प्रसादं स्वीकृत्य शठजिद्दययागतम्।
ततः श्रीरङ्गनगरमाजगाम महायशाः॥
४८. ततः स्वमठमाविश्य सह शिष्यैर्यतीश्वरः।
दर्शनार्थान् स्वशिष्येभ्यः प्रवदन् न्यवसत्सुखम्॥
४९. प्रच्छन्नबौद्धान्निर्जित्य ब्रह्मात्मत्वैकवादिनः।
देहात्मवादिनो मूढान् चार्वाकान् शास्त्रदूषकान्॥
५०. बौद्धांश्च सहसा जित्वा जीवानित्यत्ववादिनः।
मीमांसकान् विजित्याशुताननीश्वरवादिनः॥

---

சொல்லவேண்டும். அவ்வண்ணமே எம்பெருமானார் ஸந்நிதி₄யில் 'முதலியாண்டான் ஸாதிக்கவேணும்' என்று சொல்லவேண்டும். இந்தப் பரமரஹஸ்யமான அர்த்த₂த்தை எவன் அறிகிருனே அவனே பெரியவன்; ஸ்ரீவைஷ்ணவன்; திருவுடையவன்; முமுக்ஷு எனத்தக்கவன். இதில் ஐயமில்லை.

**ஸ்ரீரங்கமடைதலும் புறமதத்தவரைத் திருத்துதலும்**

46*-54. அதற்குப்பின் ஜக₃த்₃கு₃ருவான யதிராஜர் பெருப்பேறுபெற்று உகந்தவராய், நம்மாழ்வாருடைய அருளாலே கிடைத்த தீர்த்த₂ப்ரஸாத₃ங்களை ஏற்றுக்கொண்டு, பெரும்புகழாளராய் ஸ்ரீரங்கநகரத்திற்கு வந்துசேர்ந்தார். அதன்பின் ஶிஷ்யர்களோடுகூட யதிராஜர் தம் மட₂த்தை யடைந்து, தமது ஶிஷ்யர்களுக்கு த₃ர்ஶநார்த்த₂ங்களை உபதே₃ஶித்துக்கொண்டு இனிது வாழ்ந்தார். 'அறிவு மாத்ரமேயான ப்₃ரஹ்மமும் ஜீவனும் ஒன்றே' என்னும் ப்ரச்ச₂ந்ந (மறைந்துநிற்கும்) பௌ₃த்₃த₄ர்களான அத்₃வைதிகளையும், 'தே₃ஹமே ஆத்மா' என்னும் அறிவிலிகளாய், வேத₃ ஶாஸ்த்ரங்களை நிந்தி₃க்கும் சார்வாகர்களையும், 'ஜீவர்கள் அநித்யமானவர்கள்' என்று கூறும் பௌ₃த்₃த₄ர்களையும், 'ஈஶ்வரன் இல்லை' என்று கூறும் மீமாம்ஸகர்களையும், 'ப்₃ரஹ்மம் நிமித்தகாரணமாகமாத்திரமே உள்ளது. மூல

५१. कापिलानाकुलीकृत्य ब्रह्मनैमित्यवादिनः ।
एवं हि सर्वसमयान् उन्मूल्य शतशोऽशुभान् ॥

५२. स्ववशीकृत्य तान्सर्वान् अरक्षत् यतिपुङ्गवः ।
पाषण्डबौद्धचार्वाकमायावादाद्यवैदिकाः ॥
सर्वे यतीन्द्रमाश्रित्य बभूवुर्वैदिकोत्तमाः ॥

५३. ते सुस्फुटं च भुजयोर्धृतशङ्खचक्राः सम्यक् ललाटफलके लसदूर्ध्वपुण्ड्राः।
कण्ठे विलग्नतुलसीनलिनाक्षमालाः भेजुर्मुकुन्दपदवीं यतिराजभक्ताः॥

५४. एवं महात्मा यतिचक्रवर्ती रङ्गे पुरे लक्ष्मणदेशिकेन्द्रः ।
आसेतुशीताचलभूमिभागे जितारिवर्गः सुतरां विरेजे ॥
इति श्रीप्रपन्नामृते रामानुजचरित्रे गोदाभीष्टप्रपूरणादिकथनं
नाम त्रिपञ्चाशोऽध्यायः ॥

---

ப்ரக்ருதியே உபாதாுான காரணம்' என்று கூறும் ஸாங்க்ய யர்களேயும் வாதத்தில் கலங்கச்செய்து வெற்றிகொண்டு, இவ்வண்ணமாகவே அமங்களமான எல்லாச்சமயங்களேயும் அடியோடு வேரறுத்து, அம்மதங்களேப் பற்றியிருந்தவர் களனேவரையும் தம்பால் ஈர்த்து ரக்ஷித்தருளினுர் யதி ராஜர். பாஷண்டிகளான பௌத்தர்கள், சார்வாகர்கள், மாயாவாதிகள் முதலான அவைதிகர்களனேவரும் யதி ராஜரை ஆஶ்ரயித்து வைதிகோத்தமர்களானுர்கள். அவர்களனேவரும தமது இரு தோள்களிலும் சங்க சக்ரங் களேத் தெளிவாக தரித்தவர்களாய், நெற்றியில் ஊர்த்வ புண்ட்ரம் விளங்கப்பெற்றவர்களாய், கழுத்தில் தொங்கும் துளசி மணிமாலேகளேயும், தாமரை மணிமாலேகளேயும் உடையவர்களாய், யதிராஜரது பக்தர்களாய் முகுந்தனின் பரமபதத்தை அடைந்தார்கள். இவ்வண்ணமாக மஹாத்மா வாய், யதிசக்ரவர்த்தியான ஸ்ரீராமானுஜாசார்யர் இமவந்தம் தொடங்கித் திருவணே ஈருக உள்ள பாரததேசத்திலுள்ள புறச்சமயிகளனேவரையும் வென்றவராய், ஸ்ரீரங்கநகரத்தில் வெற்றிபெற்று விளங்கினுர்.

ஸ்ரீப்ரபந்நாம்ருதத்தில் ராமானுஜசரித்திரத்தில்.
கோதையின் மநோரதத்தை நிறைவேற்றுதல் முதலான
ஸ்ரீராமானுஜவைபவங்களேக்கூறும்.
ஐம்பத்துமூன்ரும் அத்தியாயம் நிறைவுற்றது

चतुःपञ्चाशोऽध्यायः

१. निर्जित्य सर्वसमयान् स्वमतं पृथिव्यां
आचन्द्रतारकमिदं प्रथितं यतीन्द्रः।
संस्थाप्य साधुजनसंमतमेव सिद्धं
लोकं ररक्ष कृपयाऽखिलमीशदत्तम्॥

२. सर्वे जना निखिलधर्मरता विशुद्धाः
रामानुजार्यकृपया धृतशङ्खचक्राः।
वेदान्तयुग्मविदिताखिलतत्त्वबोधाः
मुक्तिं कलावपि ययुर्जितविष्णुमायाः॥

३. सर्वान् जनान् विष्णुपदाब्जभृङ्गान् कुर्वन्स्वसामर्थ्यबलेन धीरः।
गोविन्दकूरेशमुखैश्च शिष्यैस्तस्थौ स रङ्गे यतिसार्वभौमः॥

---

## ஐம்பத்துநான்காமத்தியாயம்

# ஸ்ரீராமாநுஜரின் அஷ்டோத்தரசதநாமஸ்தோத்ரம்

### ஸ்ரீ ராமாநுஜரின் தர்ஶனப்ரசாரம்

1-3. யதிராஜர் இந்த பூ₄மியிலுள்ள மற்ற எல்லாச் சமயங்களையும் வெற்றிகொண்டு, தமது ஸித்₃தா₄ந்தத்தை நல்லோர்கள் அனைவரும் ஶாஸ்த்ரஸித்₃த₄ம் என்று இசையும்படியும், ப்ரஸித்₃த₄மாம்படியும் சந்த்₃ரனும் நக்ஷத்ரங்களும் உள்ளவரை நிலைநிறுத்தி, ஸர்வேஶ்வரனால் படைக்கப்பட்ட உலகனைத்தையும் தம் கருணையாலே ரக்ஷித்தருளினார். எல்லா ஜனங்களும் ராமாநுஜார்யரின் கருணையாலே ஶங்க₂சக்ரங்களை த₄ரித்தவர்களாய், எல்லா த₄ர்மங்களையும் கைக்கொண்டவர்களாய், பரிஶுத்₃த₄மானவர்களாய், உப₄யவேதா₃ந்தங்களிலும் ஓதப்பட்ட எல்லா உண்மைகளையும் அறிந்தவர்களாய், அதனாலேயே விஷ்ணுவின் மாயையாகிற ப்ரக்ருதி ஸம்ப₃ந்த₄த்தைக் கடந்தவர்களாய், கலிகாலத்திலும் மோக்ஷமடைந்தார்கள். எல்லா ஜனங்களையும் தம் திறமையாலே விஷ்ணுவின் திருவடித்

४. एवं निवसतस्तस्य श्रीरङ्गे यतिभूपतेः।
शिष्याश्च बहवः सन्ति देशेषु निखिलेष्वपि ॥

५. न तेषां गणने शक्ताः चित्रगुप्तादयोऽपि हि।
तत्र प्रधानाः शिष्यास्ते चतुस्सप्ततिदेशिकाः ॥

६. तेषां प्रियतमाः शिष्याः बहवस्सन्ति वैष्णवाः।
नित्यकैङ्कर्यनिरताः यतीन्द्रस्य जगद्गुरोः ॥

७. धीमान् वरदविष्ण्वार्यः कूरेशो भट्टवर्गकः।
श्रीभाष्यस्य यतीन्द्रेण व्याख्याने च सहायकाः ॥

८. देवराजमुनिस्तस्थौ विष्ण्वाराधनकर्मणि।
प्रणतार्तिहराचार्यः सानुजो यतिभूपतेः ॥

---

தாமரைகளில் வண்டுகளாக ஆக்கிக்கொண்டு எம்பார், கூரத்தாழ்வான் முதலான ஶிஷ்யர்களோடு கூடியவராய், பேரறிவாளரான யதிசக்ரவர்த்தி ஸ்ரீரங்கத்தில் வாழ்ந்து வந்தார்.

### யதிராஜரின் ப்ரதா₄நஶிஷ்யர்கள்

4-14. இவ்வண்ணமாக ஸ்ரீரங்கத்தில்வாழும் யதிராஜருக்கு உலகெங்கிலும் பல ஶிஷ்யர்கள் இருக்கிறார்கள். சித்ரகு₃ப்தன் முதலானவர்களாலும் அவர்களை எண்ணி முடியாது. அவர்களில் எழுபத்துநாலு ஸிம்ஹாஸனாதி₄பதிகள் முக்கியமானவர்களாவர். அவர்களில் பரம வைஷ்ணவர்களாய், ஜக₃த்₃கு₃ருவான யதிராஜருடைய நித்யகைங்கர்யத்தில் ஈடுபட்டவர்களாய், அவருக்கு மிகவும் இனியவர்களான ஶிஷ்யர்கள் பலர் உண்டு. பேரறிவாளராய் (எம்பெருமானாருக்கு மருமகனாய்) வரதவிஷ்ணு எனப்படும் நடாதூராழ்வான், கூரத்தாழ்வான், ப₄ட்டவர்க₃ம் ஆகியவர்கள் யதிராஜருக்கு ஸ்ரீபா₄ஷ்யத்தை இயற்றுவதில் துணைபுரிந்தார்கள். அருளாளப்பெருமாள் எம்பெருமானார் திருவாராத₄னகைங்கர்யத்தில் நியமிக்கப் பட்டிருந்தார். ஆசார்யரிடம் மிகவும் அன்புடையவரான கிடாம்பியாச்சான் தம்பியோடுகூட யதிராஜருக்குத் திரு

९. पाककर्मणि संयुक्तः तस्थौ नित्यं गुरुप्रियः ।
आन्ध्रपूर्णोऽभवद्युक्तः तस्याभ्यञ्जनकर्मणि ॥

१०. गोमठान्वयसंभूतो बालार्यो यतिभूपतेः ।
कमण्डलुं पादुके च वहन् तस्थौ निरन्तरम् ॥

११. हस्तदाने धनुर्दासः संयुक्तो यतिभूपतेः ।
अंमङ्गी तु सदा क्षीरं पक्वं निष्कर्षयन् स्थितः ॥

१२. उक्कलार्यो भुक्तपात्रग्रहणे निरतोऽभवत् ।
उक्कलाख्यस्तु वरदो व्यजनं सम्यगार्पयत् ॥

१३. शिष्यः कालिङ्गदेशार्यः परवादिजये स्थितः ।
चण्डशुण्डाविति ख्यातौ मल्लावुक्तौ महाबलौ ॥

१४. राजसेवापरौ द्रव्यं मठस्यान्यूनता यथा ।
अर्जयन्तौ तथा नित्यं अधिकं यतिभूपतेः ॥

---

மடைப்பள்ளி கைங்கர்யம் செய்துவந்தார். ஆந்த்$_4$ரபூர்ணர் (வடுகநம்பி) எம்பெருமானருக்கு எண்ணெய்க்காப்பு சாத்தியருளுவர். கோமடத்துச் சிறியாழ்வான் யதிராஜரின் கமண்ட$_3$லு (கலசப்பானை), திருவடிநிலைகள் ஆகியவற்றை எப்போதும் எடுத்துவருவர். பிள்ளையுறங்காவில்லித$_3$ாஸர் யதிராஜருக்குக் கைலாகு கொடுப்பதில் நியமிக்கப்பட்டிருந்தார். அம்மங்கியம்மாள் எப்போதும் பக்குவமாகப் பாலமுது காய்ச்சுவதில் ஈடுபட்டிருந்தார். உக்கலாழ்வான் எம்பெருமானர் உண்ட கலத்தை எடுப்பதில் ஈடுபட்டிருந்தார். உக்கலம்மாள் திருவாலவட்டம் அழகாக ஸமர்ப்பித்து வந்தார். ஶிஷ்யனாய், காளிங்க$_3$தேசத்தை அரசாண்ட அகளங்கநாட்டாழ்வான் எதிரிகளை நிரஸிப்பதில் ஈடுபட்டிருந்தார். சண்டர் (வண்டர்), சுண்டர் என்னும் இரண்டு மஹாப$_3$லமுடைய மல்லர்களும் ராஜஸேவையில் ஈடுபட்டு, அதற்குக் கூலியாகப் பெறும் ஆயிரக்கணக்கான பொற்காசுகளை யதிராஜரின் மட$_2$த்துக்குக் குறைவாராமல் மேன்மேலும் அளிப்பதில் எப்போதும் ஈடுபட்டனர்.

॥ श्रीरामानुजाष्टोत्तरशतनामस्तोत्रम् ॥

१५. एवं कैङ्कर्यनिरताः तस्य सन्ति सहस्रशः।
तेषां यतीन्द्रशिष्याणामान्ध्रपूर्णो महामतिः॥

१६. उपायं चाप्युपेयं च गुरुपादाब्जमेव मे।
इति ध्रुवं विनिश्चित्य यतिराजपदाम्बुजम्॥

१७. अष्टोत्तरशतैर्दिव्यैर्नामभिर्भक्तितत्परः।
नित्यमाराधयन् तस्थौ इष्टदेवमिवादरात्॥

१८. रामानुजः पुष्कराक्षो यतीन्द्रः करुणाकरः।
कान्तिमत्यात्मजः श्रीमान् लीलामानुषविग्रहः॥

## ஸ்ரீராமாநுஜ அஷ்டோத்தரஶதநாம ஸ்தோத்ரம்

(ப்ரபந்நாம்ருதம் 54-ம் அத்தியாயத்தில் உள்ளது)

15-46. இவ்வண்ணமாக ஒவ்வொரு கைங்கர்யங்களில் ஈடுபட்ட ஆயிரக்கணக்கான ஶிஷ்யர்கள் எம்பெருமானுருக்கு இருந்தனர். அந்த யதிராஜஶிஷ்யர்களுக்கிடையே பேரறிவாளரான ஆந்த்₄ரபூர்ணர் (வடுகநம்பி) ஆசார்யருடைய திருவடித்தாமரையையே உபாயமாகவும் உபேயமாகவும் உறுதியாக அறுதியிட்டு, யதிராஜரின் திருவடித் தாமரையிணையை நூற்றெட்டு தி₃வ்யமான திருநாமங்களைக்கொண்டு, ப₄க்திநிரம்பியவராய், இஷ்டதே₃வதையைப் போலே தினமும் ஆர்வத்தோடு ஆராதி₄த்துக்கொண்டிருந்தார். அந்தத் திருநாமங்கள் பின்வருமாறு :—

1. **ராமாநுஜ:—** ராமாநுஜர். இராமாநுசன் (இளையாழ்வார்) என்று மாமாவான பெரியதிருமலைநம்பியால் பிறந்தவுடன் திருநாமம் இடப்பெற்றவர். *21.

2. **புஷ்கராக்ஷ:—** தாமரைபோன்ற கண்ணையுடையவர். இப்படிப்பட்ட மஹாபுருஷ லக்ஷணங்கள் இருந்தமையாலே பிறந்தவுடன் இவரை ஓர் அவதாரபுருஷராக அறுதியிட்டனர். *21-22.

* இவ்வெண்கள் இந்தத் திருநாமத்தில் வெளியிடப்பட்ட செய்திகள் ப்ரபந்நாம்ருதத்தில் வரும் பக்கங்களைக் குறிக்கின்றன.

१९. सर्वशास्त्रार्थतत्त्वज्ञः सर्वज्ञः सज्जनप्रियः ।
नारायणकृपापात्रं श्रीभूतपुरनायकः ॥

---

3. **யதீந்த்₃ர:—** யதிராஜர். ஸந்யாஸாஶ்ரமஸ்வீகாரம் செய்துகொண்டவுடன் ஸ்ரீகாஞ்சீ வரத₃ராஜப்பெருமாளால் யதிராஜர் என்று பட்டம் கொடுக்கப்பெற்றவர். 131-133.

4 **கருணாகர:—** கருணைக்கோர் இருப்பிடமானவர். எம்பெருமானாருடைய சரித்திரத்தில் பல செய்திகள் இவர் கருணைக்கடலாய் இருந்தவர் என்று நிலைநாட்டுகின்றன. 'காரேய் கருணை இராமாநுச!' என்று அமுதனாரும், 'த₃யைக ஸிந்தே₄ா:' என்று கூரத்தாழ்வானும் இவருடைய இத்தனிப்பெருங்குணத்தை அருளிச்செய்தார்களன்றோ.

5. **காந்திமத்யாத்மஜ:—** காந்திமதியின் குமாரர். கேஶவஸோமயாஜியின் பத்னியான காந்திமதிக்குக் குமாரராக ஸ்ரீபெரும்பூதூரில் திருவவதரித்தவர். ஸ்ரீராமாநுஜரின் தாய்க்கு பூ₄தே₃வி என்னும் திருநாமமும் உண்டு. 18.

6. **ஸ்ரீமாந்—**செல்வம் நிறைந்தவர். கருணை முதலான நற்குணங்கள், வடிவழகு, ஜ்ஞாநப₄க்திவைராக்₃யங்கள், ப₄க₃வத்ப₄ாக₃வத கைங்கர்யங்கள் ஆகிய எல்லாச் செல்வங்களும் நிரம்பப்பெற்றவர். ஸ்ரீரங்கநாத₂னால் உப₄ய விபூ₄திச் செல்வமும் அருளப்பெற்றவர். ப்ரபந்நாம்ருதத்தில் பலவிடங்கள் இப்பெருமையைக் காட்டுகின்றன.

7. **லீலாமாநுஷவிக்₃ரஹ:—** லீலையின்பொருட்டு மனித உருவெடுத்தவர். ப்ரபந்நாம்ருதம் 21, 22 முதலான பல பக்கங்களில் இப்பெருமை விவரிக்கப்பட்டுள்ளது.

8 **ஸர்வஶாஸ்த்ரார்த்த₂தத்த்வஜ்ஞ:—**எல்லா ஶாஸ்த்ரங்களின் பொருளையும் உள்ளபடி அறிந்தவர். ப்ரபந்நாம்ருதம் 35-37 முதலான பல பக்கங்களில் இப்பெருமை நிலைநாட்டப்பட்டுள்ளது.

२०. अनघो भक्तमन्दारः केशवानन्दवर्धनः।
काञ्चीपूर्णप्रियसखः प्रणतार्तिविनाशनः॥

---

9. ஸர்வஜ்ஞ:— அனைத்தும் அறிந்தவர். அவதாரபுருஷ ராகையாலே அனைத்தும் அறிந்தவர் என்பதும் தன்னடையே தேறும்.

10. ஸஜ்ஜநப்ரிய:— நல்லோர்களுக்கு இனியவர். கூரத்தாழ்வான், முதலியாண்டான், எம்பார் முதலான ஆயிரக்கணக்கான பெரியோர்களுக்கு இனியவராயிருந்தவரன்றோ ஸ்ரீராமாநுஜர்.

11. நாராயணக்ருபாபாத்ரம்— நாராயணனின் கருணைக்கு இலக்காயிருந்தவர். 46-56 பக்கங்களில் விவரிக்கப்பட்டிருக்கும் சாலைக்கிணறு வ்ருத்தாந்தம் முதலான பல செய்திகள் இதை மூதலிக்கின்றன.

12. ஸ்ரீபூ₄தபுரநாயக:— ஸ்ரீபெரும்பூதூருக்குத் தலைவர். இவரது அவதாரஸ்த₂லமான ஸ்ரீபெரும்பூதூர் இவராலே பெருமைபெற்றதாகையாலும், இன்றும் தாமுகந்த திருமேனியுடன் அங்கு எழுந்தருளியிருக்கையாலும் அவ்வூருக்கு இவரே தலைவரென்னத் தட்டில்லையன்றோ.

13. அநக₄:— குற்றமற்றவர். ப்ரபந்நாம்ருதத்தில் பல வ்ருத்தாந்தங்கள் இதை வலியுறுத்துகின்றன.

14. ப₄க்தமந்தா₃ர:— ப₄க்தர்களுக்கு நிழல்தரும் மரமாயிருப்பவர். ஆயிரக்கணக்கான ப₄க்தர்களால் ஆஶ்ரயிக்கப்பட்ட ஆசார்யஶ்ரேஷ்டர் இவர் ஒருவரேயன்றோ.

15. கேஶவாநந்த₃வர்த்த₄ந:— கேஶவஸோமயாஜியாருக்கு ஆனந்தத்தை வளரச்செய்பவர். ஸ்ரீராமாநுஜரின் தந்தையாரான கேஶவஸூரி நீண்டகாலம் தமக்கு மக்கட்பேறு இல்லாமலிருந்தமையாலே திருவல்லிக்கேணியில் புத்ரகாமேஷ்டியாகமும் செய்து பெற்றெடுத்த குழந்தையாகையாலே, அவரது ஆனந்தத்தை வளரச்செய்தவர்

२१. पुण्यसंकीर्तनः पुण्यो ब्रह्मराक्षसमोचकः।
यादवापादितापार्थवृक्षच्छेदकुठारकः॥

இவரே என்பது பொருத்தமன்றோ. (17-18). லக்ஷக்கணக்கான சேதனரைத் திருத்தியவராகையாலே கேஶவப் பெருமாளின் ஆனந்தத்தை வளரச்செய்தவர் என்றும் பொருள்கொள்ளலாம்.

16. **காஞ்சீபூர்ணப்ரியஸக₂:**—திருக்கச்சிநம்பிக்கு இனிய நண்பராயிருந்தவர். தாயின் நியமனத்தாலே ஸ்ரீராமாநுஜர் திருக்கச்சிநம்பிகளை நண்பராகக்கொண்டது, அவரது நியமனத்தால் சாலைக்கிணற்றிலிருந்து வரதராஜனுக்குத் தீர்த்த₂கைங்கர்யம் செய்தது (52-56), அவர்மூலமாக ஆறு வார்த்தைகளைத் தேவப்பெருமாளிடமிருந்து பெற்றது (102-104) முதலான பல செய்திகளில் இவ்வர்த்த₂ம் விளக்கப்படுகிறது.

17. **ப்ரணதார்த்திவிநாஶந:**- தன்னையடைந்தவர்களின் துன்பங்களைத் துடைப்பவர். கூரத்தாழ்வான், முதலியாண்டான் முதலான பல்லாயிரக்கணக்கான ஶிஷ்யர்களின் ஸாம்ஸாரிகத்துன்பங்களையெல்லாம் துடைத்து, மோக்ஷானந்தத்தை அருளியவரன்றோ எம்பெருமானார்.

18. **புண்யஸங்கீர்த்தந:**—நற்கதிக்கு அழைத்துச் செல்லும் திருநாமத்தை உடையவர். "**ந சேத்₃ராமாநுஜேத்யேஷா சதுரா சதுரக்ஷரீ। காமவஸ்த₂ாம் ப்ரபத்₃யந்தே ஜந்தவோ ஹந்த மாத்₃ருஶ:॥**" ['ராமாநுஜ' என்னும் வலிமைமிக்க நான்கு எழுத்துக்களையுடைய திருநாமமில்லையேல் எம்மைப்போன்ற ஜந்துக்கள் என்ன துர்த்த₃ஶையை அடைந்திருப்போமோ, அந்தோ!] என்று பின்புள்ளாரும் அநுஸந்தி₄த்தார்கள் என்றோ.

19. **புண்ய:**—நற்கதிக்கு அழைத்துச்செல்பவர். பல்லாயிரக்கணக்கான ஶிஷ்யர்களை மோக்ஷமடையச் செய்தவரன்றோ.

२२. अमोघो लक्ष्मणमुनिः शारदाशोकनाशनः ।
निरन्तरजनाज्ञाननिर्मोचनविचक्षणः ॥

20. **ப்₃ரஹ்மராக்ஷஸமோசக :—** ப்₃ரஹ்மரக்ஷஸ்ஸை ஓட்டினவர். யாதவப்ரகாஶரால் ஓட்டமுடியாத ப்₃ரஹ்ம ராக்ஷஸனை ஓட்டின வ்ருத்தாந்தம், இங்கு கருதப்படு கிறது. 25-33.

21. **யாத₃வாபாதி₃தாபார்த்த₂வ்ருக்ஷச்சே₂த₃குட₂ாரக : —** யாதவரால் ( வேதவாக்கியங்களுக்குச் ) சொல்லப்பட்ட அவப்பொருள்களாகிற மரங்களை வெட்டும் கோடரியா யிருந்தவர். ராமாநுஜருக்கு உபநிஷதூ₃ர்த்த₂ங்களைச் சொல் லும்போது யாதவர் "**தஸ்ய யதா₂ கப்யாஸம் புண்டரீ₃கம் ஏவமக்ஷிணீ**" என்னும் சா₂ந்தோ₃க்₂யவாக்யத்துக்கு "குரங்கின் ஆஸநவாய்போலே சிவந்த இரண்டு கண்கள் ஸூர்யநாராயணனுக்கு உள" என்னும் அவப்பொருளைச் சொன்னார். "ஸூர்யனால் மலர்ந்த தாமரைபோன்ற இரு கண்கள் உள" என்பதே சரியான பொருள் என்று ராமாநுஜர் அவருக்கு உணர்த்தினார். அதுபோலவே '**ஸத்யம் ஜ்ஞாநம் அநந்தம் ப்₃ரஹ்ம**', '**ஸதே₃வ ஸோம்ய**', '**தத்த்வமஸி**' முதலான வாக்கியங்கள் 'ப்₃ரஹ்மம் கு₃ண மற்றது; ஜீவனோடு அபி₄ந்நமானது' என்று கூறுவதாகச் சொன்னார் யாதவர். "ஜீவனை ஶரீரமாகக்கொண்ட ப்₃ரஹ்மம் பல நற்குணங்கள்கொண்டது என்றே இவ்வாக்கியங்கள் முழங்குகின்றன" என்று நிரூபித்தார் ராமாநுஜர். இவ்வண் ணமாக யாதவர் கூறிய அவப்பொருள்களாகிற மரங்களை வெட்டும் கோடரியாயிருந்தார் அவர். இதன் விரிவு 35-37 பக்கங்களில் காணலாம்.

22. **அமோக₄:—** பழுதுபடாதவர். ராமாநுஜருடைய ஜ்ஞானப₄க்திவைராக்₃யங்களும், த₃ர்ஶனத்துக்காக அவர் செய்த செயல்களும் க்ருமிகண்ட₂னைப்போன்ற பல விரோதி₄கள் தடைசெய்தபோதிலும் என்றும் பழுதுபடாம லிருந்தன என்று கருத்து.

२३. वेदान्तद्वयसारज्ञो वरदाम्बुप्रदायकः।
परामिप्रायतत्त्वज्ञो यामुनाङ्गुलिमोचकः॥

---

23. **லக்ஷ்மணமுநி:—** ராமாநுஜ (லக்ஷ்மண) முனிவர் என்னும் திருநாமம் பெற்றவர். '**அநந்த: ப்ரத₂மம் ரூபம்**' என்று தொடங்கும் ப்ரமாணத்தில், பரமபத₃த்தில் ஆதி ஶேஷனுயிருந்தவரே திரேதா₄யுக₃த்தில் லக்ஷ்மணனுகவும், த்₃வாபரயுக₃த்தில் ப₃லராமனுகவும், கலியுக₃த்தில் ராமா நுஜராகவும் அவதரித்ததாகச் சொல்லப்படுகிறதாகையால் இப்பெயர் இவருக்கு மிகப் பொருந்தியது என்று கருத்து.

24. **ஶாரதா₃ஶோகநாஶந:**-ஸரஸ்வதீதே₃வியின் வருத்தத்தைத் தீர்த்தவர். '**கப்யாஸ**' ஶ்ருதிக்குப் பொருள்கேட்ட காஷ்மீர ஶாரதா₃ தே₃வியிடம் அதற்குச் சரியான பொருளுரைத்து, அவளுடைய வருத்தத்தைத் தீர்த்து, தமது ப்₃ரஹ்மஸூத்ர பா₄ஷ்யத்துக்கு ஸ்ரீபா₄ஷ்யம் என்னும் திருநாமத்தையும், தமக்கு ஸ்ரீபா₄ஷ்யகாரர் என்னும் திருநாமத்தையும் அடைந்த வ்ருத்தாந்தத்தை நினைப்பது. ப்ரபந்நாம்ருதத்தில் பக்கம் 373-375ல் இதன் விரிவு காண்க.

25. **நிரந்தரஜநாஜ்ஞாந நிர்மோசந விசக்ஷண:—** ஜனங்களுடைய அறியாமையை அடியோடு போக்குவதில் வல்லவர். தம் காலத்திலிருந்த ஜனங்களுக்கு நேரில் உபதே₃ஶமூலமாகவும், எல்லாக்காலத்திலுமுள்ள ஜனங்களுக்கு ஸ்ரீபா₄ஷ்யாதி₃க்₃ரந்த₂ங்கள் மூலமாகவும் அஜ்ஞானமாகிற இருளை என்றும் தொலைக்கிறுரன்றே இவர்.

26. **வேதா₃ந்தத்₃வயஸாரஜ்ஞ:—** உப₄யவேதா₃ந்தங்களின் ஸாரத்தை உணர்ந்தவர். வடமொழி மறைகளையும், ஆழ்வார்களின் அருளிச்செயல்களாகிற தமிழ்வேதங்களையும் ஸதா₃சார்யர்களிடம் கசடறக்கற்று, அவற்றின் ஸாரத்தைத் தெளிவாக அறிந்து, தம் க்₃ரந்த₂ங்களில் வெளியிட்டிருப்பவரன்றே இவர்.

२४. देवराजघृणालब्धषड्वाक्यार्थमहोदधिः ।
पूर्णार्यलब्धसन्मन्त्रः शौरिपादाब्जषट्पदः ॥

27. **வரத₃ாம்பு₃ப்ரத₃ாயக:—** வரத₃ராஜப்பெருமாளுக்கு சாலைக்கிணற்று நீரை தினந்தோறும் அளித்தவர். இச்செய்தி ப்ரபந்நாம்ருதம் ஐந்தாமத்தியாயத்தில் (46-56) விளக்கப்பட்டுள்ளது.

28. **பராபி₄ப்ராயதத்த்வஜ்ஞ:—** பிறர் கருத்தறிவதில் வல்லவர். அடுத்த திருநாமத்தில் இப்பெருமை விளக்கப் படுகிறது.

29. **யாமுநாங்கு₃லிமோசக:—** யாமுனரின் விரல்களை நிமிர்த்தியவர். பரமபத₃மடைந்த யாமுநாசார்யரின் மூன்று விரல்கள் மடங்கியிருப்பதைப் பார்த்து, அவர் திருவுள்ளத்தில் மூன்று குறைகள் தங்கியிருப்பதை உணர்ந்து, மூன்று ப்ரதிஜ்ஞைகளைச்செய்து, அந்த மூன்று விரல்களும் நிமிரச்செய்த செய்தியைக் குறிக்கிறது. 85-88.

30. **தே₃வராஜக்₄ருணாலப்₃த₄ஷட்₃வாக்யார்த்த₂மஹோத₃தி₄:** கடலபோல் பொருள் பொதிந்ததான ஆறுவார்த்தைகளை வரதராஜப்பெருமாளின் கருணையாலே (திருக்கச்சிநம்பியின் மூலம்) பெற்றவர். 102-104.

31. **பூர்ணார்யலப்₃த₄ஸந்மந்த்ர:—** பெரியநம்பியிடமிருந்து ரஹஸ்யத்ரயமந்த்ரோபதே₃ஶத்தைப் பெற்றவர். மது₄ராந்தகத்தில் நடந்த பஞ்சஸம்ஸ்காரத்தின்போது பெரிய நம்பியிடமிருந்து மந்த்ரோபதே₃ஶம் பெற்றது ப்ரபந்நாம்ருதததில் (112-114) விளக்கப்பட்டுள்ளது.

32. **ஶௌரிபாதா₃ப்₃ஜஷட்பத₃:—** எம்பெருமானின் திருவடித்தாமரைகளில் வண்டுபோல் ஈடுபட்டவர்.

33. **த்ரித₃ண்ட₃த₄ரீ—** த்ரித₃ண்ட₃த்தை த₄ரிக்கும் உத்தமஸந்யாஸத்தை ஏற்றுக்கொண்டவர். (129-133).

34. **ப்₃ரஹ்மஜ்ஞ:—** பரம்பொருளான நாராயணனை அறிந்தவர். அல்லது வேத₃த்தை அறிந்தவர்.

२५. त्रिदण्डधारी ब्रह्मज्ञो ब्रह्मध्यानपरायणः।
रङ्गेशकैङ्कर्यरतो विभूतिद्वयनायकः॥

२६. गोष्ठीपूर्णकृपालब्धमन्त्रराजप्रकाशकः।
वररङ्गानुकम्पी च द्राविडाम्नायसागरः॥

२७. मालाधरार्यसुज्ञातद्राविडाम्नायतत्त्वधीः।
चतुस्सप्ततिशिष्यार्यः पञ्चाचार्यपदाश्रयः॥

---

35. ப்₃ரஹ்மத்₄யாநபராயண:—பரம்பொருளான நாராய ணனைத் தியானிப்பதில் ஈடுபட்டவர்.

36. ரங்கே₃ஶகைங்கர்யரத:— திருவரங்கத்துக்கு எழுந் தருளி, த₃ர்ஶனநிர்வாஹத்தை ஏற்றுக்கொண்டபிறகு திருவரங்கனுடைய கைங்கர்யத்திலேயே ஈடுபட்டவர்.

37. விபூ₄தித்₃வயநாயக:—உப₄யவிபூ₄திச் செல்வத்தை யுடைய உடையவராம்படி அரங்கனால் அநுக்₃ரஹிக்கப் பெற்றவர். (180-181).

38. கோ₃ஷ்டீ₂பூர்ண க்ருபாலப்₃த₄ மந்த்ரராஜ ப்ரகாஶக:- திருக்கோட்டியூர்நம்பியின் கருணையால் கிடைத்த திருமந் த்ரார்த்த₂த்தை ஆசையுடையோர்க்கெல்லாம் வெளிப் படுத்தினவர். ப்ரபந்நாம்ருதம் 21-வது அத்தியாயத்தில் (230-244) இச்செய்தி விவரிக்கப்பட்டுள்ளது.

39. வரரங்கா₃நுகம்பீ– திருவரங்கப்பெருமாளரையரின் அருளைப்பெற்றவர். அவரிடமிருந்து அருளிச்செயல் முழு வதையும் கேட்ட செய்தி பக்கம் 255ல் விளக்கப்பட்டுள்ளது.

40. த்₃ராவிட₃ாம்நாயஸாக₃ர:— தமிழ்வேதமாகிற அரு ளிச்செயல் தங்கும் ஒருகடல்போலிருந்தவர்.

41. மாலாத₄ரார்யஸுஜ்ஞாதத்₃ராவிட₃ாம்நாயதத்த்வதீ₄: – திருமாலையாண்டானிடமிருந்து திருவாய்மொழியின் உண் மைப்பொருளை நன்கு உணரப்பெற்றவர். (256-262).

२८. प्रपीतविषतीर्थाम्भःप्रकटीकृतवैभवः ।
प्रणतार्तिहराचार्यदत्तभिक्षैकभोजनः ॥

---

42. **சதுஸ்ஸப்ததி *ஶி*ஷ்யார்ய :—** எழுபத்துநான்கு ஸிம்ஹாஸநாதி$_4$பதிகளுக்கு ஆசார்யர். இந்த ஸிம்ஹாஸநாதி$_4$பதிகளின் திருநாமங்கள் குருபரம்பராப்ரபாவத்தில் கொடுக்கப்பட்டுள்ளன. ப்ரபந்நாம்ருதம் 591 முதலான பக்கங்களிலும் இவர்களைப் பற்றிய குறிப்பு உள்ளது. **'சதுஸ்ஸப்ததிஶிஷ்யாட்$_4$ய:'**— என்பது பாட$_2$பே$_4$த$_3$ம். 'எழுபத்துநான்கு ஸிம்ஹாஸநாதி$_4$பதிகளாகிற *ஶி*ஷ்யஸம்பத்து நிறைந்தவர்' என்று பொருள்.

43. **பஞ்சாசார்யபத$_3$ாஶ்ரய:**— 1. பெரியநம்பி, 2. திருக்கோட்டியூர்நம்பி, 3. பெரியதிருமலைநம்பி, 4. திருமாலையாண்டான், 5. திருவரங்கப்பெருமாளரையர் என்னும் ஐந்து ஆசார்யர்களை ஆஶ்ரயித்து, ஆளவந்தார் அவர்களிடம் சேமித்துவைத்திருந்த ஐந்து அர்த்த$_2$ங்களைப் பெற்றவர். 31,38,58,41,39 எண்ணுள்ள திருநாமங்களில் முறையே இவ்வர்த்த$_2$ங்கள் விளக்கப்பட்டுள்ளன.

44. **ப்ரபீதவிஷதீர்த்த$_2$ாம்ப$_4$: ப்ரகடீக்ருத வைப$_4$வ:**— விஷதீர்த்த$_2$ நீரைக்குடித்த பின்பும் தீங்கு நேராமலிருந்தமையால் விளங்காநின்ற பெருமையை உடையவர். அர்ச்சகர் ஒருவர் எம்பெருமானாரிடம் வெறுப்பாலே பெரியபெருமாள் ஸந்நிதி$_4$யில் விஷம் கலந்த தீர்த்த$_2$த்தை அவருக்கு அளிக்க, அதைப் பருகிய பின்பும் தீங்கு நேராமையாலே இவர் ஓர் அவதாரபுருஷர் என்று அனைவரும் அறிய நின்றவர். (271, 272)

45. **ப்ரணதார்த்திஹராசார்ய த$_3$த்தபி$_4$க்ஷைகபே$_4$ாஜந:**— ப்ரணதார்த்திஹரர் என்னும் கிடாம்பியாச்சானால் அளிக்கப்பட்ட பி$_4$க்ஷையையே உணவாகக் கொண்டவர். எம்பெருமானாருக்கு அர்ச்சகர்கள் விஷமிட்டதால் அவர் உப

२९. पवित्रीकृतकूरेशो भागिनेयत्रिदण्डकः ।
कूरेशदाशरथ्यादिचरमार्थप्रदायकः ॥

३०. रङ्गेशवेङ्कटेशादिप्रकाशीकृतवैभवः ।
देवराजार्चनरतो मूकमुक्तिप्रदायकः ॥

---

வாஸமிருக்கிறார் என்று கேள்விபட்டுப் பதறி ஓடிவந்த திருக்கோஷ்டியூர்நம்பியின் பரீக்ஷையில் தேறிய கிடாம்பி யாச்சானையே எம்பெருமானாருக்கு எப்போதும் பி₄க்ஷை ஸாதிக்கவேண்டும் என்று நம்பி நியமித்த வ்ருத்தாந்தம் இங்கு கருதப்படுகிறது. (268-271)

46. **பவித்ரீக்ருதகூரேஶ:**— கூரத்தாழ்வானைத் தமது பவித்ரம் எனப்படும் யஜ்ஞோபவீதமாக அபி₄மானித்தவர்.

47. **பா₄கி₃நேயத்ரிதண்ட₃க:**— மருமகனான முதலியாண்டானைத் தமது த்ரித₃ண்ட₃மாக அபி₄மானித்தவர். திருக்கோட்டியூர்நம்பியிடம் எம்பெருமானார் திருமந்த்ரார்த்தோ₂பதே₃ஶம் பெறச் சென்றபோது, கூரத்தாழ்வானை யஜ்ஞோபவீதமாகவும், முதலியாண்டானை த்ரித₃ண்ட₃மாகவும் தாம் அபி₄மானித்திருப்பதை விண்ணப்பித்த செய்தியை பக்கம் 230-232ல் காணலாம்.

48. **கூரேஶதா₃ஶரத்₂யாதி₃சரமார்த்த₂ப்ரதா₃யக:**—கூரத்தாழ்வான், முதலியாண்டான் முதலானார்க்குச் சரம ஶ்லோகத்தின் அர்த்த₂த்தை உபதே₃ஶித்தவர். இது ப்ரபந்நாம்ருதம் 22-ம் அத்தியாயத்தில் (244-255) விரிவாக விளக்கப்பட்டுள்ளது.

49. **ரங்கே₃ஶவேங்கடேஶாதி₃ப்ரகாஶீக்ருதவைப₄வ:** — ரங்க₃நாத₂ன், திருவேங்கடமுடையான், பேரருளாளன், திருநாராயணப்பெருமாள், அழகர், திருக்குறுங்குடிநம்பி, நம்மாழ்வார், நாத₂முனிகள், ஆளவந்தார், ஐந்து ஆசார்யர்கள், பல ஶிஷ்யர்கள், ப்₃ரஹ்மரக்ஷஸ்ஸு, ஊமை முதலானவர்களால் வெளிப்படுத்தப்பட்ட பெருமையை

३१. यज्ञमूर्तिप्रतिष्ठाता मन्नाथो धरणीधरः।
वरदाचार्यसद्भक्तो यज्ञेशार्तिविनाशकः॥

---

உடையவர். இவ்விஷயம் நமது ஆறுயிரப்படி குருபரம் பராப்ரபாவ (1975) பதிப்பில் பக்கம் 281 முதல் 293 வரை விளக்கப்பட்டது. ப்ரபந்நாம்ருதத்தில் 59......61 அத்தி யாயங்களில் விளக்கப்பட்டுள்ளது.

50. **தேவராஜார்ச்சநரத:**— தமது திருவாராதனப் பெருமாளான தேவராஜனை எப்போதும் ஆராதிப்பதில் ஈடுபட்டவர்.

51. **மூகமுக்திப்ரதாயக:**—ஊமைக்கு மோக்ஷம் அளித் தவர். (450-451)

52. **யஜ்ஞமூர்த்திப்ரதிஷ்டாதா**— (அத்வைதியான) யஜ்ஞமூர்த்தியை விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்தில் நிலைநிறுத்தியவர். தமது திருவாராதனப் பெருமாளான அருளாளப் பெருமாளின் அருளாலே அவரை வென்று, அருளாளப்பெருமாளெம்பெருமானார் என்று திருநாமம் சாத்திய விபரம் ப்ரபந்நாம்ருதம் 25-ம் அத்தியாயத்தில் (பக்கம் 274-286) விளக்கப்பட்டுள்ளது.

53. **மந்நாத:**— எம்பெருமானார். திருமந்த்ரார்த்தத் தைத் திருக்கோட்டியூரில் ஆசையுடையோர்க்கெல்லாம் வாரிவழங்கியவுடன், அவரைத் திருக்கோட்டியூர்நம்பி 'எம் பெருமானாரே' என்று அழைத்து ஆரத்தழுவிய செய்தி ப்ரபந்நாம்ருதம் 237-239 பக்கங்களில் உள்ளது. 'மந்த்ரத:' என்றும் பாடம் காண்கிறது. 'ரஹஸ்யமந்த்ரங்களைப் பலருக்கு உபதேசித்தவர்' என்று பொருள்.

54. **தரணீதர:**—உலகைத் தாங்கும் ஆதிசேஷனின் அவதாரமாயிருப்பவர். இவர் ஆதிசேஷனின் அவதாரம் என்பது குருபரம்பராப்ரபாவத்திலும், ப்ரபந்நாம்ருதத்திலும் பலவிடங்களில் காணப்படுகிறது.

३२. अनन्ताभीष्टफलदो विट्ठलेशप्रपूजितः ।
श्रीशैलपूर्णकरुणालब्धरामायणार्थकः ॥

55. **வரத₃ாசார்யஸத்₃ப₄க்த:**—வரத₃ாசார்யர் எனப்படும் பருத்திக்கொல்லையம்மாளாகிற நல்ல ஶிஷ்யரையுடையவர். எம்பெருமானார் தி₃வ்யதே₃ஶயாத்ரையில் அஷ்டஸஹஸ்ர க்₃ராமம் சென்றபோது அவ்வூரிலிருந்த ஶிஷ்யரான யஜ்ஞேஶர் செல்வச் செருக்கு நிறைந்திருப்பதைக் கண்டு, அவரை உபேக்ஷித்து, மற்றொரு ஶிஷ்யரும் மிக ஏழையுமான இவ்வரதாசார்யருடைய வீடுதேடிச்சென்று, அவராலும், அவரது த₄ர்மபத்னியான லக்ஷ்மியாலும் ஆராதி₄க்கப்பெற்ற செய்தி ப்ரபந்நாம்ருதம் 299-318 பக்கங்களில் காணப்படுகிறது.

56. **யஜ்ஞேஶார்த்திவிநாஶக:**— யஜ்ஞேஶரின் வருத்தத்தைத் தீர்த்தவர். தம்மை உபேக்ஷித்த எம்பெருமானாரின் திருவடிகளில் விழுந்து அழுத யஜ்ஞேஶராகிற எச்சானின் வருத்தத்தை எம்பெருமானார் தீர்த்த செய்தி ப்ரபந்நாம்ருதம் பக்கம் 319-324ல் காணப்படுகிறது.

57. **அநந்தாபீ₄ஷ்டப₂லத₃:**— திருமலை அநந்தாழ்வானுக்கு அவர் விரும்பியபடி திருமலையில் புஷ்பகைங்கர்யத்தை அருளியவர். (296-297)

58. **விட்டலேஶப்ரபூஜித:** — விட்டலதே₃வனால் ஆராதி₄க்கப்பெற்றவர். திருமலை ப்ராந்தத்தை ஆண்ட விட்டலதே₃வன் எம்பெருமானாரை ஆஶ்ரயித்த செய்தி ப்ரபந்நாம்ருதம் பக்கம் 326-327ல் உள்ளது.

59. **ஸ்ரீஶைலபூர்ணகருணாலப்₃த₄ ராமாயணார்த்த₂க:**— பெரியதிருமலைநம்பியால் கருணையோடு ஸ்ரீராமாயணார்த்த₂த்தை உபதே₃ஶிக்கப்பெற்றவர். (335-336)

60. **ப்ரபத்தித₄ர்மைகரத:**— ஶரணாக₃தி த₄ர்மத்திலேயே ஈடுபட்டவர். இவ்வுலகில் நிறைந்திருக்கும் ப்ரவ்ருத்திபரர்களுக்காக ஶாஸ்த்ரங்களில் பரக்க உப

३३. प्रपत्तिधर्मैकरतो गोविन्दार्यप्रियानुजः ।
व्यासस्रूत्रार्थतत्त्वज्ञो बोधायनमतानुगः ॥

தேஶிக்கப்பெற்ற கர்மஜ்ஞாநபக்தியோகங்களை ஸ்ரீபாஷ்யாதிகளில் விரிவாக விளக்கியபோதிலும், ப்ரபத்தி நிஷ்டையே அத்யந்தபரதந்த்ரமான ஆத்மஸ்வரூபத்துக்குத் தகுந்ததாகையால் அதிலேயே ஈடுபட்டு, தாமும் தமரும் உய்வதற்காகப் பெரியபிராட்டியாரைப் புருஷகாரமாக முன்னிட்டுக்கொண்டு பெரியபெருமாளை ஶரணம்புக்கு, அதை கத்யத்ரயத்திலும் ஏடுபடுத்தி வைத்தாரன்றோ எம்பெருமானுர்.

61. **கோவிந்தார்யப்ரியாநுஜ:—** கோவிந்தர் எனப் படும் எம்பாரைப் பரிவுடைய தம்பியாகக் கொண்டவர். (அல்லது) தமது பரிவுக்கு விஷயமான கோவிந்தரைத் தம்பியாகக் கொண்டவர் என்றுமாம். கோவிந்தரின் பரிவு யாதவப்ரகாஶரின் சதியிலிருந்து ராமாநுஜரை அவர் காப்பாற்றியபோது வெளிப்பட்டது. (43-44). சைவராகி விட்ட கோவிந்தரைப் பெரியதிருமலைநம்பியைக்கொண்டு திருத்திய வ்ருத்தாந்தத்தில் எம்பெருமானுருக்கு கோவிந்தரிடமிருந்த பரிவு வெளிப்பட்டது. (189-219)மேலும் பல உள.

62. **வ்யாஸஸூத்ரார்த்ததத்த்வஜ்ஞ:—** வியாஸர் அருளிய ப்ரஹ்மஸூத்ரத்தின் உண்மைப் பொருளை அறிந்தவர். இதற்குக் காரணத்தை அடுத்த திருநாமம் விளக்குகிறது.

63. **போதாயநமதாநுக:—** போதாயந மஹரிஷியால் தமது வ்ருத்திக்ரந்தத்தில் காட்டப்பட்ட விஶிஷ்டாத்வைத மதத்தைப் பின்பற்றியவர். எம்பெருமானுர் காஷ்மீர ஶாரதாபீடம்சென்று போதாயனரின் வ்ருத்திக்ரந்தத்தை ஸேவித்து, அதை அநுஸரித்தே ஸ்ரீபாஷ்யாதிக்ரந்தங்களை அருளிச்செய்தார் என்னும் விஷயம் ப்ரபந்நாம்ருதம் 32-ம் அத்தியாயத்தில் (357-363) சொல்லப்பட்டதன்றோ. தமது ஸ்ரீபாஷ்யத்தின் தொடக்கத்தில் அவரே இவ்வர்த்தத்தை அருளிச்செய்திருப்பது குறிக்கொள்ளத்தக்கது.

३४. श्रीभाष्यादिमहाग्रन्थकारकः कलिनाशनः ।
अद्वैतमतविच्छेत्ता विशिष्टाद्वैतपालकः ॥

64. **ஸ்ரீபாஷ்யாதிமஹாக்ரந்தகாரக:—** ஸ்ரீபாஷ்யம், வேதாந்ததீபம், வேதாந்தஸாரம், வேதார்த்தஸங்க்ரஹம், கீதாபாஷ்யம், நித்யம், கத்யத்ரயம் ஆகிய சிறந்த க்ரந்தங்களை அருளிச்செய்தவர். (362-363)

65. **கலிநாஶந:—** கலியை அழித்தவர். இவருடைய அவதாரத்தைக் கருதியே நம்மாழ்வார் "கலியுங் கெடும் கண்டுகொண்மின்" [திருவாய் 5-2-1] என்று அருளினுரன்றே. "தாழ்வொன்றில்லா மறை தாழ்ந்து, தல முழுதும் கலியே ஆள்கின்ற நாள் வந்து அளித்தவன் காண்மின்" [இராமா 16] என்று அமுதனுர் அருளியபடியே சங்கர பாஸ்கர யாதவ பாட்ட ப்ரபாகரர் தங்கள் மதம் சாய்வுறச் செய்து கலியை அழித்தார்ன்ரே இராமாநுசர்.

66. **அத்வைதமதவிச்சேத்தா—** அத்வைத மதத்தை அழித்து ஒழித்தவர். ஸ்ரீபாஷ்யாதி க்ரந்தங்களாலே அத்வைதமதம் தலையெடுக்கமுடியாதபடி அழித்தொழித்தாரன்றே ஸ்ரீபாஷ்யகாரர். ஶ்ருதப்ரகாஶிகை, ஶததூஷணி முதலான பூர்வாசார்ய க்ரந்தங்களில் தொடங்கி, அநந்தாழ்வான் வாதாவளீ, பரமார்த்தபூஷணம், விஶிஷ்டாத்வைதவிஜயம் முதலான பிற்காலவித்வான்களின் க்ரந்தங்கள் வரையில் நூற்றுக்கணக்கான நூல்களாலே எதிரிகளும் வாய்திறக்கவொண்ணுதபடி இவ்விஷயம் நிலைநாட்டப்பட்டதன்றே. அத்வைதிகள் அத்வைதக் கொள்கையைக் கைவிட்டு, சைவர்களாகவும் சாக்தர்களாகவும் இன்று மாறி நிற்பதே இத்திருநாமத்தின் வெற்றிக்குக் கட்டியங்கூறுகிறது.

67. **விஶிஷ்டாத்வைதபாலக:—**பரமவைதிகஸித்தாந்தமான விஶிஷ்டாத்வைத ஸ்ரீவைஷ்ணவ மதத்தை ரக்ஷித்தவர். தம் க்ரந்தங்களாலும், யஜ்ஞமூர்த்தி முதலான

३५. कुरङ्गनगरीपूर्णमन्त्ररत्नोपदेशकः।
विनाशिताखिलमतः शेषीकृतरमापतिः॥

---

வலிமைமிக்க அத்₂வைதிகளை வாத₃த்தில் வென்றும், தம் ஶிஷ்ய பரம்பரைகளைக்கொண்டு வேதாந்தி முதலான ஆயிரக்கணக்கான அத்₃வைதிகளை வெல்வித்தும் விஶிஷ்டாத்₂வைத மதத்தை எவராலும் அசைக்கமுடியாதபடி நிலைநாட்டிவருபவரன்றோ எம்பெருமானார். 'விஶிஷ்டாத்₂வைத பாரக₃:' என்றும் பாட₂பே₄த₃ம். போ₃தா₄யனர் முதலானோரால் நிலைநிறுத்தப்பட்ட விஶிஷ்டாத்₂வைத மதத்தைக் கரைகண்டவர் என்று பொருள்.

68. **குரங்க₃நக₃ரீபூர்ணமந்த்ரரத்நோபதே₃ஶக:**— திருக்குறுங்குடி நம்பிக்கு மந்த்ரரத்னமான த்₃வயத்தை உபதே₃ஶித்தவர். இது ப்ரபந்நாம்ருதம் 364-371 பக்கங்களில் விளக்கப்பட்டுள்ளது.

69. **விநாஶிதாகி₂லமத:**—அப்ராமாணிக மதங்களனைத்தையும் அழித்தவர். பௌ₃த்₃த₄ம், ஜைநம், நையாயிகம், வைஶேஷிகம், ஸாங்க்₂யம், யோக₃ம் முதலான வேத₃த்துக்குப் புறம்பான (பா₃ஹ்ய) மதங்களையும், சைவம், அத்₂வைதம் முதலான வேத₃த்துக்கு அவப்பொருள்கூறும் (குத்₃ருஷ்டி) மதங்களையும் அழித்தவரன்றோ எம்பெருமானார்.

70. **ஶேஷீக்ருதரமாபதி:**— எம்பெருமானை லோகநாத₂னாக ஆக்கியவர். 'உயிரை உடையவன் நாரணனென்று அறிவாரில்லை உற்றுணர்ந்தே' [இராமா 59] என்கிறபடியே எம்பெருமானே லோகநாத₂ன் என்று ஜனங்கள் உணராதிருந்த கலியிருளே மிகுந்திருந்த காலத்து, அவனே லோகநாத₂ன் என்று நிலைநாட்டி, அவனை லோகநாத₂னாக ஆக்கியவரன்றோ எம்பெருமானார்.

71. **புத்ரீக்ருதஶட₂ராதி:**—திருக்குருகைப்பிரான் பிள்ளானை (அபி₄மான) புத்ரராக ஏற்றுக்கொண்டவர். இச்செய்தி ப்ரபந்நாம்ருதம் 585-587 பக்கங்களில் விளக்கப்பட்டுள்ளது.

३९. समीचीनार्यसच्छिष्यसत्कृतो वैष्णवप्रियः।
क्रिमिकण्ठनृपध्वंसी सर्वमन्त्रमहोदधिः ॥

82. **கோ₃பிகாமோக்ஷதா₃யக:—** இடைச்சிக்கு மோக்ஷம் அளித்தவர். திருமலையில் தும்பு₃ருகோஷ்ட்ரா என்னும் இடைச்சிக்கு எம்பெருமானார் மோக்ஷமளித்த செய்தி ப்ரபந்நாம்ருதம் ஐம்பத்தொன்பதாம் அத்தியாயம் 12-25 ஶ்லோகங்களில் விவரிக்கப்பட்டுள்ளது.

83. **ஸமீசீநார்யஸச்சி₂ஷ்யஸத்க்ருத:—** திருமலை நல்லானுடைய நல்ல ஶிஷ்யர்களால் ஸத்கரிக்கப்பெற்றவர். அத்திகிரி அருளாளனை வரத₃ராஜனால் 'நீ நாட்டுக்கு நல்லானுகையாலே நமக்கும் நல்லான்' என்று அருளப் பெற்றவர் திருமலை நல்லான். எம்பெருமானார் மேல்நாட்டுக்கு எழுந்தருளுகையில் தம் சீடரான திருமலைநல்லானின் ஶிஷ்யர்களான வேடமுதலிகளால் உபசரிக்கப் பெற்ற செய்தி ப்ரபந்நாம்ருதம் 472-475ல் விளக்கப்பட்டுள்ளது.

84. **வைஷ்ணவப்ரிய:—** வைஷ்ணவர்களிடம் ஆராத காதல் கொண்டவர். உறங்காவில்லி, வேடமுதலிகள், சைலாசலாம்ப₃ா, பருத்திகொல்லை லக்ஷ்மி, திருநாராயணபுரத்திருக்குலத்தார் முதலான எத்தனையேனும் தாழ்ந்தவர்களிடமும் வைஷ்ணவத்வத்தையே கண்டு பரிவைக் காட்டியவரன்றோ எம்பெருமானார். (299-318), (423-447), (476-491), (533-535)

85 **க்ருமிகண்ட₂ந்ருபத்₄வம்ஸீ—** க்ருமிகண்ட₂சோழனை அழித்தவர். திருநாராயணபுரம் நரசிங்கன் ஸந்நிதி₄யில க்ருமிகண்ட₂னைக் குறித்து அபி₄சாரம் செய்து, அவன் அழிவதற்கு வழிவகுத்த செய்தி ப்ரபந்நாம்ருதம் 493-494ல் விவரிக்கப்பட்டுள்ளது.

86. **ஸர்வமந்த்ர மஹோத₃தி₄:—** ரத்னங்களுக்கு இருப்பிடமான கடல்போல் எல்லா மந்த்ரங்களுக்கும் இருப்பிடமா

४०. अङ्गीकृतान्ध्रपूर्णार्यः सालग्रामप्रतिष्ठितः।
श्रीभक्तग्रामपूर्णेशः विष्णुवर्धनरक्षकः॥

யிருந்தவர். பின்தொடர்ந்து வந்த க்ருமிகண்டனின் ஸேவகர்களை, பின்தொடரமுடியாமல் அருளிச்செயலை உச்சரித்து மணலைத் தூவித்தடுத்த செய்தியும் (471-472), க்ருமிகண்டனைக் குறித்து அபிசாரம் செய்த செய்தியும் 'இவர் எல்லா மந்த்ரங்களையும் அறிந்தவர்' என்று விளக்குவனவன்றோ.

87. **அங்கீக்ருதாந்த்ரபூர்ணார்ய: —** ஆந்த்ரபூர்ணர் என்னும் வடுகநம்பியை அங்கீகரித்தருளியவர். (493, 592 முதலிய பக்கங்கள், 55ம் அத்தியாயம்)

88. **ஸாலக்ராமப்ரதிஷ்டித:—** 'ப்ரதிஷ்டித ஸாலக்ராம:' என்றபடி. ஸாளக்ராமம் என்ற ஊரை நிலை நாட்டியவர். மிதிலாபுரீ என்னும் பெயருடைய இவ்வூரிலுள்ள குளத்தில் முதலியாண்டானுடைய ஸ்ரீபாதத்தை நீட்டிக்கொண்டிருக்கச் செய்து, அந்த ஸ்ரீபாத தீர்த்த மஹிமையினாலே அவ்வூரிலுள்ளாரைத் திருத்தி, அவ்வூருக்கு எம்பெருமானார் ஸாளக்ராமம் என்று பெயர் சூட்டிய வ்ருத்தாந்தம் ப்ரபந்நாம்ருதம் 492, 493 பக்கங்களில் விளக்கப்பட்டுள்ளது.

89. **ஸ்ரீபக்தக்ராமபூர்ணேஶ:—**தொண்டனூர் நம்பிக்கு ஸ்வாமியானவர். (494, 495)

90. **விஷ்ணுவர்த்தநரக்ஷக:—** அரசனான விஷ்ணுவர்த்தநனை ரக்ஷித்தவர். பௌத்தனான விட்டலதேவனை வைஷ்ணவனாக்கி, அவனுக்கு விஷ்ணுவர்த்தநன் என்னும் தாஸ்ய நாமத்தை எம்பெருமானார் அளித்த செய்தி ப்ரபந்நாம்ருதம் (495-501) பக்கங்களில் உள்ளது.

91. **பௌத்தத்வாந்தஸஹஸ்ராம்ஶு:—** பௌத்தர்களாகிற இருளுக்கு ஸூர்யன் போன்றவர். அடுத்த திருநாமம் காண்க.

४१. बौद्धध्वान्तसहस्रांशुः शेषरूपप्रदर्शकः ।
नगरीकृतवेदाद्रिः दिल्लीश्वरसमर्चितः ॥

४२. नारायणप्रतिष्ठाता सम्पत्पुत्रविमोचकः ।
सम्पत्कुमारजनकः साधुलोकशिखामणिः ॥

---

92. **ஶேஷரூபப்ரத₃ர்ஶக:—** ஆதி₃ஶேஷவுருவைக் காட்டியவர். ஆயிரம் புறச்சமயிகளை வெல்லுவதற்கு ஆயிரம் வாய்களையுடைய ஆதி₃ஶேஷனின் உருவை எடுத்துக் கொண்டு, திரைமறைவிலிருந்து, அவர்களுடைய யுக்தி களுக்கெல்லாம் பதில்கூறி அவர்களை வெற்றி கொண்ட செய்தி ப்ரபந்நாம்ருதம் (501-503) பக்கங்களில விவரிக்க ப்பட்டுள்ளது.

93. **நக₃ரீக்ருதவேத₃ாத்₃ரி:—**காடாயிருந்த வேத₃ாத்₃ரி எனப்படும் திருநாராயணபுரத்தை நகரமாக்கியவர். (504-510).

94. **தி₃ல்லீஶ்வர ஸமர்ச்சித:—** டில்லி அரசனல் ஆராதி₄க்கப்பெற்றவர்.

95. **நாராயணப்ரதிஷ்ட₂ாதா —** திருநாராயணபுரத்தில் திருநாரணனை ப்ரதிஷ்டை₂ செய்தவர்.

96. **ஸம்பத்புத்ரவிமோசக:—** (திருநாரணனின் உத்ஸ வராகிற) செல்வப்பிள்ளையை (டில்லி அரசனிடமிருந்து) விடுவித்துக் கொண்டுவந்தவர்.

97. **ஸம்பத்குமாரஜநக:—** செல்வப்பிள்ளையின் தந்தை யாயிருப்பவர். 93 முதல் 97 வரையிலுள்ள திருநாமங்க ளின் விவரணங்கள் ப்ரபந்நாம்ருதம் 47-வது அத்தியாயத் திலும் (504-523), 48-வது அத்தியாயத்தில் 523-527 பக்கங்களிலும் காணத்தக்கவை.

४३. सुप्रतिष्ठितगोविन्दराजः पूर्णमनोरथः ।
गोदाग्रजो दिग्विजेता गोदाभीष्टप्रपूरकः ॥

98. ஸாது₄லோகஶிகா₂மணி:—நல்லோர்கள் அனைவராலும் உச்சிமேல் வைத்து மெச்சப்படுபவர். ப்ரபந்நாம்ருதத்தில் பலவிடங்களில் இதைக் காணலாம்.

99. ஸுப்ரதிஷ்டி₂தகோ₃விந்த₃ராஜ: — தில்லைகோ₃விந்த₃ராஜனைக் கீழத்திருப்பதியில் ப்ரதிஷ்டை₂ செய்வித்தவர். (568-571)

100. பூர்ணமநோரத₂:— மனோரத₂ம் நிறைவேறப் பெற்றவர். கூரத்தாழ்வான் கண் பார்வையைத் திரும்பப் பெற்றமையாலே எம்பெருமானார் மனோரத₂ம் நிறைவேறப் பெற்ற செய்தி ப்ரபந்நாம்ருதம் 52-ம் அத்தியாயத்தில் (572-579) விவரிக்கப்பட்டுள்ளது.

101. கோ₃தா₃க்₃ரஜ:— கோதையின் தமயனாரானவர். (103-வது திருநாமத்தின் விளக்கம் காண்க)

102. தி₃க்₃விஜேதா— எல்லா தி₃க்குகளிலும் உள்ள வாதி₃களை வெற்றிகொண்டவர். எம்பெருமானாருடைய தி₃க்₃விஜய வ்ருத்தாந்தம் ப்ரபந்நாம்ருதம் 33 முதல் 36 முடிய நான்கு அத்தியாயங்களில் (364-395) விளக்கப்பட்டுள்ளது.

103. கோ₃தா₃பீ₄ஷ்டப்ரபூரக:— கோதையின் விருப்பத்தை நிறைவேற்றியவர். 'நாறுநறும்பொழில்' [நாச் திரு- 9-6] பாசுரத்தில் ஆண்டாள் ஆசைப்பட்டபடி திருமாலிருஞ்சோலை அழகருக்கு நூறு தடாவில் வெண்ணெயும், நூறு தடா நிறைந்த அக்காரவடிசிலும் ஸமர்ப்பித்து, 'கோயிலண்ணர்' என்று ஆண்டாளாலே அபி₄மானிக்கப் பெற்ற செய்தி ப்ரபந்நாம்ருதம் 579-581 பக்கங்களில் விளக்கப்பட்டுள்ளது.

४४. सर्वसंशयविच्छेत्ता विष्णुलोकप्रदायकः।
अव्याहतमहद्वर्त्मा यतिराजो जगद्गुरुः॥

४५. एवं रामानुजार्यस्य नाम्नामष्टोत्तरं शतम्।
यः पठेत् शृणुयाद्वापि सर्वान् कामान् समश्नुते॥

---

104. **ஸர்வஸம்ஶயவிச்சேத்தா**—எல்லா ஐயங்களையும் போக்கியருளியவர். ப்ரபந்நாம்ருதம் 65-ம் அத்தியாயத்தில் எம்பெருமானார் தமது சரமதஶையில் 74 வாக்கியங்களை உபதேஶித்து, ஶிஷ்யர்களின் ஐயங்களனைத்தையும் போக்கியருளியது இங்கு அநுஸந்திக்கத் தக்கது.

105. **விஷ்ணுலோகப்ரதாயக:**— விஷ்ணுலோகத்தைப் பல்லாயிரவர்க்கு அளித்தவர். 'விபூதித்வயநாயக:' என்னும் 37-வது திருநாமத்தில் விளக்கப் பெற்றபடி அரங்கனால் உபயவிபூதிச் செல்வம் அளிக்கப்பெற்ற உடையவர் தமது திருவடி ஸம்பந்தம்பெற்ற பல்லாயிரவர்க்கு இன்றும் பரமபதம் அளிக்கிறாரன்றோ.

106. **அவ்யாஹதமஹத்வர்த்மா**-மோக்ஷமடைவதற்குத் தடையற்ற பெரிய வழியாய் (ஸாதனமாய்) இருப்பவர். எம்பெருமானை ஆஶ்ரயிப்பதைக் காட்டிலும் எம்பெருமானாரை ஆஶ்ரயிப்பது உறுதியான மோக்ஷஸாதனம் என்பது எம்பெருமானாலும், ஆசார்யர்களனைவராலும் அறுதியிடப்பட்ட விஷயமன்றோ.

107. **யதிராஜ :**— யதிகளுக்கு அரசராயிருப்பவர். 'யதீந்த்ர:' என்னும் மூன்றாவது திருநாமத்தைக் காண்பது.

108. **ஜகத்குரு:**— ஸர்வலோகங்களுக்கும் ஆசார்யராயிருப்பவர். முற்கூறிய பெருமைகளாலே உலகனைத்துக்கும் ஆசார்யராயிருக்கத்தக்க பெருமையுடையவர் இவர் ஒருவரே என்றபடி.

४६. यदान्ध्रपूर्णेन महात्मनेदं स्तोत्रं कृतं सर्वजनावनाय।
तज्जीवभूतं भुवि वैष्णवानां बभूव रामानुजमानसानाम्॥
इति श्रीप्रपन्नामृते रामानुजचरित्रे रामानुजाष्टोत्तरशतनाम्नां
वर्णनं नाम चतुःपञ्चाशोऽध्यायः॥

---

## ப₂லஶ்ருதி

45-46 இவ்வண்ணமாக ராமாநுஜாசார்யருடைய நூற்றெட்டு திருநாமங்களைப் படிப்பவர்களும், கேட்பவர்களும் எல்லா விருப்பங்களையும் அடைவார்கள். மஹாத்மாவான வடுகநம்பியாலே எல்லாச் சேதநரும் உய்வதற்காக இயற்றப்பெற்ற இந்த ஸ்தோத்ரம் இவ்வுலகில் ராமாநுஜரை நெஞ்சில்கொண்ட ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு வாழ்முதலாயுள்ளது.

ஸ்ரீப்ரபந்நாம்ருதத்தில் ராமாநுஜசரித்திரத்தில்
ராமாநுஜரின் அஷ்டோத்தரஶதநாம ஸ்தோத்ரத்தை வர்ணிக்கும்
ஐம்பத்துநாலாவது அத்தியாயம் நிறைவுற்றது.

## நாமாவளி

[நாலாவது வேற்றுமையை ஈறுகக்கொண்ட பின்வரும் பத₃ங்களுக்கு முன் 'ஓம்' எனும் ப்ரணவத்தையும், பின்பு நமஶ்ஶப்₃த₃த்தையும் முதற்பத₃த்திற்போல் சேர்த்து அநுஸந்தி₄ப்பது]

1. ஓம் ராமாநுஜாய நம:
2. புஷ்கராக்ஷாய
3. யதீந்த்₃ராய
4. கருணாகராய
5. காந்திமத்யாத்மஜாய
6. ஸ்ரீமதே
7. லீலாமாநுஷவிக்₃ரஹாய
8. ஸர்வஶாஸ்த்ரார்த்த₂ தத்த்வஜ்ஞாய
9. ஸர்வஜ்ஞாய
10. ஸஜ்ஜநப்ரியாய
11. நாராயணக்ருபாபாத்ராய
12. ஸ்ரீபூ₄தபுரநாயகாய
13. அநகா₄ய
14. ப₄க்தமந்தா₃ராய
15. கேஶவாநந்த₃வர்த்த₄நாய
16. காஞ்சீபூர்ணப்ரியஸகா₂ய
17. ப்ரணதார்த்திவிநாஶநாய
18. புண்யஸங்கீர்த்தநாய
19. புண்யாய
20. ப்₃ரஹ்மராக்ஷஸமோசகாய
21. யாத₃வாபாதி₄தாபார்த்த₂ வ்ருக்ஷச்சே₂த₃குடா₂ரகாய
22. அமோகா₄ய
23. லக்ஷ்மணமுநயே
24. ஶாரதா₃ஶோகநாஶநாய
25. நிரந்தரஜநாஜ்ஞாந நிர்மோசந விசக்ஷணாய
26. வேதா₃ந்தத்₃வயஸாரஜ்ஞாய
27. வரதா₃ம்பு₃ப்ரதா₃யகாய
28. பராபி₄ப்ராயதத்த்வஜ்ஞாய
29. யாமுநாங்கு₃லிமோசகாய

30. தே3வராஜக்ருபாலப்3த4ஷட்3வாக்யார்த்த2மஹோத3த4யே
31. பூர்ணார்யலப்3த4ஸந்மந்த்ராய
32. ஶௌரிபாத3ாப்3ஜஷட்பதா3ய
33. த்ரித3ண்ட3த4ாரிணே
34. ப்3ரஹ்மஜ்ஞாய
35. ப்3ரஹ்மத்4யாநபராயணாய
36. ரங்கே3ஶகைங்கர்யரதாய
37. விபூ4தித்3வயநாயகாய
38. கோ3ஷ்டீ2பூர்ண க்ருபாலப்3த4 மந்த்ரராஜப்ரகாஶகாய
39. வரரங்கா3நுகம்பிநே
40. த்3ராவிடா3ம்நாயஸாக3ராய
41. மாலாத4ரார்யஸுஜ்ஞாத த்3ராவிடா3ம்நாயதத்த்வதி4யே
42. சதுஸ்ஸப்ததிஶிஷ்யார்யாய
43. பஞ்சாசார்யபதா3ஶ்ரயாய
44. ப்ரபீதவிஷதீர்த்தா2ம்ப4: ப்ரகடீக்ருதவைப4வாய
45. ப்ரணதார்த்திஹராசார்ய த3த்தபி4க்ஷைகபோ4ஜநாய
46. பவித்ரீக்ருதகூரேஶாய
47. பா4கி3நேயத்ரித3ண்ட3காய
48. கூரேஶதா3ஶரத்2யாதி3 சரமார்த்த2ப்ரதா3யகாய
49. ரங்கே3ஶவேங்கடேஶாதி3 ப்ரகாஶீக்ருதவைப4வாய
50. தே3வராஜார்ச்சநரதாய
51. மூகமுக்திப்ரதா3யகாய
52. யஜ்ஞமூர்த்திப்ரதிஷ்டா2த்ரே
53. மந்நாதா2ய
54. த4ரணீத4ராய
55. வரதா3சார்யஸத்3ப4க்தாய
56. யஜ்ஞேஶார்த்திவிநாஶகாய
57. அநந்தாபீ4ஷ்டப2லதா3ய
58. விட்டலேஶப்ரபூஜிதாய
59. ஶ்ரீஶைலபூர்ண கருணாலப்3த4 ராமாயணார்த்த2காய
60. ப்ரபத்தித4ர்மைகரதாய
61. கோ3விந்தா3ர்யப்ரியாநுஜாய
62. வ்யாஸஸூத்ரார்த்த2 தத்த்வஜ்ஞாய
63. போ3தா4யநமதாநுகா3ய
64. ஶ்ரீபா4ஷ்யாதி3மஹாக்3ரந்த2 காரகாய
65. கலிநாஶநாய
66. அத்3வைதமதவிச்சே2த்ரே
67. விஶிஷ்டாத்3வைதபாலகாய
68. குரங்க3நக3ரீபூர்ண மந்த்ரரத்நோபதே3ஶகாய
69. விநாஶிதாகி2லமதாய
70. ஶேஷீக்ருதரமாபதயே
71. புத்ரீக்ருதஶடா2ராதயே
72. ஶட2ஜித்3ருணமோசகாய
73. பா4ஷாத3த்தஹயக்3ரீவாய
74. பா4ஷ்யகாராய
75. மஹாயஶஸே
76. பவித்ரீக்ருதபூ4பா4கா3ய
77. கூர்மநாத2ப்ரகாஶகாய
78. ஶ்ரீவேங்கடாசலாதீ4ஶ ஶங்க2சக்ரப்ரதா3யகாய
79. ஶ்ரீவேங்கடேஶஶ்வஶுராய
80. ஶ்ரீரமாஸக2தே3ஶிகாய
81. க்ருபாமாத்ரப்ரஸந்நார்யாய
82. கோ3பிகாமோக்ஷதா3யகாய
83. ஸமீசீநார்யஸச்சி2ஷ்யஸத் க்ருதாய
84. வைஷ்ணவப்ரியாய
85. க்ருமிகண்ட2 ந்ருபத்4வம்ஸிநே
86. ஸர்வமந்த்ரமஹோத3தே4யே
87. அங்கீ3க்ருதாந்த்4ர பூர்ணார்யாய
88. ஸாலக்3ராமப்ரதிஷ்டி2தாய
89. ஶ்ரீப4க்தக்3ராமபூர்ணேஶாய
90. விஷ்ணுவர்த்த4நரக்ஷகாய
91. பௌ3த்3த4த்4வாந்த ஸஹஸ்ராம்ஶவே
92. ஶேஷரூபப்ரத3ர்ஶகாய
93. நக3ரீக்ருதவேதா3த்3ரயே
94. தி3ல்லீஶ்வரஸமர்ச்சிதாய
95. நாராயணப்ரதிஷ்டா2த்ரே
96. ஸம்பத்புத்ரவிமோசகாய
97. ஸம்பத்குமாரஜநகாய
98. ஸாது4லோகஶிகா2மணயே
99. ஸுப்ரதிஷ்டி2த கோ3விந்த3ராஜாய
100. பூர்ணமநோரதா2ய
101. கோ3தா3க்3ரஜாய
102. தி3க்3விஜேத்ரே
103. கோ3தா3பீ4ஷ்டப்ரபூரகாய
104. ஸர்வஸம்ஶயவிச்சே2த்ரே
105. விஷ்ணுலோகப்ரதா3யகாய
106. அவ்யாஹதமஹத்3வர்த்மநே
107. யதிராஜாய
108. ஓம் ஜக3த்3கு3ரவே நம:

## पञ्चपञ्चाशोऽध्यायः

१. आन्ध्रपूर्णो ह्यसौ धीमान् ज्ञात्वैवं गुरुदैवतम्।
तस्यान्वयमजानानस्तत्कैङ्कर्यपरोऽनिशम्॥

२. सर्वमुक्तिप्रदे धीमान् श्रीरामानुजपादुके।
अष्टोत्तरशतैर्दिव्यैर्नामभिर्भक्तितत्परः॥

३. नित्यमाराधयन् तस्याविष्टदेवमिवादरात्।
प्रयाणगत्यां कस्याञ्चिदान्ध्रपूर्णो गुरुप्रियः॥

४. यतीन्द्राराधनं चैव स्वस्याराधनमादरात्।
समाहृत्य द्वयं वेगात् यतीन्द्रं पृष्ठतोऽन्वगात्॥

---

## ஐம்பத்தைந்தாம் அத்தியாயம்

# வடுகநம்பியின் பெருமை

### வடுகநம்பியின் ஆசார்யநிஷ்டை.

1-*3. அறிவாளியான இந்த வடுகநம்பி தம் ஆசார்ய ரையே தெய்வமாக உணர்ந்து, 'தேவுமற்றறியேன்' என் கிறபடியே ரங்கநாதனையும் அறியாதவராய், எப்போதும் எம்பெருமானாருக்குக் கைங்கர்யம் செய்பவராய் வாழ்ந்து வந்தார். அனைவர்க்கும் முக்தியளிக்கும் ஸ்ரீராமானுஜ ருடைய திருவடிநிலைகளை, அறிவாளியான அவ்வடுகநம்பி பக்தி நிரம்பியவராய், அற்புதமான அஷ்டோத்தரஶத நாமங்களாலே இஷ்டதெய்வத்தைப்போலே தினந்தோறும் அன்போடு ஆராதனம் செய்துகொண்டிருந்தார்.

### எனது பெருமாள் தாழ்ந்தவரோ?

3*-*7. ஒருமுறை ஆசார்யபக்தியுடையவரான வடுக நம்பி எம்பெருமானாரோடு பிரயாணத்துக்குப் புறப்படும் போது யதீந்த்ரருடைய திருவாராதனப் பெருமாளையும்,

५. लक्ष्मणार्योऽथ तं दृष्ट्वा पूर्णं वाक्यमभाषत।
किं कार्यमान्ध्रपूर्णार्य त्वयेदं हि कृतं वद॥

६. आन्ध्रपूर्णः स तच्छ्रुत्वा यतीन्द्रं वाक्यमब्रवीत्।
युष्मद्देवान्निकृष्टः किमस्मद्देवो यतीश्वर!॥

७. तच्छ्रुत्वा लक्ष्मणाचार्यः सन्तुष्टिं परमां गतः।
आन्ध्रपूर्णो यतीन्द्रेण रङ्गेशं सेवितुं सह॥

८. यदागतस्तदा तस्थौ संसेव्य गुरुविग्रहम्।
ततः कदाचित्प्राहेदमान्ध्रपूर्णं यतीश्वरः॥

९. रङ्गेशनेत्रसौन्दर्यं पश्य त्वमनघाधुना।
तच्छ्रुत्वा लक्ष्मणार्यस्य वाक्यं पूर्णोऽभ्यभाषत॥

---

தமது திருவாராதநப் பெருமாளான அவர் து திருவடி நிலைகளையும், விரைவில் புறப்படவேண்டியிருந்தமையாலே அன்போடு இரண்டையும் ஒன்ருகச் சேர்த்துக் கட்டிக் கொண்டு யதிராஜரைப் பின்தொடர்ந்தார். அப்போது அதைப்பார்த்த யதிராஜர் அவரைக்குறித்து "வடுகநம்பியே! என்ன காரியம் செய்துவிட்டீர்? இது தகுமோ?" என்று கேட்டார். அதைக்கேட்ட வடுகநம்பி யதிராஜரைப் பார்த்து "எதிகட்கிறைவரே! உம்முடைய பெருமாளைக் காட்டிலும் என்து பெருமாள் தாழ்ந்தவரோ?" என்று கேட்டார். அதைக் கேட்டு ஸ்ரீராமாநுஜாசார்யர் (இவருடைய மிகுந்த ஆசார்யநிஷ்டையைக் கண்டு) மிகவும் உகந்தார்.

### மற்ருென்றினைக் காணுவே

7*-11. எப்போதாவது யதிராஜரோடுகூட, பெரிய பெருமாளை ஸேவிப்பதற்கு வடுகநம்பி செல்லும்போது (அரங்கனை ஸேவிக்காமல்) ஆசார்யரின் திருமேனியை ஸேவித்துக்கொண்டே நிற்பார். அப்படி ஒரு நாள் ஸேவிக்கும்போது யதிராஜர் வடுகநம்பியைப் பார்த்து,

१०. यतीन्द्रनेत्रसौन्दर्यं पश्यमानं मदीयकम्।
लक्ष्मणार्य! यतिश्रेष्ठ! चक्षुरन्यन्न पश्यति॥

११. अधिकारिविशेषं च मत्वेदं यतिभूपतिः।
अकरोदान्ध्रपूर्णाय करुणां महतीं तदा॥

१२. ततः कदाचिद्योगीन्द्रो भुक्त्वा पूर्वं जगद्गुरुः।
कृपया लक्ष्मणाचार्यो भुक्तपात्रस्थमादरात्॥

१३. शिष्टान्नमान्ध्रपूर्णाय शिष्याय प्रददौ यदा।
तदान्ध्रपूर्णः सहसा स्वीकृत्यान्नं तदर्पितम्॥

१४. प्रक्षालनमकृत्वाथ हस्तयोर्भक्तितत्परः।
तत्पवित्रतमं मत्वा ममार्जाशु स्वमस्तके॥

---

"குற்றமற்றவரே! பெரியபெருமாளுடைய கண்ணழகை நீர் இப்போது பாரும்" என்று கூறினார். ஸ்ரீராமாநுஜருடைய அவ்வார்த்தையைக் கேட்டு, "ஸ்ரீராமாநுஜரான யதிஶ்ரேஷ்டரே! யதிராஜரின் கண்ணழகைக் காணும் எனது கண்கள் மற்றொன்றினைக் காணாவே" என்று வடுகநம்பி பதில் கூறினார். இதைக்கேட்ட யதிராஜர் "இஃதோர் அதி₄காரி விஶேஷமிருந்தபடியென!" என்று வியப்புற்று, அப்போது வடுகநம்பி திறத்தில் பெருங்கருணையைச் செய்தருளினார்.

## ஶேஷப்ரஸாதர் பெருமை

12-*21. ஜக₃த்₃கு₃ராசார்யரான யதிராஜர் ஒருசமயம் தாம் ப்ரஸாதப்பட்ட பிறகு உண்ட கலத்திலிருந்த ஶேஷத்தை அன்போடும் கருணையோடும் ஶிஷ்யரான வடுகநம்பிக்குக் கொடுத்தார். அப்போது வடுகநம்பி அவ்வன்னத்தைச் சடக்கென ஸ்வீகரித்துக்கொண்டு, எம்பெருமானாரிடம் ப₄க்தியுடையவராகையாலே அது பரம பவித்ரமானது என்று எண்ணித் தம் கைகளை ஶுத்₃தி₄

१५. दृष्ट्वा कदाचित्तं पूर्णं योगीन्द्रः कुपितस्तदा।
हस्तप्रक्षालनं शीघ्रं कुरुष्वेति जगाद ह॥

१६. तथाकरोदान्ध्रपूर्णो धन्योऽस्मीति महामतिः।
ततः कदाचिद्रङ्गेशनैवेद्यसमये तदा॥

१७. यतीन्द्रेण यदा प्राप्तस्स पूर्णो गुरुणा सह।
स्वदत्तं तत्प्रसादं च स्वीकृत्यार्धं यतीश्वरः॥

१८. आन्ध्रपूर्णाय तच्छिष्टमदिशत्कृपया गुरुः।
तदान्ध्रपूर्णः स्वीकृत्य हस्तप्रक्षालनं व्यधात्॥

१९. दृष्ट्वा विचेष्टितं तस्य प्रोवाच यतिपुङ्गवः।
विरुद्धमान्ध्रपूर्णाद्य कृतं कर्म कथं त्वया॥

२०. स तदाकर्ण्य तद्वाक्यमान्ध्रपूर्णस्तमब्रवीत्।
भवतोक्तप्रकारेण कृतमद्य न चान्यथा॥

---

செய்துகொள்ளாமல் தமது தலையிலே துடைத்துக் கொண்டார். ஒருசமயம் அவர் அப்படிச் செய்யும்போது அதைக்கண்ட யதிராஜர் கோபங்கொண்டவராய் "விரைவில் கையை ஶுத்₃தி₄செய்துகொள்வீர்" என்று உரைத்தார். பேரறிவாளரான வடுகநம்பி 'த₄ந்யஞனேன்' என்று கூறி அவ்வண்ணமே செய்தார். அதற்குப்பின் ஒருநாள் பெரிய பெருமாள் தளிகை அமுதுசெய்யும்போது ஆசார்யரான யதிராஜரோடு வடுகநம்பியும் கூடச்சென்றிருந்தார். தமக்கு அளிக்கப்பெற்ற பெரியபெருமாளுடைய பிரஸாதத்தில் ஒரு பகுதியை ஸ்வீகரித்துக்கொண்ட ஆசார்யரான யதிராஜர் அதில் மிகுந்திருந்ததை வடுகநம்பிக்குக் கருணையோடு அளித்தார். வடுகநம்பி அதை ஸ்வீகரித்துக்கொண்டு, கைகளை ஶுத்₃தி₄செய்து கொண்டார். (பெருமாள் பிரஸாதத்தை ஏற்றுக்கொண்டு கையலம்பிய) அத்தவறுன செயலைக்கண்டு யதிராஜர் "வடுகநம்பியே! நீர் இன்றுசெய்த செயல் ஶாஸ்த்ர

२१. भवतो युक्तमेवेदं इति प्राह यतीश्वरः ।
कदाचित्पूर्णार्यो यतीन्द्रस्य गुरोस्ततः ॥

२२. रात्रौ क्षीरं महाभक्त्या पक्तुकामः समास्थितः ।
यतिराजस्तमाहूय पूर्णं वाक्यमथाब्रवीत् ॥

२३. अयं महोत्सवः कालः रङ्गराजस्य वै किल ।
ततो रङ्गेश्वरः श्रीमान् साम्प्रतं जगदीश्वरः ॥

२४. वीथ्यामायाति वेगेन महता वैभवेन च ।
रङ्गराजस्य सेवार्थं किं नायाति भवान् बुधः ॥

२५. तन्निशम्य आन्ध्रपूर्णार्यो यतीन्द्रमिदमब्रवीत् ।
युष्मद्देवस्य सेवार्थं आगतो यद्यहं गुरो ॥

---

விருத்₃த₄மாகும்" என்று கூறினார். அவ்வார்த்தையைக் கேட்டு வடுகநம்பி "தேவரீர் அன்று சொன்னபடியே இன்று செய்தேன். மாறிச்செய்யவில்லையே" என்று கூறினார். 'இது உமக்குத் தக்கதே' என்று யதிராஜர் பதில் கூறினார்.

## என் பெருமாளுக்குப் பால்பொங்கிப்போமே

21*-26. ஒருசமயம் வடுகநம்பி ஆசார்யரான யதிராஜருக்கு இரவில் பேரன்போடு பால் காய்ச்சிக்கொண்டிருந்தார். யதிராஜர் அந்த வடுகநம்பியை அழைத்துப் பின்வருமாறு வார்த்தை சொன்னார்—"ரங்கநாதனுக்கு இது மஹோத்ஸவஸமயமன்றோ. லோகநாத₂னை ஸ்ரீரங்க₃நாத₂ன் பெருத்த வைப₄வத்தோடு விரைவாக இப்போது திருவீதி எழுந்தருளுகிறான். அரங்கனை ஸேவிப்பதற்கு அறிவாளியான நீர் ஏன் வரவில்லை" என்று யதிராஜர் அழைப்பதைக் கேட்ட வடுகநம்பி "ஆசார்யரே! உமது பெருமாளை ஸேவிப்பதற்கு நான் இப்போதுவந்தால் என் பெருமாளுக்குப் பால் பொங்கிப்போமே. ஆகையால்

२६. अधुना मम देवस्य क्षीममुज्जृम्भितं भवेत् ।
अतोऽहं नागमिष्यामि सेवार्थं रङ्गभूपतेः ॥

२७. आन्ध्रपूर्णगृहं प्राप्ताः पूर्वसम्बन्धिबान्धवाः ।
स्थित्वा दिनैकं तत्राथ गतेष्वेतेषु बन्धुषु ॥

२८. आन्ध्रपूर्णो गृहं सर्वं शुद्धिं कृत्वाथ शीघ्रतः ।
गृहस्थितान् सर्वभाण्डान् त्यक्त्वा दूरमचिन्तयत् ॥

२९. प्रायश्चित्तं ततो मत्वा तस्येदमिति बुद्धिमान् ।
तस्य दाशरथेः शीघ्रं गृहारामे महात्मनः ॥

३०. विसृष्टभाण्डान्यादाय स्थापयामास वेश्मनि ।
गुरुसम्बन्धरहिताः ततोऽशुद्धाः प्रकीर्तिताः ॥

---

நான் ரங்கராஜனை ஸேவிக்க வரமாட்டேன்" என்று பதில் கூறினார்.

## ஆசார்ய ஸம்ப₃ந்த₄மஹிமை

27-*31. ஒருசமயம் வடுகநம்பியின் வீட்டிற்கு அவருடைய முன்னுள்ள உறவினர்கள் வந்திருந்து ஒருநாள் தங்கிச் சென்றார்கள். அவ்வுறவினர்கள் சென்றவுடன் வடுகநம்பி விரைவில் வீடுமுழுவதையும் ஶுத்₃தி₄செய்து, வீட்டிலிருந்த மண்பானைகளையெல்லாம் வெளியே தூரத்தில் எறிந்து 'இதற்கு ப்ராயஶ்சித்தம் என்ன?' என்று சிந்திக்கலுற்றார். 'இதுவே ப்ராயஶ்சித்தம்' என்று நிஶ்சயித்து, மஹாத்மாவான முதலியாண்டான் வீட்டுத்தோட்டத்தில் கழித்துக் கிடந்த பானைகளை விரைவில் எடுத்துவந்து, தம் வீட்டில் உபயோகத்துக்கு வைத்துக்கொண்டார். இதிலிருந்து ஆசார்யஸம்ப₃ந்த₄மற்றவர்கள் அஶுத்₃த₄ர்கள் என்றும், ஆசார்யஸம்ப₃ந்த₄முள்ளவர்களே பரிஶுத்₃த₄ர்கள் என்றும் கொள்வதே ஶிஷ்டாசாரம என விளங்குகிறது

३१. गुरुसम्बन्धसंयुक्ताः परं शुद्धा भवन्ति हि।
आन्ध्रपूर्णो यतीन्द्रस्य पादतीर्थं विना क्वचित्॥

३२. अन्योदकं न पिबति गुरुभक्तिमतां वरः।
तस्यैव तीर्थनियमो ह्यस्ति नान्यस्य कस्यचित्॥

३३. आन्ध्रपूर्णो यतीन्द्रस्य पादतीर्थं सुपावनम्।
कृपया स्थापयामास सालग्रामे निधिं यथा॥

३४. यतीन्द्रपादुके चात्र सर्वसंपत्प्रदायके।
उज्जीवनार्थं लोकानामाराधनमिवादरात्॥

---

### தீர்த்த₂நியமம்

31*-33 ஆசார்யப₄க்தியுடையவர்களில் சிறந்தவரான வடுகநம்பி யதிராஜருடைய ஸ்ரீபாத₃தீர்த்த₂த்தைத் தவிர வேறு எவருடைய ஸ்ரீபாத₃தீர்த்த₂த்தையும் பருகமாட்டார். இத்தகைய தீர்த்த₂நியமம் இவர் ஒருவர்க்கே உண்டு, வேறு எவர்க்கும் இல்லை. யதிராஜருடைய பரமபாவனமான ஸ்ரீபாத₃தீர்த்த₂த்தைத் தமது ஊரான (மிதிலா) ஸாளக்₃ராமத்தில் கருணையாலே நிதி₄யைப்போலே சேமித்து வைத்தார்.

### யதீந்த்₃ர பாது₃கா ஸ்தா₂பனம்

34 எல்லாச் செல்வங்களையும் அளிக்கக்கூடிய யதிராஜரது பாது₃கைகளையும், உலகங்களெல்லாம் உய்வதற்காக அவ்வூரில் திருவாராத₄னப் பெருமாளைப்போலே அன்போடு ஸ்தா₂பித்துவைத்தார்

### சரமோபதே₃ஶம்

35-36 தமது சரமத₃ஶையில் (கடைசிக்காலத்தில்) உறுதியான ஆசார்யநிஷ்டை₂ உடைய வடுகநம்பி சரமோபாயத்தை அறிந்தவர்களான அந்தரங்க₃ர்களை

३५. स्वकीयायां दशायां तु चरमायां दृढव्रतः।
स्वान्तरङ्गिण आहूय चरमार्थविशारदान्॥

३६. चरणावेव शरणं यतीन्द्रस्य जगद्गुरोः।
इति ध्रुवं विनिश्चित्य वर्तध्वमिति चाब्रवीत्॥

३७. एवं सन्त्यान्ध्रपूर्णस्य चरितानि बहूनि हि।
चित्रगुप्तादिभिस्तानि न गण्यन्ते महात्मभिः॥

३८. आश्चर्यभूतं भुवि चान्ध्रपूर्णमाहात्म्यमाचार्यपरत्वबीजम्।
यो वापि कुर्यात्तदिदं हृदिस्थं आचार्यभक्तः स भवेन्मनुष्यः॥

इति श्रीप्रपन्नामृते रामानुजचरिते आन्ध्रपूर्णमाहात्म्यकथनं
नाम पञ्चपञ्चाशोऽध्यायः॥

---

அழைத்து "ஜக₃த்₃ஆசார்யரான யதிராஜருடைய திருவடிகளே உபாயம் என்று உறுதிபூண்டு வாழுங்கள்" என்று உபதே₃ஶித்தார் வடுகநம்பி.

## வடுகநம்பியின் பெருமை அளவிறந்தது

37-38. வடுகநம்பியைப் பற்றிய இத்தகைய அற்புத சரித்திரங்கள் பற்பலவாகும். மஹாஶக்தியையுடைய சித்திரகுப்தன் முதலானாராலும் அவற்றை எண்ணமுடியாது. இவ்வுலகில் அத்யாஶ்சர்யமானதாய், 'ஆசார்யனே தெய்வம்' என்று எண்ணவைப்பதான வடுகநம்பியின் பெருமையை எவனொருவன் தன் நெஞ்சில் பதிந்துவைத்துக் கொள்கிறானோ அந்த மனிதன் ஆசார்யப₄க்தனாவான்.

ஸ்ரீப்ரபந்நாம்ருதத்தில் ராமாநுஜசரித்திரத்தில்,
வடுகநம்பியின் பெருமையைக் கூறுதலாகிற
ஐம்பத்தைந்தாம் அத்தியாயம் நிறைவுற்றது.

षट्पञ्चाशोऽध्यायः

१. रामानुजाज्ञया धीमाननन्तार्यो वृषाचले ।
वेङ्कटेशस्य कैङ्कर्यं कुर्वन्नित्यं समास्थितः ॥
२. ततः कदाचिन्मतिमाननन्तार्यो गुरुप्रियः ।
रामानुजाभिधानस्य तटाकस्य सभार्यकः ॥
३. सेतुनिर्माणकरणे मृदमादाय सत्वरम् ।
सेतुं विवर्धयन् तस्थौ तटाकं च विवर्धयन् ॥
४. ततोऽभ्येत्य वटुः कश्चित् तच्छूर्पं समुपाहरत् ।
अनन्तार्यः स तं दृष्ट्वा वाक्यमेतदुवाच ह ॥
५. मज्जीवनं किमर्थं त्वं विनाशयसि बालक! ।
कैङ्कर्ये भवतो बुद्धिः यद्यस्ति सहसाऽधुना ॥

## ஐம்பத்தாறும் அத்தியாயம்

# அநந்தாழ்வான் பெருமை

### கைங்கரியமே தூரகமான உணவு

1-6. எம்பெருமானருடைய ஆணையாலே அறிவாளியான அநந்தாழ்வான் திருமலையிலே திருவேங்கடமுடையானுக்குக் கைங்கர்யம் செய்துகொண்டிருந்தார். அப்போது ஒருநாள் ஆசார்யபக்தியுடையவரும், அறிவாளியுமான அநந்தாழ்வான் 'இராமானுசப் புத்தேரி' என்னும் ஏரியை மனைவியோடுகூட மண்சுமந்து கட்டிவருகையில், அதற்குக் கரைகட்டுவதற்காக வேகமாக மண்ணைவெட்டி ஏரியையும் கரையையும் பெரிதுபடுத்திவந்தார். அப்போது அங்கு வந்த ஓர் சிறுவன் (அவர் சிரமப்படுவதைக்கண்டு தான் மண்சுமக்க எண்ணி) அவருடைய மண்கூடையை எடுத்தான். அதைப்பார்த்த அநந்தாழ்வான் "சிறுவனே! எனக்கு தூரகமான உணவை நீ ஏன் பறிக்கப்பார்க்கிறாய்?

६. शूर्पं कश्चित्समादाय मृदमाहर बालक!।
अन्तर्वत्नी तस्य भार्या शूर्पं च समुपाहरत्॥

७. तामालोक्य वटुर्भूत्वा वेङ्कटेशो दयार्णवः।
तस्याः शिरःस्थितां तूर्णं मृदमादाय सत्वरम्॥

८. दूरे चोत्सृज्य तत्पात्रं पुनस्तस्यै प्रदत्तवान्।
एवं पुनः पुनस्तस्याः संमुखं चैत्य बालकः॥

९. मृदाहरणकार्याणि चकार कृपया हरिः।
शीघ्रं समागतां भार्यां दृष्ट्वोवाच सविस्मयः॥

१०. आगच्छसि कुतः शीघ्रमबले! वद कारणम्।
तच्छ्रुत्वा तस्य भार्याऽऽशु भर्तारमिदमब्रवीत्॥

---

உனக்கு இக்கைங்கர்யம் செய்யவேண்டும் என்று எண்ணமிருந்ததாகில், இப்போதே சடக்கென ஒரு கூடையை எடுத்துவந்து மண்சுமக்கலாமே" என்று கூறினர். (இதிலிருந்து கைங்கர்யத்தையே அவர் தா₄ரகமான உணவாகக் கருதினர் என விளங்குகிறது.)

**கைங்கர்யவிக்₄நகாரீ**

6*-*16. ஒருசமயம் ஏரிவெட்டும்போது க₃ர்ப்பி₄ணியாயிருந்த அநந்தாழ்வானின் பத்னி ஏரிவெட்டுவதற்குக் கூடையிலே மண்சுமந்துவந்தாள். கருணைக்கடலான திருவேங்கடமுடையான் அவளைக்கண்டு இரங்கி, ஓர் சிறுவனாகி (அநந்தாழ்வானுக்குத் தெரியாமல்) அவளுடைய தலையிலிருந்த மண்கூடையை வாங்கிக்கொண்டு வேகமாகச் சென்று, தூரத்தில் மண்ணைக் கொட்டிவிட்டு, கூடையை அவளிடம் கொடுத்தான். சிறுவனான அவ்வெம்பெருமான் இப்படிப் பலமுறை அவளை எதிர்கொண்டு சென்று, கருணையோடு மண்சுமக்கும் வேலையைச் செய்தான். விரைவில் திரும்பும் மனைவியைக்கண்டு வியப்புற்ற அநந்தாழ்வான் "பெண்ணே! எப்படி இவ்வளவு விரைவில்

११. कश्चिद्वटुस्समभ्येत्य ममाभिमुखमादरात्।
दयावान् मृदमादाय सहसोत्सृज्य दूरतः॥
१२. पात्रं स प्रददौ मह्यं भूयो भूयोद्य वर्तते।
अनन्तार्योऽथ तच्छ्रुत्वा भार्यावाक्यं महामतिः॥
१३. श्रीवेङ्कटेश्वरं मत्वा तं वटुं वाक्यमब्रवीत्।
कैङ्कर्यविघ्नकारिन्मे कैङ्कर्यं हर्तुमुद्यतः॥
१४. स्वामिन्नत्रागतो ह्यद्य तमित्येवावदद्धरिम्।
गृहीतुकामस्तं बालमभ्यधावत् द्विजोत्तमः॥
१५. प्रधावितो वेङ्कटेशः प्रस्थानमविशज्जवात्।
आनन्दनिलयं प्राप्तं दृष्ट्वा तं वेङ்कटेश्वरम्॥

---

வருகிருய்? காரணத்தைச் சொல்லு" என்று கேட்டார். அதைக்கேட்ட அவரது மனேவி கணவரான அவரைப் பார்த்து "ஒரு சிறுவன் என்னே எதிர்கொண்டுவந்து, அன்போடும் கருணேயோடும் மண்கூடையை என்னிட மிருந்து வாங்கி விரைவில் சென்று மண்ணே தூரத்தில் கொட்டிவிட்டு என்னிடம் கூடையைக் கொடுத்தான். மறுபடியும் மறுபடியும் இப்படியே செய்துவருகிருன்" என்று பதிலுரைத்தாள். மனேவியின் அவ்வார்த்தையைக்கேட்டுப் பேரறிவாளரான அநந்தாழ்வான் 'திருவேங்கடமுடையானே இவன்' என்று உணர்ந்து, அச்சிறுவனேப் பார்த்து "கைங்கர்யவிக்₄நகாரியான பெருமானே! என் கைங்கர்யத்தைப் பறிப்பதற்கு இங்கு வந்திருக்கிறீரோ" என்று கூறினர். (கூறியதோடு நில்லாமல்) அவ்வந்தணர்தலேவர் அச்சிறுவனேப் பிடிக்க ஓடினர். மிக விரைவாக ஓடிய திருவேங்கடமுடையான் தனது க₃ர்ப்ப₄க்₃ருஹத்தினுள் நுழைந்தான். (அதுவரையில் அவனேத் துரத்திச்சென்ற அநந்தாழ்வான்) ஆநந்த₃நிலய விமானத்தையடைந்த அவனேக்கண்டு, அவ்விமானத்திலிருந்து திரும்பிவந்து, அவனது கைங்கர்யத்தைச் செய்துவந்தார்.

१६. निर्गत्यानन्दनिलयात्तत्कैङ्कर्यं समास्थितः ।
ततः कदाचिन्मतिमाननन्तार्यो महामनाः ॥

१७. तस्मिन् पुण्यवने भक्त्या तुलसीं कृन्तयन् स्थितः ।
दष्टवान् हि करं तस्य सर्पो बृन्दासमीपतः ॥

१८. अनन्तार्योऽथ सहसा स्नात्वा सम्यक् दृढव्रतः ।
कैङ्कर्याणि यथापूर्वं कुर्वन् निश्चल आस्थितः ॥

१९. आप्ताः केचित्समागत्य तच्छ्रुत्वा तमथाऽब्रुवन् ।
भवन्तं दष्टवान् सर्पो विषं देहे स्थितं किल ॥

२०. विषनिर्हरणे यत्नः किं न कार्यो दृढव्रत! ।
अनन्तार्यः स तच्छ्रुत्वा तानुवाच महामनाः ॥

२१. अयं सन्दशतः सर्पात् बलवान् यदि वैष्णवाः! ।
स्वामिपुष्करिणीतीर्थे स्नात्वा श्रीवेङ्कटेश्वरम् ॥

---

### கடித்த பாம்பும் கடியுண்ட பாம்பும்

16*-23. அதற்குப்பின் ஒருசமயம விசாலமான திருவுள்ளமுடைய அறிவாளியான அநந்தாழ்வான் திருமலையிலுள்ள (தாம் சமைத்த) புண்யமான நந்தவனத்தில் ப$_4$க்தியுடன் துளசியைக கொய்துகொண்டிருந்தார். துளசிச் செடிக்கு அருகிலிருந்த பாம்பொன்று அவரது கையைக் கடித்துவிட்டது. கைங்கர்யவ்ரதத்தில் உறுதிபூண்டவரான அநந்தாழ்வான் உடனே சென்று நீராடி, முன்போலவே தளராமல் கைங்கர்யங்களைச் செய்துகொண்டிருந்தார். அநந்தாழ்வானுக்கு வேண்டியவர்கள் சிலர் அதைக்கேட்டு, அவரைப் பார்த்து "உறுதியான விரதமுடையவரே! உம்மைப் பாம்பு தீண்டிவிட்டது. உமது திருமேனியில் விஷமுள்ளதன்றோ. விஷத்தைப் போக்குவதில் நீர் ஏன் முயற்சிகொள்ளவில்லை?" என்று கேட்டார்கள். பரந்த திருவுள்ளமுடைய அநந்தாழ்வான் அதைக்கேட்டு, அவர்

२२. संसेवयन् निवत्स्येऽहं भवद्भिस्सह सादरम्।
दशन् सर्पस्तु बलवान् यदि स्यादद्य सादरम्॥
२३. कृत्वाऽहं विरजास्नानं सेवे वैकुण्ठनायकम्।
तेऽनन्तार्यवचः श्रुत्वा विस्मयं परमं गताः॥
२४. ततः कौसलदेशस्य प्रयाणे वैष्णवोत्तमाः।
दध्योदनं समादाय विष्णुनैवेद्यमुत्तमम्॥
२५. अनन्तार्यो ययौ धीमान् कौसलं प्रति सत्वरम्।
तदन्नं भोक्तुकामस्सन् गत्वाऽध्वानं महत्तरम्॥
२६. कृतनित्यक्रियो धीमान् क्षुधितो दुर्गमे पथि।
पिपीलिकामयं दृष्ट्वा तदोदनमचिन्तयत्॥

---

களைப் பார்த்து "வைஷ்ணவர்களே! கடியுண்ட பாம்பான இந்த ஶரீரம் கடித்த பாம்பைக் காட்டிலும் வலிமையுடையதாயிருந்தால் கோனேரியில் நீராடி, திருவேங்கடமுடையானை உங்களோடுகூட ஆர்வத்தோடு ஸேவித்துக் கொண்டு இங்கு வாழ்கிறேன். கடித்த பாம்பு வலிமையுடையதாயிருந்தால் இன்றே விரஜையில் நீராடி, ஸ்ரீவைகுண்டநாதனை ஸேவிக்கிறேன்" என்று கூறினர். அநந்தாழ்வானின் அவ்வார்த்தையைக் கேட்ட அவர்கள் மிகவும் வியப்புற்றனர்கள்.

### திருமலையில் எறும்புகளும் நித்யஸூரிகளே

24-28. ஒருசமயம் அறிவாளியான அநந்தாழ்வான் முதலான வைஷ்ணவர்தலைவர்கள் கௌஸல (ஹொய்சால) தேசத்துக்கு எழுந்தருளும்போது எம்பெருமானுக்கு அமுது செய்த சிறந்த தயிரமுதைக் கட்டுச்சாதமாகக் கட்டிக் கொண்டு அந்த ராஜ்யத்தைக் குறித்து விரைவாகச் சென்றனர்கள். நீண்டதூரம் சென்றபின்பு கடுமையான வழியில நடந்ததால் பசியேற்பட்டு அந்த அன்னத்தை அமுதுசெய்யவிரும்பிய அறிவாளியான அநந்தாழ்வான்

२७. वेङ्कटेशस्वर्णशैले यं वा कं वा जनीमहे।
इति पूर्वैः प्रार्थितत्वात् एते वै नित्यसूरयः॥

२८. इति मत्वा वेङ्कटाद्रौ सोदनं ह्यानयत् जवात्।
स कदाचिदनन्तार्यो वृषाद्रौ पुष्पमण्डपे॥

२९. तस्थौ श्रीवेङ्कटेशस्य कुर्वन् कुसुममालिकाः।
आह्वयामास भगवान् अनन्तार्यं स्वसन्निधिम्॥

३०. स तच्छ्रुत्वाप्यसंभाष्य तूष्णीं तस्थौ तदुद्यमः।
विधाय मालिकास्सर्वाः पेटिकायां निधाय च॥

३१. अर्पितुं वेङ्कटेशाय तत्सन्निधिमुपाययौ।
दृष्ट्वा तमागतं देवो वेङ्कटेशोऽवदन्मुदा॥

---

நித்யகர்மங்களைச்செய்து, அந்தக் கட்டுச்சோறு முழுவதும் எறும்பு மயமாயிருப்பதைப் பார்த்துச் சிந்திககலுற்ருர் — "'எம்பெருமான் பொன்மலைமேல் ஏதேனுமாவேனே' [பெருமாள்திரு 4-10] என்று நமது பூருவர்கள் பிரார்த்தித்திருக்கிறபடியால் நித்யஸூரிகளே (திருமலையோடு ஸம்பந்த₄த்தை விரும்பி) இவ்வெறும்புகளாக வந்திருக்க வேண்டும்" என்று எண்ணி, அந்தக் கட்டுச் சோற்று மூட்டையை விரைவில் திருமலையில் சேர்ப்பித்தார்.

### அநந்தாழ்வானின் ஆசார்யநிஷ்டை₃

28*-40. ஒருசமயம் 'சிந்துபூமகிழும் திருவேங்கடம்' [திருவாய் 3-3-2] எனப்பட்ட புஷ்பமண்டபமாகிற திருமலையிலே திருவேங்கடமுடையானுக்குப் பூமாலை தொடுத்துக் கொண்டிருந்தார் அநந்தாழ்வான்; அப்போது எம்பெருமான் அநந்தாழ்வானைத் தம்மிடம் வரும்படி அழைத்தார்; அதைக் கேட்டபின்பும் அநந்தாழ்வான் பதில் சொல்லாமல், பூமாலை தொடுத்துக்கொண்டு பேசாமலிருந்தார். எல்லா மாலைகளையும் தொடுத்தபின்பு அவற்றைப் பூக்கூடையில் வைத்து, திருவேங்கடமுடையானுக்கு ஸமர்ப்பிக்க அவன் திருமுன்பே

२२. संसेवयन् निवत्स्येऽहं भवद्भिस्सह सादरम्।
दशन् सर्पस्तु बलवान् यदि स्यादद्य सादरम्॥
२३. कृत्वाऽहं विरजास्नानं सेवे वैकुण्ठनायकम्।
तेऽनन्तार्यवचः श्रुत्वा विस्मयं परमं गताः॥
२४. ततः कौसलदेशस्य प्रयाणे वैष्णवोत्तमाः।
दध्योदनं समादाय विष्णुनैवेद्यमुत्तमम्॥
२५. अनन्तार्यो ययौ धीमान् कौसलं प्रति सत्वरम्।
तदन्नं भोक्तुकामस्सन् गत्वाऽध्वानं महत्तरम्॥
२६. कृतनित्यक्रियो धीमान् क्षुधितो दुर्गमे पथि।
पिपीलिकामयं दृष्ट्वा तदोदनमचिन्तयत्॥

---

களைப் பார்த்து "வைஷ்ணவர்களே! கடியுண்ட பாம்பான இந்த ஶரீரம் கடித்த பாம்பைக் காட்டிலும் வலிமை யுடையதாயிருந்தால் கோனேரியில் நீராடி, திருவேங்கட முடையானை உங்களோடுகூட ஆர்வத்தோடு ஸேவித்துக் கொண்டு இங்கு வாழ்கிறேன். கடித்த பாம்பு வலிமை யுடையதாயிருந்தால் இன்றே விரஜையில் நீராடி, ஸ்ரீவைகுண்டநாதனை ஸேவிக்கிறேன்" என்று கூறினார். அநந்தாழ்வானின் அவ்வார்த்தையைக் கேட்ட அவர்கள் மிகவும் வியப்புற்றார்கள்.

### திருமலையில் எறும்புகளும் நித்யஸூரிகளே

24-28. ஒருசமயம் அறிவாளியான அநந்தாழ்வான் முதலான வைஷ்ணவர்தலைவர்கள் கௌஸல (ஹொய்சால) தேசத்துக்கு எழுந்தருளும்போது எம்பெருமானுக்கு அமுது செய்த சிறந்த தயிரமுதைக் கட்டுச்சாதமாகக் கட்டிக் கொண்டு அந்த ராஜ்யத்தைக் குறித்து விரைவாகச் சென்றார்கள். நீண்டதூரம் சென்றபின்பு கடுமையான வழியில நடந்ததால் பசியேற்பட்டு அந்த அன்னத்தை அமுதுசெய்யவிரும்பிய அறிவாளியான அநந்தாழ்வான்

३६. मायावी परमानन्दं त्यक्त्वा वैकुण्ठमुत्तमम् ।
स्वामिपुष्करिणीतीरे रमया सह मोदते ॥

३७. एवमाश्रितवात्सल्यात् वृषाद्रिं त्वं समागतः ।
भक्त्याहं समनुप्राप्तो भगवन् देशिकाज्ञया ॥

३८. यूयं वयञ्च शेषाद्रेरस्य तुल्यास्ततो ध्रुवम् ।
मां निर्वासयितुं देव! कथं शक्तो भवान् भवेत् ॥

३९. यतीन्द्रभक्तिनिष्ठां तां विलोक्यात्यन्तविस्मयः ।
श्रीवेङ्कटेशो भगवान् मुमोद स्वजनैस्सह ॥

४०. एवं यतीन्द्राखिलशिष्यसङ्घाः सर्वासु दिक्षु प्रथितप्रभावाः ।
आचार्यकैङ्कर्यरता बभूवुः निरन्तरं निर्जितविष्णुमायाः ॥

इति श्रीप्रपन्नामृते रामानुजचरिते
अनन्तार्यप்रभाववर्णनं नाम षट्पञ्चाशोऽध्यायः ॥

---

ஆஜ்ஞையாலே பக்தியோடு இங்கு வந்தவன் நான். இவ்வண்ணமாக, இத்திருமலைக்கு தேவரீரும் நாமும் வந்தேறிகளாகவேயிருக்கும் விஷயத்தில் ஒத்தவர்களாகவே இருக்கிறோம் என்பது உறுதி. ஆகையால் வந்தேறிகளில் ஒருவரான தேவரீர் மற்றொரு வந்தேறியான என்னை எப்படித் திருமலையைவிட்டு வெளியேற்றமுடியும்?” என்று பதில் கூறி, திருவேங்கடமுடையான் வாய்திறக்க வழியில்லாதபடி செய்தார். யதிராஜரிடம் ஆஶ்சர்யமான இந்த பக்திநிஷ்டையைக் கண்டு மிகவும் வியப்புற்று, திருமலையெம்பெருமான் தனது பரிஜனங்களோடுகூட, பேரானந்தமடைந்தான். இவ்வண்ணமாக யதீந்த்ரருடைய ஶிஷ்ய ஸமூஹங்கள் அனைவரும் எல்லாத் திசைகளிலும் பரவிய புகழை உடையவர்களாய், ஆசார்யகைங்கர்யத்தில் ஈடுபட்டவர்களாய், விஷ்ணு மாயையாகிற ஸம்ஸாரத்தை வென்றவர்களாய் எப்போதும் விளங்கினார்கள்.

**ஸ்ரீப்ரபந்நாம்ருதத்தில் ராமாநுஜசரித்திரத்தில்,**
**அநந்தாழ்வானுடைய பெருமையை வர்ணித்தலாகிற**
**ஐம்பத்தாறும் அத்தியாயம் நிறைவுற்றது.**

## सप्तपञ्चाशोऽध्यायः

१. एतादृशैः शिष्यजनैर्वसत्सुर्व्यां यतीश्वरे।
महता वैभवेनैव श्रीरङ्गे जगतां गुरौ॥

२. एक एव हि कूरेशो यतीन्द्राय महात्मने।
अनुक्त्वा रङ्गराजस्य सन्निधिं प्राप्य सत्वरम्॥

३. नत्वा रङ्गेश्वरं देवं तस्थौ प्राञ्जलिरग्रतः।
रङ्गराजोऽथ तं दृष्ट्वा कूरेशमिदमब्रवीत्॥

४. कूरेश! त्वं कञ्चिदर्थं प्रष्टुकामः समागतः।
इति मे प्रतिभात्यद्य तत्रागमनकारणात्॥

५. त्वं मह्यं श्रोतुकामाय तमर्थं ब्रूहि सत्वरम्।
तस्य तद्वचनं श्रुत्वा सन्तुष्टो रङ्गभूपतेः॥

---

## ஐம்பத்தேழாம் அத்தியாயம்

## கூரத்தாழ்வானின் சரமதசை

### கூரத்தாழ்வானுக்கு மோக்ஷப்ரதா₃னம்

1-14. இத்தகைய ஶிஷ்யவர்க்க₃ங்களோடு கூடியவராய், ஜக₃த₃ாசார்யரான யதிராஜர் மஹாவைப₄வத்துடனே இவ்வுலகில் ஸ்ரீரங்கத்தில் வாழ்ந்துவரும்நாளில், அவரது ஒப்பற்ற சீடரான கூரத்தாழ்வான் மஹாத்மாவான யதிராஜரிடம் கூறுமல் விரைவில் ரங்க₃ராஜனுடைய திருக்கோயிலை அடைந்து அரங்கநகரப்பனை வணங்கி, அவன் திருமுன்பே கைகூப்பிநின்ருர். அவரைக் கண்ட அரங்கன் கூரத்தாழ்வானைப் பார்த்து "ஆழ்வான்! நீ இப்போது வந்திருப்பதைப் பார்த்தால், ஏதோ கேட்க விரும்புவதுபோல் எனக்குத் தோன்றுகிறது; நீ வந்த காரணத்தைக் கேட்கவிரும்பும் எனக்கு விரைவில் அதைச் சொல்லுவாயாக" என்று அருளினன். ஸ்ரீரங்க₃

६. श्लोकोपन्यासमकरोत् रङ्गेशं प्रति कूरराट्।
तच्छ्रुत्वा रङ्गराट् प्रीतः कूराधिपमथाब्रवीत्॥

७. वरं वरय भद्रं ते वाञ्छितं प्रददाम्यहम्।
तस्य तद्वचनं श्रुत्वा कूरेशः प्राह तं हरिम्॥

८. मह्यं दत्तं त्वया स्वामिन्! सर्वाभीष्टं पुरा किल।
भूयोऽहमधुना देव किमभीष्टं वृणोम्यहम्॥

९. कूरेशस्य वचः श्रुत्वा रङ्गराट् तमभाषत।
कूरेश! न तथा वत्स! वरं वरय साम्प्रतम्॥

१०. शपे रामानुजार्येण मामकेन महात्मना।
अदेयमपि दास्यामि वरं तव सुनिश्चयम्॥

---

ராஜனின் அவ்வார்த்தையைக் கேட்டு உகந்த கூரத்தாழ்வான் அரங்கனைக் குறித்து ஒரு ஶ்லோகத்தை விண்ணப்பித்தார். அதைக்கேட்டு உகந்த ஸ்ரீரங்கநாதன் கூரத்தாழ்வானைப் பார்த்து, "உனக்கு மங்களமுண்டாகுக! என்னிடம் ஓர்வரம் கேட்பாய், நீ விரும்பியதைத் தருகிறேன் நான்" என்று கூறினான். எம்பெருமானுடைய அவ்வார்த்தையைக்கேட்ட கூரத்தாழ்வான் அவனைப் பார்த்து, "ஸ்வாமின்! உம்மால் எனது எல்லா விருப்பங்களும் முன்னமே அளிக்கப்பட்டுவிட்டன. (அப்படியிருக்க) இப்போது நான் என்ன வரத்தைக் கேட்பது?" என்று கூறினார். கூரத்தாழ்வானின் அவ்வார்த்தையைக் கேட்ட ரங்கராஜன் "குழந்தாய்! அப்படிச் சொல்லாதே; இப்போது ஓர் வரம்கேட்பாய். மஹாத்மாவாய், என்னடியாரான ராமானுஜரின்மேல் ஆணையிடுகிறேன். கொடுக்க அரியதாயினும், நீ கேட்கும்வரத்தை உனக்கு உறுதியாகக் கொடுக்கிறேன்" என்று உறுதியளித்தான். அதைக்கேட்டு உகந்த கூரத்தாழ்வான், அப்போதே அப்பெருமானைக் கைகூப்பி வணங்கி, வேண்டுவார் வேண்டியதைக்

११. ततः प्रहृष्टः कूरेशः तं नत्वा प्राञ्जलिस्तदा।
ययाचेऽभीष्टवरदं अभीष्टं रङ्गभूपतिम्॥

१२. अधुना रङ्गभूपाल! मह्यं देहि परं पदम्।
अथ रङ्गेश्वरः प्राह कूरेशं भक्तवत्सलः॥

१३. युष्मत्सम्बन्धिसम्बन्धिचरमावधिनश्च ये।
तेभ्यः प्रदत्तं निःश्रेयस्तुभ्यमत्र न संशयः॥

१४. गृहीततुलसीतीर्थमालिकादिमतन्द्रितम्।
तदा प्रस्थापयामास कूरेशं रङ्गभूपतिः॥

१५. ततोऽर्चिरादिमार्गस्य कूरेशो गुरुतत्परः।
अलङ्कार इव श्रीमान् रेजे प्राप्याधिकं तदा॥

१६. श्रुत्वा कूरेश्वरस्याद्य वृत्तान्तं सर्वमादरात्।
शिष्यैः परिवृतः श्रीमान् सन्तुष्टो यतिपुङ्गवः॥

---

கொடுக்கும் ஸ்ரீரங்க3ராஜனைப் பார்த்து, "ஸ்ரீரங்க3ராஜனே! எனக்கு இப்போதே பரமபத3த்தை அருளுவீர்" என்று விருப்பத்தை உரைத்தார். அதைக்கேட்ட ப4க்தவத்ஸலனான ஸ்ரீரங்க3நாத2ன் கூரத்தாழ்வானைப் பார்த்து, "அடியாரடியாரடியார் தம் அடியார் என்கிற ரீதியில் எத்தனை தலைமுறையானாலும் உன்னோடு தொடர்புடையவர்கள் அனைவர்க்கும் நான் மோக்ஷமளித்திருக்கும்போது, உனக்கு மோக்ஷமுண்டென்பதில் ஐயமில்லை" எனக் கூறினான். உடனே துளஸீ தீர்த்த2த்தையும் மாலை முதலானவற்றையும் அளித்து, கூரத்தாழ்வானுக்கு விடைகொடுத்தான் அரங்கநகரப்பன்.

## எம்பெருமானாரின் ஆனந்த3ம்

15-19. ஆசார்யநிஷ்டை2யுடைய ஸ்ரீமானான கூரத்தாழ்வான் விரும்பியதற்கு மேலே அடைந்து அர்ச்சிராதி3 மார்க்க3த்திற்கு அலங்காரம்போலே விளங்கினார் அப்

१७. आकाशे सहसोत्सृज्य काषायाम्बरमादरात्।
नन्र्त बहुधा चैव ममाप्यस्ति परं पदम्॥

१८. यतीन्द्रो वैष्णवान् दृष्ट्वा सन्तुष्टो वाक्यमब्रवीत्।
श्रीवत्सचिह्नसम्बन्धो ममाप्यस्ति ततः किल॥

१९. सम्बन्धात् शक्यमेवाद्य तस्मात्प्राप्तुं परं पदम्।
न विशेषस्ततो ह्यस्ति सतोर्हि गुरुशिष्ययोः॥

२०. शोकाविष्टो यतीन्द्रोऽथ शिष्यसङ्घसमावृतः।
आजगामाञ्जसा यत्र स आस्ते कूरनायकः॥

२१. दृष्ट्वा कूरेश्वरं प्राह यतीन्द्रः प्रेमपूर्वकम्।
तवेदमुचितं कार्यं विधातुं सहसाऽधुना॥

---

போது. கூரத்தாழ்வானைப்பற்றிய இச்செய்தி முழுவதையும் ஆர்வத்தோடு அறிந்த ஸ்ரீமானான எம்பெருமானார் சிஷ்யர்களோடு கூடிநின்று மிக உகந்தார். ஆநந்தத்தால் உடனே காஷாயவஸ்திரத்தை ஆகாயத்தில் எறிந்து பிடித்து "எனக்கும் பரமபதம் உறுதியாக உண்டு" என்று கூறிப் பலகால் நடனமாடினார். கூடியிருந்த ஸ்ரீவைஷ்ணவர் களைப் பார்த்து உகந்தவராய், "எனக்கும் கூரத்தாழ்வானின் ஸம்பந்தம் உள்ளதன்றோ; அந்த ஸம்பந்தத்தால் எனக் கும் பரமபதம் அடைவது எளிது. (ஒருவர் தொடர்பினால் மற்றொருவர் பரமபதம் அடையும் இவ்விஷயத்தில்) ஸதாசார்யனுக்கும், ஸச்சிஷ்யனுக்கும் வாசியில்லை" என்றார்.

## எம்பெருமானாரின் வருத்தமும் கேள்வியும்

20-23. அதற்குப்பின் (கூரத்தாழ்வானின் பிரிவை நினைத்து) வருத்தமுற்ற யதிராஜர் ஶிஷ்யஸமூஹத்தால் சூழப்பெற்றவராய், கூரத்தாழ்வான் எழுந்தருளியிருந்த இடத்திற்கு விரைவில் எழுந்தருளினார். ஆழ்வானைக் கண்டு யதிராஜர் அன்புடன் "ஆழ்வான்! இப்படிச் சடக்கென

२२. किञ्चिच्च वचनं नोक्त्वा महाप्राज्ञो गुरुप्रियः ।
तदा व्यतिष्ठत्कूरेशो ह्यनेनैव समाधिना ॥

२३. भूयः प्रोवाच कृपया तं कूरेशं यतीश्वरः ।
अभाषणस्य को हेतुः मां प्रत्यद्य तदुच्यताम् ॥

२४. श्रीवत्सचिह्नस्तं प्राह ततो लक्ष्मणदेशिकम् ।
वरं त्वदीयवृत्तान्तं विलोक्य ध्यानमास्थितः ॥

२५. ततः प्रोवाच कूरेशं यतीन्द्रस्तेन भाषितः ।
पदे पदे वर्तमानं यदद्य ब्रूहि कृत्स्नशः ॥

२६. तच्छ्रुत्वा तमुवाचेदं कूरेशो यतिपुङ्गवम् ।
पूर्वं प्राप्ता महात्मनो मुक्ता ये परमं पदम् ॥

---

இப்போது இக்காரியத்தைச் செய்தது உசிதமா?'' என்று கேட்டார். அப்போது ஆசார்யரிடம் அன்புடையவராய், பேரறிவாளரான கூரத்தாழ்வான் ஏற்கனவேயிருந்த ஆலோசனையையே செய்துகொண்டு எந்த வார்த்தையும் பேசாதிருந்தார். யதிராஜர் ஆழ்வானைப் பார்த்து "என்னிடம் பேசாமலிருப்பதற்கு என்ன காரணம் என்று கூறுவீர்'' என்று மறுபடியும் கருணையோடு கேட்டார்.

## நித்யவிபூதியிலும் ஆசார்யஶ்ரேஷ்த்வம்

24-*31. அதற்குப்பின் ஸ்ரீராமாநுஜாசார்யரைப் பார்த்து "உம்மைப் பற்றிய சிறந்த நினைவினாலேயே அடியேன் ஆலோசனையிலிருந்தேன்'' என்று கூரத்தாழ்வான் கூறினார். அதற்குப்பின் இப்படிச் சொல்லப்பட்ட யதிராஜர் ஆழ்வானைப் பார்த்து "அடிக்கடி ஏற்படும் அந்த நினைவுகளை எனக்கு முழுவதும் சொல்லுவீராக'' என்று வார்த்தை சொன்னார். அதைக்கேட்டு ஆழ்வான் அந்த யதிராஜரைப் பார்த்து "முதலில் முக்தியடைந்து, பரமபதமும் அடைந்த மஹாத்மாக்கள் இப்போது என்னை எதிர்கொண்டு அழைப்

२७. तेऽद्याभिमुखमायान्ति तेषां पन्थानुयायिनः।
ममाभिमुखमायान्ति वैकुण्ठान्नित्यसूरयः॥

२८. शास्त्रमार्गमतिक्रम्य वर्तन्ते वैष्णवे पुरे।
तेनाऽहमधुना स्वामिन्! मोहितोऽस्मि न चान्यथा॥

२९. तच्छ्रुत्वा लक्ष्मणाचार्यः कूरेशमिदमब्रवीत्।
वैकुण्ठे तत्र कूरेश! न शास्त्रं न व्यतिक्रमः॥

३०. इह भोगविभूत्यां तु शास्त्रमार्गप्रवर्तनम्।
ततो विषण्णः कूरेशशेषत्वं वीक्ष्य विस्मितः॥

३१. द्वयोपदेशमकरोत्तस्य कर्णे यतीश्वरः।
अथ तत्र स्थितास्सर्वे वैष्णवास्तेन शङ्किताः॥

---

பதற்கு வருகின்றார்கள். அவர்களைப் பின்தொடர்ந்து வைகுண்டத்திலிருந்து நித்யஸூரிகளும் என்னை எதிர் கொண்டழைப்பதற்கு வருகின்றார்கள். அந்த விஷ்ணுவி னுடைய பரமபதத்தில் ஶாஸ்த்ரவரம்பை மீறியே அனைவரும் நடக்கின்றார்கள். ஸ்வாமியே! அதனாலேயே நான் இப் போது மயங்கிநிற்கின்றேனேயொழிய வேறொன்றில்லை'' என்று கூறினார். அதைக்கேட்டு ஶ்ரீராமாநுஜர் கூரத்தாழ் வானைக் குறித்து ''ஆழ்வான்! வைகுண்டத்தில் ஶாஸ்த்ர வரம்பு கிடையாதாகையாலே அதை மீறுவது என்பது மில்லை. கர்மபலபோகத்திறகாக ஏற்பட்ட இந்த லீலா விபூதியிலேயே ஶாஸ்த்ரத்தில் சொன்ன வழியிலே நடக்கவேண்டும்'' என்று கூறினார். [இந்த எண்ணத்தி னாலேயே கூரத்தாழ்வான் தமக்கு முன் பரமபதம் செல் கின்றார் என்று உணர்ந்து] அவரது பிரிவு குறித்து வருந்தி, (பரமபதத்திலும் தொடரும்) கூரேஶரது ஆசார்ய ஶேஷத்வத்தைக் கண்டு வியப்புற்றவராய், அவருடைய செவியிலே த்வயோபதேஶத்தைச் செய்தார் யதிராஜர்.

३२. तं यतीन्द्रं महात्मानं वचनं चेदमब्रुवन् ।
वैष्णवानां प्रपन्नानां न कर्तव्याऽन्तिमस्मृतिः ॥

३३. भवद्भिर्बहुशश्चोक्तं शास्त्रैरेवं यतीश्वर ! ।
द्वयोपदेशो योगीन्द्र ! तेनैव भवताऽधुना ॥

३४. अन्तकाले कृतस्तस्मै कूरेशाय महात्मने ।
तेषां तद्वचनं श्रुत्वा यतीन्द्रः प्राह तान् प्रति ॥

३५. कर्पूरघुटिकाभावात् राजपुत्रस्य वैष्णवाः ! ।
संशुष्यति यथा जिह्वा द्वयाभावात्तथास्य हि ॥

३६. अथाहूय यतिश्रेष्ठः कूरेशमिदमब्रवीत् ।
तस्य व्याकुलचित्तस्य वियोगेन महात्मनः ॥

---

## ராஜகுமாரனுக்குப் பச்சைக் கர்ப்பூரம்போலே ஆழ்வானுக்கு த்₃வயம்

31*-35. அப்போது அங்கு எழுந்தருளியிருந்த ஸ்ரீவைஷ்ணவர்களனைவரும் ஐயமுற்றவர்களாய் மஹாத்மாவான அந்த யதிராஜரைக் குறித்து "யதிராஜரே! ப்ரபந்நர்களான வைஷ்ணவர்களுக்கு அந்திமஸ்ம்ருதி தேவையில்லை என்று தேவரீர் பலகால் கூறியிருக்கிறீர். இப்போது தேவரீர் மஹாத்மாவான இக்கூரத்தாழ்வானுக்கு அந்திம காலத்தில் எக்காரணத்தினால் த்₃வயோபதே₃ஶம் செய்தீர்" என்று கேட்டனர். அவர்களுடைய அவ்வார்த்தையைக் கேட்ட யதிராஜர் அவர்களைப் பார்த்து "வைஷ்ணவர்களே! பச்சைக் கர்ப்பூரக் கட்டியை நாவில் இடாவிடில் ராஜகுமாரனுக்கு நாக்கு வறளுவதுபோலே, இவருக்கும் த்₃வயம் இல்லாவிடில் நாக்கு வறளும். (அதனாலேயே உபதே₃ஶித்தேன்)" என்று கூறினர்.

३७. कूरेश! भवतः सङ्गं न लप्स्ये किल भूतले।
मां विहायाशु गन्तासि वैकुण्ठं किल निर्दय!॥

३८. अत्रत्यानां हि सर्वेषां मम चैव महात्मनाम्।
दृष्टिचित्तापहारस्य रङ्गेशस्य जगत्पतेः॥

३९. सङ्गं त्यक्त्वाऽधुना शीघ्रं नित्ये दिव्ये परे पदे।
तस्य वैकुण्ठनाथस्य सङ्गं त्वं प्राप्तवान् किल॥

४०. स च वैकुण्ठनाथश्च तत्रत्या नित्यसूरयः।
मुक्ताश्च सुकृतं किंनु कृतवन्तः किलाधुना॥

४१. अत्रत्याश्च जनास्सर्वे रङ्गेशो जगदीश्वरः।
अहं च कृतवन्तो हि किंनु पापं बताधुना॥

---

## கூரேசரின் பிரிவில் வருத்தம்

36-41. அதற்குப்பின் யதிராஜர் தம்மைப் பிரிவது குறித்து வருந்திநிற்கும் மஹாத்மாவான அக்கூரத்தாழ்வானின் பிரிவாலே (வருந்தி) அவரை அழைத்து "ஆழ்வான்! இவ்வுலகிலே இனி உமது ஸஹவாஸத்தை நான் இழக்கப்போகிறேனே. என்னைவிட்டு, கருணையில்லாமல் நீர் வைகுண்டத்திற்குச் செல்லப் போகிறீரே. இங்கிருக்கும் எல்லா மஹாத்மாக்களோடும், என்னோடும், கண்ணையும் நெஞ்சையும் ஈர்க்கும் லோகநாதனான அரங்கனோடும் தொடர்பைவிட்டு இப்போதே விரைவில் நித்யமாய், அப்ராக்ருதமான பரம பதத்தில் அந்த வைகுண்டநாதனுடைய தொடர்பை நீர் அடையப் போகிறீர் அல்லவோ. அந்த வைகுண்டநாதனும், அங்குள்ள நித்யஸூரிகளும், முக்தர்களும் இப்போது என்ன புண்ணியம் செய்தனரோ! இங்குள்ள ஜனங்களனைவரும், லோகநாதனான ரங்கராஜனும், நானும் இப்போது என்ன பாபம் புரிந்தோமோ!" என்று கூறினார்.

४२. एतावदुक्त्वा वचनं विषण्णो यतिभूपतिः।
पुनरेवापरं वाक्यं कूरेशमिदमब्रवीत्॥

४३. मनोऽव्याकुलवाक्यानि कूरेश! भवतोऽधुना।
प्रभाषितेन बहुधा विद्यते किं प्रयोजनम्॥

४४. तव वैकुण्ठगमने न विघ्नः क्रियते मया।
सुखं प्रयाहि वैकुण्ठं दिव्यं कूराधिपाधुना॥

४५. इत्युक्त्वा कृपया तस्य पृष्ठं पस्पर्श पाणिना।
ततो रामानुजः श्रीमान् कूरेशस्य कृताञ्जलेः॥

४६. गमनाय मतिं चक्रे यतिराजो मठं प्रति।
ततः कूराधिपो धीमान् यतिराजपदाब्जयोः॥

---

## ஆழ்வானுக்குப் பரமபத₃ம் செல்ல அனுமதி

42-58. யதிராஜர் மிக வருந்தியவராய், இவ்வார்த்தையைக் கூறி, கூரத்தாழ்வானைப் பார்த்து மேலும் ஒரு வார்த்தை உரைக்கலுற்றார் — "ஆழ்வான்! இப்போது தேவரீருடைய திருவுள்ளம் கலங்கும்படியாகப் பல வாக்கியங்களைப் பேசிப் பயனென்ன? தேவரீர் வைகுண்ட₂ம் செல்வதை நான் தடைசெய்யவில்லை. இப்போதே அப்ராக்ருதமான வைகுந்தத்திற்கு இனிதே எழுந்தருள்வீர்" என்னும் வாக்கியத்தைக் கருணையோடு சொல்லி, கைகூப்பிநிற்கும் ஆழ்வானுடைய திருமுதுகைத் திருக்கையாலே தடவிக்கொடுத்தார் ஸ்ரீராமாநுஜர். அதற்குப்பின் யதிராஜர் தமது மட₂த்திற்குத் திரும்பத் திருவுள்ளம் கொண்டார். அதையுணர்ந்த அறிவாளியான ஆழ்வான் யதிராஜரின் திருவடித் தாமரைகளில் வேரற்ற மரம் நிலத்தில் வீழ்வதுபோலே சடக்கென விழுந்தார். ப₄க்தியுடன் திருவடித் தாமரைகளில் விழுந்திருக்கும் கூரத்தாழ்

४७. पपात सहसा भूमौ छिन्नमूल इव द्रुमः ।
दृष्ट्वा निपतितं भक्त्या कूरेशं चरणाब्जयोः ॥

४८. उज्जहाराथ बाहुभ्यां कृपया यतिपुङ्गवः ।
तेनोद्धृतः स उत्थाय कूरेशो गुरुभक्तिमान् ॥

४९. स्पृष्टोरसि च नेत्राभ्यां यतीन्द्रपदपङ्कजम् ।
स्वशिरोभूषणं कृत्वा पादतीर्थमथाकरोत् ॥

५०. श्रीपादतीर्थं कृपया तत् शीघ्रं स्वेन पाणिना ।
कूराधिपाय प्रददौ तदा लक्ष्मणदेशिकः ॥

५१. श्रीपादतीर्थं स्वीकृत्य सहसात्यन्तभक्तितः ।
यो नित्यमच्युतमिति श्लोकं विज्ञाप्य सादरम् ॥

५२. कृताञ्जलिपुटो भूत्वा यतीन्द्रमिदमब्रवीत् ।
प्रयाहि स्वमठं स्वामिन् ! सत्वरं यतिपुङ्गव ! ॥

---

வானைப் பார்த்து, எதிகட்கிறைவர் தம் திருக்கைகளாலே கருணையோடு அவரைத் தூக்கியெடுத்தார். அவரால அப்படித் தூக்கியெடுக்கப்பட்ட கு3ருப4க்தியுடைய ஆழ்வான் தமது திருமார்பிலும், திருக்கண்களிலும் யதிராஜரது திருவடித் தாமரைகளை ஒற்றிக்கொண்டு, அத்திருவடித் தாமரையைத் தம் சென்னிக்கு அணியாக்கிக்கொண்டு, ஸ்ரீபாத3தீர்த்த2த்தைச் சேர்த்தார். அப்போது ஸ்ரீமத்3 ராமாநுஜர் விரைவிலேயே—அந்த ஸ்ரீபாத3தீர்த்த2த்தைத் தம் திருக்கையாலே கூரத்தாழ்வானுக்கு அளித்தருளினார். ஸ்ரீபாத3தீர்த்த2த்தை மேலான ப4க்தியுடன் ஏற்றுக் கொண்டு சடக்கென எழுந்திருந்து, 'யோ நித்யம் அச்யுத' என்று தொடங்கும் ஸ்ரீராமாநுஜருடைய தனியனை அன்போடு விண்ணப்பித்து, கைகூப்பிநின்றவராய், கூரத்தாழ்வான் யதிராஜரைப் பார்த்து "எதிகட்கிறைவரே! தேவரீர் இங்கு எழுந்தருளி நெடும்போது ஆயிற்று. விரைவில்

५३. अत्रागतस्य ते कालः प्रयातः सुमहान् किल।
कूराधिपेन बहुधा यतिराजो मठं प्रति॥

५४. तेन संप्रेषितोऽप्येवं तं हित्वा शिष्यवत्सलः।
नैच्छत् गन्तुं तदा धीमान् तद्वियोगेन पीडितः॥

५५. कथञ्चिदश्रुपूर्णाक्षः यतिराजो मठं ययौ।
आयान्तं पृष्ठतो दृष्ट्वा कूरेशं च कृताञ्जलिम्॥

५६. तिष्ठ तिष्ठेत्युवाचेदं यतिराजः कृताञ्जलिम्।
वीथ्यां कूरेश्वरं शिष्यं पार्श्वे पश्यन् कृपादरात्॥

५७. शनैश्शनैः कथञ्चिच्च यतीन्द्रो मठमाविशत्।
मठप्रवेशपर्यन्तं स्थित्वा वीथ्यां कृताञ्जलिः॥
गुरुं संसेव्य कूरेशः ततस्तस्मान्न्यवर्तत॥

---

மடூத்துக்கு எழுந்தருளவேணும்'' என்று கூறினர். ஆழ்வானல் பலகால் மடூத்துக்கு எழுந்தருளும்படி பிரார்த்திூக்கப்பட்ட பின்பும், அறிவாளியாய், ஶிஷ்யவத்ஸலரான யதிராஜர் அவரது பிரிவுகுறித்து மடூத்துக்கு எழுந்தருளத் திருவுள்ளமில்லாமலே இருந்தார். நீர் நிறைந்த கண்ணினராய் ஒருவாறு மடூத்துக்கு எழுநதருளினர் யதிராஜர். கைகூப்பிநிற்கும் ஆழ்வான் பின்தொடர்வதைப் பார்த்து யதிராஜர் "நில், நில்" என்னும் வார்த்தையைக் கூறினர். வீதியில் கைகூப்பிநிற்கும் ஶிஷ்யரான கூரத்தாழ்வானைப் பக்கம் நோக்கிக் கருணையோடும், அன்போடும் கடாக்ஷித்துக்கொண்டே மெள்ளமெள்ள ஒருவாறு மடூத்திற்குள் நுழைந்தார் யதிராஜர். மடூத்தில் நுழையும் வரையில் ஆழ்வானும் யதிராஜரைக் கைகூப்பி ஸேவித்துக்கொண்டு வீதியில்நின்று, அவர் மடூத்தில் நுழைந்த பின்பு வீதியிலிருந்து திரும்பினர். இவ்வண்ணமாக யதிராஜர் கூரத்தாழ்வானுக்குக் கருணையோடு ஹிதோபதேூஶம்செய்து,

५८. हितोपदेशं स विधाय कूरनाथाय भूयः कृपया यतीन्द्रः।
संप्रेषितस्तेन मठं प्रविश्य व्यवर्णयत्तत्सुगुणान् जनेभ्यः॥

इति श्रीप्रपन्नामृते रामानुजचरिते कूरेशचरमदशाया वर्णनं नाम सप्तपञ्चाशोऽध्यायः॥

## अष्टपञ्चाशोऽध्यायः

१. अथ कूरेश्वरो धीमान् भार्यामाह दृढव्रताम्।
यं मत्वा वर्तसे चित्ते तमर्थं मे वदाऽधुना॥

२. तेनैवमुक्ता तद्भार्या भर्तारमिदमब्रवीत्।
को वार्थो विद्यते स्वामिन्! दास्यास्तव ममाधुना॥

---

அவரால் விடைகொடுக்கப்பெற்று, தமது மட₂த்திற்கு வந்து, அங்கிருந்தவர்களுக்கெல்லாம் கூரத்தாழ்வானின் ஆத்மகு₃ணங்களை வர்ணித்துக்கொண்டிருந்தார்.

ஸ்ரீப்ரபந்நாம்ருதத்தில் ராமாநுஜசரித்திரத்தில்,
கூரத்தாழ்வானின் சரமத₃ஶையை வர்ணிக்கும்
ஐம்பத்தேழாவது அத்தியாயம் நிறைவுற்றது.

## ஐம்பத்தெட்டாவது அத்தியாயம்
## கூரத்தாழ்வானின் பரமபத₃ப்ராப்தி
### ஆண்டாளின் பரிபக்குவம்

1-5. பேரறிவாளரான கூரத்தாழ்வான் உறுதியான அத்₄யவஸாயம் உடைய தமது மனைவியான ஆண்டாளைப் பார்த்து "நீ இப்போது நெஞ்சில் நினைத்திருப்பதை என்னிடம் கூறுவாய்" என்று கேட்டார். இப்படி கேட்கப் பட்ட ஆண்டாள் கணவனை ஆழ்வானைப்பார்த்து "ஸ்வாமிந்! தேவரீரது அடிமையான அடியேனுக்கு இப்போது தனியாக ஒரு நினைவு உண்டோ? இப்போது தேவரீர் நெஞ்சில் ஓடுவதே அடியேனுடைய நினைவுமாகும்.

३. योऽर्थो हि भवतश्चित्ते विद्यते स च मेऽधुना।
अर्थः सुनिश्चितो नाथ! न चान्योऽस्ति ममाल्पकः॥

४. स्वामिन्नमोघसङ्कल्पो भवतः किल सुव्रत!।
कदाचिदपि विघ्नोऽस्य सङ्कल्पस्य न विद्यते॥

५. इत्युक्त्वा सा प्रणम्याथ भर्तुः श्रीपादपङ्कजम्।
कृताञ्जलिपुटा तस्थौ निश्चला भर्तृसन्निधौ॥

६. अथ कूराधिपः पुत्रं भट्टार्यं रङ्गपुत्रकम्।
रामं च सहसाऽऽहूय वाक्यमेतदुवाच ह॥

७. रङ्गेशरङ्गनायक्योः विद्यमानतयोभयोः।
कदाचिन्न्यूनता नास्ति पुत्रकावधुना ध्रुवम्॥

---

நாத₂னே! நல்லுறுதி படைத்தவரே! இப்போது நான் சொல்லுவது உறுதியானதாகும். எனக்குச் சிறிதும் வேறு நினைவு இல்லை. (மோக்ஷமடைவது குறித்து) தேவரீரது ஸங்கல்பம் பழுதற்றதேயாகும். அந்த ஸங்கல்பத்துக்கு ஒருபோதும் தடையேற்படாது" என்று கூறி, கணவனின் திருவடித்தாமரையை வணங்கி, அவருக்கருகில் கைகூப்பி அசையாமல் நின்றாள்.

## புத்ரர்களுக்கு உபதே₃ஶம்

6-14* அதற்குப்பின் ஆழ்வான் தமது மூத்த குமாரராய், ரங்க₃நாத₂னின் வளர்ப்புப்பிள்ளையான ஸ்ரீ பராஶரபட்டரையும், இரண்டாவது குமாரரான ஸ்ரீராமப் பிள்ளையையும் சடக்கென அழைத்துப் பின்வருமாறு வார்த்தை சொன்னார்—"குழந்தைகாள்! பெரியபெருமாளும் ஸ்ரீரங்கநாச்சியாரும் எழுந்தருளியிருக்கும்போது இப்போது உங்களுக்கு எக்குறையுமில்லை என்பது உறுதியேயாகும். உங்களைப்பெற்றெடுத்து வளர்த்தவர் நம்பெருமாள் என்னும் காரணத்தாலே அவரே தஞ்சம் என்றிராமல், பிள்ளை களான நீங்களிருவரும் எம்பெருமானுருடைய திருவடித்

८. जनिता रक्षिता चैव रङ्गेश इति नो युवाम् ।
तमेव शरणं प्राप्य वर्तेयाथां सुतावुभौ ॥

९. शरणं प्राप्य वर्तेथां यतीन्द्रपदपङ्कजम् ।
युष्मन्मात्रोक्तमार्गेण वर्तेथामनिशं सुतौ ॥

१०. वैष्णवेभ्यो महद्भ्यश्च कदाचित्करणैस्त्रिभिः ।
नैवापराधो नः कार्यः प्रमादादपि चात्मजौ ॥

११. श्रीवैष्णवान् महाभागाननुसृत्य दिवानिशम् ।
वर्तेथां किङ्करौ तेषां भक्त्या कैङ्कर्यतत्परौ ॥

१२. इत्युक्त्वा तौ निपतितौ समुद्धृत्य पदाब्जयोः ।
गाढमालिङ्ग्य चाश्रूणि ममार्ज पितृवत्सलौ ॥

१३. पुनरेवापरं वाक्यं दुःखितौ प्राह तौ तदा ।
विचार्य देहसम्बन्धं यद्वां दुःखितौ मम ॥

---

தாமரையையே தஞ்சமாகக்கொண்டு வாழவேணும். உங்களுடைய தாயார் சொன்ன வழியிலே பிள்ளைகளான நீங்கள் இருவரும் எப்போதும் நடக்கவேண்டும். பெரியவர்களான வைஷ்ணவர்கள் திறத்திலே நினைவு, மொழி, செயல்களாகிற முக்கரணங்களாலும் மறந்தும் நீங்கள் அபராத₄ம் செய்துவிடக்கூடாது. பெரியோர்களான ஸ்ரீவைஷ்ணவர்களை எப்போதும் அநுஸரித்து, அவர்களுக்கு தா₃ஸபூ₄தர்களாய் ப₄க்தியோடு கைங்கர்யம் செய்துகொண்டிருக்கவேண்டும்" என்னும் வார்த்தையைக் கூறி, தமது திருவடித் தாமரைகளில் விழுந்திருந்த அவர்களைத் தூக்கியெடுத்து, தந்தையிடம் பேரன்புகொண்டிருந்த அவர்களை அணைத்துக்கொண்டு, கண்ணீரைத் துடைத்தார். அப்போது வருந்தி நிற்கும் அவர்களைப் பார்த்து மறுபடியும் ஒரு வார்த்தை சொன்னார்—"(எம்பெருமானாருக்குக் கண்போல்) முக்கியமானவர்களான நீங்கள் என்னோடுள்ள தே₃ஹஸம்ப₃ந்த₄த்தைப் பார்த்து வருந்தினீர்களேயானால், எம்பெருமானார்

१४. यतीन्द्रपादपद्माभ्यां दूरगौ च भविष्यथः।
प्रधानभूतावित्येवमनुशास्य दृढव्रतः॥

१५. कृतकृत्यः कूरनाथः शरीरं हातुमुद्यतः।
शिष्यस्य पुत्रपुत्रार्यनामधेयस्य योगिनः॥

१६. निधाय च शिरश्चाङ्के भार्योत्सङ्गे पदाम्बुजम्।
शेते कूरेश्वरो धीमान् निश्चलं पुत्रसन्निधौ॥

१७. अनायासेन सहसा कूरेशः पूर्णमानसः।
जहौ तनुं तदा ध्यायन् यतीन्द्रपदपङ्कजम्॥

१८. तन्निशम्य यतिश्रेष्ठः तत्रागत्य जवात्तदा।
मा शोकं कुरु भट्टार्य! मृत इत्यद्य मे पिता॥

---

திருவடித் தாமரையிணையோடு ஸம்பந்தத்தை இழந்தவர்களாவீர்கள்'' என்று.

## கூரத்தாழ்வானின் பரமபதப்ராப்தி

14*-17. பிள்ளைகளுக்கு இவ்வண்ணமாக நியமனங்களைச்செய்து, செய்யவேண்டியதைச் செய்து முடித்தவராய், உறுதியான ஸங்கல்பத்தையுடையவரான கூரத்தாழ்வான் தமது ஶரீரத்தைக் கைவிடமுற்பட்டார். ஶிஷ்யராய், ரிஷிதுல்யரான பிள்ளைப் பிள்ளையாழ்வான் மடியிலே தலையை வைத்துக்கொண்டு, மனைவியான ஆண்டாள் மடியிலே திருவடியை வைத்துக்கொண்டு, புத்ரர்களுக்கருகில் பேரறிவாளரான கூரத்தாழ்வான் அசையாமல் பள்ளிகொண்டிருந்தார். அப்போதே யதிராஜரின் திருவடித் தாமரைகளைத் தியானித்துக்கொண்டு, தமது ஶரீரத்தைக் கைவிட்டார்.

## எம்பெருமானாரின் வருத்தமும் நியமனமும்

18-*20. கூரத்தாழ்வான் பரமபதமடைந்ததைக் கேள்வியுற்ற யதிராஜர் அப்போது வேகமாக அங்குவந்து

१९. इति दीनं समाश्वास्य भट्टार्यं यतिपुङ्गवः ।
कूरेशस्याधुना वत्स! पितुस्तव महात्मनः ॥

२०. कार्यं हि चरमं शीघ्रं कुरुष्वेत्याह योगिराट् ।
भट्टार्यः सहसा तस्य शासनात् यतिभूपतेः ॥

२१. उद्युक्तोऽभूत्परिकरैः श्रीरङ्गशस्य वैष्णवैः ।
ब्रह्ममेधविधिज्ञैश्च पितुश्चरमकर्मणि ॥

२२. सर्वकर्माणि सूक्तेन गायत्र्या वैष्णवेन च ।
नारायणानुवाकेन स्नापयेत्पितरं सुतः ॥

२३. इत्युक्तेन प्रकारेण स्नापयित्वा सुतस्तदा ।
धारयित्वाथ स्वपितुरूर्ध्वपुण्ड्राणि वै क्रमात् ॥

---

"பட்டரே! 'எனது தந்தை இறந்துவிட்டாரே' என்று வருந்தாதீர்" என்று வருந்திநிற்கும் பட்டருக்கு ஆறுதல் வார்த்தை சொல்லி "குழந்தாய்! மஹாபுருஷராய் உனது தந்தையான கூரத்தாழ்வானுக்கு இப்போதே விரைவில் சரமகைங்கர்யம் செய்யவேண்டுமன்றோ. அதைச் செய்வாயாக" என்று நியமித்தார்.

## ஆழ்வானுக்கு ப்ரஹ்மமேதஸம்ஸ்காரம்

20*-29. அந்த யதிராஜருடைய நியமனத்தால், ப்ரஹ்மமேதஸம்ஸ்காரவிதியை அறிந்தவர்களாய், ஸ்ரீரங்கநாதனின் அடியார்களான வைஷ்ணவர்களைக் கொண்டு தந்தையின் சரமகைங்கர்யங்களை விரைவில் செய்யத்தொடங்கினர் ஸ்ரீபராசரபட்டர். "புருஷஸூக்தத்தாலும், விஷ்ணுகாயத்ரியாலும், நாராயணாநுவாகத்தாலும் எல்லாக் கர்மங்களையும் செய்யவேண்டும்; (முதலில்) தந்தையைப் பிள்ளை நீராட்டவேண்டும்" என்று ஸ்ம்ருதியில் கூறிய ரீதியில், ஆழ்வானின் குமாரரான பட்டர் ஆழ்வானை அப்போதே நீராட்டி, அவருக்குப் பன்னிரு திருமண்காப்புக்களையும் முறைப்படி அணிவித்தார்.

२४. विधाय सहसा धीमान् श्रीचूर्णपरिपालनम्।
केशवार्पिततत्सर्वं शरीरं मङ्गलावहम्॥

२५. न वृथा दाहयेद्विप्रो ब्रह्ममेधविधिं विना।
ब्रह्ममेधविधिः प्रोक्तः मुनिभिर्ब्रह्मतत्परैः॥

२६. महाभागवतानां हि कर्तव्यमिदमब्रवीत्।
हारीतायां स्मृतौ प्रोक्तं इति तेनैव वर्त्मना॥

२७. अकरोत्सर्वकर्माणि स भट्टार्यः पितुस्तदा।
बन्धुभिस्सानुजो धीमान् भट्टार्यो दशमेऽहनि॥

२८. एकादशेऽहनि तथा द्वादशेऽहनि शास्त्रवित्।
यानि कृत्यानि कार्याणि सर्वाणि विदधे पितुः॥

---

அறிவாளியான ப₄ட்டர் ஸ்ரீசூர்ணபரிபாலனத்தையும் விரைவில் நடத்தினர். "கேசவனுக்கே ஸமர்ப்பிக்கப்பெற்ற எல்லா அவயவங்களையும் உடையதும், மங்க₃ளத்தை அளிப்பதுமான ஸ்ரீவைஷ்ணவனின் திருமேனியை ப்₃ரஹ்ம மேத₄ ஸம்ஸ்காரமில்லாமல் வேறு தாழ்ந்த முறைகளில் அந்தணன் ஸம்ஸ்காரம் செய்யக்கூடாது. ப்₃ரஹ்மத்திடம் ஈடுபாடுடைய முனிவர்களால் ப்₃ரஹ்மமேத₄விதி₄யானது விதி₄க்கப்பட்டுள்ளது. மஹாப₄ாக₃வதர்களுக்கு இந்த ஸம் ஸ்காரமே செய்யத் தக்கது என்று ஶாஸ்த்ரம் கூறுகிறது" என்று ஹாரீதஸ்ம்ருதியில் சொல்லப்பட்டிருப்பதால் ப்₃ரஹ்மமேத₄முறையிலேயே ப₄ட்டர் தம் தந்தைக்கு ஸம்ஸ்கார கர்மங்களனைத்தையும் செய்தார். உறவினர்க ளோடும், தம்பியோடும் கூடிய அறிவாளியாய், ஶாஸ்த்ர மறிந்த ப₄ட்டர் பதினோராவது நாளிலும், பனிரண்டாவது நாளிலும் செய்யவேண்டிய எல்லாக் கர்மங்களையும் சிறப் பாகச் செய்தார். இவ்வண்ணமாகத் தம்பியோடு கூடிய ப₄ட்டர் தந்தையாகிய கூரத்தாழ்வானுக்கு ப்₃ரஹ்மமேத₄

२९. एवं हि सानुजो भट्टः कूरेशस्य पितुस्तदा।
ब्रह्ममेधेन विधिना संस्काराणि चकार सः॥

३०. यतीन्द्रेण स भट्टार्यस्समाहूयाथ वैष्णवान्।
नातः परतरं तीर्थं वैष्णवाङ्घ्रिजलाच्छुभम्॥

३१. तेषां पादरजः पुण्यं गङ्गामपि पुनाति हि।
एवंवैभवसंयुक्तं वैष्णवाङ्घ्रिजलं शुभम्॥

३२. भक्त्या चक्रेः पादतीर्थं वैष्णवानां महात्मनाम्।
शुभादौ द्विजवर्यैश्च सर्वसंपच्छुभावहम्॥

३३. सहस्रशाखाध्ययनं कारयेद्वै द्विजोत्तमः।
अशुभान्ते विशेषेण द्राविडी ब्रह्मसंहिता॥

---

விதி₄ப்படி அப்போது எல்லா ஸம்ஸ்காரங்களையும் சிறப்பாகச் செய்தார்.

## ஆழ்வானுக்குத் திருவத்₄யயனம்

30-40. யதிராஜரோடு கூடிய ப₄ட்டர் ஸ்ரீவைஷ்ணவர்களை அழைத்து "வைஷ்ணவர்களுடைய ஸ்ரீபாத₃தீர்த்த₂த்தைக் காட்டிலும் மேலான பாவனப்பொருள் இல்லை. அவர்களுடைய புண்யமான அடிப்பொடி கங்கையையும் பரிஶுத்₃த₄ப்படுத்துகிறதன்றோ" என்னும் பெருமையைப் பெற்றதாய், மங்க₃ளமானதான ஸ்ரீவைஷ்ணவர்களின் ஸ்ரீபாத₃தீர்த்த₂த்தை மஹாத்மாக்களான வைஷ்ணவர்களிடம் அன்போடு ஸ்வீகரித்தார்கள். "ஶுப₄காரியங்களின் ஆதி₃யில் அந்தணர்தலைவன் எல்லாச் செல்வங்களையும், மங்க₃ளங்களையும் அளிக்கும் திருவாய்மொழி ஆயிரத்தின் ஸேவையை அந்தணர்தலைவர்களைக்கொண்டு செய்விக்க வேண்டும். அஶுப₄காரியங்களின் இறுதியிலும் தீட்டு முதலானவற்றைப் போக்கடிப்பதான திருவாய்மொழி ஆயிரத்தின் ஸேவை அந்தணர்தலைவர்களைக்கொண்டு சிறப்பாகச்

३४. अध्येतव्या द्विजवरैः आशौचाद्यघनाशिनी।
वृद्ध्यादौ च क्षये चान्ते द्राविडी ब्रह्मसंहिता॥

३५. अध्येतव्या द्विजश्रेष्ठैस्तावद्गीतसहस्रकी।
ब्रह्माण्डाख्यपुराणे च प्रोक्तमार्गेण वैष्णवैः॥

३६. सहस्रशाखाध्ययनं कारयामास शास्त्रतः।
पुष्पाञ्जलिं च विदधे भट्टार्यः सानुजस्ततः॥

३७. यथा तुष्यति देवेशो महाभागवतार्चनात्।
न तुष्यति तथा विष्णुर्विधिवत्स्वार्चनादपि॥

३८. एवमुक्तप्रकारेण वैष्णवान् विष्णुतत्परान्।
अन्नभूषणवस्त्राद्यैरर्चयामास भक्तितः॥

३९. कूरेशजन्मनक्षत्रं पौष्ये हस्तमिति श्रुतम्।
कूराधिपस्य तनियनिदमाहुर्विपश्चितः॥

---

செய்விக்கப்படவேண்டும். வ்ருத்₃தி₄யின் ஆதி₃யிலும், க்ஷயத்தின் இறுதியிலும் திராவிடவேத₃த்தின் ஆயிரம் பாட்டுக்களும் அந்தணர்தலைவர்களைக்கொண்டு ஓதுவிக்கப் படவேண்டும்.” என்று ப்₃ரஹ்மாண்ட₃புராணத்தில் சொல் லப்பட்ட ரீதியில் வைஷ்ணவர்களைக்கொண்டு திருவாய் மொழி ஆயிரத்தின் ஸேவையை ஶாஸ்த்ரமுறைப்படி செய்வித்தார். அதற்குப்பின் தம்பியோடுகூடிய ப₄ட்டர் (திருவாராத₄னப் பெருமாளுக்கு) புஷ்பாஞ்ஜலி எனும் மந்த்ரபுஷ்பத்தை ஸமர்ப்பித்துச் சாத்தியருளினர். “மஹா ப₄ாக₃வதர்களை ஆராதி₄ப்பதால் தே₃வர்தலைவனை விஷ்ணு எப்படி உகக்கிருனே, அப்படி முறைப்படி தன்னை ஆரா தி₄ப்பதாலும் உகப்பதில்லை” என்று சொல்லப்பட்ட ரீதியில் விஷ்ணுப₄க்தர்களான வைஷ்ணவர்களை அன்னம், ஆப₄ ரணம், வஸ்த்ரம் முதலானவற்றை அளித்து ப₄க்தியோடு ஆராதி₄த்தார். தையில் ஹஸ்தம் கூரத்தாழ்வானின்

४०. श्रीवत्सचिह्नमिश्रेभ्यो नम उक्तिमधीमहि।
यदुक्तयस्त्रयीकण्ठे यान्ति मङ्गलसूत्रताम्॥

४१. ततः परं समादाय भट्टार्यं यतिभूपतिः।
अवाप रङ्गराजस्य सन्निधिं जगतां पतेः॥

४२. कृतप्रणामं भट्टार्यं रङ्गेशो भक्तवत्सलः।
पुत्रस्वीकारमकरोत्पीतहारिद्रशम्बरः॥

४३. तदार्चकमुखेनाह भट्टार्यं रङ्गराट् सुतम्।
पिता तव मृतिं यातः इति शोकं च मा कृथाः॥

---

ஜன்மநக்ஷத்ரமாகச் சொல்லப்படுகிறது. **"ஸ்ரீவத்ஸசிஹ்நமிஶ்ரேப்$_4$ய: நம உக்திமதீ$_4$மஹி। யது$_3$க்தயஸ்த்ரயீகண்டே$_2$ யாந்தி மங்க$_3$ளஸூத்ரதாம்॥"** [ர-ஸ்த 1-1] [எவருடைய ஸ்ரீஸூக்திகள் வேத$_3$மாகிற மாதின் கழுத்தில் தாலியாகின்றனவோ, அத்தகைய பெருமையையுடைய ஸ்ரீவத்ஸ சிஹ்நமிஶ்ரரை (கூரத்தாழ்வானைக்) குறித்து 'நம:' என்னும் சொல்லைச் சொல்லுகிறோம்] என்னும் ஶ்லோகத்தை அறிவாளிகள் கூரத்தாழ்வானின் தனியனாகக் கூறுகிறார்கள்.

## அரங்கன் பட்டரை ஸ்வீகரித்தல்

41-*47. அதற்குப்பின் யதிராஜர் ப$_4$ட்டரை அழைத்துக்கொண்டு லோகநாத$_2$னை ரங்க$_3$நாத$_2$னின் ஸந்நிதி$_4$யை அடைந்தார். ப$_4$க்தவத்ஸலரான பெரியபெருமாளும் தம்மை வணங்கிய ப$_4$ட்டரை மஞ்சள்நீர் குடிக்கச்செய்து, புத்ரனாக ஸ்வீகரித்துக்கொண்டார். அப்போது பெரியபெருமாள் பிள்ளையான ப$_4$ட்டரைப் பார்த்து "உன்னுடைய தந்தை மரணமடைந்தார் என்று வருந்தாதே. குழந்தாய்! என்னையே தந்தையாகக் கொள்வாய். உனக்கு எக்குறையுமில்லை" என்று அர்ச்சகமுக$_2$மாக அருளிச்செய்தார். அதைக் கேட்டு யதிராஜர் மிகவுகந்தவராய், திருவரங்கராஜரைப்

४४. मां विद्धि पितरं वत्स! न्यूनता तव नास्ति हि।
तन्निशम्याथ रङ्गेशं सन्तुष्टः प्राह योगिराट्॥

४५. भट्टार्याय प्रदेह्यायुः रङ्गेशास्मै सुताय ते।
सर्वशास्त्रविदां श्रेष्ठं करिष्येऽहं तवात्मजम्॥

४६. अदत्वा तस्य वाक्यस्य तदा प्रत्युत्तरं हरिः।
दापयित्वा तयोः शीघ्रं शठकोपं च मालिकाम्॥

४७. प्रस्थापयामास तदा भट्टार्यं च यतीश्वरम्।
ततो भट्टार्यमादाय यतिराजो मठं गतः॥

४८. तमाहूयाथ गोविन्दं वचनं चेदमब्रवीत्।
अस्मद्दर्शननिर्वाहं कुरु शास्त्रविशारदम्॥
इति गोविन्दहस्ताब्जे भट्टार्यं सम्यगार्पयत्॥

---

பார்த்து "ரங்க₃ராஜரே! தேவரீர் உமது பிள்ளையான ப₄ட்டருக்கு நீண்ட ஆயுளை அளிப்பீர். உமது புத்ரனை எல்லா ஶாஸ்த்ரங்களையும் அறிந்தவர்களில் தலைசிறந்த வனாக அடியேன் செய்கிறேன்" என்று கூறினார். அவ் வாக்யத்திற்கு அப்போது பெரியபெருமாள் யாதொரு பதிலும் உரைக்காமல், அவர்களிருவர்க்கும் விரைவாக ஸ்ரீசடகோபத்தையும், மாலையையும் அளிக்கச்செய்து, ப₄ட்டருக்கும் யதிராஜருக்கும் அப்போதே விடைகொடுத்து விட்டார்.

## பட்டரை எம்பாரிடம் காட்டிக்கொடுத்தல்

47*-49. அதற்குப்பின் ப₄ட்டரை அழைத்துக்கொண்டு யதிராஜர் மட₂த்திற்குச் சென்றார். கோ₃விந்த₃ர் என்று பெயர்பெற்ற தம் ஶிஷ்யரும தம்பியுமான எம்பாரை அழைத்து,'ப₄ட்டரை நம்முடைய த₃ர்ஶனத்தை நிர்வஹிக்க வல்ல ஶாஸ்த்ர விற்பன்னராக ஆக்குவாய்' என்னும் வார்த்தையை அருளினார். இவ்வண்ணம் நியமித்து, யதி

४९. एवं कूरपतेश्चरित्रमखिलं सम्पत्करं ज्ञानदं
सर्वेषामघनाशनं भवहरं मोक्षप्रदं धीमताम् ।
ये शृण्वन्ति पठन्ति सौम्यहृदयाः सम्यक् महाभक्तितः
ते गच्छन्ति परं पदं प्रविमलं विष्णोर्ध्रुवं शाश्वतम् ॥

इति श्रीप्रपन्नामृते रामानुजचरित्रे कूरेशस्य परमपदप्राप्तिवर्णनं नामाष्टपञ्चाशोऽध्यायः ॥

## एकोनषष्टितमोऽध्यायः

१. ततोऽखिलार्थान् शिष्येभ्यो भगवान् यतिपुङ्गवः ।
तस्थावुपदिशन् रङ्गे भगवद्विषये स्थितान् ॥

---

ராஜர் ப₄ட்டரை எம்பாருடைய திருக்கைத் தாமரைகளில் ஒப்படைத்தார். இவ்வண்ணமாக அறிவாளிகள் அனைவர்க்கும் செல்வங்களை அளிப்பதாய், ஜ்ஞானத்தைத் தருவதாய், பாபங்களைப் போக்குவதாய், ஸம்ஸாரத்தை நீக்குவதாய், மோக்ஷத்தைக் கொடுப்பதான கூரத்தாழ்வானுடைய சரித்திரம் முழுவதையும் பேரன்புடன், உகந்த நெஞ்சினராய் எவர்கள் படிக்கிறார்களோ, கேட்கிறார்களோ அவர்கள் குற்றமற்றதாய், நிலையானதான விஷ்ணுவின் பரமபத₃த்தை உறுதியாக அடைவார்கள்.

ஸ்ரீப்ரபந்நாம்ருதத்தில் ராமாநுஜசரித்திரத்தில், கூரத்தாழ்வான் பரமபத₃ம் அடைந்ததை வர்ணிக்கும் ஐம்பத்தெட்டாவது அத்தியாயம் நிறைவுற்றது.

# ஐம்பத்தொன்பதாம் அத்தியாயம்

## ஸ்ரீராமாநுஜவைப₄வம்—1.

### ஸ்ரீராமாநுஜவைப₄வத்தை வெளியிட்டவர்கள்

1-6. கூரத்தாழ்வான் காலத்துக்குப்பின் ப₄க₃வான் யதிராஜர் தம் ஶிஷ்யர்களுக்கு ப₄க₃வத்₃விஷயத்திலுள்ள

२. एवंविधप्रभावस्य यतीन्द्रस्य जगद्गुरोः।
एते प्रकाशयामासुः वैभवं लोकपावनम्॥

३. रङ्गेशो वेङ्कटेशश्च वरदः सम्पदात्मजः।
देवः सुन्दरबाहुश्च कुरङ्गनगरीश्वरः॥

४. वकुलाभरणः श्रीमान् धीमान् नाथमुनिर्महान्।
यामुनार्यो महापूर्णो गोष्ठीपूर्णो दृढव्रतः॥

५. भूरिश्रीशैलपूर्णोऽथ मालाधरगुरुर्महान्।
श्रीवत्सचिह्नमिश्रश्च रङ्गदेवाख्यदेशिकः॥

६. वररङ्गो यतीन्द्रस्य तस्य शिष्यादयोऽखिलाः।
मूकश्च ब्रह्मरक्षश्च ये चान्ये तत्त्वदर्शिनः॥

---

எல்லா அர்த்தங்களேயும் உபதேஶித்துக்கொண்டு ஸ்ரீரங்கத்தில் எழுந்தருளியிருந்தார். இத்தகைய பெருமைகளே உடைய ஜகத்குருவான யதிராஜருடைய லோகபாவனமான பெருமையைப் பின்வருகிறவர்கள் வெளிப்படுத்திஞர்கள்:— (1) ஸ்ரீரங்கநாதன், (2) திருவேங்கடமுடையான், (3) வரதராஜப்பெருமாள், (4) செல்வப்பிள்ளேயான திருநாரணன், (5) சுந்தரத்தோளுடையான் (திருமாலிருஞ்சோலே அழகர்), (6) திருக்குறுங்குடிநம்பி, (7) பக்திச் செல்வம் நிரம்பிய நம்மாழ்வார், (8) பேரறிவாளரான நாதமுனிகள், (9) பெரியமுதலியாரான ஆளவந்தார், (10) பெரியநம்பி, (11) உறுதியான விரதமுடைய திருக்கோட்டியூர்நம்பி, (12) பெரியதிருமலேநம்பி, (13) பெரியவரான திருமாலேயாண்டான், (14) வரரங்கர் என்னும் திருநாமமுடைய திருவரங்கப் பெருமாளரையர், (15) கூரத்தாழ்வான், (16) யதிராஜரது அனேத்து ஶிஷ்யர்களும், (17) ஊமை, (18) ப்ரஹ்மரக்ஷஸ்ஸு, (19) மற்றுமுள்ள பல தத்வஜ்ஞானிகள்.

௭. रङ्गराट् स्वयमाहूय भगवान् जगदीश्वरः।
जगद्गुरुं लक्ष्मणार्यं श्रीभूनीलादिसन्निधौ ॥

௮. इत्युवाच प्रवालोष्ठस्फुरद्दशनसुप्रभः।
युष्मत्सम्बन्धसम्बन्धिचरमावधयश्च ये ॥

௯. तेभ्यश्च भवते दत्तं यद्विभूतिद्वयं मम।
वृषशैलेश्वरः श्रीमान् वेङ्कटेशो दयानिधिः ॥

௧௦. विलोक्य विस्मयं गत्वा यतिराजं जगद्गुरुम्।
इत्युवाच प्रवालोष्ठस्फुरद्दशनसुप्रभः ॥

௧௧. भवते भवदीयेभ्यो विभूतिद्वयमेव मे।
मया दत्तं यतिश्रेष्ठ! त्रिवारं नात्र संशयः ॥

---

### 1. பெரியபெருமாள் வெளியிட்ட வைப₄வம்

7-*9. ஜக₃ந்நாத₂னாய், ப₄க₃வானான திருவரங்கராஜன் ஸ்ரீ பூ₄மி நீளை முதலானாருடைய திருமுன்பே ஜக₃த்₃கு₃ரு₃வாசார்ய ரான ஸ்ரீராமாநுஜரைத் தானே அழைத்து, திருப்பவளச் சோதிவாய் திறந்து, "தேவரீருடைய ஸம்ப₃ந்த₄ம் பெற்ற வர்களின் ஸம்ப₃ந்த₄ம் பெற்றவர்களுடைய எல்லைநிலத்தில் இருப்பவர்களுக்கும் தேவரீருக்களித்த உப₄யவிபூ₄தி ஸாம் ராஜ்யத்தை அளிக்கிறேன்" என்று அருளிச்செய்தான்.

### 2. திருவேங்கடமுடையான் வெளியிட்ட வைப₄வம்

9*-*26. அலர்மேல்மங்கை உறைமார்பனாய், திருமலை யப்பனாய், கருணைக்கடலான திருவேங்கடவன் ஜக₃த்₃கு₃ரு₃வாசார்ய ரான யதிராஜரைக் கண்டு வியப்புற்றவனாய், திருப்பவளச் சோதிவாய்திறந்து "எதிகட்கிறைவரே! தேவரீருக்கும், தேவரீருடைய அடியார்களுக்கும் எமது நித்யவிபூ₄தி, லீலாவிபூ₄தி எனும் விபூ₄தித்₃வயத்தை அளித்தோம். முக் காலும் கூறினோம். இதில் ஐயமில்லை" என்று அருளினான்.

२. एवंविधप्रभावस्य यतीन्द्रस्य जगद्गुरोः ।
एते प्रकाशयामासुः वैभवं लोकपावनम् ॥

३. रङ्गेशो वेङ्कटेशश्च वरदः सम्पदात्मजः ।
देवः सुन्दरबाहुश्च कुरङ्गनगरीश्वरः ॥

४. वकुलाभरणः श्रीमान् धीमान् नाथमुनिर्महान् ।
यामुनार्यो महापूर्णो गोष्ठीपूर्णो दृढव्रतः ॥

५. भूरिश्रीशैलपूर्णोऽथ मालाधरगुरुर्महान् ।
श्रीवत्सचिह्नमिश्रश्च रङ्गदेवाख्यदेशिकः ॥

६. वररङ्गो यतीन्द्रस्य तस्य शिष्यादयोऽखिलाः ।
मूकश्च ब्रह्मरक्षश्च ये चान्ये तत्त्वदर्शिनः ॥

---

எல்லா அர்த்தங்களேயும் உபதேசித்துக்கொண்டு ஸ்ரீரங்கத்தில் எழுந்தருளியிருந்தார். இத்தகைய பெருமை களே உடைய ஜகத்குருவான யதிராஜருடைய லோக பாவனமான பெருமையைப் பின்வருகிறவர்கள் வெளிப் படுத்தினர்கள்:— (1) ஸ்ரீரங்கநாதன், (2) திருவேங்கட முடையான், (3) வரதராஜப்பெருமாள், (4) செல்வப்பிள்ளே யான திருநாரணன், (5) சுந்தரத்தோளுடையான் (திருமா லிருஞ்சோலே அழகர்), (6) திருக்குறுங்குடிநம்பி, (7) பக்திச் செல்வம் நிரம்பிய நம்மாழ்வார், (8) பேரறிவாளரான நாதமுனிகள், (9) பெரியமுதலியாரான ஆளவந்தார், (10) பெரியநம்பி, (11) உறுதியான விரதமுடைய திருக் கோட்டியூர்நம்பி, (12) பெரியதிருமலேநம்பி, (13) பெரியவ ரான திருமாலேயாண்டான், (14) வரரங்கர் என்னும் திருநாமமுடைய திருவரங்கப் பெருமாளரையர், (15) கூரத்தாழ்வான், (16) யதிராஜரது அனேத்து ஶிஷ்யர்களும், (17) ஊமை, (18) ப்ரஹ்மரக்ஷஸ்ஸு, (19) மற்றுமுள்ள பல தத்வஜ்ஞானிகள்.

१७. तन्निशम्य यतीन्द्रस्य वचनं गोपबालिका।
प्रणिपत्य पुनः प्राह प्राञ्जलिर्यतिपुङ्गवम्॥

१८. वेङ्कटेशं समुद्दिश्य पत्रिकां देहि मेऽधुना।
अतश्चेन्मोक्षदानाय शीघ्रं मम यतीश्वर!॥

१९. अङ्गीकृत्य वचस्तस्याः सत्वरं करुणार्णवः।
विलिख्य स्वयमेवाशु तदर्थं पत्रिकां तदा॥

२०. गोपीहस्ते ददौ धीमान् सर्वेषां चैव पश्यताम्।
श्रीवैष्णवेभ्यस्सर्वेभ्यो यतीन्द्राय च गोपिका॥

२१. प्रणिपत्य मुदा युक्ता पत्रिकां शिरसाऽग्रहीत्।
सा जवाद्वेङ्कटेशस्य सन्निधिं प्राप्य संभ्रमात्॥

२२. स्वामिपुष्करिणीतीर्थे स्नात्वा सम्यक् सुनिश्चला।
धृत्वा चैवोर्ध्वपुण्ड्रं सा चानन्दनिलयं महत्॥

---

படி ஒரு கடிதத்தைத் திருவேங்கடமுடையானுக்கு விரைவில் அளிப்பீராக'' என்று விண்ணப்பித்தாள். பேரறிவாளராய் கருணைக்கடலான அவரும் அவளுடைய வேண்டுகோளை ஏற்று, அவள் மோக்ஷம் பெறுவதற்காக ஒரு கடிதத்தைத் தாமே உடனே எழுதி, அப்போதே அனைவரும் பார்த்துக் கொண்டிருக்கையில் அவ்விடைப் பெண்ணின் கையில் கொடுத்தார். அவ்விடைப் பெண்ணும் யதிராஜரையும், அந்த ஸ்ரீவைஷ்ணவர்களையும் மிக உகப்புடன் வணங்கியவளாய், அக்கடிதத்தைச் சிரமேற்கொண்டாள். அவள் பரபரப்போடும், வேக₃த்தோடும் திருவேங்கடமுடையான் ஸந்நிதி₄ சென்று, ஸ்வாமி புஷ்கரிணியில் நீராடி, நல்ல உறுதியுடையவளாய், ஊர்த்₄வ புண்ட்₃ரத்தை த₄ரித்து, பெருமைபெற்றதான ஆனந்த₃ நிலைய விமானத்தை ப்ரத₃க்ஷிணம் செய்து, த்₄வஜ ஸ்தம்ப₄த்தின் முன்பே அக்கடிதத்தை வைத்து, 'மோக்ஷத்

२३. प्रदक्षिणं विधायाशु गरुडस्तंभसन्निधौ।
तां पत्रिकां विनिक्षिप्य वृषाचलपतिं प्रति॥

२४. मोक्षं देहीति सा चोक्त्वा सा शेते निश्चला सती।
ततो भक्तपराधीनो भगवान् वेङ्कटेश्वरः॥

२५. तूर्णं परं पदं नित्यं तस्यै गोप्यै मुदा ददौ।
आश्चर्यमतुलं दृष्ट्वा तत्रत्या निखिला जनाः॥

२६. रामानुजार्यसम्बन्धात् बभूवुर्हृष्टमानसाः।
अष्टादशदिनं वादं यतीन्द्रो यज्ञमूर्तिना॥

२७. चकार लोकविख्यातं जिनविद्वद्गणेन च।
अशक्तश्चोत्तरं वक्तुं यज्ञमूर्तेर्यतीश्वरः॥

२८. तदा विज्ञापनं चक्रे देवराजाय विष्णवे।
यज्ञमूर्तिजयोपायं यतीन्द्राय महात्मने॥

---

தைக் கொடுப்பாய்' என்று திருவேங்கடமுடையானைக் குறித்துக் கூறி, அசையாதவளாய் ஶயனித்துக் கொண்டாள். அதற்குப்பின் ப₄க்தபரதந்த்ரனை திருவேங்கடமுடையான் அவ்விடைப்பெண்ணுக்கு மிகவுகந்தவனாய், பரமபத₃த்தை மிக விரைவிலேயே அளித்தான். ஒப்பற்ற அந்த ஆச்சரியத்தைக் கண்ட எல்லா ஜனங்களும் ராமாநுஜருடைய ஸம்ப₃ந்த₄த்தைப் பெற்றுக் களிப்பெய்தினார்கள்.

## 3. பேரருளாளன் வெளியிட்ட வைபவம்

26*-*32. யதிராஜர் யஜ்ஞமூர்த்தி என்னும் அத்₃வைத மஹாபண்டி₃தரோடு பதினெட்டு நாள் வாத₃ப்போர் புரிந்தார். தொண்டனூரில் பன்னீராயிரம் சமணர்களோடும் உலகறிந்த வாத₃ப்போர் புரிந்தார். யஜ்ஞமூர்த்தியின் கேள்விக்கு பதில்சொல்ல இயலாதவரான யதிராஜர் பேரருளாளப் பெருமாளுக்கு (பதிலை அருளும்படி) விண்ணப்பித்

२९. अवोचत्तद्धितं तस्मै प्रसन्नो देवराट् स्वयम्।
पुरा काञ्च्यां लक्ष्मणार्ये स्थिते योगीश्वरेश्वरे॥

३०. प्रोवाच यादवं स्वप्ने भगवान् देवराट् स्वयम्।
अस्मद्रामानुजाचार्यसम्बन्धेन विना तव॥

३१. नास्ति निःश्रेयसं वत्स! सत्यं सत्यं मयोदितम्।
प्रदक्षिणं विधायैकं लक्ष्मणार्याय निश्चलः॥

३२. कुरु त्रिदण्डसंन्यासं तेन मुक्तो भविष्यसि।
भक्तग्रामे यतीन्द्रस्य स्वप्ने दत्वा जगत्पतिः॥

३३. यादवाद्रौ तमानीय यादवाचलनायकः।
प्रत्यक्षमगमत्तस्य तेनाभूत्प्रथितो भुवि॥

---

தார். வரதராஜப்பெருமாளும் யஜ்ஞமூர்த்தியை வெல்லும் உபாயத்தையும், அவருக்கு ஹிதத்தையும் மஹாத்மாவான யதிராஜருக்கு, அவரிடம் உகப்புடன் தாமே அருளிச்செய்தார். முன்பொரு சமயம் காஞ்சியில் ஸ்ரீராமாநுஜர் யதிகட்கெல்லாம் சக்கரவர்த்தியாக விளங்கி வருகையில் யாதவப்ரகாசருடைய கனவில் ப$_4$க$_3$வானை வரதராஜப் பெருமாள் "குழந்தாய்! இந்த ராமாநுஜாசார்யருக்கு நீ ஶிஷ்யனுனலொழிய உனக்கு மோக்ஷமில்லை. நான் பலகால் ஸத்யம் செய்து இதைச் சொல்லுகிறேன். (ஶிக$_2$ாயஜ்ஞோபவீதங்களைக் கைவிட்டதற்கு ப்ராயஶ்சித்தமாக) ஸ்ரீராமாநுஜரை ஒருமுறை ப்ரத$_3$க்ஷிணம் செய்து, த்ரித$_3$ண்ட$_3$ஸந்யாஸத்தை ஏற்றுக்கொள்வாயாக. அதனாலேயே நீ முக்தியடைவாய்." என்று தாமே அருளிச்செய்தார்.

## 4. திருநாரணன் வெளியிட்ட வைபவம்

32*-*34. லோகநாத$_2$னைய், யாத$_3$வகி$_3$ரிப்பெருமானை திருநாரணன் யதிராஜர் தொண்டனூரில் இருக்கும்போது அவர் கனவில் தோன்றி, அவரை யாத$_3$வகி$_3$ரிக்கு அழைத்

३४. सम्पत्पुत्रो यतीन्द्रस्य पुत्रत्वमगमद्धरिः।
कदाचिदुत्सवे काले वैष्णवान् वीक्ष्य हर्षितः॥

३५. देवः सुन्दरबाहुश्च प्रोवाचेदं वचः शुभम्।
अस्मद्रामानुजाचार्यसम्बन्धा ये महात्मकाः॥

३६. आगच्छन्तु जनास्सर्वे मम सन्निधिमादरात्।
तच्छ्रुत्वा वैष्णवास्सर्वे सहसा जग्मुरन्तिकम्॥

३७. महापूर्णार्यसम्बन्धात् केचिन्नैवागतास्तदा।
ततस्सुन्दरबाहुस्तान् विलोक्याशु वचोऽब्रवीत्॥

३८. आहूतास्ते मया सर्वे ह्यागताः किल साम्प्रतम्।
किमर्थं नागताः पूर्वं ब्रूत तत्कारणं मम॥

---

துக்கொண்டுபோய் அவருக்குக் காட்சி கொடுத்தான். "என்னுடைய செல்வப்பிள்ளையன்றோ" என்று எடுத்தணைக்கும்படி திருநாரணன் அவருக்குப் பிள்ளையாகவும ஆனான். அதனால் 'செல்வப்பிள்ளை' என்றும் உலகில் பிரஸித்₃தி₄பெற்றான்.

## 5. அழகர் வெளியிட்ட வைபவம்

34*-*47. சுந்தரத்தோளுடையானான அழகர் ஓர் உத்ஸவத்தில் மிகவுகந்தவராய் ஸ்ரீவைஷ்ணவர்களைப் பார்த்து "நம்முடைய இராமாநுசனோடு ஸம்ப₃ந்த₄முடைய மஹாத்மாக்களான அனைவரும் என் அருகிலே வாருங்கள்" என்று அன்போடு மங்க₃ளமான வார்த்தையைச் சொன்னார். அதைக்கேட்டு வைஷ்ணவர்களில் பெரும்பாலானவர்கள் அழகருக்கு அருகில் சென்றார்கள். பெரியநம்பியைச் சேர்ந்த சிலர் அப்போது வராமலிருந்தார்கள். அவர்களைப் பார்த்து அழகர் "நான் அழைத்தது கேட்டு மற்ற எல்லோரும் வந்திருக்க, இப்போது நீங்கள் மாத்திரம் வராமலிருந்ததற்குக் காரணத்தை முந்துறமுன்னம் கூறுவீர்களாக" என்னும் வார்த்தையை விரைவில் சொன்னார்.

३९. प्रतिगृह्य वचस्तस्य चक्रुर्विज्ञापनं तदा।
रामानुजार्यशिष्याणामाह्वानं भवता कृतम्॥

४०. रामानुजार्यगुरवो यतस्ते नागता वयम्।
तच्छ्रुत्वा भगवान्प्राह प्रहस्येदं वचस्स तान्॥

४१. शिष्यभावं प्रकुर्वन्ति लक्ष्मणार्ये महात्मनि।
पुत्रभावं मयि पुरा यथा दशरथादयः॥

४२. ततः कदाचिदात्रेयवंशचूडामणिर्महान्।
प्रणतार्तिहराचार्यः प्रपेदे वृषभाचलम्॥

४३. स्तोत्ररत्नस्थितं श्लोकं पठन् भक्त्या महौजसे।
साष्टाङ्गवन्दनं चक्रे तस्मै सुन्दरबाहवे॥

---

அதைக்கேட்ட அவர்கள் "ராமாநுஜருடைய ஶிஷ்யர்களையே தேவரீர் அருகில் அழைத்தீர். நாங்கள் ராமாநுஜருடைய ஆசார்யஸ்த₂ானத்திலிருப்பதால் வரவில்லை" என்று அப்போதே விண்ணப்பித்தார்கள். அதைக்கேட்ட எம்பெருமான் அவர்களைப்பார்த்து பெரிதாகச் சிரித்து, "என்னை தசரதன் முதலானோர் முற்காலத்தில் பிள்ளை என்றே நினைத்ததுபோலே மஹாத்மாவான ராமாநுஜரை இக்காலத்தில் சிலர் சிஷ்யர் என்றே நினைக்கிறார்களே!" என்று அருளினான். அதற்குப்பின் ஒருசமயம் ஆத்ரேய குலஶிக₂ாமணியான கிடாம்பியாச்சான் என்னும் பெரியவர் திருமாலிருஞ்சோலைமலைக்குவந்து, பரஞ்சோதியான சுந்தரத்தோளுடையானை ஸாஷ்டாங்க₃மாக நமஸ்கரித்து, ஆளவந்தார் அருளிய ஸ்தோத்ரரத்னத்திலுள்ள **"அபராத₄ ஸஹஸ்ரப₄ாஜநம் பதிதம் பீ₄மப₄வார்ணவோத₃ரே। அக₃திம் ஶரணாக₃தம் ஹரே! க்ருபயா கேவலமாத்மஸாத்குரு ॥"** [ஸ்தோ-ர 48] [து₃:க்க₂ங்களைப்போக்கும் எம்பிரானே! கணக்கற்ற குற்றங்களுக்கு இருப்பிடமாகவும், ப₄யங்கரமான ஸம்ஸாரமாகிய கடலினுள் விழுந்தவனாகவும், **(உன்னை**

४४. "अपराधसहस्रभाजनं पतितं भीमभवार्णवोदरे।
अगतिं शरणागतं हरे! कृपया केवलमात्मसात्कुरु॥"

४५. श्लोकार्थं स निशम्याशु भगवान् प्राह तं तदा।
सर्वेषां लक्ष्मणाचार्ये विद्यमाने तु रक्षके॥

४६. तस्मादगतिमित्येवं ब्रवीषि त्वं कथं बत।
अस्मद्रामानुजाचार्यो राजते सर्वरक्षकः॥

४७. तत्सम्बन्धबलेनैव पापिष्ठो ह्यपि मुक्तिभाक्।
पुरा दिग्विजयार्थाय ययौ लक्ष्मणदेशिकः॥

४८. कुरङ्गनगरं प्राप्य बहुशिष्यसमावृतः।
कुरङ्गनगरीपूर्णं तं महोत्तुङ्गविग्रहम्॥
प्रणम्य बहुधा भक्त्या मुमोद यतिशेखरः॥

---

**யொழியவேறு) க₃தியற்றவனுகவும்,** ஶரணுக₃தன் என்று சொல்லிக்கொள்ளுகிறவனுகவுமிருக்கிற அடியேனை (உன்) அருளினுலேயே உன்னுடையவனுகக் கொள்வாயாக.] என்னும் ஶ்லோகத்தை அழகரைப்பார்த்து விண்ணப்பித தார். அந்த ஶ்லோகத்தின் பொருளைக்கேட்ட அழகர் "அனைவரையும் ரக்ஷிக்கும் ராமாநுஜாசார்யர் உனக்கு ரக்ஷகராயிருக்கும்போது **'அக₃திம்'** [புகலற்றவனை அடியேனை] என்று எப்படி நீ சொல்லலாம்? நமது ராமாநுஜா சார்யர் அனைவரையும் ரக்ஷிப்பவராயன்றே விளங்குகிருர். அவரது ஸம்ப₃ந்த₄ப₃லத்தாலேயே மஹாபாபியும் முக்தி அடைகிருனன்றே" என்று கிடாம்பியாச்சானைப் பார்த்து அருளிச்செய்தார்.

## 6. திருக்குறுங்குடி நம்பி வெளியிட்ட வைப₄வம்

47*-66. முன்பொரு சமயம் தி₃க்₃விஜயத்தின்போது பல சிஷ்யர்களோடு கூடிய யதிராஜர் திருக்குறுங்குடியை அடைந்து, பெரிய திருமேனியை உடைய திருக்குறுங்குடி நம்பியைப் பலகால் ப₄க்தியோடு வணங்கி உகந்தார்.

४९. एकान्तिभिद्वादशभिस्सहस्रैः पीठैः चतुस्सप्ततिभिस्समेतः।
अन्यैरनन्तैरपि विष्णुभक्तैः श्रीरङ्ग आस्ते यतिसार्वभौमः॥

५०. इत्युक्तेन प्रकारेण शिष्यसङ्घसमावृतम्।
विलोक्य विस्मयं गत्वा यतिराजं महौजसम्॥

५१. कुरङ्गनगरीपूर्णो व्याजहार वचः शुभम्।
श्रीसहायेन योगीश! जनरक्षणकाम्यया॥

५२. अवताराः कृताः पूर्वं रामकृष्णादयो मया।
अवतारेषु मां सर्वे मन्यन्ते प्राकृता जनाः॥

५३. राजानं चापि गोपालं प्राकृतं पुरुषं यथा।
अस्माकं रक्षणार्थाय वैकुण्ठादागतो हरिः॥

५४. एवं न मेनिरे दृष्ट्वा मां जगत्कारणं परम्।
आसुरप्रकृतित्वेन तेषां कोपि न मां गतः॥

---

“பன்னீராயிரம் ஏகாந்திகளோடும், எழுபத்துநாலு ஸிம்ஹாஸநாதிபதிகளோடும், மற்றும் கணக்கற்ற ஶிஷ்யர்களோடும் கூடியவராய் ஸ்ரீரங்கத்தில் யதிராஜராஜர் எழுந்தருளியிருக்கிறார்” என்று சொல்லப்பட்ட முறையிலே, ஶிஷ்யர்களின் பெருங்கூட்டத்தால் சூழப்பெற்ற பெருமையையுடைய யதிராஜரைக் கண்டு வியப்புற்ற திருக்குறுங்குடிநம்பி பின்வரும் மங்களமான வார்த்தையை அருளினார் — “யதிராஜரே! ஜீவர்களை ரக்ஷிக்கவிரும்பி ஸ்ரீதேவியோடுகூட ராமன், கிருஷ்ணன் முதலான பல அவதாரங்கள் என்னால் எடுக்கப்பெற்றன. ப்ரக்ருதி வசப்பட்ட ஜனங்கள் அனைவரும் அவதாரம் எடுத்திருக்கும் என்னை ப்ராக்ருத புருஷனைப்போலே முறையே ஓர் அரசன் என்றும் இடையன் என்றுமே மதித்தார்கள். அஸுரஸ்வபாவத்தை உடையவர்களாகையாலே ‘நம்மை ரக்ஷிப்பதற்காக வைகுண்டத்திலிருந்து நாரணன் வந்திருக்கிறான்’ என்று என்னைக்கண்டு எவரும் மேலான ஜகத்காரணப் பொருளாக அறியவில்லை. ஆகையால் எவருமே என்னை அடையவில்லை.

५५. केनोपायेन ते सर्वे त्वया वै स्ववशीकृताः।
मन्नाथ! मह्यं सहसा तमुपायं वदाधुना॥

५६. कुरङ्गनगरीशस्य तद्वचः प्रतिगृह्य सः।
तं दृष्ट्वा लक्ष्मणाचार्यः चक्रे विज्ञापनं तदा॥

५७. तद्वक्ष्याम्यधुनैवाशु क्रमेण यदि पृच्छसि।
निशम्य तद्वचस्तस्य सत्यं मत्वा जगत्पतिः॥

५८. कुरङ्गनगरीपूर्णो यतीन्द्राय महात्मने।
दत्वा सिंहासनं दिव्यं कुशास्तरणशोभितम्॥

५९. तुङ्गसिंहासनात् दिव्यादवतीर्णोऽथ भूतले।
जगत्पतिर्हरिः श्रीमान् तस्थौ भक्तिसमन्वितः॥

---

எம்பெருமானரே! அத்தகையவர்கள் அனைவரும் உம்மால் எவ்வழியாலே தம் வஶப்படுத்தப்பட்டார்கள்? அந்த உபாயத்தை இப்போதே எனக்கு விரைவில் சொல்லுவீர்." என்னும் திருக்குறுங்குடி நம்பியின் அவ் வார்த்தையைக் கேட்டு, ஸ்ரீராமாநுஜர் "தேவரீர் கேட்க வேண்டிய முறையில் கேட்டால் அதை இப்போதே விரை வில் கூறுகிறேன்" என்று விண்ணப்பித்தார். அவ்வார்த் தையைக் கேட்டு, ஸ்ரீய:பதியாய், லோகநாதனை திருக் குறுங்குடிநம்பி அதை உண்மையாகவே நம்பி, மஹாத்மா வான யதிராஜருக்கு தூர்ப்பை, விரிப்பு ஆகியவற்றால் அலங்கரிக்கப்பெற்ற திவ்யஸிம்ஹாஸனத்தை அளித்து, தன்னுடைய உயர்ந்த திவ்யஸிம்ஹாஸனத்திலிருந்து தரையில் இறங்கி, பக்தியோடு ஶிஷ்யனாய் நின்றான். யதி ராஜரும் தமக்கு அளிக்கப்பெற்ற ஸிம்ஹாஸனத்தில் தமது ஆசார்யரான பெரியநம்பி எழுந்தருளியிருப்பதாக பாவித் துக்கொண்டு, தரையிலிருக்கும் திருக்குறுங்குடிநம்பியின்

६०. तत्र स्वाचार्यमासीनं मत्वा पूर्णार्यमादरात् ।
स तस्य दक्षिणे कर्णे भूमिस्थस्य यतीश्वरः ॥

६१. सर्वेषामेव मन्त्राणां मन्त्ररत्नं शुभाह्वयम् ।
सकृत्स्मरणमात्रेण ददाति परमं पदम् ॥

६२. मन्त्ररत्नं द्वयं न्यासः प्रपत्तिः शरणागतिः ।
लक्ष्मीनारायणं चेति हितं सर्वफलप्रदम् ॥

६३. नामानि मन्त्ररत्नस्य पर्यायेण निबोध मे ।
प्रशस्यैवं मन्त्ररत्नमुपदेशं विधाय च ॥

६४. ततो वैष्णवपूर्णाख्यं दास्यनाम चकार सः ।
कुरङ्गनगरीपूर्णः तदोवाच जगत्पतिः ॥

६५. रामानुजार्यशिष्योऽहं इति सर्वे च शृण्वथ ।
तदाप्रभृति लोकेऽस्मिन् सर्वत्र विदितं महत् ॥
तद्रामानुजपूर्णाख्यमभूत्तस्य जगत्पतेः ॥

---

வலது காதில் அன்போடு "எல்லா மந்திரங்களுக்குள்ளும் மந்திரரத்தினமான த்₃வயம் ஶுப₄த்தை அளிப்பது; ஒரு தடவை அநுஸந்தி₄ப்பதாலேயே பரமபத₃த்தை அளிப்பது; மந்த்ரரத்னம் என்றும், த்₃வயம் என்றும், ந்யாஸம் என்றும், ப்ரபத்தி என்றும், ஶரணாக₃தி என்றும் பெயர்பெற்ற அது ஸ்ரீமந்நாராயணனுக்குரியதாகையாலே அனைவர்க்கும் நன்மைபயப்பதாகவும், எல்லாப்பயனையும் அளிப்பதாகவும் இருக்கிறது." என்று ஶாஸ்த்ரவசனங்களைக்கொண்டு த்₃வயமந்த்ரத்தைப் புகழ்ந்து, உபதே₃ஶித்து, திருக்குறுங்குடிநம்பிக்கு 'வைஷ்ணவநம்பி' என்னும் தா₃ஸ்ய நாமத்தையும் அளித்தார். ஜக₃த்பதியான திருக்குறுங்குடி நம்பியும் "நான் ராமாநுஜாசார்யரின் ஶிஷ்யன் என்பதை உலகினர் அனைவரும் கேட்பீராக" என்று அப்போதே அருளினன். அன்றுமுதல் 'ராமாநுஜநம்பி' என்னும்

५५. केनोपायेन ते सर्वे त्वया वै स्ववशीकृताः।
मन्नाथ! मह्यं सहसा तमुपायं वदाधुना॥

५६. कुरङ्गनगरीशस्य तद्वचः प्रतिगृह्य सः।
तं दृष्ट्वा लक्ष्मणाचार्यः चक्रे विज्ञापनं तदा॥

५७. तद्वक्ष्याम्यधुनैवाशु क्रमेण यदि पृच्छसि।
निशम्य तद्वचस्तस्य सत्यं मत्वा जगत्पतिः॥

५८. कुरङ्गनगरीपूर्णो यतीन्द्राय महात्मने।
दत्वा सिंहासनं दिव्यं कुशास्तरणशोभितम्॥

५९. तुङ्गसिंहासनात् दिव्यादवतीर्णोऽथ भूतले।
जगत्पतिर्हरिः श्रीमान् तस्थौ भक्तिसमन्वितः॥

---

எம்பெருமானாரே! அத்தகையவர்கள் அனைவரும் உம்மால் எவ்வழியாலே தம் வஶப்படுத்தப்பட்டார்கள்? அந்த உபாயத்தை இப்போதே எனக்கு விரைவில் சொல்லுவீர்." என்னும் திருக்குறுங்குடி நம்பியின் அவ் வார்த்தையைக் கேட்டு, ஸ்ரீராமாநுஜர் "தேவரீர் கேட்க வேண்டிய முறையில் கேட்டால் அதை இப்போதே விரை வில் கூறுகிறேன்" என்று விண்ணப்பித்தார். அவ்வார்த் தையைக் கேட்டு, ஶ்ரிய:பதியாய், லோகநாதனை திருக் குறுங்குடிநம்பி அதை உண்மையாகவே நம்பி, மஹாத்மா வான யதிராஜருக்கு தர்ப்பை, விரிப்பு ஆகியவற்றால் அலங்கரிக்கப்பெற்ற திவ்யஸிம்ஹாஸனத்தை அளித்து, தன்னுடைய உயர்ந்த திவ்யஸிம்ஹாஸனத்திலிருந்து தரையில் இறங்கி, பக்தியோடு ஶிஷ்யனாய் நின்றான். யதி ராஜரும் தமக்கு அளிக்கப்பெற்ற ஸிம்ஹாஸனத்தில் தமது ஆசார்யரான பெரியநம்பி எழுந்தருளியிருப்பதாக பாவித் துக்கொண்டு, தரையிலிருக்கும் திருக்குறுங்குடிநம்பியின்

३. प्रापयिष्यामि वैकुण्ठं नात्र कार्या विचारणा।
एवं कृतप्रतिज्ञोऽथ कुरुकानगरे भुवि ॥

४. शठकोप इति ख्यातो जज्ञे कारिसुतो महान्।
जातमात्रस्तु संवीक्ष्य लोकं कल्यात्मकं दृढम् ॥

५. अतिभीतो निमील्याशु नेत्रे दृढतरं तदा।
आषोडशाब्दं संलीनः तिन्त्रिणीकोटरेऽचलः ॥

६. केनाप्यज्ञातवृत्तान्तः स तस्थौ लज्जया भृशम्।
तदोवाच शठारातिः लज्जयाऽवाङ्मुखो भृशम् ॥

७. ईश्वरेणाप्यसाध्यं यत्कार्यं कर्तुमहं कथम्।
समर्थोऽस्मि वृथा पूर्वं प्रतिज्ञा तत्कृता मया ॥

८. चतुष्टयसहस्रान्ते वत्सराणां कलौ युगे।
शेषो रामानुजो भूत्वा भूम्यामवतरिष्यति ॥

---

காக்க இயலாதவராய், 'இவர்களை எப்படி உய்விப்பது' என்று ஆலோசித்துக்கொண்டிருக்கும் ஸ்ரீமந்நாராயணனைப் பார்த்துச்சிரித்துக்கொண்டே "பூ₄மியில் அடியேன் அவதரித்து இந்த ஜனங்களைத் தவருமல் வைகுண்ட₂த்திற்கு வரும்படி செய்கிறேன். ஐயமுறவேண்டா" என்னும் வார்த்தையைக் கூறினர். இவ்வண்ணமாக ப்ரதிஜ்ஞை செய்து, காரியாருக்குப் பிள்ளையான ஶட₂கோபர் என்னும் மஹாத்மாவாக ஸேனைமுதலியார் இவ்வுலகில் திருக்குருகூரில் அவதரித்தார். பிறந்தவுடன் அவர் உறுதியாகக் கலியால் ஆக்ரமிக்கப்பட்ட இவ்வுலகைப் பார்த்துப் பெரும் ப₄யம் கொண்டவராய், தம் திருக்கண்களை அப்போதே மிக உறுதியாக மூடிக்கொண்டு, பதினறு வயது வரையில் புளியம்பொந்தில் அசையாமல் வீற்றிருந்து, ஒருவராலும் அறியப் படாதவராய், மிகவும் லஜ்ஜையுடன் எழுந்தருளியிருந்தார். அதற்குப்பின் முக்காலமும் உணர்ந்த

९. तत्सम्बन्धेन मनुजाः निरस्ताखिलकल्मषाः।
गमिष्यन्ति हरेर्लोकं पुनरावृत्तिवर्जितम्॥

१०. ततः सञ्चिन्त्य भगवान् त्रिकालज्ञो महामुनिः।
सम्यक् कृतिमुखेनैतान् रहस्यान् व्याजहार तान्॥

११. पापानि विनशिष्यन्ति नरकान्यखिलानि च।
निर्व्यापारो यमश्चैव कलिर्नष्टो भविष्यति॥

१२. समुद्रावरणायां तु भूम्यामवतरिष्यति।
एतदाश्चर्यमतुलं जनाः पश्यत पश्यत॥

---

மஹாமுனிவரான நம்மாழ்வார் வெட்கத்தாலே தலையைக் கவிழ்த்துக்கொண்டு "ஸர்வஶக்தனான ஈஶ்வரனாலும் முடியாத காரியத்தை நான் எப்படிச்செய்யமுடியும்? நான் முன்செய்த ப்ரதிஜ்ஞை வீணானதேயன்றோ. கலியுக₃த்தில் நாலாயிரம் வருடங்களுக்குப் பின் ஆதி₃ஶேஷன் 'ராமாநுஜர்' என்னும் திருநாமத்துடன் இந் நிலவுலகில் அவதரிக்கப் போகிறார். அவருடைய ஸம்ப₃ந்த₄த்தினாலே மனிதர்கள் எல்லாப்பாபங்களும் நீங்கப்பெற்றவர்களாய், ஸம்ஸாரமண்ட₃லத்திற்குத் திரும்பி வருதலில்லாத விஷ்ணுவின் பரமபத₃த்தை அடைவார்கள்" என்று நினைத்து, **"பொலிக பொலிக பொலிக போயிற்று வல்லுயிர்ச் சாபம், நலியும் நரகமும் நைந்த நமனுக்கிங்கு யாதொன்றுமில்லை கலியும் கெடும் கண்டுகொண்மின்"** [ திருவாய் 5-2-1 ] என்று தொடங்கும் திருவாய்மொழிப் பாசுரத்தில் "கடல் சூழ்ந்த இந்நிலவுலகில் ஒரு மஹாபுருஷர் அவதரிக்கப் போகிறார். அவர் அவதரித்தவுடன் பாபங்களெல்லாம் தொலையப்போகின்றன. நரகங்களனைத்தும் நலியப் போகின்றன. யமன் வேலையற்றவனாகப் போகிறான். கலியுகமும் கெட்டழியப்போகிறது. ஜனங்களே! ஒப்பற்ற இந்த ஆச்சரியத்தைக் காணுங்கள்; காணுங்கள்"

१३. लक्ष्मणार्यावतारस्य सूचकार्थान् मुहुःस्थले ।
प्रदर्शयित्वा विशदं तस्मिन् काले परं पदम् ॥

१४. स जगाम शठारातिः तिन्त्रिणीकोटरे महान् ।
वीरनारायणपुरे पुरा नाथमुनिर्महान् ॥

१५. तटाकतीरे स्थित्वेत्थं व्याजहार वचः शुभम् ।
अस्मात्तटाकादम्भांसि निर्गत्य श्रममार्गतः ॥

१६. संप्लावयन्ति सस्यानि यथा सर्वाणि भूतले ।
श्रियःपत्यब्धिनिष्पन्दवेदार्थाम्भांसि वै ध्रुवम् ॥

१७. प्रवेशं संगमिष्यन्तो मन्नाथसुमहाह्रदे ।
निर्गत्य तस्मादाचार्यश्रममार्गेण भूरिशः ॥

---

என்று ஸ்ரீராமாநுஜர் இங்கிலவுலகில் அவதரிக்கப்போகும் ரஹஸ்யார்த்தத்தைத் தெளிவாகக் காட்டி, திருவாய்மொழியை நிறைவுசெய்தபின்பு, புளியம்பொந்திலேயே பரமபதமடைந்தார்.

## 8. நாதமுனிகள் வெளியிட்ட வைபவம்

14*-*24. வீரநாராயணபுரத்தில் மஹாத்மாவான நாதமுனி முன்பொரு சமயம் வீரநாராயணபுரத்து ஏரிக்கரையிலே இருந்து பின்வரும் மங்களமான வார்த்தையை அருளினர்—“இந்த ஏரியிலிருந்து மதகுகள் மூலமாக நீர் வெளியே நாட்டிலுள்ள பயிர்களனைத்துக்கும் எப்படிப் பாய்ந்து அவற்றைத் தழைக்கச்செய்கின்றதோ, அவ்வண்ணமே *ஸ்ரீய:*பதியாகிற கடலில் தேங்கியுள்ள வேதார்த்தங்களாகிற நீர் எம்பெருமானாராகிற பெரிய ஏரியைச்சென்று அடைந்ததாய், அவருக்கு *ஶி*ஷ்யர்களான ஆசார்யர்களாகிற மதகுகள் மூலமாக ஏராளமான உயிர்களாகிற பயிர்களில் பாய்ந்து, அவற்றைத் தழைக்கச்

१८. तथैव प्राणिसस्यानि प्लावयिष्यन्ति निश्चितम् ।
एतद्रामानुजाचार्ये सुस्पष्टं द्योतते ततः ॥

१९. अवतारं समुद्दिश्य लक्ष्मणार्यस्य निश्चितम् ।
तेनेदं भाषितं सर्वं त्रिकालज्ञेन योगिना ॥

२०. अपि रामानुजाचार्यो नाथयोगिहृदिस्थितम् ।
तमर्थं विशदं चक्रे ततः कालान्तरे महान् ॥

२१. श्रियःपतिमहाम्भोधौ शठजित्कालतोयदः ।
संप्राप्ताखिलवेदार्थतोयानि सुबहून्यलम् ॥

२२. अवर्षन्नाथशैलेन्द्रे यामुनार्यापगामुखात् ।
महद्रामानुजाचार्यतटाकं प्राप्य सुस्थिरम् ॥

---

செய்யப் போகின்றது என்பது உறுதி. இந்தப்பெருமை ராமாநுஜாசார்யரிடம் மிகத்தெளிவாக விளங்குகிறது. அதனாலேயே முக்காலமும் உணர்ந்த முனிவரான நம்மாழ்வார் 'பொலிக பொலிக' என்று தொடங்கும் பாசுரத்தில் ஸ்ரீராமாநுஜருடைய அவதாரத்தைக் குறித்தே இவற்றையெல்லாம் அருளியிருக்கிறார்"(என்னும் வார்த்தை நாத₂முனிகள் ஏரிக்கரையில் அருளியது.) மஹாத்மாவான ராமாநுஜாசார்யரும் பல வருடங்கள் கழிந்த பின்பு, நாத₂முனிகளின் திருவுள்ளத்திலிருந்த அந்த அர்த்த₂த்தை—வீரநாராயணபுரத்து ஏரியின் எழுபத்துநாலு மதகுகள்போன்ற எழுபத்துநாலு ஸிம்ஹாஸனாதி₄பதிகளை நியமிப்பதாகிற தம் செயலின்மூலம் தெளிவுபடுத்தினார். ஸ்ரீமந்நாராயணனாகிற பெரியகடலில் நம்மாழ்வாராகிற காளமேக₄ம் உட்புக்கு, பல வகைப்பட்ட வேதா₃ர்த்த₂ங்களாகிற நீரை முகந்துகொண்டு எழுந்து, நாத₂முனிகளாகிற ஸஹ்யமலையிலே ஆரப்பொழிந்தது. அந்த நீர்(உய்யக்கொண்டார்,மணக்கால் நம்பிகளாகிற அருவிகள் மூலம்) யாமுனாசார்யராகிற திருக்காவிரியை

२३. चतुस्सप्ततिशिष्यार्यक्रममार्गेण भूरिणा ।
निर्गत्य प्राणिसस्यानि प्लावयन्त्यधुनाप्यहो ॥

२४. तानि वेदार्थतोयानि ह्याचन्द्रार्कं महीतले ।
वैभवं लक्ष्मणार्यस्य श्रुत्वा यामुनदेशिकः ॥
वारणाद्रि समासाद्य तं दृष्ट्वोवाच तत्त्ववित् ॥

२५. अयं महात्मा यदि सुन्दरार्यो
रामानुजो विष्णुमते प्रविष्टः ।
एते महाभागवता जनौघाः
उर्व्यां भविष्यन्ति न संशयोऽत्र ॥

---

அடைந்து, (அவரது ஶிஷ்யர்களாகிற கால்வாய்கள் மூலம்) மஹாத்மாவாகிற ராமானுஜாசார்யர் என்னும் உறுதியான தடாகத்தை (ஏரியை) அடைந்து, 74 ஸிம்ஹாஸநாதிபதிகளாகிற மதகுகள் மூலம் பெருவாரியாக வெளிவந்து, இன்றளவும் உயிர்களாகிற பயிர்களில் பாய்ந்து அவற்றைத் தழைக்கச் செய்கின்றது. இந்நிலவுலகில் ஸூர்ய சந்த்ரர்கள் உள்ளவரையில் அந்த வேதார்த்தங்களாகிற நீர் உயிர்களாகிற பயிர்களைத் தழைக்கச் செய்துகொண்டேயிருக்கும்.

## 9. ஆளவந்தார் வெளியிட்ட வைபவம்

24*-25. மேலேகாட்டிய ஸ்ரீராமானுஜருடைய வைபவத்தைத் தம் ஆசார்யரிடமிருந்து கேள்விப்பட்ட ஆளவந்தாராகிற தத்வதர்ஶி அத்திகிரியை அடைந்து, (யாதவப்ரகாஶனின் ஶிஷ்யரான) ராமானுஜரைக் கடாக்ஷித்து, "வடிவழகையுடைய மஹாத்மாவான இந்த ராமானுஜர் வைஷ்ணவமதத்தை ஏற்றுக்கொண்டவரானால், இவ்வுலகிலுள்ள ஜனங்களனைவரும் பரமபாகவதர்களாவார்கள் என்பதில் ஐயமில்லை" என்று அருளிச்செய்தார்.

२६. कदाचिल्लक्ष्मणाचार्यः शिष्यसङ्घसमावृतः।
पूर्णाचार्यगृहं प्राप पूर्णाचार्यदिदृक्षया॥

२७. तं दृष्ट्वा सहसोत्थाय पूर्णार्यो भक्तिसंयुतः।
चकार लक्ष्मणार्याय सम्यक् साष्टाङ्गवन्दनम्॥

२८. महापूर्णात्मजा साध्वी तं दृष्ट्वा जातविस्मया।
पितरं प्राह निपुणा सर्वेषां शृण्वतां तदा॥

२९. शिष्याय लक्ष्मणार्याय गुरुणा यत्त्वया कृतम्।
साष्टाङ्गवन्दनं तात! वदैतत्कारणं मम॥

३०. दुहितुर्वचनं तस्याः श्रुत्वोवाचाखिलार्थवित्।
तुल्यो वा ह्यधिको वापि यतिराजान्महात्मनः॥

---

## 10. பெரியநம்பி வெளியிட்ட வைபவம்

26-*41. ஒரு சமயம் ஶிஷ்யர்களோடு கூடிய ஸ்ரீராமாநுஜர் பெரியநம்பியை ஸேவிப்பதற்காக அவருடைய திருமாளிகைக்கு எழுந்தருளினார். அவரைக் கண்டு பெரியநம்பி உடனே எழுந்திருந்து, ப₄க்தியோடு கூடியவராய், ஸ்ரீராமாநுஜருக்கு ஸாஷ்டாங்க₃ நமஸ்காரத்தை முறைப்படி செய்தருளினார். அதிஸமர்த்தை₂யாய், பரமஸாத்விகையாய், பெரியநம்பி திருக்குமாரியான அத்துழாய் இப்படி அவர் செய்ததைக் கண்டு வியப்புற்று, அப்போதே அனைவரும் கேட்கும்படியாக "தந்தையே! ஆசார்யரான உம்மால் ஶிஷ்யரான ஸ்ரீராமாநுஜருக்குச் செய்யப்பெற்ற ஸாஷ்டாங்க₃வந்த₃னத்தின் காரணத்தை எனக்குக் கூறுவீர்" என்று கேட்டாள். தமது பெண்ணின் அவ்வார்த்தையைக்கேட்டு எல்லா அர்த்த₂ங்களையும் அறிந்தவரான பெரியநம்பி, "மஹாத்மாவான யதிராஜருக்கு ஸமானமானவரோ, மேலானவரோ எங்கும் எவரும் என்னால் காணப்படவில்லை.

३१. न क्वचिद्दृश्यते कश्चिदेतस्मै वन्दनं कृतम्।
ततः कदाचिदायान्तं वीथ्यां लक्ष्मणदेशिकम्॥

३२. शिष्यसङ्घसमायुक्तं तं वीक्ष्य कृतमज्जनम्।
जवादुत्थाय पूर्णार्यः चक्रे साष्टाङ्गवन्दनम्॥

३३. यतिराजोऽञ्जलिं चक्रे स तस्मै गुरवे तदा।
तं दृष्ट्वा वैष्णवास्सर्वे यतिराजमथाब्रुवन्॥

३४. साष्टाङ्गवन्दनं तुभ्यं गुरुणा यत्कृतं पथि।
तदप्यङ्गीकृतं सम्यक् तत्र को हेतुरुच्यताम्॥

३५. तेषां तद्वचनं श्रुत्वा प्रोवाचैतान् यतीश्वरः।
गुरुणोक्तप्रकारेण वर्तनं शिष्यलक्षणम्॥

---

அதனாலேயே நான் அவரை வணங்கினேன்" என்று அருளினார். அதற்குப்பின் ஒரு சமயம் ஶிஷ்யர்களோடு கூட நீராடி, வீதியில் எழுந்தருளும் ஸ்ரீராமானுஜரைக் கண்டு பெரியநம்பி விரைவில் எழுந்திருந்து ஸாஷ்டாங்க₃மாக வணங்கினார். அப்போது ஆசார்யரான அவரைக் குறித்து யதிராஜர் அஞ்ஜலி செய்தார். அப்போது இப்படிச் செய்த அவரைக்கண்டு வைஷ்ணவர்களனைவரும் "உம்மைக் குறித்து வீதியில் உமது ஆசார்யர் ஸாஷ்டாங்க₃ நமஸ்காரம் செய்தபோது நீர் அஞ்ஜலி செய்து அங்கீகரித்ததற்குக் காரணத்தைச் சொல்ல வேண்டும்" என்று யதிராஜரிடம் கேட்டனர். அவர்களுடைய அவ்வார்த்தையைக் கேட்டு, யதிராஜர் அவர்களைப் பார்த்து "ஆசார்யர் திருவுள்ளத்தின்படி நடப்பது ஶிஷ்யனின் லக்ஷணமாகும். ஆகையால் அவர் திருவுள்ளம் உகக்கும்படி நான் நடக்கிறேனேயொழிய வேறில்லை" என்று உரைத்தார். இதனாலும் பெரியநம்பி ஸ்ரீராமானுஜரை ஏன் வணங்கினார்? என்னும் ஐயம் தீரப்பெறாமல் அவ்வைஷ்ணவர்கள் ஆசார்யரான பெரியநம்பியைப்

३६. अतस्तेनोक्तमार्गेण वर्तेऽहं वै न चान्यथा।
तमूचुस्ते महापूर्णं देशिकं तेन शङ्किताः॥

३७. शिष्याय यतिराजाय तव साष्टाङ्गवन्दनम्।
त्वया कृतं देशिकेन ब्रूहि तत्कारणं च नः॥

३८. तेषां तद्वाक्यमाकर्ण्य महापूर्णोऽभ्यभाषत।
यामुनार्य इवाभाति तदा तेन यतीश्वरः॥

३९. प्रणामं कृतवांस्तस्मै यतीन्द्राय महात्मने।
अस्मद्गुरोर्यामुनार्यात्पश्चादाचार्यसम्पदः॥

४०. अस्मिन्नेव च दृश्यन्ते सर्वशास्त्रार्थसम्पदः।
अतो विशेषराहित्यात्सतोश्च गुरुशिष्ययोः॥

४१. प्रणामं कृतवानस्मि शिष्यायास्मै महात्मने।
मन्त्रप्रदानसमये गोष्ठीपूर्णो दृढव्रतः॥

---

பார்த்து "ஶிஷ்யரான யதிராஜரைக் குறித்து ஆசார்ய ரான உம்மால் ஸாஷ்டாங்க₃ நமஸ்காரம் செய்யப்பெற்றது. அதற்குக் காரணத்தை எங்களுக்குக் கூறுவீர்" என்று கேட்டனர். அவர்களுடைய அவ்வார்த்தையைக் கேட்டு, பெரியநம்பி "அப்போது ஶிஷ்ய ஸமூஹத்தோடு எழுந் தருளும் யதிராஜர் எனக்கு யாமுநாசார்யரைப் போலே காட்சியளித்தார். அதனால் மஹாத்மாவான யதிராஜருக்கு நான் வணக்கம் செலுத்தினேன். எனது ஆசார்யரான யாமுநாசார்யருக்குப் பின் ஆசார்ய லக்ஷண பூர்த்தியும், எல்லா ஶாஸ்த்ரார்த்த₂ச் செல்வங்களும் இவரிடமே நிறைந்து காணப்படுகின்றன. ஆகையால் மஹாத்மா வான ஆசார்யருக்கும் ஶிஷ்யருக்கும் வாசியில்லாமை யால் மஹாபுருஷரான இந்த ஶிஷ்யரை வணங்கினேன்" என்று கூறினார்.

४२. प्रोक्तव्योऽयं त्वया मन्त्रो न च कस्मै कदाचन।
इत्येवं शपथान् तेन कारयित्वा बहूंस्तदा॥

४३. ततो मन्त्रं यतीन्द्राय शिष्याय प्रददौ रहः।
ततो यतीन्द्रस्तं मन्त्रं भूरिदानं हठात् व्यधात्॥

४४. तत्रागतेभ्यस्सर्वेभ्यो वैष्णवेभ्यश्च सादरम्।
गोष्ठीपूर्णोऽथ तच्छ्रुत्वा वृत्तान्तं यतिभूपतेः॥

४५. कुपितो लक्ष्मणाचार्यमिदं वचनमब्रवीत्।
किं फलं भवतो ब्रह्मन् गुरुद्रोहकृतेश्च ते॥

४६. तदङ्गीकृत्य योगीन्द्रो गोष्ठीपूर्णमुवाच सः।
गुरुद्रोहकृतेश्चास्याः फलं नरकमेव मे॥

## 11. திருக்கோஷ்டியூர்நம்பி வெளியிட்ட வைபவம்

41*-55. உறுதியான ஸங்கல்பத்தையுடைய திருக்கோஷ்டியூர் நம்பி ஸ்ரீராமாநுஜருக்குத் திருமந்த்ரத்தை உபதே₃ஶிக்கும்போது, “இந்த மந்த்ரத்தை நீர் ஒரு போதும் எவருக்கும் உபதே₃ஶிக்கக் கூடாது” என்று பலவாறு ஶபத₂ம் வாங்கிக்கொண்டு ஶிஷ்யரான யதிராஜருக்கு ரஹஸ்யத்தில் மந்த்ரத்தை உபதே₃ஶித்தார். அப்போது யதிராஜர் அங்கு ஆசையுடன் வந்த எல்லா வைஷ்ணவர்களுக்கும் பிடிவாதமாய், பூ₄ரித₃ானமாக அதை உபதே₃ஶித்துவிட்டார். திருக்கோஷ்டியூர்நம்பி யதிராஜர் செய்த அக்காரியத்தைக் கேள்விப்பட்டு, கோபங்கொண்டவராய் ஸ்ரீராமாநுஜரைப் பார்த்து “அந்தணரே! நீர் செய்த இந்த கு₃ருத்₃ரோஹச் செயலுக்கு என்ன ப₂லன் தெரியுமா?” என்று கேட்டார். அந்தக் கேள்வியை ஏற்றுக்கொண்ட யதிராஜர் திருக்கோஷ்டியூர் நம்பியைப் பார்த்து “இந்த கு₃ருத்₃ரோஹச் செயலுக்குப் ப₂லன் எனக்கு நரகமேயாகும்” என்று பதிலுரைத்தார். திருக்கோஷ்டியூர்நம்பி அதைக்கேட்டு யதிராஜரைப்

४७. तन्निशम्य पुनः प्राह गोष्ठीपूर्णो यतीश्वरम्।
एवं ज्ञात्वापि योगीन्द्र! कृतवान् कार्यमीदृशम् ॥

४८. स तद्वचनमाकर्ण्य यतीन्द्रः प्राह तं प्रति।
पतिष्ये एक एवाहं नरके भृशदारुणे ॥

४९. गच्छन्तु कृपया तेऽद्य जनास्सर्वे परं पदम्।
निशम्य यतिराजस्य वाक्यमद्भुतवत्तरम् ॥

५०. स एवं चिन्तयामास ममायं नोत्थितो गुणः।
अमानवं तदा मत्वा लक्ष्मणार्यं जगद्गुरुम् ॥

५१. इहावतीर्णं वैकुण्ठात् जगद्रक्षणहेतुना।
स्वानिष्टं परवृद्धिं च को वा लोके करिष्यति ॥

५२. स रङ्गनायकोऽस्माकं त्वमेवाद्य यतीश्वर!।
इत्युक्त्वा लक्ष्मणाचार्यं गोष्ठीपूर्णः प्रहृष्टधीः ॥

---

பார்த்து மறுபடியும் "யதிராஜரே! இப்படி அறிந்திருந்தும் ஏன் இச்செயலைச் செய்தீர்?" என்று கேட்டார். யதிராஜரும் இவ்வார்த்தையைக் கேட்டு, நம்பியைப் பார்த்து "அடியேன் ஒருவனே மிகக்கொடிய நரகத்தில் வீழ்வேன்; உம்முடைய கருணையாலே இத்திருமந்த்ரார்த்த₂த்தைக் கேட்ட அனைவரும் பரமபத₃ம் செல்லட்டும்" என்று கூறினார். யதிராஜருடைய அத்யாஶ்சர்யமான அந்த வாக்யத்தைக் கேட்டு, திருக்கோஷ்டியூர் நம்பி 'எனக்கு இந்தக் கருணைகு₃ணம் விளையவில்லையே" என்று சிந்திக்கலுற்றார். ஸ்ரீராமாநுஜரை அதிமாநுஷராகவும், லோகாசார்யராகவும், உலகை ரக்ஷிப்பதற்காக வைகுண்ட₂த்திலிருந்து இங்கு அவதரித்தவராகவும் எண்ணி "தனக்குத் துன்பத்தையும், பிறர்க்கு நன்மையையும் இவ்வுலகில் எவன் செய்வான்? யதிராஜரே! நீரே எமக்கு ஸ்ரீரங்க₃நாத₂ராகிற பெருமான் ஆவீர்" என்று கூறி,

५३. मन्नाथ इति हर्षेण तं तदा परिषस्वजे।
तत्र स्थितान् स पूर्णार्यो वैष्णवानिदमब्रवीत्॥

५४. अयं वैष्णवसिद्धान्तो युष्माभिस्त्वद्य वैष्णवाः।
रामानुजार्यसिद्धान्त इति सर्वत्र कीर्त्यताम्॥

५५. ततः स्वपुत्रं पूर्णार्यः सौम्यनारायणाभिधम्।
शिष्यं कृत्वा यतीन्द्राय कृतकृत्यो मुदं ययौ॥

५६. सहस्रगीतेर्व्याख्यानं मालाधरगुरूत्तमात्।
शृण्वन् यतीन्द्रः श्रीरङ्गे तस्थौ तत्र महायशाः॥

५७. गाथायास्तत्र कस्याश्चिदर्थं श्रुत्वा गुरूत्तमात्।
तस्या एव च गाथायाः प्रोवाचार्थं तदापरम्॥

---

பேரானந்தம் கொண்டவராய், ஸ்ரீராமானுஜரை அப்போதே 'எம்பெருமானரே' என்று உகப்புடன் எடுத்தணைத்துக் கொண்டார். அங்கிருந்த ஸ்ரீவைஷ்ணவர்களைப் பார்த்து அந்த நம்பி "ஸ்ரீவைஷ்ணவர்களே! இன்று முதல் இந்த வைஷ்ணவ ஸித்₃த₄ாந்தமானது 'ஸ்ரீராமானுஜார்ய ஸித்₃த₄ாந்தம்' (எம்பெருமானர் தரிசனம்) என்றே எங்கும் முழங்கப்படவேண்டும்" என்று அருளினர். அதற்குப் பின் திருக்கோஷ்டியூர்நம்பி ஸௌம்யநாராயணன் (தெற்காழ்வான்) என்னும் பெயருடைய தமது பிள்ளையை யதிராஜருடைய ஶிஷ்யராகச்செய்து, செய்யவேண்டிய காரியத்தைச் செய்தவராய், ஆனந்த₃மடைந்தார்.

## 12. திருமாலையாண்டான் வெளியிட்ட வைபவம்

56-70. பெரும்புகழாளரான யதிராஜர் திருமாலையாண்டான் என்னும் ஆசார்யஶ்ரேஷ்ட₂ரிடமிருந்து ஸ்ரீரங்க₃த்தில் திருவாய்மொழிக்கு அர்த்த₂ம் கேட்டுக் கொண்டிருந்தார். அப்போது, '**அறியாக் காலத்துள்**' [திருவாய் 2-3-3] என்று தொடங்கும் திருவாய்மொழிக்கு

௪௭. तन्निशम्य पुनः प्राह गोष्ठीपूर्णो यतीश्वरम्।
एवं ज्ञात्वापि योगीन्द्र! कृतवान् कार्यमीदृशम्॥

௪௮. स तद्वचनमाकर्ण्य यतीन्द्रः प्राह तं प्रति।
पतिष्ये एक एवाहं नरके भृशदारुणे॥

௪௯. गच्छन्तु कृपया तेऽद्य जनास्सर्वे परं पदम्।
निशम्य यतिराजस्य वाक्यमद्भुतवत्तरम्॥

௫௦. स एवं चिन्तयामास ममायं नोत्थितो गुणः।
अमानवं तदा मत्वा लक्ष्मणार्यं जगद्गुरुम्॥

௫௧. इहावतीर्णं वैकुण्ठात् जगद्रक्षणहेतुना।
स्वानिष्टं परवृद्धिं च को वा लोके करिष्यति॥

௫௨. स रङ्गनायकोऽस्माकं त्वमेवाद्य यतीश्वर!।
इत्युक्त्वा लक्ष्मणाचार्यं गोष्ठीपूर्णः प्रहृष्टधीः॥

---

பார்த்து மறுபடியும் "யதிராஜரே! இப்படி அறிந்திருந்தும் ஏன் இச்செயலைச் செய்தீர்?" என்று கேட்டார். யதிராஜரும் இவ்வார்த்தையைக் கேட்டு, நம்பியைப் பார்த்து "அடியேன் ஒருவனே மிகக்கொடிய நரகத்தில் வீழ்வேன்; உம்முடைய கருணையாலே இத்திருமந்த்ரார்த்தத்தைக் கேட்ட அனைவரும் பரமபதம் செல்லட்டும்" என்று கூறினர். யதிராஜருடைய அத்யாஶ்சர்யமான அந்த வாக்யத்தைக் கேட்டு, திருக்கோஷ்டியூர் நம்பி 'எனக்கு இந்தக் கருணாகுணம் விளையவில்லையே" என்று சிந்திக்கலுற்றார். ஸ்ரீராமாநுஜரை அதிமாநுஷராகவும், லோகாசார்யராகவும், உலகை ரக்ஷிப்பதற்காக வைகுண்டத்திலிருந்து இங்கு அவதரித்தவராகவும் எண்ணி "தனக்குத் துன்பத்தையும், பிறர்க்கு நன்மையையும் இவ்வுலகில் எவன் செய்வான்? யதிராஜரே! நீரே எமக்கு ஸ்ரீரங்கநாதனாகிற பெருமான் ஆவீர்" என்று கூறி,

६३. गाथायाश्च ततस्तस्यास्ताभ्यामर्थं समीरितम् ।
श्रुत्वा मालाधरं प्राह गोष्ठीपूर्णो महामतिः ॥

६४. रामानुजोक्तमार्गेण ह्यर्थं यामुनदेशिकः ।
प्रोक्तवान् तत्र समये तस्यास्त्वं तु बहिर्गतः ॥

६५. ततो मालाधरः प्रीतो यतीन्द्राय महात्मने ।
सहस्रगीतेर्व्याख्यानं वदंस्तस्थौ यथापुरा ॥

६६. कस्मिंश्चिदर्थप्रस्तावे लक्ष्मणार्योऽब्रवीद्गुरुम् ।
अत्रैवं यामुनार्यस्तु न वाक्यार्थं गुरो स्थले ॥

६७. ततो मालाधरः प்राह यतिराजं सविस्मयः ।
कदाचिद्यामुनाचार्यं चक्षुर्भ्यामप्यपश्यता ॥

---

வதையும் உபதேஶம் பெற்றுள்ளே அப்படியே ஸ்ரீராமாநு ஜாசார்யரும் உம்மிடமிருந்து திருவாய்மொழியின் அர்த்தங் களைப் பெறுகிறார்" என்று கூறினார். அதற்குப்பின் முற்கூறிய திருவாய்மொழிக்குத் திருமாலையாண்டானும், ஸ்ரீராமாநுஜரும் கூறிய அர்த்தத்தை ஆண்டான் கூறக் கேட்டு, பேரறிவாளரான திருக்கோஷ்டியூர்நம்பி ஆண்டானைப் பார்த்து "யாமுநாசார்யர் இந்தப் பாசுரத்திற்கு ராமாநுஜர் சொன்ன அர்த்தத்தையே அருளினார். அந்த சமயத்தில் நீர் வெளியில் சென்றுவிட்டீர்" என்று உரைத்தார். இதைக் கேட்ட திருமாலையாண்டான் மிக வுகந்தவராய் மஹாத்மாவான யதிராஜருக்கு முன்போலவே அர்த்தம் சொல்லி வந்தார். மறுபடியும் ஓர் அர்த்தத்தைச் சொல்லி வரும்போது ஓரிடத்தில் "ஆசார்யரே! இவ்விடத் தில் யாமுநாசார்யர் இப்படிப் பொருளுரைத்திருக்கமாட் டார்"என்று ஆண்டானிடம் ஸ்ரீராமாநுஜர்கூறினர். அதைக் கேட்டு மிகவும் வியப்புற்ற திருமாலையாண்டான் யதிராஜ ரைப் பார்த்து "ஒருபோதும் யாமுநாசார்யரைக் கண்ணா லும் காணாத நீர் இப்படிச் சொல்லுவதற்குக் காரணம என்ன என்பதை இப்போதே சொல்லும்" எனக் கேட்டார்.

६८. भवतैवंविधं वक्तुं को हेतुस्तत्वं वदाधुना।
यतीन्द्रस्तद्वचः श्रुत्वा मालाधरमथाऽब्रवीत्॥

६९. यामुनार्यस्य मां शिष्यमेकलव्यं विभावय।
ततो मालाधरगुरुर्यतिराजं सविस्मयः॥

७०. अवतारविशेषं हि मत्वा विष्णोर्जगत्पतेः।
पुत्रं सुन्दरबाह्वाख्यं तस्य शिष्यमथाकरोत्॥

७१. चरमोपायतत्त्वार्थं ज्ञातुकामो यतीश्वरः।
वररङ्गाय शुश्रूषां षण्मासानकरोत्तदा॥

७२. सन्निधौ रङ्गराजस्य कृतनृत्याय धीमते।
हरिद्राचूर्णतोयाद्यैश्शरीरोद्वर्तनादिकम्॥

---

யதிராஜரும் அவ்வார்த்தையைக் கேட்டு, திருமாலையாண்டானைப் பார்த்து "யாமுநாசார்யருக்கு அடியேன் ஏகலவ்யன் போன்ற ஶிஷ்யன் என்று அறிவீர்" என்று உரைத்தார். அதற்குப்பின் மிகவும் வியப்புற்ற திருமாலையாண்டான் ஸ்ரீராமாநுஜரை லோகநாத₂ஞன விஷ்ணுவின் அவதார விஶேஷமாகவே எண்ணி, தமது பிள்ளையான சுந்தரத்தோளுடையானை அவருக்கு ஶிஷ்யராக்கினார்.

## 13. திருவரங்கப் பெருமாளரையர் வெளியிட்ட வைபவம்

71-76, சரமோபாயத்தைப் பற்றிய உண்மைப் பொருளை அறிய விரும்பிய யதிராஜர் திருவரங்கப்பெருமாளரையருக்கு ஆறு மாதம் கைங்கர்யம் செய்தார். அப்போது ரங்கநாதனுடைய ஸந்நிதி₄யிலே அபி₄நயம் செய்த பேரறிவாளரான அவருக்கு மஞ்சட்காப்பு அரைத்துச் சாத்தி, பாங்காக நீராட்டி, திருமேனியைப் பிடித்து விடுதல் முதலான கைங்கர்யங்களையும் செய்தார். யாமுநா

७३. वररङ्गोऽथ तं दृष्ट्वा सन्तुष्टो यतिभूमिपम्।
अवोचत्प्रहसन्वाक्यं यामुनाचार्यनन्दनः॥

७४. गृहीतुं मम सर्वस्वं त्वमित्थं कृतवानसि।
तुभ्यं हि चरमोपायं शृणु वक्ष्यामि साम्प्रतम्॥

७५. इत्युक्त्वा चरमोपायं यतीन्द्राय तदाऽब्रवीत्।
वररङ्गोऽनपत्यत्वात् यवीयांसं महौजसम्॥
सोद्रिपूर्णं यतीन्द्रस्य शिष्यं कृत्वा मुदं ययौ॥

७६. इत्येवमाद्यगुरवो विदिताखिलार्थाः
सर्वे यतीन्द्रमनघं भगवन्तमाद्यम्।
ज्ञात्वा गुरुं भुवनरक्षणबद्धदीक्षम्
तद्वैभवं स्फुटतरं विदधुः प्रकाशम्॥

इति श्रीप्रपन्नामृते रामानुजचरित्रे
पूर्वाचार्यप्रकाशितरामानुजवैभवप्रकाशवर्णनं नाम षष्टितमोऽध्यायः॥

---

சார்யரின் பிள்ளையான அத்திருவரங்கப்பெருமாளரை யர் யதிராஜரைக் கண்டு உகந்து சிரித்துக்கொண்டே "என்னிடமுள்ள (சரமோபாய ரஹஸ்யமாகிற) ஸர்வ ஸ்வத்தையும் (எல்லாச் சொத்தையும்) கொள்ளை கொள்ளு வதற்கோ நீர் இப்படிச் செய்தது? உமக்குச் சரமோ பாயத்தைக் கூறுகிறேன். இப்போதே கேட்பீராக" என்று கூறி, யதிராஜருக்குச் சரமோபாய ரஹஸ்யத்தை அப்போதே உபதே₃ஶித்தார். * தமக்குப் பிள்ளையில்லாமை யாலே மஹாதேஜஸ்வியான தம்பியான அத்₃ரிபூர்ணரை (மலைநம்பியை) ஶிஷ்யராக்கி ஆனந்தி₃த்தார். இவ்வண்ண மாக, எல்லா அர்த்த₂ங்களையும் அறிந்தவர்களான ஸ்ரீராமாநுஜரின் பூர்வாசார்யர்கள் அனைவரும் உலகத்தை

---

* ஆருயிரப்படி கு₃ருபரம்பராப்ரப₄ாவத்தில் குமாரர் திருவாய்மொழி அரையரை ஆஶ்ரயிப்பித்ததாக உள்ளது.

एकषष्टितमोऽध्यायः

१. काञ्च्यां श्रीवैष्णवकुले कश्चिन्मूको व्यजायत।
स बालः सुप्रसिद्धश्च कञ्चित्कालमवर्धत॥

२. बभूव मूकस्सर्वेषामदृश्यो वत्सरद्वयम्।
ततो भूयः स सर्वेषां दृश्यः काञ्चीनिवासिनाम्॥

३. प्रभाषमाणं तं दृष्ट्वा मूकं काञ्चीनिवासिनः।
विस्मितास्ते समागम्य वाक्यमेवमथाऽब्रुवन्॥

४. त्वमेतत्कालपर्यन्तं मूक! कुत्र गतो ह्यसि।
तेषां तद्वचनं श्रुत्वा स मूकः प्रत्यभाषत॥

---

ரக்ஷிப்பதில் உறுதி கொண்ட ஆதி₃புருஷனான எம்பெருமானாகவே யதிராஜரை அறிந்து அவருடைய வைப₄வத்தை மிகத் தெளிவாக வெளிப்படுத்தினார்கள்.

**ஸ்ரீப்ரபந்நாம்ருதத்தில் ஸ்ரீராமாநுஜ சரித்திரத்தில் பூர்வாசார்யர்கள் வெளியிட்ட ஸ்ரீராமாநுஜ வைப₄வத்தை வர்ணிப்பதாகிற அறுபதாம் அத்தியாயம் நிறைவுபெற்றது.**

## அறுபத்தோராம் அத்தியாயம்

## பின்புள்ளோர் வெளியிட்ட வைபவம்

### 14. ஊமை வெளியிட்ட வைபவம்

1-10. காஞ்சீபுரத்தில் ஸ்ரீவைஷ்ணவ குலத்தில் ஓர் ஊமை பிறந்திருந்தான். அவன் மிகவும் பிரஸித்₃தி₄ பெற்றவனாய், சில வருஷங்கள் சிறுவனாக வளர்ந்து வந்தான். நடுவில் இரண்டு வருஷங்கள் அந்த ஊமையை எவரும் காணவில்லை. அதற்குப் பின் அவன் காஞ்சீபுர வாஸிகளுக்குக் காட்சியளித்தான். பேச வல்லவனாய்த் திரும்பி வந்த அவனைக் கண்டு காஞ்சீவாஸிகள் மிக வியப்புற்றவர்களாய், எல்லோரும் கூடி "ஊமாய்! இவ்வளவு காலம் நீ எங்கு சென்றிருந்தாய்?" என்று

५. क्षीराब्धिं प्रति गत्वाहं शेषतल्पे जगत्पतिम् ।
श्रीहरिं तत्र संसेव्य भूयः काञ्चीं समागतः ॥

६. तस्य मूकस्य वचनं श्रुत्वा विस्मयकारणम् ।
तमूचुर्विस्मितास्सर्वे परिवार्य समन्ततः ॥

७. ब्रूहि नस्तत्र वृत्तान्तं वर्तमानं वदाऽधुना ।
तेषां तद्वचनं श्रुत्वा मूकः प्रोवाच तत्त्वतः ॥

८. जगत्संरक्षणार्थाय विष्वक्सेनो जगत्पतिः ।
जातो रामानुजो भूम्यां भूतपुर्यां बभूव सः ॥

९. अधुना प्रवदन्त्येनं क्षीरसागरवासिनः ।
इत्युक्त्वा स तदा मूकः तत्रैवान्तर्दधे ततः ॥

---

கேட்டனர். அவர்களுடைய அவ்வார்த்தையைக் கேட்டு "நான் திருப்பாற்கடலுக்குச் சென்று அங்கு லோக நாதனை ஸ்ரீஹரியைத் திருவனந்தாழ்வான் மேலே ஸேவித்து, மறுபடியும் காஞ்சிக்குத் திரும்பிவிட்டேன்" என்று அவன் பதில் சொன்னான். ஊமையாயிருந்த அவன் மிகவும் வியப்புக்குரிய இவ்வார்த்தையைச் சொல்லு வதைக் கேட்டு வியப்புற்ற அவர்களனைவரும் அவனைச் சூழ்ந்துகொண்டு "அங்கு நீ சென்றபோது நடந்த செய்திகளை எங்களுக்கு இப்போதே கூறுவாயாக" என்று கேட்டார்கள். அவர்களுடைய வார்த்தையைக் கேட்டு அவ்வூமை "'உபயவிபூதியையும் நிர்வஹிக்கும் விஷ்வக் ஸேனர் உலகை ரக்ஷிப்பதற்காக இந்நிலவுலகில் ஸ்ரீபெரும் பூதூரில் ராமாநுஜராக அவதரித்துள்ளார்' என்று திருப்பாற்கடல் கரையிலிருப்பவர்கள் இப்போது ஸ்ரீராமா நுஜரைப் பற்றிச் சொல்லிக்கொண்டிருக்கிறார்கள்" என்று கூறி அப்போதே அங்கேயே மறைந்து விட் டான். (மறைவதற்கு முன்) 'ஸேனாபதியாழ்வானே யதிராஜர்' என்று பல தடவை அவன் வார்த்தை

१०. सेनापतिर्यतिर्ह्येवं बहुवारं वचोऽब्रवीत्।
ततः स मूकः केनापि दृश्यते न क्वचिद्भुवि॥
११. ब्रह्मरक्षः पुरा काञ्च्यां स्वस्य मोक्षदशागमे।
दर्शयित्वा लक्ष्मणार्यं यादवाय दृढात्मने॥
१२. शृण्वतां सर्वलोकानां तं यादवमभाषत।
एष रामानुजः श्रीमान् लीलामानुषविग्रहः॥
१३. प्रधानो नित्यसूरीणां अवतीर्णोऽधुना भुवि।
लोकसंरक्षणार्थाय हरिणाऽऽज्ञापितोऽभवत्॥
१४. तं रामानुजमाश्रित्य गच्छ विष्णोः परं पदम्।
आन्ध्रपूर्णो महाप्राज्ञः प्रोवाचाखिलवैष्णवान्॥

---

சொன்னுன். இப்படி மறைந்த பினபு அவன் இவ்வுலகில் எங்கும் எவராலும் காணப்படவில்லை.

## 15. ப்ரஹ்மராக்ஷஸன் வெளியிட்ட வைபவம்

11-*14. காஞ்சியில் முன்னொரு சமயம் ப்₃ரஹ்ம ராக்ஷஸன் தான விடுதலையடையும்போது, தன்னை விரட்டுவதில் உறுதியாயிருந்த யாத₃வப்ரகாஶனுக்கு ராமா நுஜரைக் காட்டி அனைவரும் கேட்டுக் கொண்டிருக் கையில் யாத₃வப்ரகாஶனைப் பார்த்து "இந்த ஸ்ரீமத்₃ ராமாநுஜர் நித்யஸூரிகளில் தலைவராயிருந்து, இப் போது இவ்வுலகில் அவதரித்து, உலகை ரக்ஷிப்ப தற்காக எம்பெருமானால் நியமிக்கப் பெற்றவராய், எம் பெருமானின் லீலையின் பொருட்டு மனிதவுரு எடுத்தி ருக்கிறுர். ஸ்ரீராமாநுஜரை ஆஶ்ரயித்து நீ விஷ்ணுவின் பரமபத₃த்தை அடைவாய்" என்று எம்பெருமானுரின் பெருமையை வெளியிட்டான்.

## 16. வடுகநம்பி வெளியிட்ட வைபவம்

14*-*17. பேரறிவாளரான வடுகநம்பி எல்லா வைஷ்ணவர்களையும் பார்த்து, "அறிவாளிகளே! இப்

१५. यदाचार्यपदं नाम जगत्यस्मिन् महत्पदम् ।
तस्मिन्नेव यतिश्रेष्ठे तत्पदं सुप्रतिष्ठितम् ॥

१६. विना यतीन्द्रपादाब्जान्नान्योपायो हि विद्यते ।
तस्माद्यतीन्द्रपादाब्जं रक्षकं निखिलात्मनाम् ॥

१७. इति ध्रुवं विनिश्चित्य वर्तध्वं अनिशं बुधाः ।
कृष्णग्रामाधिपो धीमान् बालस्वामीति विश्रुतः ॥

१८. वैष्णवः सर्वशास्त्रज्ञः सचेलस्नानपूर्वकम् ।
दृढं विधाय दिव्याज्ञां दृष्ट्वा श्रीवैष्णवोत्तमान् ॥

१९. वैष्णवानां सभामध्ये वचनं सत्यमब्रवीत् ।
निःश्रेयसफलावाप्त्यै सर्वेषां विदुषामपि ॥

---

வுலகில் ஆசார்யபதவி என்று யாதொரு பெரிய பதவி உள்ளதோ அப்பதவி ஜகத்₃கு₃ருவான ஆசார்யரான யதிராஜரிடத்திலேயே நன்கு நிலைநிற்கிறது. யதிராஜருடைய திருவடித் தாமரையைக் காட்டிலும் வேறு உபாயமில்லை. ஆகையால் 'எதிகட்கிறைவருடைய திருவடித்தாமரையே எல்லா ஆத்மாக்களுக்கும் தஞ்சம்' என்று உறுதி பூண்டு எப்போதும் வாழுங்கள்" என்று எம்பெருமானார் பெருமையை வெளியிட்டார்.

## 17. கணியனூர் சிறியாச்சான் வெளியிட்ட வைபவம்

17*-*20. பேரறிவாளராய், ஸர்வ ஶாஸ்த்ரங்களையும் உணர்ந்தவராய், கணியனூர் சிறியாச்சான் என்று பெயர் பெற்ற ஶ்ரீவைஷ்ணவர் உடுத்திய வஸ்த்ரத்தோடு ஸ்நானம் செய்து, உறுதியாகத் திருவாணையிட்டு, ஶ்ரீவைஷ்ணவர்களின் திரளிலே அவர்களைப் பார்த்து, "எல்லாப் பேரறிவாளர்களுக்கும் தலைசிறந்த மோக்ஷப₂லனை அடைவதற்கு யதிராஜருடைய திருவடித் தாமரையைத் தவிர

२०. विना यतीन्द्रपादाब्जादन्योपायो न विद्यते।
देवराजो मुनिः पूर्वं शासनात् यतिभूपतेः॥

२१. अनन्तार्यादिशिष्याणां संस्कारान् पञ्च सादरम्।
विधाय तत्त्ववित्प्राज्ञः तानेवं वाक्यमब्रवीत्॥

२२. इदं कार्यं मयेदानीं लक्ष्मणार्येण कारितम्।
ग्रामटिट्टिभकण्ठाग्रबद्धतालफलं यथा॥

२३. जानीध्वं लक्ष्मणार्यस्य पादमेव हि रक्षकम्।
शिष्योऽभूत्कूरनाथस्य पुत्रपुत्रार्यनामकः॥

२४. अपवादपरो नित्यं वैष्णवेष्वधिकेषु च।
कूरेशशिष्यं तं दृष्ट्वा जनाः श्रीरङ्गवासिनः॥

---

வேறு உபாயமில்லை'' என்று ஶபதமும் செய்து எம்பெரு மானார் பெருமையை வெளியிட்டார்.

## 18. அருளாளப்பெருமாள் எம்பெருமானார் வெளியிட்ட வைபவம்

20*-*23. முற்காலத்தில் தேவராஜமுனி என்னும் திரு நாமமுடைய அருளாளப்பெருமாள் எம்பெருமானார்—எம் பெருமானாருடைய நியமனத்தாலே அநந்தாழ்வான் முத லான ஶிஷ்யர்களுக்கு அன்போடு பஞ்சஸம்ஸ்காரம் செய்து, உண்மையுணர்ந்த பேரறிவாளராகையாலே அவர் களைப் பார்த்து "குருவியின் தலையிலே பனங்காயைக் கட்டி னாற்போலே எம்பெருமானாராலே நியமிக்கப் பெற்று இக் காரியம் என்னால் இப்போது செய்யப்பட்டது. 'எம்பெருமா னார் திருவடிகளே தஞ்சம்' என்றிருங்கள்'' என்று அருளிச் செய்து எம்பெருமானார் பெருமையை வெளியிட்டார்.

## 19. கூரத்தாழ்வான் வெளியிட்ட வைபவம்

I 23*-41. கூரத்தாழ்வானுக்குப் பிள்ளைப்பிள்ளையாழ் வான் என்று ஒரு ஶிஷ்யர் இருந்தார். தம்மைவிடப்

२५. कूरेशस्यैव दोषोऽयमित्यूचुस्ते परस्परम् ।
तं निशम्य विषण्णस्सन् कूरेशः शिष्यवत्सलः ॥

२६. तस्मात् शिष्यात्पुण्यकाले दानरूपेण वैष्णवात् ।
सतिलोदकपूर्वेण जग्राह करणत्रयम् ॥

२७. दत्त्वाथ गुरवे भक्त्या स शिष्यः करणत्रयम् ।
निश्चेष्टः स्वगृहे तस्थौ ध्यायन् गुरुपदाम्बुजम् ॥

२८. ततः कदाचिच्छनकैः निर्गत्य स्वगृहात् बहिः ।
स तदा पुत्रपुत्रार्यो वीथ्यां समुपतिष्ठत ॥

२९. वीथ्यां समागतं दृष्ट्वा वैष्णवं कञ्चिदातुरम् ।
मनसा तर्कयामास तस्मिन् दोषान् स वैष्णवे ॥

---

பெரியவர்களான வைஷ்ணவர்களைப் பற்றி எப்போதும் அபவாதம் சொல்லுவதையே இயல்வாகக்கொண்டிருந்தார் அவர். ஸ்ரீரங்கத்திலுள்ள ஜனங்கள் அவர் கூரத்தாழ்வான் ஶிஷ்யர் என்று உணர்ந்து, 'அவர் செய்வது ஆழ்வானுக்கே தோஷமாகும்' என்று ஒருவர்க்கொருவர் பேசிக்கொண்டனர். அதைக்கேட்டு ஶிஷ்யரிடம் அன்புடைய ஆழ்வான் மிகவும் வருந்தியவராய், வைஷ்ணவரான அந்த ஶிஷ்யரிடமிருந்து, அவருடைய மனோவாக்காயங்களாகிற முக்கரணங்களையும் எள்ளும் நீரும் வார்த்து தானமாகப் பெற்றுக்கொண்டார். அந்த ஶிஷ்யரும் குருவிடம் பக்தியோடு முக்கரணங்களையும் தானம் கொடுத்துவிட்டு, செயலிழந்தவராய் ஆசார்யனுடைய திருவடித் தாமரையைத் தியானித்துக்கொண்டு வீட்டிலேயே இருந்தார். அதற்குப்பின் ஒருநாள் தம் வீட்டிலிருந்து வெளியே வந்து பிள்ளைப்பிள்ளையாழ்வான் வீதியில் நின்றார். வீதியில் நோயாளியான ஒரு வைஷ்ணவன் வருவதைப் பார்த்து, அவன் விஷயத்தில் தம் மனத்தாலேயே பல தோஷங்களை ஆராய்ந்தார்.

३०. ततः स शिष्यो मतिमान् मनस्येवमचिन्तयत्।
पुरैव दत्तं हि मया गुरवे करणत्रयम्॥
३१. मम नास्त्यधुना तेन स्वातन्त्र्यं करणत्रये।
गुरुद्रव्यापहारेण निरयो निश्चयं मम॥
३२. देहत्यागो मया तेन कर्तव्यः पापिनाधुना।
इति ध्रुवं विनिश्चित्य प्राणानायम्य वाग्यतः॥
३३. देहत्यागेच्छया शीघ्रं दर्भानास्तीर्य भूतले।
प्रायोपवेशमकरोच्छिष्यः कूराधिपस्य सः॥
३४. तद्वृत्तान्तं समाकर्ण्य विषण्णः कूरनायकः।
तस्य शिष्यस्य सदनं संप्राप्याथ भुवः स्थले॥

---

அதற்குப் பின் அறிவாளியான அந்த ஶிஷ்யர் தம் மனத்தில் பின்வருமாறு சிந்திக்கலுற்றுர் — "நான் முன்னமே என்னுடைய முக்கரணங்களையும் எனது ஆசார்யருக்கு தா₃னம் செய்துவிட்டேன். அதனுல் எனது முக்கரணங்களில் எனக்கு இப்போது ஸ்வாதந்த்ர்யமில்லை. (இப்படி ஆசார்யாதீ₄னமான மனத்தைக்கொண்டு அவரது நியமனத்துக்கு முரணுக நடந்தபடியாலே) ஆசார்ய த்₃ரவ்யத்தை அபஹரித்த எனக்கு நரகம் கிடைப்பது நிச்சயம். ஆகையால் பாபியான நான் இந்த உடலை இப்போதே விடுவதே தக்கது" என்று உறுதி பூண்டு, ப்ராணுயாமம் செய்து, மௌனத்தை ஏற்றுக்கொண்டவராய், விரைவில் தரையில் த₃ர்ப்ப₄ங்களைப் பரப்பி, கூரத்தாழ்வான் ஶிஷ்யரான அவர் ப்ராயோபவேஶம் செய்யத்தொடங்கினுர். அந்தச் செய்தியைக் கேட்டு மிக வருந்திய கூரத்தாழ்வான் அந்த ஶிஷ்யருடைய வீட்டிற்கு வந்து, தரையில் த₃ர்ப்ப₄ங்களில் ப்ராயோபவேஶம் செய்து கிடக்கும் அந்த உறுதியுள்ள ஶிஷ்யரைக்கண்டு, இனிய

३५. प्रायोपविष्टं दर्भेषु दृष्ट्वा शिष्यं दृढव्रतम्।
सान्त्वयन्मधुरैर्वाक्यैरिदं वचनमब्रवीत्॥

३६. किमर्थमधुना वत्स! देहत्यागं करिष्यसि।
स्वाधीनं मानसं दत्तं तुभ्यं भूयो मयाऽधुना॥

३७. प्रतिगृह्णीष्व भद्रं ते शीघ्रमुत्तिष्ठ पुत्रक!।
परापवादं वदतीं जहि वाचं दृढं जवात्॥

३८. परापवादो भवता मनसा चिन्तितो यदि।
भक्त्या संस्मर पादाब्जं यतीन्द्रस्य जगद्गुरोः॥

३९. वाक्कायकाभ्यां पापानि कृतानि यदि सत्तम!।
शिक्षयत्याशु तं राजा कर्तारं नात्र संशयः॥

४०. प्रामादिकाद्यदि प्राप्तं यत्पापं मनसाद्य तत्।
विनश्यत्याशु योगीन्द्रपादाब्जस्मरणात् ध्रुवम्॥

---

வார்த்தைகளால் அவரை ஸமாதா₄னப்படுத்துகிறவராய், பின்வருமாறு வார்த்தை சொன்னார்—“குழந்தாய்! இப்போது எதற்காக தே₃ஹத்யாக₃த்தைச் செய்கிறாய்? உன்னுடைய மனத்தை மறுபடியும் நான் உனக்கே அதீ₄னமாகக் கொடுத்துவிட்டேன். அதை ஏற்றுக்கொள். பிள்ளாய்! விரைவில் எழுந்திருப்பாய். உனக்கு மங்க₃ளம் உண்டாகட்டும். பராபவாத₃த்தைச் செய்யும் வாக்கை விரைவில் உறுதியாக வெற்றி கொள்வாய். மனஸ்ஸினாலே பராபவாத₃ம் நினைக்கப்பட்டதாகில் (அதற்கு ப்ராயஶ்சித்தமாக) ஜக₃த்₃ஆசார்யரான யதிராஜருடைய திருவடித்தாமரையை ப₄க்தியுடன் நினைப்பாயாக. நல்லோனே! வாக்காலும், காயம் எனும் உடம்பாலும் ப₄ாக₃வதாபசாரம் செய்யப்பட்டால், அப்படிச் செய்தவனை ராஜா விரைவில் தண்டிப்பான். இதில் ஐயமில்லை. கவனமின்மையால் உனக்கு மனத்திலே இப்போது ஏற்பட்ட ப₄ாக₃வதாபசாரம் யதிராஜ

४१. कृतानां सर्वपापानामनिशं करणत्रयैः।
प्रायश्चित्तं यतीन्द्रस्य पादाब्जस्मरणं ध्रुवम्॥

४२. ततः कदाचित् श्रीरङ्गे कावेरीमध्यसैकते।
पुण्यकाले महानासीत् विबुधानां समागमः॥

४३. मोक्षोपायस्य मीमांसाकाले तत्त्वार्थसंकटे।
कूरेशः सहसोत्थाय वेदव्यास इवापरः॥

४४. स्नातः सचेलः कावेर्यां भुजमुद्धृत्य सत्वरम्।
वैष्णवानां सभामध्ये व्याजहार वचः शुभम्॥

---

ருடைய திருவடித்தாமரையை நினைப்பதால் விரைவில் அழிந்துபோகும் என்பது உறுதி. முக்கரணங்களாலும் எப்போதும் செய்யப்படும் எல்லாப் பாபங்களுக்கும் யதிராஜருடைய திருவடித்தாமரையை நினைப்பதே உறுதியான ப்ராயஶ்சித்தமாகும்" என்று கூறி எம்பெருமானார் வைபவத்தை வெளியிட்டருளினார்.

II 42-45. அதற்குப்பின் ஒரு ஸமயம் ஸ்ரீரங்கத்தில் ஒரு புண்யகாலத்தில் காவேரிமணலின் நடுவில் ஞானிகளின் பெருங்கூட்டம் ஒன்று அமைந்தது. மோக்ஷோபாயம் என்ன? என்று அப்போது விசாரமேற்பட்டு (அதற்குப் பலர் பலவாறு பதில் சொல்லி) ஓர் தத்வநிஷ்கர்ஷம் ஏற்படாத அளவில் மற்றொரு வேதவ்யாஸர் போலே விளங்கும் கூரத்தாழ்வான் சடக்கென எழுந்திருந்து உடுத்த வஸ்த்ரத்தோடு காவேரியில் ஸ்நானம் செய்து, சடக்கெனக் கையைத் தூக்கி அந்த வைஷ்ணவ ஸபையின் நடுவிலே "மூன்று முறை ஸத்யஞ்செய்து கூறுகிறேன்—யதிராஜரே ஜகதாசார்யராவார். அவரே எல்லா உலகங்களையும் ஸம்ஸாரத்திலிருந்து உய்விக்கக் கூடியவர். இதில் ஐயமில்லை" என்னும் மங்களமான வார்த்தையை அருளினார்.

४५. सत्यं सत्यं पुनस्सत्यं यतिराजो जगद्गुरुः ।
स एव सर्वलोकानां समुद्धर्ता न संशयः ॥

४६. विद्वान् श्रीवैष्णवः कश्चित् मरिचार्य इति श्रुतः ।
वादार्थमगमद्धीमान् तदा दाशरथिं प्रति ॥

४७. ततस्तयोर्विबुधयोर्जयापजययोस्तदा ।
अभून्निर्णय इत्येवं जेतारं निर्जितो वहेत् ॥

४८. ततः पराजितस्तेन शास्त्रवादे महात्मना ।
स्कन्धाभ्यां स मरीचार्योऽवहद्दाशरथिं तदा ॥

४९. रङ्गस्थले राजमार्गे विधायाऽथ प्रदक्षिणम् ।
नत्वा दाशरथिं तं च कृताञ्जलिरभाषत ॥

---

## 20. முதலியாண்டான் வெளியிட்ட வைபவம்

46-52. அக்காலத்தில் படித்தவரும் அறிவாளியும் ஸ்ரீவைஷ்ணவருமான மிளகாழ்வான் என்னுமொருவர் முதலியாண்டானோடு வாதத்துக்கு வந்தார். அப்போது அவ்விரு வித்வான்களும் தங்களுடைய வாதத்தில் 'தோற்றவர் ஜயித்தவரைத் தோளாலே சுமக்கவேண்டும்' என்று தங்களுடைய வெற்றி தோல்வி விஷயமாக ஒரு நிர்ணயம் செய்து கொண்டார்கள். அப்படி வாதும் செய்தபின்பு அந்த ஶாஸ்த்ரவாதத்தில் மஹாத்மாவான முதலியாண்டானாலே வெற்றிகொள்ளப்பட்ட மிளகாழ்வான் முதலியாண்டானைத் தோளாலே சுமந்தார். ஸ்ரீரங்கத்தில் ராஜவீதியில் நாலு புறமும் (முதலியாண்டானைச் சுமந்து கொண்டு) பிரதக்ஷிணம் வந்தபின்பு மிளகாழ்வான் முதலியாண்டானை வணங்கிக் கைகூப்பிக்கொண்டு "அடியேனுக்கு நல்ல உபதேஶத்தைச் செய்து இப்போதே ஏற்றுக்கொள்ள வேணும்" என்று பிரார்த்தித்தார். அவருடைய அந்த வார்த்தையைக் கேட்டு மஹாபுருஷரான முதலியாண்டான்

५०. हितोपदेशं कृत्वाशु मामङ्गीकुरु साम्प्रतम् ।
तस्य तद्वचनं श्रुत्वा तदा दाशरथिर्महान् ॥

५१. तं नीत्वा यतिराजस्य सन्निधिं वैष्णवं तदा ।
कारयित्वा तदा तेन वन्दनं यतिभूपतेः ॥

५२. हितोपदेशं विदधे सर्वेषां शृण्वतां तदा ।
यद्रामानुजपादाब्जं तदेव शरणं व्रज ॥

५३. महान् श्रीवैष्णवः कश्चिल्लोकार्य इति विश्रुतः ।
गोविन्दाख्यं महात्मानं दृष्ट्वेदं वाक्यमब्रवीत् ॥

५४. भगवद्विषयस्यार्थः सम्यङ्मे विदितोऽधुना ।
प्रवक्ता सर्वशास्त्राणां सम्यक् शिष्यजनाय च ॥

५५. इत्येवं गर्वसंयुक्तो गोविन्दार्य ! न वर्तय ।
तदेव शरणं गच्छ यद्योगीन्द्रपदाम्बुजम् ॥

---

வைஷ்ணவரான அவரை அப்போதே யதிராஜர் இருக்குமிடம் அழைத்துச்சென்று யதிராஜரை வணங்கச்செய்து எல்லோரும் கேட்டுக்கொண்டிருக்கும்போது "ஸ்ரீராமாநுஜருடைய திருவடித்தாமரையையே ஶரணமடைவீர்" என்று ஹிதோபதே₃ஶம் செய்தருளினார்.

## 21. லோகார்யர் வெளியிட்ட வைபவம்

53-55. லோகார்யர் என்னும் பெயர் கொண்ட பெரியவரான ஸ்ரீவைஷ்ணவரொருவர் கோவிந்தர் என்னும் பெயர் கொண்ட பெரியவரைப் பார்த்து "கோவிந்தரே! 'எனக்கு இப்போது ப₄க₃வத்₃விஷயத்தின் பொருள் நன்கு தெரியும். ஶிஷ்ய ஜனங்களுக்கு நான் எல்லா ஶாஸ்த்ரங்களையும் உபதே₃ஶிக்கவல்லேன்' என்று க₃ர்வத்தோடு நீர் இருக்கலாகாது. யதிராஜருடைய திருவடித்தாமரையையே ஶரணமடைவீர்" என்று அருளினார்.

५६. श्रीपराशरभट्टार्यं गोविन्दः शास्त्रवित्तमः ।
प्रोवाच सर्वशास्त्राणि हितमेवमभाषत ॥

५७. हितं वक्ष्यामि भट्टार्य! शृणु मोक्षैकसाधनम् ।
पुत्रस्वीकारमकरोत् रङ्गेशो मामिति स्वयम् ॥

५८. अहं कूरेश्वरसुतः सर्वशास्त्राण्यधीतवान् ।
विद्यावान् कुलवान् श्रीमान् इत्येवं गर्वमाश्रितः ॥

५९. तानेव रक्षकान् मत्वा न वर्तय कदाचन ।
तदेव शरणं मत्वा यतीन्द्रपदपङ्कजम् ॥

६०. वर्तस्व सततं वत्स! नान्योपायो हि विद्यते ।
श्रीपराशरभट्टार्यः कूरनाथसुतस्तदा ॥

६१. एवं प्रोवाच भगवान् शिष्यं वेदान्तिनं प्रति ।
वेदान्तिन्! शृणु मद्वाक्यं हितं वक्ष्यामि सांप्रतम् ॥

## 22. எம்பார் வெளியிட்ட வைபவம்

56-*60. ஶாஸ்த்ரமறிந்தவர்களுள் சிறந்தவரான எம்பார் ஸ்ரீபராஶரப₄ட்டார்யருக்கு எல்லா ஶாஸ்த்ரங்களையும் உபதேஶித்தார். ஆத்ம ஹிதத்தை (நன்மையை) இவ்வாறு சொன்னார்—" ப₄ட்டார்யரே! மோக்ஷமடைய ஒரே ஸாத₄னமான ஹிதத்தைச் சொல்லுகிறேன் கேளும். 'ரங்க₃நாத₂ன் தானே என்னைப் புத்ரனாக ஸ்வீகாரம் செய்துகொண்டான்; நான் கூரத்தாழ்வானின் குமாரன்; எல்லா ஶாஸ்த்ரங்களையும் கற்றவன்; அறிவாளி; நற்குடிப் பிறப்புள்ளவன்; பக்திச்செல்வம் பெற்றவன்' என்று க₃ர்வம்கொண்டு இந்த உமது பெருமைகளையே ரக்ஷகங்களாக நினைத்து நீர் ஒருபோதும் வாழலாகாது. குழந்தாய்! யதிராஜருடைய திருவடித்தாமரையையே உபாயமாக எண்ணி எப்போதும் வாழ்வீராக. அது தவிர வேறு உபாயமில்லை" என்று.

६२. आश्रितोऽसीति भट्टार्यमद्य मां रङ्गिणस्सुतम् ।
मया दत्तं बहुद्रव्यं गुरवे गुरुदक्षिणा ॥

६३. मत्वा त्वमेवं वर्तस्व कृतकृत्यो न चाधुना ।
मन्नाथदिव्यपादाब्जं मत्वा रक्षकमात्मनः ॥

६४. वर्तस्व सततं विद्वन्! निश्चयं नात्र संशयः ।
श्रीरामः क्रतुनाथार्यः कुरुकानाथसन्निधौ ॥

६५. अधीतवांस्त्रिवारं च भक्त्या श्रीभाष्यमादरात् ।
ततः स्वग्रामगमने भक्त्या नत्वा च तं गुरुम् ॥

## 23. பட்டர் வெளியிட்ட வைபவம்

60*-*64. கூரத்தாழ்வான் குமாரராய், பூஜ்யரான ப₄ட்டர் தமது ஶிஷ்யரான வேதா₃ந்தி நஞ்சீயரைக் குறித்து இவ்வாறு சொன்னார்—“ வேதா₃ந்தியே! இப்போது நான் ஹிதத்தைச் சொல்கிறேன் கேளும். ‘ரங்க₃நாத₂னின் புத்ரராய் ப₄ட்டரான என்னை ஆஶ்ரயித்துள்ளவன்’ என்றும், ‘ஆசார்யருக்கு அதிகமான த்₃ரவ்யம் த₃க்ஷிணையாக என்னால் கொடுக்கப்பட்டது’ என்றும் எண்ணி ‘இதனால் நானே ப₄ாக்₃யஶாலி’ என்று இப்போது நீர் இருக்கலாகாது. அறிவாளியே! எம்பெருமானுருடைய திருவடித் தாமரையையே நீர் எப்போதும் உமக்கு ரக்ஷகமாக எண்ணியிருக்கவேணும்; இது உறுதி. இதில் ஐயமில்லை” என்று.

## 24. திருக்குருகைப்பிரான் பிள்ளான் வெளியிட்ட வைபவம்

64*-*70. ஸ்ரீராமமிஶ்ரர் என்னும் பெயருடைய ஸோமாசியாண்டான் திருக்குருகைப்பிரான்பிள்ளான் ஸன்னிதி₄யிலே ப₄க்தியோடும் அன்போடும் ஸ்ரீப₄ாஷ்யத்தை மூன்று முறை காலக்ஷேபம் கேட்டார். அதற்குப்பின்

६६. श्रीरामः क्रतुनाथार्यः प्राञ्जलिर्वाक्यमब्रवीत् ।
येनोपायेन सुगमो मम मोक्षो गुरूत्तम! ॥

६७. ज्ञानभक्त्यादिसुकरं तमुपायं वदाधुना ।
तस्य तद्वचनं श्रुत्वा सन्तुष्टः कुरुकेश्वरः ॥

६८. श्रीरामं क्रतुनाथार्यमिदं वचनमब्रवीत् ।
प्राभाकरादिशास्त्राणि सर्वाण्याशु मयाधुना ॥

६९. अधीतानि ततोऽहं वै विद्यावानिति गर्वितः ।
अहङ्कारं मा कुरुष्व यतीन्द्रपदपङ्कजम् ॥

७०. तदेव रक्षकं मत्वा वर्तस्व सततं हृदि ।
ततो नारायणपुरे व्यासभट्ट इति श्रुतः ॥

७१. श्रीवैष्णवो महानासीत् सर्वशास्त्रविदां वरः ।
स तत्र योगिराजस्य सन्निधौ वैष्णवोत्तमः ॥

---

ஸோமாசியாண்டானுகிற ஸ்ரீராமமிஶ்ரர் தம்முடைய ஊருக்கு விடைகொள்ளும்போது பக்தியோடு ஆசார்யரை வணங்கிக் கைகூப்பியவராய் "ஆசார்யஶ்ரேஷ்டரே! ஜ்ஞானம் பக்தி முதலானவற்றில் எளிதாயிருக்கும் எந்த உபாயத்தினுல் அடியேனுக்கு மோக்ஷம் எளிதில் கிட்டுமோ, அந்த உபாயத்தை இப்போது அடியேனுக்கு உபதேஶிக்க வேண்டும்" என்று பிரார்த்தித்தார். அவருடைய வார்த்தையைக் கேட்டு உகந்த பிள்ளான் ஸோமாசியாண்டானைப் பார்த்து "'மீமாம்ஸை முதலான எல்லா ஶாஸ்த்ரங்களும் விரைவிலேயே இப்போது என்னுல் கற்கப் பட்டன; ஆகையால் நானே பேரறிவாளன்' என்று கர்வங் கொண்டு அஹங்காரப்படாமலிரும். யதிராஜரின் திருவடித் தாமரையையே எப்போதும் ரக்ஷகமாக நெஞ்சில் நினைத்து வாழ்வீராக" என்று உபதேஶித்தார்.

७२. श्रीभाष्यं शिष्यसंघेभ्यो ह्यवदल्लोकविश्रुतः।
निशम्य तदुपन्यासं विस्मितास्ते च वैष्णवाः॥
७३. एवं विज्ञापनं चक्रुर्भट्टार्यं देशिकोत्तमम्।
इदं गङ्गाप्रवाहस्य सदृशं विद्यतेऽधुना॥
७४. श्रीभाष्यस्याधुनास्माभिः शक्यं नार्थावगाहनम्।
ब्रूहि नः सुलभोपायं येनास्मासु प्रसीदति॥
७५. ततस्तेषां वचः श्रुत्वा भट्टार्यः स महामतिः।
हितोपदेशमकरोत् तेषां मोक्षोपलब्धये॥

## 25. வ்யாஸபட்டர் வெளியிட்ட வைபவம்

70*-*76. அக்காலத்தில் திருநாராயணபுரத்தில் வ்யாஸப₄ட்டர் என்று புகழ்பெற்ற ஒரு ஸ்ரீவைஷ்ணவப் பெரியவர் ஸர்வஶாஸ்த்ரங்களும் கற்றவர்களில் தலைசிறந்தவராயிருந்தார். உலகம் நிறைந்த புகழாளரான அந்த ஸ்ரீவைஷ்ணவோத்தமர் அங்குள்ள எம்பெருமானார் ஸன்னிதி₄யில் ஶிஷ்ய ஸமூஹங்களுக்கு ஸ்ரீபா₄ஷ்ய காலக்ஷேபம் ஸாதித்து வந்தார். அந்த உபந்யாஸத்தைக் கேட்டு ஸ்ரீவைஷ்ணவர்களான ஶிஷ்யர்கள் வியப்புற்றவர்களாய், ஆசார்ய ஶ்ரேஷ்ட₂ரான ப₄ட்டார்யரைப் பார்த்து "இவ்வுபந்யாஸம் எங்களுக்கு இப்போது க₃ங்கா₃ப்ரவாஹத்தையொத்துக் காட்சி அளிக்கிறது. இப்போது ஸ்ரீபா₄ஷ்யத்தின் பொருளைப் புரிந்துகொள்ள எங்களால் முடியவில்லை. எம்பெருமான் எங்கள் விஷயத்தில் அருள் புரிவதற்கு உறுப்பான எளிய உபாயத்தை எங்களுக்குக் கூறுவீராக" என்று விண்ணப்பித்தார்கள். அவர்களுடைய வார்த்தையைக் கேட்ட பேரறிவாளரான வ்யாஸப₄ட்டர் "எம்பெருமானாருடைய இந்தத் திருவடித்தாமரைகளையே தஞ்சமாகக் கொள்ளுங்கள்" என்று அவர்களுக்கு மோக்ஷமடைவதற்கு ஹிதோபதே₃ஶத்தைச் செய்தார்.

७६. श्रीरामानुजपादाब्जमेतदेव हि रक्षकम्।
ततो वरदविष्ण्वार्यसन्निधौ वैष्णवोत्तमाः॥

७७. तेभ्यो वरदविष्ण्वार्यो वैष्णवेभ्यस्स सादरम्।
प्रोवाच सम्यक् श्रीभाष्यं तदोपन्यासपूर्वकम्॥

७८. श्रीभाष्यार्थं ततः श्रुत्वा सम्यग्गुरुमुखात्तदा।
एवं विज्ञापनं चक्रुस्ते सर्वे वैष्णवा गुरुम्॥

७९. गुरूपायस्त्वया प्रोक्तो भक्तिमार्गोऽत्र सांप्रतम्।
— स्वामिन् वरदविष्ण्वार्य! वयं नात्राधिकारिणः॥

८०. ब्रूहि नः सुलभोपायं येन गम्यं परं पदम्।
प्रपत्तिमार्गं प्रोवाच ततस्तेभ्यस्स देशिकः॥

---

## 26. நடாதூராழ்வான் வெளியிட்ட வைபவம்

76*-84*. அக்காலத்தில் 'வரத₃விஷ்ணு' என்னும் திருநாமமுடைய (எம்பெருமானருடைய மருமகனை) நடாதூராழ்வானுக்குப் பல ஸ்ரீவைஷ்ணவோத்தமர்கள் ஶிஷ்யர்களாயிருந்தனர். அவர்களுக்கு நடாதூராழ்வான் அன்போடு ஸ்ரீபா₄ஷ்யத்தை உபந்யாஸமாக ஸாதித்து வந்தார். அந்த ஆசார்யஶ்ரேஷ்ட₂ரிடமிருந்து அப்போது ஸ்ரீபா₄ஷ்யார்த்த₂த்தை நன்கு கேட்ட அந்த ஸ்ரீவைஷ்ணவர்கள் அனைவரும் ஆசார்யரைப் பார்த்து "வரத₃விஷ்ணவாசார்யரே! இப்போது எங்களுக்குச் செயற்கரிய உபாயமாகிற ப₄க்திமார்க்க₃ம் தேவரீரால் உபதே₃ஶிக்கப்பட்டது. இதற்கு நாங்கள் அதி₄காரிகள் அல்லர். எங்களுக்குப் பரமபத₃மடைய எளிய உபாயத்தைக் கூறுவீர்" என்று விண்ணப்பித்தனர். அதற்குமேல் அவ்வாசார்யர் அவர்களுக்கு ப்ரபத்தி மார்க்க₃த்தை உபதே₃ஶித்தார். "(மஹாவிஶ்வாஸம் தேவைப்படும்) இந்த ப்ரபத்தி மார்க்க₃த்திலும் எங்களுக்கு ஶக்தியில்லை" என்று அவர்கள் அவ்வாசாரியரிடம்

८१. नात्रापि च वयं शक्ताः ते तमेवमथाब्रुवन्।
एवमुक्तस्ततः शिष्यैः वैष्णवैरखिलार्थवित्॥

८२. संसारतरणोपायमेवमाहाऽथ तान् प्रति।
रामानुजार्यपादाब्जं ध्यायन्तो हृदि भक्तितः॥

८३. सदा रामानुजार्याय तस्मै कैङ्कर्यतत्पराः।
शृण्वन्तश्च पठन्तश्च यतिराजकथाः शुभाः॥

८४. वर्तध्वमनिशं नित्यं निर्भरा मोक्षसिद्धये।
एवमेव स्वशिष्येभ्यो ह्युपदेशं प्रचक्रिरे॥

८५. चतुस्सप्ततिशिष்யाश्च यतीन्द्रस्याखिला भुवि।
एवं प्रकाशयामासुर्यतिराजस्य वैभवम्॥

---

கூறினர். இப்படி ஸ்ரீவைஷ்ணவ ஶிஷ்யர்களால் உரைக்கப்பட்டவராய், எல்லா அர்த்த₂ங்களையும் அறிந்தவரான அந்த நடாதூராழ்வான் அவர்களைப் பார்த்து "ராமாநுஜருடைய திருவடித்தாமரையையே நெஞ்சில் அன்போடு த்₄யானித்துக் கொண்டிருந்து, எப்போதும் அந்த ராமாநுஜாசார்யருக்குக் கைங்கர்யம் செய்வதில் ஈடுபட்டவர்களாய், தினந்தோறும் அந்த யதிராஜருடைய மங்க₃ளமான சரித்திரங்களைக் கேட்டுக்கொண்டும் வாசித்துக்கொண்டும் மோக்ஷமடைவதில் கவலையில்லாதவர்களாய் எப்போதும் வாழ்வீர்களாக" என்று ஸம்ஸாரத்தைத் தாண்டுவதற்கு உபாயத்தைக் கூறினர்.

## முடிவுரை

84*-87. எம்பெருமானாருடைய ஶிஷ்யர்களான எழுபத்திநான்கு ஸிம்ஹாஸநாதி₄பதிகளான அனைவரும் தங்கள் ஶிஷ்யர்களுக்கு இவ்வண்ணமே உபதே₃ஶித்தனர். இவ்வுலகில் ஸ்ரீவைஷ்ணவர்களான அப்பெரியோர்கள் அனைவரும் ஜக₃த்₃கு₃ருவான... ஜக₃தா₃சார்யரான யதிராஜருடைய வைப

८६. श्रीवैष्णवा महाभागास्ते सर्वे च जगद्गुरोः।
एवं तैर्देशिकैस्सर्वैः प्रकाशीकृतवैभवः ॥
यतीन्द्रो राजते रङ्गे जगद्रक्षणदीक्षितः ॥

८७. एवं महार्थं निखिलागमान्तसारं विपश्चिद्गणजीवभूतम्।
ज्ञात्वा महाभक्तिपरो यतीन्द्रे स विष्णुलोकं समुपैति सत्यम् ॥

इति श्रीप्रपन्नामृते रामानुजचरित्रे कूरेशदाशरथ्यादिसंप्रकाशित-
रामानुजवैभववर्णनं नाम एकषष्टितमोऽध्यायः ॥

द्विषष्टितमोऽध्यायः

१. श्रीरङ्गेशादिभिस्सर्वैः संप्रकाशितवैभवः।
नाथमुन्यादिपूर्वेभ्यो देशिकेभ्यो यतीश्वरः ॥

---

வத்தை இவ்வண்ணமே வெளிப்படுத்தினர். இவ்வண்ண மாக ஆசார்யர்கள் அனைவராலும் வெளிப்படுத்தப்பட்ட பெருமையையுடையவராய், உலகை ரக்ஷிப்பதையே விரத மாகக் கொண்டவராய் ஸ்ரீரங்கத்தில் யதிராஜர் வாழ்கிறார். எல்லா வேதாந்தங்களுக்கும் ஸாரமானதாய், அறிவாளி களுக்கு உயிர்தரும் மருந்தாயிருக்கும் இந்த அரும் பொருளை யதிராஜரிடம் பேரன்பு கொண்டவனாய் அறிப வன் விஷ்ணுலோகத்தை அடைவான் என்பது ஸத்யம்.

ஸ்ரீப்ரபந்நாம்ருதத்தில் ராமானுஜசரித்ரத்தில்,
கூரத்தாழ்வான், முதலியாண்டான் முதலானவர்களால்
வெளிப்படுத்தப்பட்ட யதிராஜர் வைபவத்தை வர்ணித்தலாகிற
அறுபத்தோராம் அத்தியாயம் நிறைவுற்றது.

## அறுபத்திரண்டாம் அத்தியாயம்

## ஸ்ரீராமானுஜரே ஆசார்ய ப்ரதானர்

### அவதாரிகை

1-8 ஸ்ரீரங்கநாதன் முதலான (முற்கூறிய) அனைவ ராலும் வெளிப்படுத்தப்பட்ட வைபவத்தையுடையவரான

२. प्रवक्तुं श्रेष्ठ इत्यत्र न्यूनता नास्ति निश्चितम् ।
अयमर्थोऽखिले शास्त्रे वेदे दृष्टतरः स्फुटम् ॥

३. अनन्तेष्ववतारेषु विष्णोः सत्सु जगत्पतेः ।
यथा दशावताराणां प्राधान्यमभवद्भुवि ॥

४. नृसिंहरामकृष्णाश्च तेषां मुख्या यथाऽभवन् ।
मुनीश्वराणां सर्वेषां तपःस्वाध्यायशालिनाम् ॥

५. पाराशर्यादिमुनयः प्रधानाश्चाभवन् यथा ।
अष्टोत्तरशतेष्वेते दिव्यदेशेषु वै हरेः ॥

६. मुख्या बभूवुश्चत्वारो दिव्यदेशा यथा भुवि ।
श्रीरङ्गं वेङ्कटाद्रिश्च हस्त्यद्रिर्यादवाचलः ॥

---

யதிராஜர் நாத₂முனிகள் முதலான எல்லாப் பூர்வாசார்யர்களைக் காட்டிலும் சிறந்தவர் என்று கூறுவதில் உறுதியாக எந்தக் குறையுமில்லை. இவ்வர்த்த₂ம் எல்லா ஶாஸ்த்ரங்களிலும் வேத₃த்திலும் மிகத் தெளிவாகக் காணப்படுகிறது. லோகநாத₂னான விஷ்ணுவுக்குக் கணக்கற்ற அவதாரங்கள் இருந்தபோதிலும் உலகில் த₃ஶாவதாரங்களுக்கே முக்₂யத்வமும், அவற்றுக்குள் நரஸிம்ஹன், ராமன், க்ருஷ்ணன் ஆகிய மூவருக்கும் முக்₂யத்வமும் ஒப்புக்கொள்ளப்படுகிறது. தவமும் வேத₃ாத்₄யயனமும் மிக்கவர்களான எல்லா முனீஶ்வரர்களுக்குள்ளும் பராஶரபுத்ரரான வ்யாஸர் முதலான சிலருக்கே முக்₂யத்வம் ஏற்பட்டுள்ளது. எம்பெருமான் எழுந்தருளியிருக்கும் நூற்றெட்டு தி₃வ்ய தே₃ஶங்களுள் ஸ்ரீரங்க₃ம், திருவேங்கடமலை, ஹஸ்திகி₃ரி, யாத₂வகி₃ரி (கோயில், திருமலை, பெருமாள்கோயில், திருநாராயணபுரம்) என்னும் நான்குக்கே இவ்வுலகில் முக்₂யத்வம் ஏற்பட்டுள்ளது. பொய்கை பூதம் பேயாழ்வார் முதலான பத்து ஆழ்வார்கள் இருந்தபோதிலும், மஹா

७. विद्यमानेषु दशसु सरोयोग्यादियोगिषु।
शठकोपो महायोगी यथा मुख्यो बभूव ह॥

८. पूर्वाचार्येषु सर्वेषु नाथादिषु महत्सु च।
मुख्यो बभूव योगीन्द्रः तथा लक्ष्मणदेशिकः॥

९. स्तम्भाद्विनिर्गमेनैव वात्सल्यात्तत्क्षणं जवात्।
प्रह्लादवरदानेन हिरण्यकशिपोर्वधात्॥

१०. इत्येवमादिकार्येण नृसिंहेन कृतेन च।
नृसिंहस्यावतारस्य प्राधान्यमभवत्ततः॥

११. दत्ताभयप्रदानेन राक्षसेन्द्रकपीन्द्रयोः।
कृतसख्येन राज्ञा च निषादानां गुहेन च॥

---

யோகி$_3$யான நம்மாழ்வாருக்கு ப்ராத$_4$ாந்யம் ஏற்பட்டிருக்கிறது. இவைபோலவே நாத$_2$முனிகள் முதலான மிகப் பெரியவர்களான பூர்வாசார்யர்களுள் ஸ்ரீராமாநுஜரான யதிராஜருக்கே முதன்மை ஏற்பட்டுள்ளது.

## சிங்கப்பிரான் பெருமை

9-10. (ஹிரண்யன் தூணைத்தட்டிய) அக்கணத்திலேயே அதிவேக$_3$மாக அத்தூணிலிருந்து வெளிப்படுகையாலும், ஹிரண்யகஶிபுவைக் கொல்லுகையாலும், ப்ரஹ்லாத$_3$னுக்கு வரமளிக்கையாலும், இவ்வண்ணமான அதிமாநுஷ கார்யத்தைச் சிங்கப்பிரான் செய்தமையையிட்டு நரஸிம்ஹாவதாரத்துக்கு முக்$_2$யத்வம் ஒப்புக்கொள்ளப்படுகிறது.

## ராமபிரான் சீர்மை

11-*14. 1. ராக்ஷஸர் தலைவனான விபீ$_4$ஷணனுக்கும், வானரர் தலைவனான ஸுக்$_3$ரீவனுக்கும் அப$_4$யப்ரதா$_3$னம் செய்தது. 2. வேடர் தலைவனான கு$_3$ஹனோடு தோழமை

१२. ब्रह्ममेधेन संस्कारकरणेन जटायुषः।
शबर्या पाणिना संयक् भोजनेन कृतेन च॥

१३. प्रीत्या हनुमता सार्धं भोजनेन कृतेन च।
इत्येवमादिकार्येण श्रीरामेण कृतेन च॥

१४. अतो रामावतारस्य मुख्यत्वं समजायत।
गीतोपनिषदं लोके प्राकाश्य विशदं यथा॥

१५. चरमार्थोपदेशाच्च गीतायां तत्र सादरम्।
भीष्मद्रोणकृपादीनां हित्वा सद्मानि सत्वरम्॥

१६. आदराज्ज्ञानपूतस्य विदुरान्नस्य भोजनात्।
द्विषदन्नादिवाक्येन तदा दुर्योधनादिके॥

---

கொண்டது. 3. ஜடாயுவுக்கு ப்₃ரஹ்மமேத₄ ஸம்ஸ்காரம் செய்தது. 4. ஶப₃ரி கையாலே கனிகள் உண்டது. 5. அன்போடு அனுமனுடன் ஸஹபோ₄ஜனம் செய்தது முதலான ஸௌஶீல்ய ஸௌலப்₄ய வாத்ஸல்யாதி₃ கல்யாணகு₃ணங்களைக் காட்டும செயல்களை ஸ்ரீராமபிரான் செய்கையாலே ஸ்ரீராமாவதாரத்துக்கு ப்ராத₄ான்யம் உண்டாயிற்று.

## கண்ணன் பெருமை

14*-*19. 1. இவ்வுலகில் கீ₃தோபநிஷத்தை வெளிப் படுத்தி அதில் அன்போடு சரமோபாயத்தைத் தெளிவாக உபதே₃ஶித்தது. 2. பீ₄ஷ்மர், த்₃ரோணர், க்ருபர், து₃ர்யோத₄நன முதலானவர்களுடைய வீடுகளை உபேக்ஷித்து, பரிவாலே பரிஶுத்₃த₄மான விது₃ரன் அளித்த அன்னத்தை விரைவில் அன்போடு உண்டது. 3. "த்₃விஷத₃ந்நம் ந போ₄க்தவ்யம் த்₃விஷந்தம் நைவ போ₄ஜயேத்। பாண்ட₃வாந் த்₃விஷஸே ராஜந்! மம ப்ராணா ஹி பாண்ட₃வா:॥" [ப₄ார-உத்-91-27] [எதிரியின் உணவை

१७. शत्रुगोष्ठ्यन्वयात्सर्वैर्निश्चयैन कृतेन च।
इत्येवमादिकार्येण श्रीकृष्णेन कृतेन च॥

१८. अतः कृष्णावतारस्य प्राधान्यं समजायत।
त्रयाणामवताराणां षड्गुणैश्वर्यशालिनाम्॥

१९. रक्षिताखिलजन्तूनां तेषां मुख्यत्वमीरितम्।
अयं जग्राह कृपया रङ्गेशो मुनिवाहनम्॥

२०. रङ्गस्थलस्य मुख्यत्वं तेनाभूत्तस्य भूतले।
साकं कुरङ्गपूर्णेन तोण्डमान् चक्रवर्तिना॥

---

உண்ணலாகாது. எதிரிக்கு ஒருபோதும் உணவிடலாகாது. அரசனே! நீ பாண்டவர்களை த்வேஷிக்கிறாய். எனக்குப் பாண்டவர்கள் உயிரன்றோ.] என்னும் வாக்யத்தைச் சொல்லி துர்யோதநன் முதலானோர் எதிரிகள் கோஷ்டியில் சேர்ந்தவர்கள் என்பதை ஸர்வநிஶ்சயமாக ஸ்தாபித்தது முதலான லோகோபகாரமான கார்யங்களைச் செய்தமையாலே க்ருஷ்ணாவதாரத்துக்கு முதன்மை ஏற்பட்டுள்ளது. இவ்வண்ணமாக எல்லா அவதாரங்களுக்குள்ளும் ஜ்ஞானம், பலம், ஐஶ்வர்யம், வீர்யம், ஶக்தி, தேஜஸ் என்னும் ஆறு குணங்களை மிகவும் வெளிப்படுத்தி எல்லா ஜீவராஶிகளையும் ரக்ஷித்த இம்மூன்று அவதாரங்களுக்கும் முக்யத்வம் ஏற்பட்டிருக்கிறது.

## திருவரங்கத்தின் பெருமை

19*-*20. இந்தத் திருவரங்கநாதன் முனிவாஹனரான திருப்பாணாழ்வாரைக் கருணையோடு ஏற்றுக்கொண்டான். அதனால் இவ்வுலகில் திவ்யதேஶங்களுக்குள் ஸ்ரீரங்கத்துக்கு முக்யத்வம் ஏற்பட்டது.

२१. संभाषणं च सततं चक्रे श्रीवेङ्कटेश्वरः।
प्राधान्यं वेङ्कटगिरेः सांप्रतं तेन हेतुना॥

२२. काञ्चीपूर्णेन सततं स्मितपूर्वाभिभाषणम्।
चकार वरदः श्रीमान् यतो हस्तिगिरीश्वरः॥

२३. मुख्यत्वं तेन सञ्जातं तदा काञ्चीस्थलस्य च।
दयां विधाय महतीं तस्मिन् सुचरितात्मजे॥

२४. सम्यक् भुक्त्वा महाप्रीत्या तेन दत्तान्नमादरात्।
कारयित्वा ततस्तेन राज्यं निहतकण्टकम्॥

२५. वर्धयामास तत्पुत्रं बहुकालं भुवःस्थले।
यतिराजस्य पुत्रत्वं सौशील्यातिशयेन च॥

---

### திருவேங்கடத்தின் சிறப்பு

20*-21. குயவரான குறும்பறுத்த நம்பியோடும், தொண்டைமான் சக்ரவர்த்தியோடும் திருவேங்கடமுடையான் எப்போதும் ஸம்பாஷித்துக் கொண்டிருந்தான். அதனால் திருவேங்கடமலைக்கு இப்போதும் முக்யத்வம் உள்ளது.

### அத்திகிரியின் சீர்மை

22-*23. அத்திகிரியருளாளனாய், ஸ்ரீய:பதியான வரதராஜன் திருக்கச்சிநம்பியோடு எப்போதும் புன்சிரிப்போடு பேசி வந்தான். ஆகையால் ஸ்ரீகாஞ்சியிலுள்ள அத்திகிரிக்கு முக்யத்வம் உண்டாயிற்று.

### திருநாராயணபுரத்தின் ஏற்றம்

23*-26. ஸுசரிதன் என்னும் ப்ராஹ்மணனுடைய சிறுவனை பிள்ளையிடம் மிகவும் கருணைகொண்டு அவன் அன்போடு கொடுத்த அன்னத்தை மிகவும் உகப்புடன் நன்கு புஜித்து, ததீயாராதனத்தில் ஈடுபட்ட ஸுசரிதனைக்

२६. प्रपेदे भगवान् विष्णुः तेन मुख्यत्वमागतम् ।
विष्णुस्थलेभ्यस्सर्वेभ्यो नारायणगिरेरतः ॥

२७. वेदव्यासस्तु भगवान् लोकसंरक्षणे स्थितः ।
वेदान् विधाय चतुरो लोके विस्तार्य तान् स्फुटम् ॥

२८. कर्मकाण्डब्रह्मकाण्ड वभागेन द्विधाऽकरोत् ।
कर्मकाण्डं वियुज्याशु ब्रह्मकाण्डे सुयुज्य तान् ॥

२९. छान्दोग्यं पौरुषं सूक्तं तथा वाजसनेयकम् ।
श्वेताश्वतं तैत्तिरीय महोपनिषदादिकान् ॥

---

கொண்டு அத்தே3ஶத்தை து3ஷ்டர்களேயில்லாதபடி செய்து, அவனுடைய பிள்ளையை இவ்வுலகில் நீண்டநாள் வாழச்செய்தான் திருநாராயணன்*. அவ்வெம்பெருமான் மிக்க நீர்மையாலே யதிராஜருக்குப் பிள்ளையாகவும் ஆனான். இதனாலேயே திருநாராயணபுரத்துக்கு மற்ற எல்லா விஷ்ணுஸ்த2லங்களைக் காட்டிலும ஏற்றம் ஏற்பட்டது.

## வேத3வ்யாஸரின் பெருமை

27-*32. ஜ்ஞானம் முதலான கு3ணங்கள் நிறைந்தவராய், உலகை ரக்ஷிப்பதில் ஊன்றியவரான வேத3வ்யாஸர், வேத3ங்களை நாலாகப்பிரித்து உலகில் அவற்றைத் தெளிவாகப் பரப்பி, (ஒவ்வொரு வேத3த்தையும்) கர்மகாண்ட3ம், ப்3ரஹ்மகாண்ட3ம் என்று இரண்டு பிரிவாக ஆக்கினார். சா2ந்தோ3க்3யம், புருஷஸூக்தம், ஶுக்லயஜுர்வேத3த்தைச் சேர்ந்த ஈஶாவாஸ்ய ப்3ருஹதா3ரண்யகங்கள், ஶ்வேதாஶ்வதரம், தைத்திரீயம், மஹோபநிஷத்து ஆகியவற்றை,

---

* இந்தச் சரித்திரம் நாரத3புராணத்தில் அடங்கிய திருநாராயணபுரமாஹாத்ம்யத்தில் உள்ளது; இது உப4ய வேதா3ந்தாசார்யபீட2பத்திரிகையில் துந்துபி ஆடி இதழில் ஸ்ரீ உ. வே. ஶதாபி4ஷேகம் கோ3விந்த3நரஸிம்ஹாசார்ய ஸ்வாமியால் சுருக்கமாக எழுதப்பட்டுள்ளது.

३०. इतिहासपुराणानि चक्रे तस्योपबृंहणम् ।
सत्यं सत्यं पुनस्सत्यमुद्धृत्य भुजमुच्यते ॥

३१. वेदशास्त्रात्परं नास्ति न दैवं केशवात्परम् ।
एवं निस्संशयं लोके स चक्रे तत्त्वनिर्णयम् ॥

३२. व्यासस्य तेन मुख्यत्वं सर्वर्षीणामभूत् ध्रुवम् ।
एवं प्रसिद्धमभवत् पुराणेषु च वैष्णवम् ॥

---

கர்மகாண்ட₃த்தை விட்டுப் பிரித்து ப்₃ரஹ்மகாண்ட₃த்தில் சேர்த்து (இப்படி வேத₃ங்களைப் பிரிக்கையாலே வேத₃ வ்யாஸர் என்று பெயர்பெற்றார்.) அந்த வேத₃த்துக்கு விளக்கமாக இதிஹாஸபுராணங்களையும், தாமேயும் பிறரைக் கொண்டும் செயதும், செய்வித்தும் பிரசாரம் செய்தார். "மூன்றுமுறை ஸதயம்செய்து கைதூக்கிச்சொல்லுகிறேன்; வேத₃த்தைக்காட்டிலும் மேலான ஶாஸ்த்ரம் கிடையாது; (அந்த வேத₃த்தில் பரம்பொருளாகச் சொல்லப்பட்ட) கேஶவனைக்காட்டிலும் மேலான தெய்வம் கிடையாது." என்று ஸத்யம்செய்து பரதத்வ நிர்ணயத்தை அவர் ஐயம் திரிபற இவ்வண்ணமாக நிலைநாட்டினார். அதனாலேயே எல்லா ரிஷிகளைக் காட்டிலும் வேத₃வ்யாஸருடைய ப்ராத₄ாந்யம் உறுதியாயிற்று.

## பராஶரரின் பெருமை

32*-*35. "**வேதே₃ஷு பௌருஷம் ஸூக்தம் த₄ர்ம ஶாஸ்த்ரேஷு மாநவம் । பா₄ரதே ப₄க₃வத்₃கீ₃தா புராணேஷு ச வைஷ்ணவம் ॥**" என்கிறபடியே வேத₃த்தில் புருஷஸூக்தமபோலவும், ஸ்ம்ருதிகளில் மனுஸ்ம்ருதி போலவும், பா₄ரதத்தில் ப₄க₃வத்₃கீ₃தைபோலவும் புராணங்களில் விஷ்ணுபுராணம் பிரஸித்₃தி₄பெற்றது. ஜ்ஞானம் முதலான கு₃ணங்கள் நிறைந்த முனிஶ்ரேஷ்ட₂ரான பராஶரர் தத்வம, ஹிதம் முதலானவற்றின் ஸாரங்களை அறிந்தவராய், புராணரத்னமான விஷ்ணுபுராணத்தை

३३. तत्त्वार्थसारनिचयं भगवान् वेद तत्त्वतः।
पुराणरत्नं संचक्रे मुनिवर्यः पराशरः॥

३४. चकार विशदं तत्र सम्यक् चिदचिदीश्वरान्।
तत्रोदार इति प्राह यामुनार्यः प्रणम्य तम्॥

३५. पराशरस्य प्राधान्यं तेनाभून्मुनिषु स्फुटम्।
ब्रह्मर्षिर्भगवान् चक्रे शुको भागवते स्फुटम्॥

३६. यत्तत्त्वनिर्णयं सम्यक् गङ्गातीरे परीक्षितम्।
शुको मुक्तो जगत्येवं प्रसिद्धो येन जायते॥

३७. इत्यादिकेन प्राधान्यं शुकस्यासीन्महात्मनः।
भगवान् शौनकश्चक्रे विष्णुधर्मोत्तरं महान्॥

---

இயற்றி, அதில் சித், அசித், ஈஶ்வரன் என்னும் தத்வங்களையும் (ஹிதம், புருஷார்த்த₂ம் முதலானவற்றையும்) தெளிவுபடுத்தினர். அதனாலேயே யாமுநாசார்யரான ஆளவந்தார் (தம் ஸ்தோத்ரரத்னத்தில் 4-வது ஶ்லோகத்தில்) அவரை வணங்கி, 'உதா₃ரர்' என்றும் புகழ்ந்தார். இதனாலேயே முனிவர்களுக்குள் பராஶரருக்கு முக்₂யத்வம் ஏற்பட்டது.

## ஶுகப்₃ரஹ்மரிஷியின் சீர்மை

35*-*37. ப்₃ரஹ்மரிஷியாய், ஜ்ஞானம் முதலான கு₃ணங்கள் நிறைந்தவரான ஶுகர் க₃ங்கைக்₃க் கரையிலே பரீக்ஷித்தைக் குறித்து ப₄ாக₃வதத்தில் தத்வநிர்ணயத்தைத் தெளிவாகச் செய்தார். இவ்வுலகிலிருக்கும்போதே முக்ததுல்யராய் வாழ்ந்தமையால் உலகில் ஜீவன்முக்தர் என்றே வழங்கப்பெற்றார். ("ஶுகோ முக்த:" என்று உபநிஷத்தும் வழங்கிற்று.) இத்தகைய பெருமையினால் மஹாத்மாவான ஶுகருக்கு முக்₂யத்வம் ஏற்பட்டது.

## ஶௌநகரின் சிறப்பு

37*-39. மிகப் பெரியவரான ப₄க₃வான் ஶௌனகர் விஷ்ணுத₄ர்மோத்தரத்தை இயற்றினார். (இது விஷ்ணு

३८. स्थलेष्वेवं च बहुषु सुमहत्तत्त्वनिर्णयम् ।
श्रीहरिर्भगवानेव जगज्जन्मादिकारणम् ॥

३९. ब्रह्मरुद्रादिदेवानां नियन्ता पुरुषोत्तमः ।
मोक्षप्रदः स चैवेमं विदधे तत्त्वनिर्णयम् ॥
महर्षेः शौनकस्येदं मुख्यत्वं तेन भाषितम् ॥

४०. भुजयुगमपि चिह्नैरङ्कितं यस्य विष्णोः
परमपुरुषनाम्नां कीर्तनं यस्य वाचि ।
ऋजुतरमपि पुण्ड्रं मस्तके यस्य कण्ठे
सरसिजमणिमाला यस्य तस्यास्मि दासः ॥

४१. श्रीवैष्णवानां दासोऽहं स्फुट देवर्षिराट् स्वयम् ।
इत्येव नारदः प्राह भगवान् लोकपावनः ॥

---

த₄ர்மம் என்றே வழங்கப்படுகிறது. விஷ்ணுபுராணத்தின் உத்தரபா₄க₃ம் விஷ்ணுத₄ர்மோத்தரம் என்று வழங்கப்படு கிறது.) இந்நூலில் பல இடங்களில் "ப₄க₃வான் ஸ்ரீஹரியே உலகைப் படைத்தளித்தழிக்கும் ஜக₃த்காரணப் பொருள்; புருஷோத்தமனன அவனே பிரமன், உருத்திரன் முதலான தே₃வர்களை நியமிப்பவன் மோக்ஷத்தை அளிப்ப வன் அவனே" என்று இவ்வண்ணமாக அவர் தத்வ நிர்ணயம் செய்தார். ஶௌனகமஹாிஷிக்கு இதனல் முக்₂யத்வம் சொல்லப்படுகிறது.

## நாரத₃ரின் ஏற்றம்

40-*42. எங்கும் ஸஞ்சாரம் செய்து மூவுலகையும் பரிஶுத்₃த₄ப்படுத்துமவரும், ஜ்ஞானம் முதலான கு₃ணங்கள் நிறைந்தவரும், தே₃வரிஷிகளில் தலைவருமான நாரத₃ர் "எவனுடைய இரண்டு தோள்களும் விஷ்ணுவின் ஶங்க₂ சக்ரங்களால் அடையாளம் செய்யப்பெற்றுள்ளனவோ, எவனுடைய வாக்கில் பரமபுருஷனுடைய திருநாமஸங்

४२. संप्राप्तं तेन मुख्यत्वं देवर्षेर्नारदस्य च ।
सहस्रशाखासंयुक्तदुर्गृहीतार्थसम्पदाम् ॥

४३. चतुष्टयानां वेदानामर्थानाहृत्य सत्वरम् ।
शठकोपमहायोगी प्रबन्धांश्चतुरः क्रमात् ॥

४४. सर्वाधिकारान् सहसा चक्रे द्राविडभाषया ।
प्रसन्नो नाथमुनये तान्सर्वानुपदिश्य सः ॥

४५. सर्वदर्शनतात्पर्यं वर्धयामास दर्शनम् ।
अनेन शठकोपस्य मुख्यत्वं समजायत ॥

४६. रङ्गराजादयः प्रोक्ताः प्रधानास्तत्र तत्र ये ।
तेष्वयं लक्ष्मणार्यः प्रधानोऽभूज्जगद्गुरुः ॥

---

கீர்த்தனம் விளங்குகிறதோ, எவனுடைய நெற்றியில் நேரான ஊர்த்₄வபுண்ட்₃ரமுள்ளதோ, எவனது கழுத்தில் தாமஸரமணிமாலை விளங்குகிறதோ அவனுக்கு நான் தா₃ஸனாகிறேன். ஸ்ரீவைஷ்ணவர்கள் அனைவருக்கும் நான் தா₃ஸன்" என்று தாமே தெளிவாக அருளிச்செய்தார். அதனாலேயே தே₃வரிஷியான நாரத₃ருக்கு முக்₂யத்வம் ஏற்பட்டது.

## நம்மாழ்வாரின் வைப₄வம்

42*-45. ஆயிரக்கணக்கான ஶாகை₂களோடு கூடி அறிவரியபொருட்பெருமையையுடைய நாலுவேத₃ங்களின் அர்த்த₂ங்களை உட்கொண்டு, மஹாயோகி₃யான நம்மாழ்வார் ஸர்வாதி₄காரமாகத் தமிழ்பாஷையிலே முறையே நாலு ப்ரப₃ந்த₄ங்களைச் சிறப்பாக அருளிச் செய்தார். நாத₂முனிக்கு அருள்கூர்ந்து அவை அனைத்தையும், எல்லா த₃ர்ஶனதாத்பர்யங்களையும் உபதே₃ஶித்து வைதி₃கத₃ர்ஶனத்தை வளர்த்தார். இதனாலேயே ஶட₂கோபருக்கு மற்ற ஆழ்வார்களைக் காட்டிலும் ப்ராதா₄ந்யம் ஏற்பட்டது.

४७. तेभ्यस्सर्वजनत्राता सर्वश्रेष्ठतमो ध्रुवम् ।
दीनाभयप्रदानार्थं विशदीकृत्य भूतले ॥

४८. गीताचार्योक्ततत्त्वार्थचरमार्थप्रकाशनम् ।
ऋषिप्रोक्तप्रमाणानां कृत्वा व्याख्यानमुत्तमम् ॥

४९. दिव्यप्रबन्धान् लोकेभ्यः शठकोपादिभिः कृतान् ।
अर्थोपदेशपर्यन्तं वर्धयित्वा च सर्वतः ॥

५०. नाथार्यादिगुरूणां च शठकोपादियोगिनाम् ।
आहृत्य व्याससूत्राणामर्थान् लोकहिताय च ॥

५१. श्रीभाष्यादिमहाग्रन्थान् विधाय करुणार्णवः ।
निर्जित्य सर्वसमयान् वादेन शतशोऽशुभान् ॥

---

## ஸ்ரீராமாநுஜரின் மஹா வைபவம்

46-55. இவ்வத்யாயத்தில் முக்கியமானவர்களாகச் சொல்லப்பட்ட ரங்கநாதன் முதலான அனைவரைக் காட்டிலும ஜகதாசார்யரான ஸ்ரீராமாநுஜரே முக்கியமானவராவார். அவர்களைக் காட்டிலும் இவரே எல்லா ஜனங்களையும் காப்பாற்றியவராகையாலே, இவரே அனைவரைக் காட்டிலும் சிறந்தவர் என்பது உறுதி. மிக்க எளியவர்களுக்கும ஸம்ஸாரபயத்தைப்போக்கித் தஞ்சமளிப்பதற்காக கீதாசார்யன் சொன்ன சரமச்லோகத்தின் பொருளை இவ்வுலகில் வெளிப்படுத்தி, தம் நூல்களில் விஷ்ணு புராணம் முதலான ரிஷிகள் இயற்றிய ப்ரமாணங்களுக்குச் சிறந்த வ்யாக்யானம் செய்து, நம்மாழ்வார் முதலானவர்களால் அருளிச்செய்யப்பட்ட திவ்யப்ரபந்தங்கள் அனைத்தையும் அர்த்தோபதேச பர்யந்தமாக உலகெங்கும் பரப்பி வளர்த்து, உலகின் நன்மைக்காக வ்யாஸர் அருளிய ப்ரஹ்மஸூத்ரங்களின் பொருளை வெளியிட்டு, ஸ்ரீபாஷ்யம், வேதாந்த ஸாரம, வேதாந்த தீபம என்னும் பெரிய நூலகளை அருளிச் செய்து, அமங்களமான பாஹ்ய குத்ருஷ்டி மதங்கள் அனைத்தையும வாததால் சிதறச்

५२. स्वमतस्थापनं कृत्वा स्वनाम्ना विष्णुदर्शनम् ।
रामानुजार्यसिद्धान्तमिति चक्रे यतीश्वरः ॥

५३. इत्यादिभिर्यतिश्रेष्ठः कार्ये लोकहिते रतः ।
नाथादिदेशिकेन्द्रेभ्यः प्रधानो भवति ध्रुवम् ॥

५४. अतश्च दाशरथ्यादिशिष्येभ्यो यतिपुङ्गवः ।
श्रेष्ठ इत्यत्र गदितुं का शङ्का वर्ततेऽधुना ॥

५५. तस्मादयं लक्ष्मणदेशिकेन्द्रः,
साक्षात् हरिर्लोकगुरुर्महात्मा ।
तस्यैव सम्बन्धबलेन तेन,
मोक्षो हि सिद्धो निखिलात्मकानाम् ॥

इति श्रीप्रपन्नामृते रामानुजचरित्रे
रामानुजस्य सर्वमुख्यत्ववर्णनं नाम द्विषष्टितमोऽध्यायः ॥

---

செய்து வென்று, நாத₃முனி முதலான ஆசார்யர்களுடைய வும், நம்மாழ்வார் முதலான ஆழ்வார்களுடையவும் திருவுள் ளம் உகந்த தம் மதத்தை நிலைநிறுத்தி, அந்த விஷ்ணுத₃ர்ஶ னத்தைத் தம் திருநாமத்தாலே ஸ்ரீராமாநுஜ ஸித்₃தா₄ந்தம் (எம்பெருமானார் த₃ர்ஶனம்) என்று புகழ்பெறச் செய்தார் கருணைக் கடலான யதிராஜர். இத்தகைய லோகஹிதமான கார்யங்களில் ஈடுபட்ட யதிராஜர் நாத₃முனிகள் முதலான ஆசார்யஶ்ரேஷ்டர்களைக் காட்டிலும் முக்₂யராகிறார் என்பது உறுதி. ஆகையால் முதலியாண்டான முதலான ஶிஷ்யர்களைக் காட்டிலும் யதிராஜர் சிறந்தவர் என்று சொல்லுவதில் இப்போது ஏதேனும் ஐயமுண்டோ? ஆகை யால் ஸ்ரீராமாநுஜர் நேரே எம்பெருமானின் அவதார மாகவும், லோகாசார்யராகவும், மஹாத்மாவாகவும் இருப் பவர். அவருடைய ஸம்ப₃ந்த₄ப₃லத்தினாலேயே எல்லாச் சேதனர்க்கும மோக்ஷம் ஸித்₃தி₄க்கிறதன்றோ.

ஸ்ரீப்ரபந்நாம்ருதத்தில் ராமாநுஜ சரித்திரத்தில்,
'ராமாநுஜர் அனைவரிலும் முக்₂யமானவர்' என வர்ணிக்கும்
அறுபத்திரண்டாம் அத்தியாயம் நிறைவுபெற்றது.

## त्रिषष्टितमोऽध्यायः

१. हरिणाऽऽज्ञापितोऽनन्तो लोकसंरक्षणाय सः।
अवतीर्णोऽभवद्भूम्यां सर्वलोकैकदेशिकः॥

२. रामानुजाभिधः श्रीमान् भगवान् करुणाकरः।
तत्सम्बन्धबलेनैव निरस्ताखिलकल्मषाः॥

३. कलावपि ध्रुवं मुक्तिं गमिष्यन्त्यखिला जनाः।
पापिष्ठः क्षत्रबन्धुश्च पुण्डरीकश्च पुण्यकृत्॥

४. आचार्यकृपया मुक्तौ तस्मादाचार्यवान् भवेत्।
आचार्यः स हरिः साक्षात् चररूपी न संशयः॥

---

## சரமோபாய நிர்ணயம்

### அவதார ரஹஸ்யம்

1-*3. எம்பெருமானலே உலகை ரக்ஷிப்பதற்காக நியமிக்கப்பட்ட ஆதி₃ஶேஷன், உலகுக்கெல்லாம் ஒரே ஆசார்யராய், கைங்கர்யச் செல்வம் நிறைந்தவராய், ஜ்ஞாநாதி₃கு₃ணங்களுக்கு இருப்பிடமாய், கருணைக்கோர் கொள்கலமான ராமாநுஜராக இவ்வுலகில் அவதரித்தான். இக்கலியுக₃த்திலும் எல்லா ஜனங்களும் அவரோடுள்ள தொடர்பின் வலிமையினலேயே எல்லாக் குற்றங்களும் நீங்கப்பெற்றவர்களாய் மோக்ஷத்தை நிச்சயமாக அடைவார்கள்.

### ஆசார்யன் பெருமை

3*-11. (ஆசார்யன் பெருமையை விளக்கும் பல ப்ரமாண வசனங்கள் பின்வருமாறு:—) "பாவம் நிறைந்த கத்திரபந்துவும், **புண்ணியம் புரிந்த புண்ட₃ரீகனும்** (ஆகிய இருவரும் வாசியற) ஆசார்யனின் கருணையால் முக்தி

५. मग्नानुद्धरते लोकान् कारुण्याच्छास्त्रपाणिना ।
आचिनोति च शास्त्रार्थान् आचारे स्थापयत्यपि ॥

६. स्वयमाचरते यस्तु आचार्यस्सोऽभिधीयते ।
गुशब्दस्त्वन्धकारः स्यात् रुशब्दस्तन्निरोधकः ॥

७. अन्धकारनिरोधित्वात् गुरुरित्यभिधीयते ।
गुरुरेव परं ब्रह्म गुरुरेव परा गतिः ॥

८. गुरुरेव परा विद्या गुरुरेव परं धनम् ।
यस्मात्तदुपदेष्टासौ तस्मात् गुरुतरो गुरुः ॥

९. युक्तप्रमाणैरित्युक्तो भगवान् हरिरीश्वरः ।
स्वयमेव गुरुर्भूत्वा शिष्यान् संरक्षति ध्रुवम् ॥

१०. तस्मात्सर्वविधो बन्धुर्गुरुरेव न संशयः ।
माता पिता सखा भ्राता धनं वै सर्व एव सः ॥

---

பெற்றனர். ஆகையால் சேதனன் ஆசார்யனை அடைய வேண்டும். ஆசார்யனே நேரே நடமாடும் பரமபுருஷன்; இதில் ஐயமில்லை. தே₃வனான நாராயணனே மனித வுருவை எடுத்துக்கொண்டு சாஸ்திரமாகிற கையினாலே ஸம்ஸாரத்தில் அழுந்திக் கிடப்பவர்களைத் தூக்கிவிடுகிறான். எவனொருவன் சாஸ்திரார்த்த₂ங்களைச் சேகரித்துத் தானும் அவற்றின்படி நடந்துகாட்டிப் பிறரையும் ஆசாரத்தில் நிலைநிறுத்துகிறானோ அவனே ஆசார்யன் எனப்படுவான். கு₃ஶப்₃த₃ம் இருளைக் குறிப்பது; 'ரு' ஶப்₃த₃ம் அதன் அழிவைக் குறிப்பது: இருளை அழிப்பவனாகையாலே ஆசார்யன் கு₃ரு எனப்படுகிறான். கு₃ருவே மேலான ப்₃ரஹ்மம்; கு₃ருவே மேலான ப்ராப்யம்; கு₃ருவே மேலான கல்வி; கு₃ருவே மேலான செல்வம்; அப்பரம்பொருளையே உபதே₃ஶிப்பதால் கு₃ரு அதைக்காட்டிலும் உயர்ந்தவர்." தக்க ப்ரமாணங்களாலே இவ்வண்ணமாகக் கூறப்படும்

११. अष्टोत्तरशतं दिव्यदेशाश्चान्यस्थलानि च।
अत्रामुत्र च शिष्यस्य रक्षको गुरुरेव हि॥
१२. आचार्यमूर्तिर्योगीन्द्रे तस्मिन्नेव प्रतिष्ठिता।
तत्पादपद्मकैङ्कर्यं परमप्राप्यमेव हि॥
१३. अतो गोविन्दकूरेशदाशरथ्यादिदेशिकाः।
श्रीपराशरभट्टादिशिष्येभ्यः सादरं हितम्॥
१४. एवमाहुर्यतीन्द्रस्य पदमेव हि रक्षकम्।
मध्ये स्थिता महात्मानः शठजिद्यतिराजयोः॥

---

பூகவானாய் ஈஶ்வரனாகிற ஹரி தானே ஆசார்யனாகி ஶிஷ்யர்களை உறுதியாக ஸம்ரக்ஷிக்கிறான். ஆகையால் ஆசார்யரே எல்லாவகை உறவினருமாவார். இதில் ஐய மில்லை. தாய், தந்தை, நண்பன், ஸஹோதரன், செல்வம் ஆகிய அனைத்துமே ஆகிறார் ஆசார்யர். நூற்றெட்டு திவ்யதேஶங்களும் மற்ற ஸ்தலங்களும் ஆசார்யரே ஆவார். இம்மையிலும் மறுமையிலும் ஶிஷ்யனை ரக்ஷிப்பவர் ஆசார்யரேயன்றோ.

## பூர்ணாசார்யர் யதிராஜரே

12-*14. முற்கூறிய ஆசார்ய ஸ்வரூபம் யதிராஜ ரிடமே நிலைநிற்கிறது. அவருடைய திருவடித்தாமரை களில் கைங்கர்யம் செய்வதே பரமப்ராப்யமன்றோ. ஆகை யாலே 'கோவிந்தர்' எனும் எம்பார், கூரத்தாழ்வான், முதலியாண்டான் முதலான ஆசார்யர்கள் ஸ்ரீபராஶர பட்டர் முதலான தங்களுடைய ஶிஷ்யர்களுக்கு 'யதி ராஜருடைய திருவடிகளே தஞ்சம்' என்னும் இதையே அன்போடு ஹிதோபதேஶமாக அருளினார்கள்.

## நம்மாழ்வாரும் எம்பெருமானாரும்

14*-18. நம்மாழ்வாருக்கும் யதிராஜருக்கும் இடையி லிருந்த நாதமுனிகள் முதலானோர் நம்மாழ்வாருக்கு

१५. आसन् करणभूतास्ते नाथाद्याः ये शठद्विषः।
शठकोपस्ततः साक्षात् गुरुर्यतिपतेरभूत् ॥

१६. अतश्शठारिः कालज्ञः कलिर्नष्टादिकं वचः।
रामानुजावतारस्य सूचकं व्याजहार ह ॥

१७. अतश्शठजितः शिष्यः साक्षाद्रामानुजोऽभवत्।
प्रवर्तितं शठजिता येनेदं विष्णुदर्शनम् ॥

१८. रूढमूलं च संस्थाप्य तज्जगत्यां यतीश्वरः।
प्रकाशयामास तदा वकुलाभरणं यतः ॥

१९. महापूर्णादयस्सर्वे यतीन्द्रस्य जगद्गुरोः।
एते च देशिका भूत्वा संप्राप्ताः परमं पदम् ॥

---

அவயவமாயிருப்பவர்கள். ஆகையால் நம்மாழ்வார் யதி ராஜருக்கு நேரே ஆசார்யரானார். அதனாலேயே முக் காலமும் உணர்ந்த நம்மாழ்வார் ராமாநுஜரின் அவதா ரத்தை உணர்த்தும் “கலியும் கெடும் கண்டுகொண் மின்” [திருவாய் 5-2-1] என்னும் பாசுரத்தை அருளிச் செய்தார். ஆகையால் நம்மாழ்வாருக்கு ராமாநுஜர் நேரே ஶிஷ்யரானார். நம்மாழ்வாராலே பரப்பப்பெற்ற இந்த விஷ்ணுத₃ர்ஶனத்தை இவ்வுலகில் நன்கு வேரூன றும்படி நிலைநிறுத்தி, ‘இந்த த₃ர்ஶனத்துக்குக் கூடஸ்த₂ர் மகிழ்மாலை மார்பினரான நம்மாழ்வாரே’ என்பதையும் வெளிப்படுத்தினாரன்றோ யதிராஜர்.

## எம்பெருமானார் ஸம்ப₃ந்த₄த்தாலேயே அனைவருக்கும் முக்தி

19-23. பெரிய நம்பிகள் முதலான பூர்வாசார்யர்கள் அனைவரும் ஜக₃த்₃கு₃ருவான யதிராஜருக்கு ஆசார்ய ர் களாயிருந்து பரமபத₃த்தை அடைந்தார்கள். ” முதலி

११. अष्टोत्तरशतं दिव्यदेशाश्चान्यस्थलानि च।
अत्रामुत्र च शिष्यस्य रक्षको गुरुरेव हि॥

१२. आचार्यमूर्तिर्योगीन्द्रे तस्मिन्नेव प्रतिष्ठिता।
तत्पादपद्मकैङ्कर्यं परमप्राप्यमेव हि॥

१३. अतो गोविन्दकूरेशदाशरथ्यादिदेशिकाः।
श्रीपराशरभट्टादिशिष्येभ्यः सादरं हितम्॥

१४. एवमाहुर्यतीन्द्रस्य पदमेव हि रक्षकम्।
मध्ये स्थिता महात्मानः शठजिद्यतिराजयोः॥

---

பூகவானுய் ஈஶ்வரனுகிற ஹரி தானே ஆசார்யனுகி ஶிஷ்யர்களை உறுதியாக ஸம்ரக்ஷிக்கிருன். ஆகையால் ஆசார்யரே எல்லாவகை உறவினருமாவார். இதில் ஐய மில்லை. தாய், தந்தை, நண்பன், ஸஹோதூரன், செல்வம் ஆகிய அனைத்துமே ஆகிருர் ஆசார்யர். நூற்றெட்டு திவ்யதேஶங்களும் மற்ற ஸ்தலங்களும் ஆசார்யரே ஆவார். இம்மையிலும் மறுமையிலும் ஶிஷ்யனை ரக்ஷிப்பவர் ஆசார்யரேயன்ருே.

## பூர்ணுசார்யர் யதிராஜரே

12-*14. முற்கூறிய ஆசார்ய ஸ்வரூபம் யதிராஜ ரிடமே நிலைநிற்கிறது. அவருடைய திருவடித்தாமரை களில் கைங்கர்யம் செய்வதே பரமப்ராப்யமன்ருே. ஆகை யாலே 'கோவிந்தர்' எனும் எம்பார், கூரத்தாழ்வான், முதலியாண்டான் முதலான ஆசார்யர்கள் ஸ்ரீபராஶர பட்டர் முதலான தங்களுடைய ஶிஷ்யர்களுக்கு 'யதி ராஜருடைய திருவடிகளே தஞ்சம்' என்னும் இதையே அன்போடு ஹிதோபதேஶமாக அருளினுர்கள்.

## நம்மாழ்வாரும் எம்பெருமானுரும்

14*-18. நம்மாழ்வாருக்கும் யதிராஜருக்கும் இடையி லிருந்த நாதமுனிகள் முதலானுர் நம்மாழ்வாருக்கு

२५. नित्यं कृतज्ञता तेन शिष्येणात्महितैषिणा ।
स्वरूपोज्जीवनार्थाय गुरुरेव हि कारणम् ॥

२६. ऋते गुरोस्ततस्तस्य नान्योपायो हि विद्यते ।
अर्थो मधुरकव्यादिसज्जनेषु स्थितो ह्ययम् ॥

२७. क्रिमिकण्ठस्य चोलस्य व्याजेन यतिपुङ्गवः ।
पश्चिमं देशमासाद्य तत्र वासमथाऽकरोत् ।।

२८. तत्रत्यास्ते महात्मानः शास्त्रोपन्यासमादरात् ।
श्रुत्वा रामानुजार्यस्य विस्मयं परमं गताः ॥

२९. ततस्तान्वैष्णवान् दृष्ट्वा यतीन्द्रो वाक्यमब्रवीत् ।
एतावन्मात्रमधुना मया लोकहितं कृतम् ॥

---

## ஆசார்யனே அந்திமோபாயம்

24-26. ஆகையால் இங்கும் பரமபதத்திலும் ஶிஷ்யனை ரக்ஷிப்பவர் ஆசார்யரே ஆவாரன்றோ. இக்காரணத்தால் தனக்கு நன்மையை விரும்பும் ஶிஷ்யன் ஆசார்யன் விஷயத்தில் ஆயுள் உள்ளவரையில் தினந்தோறும் நன்றி பாராட்டவேண்டும். ஶிஷ்யனுடைய ஸ்வரூபம் உய்வதற்கு ஆசார்யரன்றோ காரணம். ஆகையால் ஆசார்யனைத் தவிர வேறு மோக்ஷோபாயம் இல்லை. அந்திமோபாயமான ஆசார்யனிடம் ஊன்றிநிற்கும் இந்த நிஷ்டை மதுரகவியாழ்வார் முதலான பெரியோர்களிடம் இருப்பதன்றோ.

## எம்பெருமானைக்காட்டிலும் சிறந்தவர் எம்பெருமானார்

27-34. சோழ அரசனை க்ருமிகண்டனுல் விளைந்த உபத்ரவத்தை வ்யாஜமாகக்கொண்டு யதிராஜர் மேல் நாட்டை அடைந்து அங்கு சில வருஷங்கள் வஸித்தார். அங்கிருந்த மஹாபுருஷர்கள் ராமாநுஜருடைய ஶாஸ்த்ரோபந்யாஸங்களை ஆர்வத்தோடு கேட்டு எல்லையற்ற

३०. दृष्ट्वाऽस्मत्परमाचार्यग्रन्थानादाय वैष्णवाः ।
महात्मनो यामुनस्य सहवासं तु सन्निधौ ॥

३१. एकस्मिन् दिवसे वापि संप्राप्तो यद्यहं तदा ।
वैकुण्ठलोकसौधानां भूलोकस्यास्य संप्रति ॥

३२. दृढं विधाय सहसा सोपानानि निरन्तरम् ।
तन्मार्गेण जनान्सर्वान् प्रापयिष्यामि तं हरिम् ॥

३३. तस्माद्यतीन्द्रसामर्थ्यमीश्वरस्यापि नास्ति हि ।
ततो यतीन्द्रसम्बन्धात् पापात्मा ह्यपि मुक्तिभाक् ॥

३४. यः पञ्चमोपायमिमं महार्थं ज्ञात्वा यतीन्द्रे दृढभक्तियुक्तः ।
स एव मुक्तोऽखिलतत्त्ववेत्ता वन्द्यः कृतार्थोऽखिलमानवानाम् ॥

इति श्रीप्रपन्नामृते रामानुजचरिते
आचार्यवैभववर्णनं नाम त्रिषष्टितमोऽध्यायः ॥

---

வியப்பை எய்தினர். அப்போது அந்த வைஷ்ணவர்களைப் பார்த்து யதிராஜர் “வைஷ்ணவர்களே! என்னுடைய பரமாசார்யரான ஆளவந்தாருடைய க்₃ரந்த₂ங்களை ஸேவித்ததன்மூலமே என்ஞல் இவ்வுலகுக்கு இவ்வளவு நன்மை செய்யப்பட்டது. மஹாபுருஷரான யாமுஞசார்ய ருக்கு அருகில் ஒருநாளாவது நான் கூடிவாழ்ந்திருந்தே ஞகில் வைகுண்ட₂லோகத்துக்கும் இந்த பூ₄லோகத்துக்கும் உறுதியான ஶாஶ்வதமான படிக்கட்டுகளை விரைவிலேயே கட்டி அதன்வழியாக எல்லா ஜனங்களையும் எம்பெருமானை அடைவித்திருப்பேன்” என்று அருளினுர். ஆகையால் யதிராஜருடைய திறமை ஈஶ்வரனுக்கும் இல்லையன்ருே. யதிராஜரின் ஸம்ப₃ந்த₄த்தால் பாபியும் முக்தி அடைவா னன்ருே. எவனெருவன் “கர்ம ஜ்ஞான ப₄க்தி ப்ரபத்திக ளுக்கு மேற்பட்ட ஐந்தாவது உபாயம் எம்பெருமானுர் ஸம்ப₃ந்த₄மே” என்ற இந்த அரும்பொருளை அறிந்து

चतुष्षष्टितमोऽध्यायः

१. श्रीमद्रामायणे युद्धकाण्डे श्रीराघवं प्रति ।
विभीषणेन या पूर्वं कृता हि शरणागतिः ॥

२. कदाचिद्रङ्गनगरे स्वमठे तां यतीश्वरे ।
ब्रुवत्यस्मिन्महाभागे वैष्णवेभ्यश्च सादरम् ॥

३. सभामध्यात्समुत्थाय धनुर्दासस्तु सत्वरम् ।
तस्थौ विरक्तस्तद्ग्रन्थे गमनायोपचक्रमे ॥

---

யதிராஜரிடம் உறுதியான பக்தியுடன் இருக்கிருனே அவனே எல்லாத் தத்துவங்களேயும் அறிந்தவனுய், பிறவிப்பயன் பெற்றவனுய், எல்லா மனிதர்களாலும் வணங்கத்தக்கவனுய் முக்தியையும் அடைகிருன்.

ஸ்ரீப்ரபந்நாம்ருதத்தில் ராமாநுஜ சரித்திரத்தில்,
ஆசார்ய வைபவ வர்ணனமாகிற அறுபத்துமூன்ரும் அத்தியாயம்
நிறைவுபெற்றது.

## அறுபத்துநாலாம் அத்தியாயம்

## ஸ்ரீராமாநுஜ மந்த்ர ப்ரபாவம்

### ஸ்ரீராமாயணேபந்யாஸ நிகழ்ச்சி

1-3. ஸ்ரீமத்ராமாயணத்தில் யுத்தகாண்டத்தில் ஸ்ரீராமபிரானேக்குறித்து விபீஷணுழ்வான் முற்காலத்தில் ஶரணுகதி அனுஷ்டித்த செய்தியை — மஹாத்மாவான யதிராஜர் ஒரு சமயம் திருவரங்கப்பெருநகரில் தமது மடத்தில் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு அன்போடு உபந்யஸித்துவரும்போது, (அந்த ஸபையிலிருந்து கேட்டுக்கொண்டிருந்த)பிள்ளேயுறங்காவில்லிதாஸர், அக்கதையைக் கேட்பதில் விருப்பமற்றவராய் ஸபைநடுவிலிருந்து எழுந்திருந்து விரைவில் வெளியே புறப்படத் தொடங்கினுர்.

४. तं दृष्ट्वा लक्ष्मणाचार्यो धनुर्दासं महामतिम्।
शृण्वतां सर्वविदुषां व्याजहार वचः शुभम्॥

५. किमर्थमुत्थितोऽसि त्वं धनुर्दासाद्य सत्वरम्।
ब्रूहि तत्कारणं मह्यं वैराग्याद्वैष्णवोत्तम!॥

६. निशम्य लक्ष्मणार्यस्य वचनं यतिभूपतेः।
कृताञ्जलिरुवाचेदं धनुर्दासो यतीश्वरम्॥

७. परित्यक्ता मया लङ्का मित्राणि च धनानि च।
भवद्गतं मे राज्यं च जीवितं च सुखानि च॥

८. इत्येवमुक्त्वा सहसा राक्षसेन्द्रो विभीषणः।
त्यक्त्वा पुत्रांश्च दारांश्च राघवं शरणं गतः॥

---

## விபீ4ஷணஶரணாக3தித்துவம்

4-33. எழுந்துசெல்லும் பேரறிவாளரான அவ்வுறங்கா வில்லியைப் பார்த்து, அங்குள்ள வித்3வான்கள் அனைவரும் கேட்டுக்கொண்டிருக்கும்போதே ஸ்ரீராமானுஜர் "வைஷ்ணவோத்தமனே! த4நுர்தா3ஸா! நீ விரைவாக வைராக்3யத்துடன் எழுந்துசெல்லும் காரணத்தைக் கூறுவாயாக" என்னும் மங்க3ளமான வார்த்தையை அருளினார். யதிராஜருடைய அவ்வார்த்தையைக் கேட்டு, கைகூப்பியவராய் உறங்காவில்லி அவரைப்பார்த்துப் பின்வருமாறு விண்ணப்பித்தார்:—" 'என்னால் லங்கையும், நண்பர்களும், செல்வங்களும் கைவிடப்பட்டன. எனது ராஜ்யமும், வாழ்க்கையும், இன்பங்களும் தேவரீரிடமே அடங்கியுள்ளன' என்று கூறி அரக்கர் தலைவனான விபீ4ஷணன் மனைவி மக்களைவிட்டு ராமபிரானைச் சடக்கென ஶரணமடைந்தான். ப4க3வான், விஷ்ணு, ஹரி எனப்படும் எம்பெருமானின் அவதாரமான ராமபிரானை அப்படி ஶரணமடையும்போது, மனைவி மக்கள் முதலான விரோதி4களனைத்தையும் கைவிட்டுப்

९. यत्समाश्रयणे नित्यं विष्णोर्भगवतो हरेः ।
दारापत्यादिरूपं च तत्सर्वप्रतिषेधकम् ॥

१०. त्यक्त्वा विभीषणो धीमान् अनन्यगतिकस्तदा ।
इक्ष्वाकुवंशसंभूतरामपादाब्जमेव मे ॥

११. दृढं च रक्षकं मत्वा न निधाय पदं भुवि ।
गगनस्थो निरालम्बस्तस्थौ किल कृताञ्जलिः ॥

१२. बध्यतां वध्यतामेव पापोऽयं रावणानुजः ।
इति शैलांश्च वृक्षांश्च समुत्पाट्याञ्जसा तदा ॥

१३. वृक्षपर्वतहस्ताश्च तस्थुर्वानरपुङ्गवाः ।
नखदंष्ट्रायुधैरेतैः वानरैर्युद्धदुर्मदैः ॥

१४. सुसंयुक्ता रामगोष्ठी ममालं यतिपुङ्गव ! ।
पुत्रमित्रकलत्रादिसहितस्य दिवानिशम् ॥

---

பேரறிவாளனான விபீ4ஷணன் வேறு க3தியற்றவனாய் ‘இக்ஷ்வாகுகுலத்துதித்த ராமபிரானுடைய திருவடித் தாமரையே என்னை நிஶ்சயமாக ரக்ஷிக்கும்’ என்று எண்ணி, பூ4மியில் கால்வைக்காமல், ஆகாஶத்திலேயே ஆதாரமில்லாமல் கைகூப்பிநின்றானன்றோ! ‘ராவணனுடைய தம்பியாய்ப் பாபியான இவனைக் கட்டவேண்டும், கொல்லவேண்டும்’ என்று வாநரர்தலைவர்கள் மலைகளையும், மரங்களையும் வேரோடு பிடுங்கி (விபீ4ஷணனைக் கொல்வதற்காக) அவற்றைக் கையில் ஏந்திநின்றார்கள் யதிராஜரே! நக2ங்களையும் பற்களையும் ஆயுத4ங்களாகக் கொண்டவர்களாய், யுத்3த4 வெறிகொண்டவர்களான வானரர்களுடன் மிகப் பொருந்தியிருக்கும் இந்த ராமகோ3ஷ்டி2 இரவும் பகலும் மனைவி மக்களோடும் நண்பர்களோடும் உழன்றுகொண்டிருக்கும் அடியேனுக்கு ஒத்துவராது” என்று கூறிய உறங்காவில்லியின் வார்த்தையைக் கேட்டு, யதிராஜர் தலைசிறந்த

१५. धनुर्दासस्य वचनं तदाकर्ण्य यतीश्वरः।
शृण्वतां विबुधेन्द्राणां प्रोवाचेदं वचः शुभम्॥

१६. शृणु वत्स! प्रवक्ष्यामि हितं तव महामते!।
यद्यहं प्राप्नुयां मुक्तिं त्वं चापि प्राप्स्यसि ध्रुवम्॥

१७. यदि प्राप्तो महापूर्णः प्राप्स्येऽहं परमं पदम्।
मुक्तश्चेद्यामुनाचार्यः पूर्णार्यो मुक्तिभाक् भवेत्॥

१८. इत्येवं पूर्वगुरवः प्राप्ता यदि परं पदम्।
तेषां शिष्या गमिष्यन्ति कृपयात्र न संशयः॥

१९. असच्छठारिः स्वगिरा प्राप्तवानस्म्यहं दृढम्।
परं पदं स्वप्रबन्धे प्रोवाचेदं किल स्वयम्॥

---

வித்₃வான்சள் அனைவரும் கேட்டுக்கொண்டிருக்கும்போதே இந்த மங்க₃ளமான வார்த்தையை அருளினர்:—"பேரறிவாளனே! பிள்ளாய்! உனக்கு நல்லதைச் சொல்லுகிறேன் கேளாய்! நான் முக்தியடைவது உறுதியாகில் நீ முக்தியடைவதும் உறுதியன்றோ. பெரியநம்பி பரமபத₃மடைந்திருப்பார் என்பது உறுதியாகில் நான் பரமபத₃ம் அடைவேன் என்பதும் உறுதியன்றோ. ஆளவந்தார் முக்தியடைந்தார் என்பது உறுதியாகில் பெரியநம்பி முக்தியடைந்தார் என்பது உறுதியன்றோ. இவ்வண்ணமாகவே (நாத₂முனிசள் முதலான) பூர்வாசார்யர்கள் பரமபத₃த்தை அடைந்தார்கள் என்பது உறுதியாகில் (உய்யக்கொண்டார் முதலான) அவர்களுடைய *ஶிஷ்யர்*களும் அவர்களது அருளாலே பரமபத₃மடைந்தார்கள் என்பதிலும் ஐயமில்லை. நம்முடைய குலபதியான நம்மாழ்வார் "சூழ்விசும்பணி முகில், முனியே நான்முகனே" என்னும் தமது திருவாய்மொழியின் கடைசிப் பதிகங்கள் இரண்டிலும் தாம் உறுதியாகப் பரமபத₃மடையப்போவதை (ஜ்ஞானஸாக்ஷாத்காரத்தாலே கண்டு) தாமே தம் சோதிவாய் திறந்து அருளிச்

२०. अतोऽस्मच्छठकोपस्य सिद्धत्वात्परमं पदम्।
सिद्धमेव तथाऽस्माकमिति निश्चित्य वर्तय॥

२१. लक्ष्मीपुरुषकारेण मोक्षः सिद्धोऽखिलात्मनाम्।
नित्ययोगमतः प्राप्ता हरिणा जगदीश्वरी॥

२२. एकस्मिन् शृङ्खले लग्नाः नित्यसंसारिणो वयम्।
लक्ष्म्या सह जगन्मात्रा भगवांश्च जगत्पतिः॥

२३. एतच्छृङ्खललग्नानां मध्ये तेषां महात्मनाम्।
यो वा को वा भवेन्मुक्तिं संप्राप्तो यदि सुव्रत!॥

२४. प्राप्स्यामो हि वयं सर्वे मोक्षमत्र न संशयः।
चत्वारो राक्षसास्तत्र ते विभीषणमन्त्रिणः॥

२५. न चक्रुः किल तं रामं पृथग्वा शरणागतिम्।
रामचन्द्रोऽपि भगवान् तदा तान् राक्षसोत्तमान्॥

---

செய்தாரன்றே. ஆகையால் நமது ஶடகோபருக்குப் பரமபதம் நிஶ்சயமாகையாலே நமக்கும் பரமபதம் நிஶ்சயம் என்று உறுதிபூண்டிருப்பாயாக. பெரியபிராட்டியாரைப் புருஷகாரமாகக் கொள்வதால் எல்லாச் சேதனர்க்கும் மோக்ஷம் ஸித்திக்கும். அதற்காகவே ஜகந்மாதாவான அவள் எம்பெருமானை விட்டுப் பிரியாமல் இருக்கிறாள். அநாதிகாலமாக ஸம்ஸாரிகளாயிருந்த நாம் அனைவரும் ஜகந்நாதனான எம்பெருமானும் ஜகன்மாதாவான லக்ஷ்மியோடுகூட ஒரே சங்கிலியால் பிணைக்கப்பட்டிருக்கிறோம். நல்ல உறுதிபூண்டவனே! இந்தச் சங்கிலியால் பிணைக்கப் பட்ட அந்த மஹாபுருஷர்களுக்குள் எவரேனும் ஒருவர் முக்தியடைந்தாரெனிலும் நாம் அனைவரும் மோக்ஷமடைவோம் என்பதில் ஐயமில்லை. விபீஷணனின் மந்திரிகளாயிருந்த அந்த நாலு ராக்ஷஸர்களும் ராமனைத் தனியாக ஶரணமடையவில்லையன்றே. ராமசந்த்ரனான எம்பெருமா

२६. संरक्षणे तथैकैकमाहूय न च रक्षति।
अतोऽहं समनुप्राप्तः यदि विष्णोः परं पदम्॥

२७. गमिष्यसि तदैव त्वं यत्पदं प्राप्यते मया।
अर्थेऽस्मिन्निश्चलमतिः सुखमत्र वसाधुना॥

२८. आश्रयामास भरतं शत्रुघ्नः स तमेव हि।
अनुसृत्य शठारातिं तस्थौ स मधुरः कविः॥

२९. गोदा तु विष्णुचित्तार्यं तमाश्रित्यैव संस्थिता।
एवमन्ये महात्मानो गुरुमेव समाश्रिताः॥

३०. कारणं भगवत्प्राप्तेः ततः सद्गुरुवर्तनम्।
आचार्यपरमाचार्याननुसृत्यैव वर्तयेत्॥

३१. वर्तते ज्ञानसंपन्नो यत्र यत्र हि देशिकः।
दिव्यदेशादयस्सर्वे वर்तन्ते तत्र तत्र हि॥

---

ணும் அந்த ராக்ஷஸோத்தமர்களை ரக்ஷிக்கும்போது ஒவ்வொருவனையும் தனியாகக் கூப்பிட்டு (ஆராய்ந்து) ரக்ஷிக்கவில்லையே. ஆகையால் நான் விஷ்ணுவின் பரமபத₃ம் அடைந்தேனெனில், என்னால் அடையப்பட்ட பரமபத₃த்தை அப்போதே நீயும் அடைந்தவனாவாய். ஆகையால் இப்போது இவ்விஷயத்தில் உறுதிகொண்ட மனத்தினனாய் இனிது வாழ்வாயாக. (ஸ்ரீராமபிரானை ஆஶ்ரயித்த) ப₄ரதனை ஆஶ்ரயித்து ஶத்ருக்₄னன் வாழ்ந்துபோனான். நம்மாழ்வாரைப் பற்றி நின்று மது₄ரகவியாழ்வார் நிலைநின்றார். விஷ்ணுசித்தராகிய பெரியாழ்வாரை ஆஶ்ரயித்து ஆண்டாள் பேறுபெற்றாள். இவ்வண்ணமே மற்ற மஹாபுருஷர்களும் ஆசார்யநிஷ்டை₂யிலேயே ஊன்றியிருக்கிறார்கள். ஆகையால் ஆசார்யகைங்கர்யம் ப₄க₃வத்ப்ராப்திக்குக் காரணமாகிறது. ஆசார்ய பரமாசார்யர்களைப் பின்பற்றியே சேதனன் வாழவேண்டும். ஜ்ஞானமுடையவனான

३२. पुराविदो वदन्त्येवं वासस्थानं श्रियःपतेः ।
धनुर्दासश्च ते सर्वे तत्तत्या विबुधोत्तमाः ॥

३३. श्रुत्वा यतीन्द्रवचनं सर्ववेदान्तसम्मतम् ।
सन्तोषं परमं जग्मुः प्राप्ततत्त्वार्थसम्पदः ॥

३४. अतो यतीन्द्रसम्बन्धः परमं मोक्षसाधनम् ।
तत्पादपद्मकैङ्कर्यं परमं प्राप्यमेव तत् ॥

३५. श्रीवैकुण्ठो वेङ्कटाद्रिर्वारणाद्रिश्च यः स्मृतः ।
मुख्यस्थानं भगवतो विष्णोस्सर्वात्मकस्य च ॥

३६. तेषु स्थलेषु सर्वेषु ह्यष्टोत्तरशतेषु च ।
वासुदेवादयो देवाः स्वामिनो ये समास्थिताः ॥

---

ஆசார்யன் எங்கெங்கு வாழ்கிறானோ, அங்கங்கு திவ்ய தேஶங்கள் அனைத்துமே இருக்கின்றனவன்றோ. முன்னோர்கள் ஸ்ரீய:பதியின் வாஸஸ்தானத்தை இப்படியேயன்றோ கூறுகிறார்கள்" என்று யதிராஜர் வேதாந்தங்களின் நிர்ணயமான வார்த்தையைக் கூறியதைக்கேட்டு, அங்கு கூடியிருந்த வித்வான்கள் அனைவரும், உறங்காவில்லியும் உண்மைப்பொருளாகிய செல்வத்தை அடைந்தவர்களாய், பேரானந்தம் எய்தினர்.

## எம்பெருமானார் ஸம்பந்தமே மோக்ஷஸாதனம்

34-42. ஆகையால் யதிராஜருடைய ஸம்பந்தமே மேலான மோக்ஷஸாதனமாகும். அவர் திருவடித் தாமரையில் கைங்கர்யம் செய்வதே மேலான ப்ராப்யமாகும். ஸ்ரீவைகுண்டம், திருவேங்கடமலை, அத்திகிரி என்று தொடங்கி, ஸர்வாந்தர்யாமியான விஷ்ணுவாகிற எம்பெருமானுக்கு முக்யமான இருப்பிடங்களாக உள்ள நூற்றெட்டு திவ்ய தேஶங்களில் எழுந்தருளியிருக்கும் பரவாஸுதேவன் முதலான எம்பெருமான்கள் அனைவரும் ஸ்ரீபெரும்பூதூரில்

३७. ते सर्वे वसतस्तस्य भूतपुर्यां जगद्गुरोः ।
भाष्यकारस्य हृदये वासस्थानं प्रपेदिरे ॥

३८. अतः श्रीभाष्यकारस्य भूतपुर्यां जगद्गुरोः ।
कैङ्कर्यात्समवाप्नोति तत्फलं नात्र संशयः ॥

३९. दिव्यानां पुण्यदेशानामष्टोत्तरशतात्मनाम् ।
येषां तेषु च देशेषु लोकरक्षणकाम्यया ॥

४०. वासुदेवादिदेवेभ्यो निवसद्भ्यश्च भक्तितः ।
कृतैः पूजादिकैङ्कर्यैः यत्फलं ह्युपजायते ॥

४१. तत्फलं समवाप्नोति भाष्यकारस्य पूजनात् ।
कर्मज्ञानादयस्सर्वे न च मोक्षस्य साधकाः ॥

४२. एक एव यतिश्रेष्ठो भगवान् मोक्षसाधकः ।
उपायोपेयभूतश्च लक्ष्मणार्यो जगद्गुरुः ॥

---

எழுந்தருளியிருக்கும் ஸ்ரீபா4ஷ்யகாரருடைய நெஞ்சிலே வாழ்கின்றனர் ஸ்ரீபெரும்பூதூரிலுள்ள ஜக3த்3ஆசார்யரான எம்பெருமானாருக்குக் கைங்கர்யம் செய்வதால் அத்தனை எம்பெருமான்களுக்கும் கைங்கர்யம் செய்த பேறு கிட்டும் என்பதில் ஐயமில்லை. நூற்றெட்டு தி3வ்யதே3ஶங்களுக்கும், உலகத்தை ரக்ஷிக்க விரும்பி அவற்றில்வாழும் வாஸுதே3வன் முதலான எம்பெருமான்களுக்கும் ப4க்தியோடு செய்யும் திருவாராத4னம் முதலான கைங்கர்யங்களாலே யாதொரு பயன் கிடைக்கிறதோ, அந்தப் ப2லனை பா4ஷ்யகாரருக்குத் திருவாராத4னம் செய்வதால் சேதனன் அடைகிறான். கர்மஜ்ஞானப4க்தியோகங்கள் முதலான எல்லாமே மோக்ஷஸாத4னங்களாகமாட்டா. ஜ்ஞானாதி3பரிபூர்ணரான யதிராஜர் ஒருவரே மோக்ஷஸாத4னமாவார். ஜக3த்3ஆசார்யரான ஸ்ரீராமாநுஜரே (சேதனர் அனைவருக்கும்) உபாயமும் உபேயமுமாவார்.

४३. तन्नामोच्चारणादेव सर्वं नश्यति पातकम् ।
रामानुजेति यो मन्त्रो चतुरश्चतुरक्षरी ॥

४४. तं विना न भवेदन्यो भवबन्धविमोचकः ।
तदेव पुरुषार्थं हि यद्रामानुजपूजनम् ॥

४५. अयमेव हि सिद्धान्त इति प्राह दिवानिशम् ।
समाजे सर्वविदुषां गुरूणां रङ्गपट्टणे ॥

४६. गुरुर्वरदविष्ण्वार्यः सर्वशास्त्रविदां वरः ।
कूरेशोऽपि सदा चैवं महात्मा व्याजहार सः ॥

४७. न चेद्रामानुजेत्येषा चतुरा चतुरक्षरी ।
कामवस्थां प्रपद्यन्ते जन्तवो हन्त मादृशाः ॥

---

## ராமாநுஜநாமவைப₄வம்

43-47. "ஸ்ரீராமாநுஜரின் திருநாமத்தை உச்சரிப்பதாலேயே எல்லாப் பாபமும் அழியும். மிக்க வலிமையுடைய நான்கு அக்ஷரங்களைக்கொண்ட 'ராமாநுஜ' எனும் மந்திரத்தைத் தவிர ஸம்ஸாரப₃ந்த₄த்தைப் போக்கடிக்கும் உபாயம் வேறு இல்லை. ஸ்ரீராமாநுஜரை ஆராதி₄ப்பதே பரம புருஷார்த்த₂மாகுமன்றோ. இதுவே பரமஸித்₃தா₄ந்தம்" என்று ஶாஸ்த்ரமறிந்தவர்களில் சிறந்தவரும், ஆசார்யருமான வரத₃விஷ்ணு என்னும் நடாதூராழ்வான் திருவரங்கப் பெருநகரில் இராப்பகலாகக் கூடும் வித்₃வான்களான ஆசார்யர்களின் கூட்டம் அனைத்திலும் முழங்கி வந்தார். மஹாத்மாவான கூரத்தாழ்வானும் "'ராமாநுஜ' என்னும் மிக வலிமையுடைய இந்த நாலெழுத்து மந்திரமில்லாவிடில் என்னைப்போன்ற ஜந்துக்கள் என்ன நிலையை அடைந்திருப்பார்களந்தோ!" என்று இப்படியே எப்போதும் உத்₃கோ₄ஷித்து வந்தார்.

४८. एवं प्रपन्नगायत्र्यां श्रीरङ्गाख्यश्च वैष्णवः।
सुस्पष्टं यतिराजस्य वैभवं व्याजहार सः॥
४९. हस्तामलकवद्देवं दर्शयित्वापि मेऽधुना।
विग्रहानुभवं स्वामिन्! परमप्राप्यमेव ते॥
५०. एवं सन्ति महात्मानो यत्र योगीन्द्रसंश्रयाः।
तदेव मम दासस्य प्राप्यस्थानं न संशयः॥
५१. त्वद्भक्तेषु यतिश्रेष्ठ! भक्तियुक्तं कुरुष्व माम्।
दासभूतं च मां तेषां भक्तानां तव सांप्रतम्॥

---

## இராமாநுச நூற்றந்தாதி

48-50. இவ்வண்ணமாகவே (கூரத்தாழ்வானின் சீடரான) திருவரங்கத்தமுதனார் என்னும் ஸ்ரீவைஷ்ணவர் 'இராமாநுச' என்னும் திருநாமத்தைக்கொண்ட நூற்றெட்டுப் பாட்டுக்களையுடையதாகையாலே 'ப்ரபந்நகா₃யத்ரீ' என்று ஸ்ரீவைஷ்ணவ லோகத்தால் குலாவப்படும் தமது தி₃வ்யப்ரப₃ந்த₄த்தில் எதிராஜருடைய பெருமையை மிகத் தெளிவாக வெளிப்படுத்தினர். "கையிற் கனியென்னக் கண்ணனைக் காட்டித்தரிலும், உன்றன்மெய்யில் பிறங்கிய சீரன்றி வேண்டிலன் யான்" [104] என்னும் பாசுரப் பகுதியில் "ஸ்வாமி எம்பெருமானரே! கையிலங்கு நெல்லிக் கனியாகக் கண்ணனை தேவரீர் காட்டித்தந்தாலும், தேவரீரது திருமேனியின் அநுப₄வமே அடியேனுக்குப் பரமப்ராப்யமாகும்" என்று அருளிச்செய்தார். "நல்வேதியர்கள் தொழும் திருப்பாதன் இராமாநுசனைத் தொழும் பெரியோர் எழுந்து இரைத்து ஆடுமிடம் அடியேனுக்கு இருப்பிடமே" [105] என்னும் பாசுரப் பகுதியில் "எதிராஜரை ஆஶ்ரயித்திருக்கும் மஹாபுருஷர்கள் எங்கு இருக்கிறார்களோ அவ்விடமே அடியேனுக்கு ப்ராப்யஸ்தா₂னம் என்பதில் ஐயமில்லை" என்று அருளினர். "உன் தொண்டர்கட்கே

५२. सन्निधौ यतिराजस्य मुखं दृष्ट्वाऽतिसुन्दरम् ।
एवं विज्ञापनं चक्रे स रङ्गार्यो महामतिः ॥

५३. यतीन्द्रः संप्रहृष्टोऽथ श्रुत्वा तेन कृतां शुभाम् ।
तदा प्रपन्नगायत्रीमङ्गीचक्रे महायशाः ॥

५४. तस्यामेवान्त्यगाथायां चरमार्थ उदाहृतः ।
एवं लोकहितार्थाय रङ्गार्येण महात्मना ॥

५५. कृत्वा पुरुषकारेण महालक्ष्मीं श्रियः पतिम् ।
श्रीभाष्यकारपादाब्जं तदेव शरणं व्रजेत् ॥

---

அன்புற்றிருக்கும்படி என்னை ஆக்கி அங்காட்படுத்தே" [107] என்னும் பாசுரப் பகுதியில் "யதிராஜரே! தேவரீருடைய ப₄க்தர்களிடம் அடியேனுக்கு ப₄க்தி உண்டாகும்படியும் அவர்கள் திறத்தில் தொண்டுபுரியும்படியும் அடியேனை ஆக்கியருளவேணும்" என்று பிரார்த்தித்₂தார். பேரறிவாளரான அந்தத் திருவரங்கத்தமுதனார் மிக அழகியதான யதிராஜருடைய திருமுகமண்டலத்தை ஸேவிதது்க் கொண்டே அவர் திருமுன்பே இந்த இராமாநுச நூற்றந்தாதியை விண்ணப்பம் செய்தார். பெரும்புகழாளரான யதிராஜரும் அவரால் இயற்றப்பெற்ற ப்ரபந்நகா₃யத்ரியைக் கேட்டு மிக உகந்து ஏற்றுக்கொண்டார். அந்த தி₃வ்ய ப்ரப₃ந்த₄த்தில் கடைசிப் பாசுரத்தில் உலகின் நன்மையின் பொருட்டு மஹாத்மாவான திருவரங்கத்தமுதனாராலே சரமார்த்த₂ம் சொல்லப்பட்டது. "அங்கயல்பாய் வயல் தென்னரங்கன் அணியாகமன்னும், பங்கயமாமலர்ப் பாவையைப் போற்றுதும்; பத்தியெல்லாம், தங்கியதென்னத் தழைத்து நெஞ்சே! நம் தலைமிசையே, பொங்கியகீர்த்தி இராமாநுசனடிப் பூமன்னவே" [108] என்று அப்பாசுரத்தில் "பெரிய பிராட்டியைப் புருஷகாரமாகவும் பெரிய பெருமாளை உபாயமாகவும் பற்றி ஸ்ரீப₄ாஷ்யகாரருடைய திருவடித்தாமரையையே பரமப்ராப்யமாக அடையவேண்டும்" என்னும்

५६. निश्चयार्थमिमं लोके यो वेत्त्यर्थं महामतिः।
सर्वबन्धविनिर्मुक्तो याति विष्णोः परं पदम्॥

५७. यथा रामस्य चरितं शतकोटिप्रविस्तरम्।
तथा रामानुजस्यैवमवाङ्मनसगोचरम्॥

५८. अलं ततुं प्रयत्नेन बाहुभ्यां वापि सागरम्।
यतिराजस्य चरितं सान्तं वक्तुं न शक्यते॥

५९. रामानुजार्यचरितं यथामति यथाश्रुतम्।
मया कृतमिदं भक्त्या यतिराजप्रसादतः॥

६०. कवीश्वरा महात्मानो मतिमन्तो बहुश्रुताः।
कुर्वन्तु चरितं दिव्यं विस्तरं यतिभूपतेः॥

---

அர்த்த₂த்தைக் காட்டினர். இந்த உறுதிப்பொருளை இவ்வுலகில் எந்தப் பேரறிவாளன் அறிகிறுனே அவன் எல்லா விதமான ப₃ந்த₄ங்களினின்றும் விடுபட்டு விஷ்ணுவின் பரமபத₃த்தை அடைகிறுன்.

## ஸ்ரீராமாநுஜசரிதம்

57-60. ஸ்ரீராமபிரானுடைய சரிதம் (ப்₃ரஹ்மலோகத்தில்) நூறுகோடி ஶ்லோகங்கள் கொண்டதாயிருப்பது போலே, ராமாநுஜருடைய சரிதமும் வாக்குக்கும் மனத்துக்கும் எட்டாததாகும். பெருமுயற்சி செய்து கடலைக் கையாலே நீந்திக்கடந்தாலும் கடந்துவிடலாம். யதிராஜருடைய சரிதத்தை முதலிலிருந்து முடிவுவரை எவராலும் சொல்லமுடியாது. ஸ்ரீராமாநுஜாசார்யரின் சரிதமான இந்நூல்—பெரியோர்களிடமிருந்து கேட்டபடி யதிராஜரின் அருளினுலே ப₄க்தியோடு அறிந்தவரை என்னுல் இயற்றப்பட்டது. (என்னைவிடச் சிறந்தவர்களாய்) கவிஞர் தலைவர்களாய், மஹாத்மாக்களாய், பேரறிவாளர்களாய், கேள்விஞானம் மிக்கவர்களான பெரியோர்கள் யதிராஜருடைய தி₃வ்யசரிதத்தை விரிவாக இயற்றக்கடவர்கள்.

६१. श्रीरामचन्द्रो भगवानयोध्यायां महाबलः ।
भ्रातृभिस्सहितो वीरो यथा राज्यमकारयत् ॥

६२. तथा रामानुजः श्रीमान् भगवान् लोकपावनः ।
श्रीरङ्गे शिष्यसंयुक्तः सर्वं जगदपालयत् ॥

६३. रामराज्ये प्रजाः सर्वाः नीरोगा निरुपद्रवाः ।
सर्वधर्मरताः शान्ताः यथादीर्घायुषोऽभवन् ॥

६४. तथैव मनुजास्सर्वे लक्ष्मणार्येण रक्षिताः ।
दीर्घायुषो महात्मानो विष्णुधर्मपरायणाः ॥

६५. संपूर्णधर्मो भगवान् रराज सकलावनौ ।
चतुष्पादः कलियुगे यथा कृतयुगे पुरा ॥

---

## ஸ்ரீராமாநுஜரின் அருளாட்சி

61-71. பெரும்ப3லமுள்ளவனாய், வீரனாய், ஸஹோதரர்களோடு கூடியவனான ஸ்ரீராமசந்த்3ரனாகிற ப4க3வான் அயோத்4யையைத் தலைநகரமாகக் கொண்டு எப்படி அரசாட்சிசெலுத்தினானோ, அப்படியே லோகபாவனரும் கைங்கர்யச் செல்வம் நிறைந்தவருமான ஸ்ரீப4க3வத்3ராமாநுஜரும் ஶிஷ்யர்களோடு கூடியவராய் ஸ்ரீரங்க3த்தில் எழுந்தருளியிருந்து எல்லா உலகையும் ரக்ஷித்தார். ராமராஜ்யத்தில் குடிமக்கள் அனைவரும் நோய் அற்றவர்களாய், துன்பமற்றவர்களாய், எல்லா த4ர்மங்களிலும் ஈடுபட்டவர்களாய், ஶாந்தி உடையவர்களாய், நீண்ட ஆயுளுடையவர்களாயிருந்ததுபோலே, ஸ்ரீராமாநுஜரால் ரக்ஷிக்கப்பட்ட எல்லா மனிதர்களும் நீண்ட ஆயுள் உடையவர்களாய், மஹாபுருஷர்களாய், வைஷ்ணவ த4ர்மங்களில் ஈடுபட்டவர்களாயிருந்தார்கள். சிறப்புடைய த4ர்மம் முழுமை பெற்றதாய் முற்காலத்தில் க்ருதயுக3த்திற்போலே இந்தக் கலியுக3த்திலும் நாலு கால்களை உடையதாய் விளங்கிற்று. வருணன் சரியான காலத்தில் மழைபொழிந்தான். பூ4மியில் பயிர்கள்

६६. काले वर्षति पर्जन्यः पृथिवी सस्यशालिनी ।
राजानो ह्यभवन्सर्वे सर्वधर्मपरायणाः ॥

६७. अमत्सरमनालस्यमक्रोधं भयवर्जितम् ।
सर्वधर्मरतं शान्तं भूलोकमभवत्तदा ॥

६८. भूमिस्थे लक्ष्मणार्ये तु तारतम्यं न विद्यते ।
भूलोकस्यास्य महतो वैकुण्ठस्य तदा क्वचित् ॥

६९. चित्रगुप्तो यमश्चैव निर्व्यापारोऽभवत्तदा ।
रुक्माङ्गदादिकाले तु यथा भूमिस्तथाऽभवत् ॥

७०. लीलामानुषरूपिणो यतिपतेर्दिव्यं चरित्रं शुभं
श्रोतॄणामघनाशनं भवहरं चित्रं विचित्रार्थदम् ।
ये शृण्वन्ति पठन्ति सौम्यहृदयाः भक्त्याऽनिशं धीवराः
ते गच्छन्ति भवाद्यगम्यमतुलं विष्णोः पदं शाश्वतम् ॥

---

தழைத்தன. எல்லா அரசர்களும் எல்லா த$_4$ர்மங்களிலும் ஈடுபட்டவர்களாய் இருந்தனர். பொறாமை, சோம்பல், ப$_4$யம ஆகியவையற்றதாய் எல்லா த$_4$ர்மங்களிலும் ஈடுபட்டதாய் பூ$_4$லோகம அப்போது ஆயிற்று. ஸ்ரீராமாநுஜர் இந்நிலவுலகில் எழுந்தருளியிருந்தபோது இந்த பூ$_4$லோகத்துக்கும் வைகுண்ட$_2$த்துக்கும் சிறிதும் வேற்றுமையில்லாமலிருந்தது. சித்ரகு$_3$ப்தனும் யமனும் அப்போது தொழிலற்றவர்களானார்கள் இவ்வுலகம் ருக்மாங்க$_3$த$_3$ன் முதலான பரம பா$_4$க$_3$வத அரசர்களின் காலத்திற்போலே ஸ்ரீராமாநுஜர் காலத்திலும் இருந்தது லீலையாக மனித உருவை எடுத்துக்கொண்டவரான யதிராஜருடைய மங்க$_3$ளமான தி$_3$வ்யசரிதத்தைக் கேட்பவர்களுக்கு அச்சரிதம் பாபங்களைப் போக்குகிறது. ஸம்ஸாரத்தை நீக்குகிறது. ஆஶ்சர்யமாயிருக்கிறது. ஆஶ்சர்யமான பொருள்களையும் அளிக்கிறது. இந்தச் சரிதத்தை நன்னெஞ்சினராய் ப$_4$க்தியோடு தினந்

७१. रामानुजाय महते निगमान्तशास्त्र-
पारङ्गताय परमार्थविशारदाय ।
विख्यातलोकगुरवे यतिपुङ्गवाय
भूयो नमो भुवनमङ्गलविग्रहाय ॥

इति श्रीप्रपन्नामृते रामानुजचरित्रे
श्रीरामानुजमन्त्रप्रभाववर्णनं नाम चतुष्षष्टितमोऽध्यायः ॥

## पञ्चषष्टितमोऽध्यायः

१. श्रीरङ्गे वसतो महाविभवतो लोकोत्तरात्सन्ततं
श्रीमल्लक्ष्मणयोगिनो यतिपतेः श्रीशेषमूर्त्यात्मनः ।
तस्यासीच्छरदां शतं च विदितं संयक् गता विंशतिः
सर्वं विष्णुमयं प्रदर्शितवतः सत्यं वचो नैगमम् ॥

---

தோறும் கேட்பதும் படிப்பதும் செய்யும் பேரறிவாளர்கள்—ஶிவன் முதலானவர்களும் அடைதற்கரியதாய், ஒப்பற்றதாய், முக்2யமானதான விஷ்ணுவின பரமபத3த்தை அடைகிறார்கள். பெரியவரும், வேதா3ந்தஶாஸ்த்ரத்தின் எல்லையைக் கண்டவரும், மேலான அர்த்த2ங்களில் வல்லவரும, யதிராஜரும், உலகனைத்துக்கும் மங்க3ளமான திருமேனியையுடையவருமான ஸ்ரீராமாநுஜருக்கு எக்காலமும் வணக்கம்.

ஸ்ரீப்ரபந்நாம்ருதத்தில் ராமாநுஜசரித்திரத்தில்,
ஸ்ரீராமாநுஜமந்த்ர ப்ரபா4வத்தை வர்ணிக்கும்
அறுபத்துநாலாம் அத்தியாயம் நிறைவு பெற்றது.

## அறுபத்தைந்தாம் அத்தியாயம்
## எழுபத்துநாலு வார்த்தை
## யதிராஜ வைப4வம்

1-4. ஆதி3ஶேஷனின் அவதாரமாய், அதிமாநுஷராய், உலகனைத்தையும் விஷ்ணுமயமாகக் காட்டியவராய், யதி

६६. काले वर्षति पर्जन्यः पृथिवी सस्यशालिनी ।
राजानो ह्यभवन्सर्वे सर्वधर्मपरायणाः ॥

६७. अमत्सरमनालस्यमक्रोधं भयवर्जितम् ।
सर्वधर्मरतं शान्तं भूलोकमभवत्तदा ॥

६८. भूमिस्थे लक्ष्मणार्ये तु तारतम्यं न विद्यते ।
भूलोकस्यास्य महतो वैकुण्ठस्य तदा क्वचित् ॥

६९. चित्रगुप्तो यमश्चैव निर्व्यापारोऽभवत्तदा ।
रुक्माङ्गदादिकाले तु यथा भूमिस्तथाऽभवत् ॥

७०. लीलामानुषरूपिणो यतिपतेर्दिव्यं चरित्रं शुभं
श्रोतॄणामघनाशनं भवहरं चित्रं विचित्रार्थदम् ।
ये शृण्वन्ति पठन्ति सौम्यहृदयाः भक्त्याऽनिशं धीवराः
ते गच्छन्ति भवाद्यगम्यमतुलं विष्णोः पदं शाश्वतम् ॥

---

தழைத்தன. எல்லா அரசர்களும் எல்லா த₄ர்மங்களிலும் ஈடுபட்டவர்களாய் இருந்தனர். பொறாமை, சோம்பல், ப₄யம ஆகியவையற்றதாய் எல்லா த₄ர்மங்களிலும் ஈடுபட்டதாய் பூ₄லோகம அப்போது ஆயிற்று. ஸ்ரீராமாநுஜர் இங்கிலவுலகில் எழுந்தருளியிருந்தபோது இந்த பூ₄லோகத்துக்கும் வைகுண்ட₂த்துக்கும் சிறிதும் வேற்றுமையில்லாமலிருந்தது. சித்ரகு₃ப்தனும் யமனும் அப்போது தொழிலற்றவர்களானார்கள் இவ்வுலகம் ருக்மாங்க₃த₃ன் முதலான பரம ப₄ாக₃வத அரசர்களின் காலத்திற்போலே ஸ்ரீராமாநுஜர் காலத்திலும் இருந்தது லீலையாக மனித உருவை எடுத்துக்கொண்டவரான யதிராஜருடைய மங்க₃ளமான தி₃வ்யசரிதத்தைக் கேட்பவர்களுக்கு அச்சரிதம் பாபங்களைப் போக்குகிறது. ஸம்ஸாரத்தை நீக்குகிறது. ஆஶ்சர்யமாயிருக்கிறது. ஆஶ்சர்யமான பொருள்களையும் அளிக்கிறது. இந்தச் சரிதத்தை நன்னெஞ்சினராய் ப₄க்தியோடு தினந்

६. ततः कदाचिद्योगीन्द्रो मनस्येवमचिन्तयत् ।
वैकुण्ठनाथसेवार्थं तद्विष्णोः परमं पदम् ॥

७. लीलाविभूतिं संत्यज्य गन्तव्यमधुना मया ।
ततस्तदर्थं योगीन्द्रो लक्ष्मणार्यो महामतिः ॥

८. तथा प्रपत्तिमकरोत् रङ्गनाथपदाब्जयोः ।
रङ्गेशो लक्ष्मणाचार्यमेवमाह हरिस्तदा ॥

९. इदानीं भवता वत्स! किमिदं चिन्तितं वद ।
तच्छ्रुत्वा लक्ष्मणाचार्यो रङ्गेशमवदत्तदा ॥

१०. शतायुः पुरुषश्चेति निर्णीतं भवता पुरा ।
कालातिक्रमणं जातं भगवन्नद्य मेऽधुना ॥

११. तदाकर्ण्य स रङ्गेशो यतीश्वरमभाषत ।
अहमेव हि कालस्य तस्य कर्ता यतीश्वर ॥

---

(அதனால்) ஒரு ஸமயம் யதிராஜர் தமது மனத்திற்குள் "ஸ்ரீவைகுண்டநாதனை ஸேவிப்பதற்காக இந்த லீலா விபூதியைக் கைவிட்டு விஷ்ணுவின் அந்தப் பரமபதத்துக்கு நான் இப்போதே செல்லவேண்டும்" என்று நினைக்கலுற்றார். அதுகாரணமாக, பேரறிவாளராய், யதிராஜரான ஸ்ரீராமாநுஜர், ஸ்ரீரங்கநாதனின் திருவடித் தாமரைகளில் அதன்பொருட்டு ஶரணமடைந்தார். அப்போது அரங்கனும் ஸ்ரீராமாநுஜரைப் பார்த்து "குழந்தாய்! நீ இப்போது இப்படி நினைப்பதற்குக் காரணத்தைக் கூறுவாய்" என்று கேட்டான். அப்போது அதைக்கேட்டு ஸ்ரீராமாநுஜர் அரங்கநகரப்பனைப் பார்த்து "தேவரீரே 'மனிதன் நூறாண்டுகாலம் வாழ்வான்' என்று வேதத்தில் முன்னமே நிர்ணயித்திருக்கிறீர். பகவானே! இப்போது எனக்குஅந்தக்காலம் கடந்து விட்டதன்றோ" என்று கூறினார்.

१२. कञ्चित्कालं पुनर्भूम्यां सांप्रतं मम शासनात्।
पालयन्मनुजान् सर्वान् मन्मायापरिमोहितान्॥

१३. कुर्वन्मम च कैङ्कर्यं वसात्रैव सुखं सुत!।
रङ्गराजेन हरिणा तेनैवं प्रार्थितोऽपि सः॥

१४. पुनः पुनर्मोक्षमेव तं ययाचे यतीश्वरः।
ओमित्युक्त्वाथ रङ्गेशः भूयो वचनमब्रवीत्॥

१५. दास्यामि कांक्षितं वत्स! वरं वरय सुव्रत!।
एवं ब्रुवति रङ्गेशे सन्तुष्टो यतिराट् ततः॥

१६. रङ्गेशं प्रणिपत्याह लक्ष्मणार्यो जगत्पतिम्।
लोको यः प्राप्यते स्वामिन्! भवतः कृपया मया॥

---

அதைக்கேட்டு அரங்கன் எதிகட்கிறைவரைப் பார்த்து, "யதிராஜரே! நானேயன்றோ காலத்தை நடத்துமவன். எனது ஆணையாலே, இவ்வுலகில் எனது மாயையால் மயங்கிநிற்கும் எல்லா மனிதர்களையும் ரக்ஷித்துக்கொண்டு மேலும் சிலகாலம் வாழ்ந்து, எனக்கும் கைங்கர்யம் செய்துகொண்டு இந்த ஸ்ரீரங்கத்திலேயே இனிது வாழ்வீரய்யா" என்று கூறினான். ஹரியான ரங்க₃ராஜனாலே இப்படிப் பிரார்த்திக்கப்பட்டபோதிலும் அந்த யதிராஜர் மறுபடியும் மறுபடியும் அவ்வரங்கனிடம் மோக்ஷத்தையே யாசித்தார்.

## ஸ்ரீரங்கராஜனின் வரம்

14*-20. ஸ்ரீரங்கராஜன் யதிராஜரின் பிரார்த்தனையை அங்கீ₃கரித்து "நற்பண்புடைய குழந்தாய்! உனக்கு மேலும் நீ விரும்பும் வரமொன்றைக் கொடுக்கிறேன், பெற்றுக் கொள்வாயாக" என்று மேலும் ஒரு வார்த்தை கூறினான். இப்படி ரங்க₃நாத₂ன் உரைத்தவுடன் உகப்படைந்த யதி

१७. अस्मत्सम्बन्धिसम्बन्धिचरमावधिनश्च ये ।
सम्यग्गच्छन्तु तं लोकं जनास्ते तव शासनात् ॥

१८. रङ्गेशः प्रतिगृह्याशु तद्वचो यतिभूपतेः ।
बाढमित्यभिधायाशु यतीन्द्राय महात्मने ॥

१९. तीर्थं प्रसादं मालां च परिपट्टं शठद्विषम् ।
दापयित्वा बहुविधं सन्मानमकरोद्धरिः ॥

२०. ततो यतीश्वरस्तेन रङ्गिणाऽऽज्ञापितस्तदा ।
प्रविवेश मठं श्रीमान् श्रीवैष्णवसमावृतम् ॥

२१. श्रीवैष्णवान् समाहूय यत्र तत्र स्थितान् बहून् ।
कृपामात्रप्रसन्नार्यो यतिराजो जगद्गुरुः ॥

---

ராஜர் லோகநாத₂னை அப்பெருமானை வணங்கி "எந்தையே! தேவரீருடைய அருளால் அடியேனுக்கு எந்த லோகம் கிடைக்கிறதோ அதே லோகத்தை என்னோடு ஸம்ப₃ந்த₄ம் பெற்றவர்களோடு ஸம்ப₃ந்த₄ம் பெற்ற கடைசி மனிதர்களும் தேவரீருடைய நியமனத்தால் நன்கு அடைய வேண்டும்" என்று வரம் கேட்டார். யதிராஜரின் அந்த வரத்தை "அப்படியே" என்று ஏற்றுக்கொண்டு விரை விலேயே மஹாத்மாவான எதிகட்கிறைவர்க்குத் தீர்த்த₂ம், ப்ரஸாத₃ம், மாலை, பரிவட்டம், ஶட₂ாரி ஆகியவற்றை அளிக்கச்செய்து பலவகையான ஸன்மானங்களையும் செய் தருளினன். அதற்குப்பின் ரங்க₃நாத₂னல் ஆணையிடப் பெற்ற ஸ்ரீமத்₃ராமாநுஜர் அப்போதே ஸ்ரீவைஷ்ணவர்கள் நிறைந்த தமது மட₂த்துக்கு எழுந்தருளினர்.

## ஶிஷ்யர்களுக்கு உபதே₃ஶங்கள்

21-86. ஆங்காங்குள்ள பற்பல ஸ்ரீவைஷ்ணவர்களை அழைத்து, க்ருபாமாத்ரப்ரஸந்நாசார்யராய், பெரும்புகழாள ராய், ஜக₃த்₃குராசார்யராய், கருணைக்கடலான யதிராஜர் எல்லா

२२. सर्वशास्त्रार्थसाराणि सुवाक्यानि द्विसप्ततिम्‌।
समाहृत्य विधायाशु भूरिदानं महायशाः॥

२३. श्रीवैष्णवेभ्यः प्रोवाच शिष्येभ्यः करुणार्णवः।
स्वदेशिकस्य कैङ्कर्ये कैङ्कर्ये वैष्णवस्य च॥

२४. प्रतिपत्तिं समां कृत्वा कैङ्कर्यं कारयेत्‌ सदा।
पूर्वाचार्योक्तवाक्येषु विश्वासेनैव वर्तयेत्‌॥

२५. न वर्तयेदिन्द्रियाणां किङ्करश्च दिवानिशम्‌।
सामान्यशास्त्रनिरतो नैव तिष्ठेत्कदाचन॥

२६. भगवद्विषये शास्त्रे निरतः सर्वदा वसेत्‌।
आचार्यकृपया पूर्वं संजातज्ञानसागरः॥

२७. भूयः शब्दादिविषयकिङ்கरो नैव वर्तयेत्‌।
सर्वान्‌ शब्दादिविषयान्‌ समानेव विलोकयेत्‌॥

---

ஶாஸ்த்ரார்த்த₂ங்களின் ஸாரமாக எழுபத்திரண்டு நல் வார்த்தைகளைத் தேர்ந்தெடுத்து ஶிஷ்யர்களான ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு விரைவில் பூ₄ரிதா₃நமாக வழங்கினர். (அவை பின்வருமாறு):—(1) தன் ஆசார்யனுடைய கைங்கர்யத்திலும், வைஷ்ணவனுடைய கைங்கர்யத்திலும் ஸமமான மதிப்புடன் (ஸ்ரீவைஷ்ணவர் அனைவர்க்கும்) எப்போதும் கைங்கர்யம் செய்யவேண்டும். (2) பூர்வாசார்யர்கள் அருளிய வார்த்தைகளில் நம்பிக்கையோடு இருக்கவேண்டும். (3) எப்போதும் இந்த்₃ரியங்களுக்கு வஶப்பட்டவனாய் இருக்கலாகாது. (4) எப்போதும் ஸாமாந்யஶாஸ்த்ரங்களில் ஈடுபட்டவனாய் வாழக்கூடாது. (5) ப₄க₃வத்₃விஷயமான ஶாஸ்த்ரத்திலேயே ஈடுபட்டவனாய் எப்போதும் வாழவேண்டும். (6) ஆசார்யனின் திருவருளால் முதலில் அறிவுக்கடலை அடைந்தபின் ஶப்₃த₃ாதி₃விஷயங்களுக்கு வஶப்பட்டவனாய் வாழலாகாது. (7) எல்லா ஶப்₃த₃ாதி₃விஷயங்களையும் (விலக்கத்தக்கவை

२८. पुष्पचन्दनताम्बूलद्रव्यादिषु सुगन्धिषु ।
वासनारुचिकार्याणि कदाचिन्नैव कारयेत् ॥
२९. या प्रीतिरासीत् सततं भगवन्नामकीर्तने ।
सा स्यात्प्रीतिर्हि तद्भक्तनामसङ्कीर्तने च वः ॥
३०. कारणं भगवत्प्राप्तेः महाभागवताश्रयः ।
इति मत्वा दृढं तेषां आज्ञया वर्तयेत् सदा ॥
३१. विहाय विष्णुकैङ्कर्यं कैङ्कर्यं वैष्णवस्य च ।
विनश्येत्स नरः प्राज्ञो रागादिप्रेरितो यदि ॥
३२. वैष्णवानामनुष्ठाने नोपायमतिमुन्नयेत् ।
उपेयमेव सततमुन्नयेत्सुमहामनाः ॥

---

என்னும் விஷயத்தில்) ஸமமாகவே பா₄விக்கவேண்டும். (8) புஷ்பம், சந்த₃னம், தாம்பூ₃லம் முதலான நறுமணம் மிக்க பொருள்களில் பழக்கத்தாலும், விருப்பத்தாலும் விளையும் செயல்களை எப்போதும் செய்யலாகாது. (9) எம்பெருமானுடைய திருநாமஸங்கீர்த்தனத்தில் உங்களுக்கு எத்தனை விருப்பமுள்ளதோ, அத்தனை விருப்பம் அவனடியார்களுடைய திருநாமஸங்கீர்த்தனத்திலும் இருக்க வேண்டும். (10) மஹாபா₄க₃வதர்களை ஆஶ்ரயித்திருப்பது ப₄க₃வானை அடைவதற்குக் காரணமாகிறது என்பதையறிந்து எப்போதும் அந்தப் பரமபா₄க₃வதர்களுடைய ஆணைப்படி உறுதியாய் நடக்கவேண்டும். (11) ப₄க₃வானுக்கும், பா₄க₃வதர்களுக்கும் கைங்கர்யம் செய்யாமல் லௌகிகவிஷயங்களில் ஆசை முதலானவற்றால் தூண்டப் பெற்றவனாய் ஒருமனிதன் வாழ்ந்தானாகில், அவன் எத்தனை அறிவாளியாயிருந்தாலும் அழிந்துவிடுவான். (12) வைஷ்ணவர்களுடைய அனுஷ்டா₂னங்களை உபாயபு₃த்₃தி₄யினால் செய்யப்படுமவை என்று எண்ணலாகாது. நன்னெஞ்சுடையவன் அவற்றை எப்போதும் உபேய (ஸ்வயம் ப்ரயோஜந) பு₃த்₃தி₄யுடன் செய்யப்படுமவையாகவே எண்ணவேண்டும்.

३३. नाहूयेदेकवचनान्महाभागवतान् जनान् ।
पूर्वाञ्जलिं वैष्णवानां दृष्टमात्रे च कारयेत् ॥

३४. हरेर्भगवतो विष्णोः वैष्णवानां च सन्निधौ ।
पादौ प्रसार्य न वसेत् कदाचिदमलात्मनाम् ॥

३५. विष्णोर्गुरोर्वैभगवस्य गृहाणां च दिशं प्रति ।
पादौ प्रसार्य निद्रां च कदाचिन्नैव कारयेत् ॥

३६. कृतनिद्रः समुत्थाय वदेत् गुरुपरम्पराम् ।
महाभागवतान् दृष्ट्वा निषण्णान्विष्णुसन्निधौ ॥

३७. मन्त्रराजमनुध्यायन् प्रणमेत् दण्डवद्भुवि ।
सङ्कीर्तनं भगवतः तथा भागवतस्य वा ॥

३८. श्रीवैष्णवेषु कुर्वत्सु तान् शक्त्याऽनभिपूज्य च ।
मध्ये चोत्थाय गमनमपचारतमो भवेत् ॥

---

(13) மஹாபா4க3வதர்களான ஜனங்களை ஏகவசனத்தினால் அழைக்கலாகாது. (14) வைஷ்ணவர்களைக் கண்டவுடனேயே முதலில் அஞ்ஜலிசெய்துவிடவேண்டும். (15) ப4க3வானை எம்பெருமான் முன்னிலையிலும், குற்றமற்றவர்களான ஸ்ரீவைஷ்ணவர்களின் முன்னிலையிலும் ஒருபோதும் காலை நீட்டிக்கொண்டு இருக்கலாகாது (16) எம்பெருமான், ஆசார்யன், வைஷ்ணவன் ஆகியவர்களுடைய இருப்பிடத்தை நோக்கிக் காலை நீட்டிக்கொண்டு ஒருபோதும் தூங்கக்கூடாது (17) தூங்கி எழுந்தவுடன் கு3ருபரம்பரையை அநுஸந்தி4க்கவேண்டும். (18) ப4க3வத்ஸன்னிதி4யில் வீற்றிருக்கும் மஹாபா4க3வதர்களைக் கண்டால் திருமந்த்ரத்தை அநுஸந்தி4த்துக்கொண்டு பூ4மியில் த3ண்ட3ம் (தடி)போல் விழுந்து வணங்கவேண்டும். (19) ப4க3வான் அல்லது பா4க3வதர்களுடைய திருநாமஸங்கீர்த்தனத்தை ஸ்ரீவைஷ்ணவர்கள் செய்துகொண்டிருக்கும்போது இயன்ற

३९. वैष्णवागमनं श्रुत्वा गच्छेदभिमुखं तदा ।
साकं गच्छेत् क्वचिद्दूरं भक्त्या तेषां विनिर्गमे ॥

४०. द्वयोरकरणादेव महान् दोषः प्रजायते ।
आत्मयात्रार्थमनिशं शेषत्वेन च वैष्णवान् ॥

४१. विनयादिगुणैर्भक्त्या नानुसृत्य महात्मकान् ।
देहयात्रार्थमनिशं प्राकृतानां गृहे गृहे ॥

४२. गत्वा गत्वाऽथ नामानि तेषां तेषां च सादरम् ।
स्वनाम्नः पुरतः कृत्वा नियमादीन् विहाय च ॥

४३. वर्तनं वैष्णवस्यास्य स्वरूपस्यैव हानिदम् ।
विष्णोर्दिव्यविमानानि गोपुराणि जगत्पतेः ॥

---

வரையில் அவர்களை ஆராதி4க்காமல் நடுவில் எழுந்திருந்து போவது பெருத்த அபசாரமாகும். (20) வைஷ்ணவர்கள் எழுந்தருள்வதைக் கேட்டால் அப்போது எதிர்கொண்டழைக்கவேண்டும். (21) அவ்வண்ணமே அவர்கள் விடைகொள்ளும்போது ப4க்தியோடு சிறிதுதூரம் கூடச் செல்லவேண்டும். இவ்விரண்டு கார்யங்களைச் செய்யாவிடில் பெருத்த தோ3ஷம் உண்டாகும். (22) தங்களுடைய ஆத்மயாத்ரையைக் கருதி எப்போதும் வைஷ்ணவர்களைக் குறித்துத் தங்களுடைய ஶேஷத்வத்தை அநுஸந்தி4த்து மஹாத்மக்களான அவர்களை விநயம் முதலான கு3ணங்களோடு ப4க்தியுடன் பின்பற்றுமல், தம்முடைய தே3ஹயாத்ரையைக் கருதி ப்ராக்ருதர்களுடைய வீடுதோறும் எப்போதும் நுழைந்து திரிந்து தங்களுடைய பெயர்களுக்கு முன் அவர்களுடைய பெயர்களை ஆர்வத்துடன் அநுஸந்தி4த்துக் கொண்டு ஶாஸ்த்ரநியமம் முதலானவற்றைக் கைவிட்டு வாழ்வது அந்த வைஷ்ணவனுடைய ஸ்வரூபத்தையே அழித்துவிடும். (23) லோகநாத2னை விஷ்ணுவின் தி3வ்ய விமானங்களையும், கோ3புரங்களையும் கண்டவுடன் அப்போதே

४४. दृष्टमात्रेण सहसा कारयेत् अञ्जलिं तदा।
दृष्ट्वेतरविमानानि विस्मयं नैव कारयेत्॥

४५. श्रुत्वा न विस्मयं गच्छेत् देवतान्तरकीर्तनम्।
विष्णोर्वा वैष्णवानां च नामसंकीर्तनानि च॥

४६. कुर्वतः पुण्यपुरुषान् दृष्ट्वाऽनवाप्य वै मुदम्।
आस्थानमपचारः स्यान्मध्ये तेषां सुनिश्चयम्॥

४७. श्रीवैष्णवानां सर्वेषां देहच्छायां न लङ्घयेत्।
स्वदेहच्छायासंस्पर्शं वैष्णवेषु न कारयेत्॥

४८. स्पृष्ट्वा संस्कारिणः पूर्वं वैष्णवाननुसंस्पृशेत्।
वैष्णवाय दरिद्राय पूर्वं वन्दनकारिणे॥

४९. अनादराणि कार्याणि भवेयुः पातकानि वै।
यदि प्रणमते पूर्वं दासोऽहमिति वैष्णवः॥

---

சடக்கென அஞ்ஜலிசெய்யவேண்டும். (24) மற்ற தெய்வங்களினுடைய விமானங்களைப் பார்த்து வியப்படையக் கூடாது. (25) தேவதாந்தரங்களை ஸங்கீர்த்தனம் செய்வதைக் கேட்டும் வியப்படையக் கூடாது. (26) விஷ்ணு அல்லது வைஷ்ணவர்களுடைய திருநாமஸங்கீர்த்தனம் செய்யும் புண்யபுருஷர்களைப் பார்த்து ஆநந்தமடையாமல் அவர்கள் நடுவில் இருப்பது அபசாரமாகும். இது உறுதி. (27) ஸ்ரீவைஷ்ணவர்கள் எவருடைய திருமேனிநிழலையும் தாண்டக் கூடாது. (28) தன் உடம்பின் நிழல் ஸ்ரீவைஷ்ணவர்களின்மேல் படும்படி இருக்கலாகாது. (29) பரிஶுத்தப் படுத்தும் பொருள்களை முதலில் தொட்டுத் தங்களைப் பரிஶுத்தப்படுத்திக்கொண்ட பின்பே வைஷ்ணவர்களைத் தொடவேண்டும். (29) ஏழையாகையாலே முதலில் வணங்கும் வைஷ்ணவனை அநாதரித்துச் செய்யும் காரியங்கள் பாபங்களாகும். (30) ஒரு வைஷ்ணவன் 'அடியேன்'

५०. अनादरे कृते तस्मिन् अपचारो महान् भवेत् ।
वैष्णवानां च जन्मानि निद्रालस्यानि यानि च ॥

५१. दृष्ट्वा तानि प्रकाश्याशु जनेभ्यो न वदेत् क्वचित् ।
तेषां दोषान् विहायाशु गुणांश्चैव प्रकीर्तयेत् ॥

५२. विष्णुपादोदकं चैव भक्तपादोदकं तु वा ।
प्राकृतेषु च पश्यत्सु न पिबेत्तोयमुत्तमम् ॥

५३. तत्त्वत्रयस्य ज्ञानेन श्रीरहस्यत्रयस्य च ।
रहितस्याङ्घ्रिजं तोयं ग्राहयेन्न कदाचन ॥

५४. ज्ञानानुष्ठानयुक्तस्य सदाचाररतस्य च ।
पादोदकं वैष्णवस्य पिबेन्नित्यं प्रयत्नतः ॥

५५. स्वं च भागवतैस्सार्धं साम्यबुद्धिं न कारयेत् ।
प्राकृतानां च संस्पर्शे प्राप्तः ग्रामादिकाद्यदि ॥

---

என்று முதலில் வணங்கினானாகில் அவனை அநாத3ரிப்பது பெரிய அபசாரமாகும். (31) வைஷ்ணவர்களுடைய பிறப்பில் தாழ்வையும், தூக்கம் சோம்பல் முதலானவற்றையும் பார்த்து, அவற்றை ஜனங்களுக்கு வெளிப்படுத்தி ஒருபோதும் வார்த்தை சொல்லலாகாது. (32) வைஷ்ணவர்களுடைய தோ3ஷங்களை விட்டு கு3ணங்களையே வெளிப்படுத்தவேண்டும். (33) எம்பெருமானுடைய ஸ்ரீபாத3தீர்த்த2மும் ப4க்தர்களுடைய ஸ்ரீபாத3தீர்த்த2மும் ஆகிய உத்தமமான தீர்த்த2ங்களை ப்ராக்ருதர்கள் பார்த்துக்கொண்டிருக்கும்போது பருகலாகாது. (34) 'சித், அசித், ஈஶ்வரன்' என்னும் தத்த்வத்ரயத்தினுடையவும், திருமந்த்ரம், த்3வயம், சரமஶ்லோகம் என்னும் ரஹஸ்யத்ரயத்தினுடையவும் ஜ்ஞானமில்லாதவனுடைய பாத3நீரை ஒருபோதும் பருகலாகாது. (35) ஜ்ஞாநாநுஷ்டா2னங்கள் உடையவனாய், நல்லவர்களுடைய ஒழுக்கத்தில் ஈடுபட்டவனான வைஷ்ணவனுடைய ஸ்ரீபாத3தீர்த்த2த்தை முயன்று பெற்றுப் பருகவேணும்.

५६. स्नातः सचेलः सहसा वैष्णवाङ्घ्रिजलं पिबेत्।
वैराग्यज्ञानभक्त्यादिगुणवन्तो महात्मनः॥

५७. वैष्णवांस्तान्महाभागान् मत्वा चरमविग्रहान्।
कारयेयुस्तु विश्वासं विशेषेण महात्मसु॥

५८. वैराग्यज्ञानभक्त्यादिगुणवन्तो महात्मकाः।
ये ये भागवतास्तांस्तानुद्दिश्य प्रीतिमभ्यसेत्॥

५९. न ग्राहयेद्विष्णुतीर्थं प्राकृतानां गृहेषु च।
प्राकृतानां निवासस्थान् न सेवेद्विष्णुविग्रहान्॥

६०. श्रीहरेर्दिव्यदेशेषु पश्यत्सु प्राकृतेष्वपि।
तीर्थप्रसादग्रहणं ग्राहयेन्न न संशयः॥

---

(36) தம்மை ப₄ாக₃வதர்களோடு ஸமமாக எண்ணலாகாது. (37) ப்ராக்ருதர்களோடு தாமறியாமல் ஸ்பர்ஶம் ஏற்பட்டு விட்டால் உடுத்த வஸ்த்ரத்தோடு ஸ்நாநம்செய்து வைஷ்ணவர்களுடைய ஸ்ரீபாத₃தீர்த்த₂த்தை உடனே பருகவேண்டும். (38) வைராக்₃யம், ஜ்ஞானம், ப₄க்தி முதலான கு₃ணங்களுடைய ஸ்ரீவைஷ்ணவர்கள்—பெரியவர்களாய், மஹாப₄ாக்₃யஶாலிகளான அந்த வைஷ்ணவர்களை எம்பெருமானுடைய மிக உயர்ந்த திருமேனிகளாக எண்ணி அந்த மஹாத்மாக்களிடம் சிறப்பாக நம்பிக்கைவைக்கவேண்டும். (39) வைராக்₃யம், ஜ்ஞாநம், ப₄க்தி முதலான கு₃ணங்களையுடைய பெரியவர்களான ப₄ாக₃வதர்கள் விஷயத்தில் அன்பைப் பெருக்கிக்கொள்ளவேண்டும். (40) ப்ராக்ருதர்களுடைய வீட்டில் எம்பெருமானுடைய தீர்த்த₂த்தையும் பெறக்கூடாது. (41) ப்ராக்ருதர்களுடைய வீட்டிலுள்ள விஷ்ணு விக்₃ரஹங்களை ஸேவிக்கக்கூடாது. (42) எம்பெருமானுடைய தி₃வ்ய தே₃ஶங்களிலும் ப்ராக்ருதர்கள் பார்த்துக்கொண்டிருக்கும் போது தீர்த்த₂ப்ரஸாத₃ங்களை எடுத்துக்கொள்ளக்கூடாது.

६१. यदि श्रीवैष्णवैर्दत्तं प्रसादं विष्णुसन्निधौ ।
उपवासादिनियमयुक्तोऽहमिति न त्यजेत् ॥

६२. प्रसादे पावने विष्णोः सर्वपापहरे हरेः ।
कदाचिदपि चोच्छिष्टप्रतिपत्तिं न कारयेत् ॥

६३. सन्निधौ वैष्णवानां च स्वगुणान् नैव कीर्तयेत् ।
श्रीवैष्णवानां सान्निध्ये नान्यं परिभवेज्जनम् ॥

६४. गुणानुभवकैङ्कर्यं तदीयानां महात्मनाम् ।
अविधाय क्षणमपि कार्यं किञ्चिन्न कारयेत् ॥

६५. दिनैकघटिकायां च वर्णयेद्गुरुसद्गुणान् ।
दिनैकघटिकामध्ये ह्यपि विश्वासपूर्वकम् ॥

---

இதில் ஐயமேயில்லை. (43) ப₄க₃வத்ஸந்நிதி₄யில் ஸ்ரீவைஷ்ணவர்களாலே அளிக்கப்பட்ட ப்ரஸாத₃த்தை "உபவாஸம் முதலான நியமங்களை அநுஷ்டி₂க்கிறேன்" என்று கூறி மறுக்கலாகாது. (44) பரமபாவனமானதும் எல்லாப் பாபங்களையும் அழிக்கக்கூடியதுமான எம்பெருமானுடைய ப்ரஸாத₃த்தை—'உண்டு மிகுந்த எச்சில்' என்று எண்ணக் கூடாது. (45) வைஷ்ணவர்கள் திருமுன்பே தன் கு₃ணங்களைப் புகழ்ந்து கொள்ளலாகாது. (46) ஸ்ரீவைஷ்ணவர்கள் திருமுன்பே ஒரு ஸாமாந்யமனிதனையும் அவமதிக்கக் கூடாது. (47) பெரியவர்களான ப₄ாக₃வதர்களுடைய கு₃ணாநுப₄வத்தையும், கைங்கர்யத்தையும் செய்யாமல் ஒரு கணநேரமும் வேறு கார்யங்களில் ஈடுபடலாகாது. (48) தினந்தோறும் ஒருநாழிகைப் போதாவது தன் ஆசார்யனுடைய நற்கு₃ணங்களைப் புகழவேண்டும். (49) தினந்தோறும் ஒருநாழிகைப்போது நம்பிக்கையோடு நம்மாழ்வார் முதலான ஆழ்வார்களுடைய அருளிச்செயல்களையாவது, ஆசார்யர்களுடைய ஸ்ரீஸூக்திகளையாவது அநுஸந்தி₄க்க வேண்டும். (50) தே₃ஹத்தையே ஆத்மாவாக நினைப்பவர்

६६. शठार्यादिप्रबन्धान्वा प्रबन्धान्कीर्तयेद्गुरोः ।
देहाभिमानिना सार्धं सहवासं न कारयेत् ॥

६७. श्रीवैष्णवानां चिह्नानि धृत्वापि विषयातुरैः ।
तैः सार्धं वञ्चकजनैः सहवासं न कारयेत् ॥

६८. न भाषयेच्च सततं परदूषणतत्परैः ।
देवतान्तरभक्तानां सङ्गदोषनिवृत्तये ॥

६९. श्रीवैष्णवैर्महाभागैः सल्लापं कारयेत्सदा ।
तदीयदूषकजनान् न पश्येत्पुरुषाधमान् ॥

७०. नैवावलोकयेत्क्रूरानपचारपरान् गुरौ ।
द्वयैकनिष्ठपुरुषैः सङ्गतिं कारयेत्सदा ॥

७१. उपायान्तरनिष्ठांश्च पुरुषान् परिवर्जयेत् ।
प्रपत्तिधर्मनिरतैर्जनैः सह वसेत्सदा ॥

---

களோடு ஸஹவாஸம் செய்யக்கூடாது. (51) ஸ்ரீவைஷ்ணவர்களுடைய சிஹ்நங்களை த4ரித்துக்கொண்டிருந்தும் விஷயப்ரவணர்களாயிருக்கும் வஞ்சகர்களோடு ஸஹவாஸம் செய்யக்கூடாது. (52) எப்போதும் பிறரைத் தூ3ஷிப்பதிலே ஈடுபட்டிருப்பவர்களோடு பேசக்கூடாது. (53) மற்ற தெய்வங்களின் ப4க்தர்களோடு தவிர்க்கமுடியாமல் நேரும் தொடர்பினால் விளையும் தோ3ஷம் போவதற்காக, பெரியவர்களான ஸ்ரீவைஷ்ணவர்களோடு எப்போதும் பேச்சை வைத்துக்கொள்ளவேண்டும். (54) மனிதர்களில் தாழ்ந்தவர்களான பா4க3வததூ3ஷக ஜனங்களைக் கண்ணாலும் பார்க்கக்கூடாது. (55) ஆசார்யர்களிடம் அபசாரம் செய்வதில் ஈடுபட்ட கொடியவர்களைக் காணவே கூடாது. (56) த்3வயத்தின் அர்த்தா2நுஸந்தா4னத்திலேயே ஈடுபட்டவர்களோடு எப்போதும் சேர்ந்திருக்கவேண்டும். (57) எம்பெருமானைத் தவிர்ந்த மற்ற உபாயங்களில் ஈடுபட்டவர்

७२. रहस्यत्रयसारज्ञैः तत्त्वत्रयविशारदैः ।
महाभागवतैस्सार्धं सहवासं च कारयेत् ॥

७३. नार्थकामपरैस्सार्धं कदाचिन्निवसेत्सदा ।
भगवद्भक्तिनिष्ठैश्च सल्लापं कारयेत्सदा ॥

७४. वैष्णवेन तिरस्कारः कृतो हि भवतां यदि ।
अपकारस्मृतिं तस्मादमत्वा मौनतो वसेत् ॥

७५. सञ्जाता वैष्णवस्यास्य बुद्धिर्हि परमे पदे ।
श्रीवैष्णवेभ्यस्सर्वेभ्यः कारयेत्सततं हितम् ॥

७६. धर्मादपेतं यत्कर्म यद्यपि स्यान्महाफलम् ।
न तत्सेवेत मेधावी न हि तत् हितमुच्यते ॥

---

களையும் விலக்கி வாழவேண்டும். (58) ஸராஜ்ஞகூதி த்ர்மத்தில் ஊன்றிநிற்பவர்களோடு எப்போதும் கூடி வாழவேண்டும். (59) ரஹஸ்யத்ரயத்தின் ஸாரத்தை அறிந்தவர்களாய், தத்வத்ரயங்களை நன்குணர்ந்தவர்களான மஹாபாகவதர்களோடு கூடிவாழவேண்டும். (60) அர்த்தகாமங்களில் (பொருள், இன்பம் என்னும் புருஷார்த்தங்களில்) ஈடுபட்டவர்களோடு ஒருபோதும் கூடி வாழக்கூடாது. (61) எம்பெருமானிடம் பக்தியுடையவர்களிடமே எப்போதும் பேச்சுவைத்துக் கொள்ளவேண்டும். (62) ஒரு வைஷ்ணவன் உங்களைத் திரஸ்காரம் செய்தால் "அவன் நமக்குத் தீங்கிழைத்து விட்டான்" என்று எண்ணாமல் மௌனமாயிருக்கவேண்டும். இத்தகைய வைஷ்ணவனுக்குப் பரமபதத்திலேயே நினைவு சென்றிருக்கவேண்டும். (63) எல்லா ஸ்ரீவைஷ்ணவர்களுக்கும் நல்லதையே எப்போதும் செய்யவேண்டும். (64) தர்மத்துக்குப் புறம்பான செயலை, அதனால் பெரும்பயன் விளைவதாயினும் அறிவாளியானவன் அதைச் செய்யலாகாது அது நல்லதென்று சொல்லப்படுவதில்லையன்றோ.

௭௭. नानर्पितान्नं हरये कदाचिदपि भक्षयेत् ।
पुष्पचन्दनताम्बूलवस्त्रोदकफलादिकम् ॥

௭௮. नानर्पितं तु हरये कदाचिदपि धारयेत् ।
साधनान्तरसंप्राप्तमर्थकामादिहेतुना ॥

௭௯. अयाचितमपि प्राप्तं न गृह्णीयात्कदाचन ।
जात्याद्यदुष्टमन्नाद्यं भुञ्जीयात्तच्च सादरम् ॥

௮௦. स्वदेहप्रियभोग्यानि नार्पयेत्परमात्मने ।
शास्त्रीयसर्वभोग्यानि विष्णवे तानि चार्पयेत् ॥

௮௧. विष्ण्वर्पितान्नपानीयभक्ष्यादिषु सुगन्धिषु ।
प्रसादबुद्धिः कर्तव्या भोगबुद्धिर्हि न क्वचित् ॥

---

(65) எம்பெருமானுக்கு அமுதுசெய்யப்படாத உணவை ஒருபோதும் உண்ணலாகாது. (66) புஷ்பம், சந்த₃னம், தாம்பூ₃லம், வஸ்த்ரம், நீர், பழம் முதலானவற்றை எம்பெருமானுக்கு ஸமர்ப்பிக்காமல் ஒருபோதும் உபயோகி₃க்கக் கூடாது. (67) அர்த்த₂காமங்களைக் காரணமாகக் கொண்ட மற்ற ஸாத₄னங்களால் அடையப்படும் பொருள் நாம் வேண்டாமலே கிடைத்தாலும் ஒருபோதும் அதை ஏற்கலாகாது. (68) ஜாதி, ஆச்ரயம் (இருக்குமிடம்), நிமித்தம் (காரணம்) முதலான ஹேதுக்களால் தோ₃ஷமடையாத அந்நம் முதலானவற்றையே ஆர்வத்தோடு எடுத்துக் கொள்ளவேண்டும். (69) தன் தே₃ஹத்துக்கே இனியதான போ₄க்₃யவஸ்துக்களைப் பரமாத்மாவுக்கு ஸமர்ப்பிக்கக்கூடாது. (70) ஶாஸ்த்ரங்களில் நல்லவையாகக்கூறப்பட்ட போ₄க₃ங்கள் அனைத்தையும் விஷ்ணுவுக்கு ஸமர்ப்பிக்கவேண்டும். (71) விஷ்ணுவுக்கு ஸமர்ப்பிக்கப்பட்ட நறுமணம்மிக்க அந்நம், பாநம், பணியாரம் முதலானவற்றில் ப₄க₃வத்ப்ரஸாத₃ம் என்னும் எண்ணம் வைக்கவேண்டுமேயொழிய 'எனக்கு இனியவை' என்னும் எண்ணத்தை ஒருபோதும் வைக்க

८२. कैङ्कर्यबुद्धया कर्माणि शास्त्रीयाण्येव कारयेत् ।
मन्त्रत्रयार्थनिष्ठस्य महाभागवतस्य हि ॥

८३. अपचारं विना नान्यदात्मनो नाशकारणम् ।
आत्मनो मोक्षहेतुस्तु तन्मुखोल्लासनं विना ॥

८४. पूजनाद्विष्णुभक्तानां पुरुषार्थोऽस्ति नेतरः ।
तेषु तद्द्वेषतः किञ्चिन्नास्ति नाशनमात्मनः ॥

८५. अर्चाविष्णौ शिलाधीर्गुरुषु नरमतिः वैष्णवे जातिबुद्धिः
विष्णोर्वा वैष्णवानां कलिमलमथने पादतीर्थेऽम्बुबुद्धिः ।
सिद्धे तन्नाममन्त्रे कलिकलुषहरे शब्दसामान्यबुद्धिः
श्रीशे सर्वेश्वरेशे तदितरसमधीर्यस्य वा नारकी सः ॥

---

லாகாது. (72) ஶாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட நித்ய நைமித்திக கர்மங்களை "இவை எம்பெருமானுக்குக் கைங்கர்யம்" என்னும் எண்ணத்துடனேயே செய்யவேண்டும். (73) ரஹஸ்யத்ரயங்களின் பொருளில் ஊன்றியிருக்கும் மஹாபாகவதர்விஷயத்தில் அபசாரப்படுவதைக் காட்டிலும் ஆத்மநாசத்தை விளைக்கக்கூடியது வேறொன்றுமில்லை. அவருடைய முகமலர்த்தியைக்காட்டிலும் நமக்கு மோக்ஷஸாதநம் வேறொன்றில்லை. (74) விஷ்ணுபக்தர்களை ஆராதிப்பதைக்காட்டிலும் வேறொரு புருஷார்த்தம் கிடையாது. அவர்களை த்வேஷிப்பதைக் காட்டிலும் ஆத்மநாசத்தை விளைக்கக்கூடியது வேறொன்றில்லை.

## முடிவுரை

85-86. (1) எம்பெருமானுடைய அர்ச்சைத் திருமேனியைக் கல்லென்று நினைப்பது. (2) ஆசார்யனை மனிதன் என்று நினைப்பது. (3) வைஷ்ணவனின் ஜாதியை ஆராய்வது. (4) கலியின் தோஷத்தைக் கடியக்கூடிய பகவத்பாகவதர்களுடைய ஸ்ரீபாததீர்த்தத்தை நீரென்று

८६. श्रीमद्भागवतार्चनं भगवतः पूजाविधेरुत्तमं
श्रीविष्णोरवमाननाद्गुरुतरं श्रीवैष्णवोल्लङ्घनम्।
तीर्थादच्युतपादजाद्गुरुतरं तीर्थं तदीयाङ्घ्रिजं
तस्मान्नित्यमतन्द्रितो भव सतां तेषां समाराधने॥

इति श्रीप्रपन्नामृते रामानुजचरित्रे चरमदशायां शिष्यजनाय
चतुस्सप्ततिवाक्योपदेशो नाम पञ्चषष्टितमोऽध्यायः॥

## षट्षष्टितमोऽध्यायः

१. एवमाद्यान् हि तत्त्वार्थान् यतीन्द्रः करुणार्णवः।
दिनत्रयमहोरात्रं मुक्तिहेतून् निरन्तरम्॥

---

நினைப்பது. (5) கலியின் தோ₃ஷங்களை அழிக்கக்கூடிய ஸித்₃தோ₄பாயமான ப₄க₃வத்₃ப₄ாக₃வதர்களின் திருநாமங்களையும், மந்த்ரங்களையும் வெறும் ஶப்₃த₃ங்களாக எண்ணுவது. (6) ஸர்வேஶ்வரனை ஶ்ரிய:பதியை மற்ற தெய்வங்களோடு ஒத்தவன் என்று எண்ணுவது ஆகிய எண்ணங்களையுடையவன் நரகத்தையே அடைவான். ப₄ாக₃வதர்களை ஆராதி₄ப்பது ப₄க₃வானை ஆராதி₄ப்பதைக் காட்டிலும் சிறந்தது; ஸ்ரீவைஷ்ணவர்களை அவமதிப்பது எம்பெருமானை அவமதிப்பதைக் காட்டிலும் கொடியது. எம்பெருமானுடைய ஸ்ரீபாத₃தீர்த்த₂த்தைக் காட்டிலும் ப₄ாக₃வதர்களுடைய ஸ்ரீபாத₃தீர்த்த₂ம் சிறந்தது. ஆகையால் எப்போதுமே ப₄ாக₃வதர்களை ஆராதி₄ப்பதில் சோம்பல் இல்லாதவனாய் இருப்பாயாக.

ஸ்ரீப்ரபந்நாம்ருதத்தில் ராமாநுஜ சரித்திரத்தில்,
ஸ்ரீராமாநுஜருடைய கடைசிக் காலத்தில் சீடர்களுக்குச் செய்யப்பட்ட
எழுபத்துநாலு நல்வார்த்தைகளின் உபதே₃ஶமாகிற
அறுபத்தைந்தாம் அத்தியாயம் நிறைவுற்றது.

२. तेभ्यो महाविशेषार्थान् शिष्येभ्यो व्याजहार सः ।
निशम्यार्थं यतीन्द्रोक्तं गूढार्थमतिविस्मयाः ॥

३. सर्वे यतीन्द्रशिष्यास्ते यतीन्द्रमिदमब्रुवन् ।
कदाचिदप्यनुक्तार्थान् वदता भवताऽधुना ॥

४. अस्माकं महती शङ्का काचित् भवति भो गुरो ! ।
को हेतुरस्य भगवन् ! ब्रूहि नः करुणार्णव ! ॥

५. शङ्कां विधाय पृच्छत्सु शिष्येषु यतिपुङ्गवः ।
न्यवेदयदमेयात्मा तेभ्यस्तत्कारणं महत् ॥

६. रङ्गेशो भगवानद्य दत्तवान्मे परं पदम् ।
दिने गच्छामि वैकुण्ठं दिनस्यास्य चतुष्टये ॥

---

## அறுபத்தாறுமத்தியாயம்

## அர்ச்சாவதார மாஹாத்மியம்

### ஸிஷ்யர்களின் து₃:க்க₂ம்

1-*8. கருணைக்கடலான யதிராஜர் இதுபோன்ற தலைசிறந்த மோக்ஷஹேதுவான உபதே₃ஸங்களை மூன்று நாள்கள் இடைவிடாமல் அந்த ஸிஷ்யர்களுக்கு உபதே₃ஸித்தார். யதிராஜரால் உபதேசிக்கப்பட்ட அந்த ரஹஸ்யார்த்த₂ங்களைக் கேட்டு மிகவும் வியப்புற்ற யதிராஜ ஸிஷ்யர்கள் அனைவரும் எதிகட்கிறைவரைப் பார்த்து "ஆசார்யரே! இதற்குமுன் எப்போதும் அருளிச்செய்யாத அர்த்த₂ங்களை இப்போது உபதே₃ஸிப்பதைப் பார்க்கும்போது எங்களுக்குப் பெரியதொரு சங்கை ஏற்படுகிறது. கருணைக் கடலான எம்பெருமானரே! இப்படி உபதே₃ஸிப்பதற்குக் காரணமென்ன? என்று எங்களுக்குக் கூறவேண்டும்" என்று பிரார்த்தி₂த்தனர். அளப்பரிய யதிராஜரும் ஐயமுற்று வினவும் அந்த ஸிஷ்யர்களுக்கு, பெரிதான அக்காரணத்தை 'எம்பெருமானை ரங்க₃நாத₂ன் எனக்கு இப்போது பரமபத₃த்தை அளித்துவிட்டான். இன்றிலிருந்து நான்காவது நாளில் நான் வைகுண்ட₂ம் செல்லப்போகிறேன்" என்று அருளினர்.

७. तच्छ्रुत्वा घोरसंकाशं ते वाक्यं रोमहर्षणम् ।
भूम्यां निपतितास्सर्वे छिन्नमूला इव द्रुमाः ॥

८. देहत्यागे मतिं चक्रुः तद्वियोगासहिष्णवः ।
तानाश्वास्य यतिश्रेष्ठः शिष्यानेवं वचोऽब्रवीत् ॥

९. भो भो श्रीवैष्णवास्सर्वे मद्वियोगासहिष्णुभिः ।
भवद्भिर्मद्वियोगे तु देहत्यागः कृतो यदि ॥

१०. शठारिणा महापूर्णयामुनाभ्यां च नः शपे ।
अन्ते समागमो मास्तु भवतां नित्यसूरिभिः ॥

११. त्यक्तदेहेच्छवो ये तु मद्वियोगासहिष्णवः ।
ते चाधःपतितास्सर्वे भवेयुर्नात्र संशयः ॥

---

மயிர்க்கூச்செறிவிக்கக் கூடியதும் மிகக்கொடியதுமான அந்த வார்த்தையைக்கேட்டு எல்லா ஶிஷ்யர்களும் வேரற்ற மரங்கள்போலே பூ₄மியில் விழுந்தார்கள். எம்பெருமானாரின் பிரிவைப் பொறுக்கமாட்டாதவர்களாய் உயிரைவிடவும் துணிந்தார்கள்.

## எம்பெருமானாரின் நியமனம்

8*-11. அந்த சிஷ்யர்களை ஆஶ்வஸிப்பித்து, யதிராஜர் "ஸ்ரீவைஷ்ணவர்களே! எனது பிரிவின்போது அதைப் பொறுக்காமல் எவர்கள் தமது உடலைக் கைவிடுகின்றனரோ, அவர்களுக்கு நித்யஸூரிகளோடு சேர்த்தி ஏற்படாது. இவ்விஷயத்தை நம்மாழ்வார், பெரியநம்பிகள், ஆளவந்தார்மீது ஆணையிட்டுச் சொல்லுகிறேன். எனது பிரிவைப் பொறுக்கமாட்டாமல் உயிரைவிட நினைப்பவர்களும் (நரகம் முதலான) கீழுலகங்களுக்கே செல்வார்கள் என்பதில் ஐயமில்லை.

१२. श्रुत्वोद्वेगकरं वाक्यं तत् तस्य यतिभूपतेः।
ऊचुः प्राञ्जलयस्सर्वे भयोद्विग्ना यतीश्वर!॥

१३. युष्मत्सेवां विना सर्वे मुहूर्तमपि जीवितुम्।
न समर्था वयं स्वामिन्! तस्योपायं वदाशु नः॥

१४. तदङ्गीकृत्य वचनं भगवान् लोकपावनः।
चकार लोकरक्षार्थं मतिं काञ्चिन्महामतिः॥

१५. सुमुहूर्ते महायोगी सर्वलक्षणशोभिते।
शिल्पिभिः कारयामास स्वार्चामखिललक्षणाम्॥

१६. तमर्चाविग्रहं सम्यग्गाढमालिङ्ग्य योगिराट्।
ब्रह्मरन्ध्रं समाघ्राय स्वशक्तिं तत्र दत्तवान्॥

---

## சிஷ்யர்களின் ப்ரார்த்தனை

12-13. யதிராஜரின் ப$_{4}$யங்கரமான அந்த ஶபத$_{2}$ வாக்யத்தைக்கேட்டு, ப$_{4}$யத்தால் நடுங்கிய அந்தச் சீடர்கள் அனைவரும் கைகூப்பிநின்று யதிராஜரைக் குறித்து, "எதிகட்கிறைவரே! உம்மை ஸேவிக்காமல் நாங்கள் ஒரு முஹூர்த்தநேரமும் உயிர்வாழவல்லோமல்லோம். எங்கள் உயிர் உடலைவிட்டுப் போகாதிருக்க நீரே வழி சொல்ல வேண்டும்" என்று ப்ரார்த்தி$_{2}$த்தனர்.

## அர்ச்சாவதார ப்ரதிஷ்டை

14-*23 உலகைப்புனிதப்படுத்தும் பேரறிவாளரான ப$_{4}$க$_{3}$வத்$_{3}$ராமாநுஜர் அந்தப் ப்ரார்த்த$_{2}$னையை ஏற்றுக்கொண்டு, உலகை ரக்ஷிப்பதற்காக அப்போதொரு சிந்தை செய்தார். எல்லா லக்ஷணங்களும் நிறைந்த நல்ல முஹூர்த்தத்தில், மஹாயோகி$_{3}$யான யதிராஜர் எல்லா லக்ஷணங்களும் பொருந்திய தமது அர்ச்சாவிக்$_{3}$ரஹத்தை, சிற்பிகளைக் கொண்டு வடிக்கச்செய்தார். யதிராஜர் அந்த அர்ச்சாவிக்$_{3}$ர

७. तच्छ्रुत्वा घोरसंकाशं ते वाक्यं रोमहर्षणम् ।
भूम्यां निपतितास्सर्वे छिन्नमूला इव द्रुमाः ॥

८. देहत्यागे मतिं चक्रुः तद्वियोगासहिष्णवः ।
तानाश्वास्य यतिश्रेष्ठः शिष्यानेवं वचोऽब्रवीत् ॥

९. भो भो श्रीवैष्णवास्सर्वे मद्वियोगासहिष्णुभिः ।
भवद्भिर्मद्वियोगे तु देहत्यागः कृतो यदि ॥

१०. शठारिणा महापूर्णयामुनाभ्यां च नः शपे ।
अन्ते समागमो मास्तु भवतां नित्यसूरिभिः ॥

११. त्यक्तदेहेच्छवो ये तु मद्वियोगासहिष्णवः ।
ते चाधःपतितास्सर्वे भवेयुर्नात्र संशयः ॥

---

மயிர்க்கூச்செறிவிக்கக் கூடியதும் மிகக்கொடியதுமான அந்த வார்த்தையைக்கேட்டு எல்லா ஶிஷ்யர்களும் வேரற்ற மரங்கள்போலே பூ₄மியில் விழுந்தார்கள். எம்பெருமானாரின் பிரிவைப் பொறுக்கமாட்டாதவர்களாய் உயிரைவிடவும் துணிந்தார்கள்.

## எம்பெருமானாரின் நியமனம்

8*-11. அந்த சிஷ்யர்களை ஆஶ்வஸிப்பித்து, யதிராஜர் "ஸ்ரீவைஷ்ணவர்களே! எனது பிரிவின்போது அதைப் பொறுக்காமல் எவர்கள் தமது உடலைக் கைவிடுகின்றனரோ, அவர்களுக்கு நித்யஸூரிகளோடு சேர்த்தி ஏற்படாது. இவ்விஷயத்தை நம்மாழ்வார், பெரியநம்பிகள், ஆளவந்தார்மீது ஆணையிட்டுச் சொல்லுகிறேன். எனது பிரிவைப் பொறுக்கமாட்டாமல் உயிரைவிட நினைப்பவர்களும் (நரகம் முதலான) கீழுலகங்களுக்கே செல்வார்கள் என்பதில் ஐயமில்லை.

२३. अवर्धतानुदिवसं बालपूर्य इवोदितः।
सर्वस्थलेषु सर्वत्र श्रीरङ्गादिषु भूतले॥

२४. अर्चावतारा बहवो यतीन्द्रस्याभवंस्ततः।
तेषां मुख्यतमा भूम्यां ते यतीन्द्रकृतास्त्रयः॥

२५. श्रीभूतनगरे चैव श्रीरङ्गे यादवाचले।
तेषां मुख्यतमस्सोयं श्रीभूतनगरे स्थितः॥

२६. स्वावतारस्थलत्वेन भूतपुर्यां विशेषतः।
यतिराजस्य महती कृपा तत्रैव वर्तते॥

२७. पुरा यतीन्द्रं श्रीरङ्गे दाशरथ्यात्मजो महान्।
श्रीरामानुजदासाख्यो वाधूलकुलभूषणः॥

---

அவ்வண்ணமே ப₄க்தியை வைத்தார்கள். அர்ச்சையில் ப்ரதிஷ்டை₂ செய்யப்பெற்ற அவ்வெம்பெருமானுர், எப்போதும் ஆராதி₄க்கப்பட்டவராய், தினந்தோறும் உதிக்கும் இளஞ்சூரியன்போலே வளர்ந்துவந்தார்.

## மூன்று திருமேனிகளில் முக்கியமானது அவதாரஸ்த₂லத் திருமேனி

23*-26. ஸ்ரீரங்க₃ம் முதலான எல்லா தி₃வ்யதே₃ஶங்களிலும் யதிராஜருக்குப் பல பல அர்ச்சாவிக்₃ரஹங்கள் ஏற்பட்டன. அவற்றில் யதீந்த்₃ரராலேயே ஏறியருளப் பண்ணப்பட்டவையாய், ஸ்ரீபெரும்பூதூரிலும், ஸ்ரீரங்க₃த்திலும், திருநாராயணபுரத்திலும் ப்ரதிஷ்டை₂ செய்யப்பட்டவையான மூன்று திருமேனிகளே இவ்வுலகில் முக்கியமானவை. அம்மூன்றினுள்ளும் ஸ்ரீபெரும்பூதூரில் ப்ரதிஷ்டை₂ செய்யப்பெற்ற திருமேனியே முக்கியமானது. தமது அவதாரஸ்த₂லமாகையால், யதிராஜருடைய பெருங்கருணை ஸ்ரீபெரும்பூதூரிலேயே நிலைநிற்கிறது.

२८. प्रणिपत्य महात्मानं प्राञ्जलिर्वाक्यमब्रवीत् ।
स्वावतारस्थले स्वामिन्! तस्मिन् श्रीभूतपट्टणे ॥

२९. अस्मत्सुरक्षणार्थाय युष्मदर्चां प्रदापय ।
तदङ्गीकृत्य योगीन्द्रो मुहूर्ते सर्वमङ्गले ॥

३०. शिल्पिभिः कारयामास स्वार्चामखिललक्षणाम् ।
तमर्चाविग्रहं सम्यग्गाढमालिंग्य हर्षितः ॥

३१. उच्छ्वासवायुरूपेण स्वतेजस्तत्र चासृजत् ।
दीपादुत्पन्नदीपाभं प्रतिबिम्बमिवापरम् ॥

३२. तमर्चाविग्रहं दृष्ट्वा सर्वे मुमुदिरे जनाः ।
स्वयमेव यतिश्रेष्ठः प्रतिष्ठाकालनिर्णयम् ॥

---

## ஸ்ரீ பெரும்பூதூர்த் திருமேனியின் பெருமை

27-*44. ஸ்ரீரங்க₃த்தில் முன்னொரு சமயம் முதலியாண்டானின் திருக்குமாரராய், வாதூ₁லகுலத்திற்கு விளக்கமளிப்பவராய், ஸ்ரீராமாநுஜதா₃ஸர் எனும் பெயர் பெற்ற பெரியவர் மஹாத்மாவான யதிராஜரை வணங்கி, கைகூப்பிநின்று "ஸ்வாமியெம்பெருமானாரே! எங்களை ரக்ஷிப்பதற்காக உமது அவதாரஸ்த₂லமான ஸ்ரீபெரும்பூதூருக்கு உமது அர்ச்சையை அளித்தருள்வீர்" என்று பிரார்த்தி₂த்தார். அதை ஏற்றுக் கொண்ட யதிராஜர் எல்லா மங்க₃ளமும் நிறைந்த முஹூர்த்தத்தில் எல்லா லக்ஷணமும் பொருந்திய தமது அர்ச்சாவிக்₃ரஹத்தை ஶில்பிகளைக்கொண்டு வடிக்கச் செய்தார். அந்த அர்ச்சாவிக்₃ரஹத்தை உகப்புடன் ஆரத்தழுவி, மூச்சுக்காற்று ரூபமாகத் தம் தேஜஸ்ஸை அதில் சேர்த்தருளினார். விளக்கிலிருந்து ஏற்றிய விளக்குப் போலவும், எம்பெருமானாரது பிரதிபி₃ம்ப₃ம் போலவும் விளங்கும் அந்த அர்ச்சாவிக்₃ரஹத்தைக் கண்டு எல்லா

३३. विधाय सहसा तस्मै तं तदा प्रददौ मुदा।
दाशरथ्यात्मजो भक्त्या तामर्चां प्रतिगृह्य सः॥

३४. प्रतस्थे भूतनगरीं ब्राह्मणैस्सर्वमङ्गलैः।
रामानुजेन निर्णीतदिवसे भूतपट्टणे॥

३५. अर्चायाः सम्यगेतस्याः केशवस्वामिसन्निधौ।
दाशरथ्यात्मजो धीमान् विद्वद्भिः वैष्णवैस्सह॥

३६. यथाविधि यथाशास्त्रं प्रतिष्ठामकरोन्महान्।
जलवासाभिषेकादिकालेषु यतिभूपतेः॥

३७. आयासस्सुमहानासीत् श्रीरङ्गे वसतस्तदा।
नेत्रोन्मीलनकाले तु रक्तं सुस्राव नेत्रयोः॥

३८. अकस्मान्मम देहस्य चायासः सुमहानभूत्।
इत्येवं लक्ष்மणाचार्यः तदा सञ्जातविस्मयः॥

---

ஜனங்களும் பேரானந்தமடைந்தனர். யதிராஜர் அந்த விக்ர ஹத்துக்கு ப்ரதிஷ்டாகாலத்தைத் தாமே சடக்கென நிர்ண யித்து, அத்திருமேனியைக் கந்தாடையாண்டானுக்கு அப் போதே உகப்புடன் அளித்தார். முதலியாண்டான் குமார ரான அவர் பக்தியுடன் அத்திருமேனியைப்பெற்று, எல்லா மங்களங்களும் நிறைந்த அந்தணர்களோடு ஸ்ரீபெரும்பூதூ ருக்குப் புறப்பட்டார். பெரியவரான தாசரதிகுமாரரான அவர் ஸ்ரீராமானுஜர் நிர்ணயித்த தினத்தில் ஸ்ரீபெரும்பூதூரில் ஸ்ரீகேசவன் ஸந்நிதியில் வித்வான்களான வைஷ்ணவர்க ளோடு கூடிநின்று வேதாகமமுறைப்படி அத்திருமேனிக்கு நன்கு ப்ரதிஷ்டையைச் செய்வித்தார். அக்காலத்தில் ஸ்ரீரங்கத்தில் வாழ்ந்த உடையவருக்கு, ஜலாதிவாஸம், திருமஞ்சனம் முதலானவற்றை ஸ்ரீபெரும்பூதூரில் அத் திருமேனிக்குச் செய்யும்போது பெருத்த களைப்பு ஏற்பட்டது.

३९. अकस्माल्लक्ष्मणार्यस्य रक्तं नेत्रे हि निःसृतम् ।
त्रिलोक्य विस्मयं जग्मुः सर्वे श्रीवैष्णवोत्तमाः ॥

४०. तस्याः प्रतिष्ठानिर्णीतवासरः स च वासरः ।
एकत्वेनैव ते सर्वे विस्मयं च मुदं ययुः ॥

४१. श्रीरामानुजदासश्च तमर्चाविग्रहं ततः ।
प्रतिष्ठाप्य यथाशास्त्रं भूतपुर्यां यथाविधि ॥

४२. तद्वृत्तान्तं यतीन्द्राय प्राहिणोदञ्जसा तदा ।
तत्प्रतिष्ठादिनं चैव तन्निर्णीतदिनं तथा ॥

४३. देहायासदिनं चैव त्रयं तुल्यं बभूव यत् ।
तस्माद्यतीन्द्रः संपूर्णः कलाभिः भूतपत्तने ॥

---

அத்திருமேனிக்குக் கண்திறக்கும்போது, அவரது கண்ணி லிருந்து ரத்தம் வெளிப்பட்டது. 'யாத்₃ருச்சி₂கமாக எனது தே₃ஹத்தில் களைப்பு ஏற்பட்டது' என்று ஸ்ரீராமாநுஜர் அப்போது வியப்புற்றார். யாத்₃ருச்சி₂கமாக அவரது கண்களிலிருந்து ரத்தம் வருவதைக்கண்டு ஸ்ரீவைஷ்ண வோத்தவர்கள் அனைவரும் வியப்புற்றனர். ஸ்ரீபெரும்பூதூர்த் திருமேனியின் ப்ரதிஷ்டை₂க்கு நிர்ணயிக்கப்பட்டிருந்த தி₃னம் அதுவே என்று உணர்ந்து அவர்கள் அனைவரும் வியப்பும், ஆனந்த₃மும் அடைந்தனர். கந்தாடையாண் டானும் ஸ்ரீபெரும்பூதூரில் வேத₃ாக₃மவிதி₄ப்படி அத்திரு மேனியை ப்ரதிஷ்டை₂செய்வித்து, அப்போதே அச்செய் தியை நல்லமுறையில் யதிராஜருக்கு அனுப்பினார். எம் பெருமானார் ப்ரதிஷ்டைக்கு நிர்ணயித்த நாளும், ப்ரதிஷ்டை₂ நடந்த நாளும், அவரது திருமேனியில் களைப்பு ஏற்பட்ட நாளும் ஒன்றாயிருந்ததிலிருந்தே—ஸ்ரீபெரும்பூதூர்த் திரு மேனியில் கைங்கர்யச் செல்வம் நிறைந்த எம்பெருமானார்

४४. लोकसंरक्षकः श्रीमानद्यापि परिदृश्यते ।
तस्माच्छ्रीभूतनगरं मुक्तिस्थानं न संशयः ॥

४५. सर्वे दिव्यस्थलाधीशा यतीन्द्रे सुप्रतिष्ठिताः ।
संपूर्णा दिव्यकलया यतीन्द्रेण प्रतिष्ठिताः ॥

४६. तस्माद्भूतपुरी पुण्या सर्वदिव्यस्थलाधिका ।
अनायासेन निखिलदिव्यदेशादिवासतः ॥

४७. यत्फलं समवाप्नोति तत्तत्रैव न संशयः ।
तस्मात्सर्वप्रयत्नेन वस्तव्यं भूतपट्टणे ॥

४८. कुटीरमपि कृत्वापि वैष्णवेन मुमुक्षुणा ।
महापातकयुक्तो वा युक्तो वा सर्वपातकैः ॥

---

பரிபூர்ணகலைகளோடு இன்றும் உலகங்களை ரக்ஷித்துக் கொண்டு காட்சியளிக்கிறார் என விளங்குகிறது.

## ஸ்ரீபெரும்பூதூரின் பெருமை

44*-54. இக்காரணத்தாலேயே ஸ்ரீபெரும்பூதூர் மோக்ஷமளிக்கும் திவ்யதேசம் என்பதில் ஐயமில்லை. எல்லா திவ்யதேசத்து எம்பெருமான்களும் யதிராஜரிடம் நன்கு நிலைநிற்கின்றனர். (ஆகையால்) பரிபூர்ணதிவ்யகலைகளோடு, அவர்கள் அனைவரும் யதிராஜரோடு ஸ்ரீபெரும்பூதூரில் ப்ரதிஷ்டைசெய்யப்பட்டுள்ளனர். ஆகையால் புண்யமான ஸ்ரீபெரும்பூதூர் எல்லா திவ்யதேசங்களிலும் சிறப்புற்றது. எல்லா திவ்யதேசங்கள், மற்ற புண்ய ஸ்தலங்கள் ஆகியவற்றில் வஸிப்பதால் யாதொரு பலனை மனிதன் அடைகிறானோ, அப்பலனை ஸ்ரீபெரும்பூதூரில் வாழ்வதாலேயே எளிதில் பெறுகிறான். இதில் ஐயமில்லை. ஆகையால், மோக்ஷமடைய விரும்பும் மனிதன் ஸ்ரீபெரும்பூதூரில் ஒரு குடிசை கட்டிக்கொண்டாவது எப்பாடுபட்டும் வாழவேண்டும்.

४९. तत्र नत्वा यतिश्रेष्ठं मुच्यते नात्र संशयः।
चैत्रार्द्रायां यतीन्द्रस्य योऽभिषेकं करोति हि॥

५०. सर्वपापविनिर्मुक्तो याति विष्णोः परं पदम्।
रामानुजार्यपादाब्जभक्तिमान् यो नरो भुवि॥

५१. कृतकृत्यो हि सर्वेषां स च पूज्यतमः स्मृतः।
तस्माद्यतीन्द्रकैङ्कर्यं परमप्राप्यमेव तत्॥

५२. तस्माल्लक्ष्मणयोगीन्द्रप्रभावमतिमानुषम्।
केन वर्णयितुं शक्यं न शक्यं चेश्वरेण हि॥

५३. अर्चावतीर्णस्य यतीश्वरस्य श्रीभूतपुर्यां जगतां हितार्थम्।
यमद्भुतं तं महिमानमाद्यं जानाति सम्यक् स पुमान् कृतार्थः॥

---

பஞ்சமஹாபாதகங்களைச் செய்தவனும், எல்லாப் பாபங்களை யும் செய்தவனுங்கூட ஸ்ரீபெரும்பூதூரில் யதிராஜரை வணங்கினுைகில் பாபங்களிலிருந்து நீங்கப்பெறுவான் என்பதில் ஐயமில்லை. சித்திரை மாதம் திருவாதிரையில் எம்பெருமானுருடைய அவதார மஹோத்ஸவத்தின்போது அவருக்கு எவனொருவன் திருமஞ்சனம் செய்விக்கின்றானே, அவன் எல்லாப் பாபங்களினின்றும் நீங்கப்பெற்று விஷ்ணு வின் பரமபதத்தை அடைகின்றான். ஸ்ரீராமாநுஜாசார்ய ரின் திருவடித்தாமரையில் பக்தியுடைய மனிதன் இவ் வுலகில் செய்யவேண்டியதைச் செய்தவனுவான். அவனே அனைவர்க்கும் மிகமிகப் பூஜிக்கத்தக்கவனாகக் கருதப்படு கிறான். ஆகையால், ஸ்ரீபெரும்பூதூர்யதிராஜருக்குக் கைங்கர்யம்செய்வது பரமப்ராப்யமேயாகும். ஆகையால் ஸ்ரீராமாநுஜமுனிஶ்ரேஷ்டருடைய ப்ரபாவம் அதிமாநுஷ மானது. அதை யாரால் வர்ணிக்கமுடியும்? ஈஶ்வரனாலும் அதை வர்ணிக்கமுடியாதன்றோ. ஸ்ரீபெரும்பூதூரில் உல கின் நன்மையின் பொருட்டு அர்ச்சையாக அவதரித்த

५४. सकलनिगमसारं साधुलोकैकसारम्
निरुपममनवद्यं भोगमोक्षैकहेतुम् ।
हरिमतमिदमाद्यं यो नु सेवेत धीरः
सकलनिगमवेदी ब्रह्मवेत्ता स एव ॥

इति श्रीप्रपन्नामृते रामानुजचरित्रे
श्रीभूतनगरीरामानुजार्चावतारमाहात्म्यवर्णनं नाम षट्षष्टितमोऽध्यायः ॥

सप्तषष्टितमोऽध्यायः

१. ततः श्रीवैष्णवास्सर्वे श्रीरङ्गपुरवासिनः ।
एवं विज्ञापनं चक्रुर्यतिराजं जगद्गुरुम् ॥

---

யதிராஜரின் ஆஶ்சர்யமாய், தொன்மையான பெருமையை நன்கறிந்த மனிதனே பேறுபெற்றவன். எல்லா வேத₃ங்களுக்கும் ஸாரமாயிருப்பதாய், நல்லோர்களுக்கு ஒப்பற்ற ஸாரமாயிருப்பதாய், ஒப்பற்றதாய், குற்றமற்றதாய் இவ்வுலக போ₄க₃ங்களையும் மோக்ஷத்தையுமளிப்பதாய், தொன்மையானதான இந்த (ஸ்ரீராமானுஜரால் நிலைநிறுத்தப்பட்ட) ஸ்ரீவைஷ்ணவ மதத்தை எந்த தீ₄ரன் (பேரறிவாளன்) பின்பற்றுகிறானோ, அவனே எல்லா வேத₃ங்களையுமறிந்தவனுவான்; ப்₃ரஹ்மஜ்ஞானியுமாவான்.

ஸ்ரீப்ரபந்நாம்ருதத்தில் ராமானுஜசரித்திரத்தில்,
ஸ்ரீபெரும்பூதூரில் அர்ச்சையாய் எழுந்தருளியிருக்கும்
ஸ்ரீராமானுஜரின் பெருமையை வர்ணிக்கும்
அறுபத்தாறும் அத்தியாயம் நிறைவுபெற்றது.

## அறுபத்தேழாம் அத்தியாயம்

# ஸ்ரீவைஷ்ணவ லக்ஷணவர்ணனம்

### ஶிஷ்யர்களின் பிரார்த்த₂னை

1-*2. அதற்குப் பின் ஸ்ரீரங்க₃த்தில் வாழும் எல்லா ஸ்ரீவைஷ்ணவர்களும் ஜக₃த்₃கு₃ருவான யதிராஜரைப்

२. अस्माकं वर्तितव्यांश्च ब्रूहि सम्यग्यतीश्वर! ।
तच्छ्रुत्वा तानुवाचेदं मन्नाथो वैष्णवान् वचः ॥
३. यः कश्चन प्रपन्नश्चेत्स एवं वर्तयेत् बुधः ।
यत्प्रपन्नस्य चादृष्टं ईश्वराधीनतस्ततः ॥
४. न विचारोऽत्र कर्तव्यः सन्देहं कुरुते यदि ।
मिथ्या भवति तत्तस्य ध्रुवमात्मसमर्पणम् ॥
५. कर्माधीनतया तस्य दृष्टं तत्र न शोचयेत् ।
अतस्तयोः प्रपन्नस्य दृष्टादृष्टात्मकार्थयोः ॥
६. निर्भरत्वानुसन्धानं जानीध्वमिति वैष्णवाः ।
वयं तु केन मार्गेण कालमादेहपातनम् ॥

---

பார்த்து "எதிகட்கிறைவரே! நாங்கள் எப்படி வாழ வேண்டும் என்பதை அருளிச்செய்யவேண்டும்" என்று விண்ணப்பித்தனர்.

## யதிராஜரின் பதில்

2*-*6 அதைக்கேட்டு எம்பெருமானார் அந்த வைஷ்ணவர்களைப் பார்த்து "வைஷ்ணவர்களே! ப்ரபந்நனு யிருக்கும் அறிவாளி இவ்வண்ணமே வாழவேண்டும். ப்ர பந்நனுடைய மறுமைப்பயன் ஈச்வர ஸங்கல்பத்தால் வருகிறது. ஆகையால், அவன் அதைப்பற்றிக் கவலைப் படக்கூடாது. அதில் ஸந்தேஹப்பட்டானுகில் அவன் செய்த ஆத்மஸமர்ப்பணம் பொய்யானதாகும். இவ்வுலகப் பயன்கள் கர்மம் காரணமாக ஏற்படுகிறதாகையால், அது விஷயமாகவும் ப்ரபந்நன் கவலைப்படக்கூடாது. ஆகையால் ப்ரபந்நன் இவ்வுலகப்பயன்களைக் குறித்தும், மறுமைப் பயனைக் குறித்தும் கவலையில்லாமல் இருக்கவேண்டும் என்று அறிவீர்களாக" என்று அருளிச்செய்தார்.

७. वर्तिष्यामः क्षिपन्तस्तं शाधि नो गुरुपुङ्गव।
इत्युक्तस्तैर्यतिश्रेष्ठः कृपया तानुवाच सः॥

८. उपायबुद्ध्या कर्माणि मा कुरुध्वं महात्मकाः।
कर्मणामेव कैङ्कर्यं प्राप्यं भगवतो मतिः॥

९. तदीयं नाम कैङ्कर्यं श्रुत्वा श्रीभाष्यमादरात्।
प्रवर्तयध्वं तल्लोके तत्र शक्तिर्नचेद्यदि॥

१०. पराङ्कुशादिमुनिभिः दशभिर्देशिकोत्तमैः।
कृतं प्रबन्धमभ्यस्य शिष्येभ्यो वदतानिशम्॥

११. तत्रापि भवतां शक्तिर्नस्याद्यदि हि वैष्णवाः।
दिव्यदेशेषु कैङ्कर्यं विष्णवे कुरुतानिशम्॥

---

## காலக்ஷேபப்ரகார ப்ரஶ்னம்

6*-7. "ஆசார்யஶ்ரேஷ்ட₂ரே! எங்களுடைய உடல் விழும்வரையில் நாங்கள் எந்த வழியில் பொழுதுபோக்குவது என்பதை அருளிச்செய்வீராக" என்று அவர்களால் கேட்கப்பட்ட யதிராஜர் கருணையோடு அவர்களைப் பார்த்துப் பின்வருமாறு கூறினர்.

## காலக்ஷேபப்ரகார வர்ணனம்

8-18. "மஹாபுருஷர்களே! எந்தக் கர்மத்தையும் உபாய பு₃த்₃தி₄யோடு செய்யாதீர்கள். கர்மங்கள் எம்பெருமானுக்குக் கைங்கர்யமாய் ப்ராப்யமாகும் என்று எண்ணுங்கள் அவனுக்குச் செய்யும் கைங்கர்யமாக ஸ்ரீபா₄ஷ்யத்தை ஆர்வத்துடன் கேட்டு அதை உலகில் பரப்புங்கள். அதற்கு ஶக்தியில்லையாகில், ஆசார்யோத்தமர்களான நம்மாழ்வார் முதலான பத்து ஆழ்வார்களும் அருளிய தி₃வ்யப்ரப₃ந்த₄ங்களைப் பொருளோடு கற்று, அதை ஶிஷ்யர்களுக்கு எப்போதும் உபதே₃ஶம் செய்யுங்கள். வைஷ்ணவர்களே! அதிலும்

१२. तत्रापि भवतां बुद्धिः यदि सम्यक् न जायते।
कुटीमपि कृत्वापि मठे मे यादवाचले॥

१३. मुक्ताहङ्कारिणस्सर्वे वासं कुरुत वैष्णवाः।
नाप्येतत् भवतां वत्साः रोचते यदि सुन्दरम्॥

१४. द्वयार्थस्यानुसन्धानं यावज्जीवमतन्द्रिताः।
कुर्वन्तः सम्यगेवार्या निर्भरा वसतादरात्॥

१५. यदि नोत्पद्यते बुद्धिः भवतां तत्र सत्तमाः! ।
श्रूयतामवधानेन प्रवक्ष्ये चरमं हितम्॥

१६. ज्ञानभक्त्यादियुक्तस्य वैष्णवस्य महात्मनः।
मुक्ताहङ्कारिणस्तस्य निदेशे वसतानिशम्॥

---

உங்களுக்கு ஶக்தியில்லையாகில், தி₃வ்யதே₃ஶங்களில் விஷ்ணுவுக்கு எப்போதும் கைங்கர்யம் செய்யுங்கள். அதில் உங்களுடைய கருத்து நன்கு ஈடுபடவில்லையாகில், நான் வாழ்ந்த திருநாராயணபுரத்தில் ஒரு குடிசையையாவது கட்டிக்கொண்டு அஹங்காரமற்றவர்களாய் அங்கு அனைவரும் வாழுங்கள். பிள்ளைகளே! இதுவும் உங்களுக்கு அழகாகப்படவில்லையாகில் உயிருள்ளவரையில் த்₃வயத்தை அர்த்₂தானுஸந்த₄ானத்துடன் சோம்பலில்லாமல் நன்கு ஆர்வத்துடன் உச்சரித்துக்கொண்டு கவலையற்று வாழுங்கள். நல்லோர்களே! இதிலும் உங்களுடைய கருத்து செல்லவில்லையானல் கடைசியாக ஒரு ஹிதத்தைச் சொல்லுகிறேன். கவனமாகக் கேளுங்கள். ஜ்ஞானம் ப₄க்தி முதலானவைகளையுடையவராய், அஹங்காரமற்றவராய், மஹாபுருஷரான வைஷ்ணவர் ஒருவருக்கு எப்போதும் வஶப்பட்டு வாழுங்கள். இதுவே கடைசியான உபாயம். இதுக்குமேல் உபாயமில்லை'' என்று யதிராஜர் கூறினர். இவ்விஷயத்தில் உலகமறிந்த பின்வரும் (பொருளுள்ள) பெரிய ஶ்லோகம் வழங்குகிறது. அதாவது:- ''1 ஸ்ரீப₄ாஷ்யத்தை

१७. अयं हि चरमोपायो नान्योपायस्ततः परम् ।
अस्मिन्नर्थे महान् श्लोकः श्रूयते लोकविश्रुतः ॥

१८. श्रीभाष्यद्रविडागमप्रवचनं श्रीशस्थलेष्वन्वहम्
कैङ्कर्यं यदुशैलनित्यवसतिः सार्थद्वयोच्चारणम् ।
यद्वा भागवताभिमाननित्यवसतिः श्रेयः सतामित्यलं
शिष्यान्प्राह यतीश्वरः परमगाद्विष्णोः पदं शाश्वतम् ॥

१९. इत्येवं वसतां लोके महतामधिकारिणाम् ।
त्रिविधा विषयाः सन्ति वर्तितव्या यथार्हतः ॥

२०. विरोधिनोऽनुकूलाश्च स्मृताश्चानुभया इति ।
विष्णुविद्वेषिणो लोके विरोधिन इति स्मृताः ॥

---

ப்ரவசனம் செய்வது, 2 தி$_3$வ்யப்ரப$_3$ந்த$_4$த்தை ப்ரசாரம் செய்வது, 3 தி$_3$வ்யதே$_3$ஶங்களில் தினந்தோறும் கைங்கர்யம் செய்வது, 4 திருநாராயணபுரத்தில் நிரந்தரமாக வாழ்வது, 5 த்$_3$வயத்தை அர்த்த$_2$த்தோடு அநுஸந்தி$_4$ப்பது, 6 ஒரு பா$_4$க$_3$வதனுடைய அபி$_4$மானத்திலே ஒதுங்கி எப்போதும் வாழ்வது ஆகிய இவையே நல்லோர்களுக்கு ஹிதமாகும் என்று யதிராஜர் ஶிஷ்யர்களுக்கு அருளினார். அதற்குப் பின் விஷ்ணுவின் நித்யமான பரமபத$_3$த்தை அடைந்தார்.''

## மூவகை அதி$_4$காரிகளுடன் வைஷ்ணவன் நடந்துகொள்ளவேண்டிய முறை

19-35. (ஸ்ரீராமாநுஜர் மேலும் உபதே$_3$ஶித்ததாவது:-) இவ்வண்ணம் வாழும் மஹான்களான அதி$_4$காரிகள் உலகிலுள்ள மூவகை அதி$_4$காரிகளோடு அவரவர்களுக்குத் தக்கபடி நடந்துகொள்ளவேண்டும். 1 விரோதி$_4$கள், 2 அனுகூலர்கள், 3 அநுப$_4$யர்கள் என்பவர் அந்த மூவகை அதி$_4$காரிகள். இவ்வுலகிலுள்ள விஷ்ணுத்$_3$வேஷிகளே விரோதி$_4$கள் எனப்படுகிறார்கள். வைஷ்ணவர்கள் அநுகூலர்

२१. वैष्णवास्त्वनुकूलाश्च बद्धाश्चानुभयाः स्मृताः ।
यथा प्रसादं कुर्वन्ति प्रियवस्तुसमागमे ॥

२२. वैष्णवालोकनेनैव तथा कुर्वन्तु धीवराः ।
वह्निसर्पादिवद्दूरं परित्याज्या विरोधिनः ॥

२३. संसारिणस्तृणीकृत्य काष्ठलोष्टतृणादिवत् ।
वर्तितव्याः प्रपन्नानां ध्रुवं तेषां महात्मनाम् ॥

२४. वैष्णवानां हि सङ्गत्या संयक् ज्ञानं प्रजायते ।
तेन निःश्रेयसःप्राप्तिः भविष्यति सुनिश्चयम् ॥

२५. अतस्सर्वात्मना कार्या वैष्णवानां हि सङ्गतिः ।
प्रतिकूलादिसंसर्गमानसंभाषणादयः ॥

---

எனப்படுவர். ஸம்ஸாரத்தில் கட்டுண்டு உழலுகிறவர்கள் அநுபயர் (விரோதிகளிலும் அநுகூலர்களிலும் சேராதவர்கள்) எனப்படுவர். அறிவாளிகளாயிருப்பவர்கள் நிலா, தென்றல், சந்தனம் முதலான இனிய வஸ்துக்களை அநுபவிக்கும்போது ஏற்படும் ஆநந்தத்தை வைஷ்ணவர்களைக் காணும்போது பெறவேண்டும். நெருப்பு பாம்பு முதலானவற்றைப்போலே விரோதிகள் வெகுதூரம் விலக்கத்தக்கவர்கள். மஹாத்மாக்களான ப்ரபந்நர்கள் அநுபயர்களான ஸம்ஸாரிகளைக் கண்டால் கட்டை, மண்சட்டி, புல் முதலானவற்றைக் கண்டதுபோலே உதாஸீனராய் நடந்து கொள்ளவேண்டும் இது உறுதி. வைஷ்ணவர்களோடு சேருவதால் நல்ல ஜ்ஞானம் உண்டாகிறது. அதனால் மோக்ஷம் கிடைப்பது உறுதியாகும். ஆகையாலும் வைஷ்ணவர்களோடு சேரவேண்டும். ப்ரதிகூலர்களான விஷ்ணுத்வேஷிகளோடு சேருவது, அவர்களை மதிப்பது, அவர்களோடு பேசுவது முதலானவற்றை மஹாத்மாக்களான ப்ரபந்நர்கள் வெகுதூரம் விலக்கவேண்டும். அநுகூலர்களை அநாதரித்து, பணத்தாசையால் ப்ரதிகூலர்க

२६. सुदूरतः परित्याज्याः प्रपन्नानां महात्मनाम् ।
अनुकूलाननादृत्य प्रतिकूलान् धनेच्छया ॥

२७. कृता स्याद्यदि या पूजा सा हरेः शोकदा भवेत् ।
सार्वभौमस्य नृपतेस्तत्पुत्रं राजसन्निधौ ॥

२८. यथा कृतेऽवमाने च व्याकुलं नृपमानसम् ।
तथा देवस्य विष्णोश्च व्याकुलं हृदयं भवेत् ॥

२९. अर्थकामेच्छया वापि पूजयेन्न विरोधिनः ।
विरोधिनां हि तद्द्रव्यं विरोधायैव केवलम् ॥

३०. सर्वाभीष्टप्रदे देवे हरौ तिष्ठति सर्वदा ।
तं तु विष्णुं ऋते याच्ञा कृता यदि विरोधिषु ॥

३१. सार्वभौमस्य नृपतेर्महिष्या क्षत्रबन्धुषु ।
यदि याच्ञा कृता तेन नृपस्यावद्यता यथा ॥

---

ளுக்கு உபசாரம் செய்யப்பட்டதாகில், அது எம்பெருமா னுக்கு வருத்தத்தை விளைக்கும். சக்கரவர்த்தியான அரசன் முன்னிலையில் அவனுடைய பிள்ளையை அவமானப்படுத் தினுல் அரசனின் மனம் எப்படிக்கலங்குமோ அதுபோலவே ஸ்ரீவைஷ்ணவர்களை அவமதித்தால் எம்பெருமானுடைய திருவுள்ளம் கலங்கும். பொருள், இன்பம் ஆகிய பயன் களைக் கருதியும் விரோதி₄களை ஒருநாளும் உபசரிக்கக் கூடாது. விரோதி₄களின் அந்த த்₃ரவ்யம் (பெறுகிறவனின் ஆத்மாவுக்கே) விரோத₄த்தை விளைத்தே தீரும். ப₄க₃வான் எப்போதும் கேட்டதெல்லாம் கொடுக்கக்காத்திருக்கும்போது அவனைக் கைவிட்டு விரோதி₄களிடம் யாசிப்பது—சக்கர வர்த்தியின் தே₃வி து₃ஷ்டக்ஷத்திரியர்களிடம் யாசிக்கு மிடத்திற்போலே யாசிக்கின்றவனுக்குப் பெருங்குற்றத்தை விளைத்து, எம்பெருமானுக்கும் பெருத்த இழிவு ஏற்படும்.

३२. तथा भगवतः सा स्यादवद्या महती ध्रुवम् ।
न मानयेदनुभयानर्थकामेच्छयापि च ॥

३३. तेभ्यः कृतावमानेन पूर्वोपात्ता दृढा मतिः ।
न च कार्यकरी तस्य नष्टा भवति सा ध्रुवम् ॥

३४. सुवर्णलोहयोर्लोके यथा रत्नशर्करयोः ।
अनुकूलानुभययोस्तथैव महदन्तरम् ॥

३५. अतोऽनिशं देववरैर्महात्मभिः
श्रीवैष्णवैर्मुक्तमदैर्विचक्षणैः ।
निवृत्ततर्षैर्निवसध्वमादरात्
तेभ्यश्च वः सर्वफलानि सन्ति हि ॥

इति श्रीप्रपन्नामृते रामानुजचरित्रे
श्रीवैष्णवलक्षणानुवर्णनं नाम सप्तषष्टितमोऽध्यायः ॥

---

இது உறுதி. பொருள், இன்பம் ஆகியவற்றைக் கருதி அநுபயர்களான ஸம்ஸாரிகளையும் உபசரிக்கக்கூடாது. அவர்கள் செய்யும் அவமதிப்பால் "எம்பெருமானே தஞ்சம்" என்று ஏற்கனவே ப்ரபந்நனுக்கு ஏற்பட்டிருந்த உறுதி அழிந்துபோய் பயன்விளைக்காமல்போகும். இது நிச்சயம். பொன்னுக்கும் இரும்புக்கும்,ரத்னத்துக்கும் வெறுங்கல்லுக்கும் உலகில் எவ்வளவு வேறுபாடு உள்ளதோ, அத்தனை வேறுபாடு அனுகூலர்களுக்கும் அநுபயர்களுக்கும் உண்டு. ஆகையாலே விண்ணுளாரிலும் சீரியரும்,மஹாத்மாக்களும், மதமில்லாதவர்களும், செயல்திறனுள்ளவர்களும், பற்றில்லாதவர்களுமான ஸ்ரீவைஷ்ணவர்களோடுகூட அன்போடு வாழுங்கள். அவர்களால் உங்களுக்கு எல்லாப் பலன்களும் உண்டாகுமன்றோ.

ஸ்ரீப்ரபந்நாம்ருதத்தில் ராமாநுஜசரித்திரத்தில்,
ஸ்ரீவைஷ்ணவ லக்ஷணவர்ணனமாகிற
அறுபத்தேழாவது அத்தியாயம் நிறைவுபெற்றது.

अष्टषष्टितमोऽध्यायः

१. यतीन्द्रः पूर्णकृपया शास्त्रसारतमांस्तदा।
शिष्येभ्यश्चोपदिश्यार्थान् सर्वेभ्यो मुदमाप सः॥

२. एवं बहुविधैर्वाक्यैः शास्त्रसारतमैः शुभैः।
अनुशास्य तदा शिष्यान् सर्वान् लक्ष्मणदेशिकः॥

३. तेषां हितेच्छया भट्टं राजानं कर्तुमुद्यतः।
आनीय रङ्गराजस्य सन्निधिं तं महौजसम्॥

४. कृतसम्यक्प्रणामाय रङ्गपुत्राय धीमते।
शठकोपं च तीर्थं च दापयित्वाऽर्चकैः पुरा॥

५. स्वीकृत्य तत्स्वयं पश्चाद्धृष्णवानिदमब्रवीत्।
अयं रङ्गसुतः श्रीमान् विष्णुदर्शनवर्धकः॥

---

அறுபத்தெட்டாவது அத்தியாயம்

## ஸ்ரீராமாநுஜரின் மறைவு

### ப₄ட்டரை த₃ர்ஶநஸ்த₂ாபகராக நியமித்தல்

1-8. யதிராஜர் பரிபூர்ண க்ருபையாலே ஶாஸ்த்ரங்களில் மிக முக்₂யமான ஸாரார்த்த₂ங்களை அப்போது ஶிஷ்யர்கள் அனைவருக்கும் இவ்வண்ணமாக உபதே₃ஶித்துப் பேரா நந்த₃மடைந்தார். இவ்வண்ணமாக ஶாஸத்ரங்களில் மிக முக்₂யமாய் மங்க₃ளமான ஸாரார்த்த₂ங்களை அப்போது ஶிஷ்யர்களுக்கு உபதே₃ஶித்து, அவர்களுக்கு ஹிதத்தைச் செய்யவிரும்பி, தமக்குப்பின் பராஶரப₄ட்டரை த₃ர்ஶந நிர்வாஹகராகச் செய்யமுற்பட்டார். பெரும் கீர்த்தியுடைய அவரை ரங்க₃ராஜனது ஸன்னிதி₄க்கு அழைத்துச்சென்று ஸ்ரீரங்க₃நாத₂னின் புத்ரரான அப்பேரறிவாளரை நன்கு வணங்கச்செய்து, ரங்க₃நாத₂னுடைய அர்ச்சகர்களைக் கொண்டு ஸ்ரீஶட₂கோபனையும் தீர்த்த₂த்தையும் அவருக்கு

६. भवतां चैव सर्वेषां रक्षिता नात्र संशयः।
अस्य प्रशासने यूयं वर्तध्वं भक्तितत्पराः॥

७. इत्येवमुक्त्वा रङ्गेशसन्निधौ यतिपुङ्गवः।
रङ्गेशदास्यसाम्राज्ये राजानमभ्यषेचयत्॥

८. तं पराशरभट्टार्यं लोकानुग्रहतत्परः।
रङ्गेशः संप्रहृष्टोऽभूत् सुतं दृष्ट्वा तमीश्वरः॥
रामानुजकृपापात्रं सर्वे मुमुदिरे जनाः॥

९. ततो महात्मा यतिसार्वभौमः
संप्रेषितो रङ्गधुरन्धरेण।
आलम्ब्य हस्तं रघुनाथसूनोः
तं वाचमूचे महतां समाजे॥

---

முதலில் அளிக்கச்செய்து, தாம் அவருக்குப்பின் அவற்றைப் பெற்றுக்கொண்டு ஸ்ரீவைஷ்ணவர்களைப் பார்த்து "கைங்கர்யச் செல்வம் நிறைந்தவராய் ஸ்ரீரங்க₃நாத₂னின் பிள்ளையான இவர் இந்த வைஷ்ணவ த₃ர்ஶனத்தை வளர்ப்பார். உங்கள் அனைவரையும் ரக்ஷிப்பார். இதில் ஐயமில்லை. ப₄க்திமிக்கவர்களே! நீங்கள் இவருடைய ஆணைக்கு உட்பட்டு நடக்கவேண்டும்" என்று அருளினார். இவ்வண்ணமாக அருளியபின் யதிராஜர் ரங்க₃நாத₂னின் ஸன்னிதி₄யில் ரங்க₃நாத₂னுடைய கைங்கர்ய ஸாம்ராஜ்யத்துக்கு அரசராக (த₃ர்ஶனஸ்தா₂பகராக)ப் பட்டாபி₄ஷேகம் செய்வித்தார். ஈஶ்வரனாய், உலகத்தை அநுக்₃ரஹிப்பதில் ஈடுபட்டவனான ரங்க₃நாத₂னும் தனது பிள்ளையான இந்த ஸ்ரீபராஶரப₄ட்டரைப் பார்த்துப் பேரானந்த₃மடைந்தான்.

## வேதா₃ந்தியை வெல்ல நியமித்தல்

9-10. அதற்குப்பின் ஸ்ரீரங்க₃நாத₂னால் விடைகொடுக்கப்பட்ட எதிகட்கிறைவர் ரங்க₃நாத₂னின் பிள்ளையான

१०. दिशि प्रतीच्यां विबुधोऽस्ति कश्चित्
वेदान्तिनामा रघुनाथसूनो ! ।
जित्वा तमाशु स्वमतप्रविष्टं
विधेहि वेदान्तिनमार्यवर्यम् ॥

११. ततो यतीन्द्रस्तेनाशु सह सर्वैर्मठं गतः ।
सर्वान् शिष्यान् समाहूय वाक्यं चेदमुवाच तान् ॥

१२. अविवेकेन यूयं मे वियोगे भृशदुःखिताः ।
देहत्यागं मा कुरुध्वं मयाऽऽचार्येण वः शपे ॥

१३. तत्प्रत्ययार्थं तैस्सर्वैः स्पृष्टपादः पुनः पुनः ।
वैकुण्ठयात्रादिवसे प्रातस्तान् कृतभोजनान् ॥

---

ப₄ட்டருடைய கையைப் பிடித்துக்கொண்டு பெரியோர்கள் அனைவரும் குழுமியிருக்கையில் ப₄ட்டரைப் பார்த்து "பெருமாளுடைய புத்ரரே! மேல்நாட்டிலே வேத₃ாந்தி என்று பெயர்பெற்ற ஓர் அறிவாளி இருக்கிறான். புற மதத்திலுள்ள அந்த வேத₃ாந்தியை வென்று நமது மதத்தைத் தழுவியவனாகவும் நல்லவர்களின் தலைவனாகவும் ஆக்குவீராக" என்று அருளினார்.

## சரமஹிதோபதே₃ஶம்

11-*19. அதற்குப்பின் யதிராஜர் ப₄ட்டரோடும் மற்ற ஸ்ரீவைஷ்ணவர்களோடும் விரைவில் தமது மட₂த்தை அடைந்தார். எல்லா ஶிஷ்யர்களையும் அழைத்து அவர்களைப் பார்த்து "விவேகமில்லாமல் நீங்கள் அனைவரும் எனது பிரிவிலே மிகவருந்தி உங்களுடைய உடலை விட்டு விடக்கூடாது. ஆசார்யனான என்மீது ஆணையிட்டு இதை உங்களுக்கு நியமிக்கிறேன்" என்று கூறினார். அவர்கள் அனைவரும் அதை ஏற்றுக்கொண்டு யதிராஜர் அதை நம்புவதற்காக ஒவ்வொருவராக அவரது திருவடி

१४. विधाय सहसा शिष्यान् बहुशिष्यो महायशाः ।
तदा सर्वान् समानीय रङ्गेशपरिचारकान् ॥

१५. मया कृतापराधान् हि क्षमध्वमिति चाब्रवीत् ।
बद्धाञ्जलिपुटास्सर्वे तमूचुस्ते यतीश्वरम् ॥

१६. किं विद्यतेऽपराधो वा लोकसंरक्षकस्य ते ।
भवता सर्वसुहृदा पुत्रवत्परिपालिताः ॥

१७. इतःपरं यतिश्रेष्ठ! वर्तिष्यामः कथं वयम् ।
इति ते साश्रुनयनाः सर्वे संदुःखितास्तदा ॥

१८. तानाश्वास्य यतिश्रेष्ठो व्याजहार वचः शुभम् ।
कुर्वन्तो रङ्गराजस्य सदा कैङ्कर्यमादरात् ॥

---

களைத் தொட்டு ஆணையிட்டனர். தாம் வைகுண்டமும் செல்ல நிர்ணயித்த நாளில் காலையில் அவர்கள் அனைவரையும் அமுதுசெய்வித்து, பல ஶிஷ்யர்களையுடையவராய், பெரும்புகழாளரான யதிராஜர் ஸ்ரீரங்கநாதனுக்குப் பணிபுரியும் எல்லா ஸ்ரீவைஷ்ணவர்களையும் அழைத்து, "அடியேன் செய்த அபசாரங்களையெல்லாம் நீங்கள் பொறுத்தருள வேண்டும்" என்று கூறினர். கைகூப்பிநின்ற அவர்கள் அனைவரும் யதிராஜரைப் பார்த்து "யதிராஜரே! உலகங்களை ரக்ஷிக்கும் உமக்கு அபசாரம் எங்கிருக்கிறது? அனைவர்க்கும் நன்மையை விரும்பும் தேவரீராலே நாங்கள் குழந்தைகள் போல் காப்பாற்றப்பெற்றோம். உம்மைப்பிரிந்து இனி நாங்கள் எப்படி வாழப்போகிறோம்?" என்று கூறி அனைவரும் அப்போது கண்ணீர் நிறைந்தவர்களாய் மிகவும் துன்புற்றனர். யதிராஜர் அவர்களுக்கு ஆறுதல் வார்த்தை கூறி அவர்களைப் பார்த்து "ஸ்ரீரங்கநாதனுக்கு எப்போதும் அன்போடு கைங்கர்யம் செய்துகொண்டு வைஷ்ணவர்களிடம் அன்பு நிறைந்தவர்களாய் இங்கு இன்பமாக வாழ்வீர்களாக" என்னும் மங்களமான வார்த்தையைக் கூறினர்.

१९. वैष्णवेषु कृतस्नेहा वसतात्र यथासुखम् ।
एवं यथोचितं तेषां तत्रत्यानां हितं तदा ॥

२०. सर्वेषां कृपया चोक्त्वा कृतकृत्यो यतीश्वरः ।
गोविन्दाङ्के विधायाथ शिरः शेते महामनाः ॥

२१. आन्ध्रपूर्णस्य चोत्सङ्गे संप्रसार्याङ्घ्रिपङ्कजे ।
शिष्येषु तेषु सर्वेषु यतीन्द्रस्य जगद्गुरोः ॥

२२. भृगुवल्लीं ब्रह्मवल्लीं पठत्स्वपि महात्मसु ।
पराङ्कुशप्रबन्धादीन् प्रबन्धमखिलं च तम् ॥

२३. वादकैर्वाद्यमानेषु वाद्येषु निखिलेषु च ।
संस्थाप्य पुरतः पश्यन् महापूर्णस्य पादुके ॥

२४. ध्यायन् हृदि सदा धीमान् यामुनार्याङ्घ्रिपङ्कजम् ।
शिरःकपालं निर्भिद्य ब्रह्मरन्ध्रेण योगिराट् ॥

---

### யதிராஜரின் பரமபத3ப்ராப்தி

19*-*28. இவ்வண்ணமாக அப்போது அங்குள்ள அனைவருக்கும் அவரவர்க்குத் தக்கவாறு கருணையால் ஹிதோபதே3ஶம்செய்து யதிராஜர் க்ருதக்ருத்யர் (செய்ய வேண்டியதைச் செய்தவர்) ஆனார். தம்பியான கோ3விந்த3ர் என்னும் எம்பாரின் மடியிலே திருமுடியை வைத்து, வடுகநம்பியின் மடியிலே திருவடித்தாமரைகளை நீட்டி, பரந்த திருவுள்ளத்தையுடைய எம்பெருமானார் ஶயனித்துக்கொண்டார். ஜக3தா3சார்யரான யதிராஜருடைய ஶிஷ்யர்களில் மஹாத்மாக்கள் சிலர் தைத்திரீயத்தில் ப்4ருகு3வல்லியையும், ஆநந்த3வல்லியையும் ஓதினார்கள். மற்றும் சிலர் நம்மாழ்வார் முதலான ஆழ்வார்களின் தி3வ்யப்ரப3ந்த4ம் முழுவதையும் ஓதினார்கள். பலவிதமான வாத்3யங்களை வாசிப்பதில் வல்லவர்கள் அந்தந்த வாத்3யங்களை வாசித்தார்கள். இப்படி அவர்கள் செய்து

२५. रामानुजो जगामाशु तद्विष्णोः परमं पदम्।
माघशुद्धदशम्यां तु मध्याह्ने मन्दवासरे ।

२६. भोगिराजस्य योगीशो भावं दिव्यमवाप सः।
धर्मो नष्टः तदा वाक्यं आकाशे समजायत ॥

२७. तदचिन्त्यं महद्दुःखं ते संप्राप्याखिला जनाः।
मुहूर्तमभवन्सर्वे निश्चेष्टाः चित्रिता यथा ॥

२८. धर्मो नष्टोऽभवद्भूम्यामिति सर्वे प्रचुक्रुशुः।
दाशरथ्यान्ध्रपूर्णार्यौ गोविन्दकुरुकेश्वरौ ॥

---

கொண்டிருக்கையில் பெரியநம்பிகளின் இரு பாது3கைகளை
யும் தமக்கு முன்னால் எழுந்தருளச்செய்து அவற்றைப்
பார்த்துக்கொண்டே ஆளவந்தாரின் திருவடித்தாமரையை
எப்போதும் நெஞ்சிலே தியானித்துக்கொண்டு பேரறிவாள
ரான யதிராஜர் சிர:கபாலத்தை பே4தி3த்துக்கொண்டு
ப்3ரஹ்மரந்த்4ரத்தினால் வேத3ங்களில் ஸுப்ரஸித்3த4மான
விஷ்ணுவின் பரமபத3த்தை மாசிமாதம் சுக்லபக்ஷ தசமி
யன்று சனிக்கிழமையில் நடுப்பகலில் அடைந்தார்.
யோகி3ராஜர் ஆதி3ஶேஷனாகிற தமது மூலநிலையை
அடைந்தார். "த4ர்மம் அழிந்தது" என்னும் வாக்யம்
அப்போது ஆகாஶத்தில் உண்டாயிற்று. நினைக்க அரிய
தான இந்தப் பெரிய துன்பத்தையடைந்த எல்லா ஜனங்
களும் ஒரு முஹூர்த்தகாலம் செயலற்றவர்களாய் எழுது
சித்திரங்கள் போலானார்கள். "இந்நிலவுலகில் த4ர்மம்
அழிந்தது" என்று அனைவரும் கூக்குரலிட்டார்கள்.

## சரமகைங்கர்யம்

28*-*31. முதலியாண்டான், வடுகநம்பி, எம்பார், திருக்குருகைப்பிரான் பிள்ளான் என்னும் நால்வரும் எம்பெருமானாருடைய சரமகைங்கர்யத்தை நடத்துவதில் முக்2ய

